திருப்பனந்தாட் காசிமடத்து வெளியீடு

உ

செந்திலாண்டவன் துணை

ஸ்ரீ 1297

# குமரகுருபர சுவாமிகள்

# பிரபந்தத்திரட்டு



ESWARA SANSKRIT
TIRUPATI.
1449/2
VENKA... SREE ... COLLEGE


இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள்

எழுதிய குறிப்புரை ஆராய்ச்சி முதலியவற்றுடன்

அவர்கள் குமாரர்

S. கலியாணசுந்தரையரால்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்களாகிய

ஸ்ரீலஸ்ரீ

காசிவாசி அருணந்தித்தம்பிரான் ஸ்வாமிகளவர்களுடைய

விருப்பத்தின்படி


சென்னை : கபீர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

சர்வஜித்து ஞு வைகாசி மீ

1947

# அனுபந்தம்

## திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்களாக இருபதாம் பட்டத்தில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் மனமுவந்தமைத்திருக்கும் பேரறங்களும் பரிசுகளும் :

I. ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளை (1944-ஆம் ௵ அண்ணாமலை ஸர்வகலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்றது.)

*சைவசித்தாந்த சாஸ்திரங்களின் பயிற்சி பெருகும்பொருட்டு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாக 1944-ஆம் வருஷம் ஏற்படுத்தியது. இதன் மூலதனம் ரூ. 15,000.*

*இதன் வட்டித்தொகையிலிருந்து அலகபாத்து சர்வகலாசாலையிலும், காசி ஹிந்து சர்வகலாசாலையிலும் இந்தக்கட்டளையை ஏற்படுத்தியவர்கள் சம்மதத்தின்மேல் வேறு சர்வகலாசாலைகளில் உபந்நியாசங்கள் செய்யும்பொருட்டு மாற்றினாலன்றி ஆண்டு தோறும் நான்கு உபந்நியாசங்களுக்கு ரூ. 400 சம்மானம் அளிக்க வேண்டும்; சம்மானத் தொகை போக மிஞ்சுவதை மூலதனத்தோடு சேர்க்கவேண்டும்.*

*எந்த வருஷத்திலேனும் ஸிண்டிகேட்டார் உபந்நியாசம் செய்யத் தகுதியுள்ளவர்களில்லையென்று கருதினால் அதனால் கொடுபடாமல்சேரும்தொகை மூலதனத்துடன் சேர்க்கப்படவேண்டும்.*

*நான்கு உபந்நியாசங்களுள் மூன்று காசி ஹிந்து சர்வகலாசாலையிலும் ஒன்று அலகபாத்து சர்வகலாசாலையிலும் சர்வகலாசாலையார் குறிப்பிடும் இடங்களிற் செய்யவேண்டும். உபந்நியாசம் சைவசித்தாந்தத்தின் கொள்கைகளை விவரமாக விளக்கக்கூடியவாறு இருக்கவேண்டும். உபந்நியாசகராக அண்ணாமலை சர்வகலாசாலையின் ஸிண்டிகேட்டார் தம் சர்வகலாசாலையிலுள்ள ஹிந்து ஆசிரியர்களையோ சைவசித்தாந்த சாஸ்திரத்தில் நல்ல பயிற்சியுள்ள வேறு ஹிந்துக்களையோ நியமிப்பார்கள். ஒரு வருஷம் உபந்நியாசம் செய்தவர் 12 வருஷங்களுக்குப் பிறகே இரண்டாம் முறை*

உபந்நியாசம் செய்ய வரலாம். உபந்நியாசகர் எந்த ஜாதியின ராகவோ ஆண்பாலாராகவோ பெண்பாலாராகவோ இருக்கலாம். உபந்நியாசங்கள் செய்த ஒரு மாதத்திற்குள், உபந்நியாசங்களை அண்ணுமலை சர்வகலாசாலைக்கும் இந்தக் கட்டளையை ஏற்படுத்திய வர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் அனுப்பவேண்டும். ஸிண்டிகேட்டாருடைய நோக்கம்போல் இந்த உபந்நியாசங்களை அச்சிடலாம்.

சிவஞானசித்தியார் பரபக்கம் சுபக்கம் என்னுமிவற்றின் சூத்திரங்களிலும், இவற்றிற்குரிய அறுவருரைகளிலும், ஸ்ரீ உமா பதி சிவாசாரியாருடைய சிவப்பிரகாசத்திலும் ஆழ்ந்த பயிற்சியும் ஆராய்ச்சியும் இருத்தலை உபந்நியாசங்கள் காட்ட வேண்டும்.

காசி ஹிந்து சர்வகலாசாலையாரையும் அலகபாத்து சர்வகலா சாலையாரையும் கலந்துகொண்டு தசராவிடுமுறைக்கு முன்போ பின்போ உபந்நியாசங்களை நடத்த ஏற்பாடு செய்யவேண்டும்.

உபந்நியாசங்களை முடித்துவிட்டு உபந்நியாசகர் திரும்புகை யில் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் அபிஷேகத் துக்காக ஒரு குடம் கங்காதீர்த்தத்தைக் கொண்டு வருவதோடு அந்த விவரத்தை இந்தக் தருமஸ்தாபகரவர்களுக்கு உபந்நியாசப் பிரதி அனுப்பும்பொழுது தெரிவிக்கவேண்டும்.

சம்மானம் ரொக்கமாகவோ உண்டியல் வடிவமாகவோ அளிக் கப்படும். ஒவ்வொரு வருஷ முடிவிலும், உபந்நியாசம் செய்தவ ருடைய பெயரையும் விலாசத்தையும் சம்மானத் தொகையையும் எந்த வருஷத்திலேனும் உபந்நியாசம் நடைபெறுவிட்டால் சேர்ந் திருக்கும் தொகையையும் ஸிண்டிகேட்டர் தெரிவிக்கவேண்டும். கணக்குகளைப் பிரபலமான தினசரி ஆங்கிலப் பத்திரிகையிலோ தமிழ்ப் பத்திரிகையிலோ பிரிசுரிக்க வேண்டும்.

**II.** ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த் தமாகக் கும்பகோணம் முனிசிபல் எல்லைக்குள் கொட்டையூரில் ஒரு லோயர் ஸெகண்டரி பாடசாலையை அமைக்க **1945**-ஞு பிப்ரவரி மாதத்தில் ஏற்படுத்தி யது; மூலதனம் ரூ. **11,500**. இந்தத் தொகையில் ரூ. **10,000** **3½%** வட்டி யுள்ள சர்க்கார் கடன் பத்திரமாகவும், ரூ. **1500** ரொக்கமாகவும் உள்ளன.

முதல் மூன்று பாரங்களையோ, அல்லது அவற்றிற்குச் சம மான வகுப்புக்களையோ கொண்ட ஒரு பாடசாலையை நடத்தக் கும்பகோணம் நகர பரிபாலன சபையார் வசம் ரூ, 10,000 இருக் கும். அவர்கள் அதனைப் பரிபாலித்து வட்டியைக் கொண்டு பாடசாலையை நடத்தவேண்டும். இந்தத் தொகையை வேறு காரி யத்திற்கு உபயோகப்படுத்தலாகாது. 1947-ஆம் ஞு ஆகஸ்டு

மாதம் முதல் தேதிக்குள் பாடசாலையை ஆரம்பிக்காவிட்டால் மூலதனத்தையும் அந்தத் தேதிவரை சேர்ந்திருக்கும் வட்டித் தொகையையும் சேர்த்து இந்தத் தருமஸ்தாபகரவர்களிடமாவது அவர்கள் வார்சுகளிடமாவது முனிஸிபாலிடியார் சேர்ப்பிக்க வேண்டும்.

ரொக்கமாகவுள்ள ரூ. 1,500-ஐ முனிஸிபாலிடியார் பள்ளிக்கூடம் கட்டுவதற்காக ஒரு மனையை வாங்க உபயோகிக்க வேண்டும். பள்ளிக்கூடம் அந்தக் கட்டிடத்தில் நடைபெறவேண்டும். மூன்று வருடங்களுக்குள்ளாகவோ யுத்தம் முடிந்த உசிதமான ஒரு காலத்திற்குள்ளாகவோ கட்டிடத்தைக் கட்ட ஆரம்பிக்க வேண்டும்.

குறிப்பிட்ட காலத்திற்குள் அவ்வாறு செய்யாவிட்டால் இந்த ரூ. 1,500-ம் தருமஸ்தாபகரவர்களையோ அவர்கள் வார்சுகளையோ சார்ந்துவிடும்.

பள்ளிக்கூடத்தின் வருஷ நிருவாக அறிக்கையை முனிஸிபாலிடியார் திருப்பனந்தாள் காசிமடத்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களுக்கு அனுப்பவேண்டும்.

III. திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் தேவாரப் பரிசு.

திருவாங்கூர் மஹாராஜாவாகவும், தரும சீலர்களாகவும், தாராள சிந்தையுள்ளவர்களாகவும், பக்திமான்களாகவும், ராஜ்ய பரிபாலனத்தில் உதாரண புருஷர்களாகவும், திருவாங்கூர் சர்வ கலாசாலையின் சான்ஸலராகவும், சீர்திருத்தத்தில் விசேஷ ஊக்கம் உள்ளவர்களாகவும், தமிழ்மொழியிலும் சங்கீதத்திலும் அபிமானமுள்ளவர்களாகவும் விளங்கும் மேன்மை பொருந்திய ஸர் பாலராமவர்மா, G.C.S.I.,D. Litt., அவர்கள் பெயரால் 1946-ஆம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் ஏற்படுத்தப்பட்டது இது.

தேவாரத்தில் பயிற்சியும், தேர்ச்சியும் திருவாங்கூர் ராஜ்யத்தில் பரவும் பொருட்டு இப்பரிசு ஏற்படுத்தலாயிற்று. இப்பரிசு திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் பெயரால் வழங்கப்பெறும்.

இதற்கு ஏற்படுத்திய மூலதனம் ரூ. 5,000. இதனைத் திருவாங்கூர் சர்வகலாசாலையார் பரிபாலித்து வருவர். இதன் வட்டியிலிருந்து வருஷந்தோறும் தேவாரத்தை மிகத் திறமையாக ஓதும் ஒருவருக்கு ரூ. 100 (நூறு) அளிக்கப்படும்.

நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை சர்வகலாசாலையார் மூவர் தேவாரங்களிலிருந்து பண்கள் எல்லாம் அமைந்த 75 தேவாரங்களைப் பொறுக்கி எடுத்து அரும்பதவுரையுடன் ஒரு புத்தகரூபமாக அச்சிட்டு வெளியிட ஏற்பாடு செய்யவேண்டும். அடுத்த

நான்கு வருஷங்களில் இவையல்லாத வேறு தேவாரங்களைப் பொறுக்கி எடுக்கவேண்டும்.

பரிசுத் தொகை போக மிஞ்சும் தொகையை அப்புத்தகத்தைப் பதிப்பித்து வெளியிட உபயோகிக்கலாம். பரிசுக்காக வருபவர்களுக்கு அப்புத்தகத்தின் பிரதிகளை இலவசமாக வழங்க வேண்டும்.

இப்பரிசுக்குத் திருவனந்தபுரம் சர்வகலாசாலைக்குச் சம்பந்தப்பட்ட காலேஜ்களிலுள்ள மாணுக்கர்கள் ஜாதி வேறுபாடின்றி ஆண்பாலர்களாயினும் பெண்பாலர்களாயினும் அபேட்சகர்களாக வரலாம்.

பொறுக்கி எடுத்த 75 தேவாரங்களையும் ஏற்பட்ட பண்களில் பாராமல் நல்ல இசையோடு ஒப்பிக்கக் கூடியவர்களே பரிசுக்கு வரத்தகுதியுள்ளவர்கள்.

எந்த வருஷத்திலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுபெறத் தகுதியுடையவர்களென்று கருதப்பட்டால் திருவுளச்சீட்டுப்போட்டு யார்பேருக்குச் சீட்டு விழுகிறதோ அவருக்கே பரிசை வழங்கலாம். சர்வகலாசாலையின் கான்வொகேஷன் காலத்தில் பரிசு வழங்கப்பெறும். அச்சமயம் பரிசுபெறுபவர் வரமுடியாவிட்டால் சர்வகலாசாலையார் அவருக்குப் பரிசுத் தொகையை அனுப்பிவிடலாம். பரிசு பெறுபவர் பரிசு வழங்கப்படுவதற்குமுன் காலஞ்சென்றுவிட்டால் பரிசுத் தொகை அவருடைய வார்சுக்குச் சேர்க்கப்படவேண்டும். ஒரு முறை பரிசு பெற்றவர் மறுமுறை பரிசுபெற அருகரல்லர்.

எந்த வருஷத்திலேனும் ஒருவருக்கும் பரிசு வழங்காவிட்டால் அத்தொகை மூலதனத்தோடு சேரும். எந்தக் காலத்திலேனும் மூலதனத்தோடு சேரும் தொகை மிகவும் அதிகரித்தால் சர்வகலாசாலையார் உசிதப்படி பரிசுத்தொகையை அதிகப்படுத்தவோ அதிகமான பரிசுகளை வழங்கவோ ஏற்பாடு செய்யலாம். ஒவ்வொரு வருஷத்திலும் பரிசுபெறுவோருடைய பெயரையும் விலாசத்தையும் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் தெரிவிக்கவேண்டும்.

IV. சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு. (Under the approval of the Cochin Government.)

கொச்சி மன்னராகவும் தமிழிற் பெரும்புலவராகவும், சுந்தரமூர்த்தி நாயனரிடத்துப் பேரன்பு பூண்டவராகவும் அவருடைய பேருதவியாலும் அவருடனும் திருவஞ்சைக்களத்திலிருந்து ஆடிச் சுவாதி நன்னளில் கைலையை யடைந்து திருக்கைலாய ஞானவுலா

வைத் தமிழிலியற்றியவராகவும் விளங்கிய சேரமான் பெருமாள் நாயனார் ஞாபகார்த்தமாக இப்பரிசு அமைக்கப்பட்டது. சுந்தர மூர்த்தி நாயனாருடைய தேவாரப் பயிற்சியும் தேர்ச்சியும் கொச்சி ராஜ்யத்திற் பரவும் பொருட்டுச் சேரமான் பெருமாள் நாயனார் பேரால் இது நிறுவலாயிற்று.

இதற்கு ஏற்பட்ட மூலதனம் ரூபாய் 5,000. கொச்சி அரசாங்கத்தார் நியமிக்கும் ஒரு சபையார் இந்த மூலதனத்தைப் பரிபாலிப்பார்கள். மேற்படி சபையில் காலேஜ் தலைவர்கள் இருப்பார்கள். அந்த ராஜ்யத்திலுள்ள கல்வியிலாகா தலைமை யதிகாரியே அச்சபைக்குத் தலைவராக இருப்பார். அப்போதைக் கப்போது மேற்படி சபையார் மூலதனத்தை வட்டி அதிகமாக வரக்கூடிய வேறு இனங்களிற் போடலாம். அந்த வட்டித் தொகையிலிருந்து ரூபாய் 100 மிகவும் திறமையாகத் தேவாரம் ஓதும் ஒருவருக்கு ரொக்கமாக வழங்கப்பெறும்.

நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை அச்சபையார் சுந்தரர் தேவாரத்திலிருந்து பண்கள் எல்லாம் அமைந்த ஐம்பது தேவாரப் பாசுரங்களைப் பொறுக்கி எடுத்து அரும்பதவுரையோடு புத்தகமாக வெளியிடவேண்டும். பொறுக்கி எடுக்கும் பாசுரங்கள் நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை மாறும். ஆனால் ஒவ்வொரு முறையிலும் "பித்தா", "தானெனை" என்னும் பதிகங்கள் விடாமல் சேர்ந்திருக்க வேண்டும். பதிப்பின் செலவிற்கு, பரிசுத் தொகை நூறு ரூபாய்போக வட்டியில் மிஞ்சும் தொகையிலிருந்து எடுத்துக்கொள்ளலாம். காலேஜில் படிக்கும் ஹிந்துக்களே ஆண்பாலாராயினும் பெண்பாலாராயினும் பரிசுக்குவர உரியவர்கள்.

தமிழில் ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பண்ணோடு நல்ல இசையில் பாராமல் ஒப்பிக்கக் கூடியவர்களே இந்தப் பரிசுக்கு வரத் தகுதியுள்ளவர்கள். மேலே சொன்ன சபையாரே பரீக்ஷையை நடத்துவார்கள்.

பரீக்ஷை இரண்டு பிரிவுகளை யுடையது: (1) பொறுக்கி எடுத்த ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பாராமல் ஒப்பித்துப் பாசுரங்களின் பொருளையும் தாற்பரியத்தையும் தெரிவித்தல்; இதற்குரிய அம்சம் 50; (2) பொறுக்கி எடுத்த ஐம்பது தேவாரப் பாசுரங்களிலிருந்து குறிப்பிடும் எவற்றையேனும் நல்ல இசையுடன் உரிய பண்களில் பாசுரங்களின் பொருள் நன்றாக விளங்கும்படி பாடுதல்; இதற்குரிய அம்சம் 50; எவர் அதிக அம்சங்களைப் பெறுகிறாரோ அவரையே பரிசுக்குரியவரென்று அச்சபையார் நிச்சயிப்பர்.

எந்த வருஷத்திலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுக்குரியவரென்று கருதப்பட்டால் திருவுளச் சீட்டுப் போட்டு அதில் எவர் பெயர் அகப்படுகிறதோ அவரே பரிசுக்குரியவராவர். ஒருமுறை பரிசு பெறுபவர் மறுமுறை பரிசுபெற அருகரல்லர்.

திருவஞ்சைக்களத்திலுள்ள சிவாலயத்தில் சுந்தரர், சேரமான் பெருமாள் சந்நிதியில் ஆடிச்சுவாதி விழா நடக்கையில் பரிசு வழங்கப்பெறும்.

எந்த வருஷத்திலேனும் பரிசுக்குரியவர் வரமுடியாமல் இறந்து போய்விட்டால் பரிசுத்தொகை அவருடைய வார்சுக்குக் கொடுக்கப்படும். பரிசு பெறுபவர் நேரில் வர இயலாவிட்டால் பரிசுத் தொகை அவரிருப்பிடத்துக்கு அனுப்பப்பெறும்.

**V. மூவர் தேவாரப் பரிசு. இதற்கு ஏற்படுத்திய மூலதனத் தொகை ரூ. 10,000.**

தென்னிந்தியாவில் விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் மூன்று நாயன்மார்களுடைய தேவாரங்களைப் பயில்வதை ஊக்குவதற்கும் அதனால் தெய்வபக்தியை மக்களிடையே எழுப்பி அவர்களை நன் மக்களாகச் செய்வதற்கும் இப்பரிசு அமைக்கப்பட்டது. அந்நாயன்மார் மூவரும் பரம்பொருளைப் புகழ்வனவும் பக்திச்சுவை மிக்கனவும் ஆகிய பாடல்களால் இந்நாட்டை அலங்கரித்தும், ஸ்தல யாத்திரை செய்தும், எலும்பைப் பெண்ணாக்கியதும், கல்லைத் தெப்பமாக மிதப்பித்ததும், முதலையுண்ட பாலனை அழைத்ததும் இவை போன்ற பிறவுமான அற்புதச் செயல்கள் புரிந்தும் மக்களின் முன்னேற்றத்திற்கு உழைத்துள்ளார்கள்.

2. இக்கட்டளைத்தொகை ரூ. 10,000 மதிப்புள்ள ஸர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக உள்ளது. இதன் பரிபாலனம் திருப்பனந்தாளிலுள்ள காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் நிதியை நிர்வகிக்கும் கமிட்டியார் வசம் இருக்கும்.

3. மூலதனத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூ. 200 சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் முக்கியமான இடங்களிலிருந்து பரிசு பெறுபவர் ஒவ்வொருவருக்கும் ரூ. 50 வீதம் பரிசு அளிக்க உபயோகிக்கப்படும். எஞ்சிய வட்டித்தொகை தேவாரத்திரட்டை அச்சிடுவது முதலிய செலவுகளுக்கும் பரிசுக்கு முதல் மூன்று ஊர்களிலிருந்து வருபவர்களுடைய பிரயாணச் செலவுக்கும் உபயோகிக்கப்பட வேண்டும். செலவாகாமல் மிஞ்சிய தொகை மூலதனத்தோடு சேர்க்கப்பட வேண்டும்.

4. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களிலுள்ள ஹைஸ்கூல்களில், 4, 5, 6-ஆம் பாரங்களிலோ அவற்றுக்குச் சமமாக அமைக்கப்படும் வேறு எந்த வகுப்புக்களிலோ படிக்கும் மாணுக்கர்களும், திருப்பனந்தாள் காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் யூனிவர்ஸிடி பரீக்ஷைக்குப் படிக்கும் மாணவர்களும் இப்பரிசுக்கு வரத் தகுதியுடையவர்கள். அவர்கள் கமிட்டியாரால் வெளியிடப்படும் புத்தகத்திலுள்ள தேவாரங்களிலிருந்து, ஒவ்வொரு பதிகத்திற்கும் குறைந்தது ஒரு பாசுரம் வீதம் ஒவ்வொரு நாயனுர் தேவாரத்திலிருந்தும் 15 பாசுரங்களுக்குக் குறையாமல் மொத்தம் 50 பாசுரங்களை மனப்பாடம் பண்ணிச் சரியான பண்ணுேடு நல்ல இசையில் பாடவேண்டும்.

5. பரிசு அளிப்பதற்குரிய விதிகள் வருமாறு:—

(a) பரிசு ஜாதி வேற்றுமை யில்லாமல், ஆண்பாலாருக்கும் பெண்பாலாருக்கும் அளிக்கப்படும்.

(b) பரிசுப் போட்டிக்கு வருவோர் மேலே 4-ஆம் பாராவில் சொல்லியபடி வெளியிடப்பட்ட தேவாரங்களின் தாற்பரியம் விளங்க அவற்றை மனப்பாடம் பண்ணிச் சரியான பண்ணுேடு பாடவேண்டும்.

(c) அபேட்சகர்கள் தம் தம் விண்ணப்பங்களைத் தத்தம் கலாசாலைத் தலைமை யாசிரியர் மூலமாக ஒவ்வொரு வருஷமும் ஜூலை 31உ க்குள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபாலவர்களுக்கு அனுப்பவேண்டும்.

(d) சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் ஊர்களிலுள்ள கலாசாலை யதிகாரிகள் தத்தம் கலாசாலைகளில் ஒரு பூர்வாங்கப்பரீக்ஷையை நடத்தி ஒருகலாசாலை யிருந்தால் மூவரையும், ஒன்றுக்கு மேற்பட்ட கலாசாலைகள் இருந்தால் அவற்றிலிருந்து மொத்தமாக நால்வரையும் பொறுக்கி எடுத்து, ஒவ்வோராண்டிலும் டிஸம்பர் மாதத்திற் குறிப்பிட்ட ஒரு தேதிக்குள் திருப்பனந்தாளுக்கு அனுப்பவேண்டும். செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபாலும், கமிட்டியாரால் நியமிக்கப்படும் அவருடைய உதவியாசிரியர்கள் இருவரும் சேர்ந்து பொறுக்கி அனுப்பப்பட்டவர்களுக்கு முடிவுப் பரீக்ஷையை நடத்திப் பரிசுக்குத் தகுதியுள்ள சிறந்தவரை ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தீர்மானிக்கவேண்டும்.

(e) செந்தமிழ்க் கல்லூரி மாணவர்களைப் பரீக்ஷிக்க முடிவுப் பரீக்ஷைக்கு நியமிக்கப்படும் உதவியாசிரியர் இருவரும் பூர்வாங்கப் பரீக்ஷைக்கு நியமிக்கப்பட்டவரல்லாத அன்னியராக இருக்கவேண்டும்.

முக்கிய குறிப்பு:—ஏதேனும் ஒரு காரணத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட அபேட்சகர்கள் திருப்பனந்தாளில் நடைபெறும் முடிவுப் பரீக்ஷைக்கு வரத் தவறினால் பரிசுத் தொகையும், அவர்களுக்கு உரிய பிரயாணச் செலவு தொகையும் மூல தனத்தோடு சேர்க்கப்பட வேண்டும்.

(f) ஒருமுறை பரிசு பெறுவோர் மறுமுறை பரிசுக்கு வர அருகரல்லர்.

(g) செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபால், தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் பரீக்ஷையின் முடிவுகளைத் தெரிவிக்கவேண்டும்.

6. பரிசு பெறுவோருக்குரிய பரிசுத்தொகை கமிட்டியாரால் பரிசு பெறுவோர் பெயரால் உண்டியல் மூலம் சம்பந்தப்பட்ட அவ்வக் கலாசாலை யதிகாரிகளுக்கு அனுப்பப்படும்.

7. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களிலிருந்து போட்டிக்கு வருபவர்களுக்கு (ஒரு கலாசாலை இருந்தால் மூவருக்கும், ஒன்றுக்கு மேற்பட்டவை இருந்தால் நால்வருக்கும்) திருப்பனந்தாளுக்கு வந்து போவதற்குரிய செலவு ஒவ்வொருவருக்கும் ரூ. 4 வீதம் அளிக்கப்படும். (மேலேயுள்ள 5-d பாராவைப் பார்க்க.)

8. மூலதனத்தின் வரவு செலவுகளுக்குக் கமிட்டியார் ஒழுங்கான கணக்கு வைத்திருக்கவேண்டும். பரிசுகளும், வெளியூரிலிருந்து வருவோர்க்குப் பிரயாணச் செலவுகளும் கொடுத்த பிறகு மிஞ்சும் தொகையைக் கமிட்டியார், பரிசுக்கு வருவோர்க்கு உதவியாக மூவர் தேவாரத்திலிருந்தும் பொறுக்கி எடுக்கப்படும் பாசுரங்களைப் புத்தகமாக அச்சிடுவதற்கு உபயோகிக்கலாம்.

ஒவ்வொரு வருஷத்திலும் பரிசு பெறுவோர் பெயர்களையும் அளிக்கப்பட்ட பரிசுத் தொகையையும் பிரபலமான இங்கிலீஷ், தமிழ்த் தினசரிகளில் வெளியிடவேண்டும். வருஷச் செலவு முழுவதும் அடங்கிய கணக்கு தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் சேர்ப்பிக்கப்பட வேண்டும்.

9. கட்டளைத் தொகையை ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தலாகாது.

VI. காசி ஹிந்து சர்வகலாசாலைக்கு அளித்த சைவசித்தாந்தக் கட்டளை ரூ. 60,000.

காசியில் காசிமடத்தை ஸ்தாபித்த மூலபுருஷராகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர ஸ்வாமிகள் ஞாபகார்த்த

மாகச் சைவசித்தாந்த சாஸ்திரத்தில் ஒரு பேராசிரியர் ஸ்தானத்தை அமைப்பதற்காக 1946-ஆம் வருஷம் ஜனவரி மாதம் ஏற்பட்டது இது.

இந்த மூலதனமாகிய ரூ. 60,000-த்தைச் சர்வகலாசாலையார் நல்ல வட்டி வரக்கூடிய இனங்களிற் போடலாம்.

இந்தக் கட்டளையின் பரிபாலனம் காசி ஹிந்து சர்வகலாசாலையாரைச் சேர்ந்தது.

எந்தச் சர்வகலாசாலையிலேனும் டிகிரிபெற்றுத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பயிற்சியுற்றுத் தமிழிலும் சைவசித்தாந்தத்திலும் ஆசிரியராக இருக்கத் தகுதியுள்ள ஒருவரைச் சர்வகலாசாலையார் ஷை ஸ்தானத்துக்கு நியமிக்கலாம். அவர் சைவசித்தாந்தத்தில் அழுத்தமான பற்றுடையராகவும் அதைப்பற்றிக் காலேஜ் மாணவர்களுக்குத் தமிழில் உபந்நியசிக்கக்கூடிய திறமையுடையவராகவும் இருக்கவேண்டும்.

கட்டளைத் தொகையின் வருஷவட்டியிலிருந்து இரண்டாயிரத்துக்கு மேற்படாத ஒரு தொகையைப் பேராசிரியருடைய சம்பளத்துக்கு உபயோகிக்கலாம்.

சம்பளம் போக எஞ்சிய வட்டித் தொகை மூலதனம் லக்ஷ ரூபாய் ஆகும் வரையில் மூலதனத்தோடு சேர்க்கப்படும். அதன் பிறகு சர்வகலாசாலையாருடைய உசிதப்படி பேராசிரியருடைய சம்பளத்திற்கு ரூ, 2000-க்கு மேற்பட்ட தொகையை உபயோகிக்கலாம். அப்பாலும் தொகை மிகுதிப்பட்டால் சைவசித்தாந்த சாஸ்திர சம்பந்தமான புத்தகங்களைத் தமிழிலும், ஹிந்தியிலும் இங்கிலீஷிலும் அச்சிட்டு அவற்றை இலவசமாக எல்லாச் சர்வகலாசாலையாருக்கும் விநியோகிக்கலாம். மேற்படி நூலில் ஐந்து பிரதிகள் இந்தத் தருமஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் அனுப்பப்பெற வேண்டும்.

வருஷந்தோறும் நடைபெற்ற வேலைகளின் விவரத்தையும் வரவு செலவு கணக்குகளையும் தருமஸ்தாபகரவர்களுக்கோ அவர்கள் வார்சுகளுக்கோ அனுப்பவேண்டும்.

இந்தக் கட்டளைத் தொகையைத் தருமஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தலாகாது.

VII. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபரசுவாமிகள் ஞாபகார்த்தச் சைவசித்தாந்தப் படிப்பின் சம்பள உதவிக் கட்டளை. (Under the approval of the Syndicate of the Annamalai University.)

தமிழிற் பெரும்புலமை வாய்ந்தவர்களும் காசி முதல் இராமேசுவரம்வரை தமிழ்க்கலையைப் பரவச்செய்தவர்களும் மொகலாய சக்கரவர்த்தியாகிய ஔரங்கசீப் காலத்தில் 16-ஆம் நூற்றுண்டில் காசியில் காசிமடத்தை ஸ்தாபித்தவர்களுமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபர ஸ்வாமிகளின் நிரந்தர ஞாபகார்த்தமாகச் சைவசித்தாந்த சாஸ்திரம் பரவுவதைக்கருதி இந்தக் கட்டளை ஏற்பட்டது.

2. இதற்கு ஏற்பட்ட மூலதனம் ரூ. 30,000. இதன் பரிபாலனம் அண்ணுமலேச் சர்வகலாசாலேயைச் சேர்ந்தது.

சர்வகலாசாலேயார் இந்தத் தொகையை வட்டிவரக் கூடிய சர்க்கார் கடன்பத்திரங்களிற் போடவேண்டும்.

அண்ணுமலேச் சர்வகலாசாலேயில் படிக்கும் மாணுக்கர்களுக்குக் கீழே கண்ட நிபந்தனேப்படி சம்பள உதவி அளிக்கப் பெறும்.

3. இதன் வட்டித் தொகையிலிருந்து அண்ணுமலேச்சர்வகலாசாலேயில் யோக்கியதையுள்ள ஏழை மாணவர் அறுவருக்கு ரூ. 135-வீதம் (மாதந்தோறும் ரூ. 15-ஆக ஒன்பது மாதங்களுக்கு) சம்பள உதவி ஜாதிமத வித்தியாசம் கருதாமல் ஆண்பாலராயினும் பெண்பாலராயினும் அளிக்கப்படும். சைவசித்தாந்தப் புலவர் வகுப்பில் படிப்பவர்களுக்குச்சம்பள உதவிகள் நான்கு அளிக்கப்படும். மற்ற இரண்டும் காலேஜ்வகுப்பில் படிக்கும் மாணுக்கர்களில் தமிழை இரண்டாம் பாஷையாகவும் சைவசித்தாந்த சாஸ்திரத்தைஇஷ்டபாடமாகவும் எடுத்துக்கொண்டு படிப்பவர்களுக்கு அளிக்கப்படும்.

சம்பள உதவி செய்யும் முதல் வருஷத்தில் புலவர் வகுப்பிலுள்ள இருவருக்கும் காலேஜ் வகுப்பில் படிப்பவர்களுள் சைவசித்தாந்த சாஸ்திரத்தை இஷ்டபாடமாக எடுத்துக்கொண்ட ஒருவருக்கும் உதவி அளிக்கப்படும். இரண்டாம் வருஷத்தில் இந்த உதவியைப் பெற இம்மாதிரி மூவர் தேர்ந்தெடுக்கப்பெறுவார்கள். இதனுல் இரண்டாம் வருஷம் முதல் வருஷந்தோறும் பண உதவி பெறுபவர் மேலே சொன்னபடி அறுவராவர். சம்பள உதவி இரண்டு வருஷங்களுக்கு உண்டு. அதற்கு மாணுக்கர்களுடைய முதல் வருஷப் படிப்பு திருப்திகரமாக இருப்பதோடு அவர்கள் இரண்டாம் வருஷத்திலும் படிக்க வரவேண்டும்.

4. பண உதவிபெறும் எந்த மாணுக்கரேனும் ஒழுங்கீனமாக நடந்தாலும், ஒழுங்காகப் பாடங்கேட்க வராவிட்டாலும், படிப்பில் தேர்ச்சியைக் காட்டாவிட்டாலும் அவரைப் பண உதவிக்குத் தகுதியற்றவரென்று அதை நிறுத்திவிட வைஸ்சான்ஸலருக்கு

அதிகாரம் உண்டு. அவர் ஸ்தானத்தில் தகுதியான வேறு ஒரு மாணுக்கருக்கு இவ்வுதவிசெய்யலாம். இவ்விஷயத்தில் வைஸ் சான்ஸலருடைய அபிப்பிராயமே முடிவானது.

5. எந்த வருஷத்திலேனும் பண உதவி செய்யப்படாவிட்டாலும் சிலகாலம் கொடுத்த பின்பு மாணுக்கர் அதை இழந்துவிட்டாலும் செலவாகாத தொகையும் வட்டியின் மிகுதித் தொகையும் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

6. எந்தக் காலத்திலேனும் முதலில் ஏற்பட்ட மூலதனம் வட்டித் தொகைகளுடன் சேர்ந்து போதிய அளவு அதிகரித்தால் சௌகரியத்துக்குத் தக்கபடி உதவித் தொகையை அதிகப்படுத்தவோ சம்பள உதவிகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவோ சர்வகலாசாலையாருக்கு அதிகாரம் உண்டு.

7. மேலே சொன்ன பிரகாரம் தொகை செலவான பிறகு மிச்சப்படுமானல் அந்தத் தொகையைச் சைவசித்தாந்தப் படிப்புக்குப் பாடமாக உள்ள சிவஞான சித்தியாரின் பிரதிகளை வாங்கிச் சம்பள உதவி பெறும் மாணுக்கர்களுக்கு இலவசமாக விநியோகிக்கலாம்.

8. ஒவ்வொரு வருஷத்தின் முடிவிலும் வரவுசெலவு கணக்குகளையும் சம்பள உதவி பெறும் மாணுக்கர்கள் பெயர்களையும் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் ஸிண்டிகேட்டார் அனுப்பவேண்டும்.

9. மூலதனத்தின் வரும்படியையோ சேரும் தொகைகளையோ ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறுன வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது.

**VIII. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள்.**

**சென்னை ஸர்வகலாசாலை ரிஜிஸ்டிராருக்கு 13-6-46-ல் எழுதிக் கொடுத்த ஒப்பந்தப் பத்திரம்.**

சென்னைச் சர்வகலாசாலையார் ஏற்படுத்தியுள்ள தனித் தமிழ் (7-D) வித்துவான் பரீக்ஷைக்கு அனுப்பும்படி மாணுக்கர்களைப் பயிற்றுவதற்கு இக்கல்லூரி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகத் தமிழ் மொழியின் அபிவிருத்தியைக் கருதி அமைக்கப்பட்டது.

2. இக்கல்லூரி நடைபெறும் பொருட்டுப் பொறுப்பாகக் கொடுக்கப்பெற்ற சொத்து மாயூரம் தாலூகா, நக்கம்பாடி கங்காதரபுரத்து வட்டங்களில் கிழையனூர்குடி கிராமத்தில் நன்செயும் புன்செயும் சேர்ந்து ஏகர் 183, செண்டு 42. இவை ஸ்ரீலஸ்ரீ காசி

வாசி ஸ்வாமிகளவர்களுடைய பேரில் பட்டாவாகி அவர்களுடைய ஏகபோக அனுபவத்தில் உள்ளன. இவற்றின் வருமானம் ஒன்றரை லக்ஷம் ரூபாயும் வருஷவரும்படி ரூபாய் எண்ணுயிரமும் ஆகும்.

3. மேற்படி சொத்துக்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களாலும் அவர்கள் வார்சுகளாலும் அனுபவிக்கப்பெறும்.

4. இந்தச் சொத்துக்களிலிருந்து எச்செலவும்போக வரும் நிகர வரும்படி இக்கல்லூரியின் நிர்வாகத்துக்காக நியமிக்கப்பெற்றுள்ள கமிட்டியாரிடம் ஒப்பிக்கப்படும். அவர்கள் கல்லூரியை நடத்துவதற்கு இத்தொகையை உபயோகித்து வருவதோடு தொகைகளை ஜாக்கிரதையாக ஒழுங்கான இனங்களில் வட்டிக்குப் போட்டுவைக்கவும், கல்லூரி செவ்வையாக நடைபெறுவதற்கு வேண்டிய சமயங்களில் தொகையைப் பயன்படுத்தவும் பொறுப்பாளிகளாவர்.

5. சர்க்கார் கிராண்டு கல்லூரிக்கு ஓர் அதிக வரும்படி. இதையும் மேலே சொன்னவாறு பரிபாலிக்கவேண்டும்.

6. ஆசிரியர்களுடைய சம்பளம், புத்தக சாலையை நடத்தல், கல்லூரியின் கட்டிடத்தைப் பாதுகாத்தல் இவை சம்பந்தமாக அவ்வப்போது ஏற்படும் அவசியமான செலவுகளாகிய இவற்றிற்கே மேலே சொன்ன வருஷ வரும்படியை உபயோகிக்க வேண்டும்.

7. கமிட்டியார் வரவு செலவு கணக்கை ஒழுங்காக வைத்திருந்து மாதந்தோறும் அதை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களிடம் சேர்ப்பிக்கவேண்டும்.

8. சர்க்கார் கிராண்டு உள்படக் கிடைக்கும் வருஷவரும்படிக்கு ஏற்றபடி செலவு செய்யவேண்டும். மிச்சம் ஏற்பட்டால் அதனை, "ரிசர்வ் பண்டு"க்கென்று காற்பங்கைத் தனியே குறிப்பிட்டுச் சர்க்கார் கடன் பத்திரங்களில் போட்டுவைக்கலாம்.

9 சொத்தின் வருஷ வரும்படி கமிட்டியாரிடம் ஒப்பிக்கப் படாவிட்டால் ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கும் நிகர வரும்படியை மட்டும் கமிட்டியார் கேட்டு வாங்கிக் கொள்ளலாம்.

10. மேலே குறிப்பிட்ட சொத்தின் வரும்படியை வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது.

11. எந்தக் காலத்திலேனும் மேலே குறிப்பிட்ட வரும்படிகளுக்குமேற் செலவு ஏற்படுமானால் கும்பகோணம் தாலூகா மணிக்குடி கிராமத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்கள் பேரால் பட்டாவாகி அவர்கள் அனுபவத்தில் உள்ள

எழுபதினுயிரம் ரூபாய் பெறுமானம் உள்ள நன்செய் ஏகர் 61 செண்டு 80, புன்செய் ஏகர் 6 செண்டு 49 இவற்றிலிருந்து கிடைக்கும் ரூபாய் 4,000 மேற்படி அதிகச் செலவுக்கு உத்தரவாதம் ஆகும்.

IX. சரக்கார் அனுமதியின் மேல் திருப்பனந்தாளில் கால் நடை வைத்தியசாலை யொன்றை அமைத்து ஆண்டுதோறும் அதற்கு ஆகும் மொத்தச் செலவில் காற்பங்கு அல்லது ரூ. 683 எதுகுறைவோ அதைக் கொடுத்து வைத்தியசாலையை வைக்க இடவசதியும் அளித்தல்.

X. திருப்பனந்தாளிலுள்ள ஜனவைத்தியசாலையை முன்போல் நடத்தி அதற்காக மணிக்குடி கிராமத்தில் 44 ஏகரா 22 செண்டிலிருந்து கிடைக்கும் நிகர வரும்படியை அளித்து வருதல்.

XI. திருப்பனத்தாளிலுள்ள மண்ணியாற்றில் பொது ஜனங்களின் உபயோகத்துக்காக ரூ 2,900 செலவில் ஒரு ஸ்நான கட்டம் கட்டப் பெற்று வருகிறது.

XII. மணிக்கூண்டு: கும்பகோணம் மகாமகக் குளத்தின் அருகே, பொது ஜனங்களின் சௌகரியத்தைக் கருதி ரூ. 25,000 செலவில் மணிக்கூண்டு ஒன்று கட்டப்பெற்று வருகிறது.

XIII. இசைத்தமிழ்த் தரும நிதி ஒரு லக்ஷம் (1,00,000) ரூபாய் மதிப்புள்ள நிலங்கள்.

1. *இந்தத் தருமம் காசியிலுள்ள ஸ்ரீகாசி மடத்தை ஸ்தாபித்தவரும், 16-வது நூற்றுண்டில் தமிழ் மொழியைக் காசி முதல் கன்னியாகுமரி வரை பரவச் செய்தவருமான மாபெரும் தம்பிரானும், சகலகலா வல்லுநருமான* ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதிகுமர குருபர ஸ்வாமிகளின் *ஞாபகார்த்தமாக அமைக்கப்பெற்றது. இசைக் கருவிகளுடன் இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதும், அதன் பொருட்டுத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி உயர் வகுப்பு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிப்பதும் இத்தருமத்தின் நோக்கமாகும்.*

2. *இதற்கு வேண்டிய வருமானம் அளிக்கும் சொத்துக்களாவன: சுமார் 200 ஏக்கர்கள் நன்செய் புன்செய், நிலங்களும், மனைகளும் கட்டிடங்களும்: இவை ஏத்தக்குடி, பைங்காட்டூர் அக்கரைக் கோட்டகம், குறிச்சி, நல்லூர், வாட்டார் வட்டம் முதலிய தஞ்சை ஜில்லா மன்னூர்குடி தாலூகா கிராமங்களில் இருப்பவை-ஸ்ரீலஸ்ரீ காசிவாசி தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பெயரில் பட்டாவுடன் அவர்களது அனுபவத்திலிருப்*

பவை. சொத்தின் மதிப்பு ஒரு லட்சம் ரூபாய். வருஷ வருமானம் சுமார் ரூ 5000- (ரூபாய் ஐயாயிரம்.)

3. இந்தச் சொத்துக்கள் இனியும் சுவாமிகள் அவர்கள் அனுபவத்திலும், அவர்களுக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களும் அனுபவித்து வரவேண்டியது.

4. சொத்தின் வருஷ வரும்படியில் சர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திச் செலவுகள், கிராம சமுதாயம், மராமத்து செலவுகள், கிராம தேவதை உற்சவச் செலவுகள் முதலியன போக மீதித் தொகை கல்லூரி நிர்வாகக் கமிட்டியிடம் ஒப்புவிக்கப் பெறும். கமிட்டியார் இவ்வருமானத்தில் 10 சத விகிதத்தொகையை ரிசர்வ் நிதிக்காக ஒதுக்கி ஸர்க்கார் செக்யூரிடிகளில் முதலீடு செய்த பிறகு மீதித் தொகையைக் கீழ்க்குறிப்பிட்ட வீதம் செலவழிப்பர். தொகைகளைச் சரியான முறையில் முதலீடு செய்து தருமத்தின் நோக்கத்தைச் சரிவர நிறைவேற்றுவதற்கு அவ்வப்பொழுது உபயோகப்படும்படி செய்வது கமிட்டியின் பொறுப்பாகும்.

5. உபாத்தியாயர்களின் சம்பளம், சங்கீதக் கருவிகள் வாங்குவதற்கான செலவுகள், மற்றும் கீழே. ii, iii, iv பாராக்களில் குறிப்பிட்ட செலவுகள், மேலும் ஸ்தாபன நிர்வாகத்திற்கும், இதர நோக்கங்களைப்பூர்த்தி செய்வதற்கும் அவசியமான செலவுகளுமே வருஷ வருமானத்தினின்றும் செலவழிக்கவேண்டிய நியாயமான செலவுகளாகும்.

i. (a) செந்தமிழ்க் கல்லூரி மாணவர் ஆண், பெண், ஜாதி, வகுப்புப் பேதமின்றிப் பயிற்சியில் கலந்து கொள்ளலாம்.

(b) இது சம்பந்தமாக நியமிக்கப்பட்டுள்ள உபாத்தியாயர்கள், உயர்தர வகுப்பு மாணவர்களில் வாய்ப்பாட்டுப் பாடுவதற்குத் தகுதியுடையவர்களையும் தனி வாத்தியங்கள் வாசிக்கத் தகுதியும் விருப்பமுமுடையவர்களையும் பொறுக்கி எடுப்பர்.

(c) கல்லூரியின் பாடங்களைப் பாதிக்காமல் தினசரி ஒரு மணி நேரம் இதற்காகச் செலவழிக்கப்படும்.

(d) இசைத் தமிழ் என்பது தேவாரத் திருமுறைகளைப் பண் ஒன்றப் பாடுதலும், மற்றும் தமிழ்ப்பாடல்களை இன்னிசையுடன் பாடுதலும் ஆம்.

(e) இசைக் கருவிகளாவன :—

i 1. வீணை. 2. தம்பூரா. 3. பிடில். 4. ஹார்மோனியம். 5. புல்லாங்குழல். 6, கஞ்சிரா. 7. மிருதங்கம். 8. கடம். 9. ஜலதரங்கம்.

உபாத்தியாயர்கள் வாய்ப்பாட்டிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களுக்கு இசைக் கருவிகளுடன் தமிழ்ப் பாட்டுகளிற் பயிற்சி யளிக்கவேண்டும். இசைக் கருவிகளில் மட்டும் பயிற்சி பெறத் தகுதியுடையவர்களுக்கு அந்த அந்த வாத்தியங்களில் பயிற்சி யளிக்கவேண்டும். இசைக் கருவிகளுள் முதல் முதல் மிக அவசியமாகக் கருதப்படும் வாத்யங்களிலேயே பயிற்சி ஆரம்பிக்கவேண்டும். பயிற்சி முன்னேற்றமடையுங்கால் அவ்வப்பொழுது தேவைக்குத் தகுந்தபடியும் பொருள் நிலைமைக்குத் தகுந்தபடியும் இதர வாத்தியங்களில் பயிற்சி யளிக்கப்படும்.

ii வருஷா வருஷம் ஒரு சஞ்சிகை வெளியிட்டு அதில் வாய்ப்பாட்டிலும் வாத்தியங்களிலும் பயிற்சி பெறுபவர்களின் எண்ணிக்கை விவரங்கள் இசை விஷயமாக நிபுணர்களின் ஆராய்ச்சிக் குறிப்புகள் கீழே iv-வது பாராவில் குறிப்பிட்டுள்ள இசைத் தமிழ் மகாநாடு வருஷா வருஷம் கூடுவதுபற்றிய விவரங்கள் முதலியவை அச்சிடப்படும்;

iii பயிற்சி பெறுவோர்களுக்கு ஊக்கம் தருவதற்காக வருஷா வருஷம் வாய்ப்பாட்டிற்கு ரூ 50-ம், வாத்தியங்களுக்கு ரூ 50-ம் ரொக்கப் பரிசு இதற்காக நடைபெறும் போட்டியில் சிறப்பாகத் தேர்ச்சி பெறுபவருக்கு அளிக்கப்படும். இந்தத் தொகை கமிட்டி வசமுள்ள நிதியினின்று செலவிடப்படும்.

iv இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதற்காக வருட வருமானத்தில் மிகுந்திருக்கும் உபரித்தொகையைக்கொண்டு ஆதி குமரகுருபர ஸ்வாமிகளின் வருஷ நினைவு விழாவின்போது இசைத் தமிழ் மகா நாடு ஒன்று கூட்டித் தேவாரத் திருமுறை வாணர்களும், இதர தமிழ்ப் பாடல்களில் தேர்ந்த வித்துவான்களும், இசைக்கருவி வல்லுநர்களும் மகாநாட்டிற்கு வரவழைக்கப்பெற்று இசையரங்கு நடத்தப்பெறும்.

6 மேலே ஐந்தாவது பாராவில் கண்ட விஷயங்களுக்காகச் செலவழித்தபின் வருமானத்தில் மிச்சமிருந்தால், சங்கீதப்பயிற்சி பெற்று வரும் மாணவர்களில் தகுதி பெற்றவருக்கு உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்படும். இந்த உபகாரச் சம்பளங்கள் மாதா மாதம் ரூ. 10 முதல் ரூ 15 வரையில் வருஷத்திற்கு 10 மாதங்களுக்கு அளிக்கப்படும்.

7. மேலே 4-வது பாராவில் குறித்தபடி சொத்தின் வருஷ வருமானத்தைக் கமிட்டியின் வசம் ஒப்பிக்காவிட்டால்

*மேலே குறித்த ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கக்கூடிய நிகர வருஷ வருமானத்தை மட்டுமே பெறக் கமிட்டிக்கு உரிமையுண்டு.*

*8. வரவு செலவுகளை ஒழுங்காக கணக்கு எழுதி மாதா மாதம் கணக்குகளை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பார்வைக்கு அனுப்புவது கமிட்டியின் பொறுப்பு.*

*9. இந்தத் தருமத்தின் ஸ்தாபகர் அவர்கள் விரும்பியதைத் தவிர வேறு எந்தக் காரியத்துக்காகவும் தருமத்தின் வருமானம் செலவிடப்படமாட்டாது.*

இத்தருமம் மதராஸ் டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் தமது 17-2-47 தேதியிட்ட நெ. ஆர். ஸி. 114 கே -47 கடிதப்படி அங்கீகாரம் பெற்றிருக்கிறது. இது சம்பந்தமான பத்திரம் மன்னார்குடி ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 16-5-47 இல் 1947-ம் ஹூ த்து 1432-ஆம் எண்ணுள்ள தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

# இப்புத்தகத்தில் அடங்கியவை



# பரிசோதனைக் குறிப்பு

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 32 | இமயம் | இயமம் |
| 14 | 7 | படையெடுப்போன் | படைப்போன் |
| 94 | 7 | செய்யுந் | செயுந் |
| 159 | 10 | கொல்லிட்ட | சொல்லிட்ட |
| | | குறுமகள் | குறமகள் |
| 350 | 15 | நாஞுளும் | நாஞளும் |
| 355 | 2 | விழுத்த | விழித்த |
| 358 | 6 | விரிதிசை | விரிதிரை |
| 382 | 11 | கழுசெழுழுஉங் | கழுசெழுழுஉக் |
| 402 | 8 | முரித்தா | முரித்தாக |
| 408 | 19 | அம்போதரங்கம் | அம்போதரங்க |
| 412 | 9 | சுழன்றநின் | கழன்றநின் |
| 420 | 16 | அறுவினி | அறிவினி |
| 421 | 11 | நினக்கிலைச் | நினக்கிலையச் |
| 447 | 11 | லாலொன்று | லாவொன்றும் |
| 450 | 4 | குறைத்தேற்குப் | குரைத்தேற்குப் |
| 451 | 27 | திரத்து | திறத்து |
| 462 | 14 | பொறுக்கிரையாப் | பொறிக்கிரையாப் |
| 471 | 2 | குடப்பூண் | குமப்பூண் |
| 491 | 13 | னமக்கென்ன | னமக்கென்னே |
| 505 | 4 | மேம்பின | மோம்பின |
| 513 | 7 | திரைளொரு | திரைகளொரு |
| 525 | 14 | கொண்டைப் | கெண்டைப் |
| 545 | 3 | யீங்குதலை | யீர்ங்குதலை |
| 546 | 4 | பொருவரு | பொருவறு |
| ,, | 5 | மருவரு | மருவறு |

# இப்பதிப்பில் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அடிக் - அடிக்குறிப்பு
அடியார் - அடியார்க்கு நல்லார்
அரிச்சந்திர - அரிச்சந்திர புராணம்
அருணைக் - அருணைக்கலம்பகம்
அரும்பத - அரும்பதவுரை
அழகர்கலம்- அழகர்கலம்பகம்
அறநெறிச் - அறநெறிச் சாரம்
இ. கொ - இலக்கணக்கொத்து
இ. வி - இலக்கண விளக்கம்
இறை - இறையனாரகப் பொருள்
இனியவை - இனியவை நாற்பது
ஐங்- ஐங்குறுநூறு
ஐந். ஐம் - ஐந்திணை ஐம்பது
கடவுள் - கடவுள் வாழ்த்து
கந்த - கந்தபுராணம்
கந்தரநு - கந்தரநுபூதி
கம்ப - கம்பராமாயணம்
கல் - கல்லாடம்
கலி - கலித்தொகை [பரணி
கலிங்கத், கலிங்கத்துப் - கலிங்கத்துப்
குமர - குமரகுருபர சுவாமிகள் பிர
குறுந் - குறுந்தொகை [பந்தத்திரட்டு
கூர்ம - கூர்ம புராணம்
கோயினான் - கோயினான்மணிமாலை
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ. சித்தி, சிவஞா-சித்தி-சிவஞான சித்தியார்
சிவஞான - சிவஞான போதம், சிவ ஞான முனிவர் உரை
சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்
சிறுபஞ்ச - சிறுபஞ்ச மூலம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீகாளத்தி - சீகாளத்திப் புராணம்
சீவக - சீவக சிந்தாமணி
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனார்
சூ - சூத்திரம்
சூடா - சூடாமணி நிகண்டு
சேது - சேது புராணம்
சோணசைல - சோணசைல மாலை
தக்க - தக்க யாகப்பரணி [கோவை
தஞ்சைவாணன் - தஞ்சைவாணன்
தண்டி - தண்டியலங்காரம்
தணிகைப் - திருத்தணிகைப் புரா
தமிழ்நா- தமிழ்நாவலர் சரிதை [ணம்
தமிழ்நெறி - தமிழ்நெறி விளக்கம்
தமிழ்விடு - தமிழ்விடு தூது
தனிப் - தனிப்பாடல்
தியாகராச - தியாகராச லீலை
திருக்கழுமலமும் - திருக்கழுமலமும் மணிக்கோவை
திருக்குற், திருக்குற்றாலப்- திருக்குற் றாலப்புராணம்
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார் [நாயனார்
திருஞா - திருஞானசம்பந்தமூர்த்தி
திருநா - திருநாவுக்கரசு நாயனார்
திருப்பெருந்துறைப் - திருப்பெருந் துறைப் புராணம்
திருவரங்கக்- திருவரங்கக்கலம்பகம்
திருவா - திருவாசகம் [புராணம்
திருவாதவூரர் - திருவாதவூரர்
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
திருவானைக்காப் - திருவானைக்காப் புராணம்

திருவிடை. உலா - திருவிடை மருதூருலா. [மும்மணிக்கோவை
திருவிடை. மும் - திருவிடைமருதூர்
திருவிளை - திருவிளையாடற்
திவ் - திவ்யப் பிரபந்தம் [புராணம்
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியருரை
நள - நளவெண்பா
நற் - நற்றிணை
நன் - நன்னூல்
நாலடி - நாலடியார்
நான்மணிக் - நான்மணிக்கடிகை
நைடத - நைடதம்
பட்டினத்துப் - பட்டினத்துப் பிள்ளையார் பாடல்
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்
பரிமேல் - பரிமேலழகர் உரை
பாசவதைப் - பாசவதைப் பரணி
பி - ம் - பிரதிபேதம்
பிரபு - பிரபுலிங்க லீலை
பு. வெ - புறப்பொருள் வெண்பா
புறநா - புறநானூறு [மாலை
பெரிய - பெரிய புராணம்
பெரியதிரு - பெரிய திருமொழி
பெரிய நாயகி - பெரியநாயகியம்மை விருத்தம்
பெருங் - பெருங்கதை [படை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பேர் - பேராசிரியர் உரை
பொருந - பொருநராற்றுப்படை
பொன்வண்ணத் - பொன்வண்ணத் தந்தாதி
மதுரைக் - மதுரைக் காஞ்சி
மணி - மணிமேகலை
முத் - முத்தொள்ளாயிரம்
முதுமொழிக் - முதுமொழிக்காஞ்சி
முருகு - திருமுருகாற்றுப்படை
மூத்த. திருவிரட்டை - மூத்த பிள்ளையார் திருவிரட்டை மணிமாலை
மேற் - மேற்கோள்
யா. கா - யாப்பருங்கலக் காரிகை
விக்கிரம - விக்கிரமசோழனுலா
வி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்
வெங்கைக் - திருவெங்கைக்கோவை
வெங்கைக்கலம் - திருவெங்கைக் கலம்பகம்

# குறிப்பு

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்



ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடாதாரே
உருகுவித்தா லாரொருவ ருருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே.

திருச்சிற்றம்பலம்

இந்நூலின் முதற்பதிப்பு என் தந்தையாரவர்களால் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்துப் பொருளுதவியால் 1939-ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்த நூலைப்பற்றிய விவரங்களெல்லாம் அவர்களுடைய முகவுரையால் நன்கு விளங்கும்.

இப்பதிப்பு இப்போது காசிமடத்தின் வெளியீடாக வருகின்றது.

சில வருடங்களுக்கு முன்னரே இரண்டாம் பதிப்பை வெளியிடும்படி ஸ்ரீ காசிமடத்து அதிபர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் கட்டளையிட்டிருந்தும் சிலகாலமாக உள்ள பல இடர்ப்பாடுகளால் முன்னரே வெளியிடக் கூடவில்லை. இப்போதேனும் நிறைவேறியதுபற்றி மிகவும் மகிழ்கின்றேன். இந்தப் பணி எனக்குக் கிடைத்தது என் கடமையும் பாக்கியமுமாகும்.

காகிதக் கிரயம், மற்றச் சாமான்களின் விலை, கூலி முதலியன மிக அதிகரித்திருக்கும் இக்காலத்தில் தமிழ் பயில்வோர்களுடைய நன்மை ஒன்றையே பெருநோக்கமாகக் கொண்டு இந்நூலை வெளிவரச்செய்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்களுடைய பெருந்தகைமையும், ஒப்புயர்வற்ற பாஷாபிமானமும் யாவராலும் போற்றற்குரியன.

பட்டத்துக்கு எழுந்தருளியது முதல் ஸ்ரீலஸ்ரீ காசிவாசிசுவாமிகளவர்கள் தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறை இவற்றின் அபிவிருத்திக்காகவும், பொது ஜனங்களின் அனுகூலத்துக்காகவும் அவ்வப்போது மனமுவந்து அமைத்துவரும் பேரறங்களும் பரிசுகளும் மிகப்பல. இதுவரை அவர்கள் ஏற்படுத்தியுள்ள தருமக் கட்டளைகளைப்பற்றிய விவரங்கள் யாவரும் தெரிந்துகொள்ளும்படி தனியே இப்புத்தகத்தில் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

முதற் பதிப்பில் 'பிரபந்தங்கள்' என்றிருந்த பெயர் இப்போது 'பிரபந்தத் திரட்டு' என்று மாற்றப் பெற்றுள்ளது.

இந்நூல் அச்சாகிவருகையில், ஒழிவு நேரங்களில் உடனிருந்து ஒப்புநோக்குதல் முதலிய உதவிகள் புரிந்த சென்னை, கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர் ம-ா-ா-ஸ்ரீ வி. மு. சுப்பிரமணிய ஐயர் B. O. L. அவர்களுக்கும், திருவல்லிக்கேணி தேசியப் பெண்கள் உயர்தரக்கலாசாலைத் தமிழாசிரியர் ம-ா-ா-ஸ்ரீ வித்துவான் H. வைத்தியநாதையரவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

மிகவும் குறுகிய காலத்தில் நன்குக அச்சிட்டுக் கொடுத்த கபீர் அச்சுக்கூடத்தாருடைய பேருழைப்பை மிகவும் பாராட்டுகின்றேன்.

அச்சுவேலை மிகவும் வேகமாக நடந்ததால் சில பிழைகள் நேர்ந்திருக்கக்கூடும். அவற்றைப் பொறுத்துக்கொள்ளும்படி அறிஞர்களை வேண்டுகின்றேன்.

சுபம்

இங்ஙனம்

S. கலியாணசுந்தரையர்

6—6—1947.

உ

கணபதி துணை

# முகவுரை

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தி
நலஞ்சுடரே நால்வேதத் தப்பா னின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலா யிதுவுன் றன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள்
நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்
கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே.

திருச்சிற்றம்பலம்

---

தமிழ்நாட்டில் பண்டைக்காலந் தொடங்கித் தமிழ்பயிலும் மாணுக்கர்கள் முதலில் சிறுநூல்களைக் கற்றல் வழக்கமாக இருந்தது. அந்தாதி, சிலேடைவெண்பா, மாலை, கலம்பகம், கோவை, மடல், பரணி என்பவற்றை ஒன்றன்பின் ஒன்றுகப் படித்து வருவார்கள். தமிழில் அடிப்படையான உணர்ச்சி வருதற்குப் பிரபந்தங்கள் உதவியாக இருத்தலின் அவற்றை வித்துவான்கள் கருவி நூல்கள் என்று வழங்குவர்.

அவ்வக்காலங்களில் தமிழ்மொழியில் புலவர்பெருமக்களால் இயற்றப்பெற்ற பிரபந்தங்கள் பல இருப்பினும் சில பிரபந்தங்களே பயிலப் பெற்று வந்தன. எவ்வளவோ அந்தாதிகள் இருப்பினும் திருப்புகலூரந்தாதி, திருவரங்கத்தந்தாதி முதலிய சிலவற்றையே தமிழ்மாணவர்கள் மிகுதியாகப் படித்து வந்தனர். இவ்வாறு தமிழ் பயில்வாரிற் பெரும்பாலோர் தவருமற் படித்துப் பயன்பெறும் பிரபந்தத் தொகுதிகளுள் முன்வரிசையிலே நிற்பது குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தத் தொகுதி. அஷ்டப் பிரபந்

தம், சிவப்பிரகாச சுவாமிகளின் பிரபந்தத் தொகுதி, சிவஞான சுவாமிகள் பிரபந்தங்களென்பவையும் அந்த வரிசையிலே அடங்கும்.

பிள்ளைத்தமிழென்றவளவிலே தமிழ்பயில்வார் யாவருக்கும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் முதலில் நினைவுக்கு வரும். அப்படியே நீதிநெறிவிளக்கமும், மதுரைக்கலம்பகமும் மிக்க சிறப்புப் பெற்றவை. நீதிநெறி விளக்கம் பள்ளிக்கூடங்களில் இன்றும் பாடமாக வைக்கப் பெறுகின்றது. சமயச் சார்பின்றி நீதிகளை உரைக்கும் அதனைச் சிலர் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளனர். 'திருக்குறள் பருவத்திலே பெற்ற பிள்ளை' என்று திரிசிரபுரம் வித்துவான் சி. தியாகராச செட்டியார் அந்நூலைப் பாராட்டுவார். கந்தர் கலிவெண்பாவும், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழும் பாராயண நூல்களாக வழங்குகின்றன. அவற்றைப் பக்தியோடு பலர் பாராயணம் செய்து, விரும்பியவற்றையும் முருகன் திருவருளையும் பெற்று வருகின்றனர். சகலகலாவல்லி மாலையைப்போல இனிய எளிய நடையிலுள்ள சரசுவதி தோத்திரம் வேறு இன்மையின் அது மிகவும் சிறப்பாகப் போற்றப்பெற்று வருகின்றது.

குமரகுருபரர் இயற்றிய பிரபந்தங்களாக இப்போது தெரிந்தவை (1) கந்தர் கலிவெண்பா, (2) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், (3) மதுரைக் கலம்பகம், (4) நீதிநெறி விளக்கம், (5) திருவாரூர் நான்மணிமாலை, (6) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், (7) சிதம்பர மும்மணிக்கோவை, (8) சிதம்பரச் செய்யுட்கோவை, (9) பண்டார மும்மணிக்கோவை, (10) காசிக் கலம்பகம், (11) சகலகலாவல்லி மாலை, (12) கைலைக் கலம்பகம், (13) காசித் துண்டிவிநாயகர் பதிகம் என்னும் பதின்மூன்றுமாகும்.

இவற்றுள் கைலைக்கலம்பகத்திற் சில செய்யுட்களே கிடைக்கின்றன; காசித் துண்டிவிநாயகர் பதிகம் கிடைக்கவில்லை. சென்ற நூற்றாண்டில் தேவர்பிரான் கவிராய ரென்பவரால் இயற்றப் பெற்ற சிறப்புப்பாயிரம் ஒன்றில் இவர் இயற்றிய பிரபந்தங்கள் பதினான்கு என்ற குறிப்புக் காணப்படுகின்றது. மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை, மீனாட்சியம்மை குறம், சிவகாமியம்மையிரட்டைமணி மாலை என்னும் மூன்று பிரபந்தங்களும் குமரகுருபரசுவாமிகள் இயற்றியனவாக அச்சுப்பிரதிகளிற் காணப்படுகின்றன. ஆயினும் திருப்பனந்தாள் காசிமடத்திலுள்ள பழமையான ஏட்டுப் பிரதிகளிலும் வேறு பழைய ஏட்டுப் பிரதிகளிலும் இம்மூன்றும் காணப்படவில்லை. பரம்பரையாகப் பாடம் சொல்லுபவர்கள் இம்மூன்றையும் குமரகுருபர சுவாமிகள் நூல்களோடு

சேர்த்துச் சொல்வதில்லை. என்னுடைய தமிழாசிரியராகிய மகா வித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களும் வேறு பல வித்துவான்களும் இவற்றைக் குமரகுருபரமுனிவர் வாக்காகக் கருதுவதில்லை. இவற்றின் சொற்பொருளமைதிகளை ஆராய்ந்தாலும் இவற்றிற்கும் இம்முனிவர் இயற்றிய பிரபந்தங்களுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாகப் புலப்படும். இதற்குமுன் வெளிவந்துள்ள பதிப்புக்களில் இவையும் சேர்க்கப்பட்டுள்ளதை எண்ணியானும் இவற்றைத் தனியே பின்னால் இப்பதிப்பில் சேர்த்திருக்கிறேன்.

எனது இளமைமுதலே எனக்குக் குமரகுருபர முனிவர் வாக்கில் ஈடுபாடு மிகுதியாக இருந்துவந்தது. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் முழுவதையும் அப்போது பாராயணம் செய்துவந்ததுண்டு. தமிழ்நாட்டிலிருந்த வித்துவான்கள் சிலவகையான கற்பனைச் செய்யுட்களைப் பாடம் செய்துகொண்டு அவற்றைக் கூறிப் பொருள் விரிவாகச் சொல்லி அவ்வப்போது தம்மிடம் வருவோர்களையும் தாம் செல்லுமிடங்களில் உள்ளோரையும் மகிழ்வித்து வருதலைக் கண்டிருக்கிறேன். அங்ஙனம் அவர்கள் கூறும் செய்யுட்களில் குமரகுருபரர் செய்யுட்களும் இருக்கும்.

பிள்ளையவர்களிடம் பாடங்கேட்டுவந்த காலத்தில் திருவாவடுதுறை யாதீன மடத்திலுள்ள ஏட்டுப் பிரதிகளை வைத்து நானும் பிறரும் படித்துவந்தோம். அக்காலத்தில் குமரகுருபரர் பிரபந்தங்களிற் சில தனித்தனியே அச்சிடப்பெற்று வழங்கி வந்தன. அப்பால் சென்ற விரோதி (1889) வருஷத்தில் என்னுடைய நண்பரும் சிதம்பரம் ஈசானியமடத்தைச் சார்ந்தவருமான ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டை ஸ்ரீமான் பூண்டி அரங்கநாத முதலியார் பொருளுதவியால் வெளியிட்டனர். அக்காலத்தில் என்னிடமிருந்த சில ஏட்டுச் சுவடிகளிற் கண்ட பாடங்களை அப்பதிப்பில் உபயோகப்படுத்திக்கொள்ளும்படி கொடுத்தேன்.

அதன்பிறகு தமிழ்நாட்டில் யான் யாத்திரை செய்துவந்த காலத்தில் அங்கங்கே கண்ட குமரகுருபரர் பிரபந்த ஏட்டுச்சுவடிகளிலுள்ள பாடங்களை என் கைப்பிரதியிற் குறித்துக்கொண்டு வந்தேன். அவற்றாற் பல திருத்தங்கள் கிடைத்தன. நாளடைவில் குமரகுருபரர் பிரபந்தங்கள் தனித்தனியாகவும் ஒரே தொகுதியாகவும் உரையுடனும் உரையின்றியும் பலராற் பதிப்பிக்கப் பெற்றன. திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இப்பிரபந்தத்திரட்டின் பதிப்பொன்றைக்

குறிப்புரையோடு வெளியிட்டிருக்கின்றனர். அதில் கைலைக்கலம்பகச் செய்யுட்கள் சில காணப்படுகின்றன.

திருப்பனந்தாட் காசிமடத்தில் இப்போது 19-ஆம் பட்டத்தில் தலைவர்களாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத ஸ்வாமிகளவர்கள்* இயற்கையிலேயே கல்விச்செல்வம் வாய்ந்திருப்பதோடு, கோடீச்சுரக்கோவை முதலிய நூல்களை இயற்றியும் தஞ்சை ஸம்ஸ்தானத்தில் தமிழ்வித்துவானாக இருந்தும் சென்னை இராசதானிக் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக இருந்தும் புகழோடு விளங்கிய கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரவர்களது பரம்பரையில் உதித்தவர்களாதலால் தமிழ்நூல்களின்பாலும் தமிழ்க்கல்வியுடையாரிடத்தும் பேரன்பு காட்டிவருகிறார்கள். இவர்கள் 1930-ஆம் வருஷத்தில் இப்பிரபந்தங்களுள் முதல்லாவதான கந்தர்கலிவெண்பாவைக் குறிப்புரையுடன் ஷை மடத்து ஆயிரம் ரூபாய்த் தமிழ்ப்பரிசை முதன் முறையாகப் பெற்றவரும் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய சிரஞ்சீவி வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயரைக் கொண்டும், அதே வருஷத்தில் தமிழ்விடுதூதையும் 1931-ஆம் வருஷத்தில் மதுரைச் சொக்கநாதருலாவையும் 1932- ஆம் வருஷத்தில் கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்களையும் என்னைக்கொண்டும் குறிப்புரை முதலியவற்றுடன் அச்சிடுவித்துத் தமிழ் படித்தவர்களுக்கெல்லாம் நன்கொடையாக வழங்கி உபகரித்தார்கள்.

தாம் பிறந்த குலத்துப்பெரியாராகிய ஸ்ரீ சிவக்கொழுந்துதேசிகருடைய பிரபந்தங்களை வெளியிட்டுதவியதுபோலப் புகுந்தவிடத்துப் பெரியாராகிய ஸ்ரீ குமரகுருபரசுவாமிகளுடைய பிரபந்தங்களையும் குறிப்புரையுடன் வெளியிட வேண்டுமென்று அவர்கள் சில வருஷங்களுக்குமுன் என்னிடம் சொன்னார்கள். அவர்கள் விரும்பியபடியே ஆராய்ந்து சென்ற வருஷம் பதிப்பிக்கத் தொடங்கி இப்போது இப்பிரபந்தங்களை வெளியிடலானேன். இப்பதிப்பில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கமும், ஆராய்ச்சியும், மூலமும், குறிப்புரையும், அரும்பத முதலியவற்றின் அகராதியும் காணப்படும்.

பிரபந்தங்களைப் படிப்பாரும் பாராட்டுவாரும் அருகிவரும்இக்காலத்தில் அவற்றின் அருமையைப் பலரும் அறியவேண்டுமென்று எண்ணியும் காசிமடாலயத்து அதிபர்கள் விருப்பத்தையுணர்ந்தும் ஆராய்ச்சி விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. அதனால் குமரகுருபரருடைய தமிழ்ப்புலமையின் விரிவையும் உலகியலறிவையும் சமய

*இவர்கள் 26-3-1944ல் பரிபூர்ணமடைந்து விட்டார்கள்.

வுணர்ச்சியையும் தெய்வபக்தியையும் பிற சிறப்பியல்களையும் அறியலாம்.

குமரகுருபர சுவாமிகளுடைய சரித்திரம் காசிமடத்தின் ஆதரவில் பின்பு விரிவாக வரக்கூடுமாதலின் இதிற் சுருக்கமாக எழுதிச் சேர்க்கப்பெற்றது.

இப்பதிப்பில் பிரபந்தச் செய்யுட்கள் அனைத்திற்கும் தொடர்ச்சியான எண் கொடுக்கப்பட்டுள்ளது. வழங்கிவரும் அச்சுப் பிரதிகளில் செய்யுட்களின் தலைப்பிற் காணப்படும் யாப்புக் குறிப்புக்கள் சில பிழைபடவுள்ளன; அவை இப்பதிப்பில் மாற்றப் பட்டன. சந்தச்செய்யுட்களுக்குரிய குழிப்புக்களை அடிக்குறிப் பிலே காணலாம். பல ஏட்டுச்சுவடிகளின் உதவியால் அறிந்த பலதிருத்தங்களுள் பொருத்தமானவற்றை மூலத்திலே யமைத்தும், பிறவற்றையும் இப்பொழுது அச்சுப் பிரதிகளிலே காணப்படும் சில வேறுபாடுகளையும் பிரதிபேதங்களாக அடிக்குறிப்பிலே கொடுத்தும் இருக்கிறேன்.

*   *   *   *

குறிப்புரையில் கடினமான சொற்களுக்குப் பொருளும் முடிபும் சில கருத்துக்களுக்குப் பிற புலவர் வாக்கிலிருந்து மேற் கோளும் காட்டப்பட்டன. பிள்ளையவர்கள் முதலியோரிடத்துக் கேட்ட பல அரிய உரைக்குறிப்புக்களையும் இப்போதுள்ள ஸ்ரீ காசி மடாலயத்தலைவர்கள் ஆராய்ந்தும் கேட்டறிந்தும் உதவிய குறிப்புக்களையும் இக்குறிப்புரையில் உபயோகப்படுத்தி யுள் ளேன்.

இப்பதிப்புக்கு உதவியாக இருந்த ஏட்டுச்சுவடிகள் வருமாறு

## பிரபந்தத் தொகுதி முழுதும் உள்ளவை

1. திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத் துப் பிரதி
2. திருப்பனந்தாட் காசிமடத்துப் பிரதி
3. ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள் பிரதி

## தனிப் பிரபந்தங்களின் பிரதிகள்

**கந்தர் கலி வெண்பா:** பாண்டித் துரைத் தேவரவர்கள் பிரதி.

**மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்:** (1) சோடசாவதானம் சுப்பராய செட்டியாரவர்கள் பிரதி, (2) கவுண்டன்பாளையம் நரிப்புலவரவர் கள் பிரதி, (3) திருநெல்வேலி ஈசுவரமூர்த்திக் கவிராயரவர்கள் பிரதி, (4) தலையநல்லூர் குமாரசாமிக் கவிராசர் குமாரர் பிரதி.

நீதிநெறி விளக்கம்: மதுரை இராமசாமிப் பிள்ளையவர்கள் பிரதி.

பண்டார மும்மணிக் கோவை: திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரதி.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்: மதுரை ஸ்ரீ திருஞான சம்பந்தராதீனத்துப் பிரதி.

சிதம்பரச் செய்யுட்கோவை: ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்கள் பிரதி.

காசிக் கலம்பகம்: திருநெல்வேலி, திருவம்பலத்தின்னமுதம் பிள்ளையவர்கள் பிரதி.

ஸ்ரீ காசிமடம் எனக்கு ஏறக்குறைய 60 வருஷங்களாகப் பழக்கமுள்ள இடம். இப்போதுள்ள தலைவர்கள் விசேஷ அன்பு காட்டி வருவதோடு என்னுடைய வேறு நூற்பதிப்புக்களுக்கும் அவ்வப்போது பொருளுதவி செய்து வருதலைக் குறித்தும் இப் பதிப்பின் விஷயத்தில் எனக்கு உண்டான பொருட்செலவு முழுவதையும் உதவியது குறித்தும் நான் மிகவும் நன்றி பாராட்டுகின்றேன். எனது நூலாராய்ச்சி விஷயத்தில் எழுதுதல், ஒப்பு நோக்குதல் முதலிய உதவி செய்பவர்களின்பொருட்டு எனக்கு ஏற்படும் செலவையும் சில மாதங்களாக இவர்கள் உதவி வருவது பின்னும் எனக்கு ஊக்கத்தை யளிக்கின்றது.

இவர்களுடைய பொருளுதவியாற் பலர் வாயிலாகப் பல வகைத் தமிழ்நூல்கள் வெளிவந்திருத்தலைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழ்மொழிப் பயிற்சியின் அபிவிருத்தி ஒன்றனையே கருதி வருஷந்தோறும் சென்னைச் சருவகலாசாலைத் தனித்தமிழ் வித்துவான் பரீட்சையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுபவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசாக அளிக்கும்படி நிலையான ஏற்பாடொன்றை இவர்கள் செய்து பெரும்புகழைப் பெற்று விளங்குவது தமிழ்நாட்டார் பலரும் அறிந்ததே. இத்தகைய பேருதவியை இதுவரையில் ஒருவரும் செய்யவில்லை. இப்பரிசு அளிக்கத் தொடங்கியபின் வித்துவான் பரீட்சைக்குப் படிப்பவர்களுடைய தொகை அதிகரித்துக்கொண்டே வருகின்றது.

வழக்கம்போலவே இப் பதிப்பு விஷயத்தில் உடனிருந்து பல வகையான உதவிகளைச்செய்தவர்கள் என் இளைய சகோதரராகிய சிரஞ்சீவி வே. சுந்தரேசையரும், மேற்கூறிய வித்துவான் சிரஞ்சீவி வி. மு. சுப்பிரமணிய ஐயரும், காசி மடத்து ஆயிரம் ரூபாய்த் தமிழ்ப் பரிசை 1933-ஆம் வருஷம் அடைந்தவரும் சென்னைக் கலைமகள் துணையாசிரியருமான வித்துவான் சிரஞ்சீவி கி. வா. ஜகந்நாதையரும் ஆவர்.

இளமைமுதல் தமிழ்த்தொண்டிலே பொழுதுபோக்கி வரும் எனக்குச் சில வருஷங்களாக உள்ள முதுமைத்தளர்ச்சியால் நான் எண்ணியவற்றை எண்ணியபடியே என்றும் செய்ய இயலவில்லை. ஆயினும், சுவையுள்ள தமிழ்நூல்கள் வெளிவர வேண்டு மென்னும் ஆவல்மட்டும் இருந்து வருகிறது. இந்நிலைமையில், இப்பதிப்பு விஷயத்தில் என் கருத்தையும் குறிப்பையும் தெரிந்து உதவிபுரிந்தவர் மேற்கூறிய ஜகந்நாதையர். அவருடைய பேரு ழைப்பே இப்பதிப்பிலுள்ள ஆராய்ச்சியும் குறிப்புரையும் இம் முறையில் அமைந்திருப்பதற்குக் காரணமென்பதை இதன் முக மாகத் தமிழன்பர்களுக்குத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

" தியாகராஜ விலாசம் "<br>
திருவேட்டீசுவரன் பேட்டை,<br>
16—9—1939.

இங்ஙனம்,<br>
**வே. சாமிநாதையர்**

# தனிச் செய்யுட்கள்

சில கையெழுத்துப் பிரதிகளில் சில செய்யுட்கள் தனியே காணப்படு கின்றன. அவை வருமாறு:

(கட்டளைக்கலித்துறை)

பூதங் கடந்த புகழ்க்கூடற் சம்பந்தன் போதித்தசொல்<br>
வாதங் கடந்து மனேலய மாயிந்து மண்டலம்போய்<br>
நாதங் கடந்து நடுவெளி தாண்டி நலஞ்சிறந்த<br>
போதங் கடந்தின்ப பூரண மாகிப் பொலிந்ததுவே. (க)

காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய<br>
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை<br>
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்<br>
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே. (உ)

இவையிரண்டும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இயற்றியன வென்று கூறுவர்.

(நேரிசையாசிரியப்பா)

செந்நெலுங் கன்னலுஞ் சேருமெய்த் தருமை<br>
நன்னகர் வருசிவ ஞான தேசிகன்<br>
பொன்னடி யிணைமலர் போற்றுதும்<br>
மன்னுபே ரின்ப வாழ்வுபெறற் பொருட்டே.

இது சென்ற சுக்கிலஞு மாசிமீ திருமயிலைச் சுப்பராய ஞானி யாரால் பதிப்பிக்கப்பெற்ற பண்டாரமும்மணிக்கோவை அச்சுப்பிரதியிற் காணப்படுகின்றது.

(நேரிசை வெண்பா)

வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே—செந்திநகர்ச்
சேவகா வென்று திருநீ றணிவார்க்கு
மேவவா ராதே வினை.

இச் செய்யுள் கந்தர்கலிவெண்பா ஏட்டுப்பிரதி ஒன்றின் ஈற்றிலே காணப்பட்டது.

(நேரிசை வெண்பா)

ஆட லறுபத்து நாலுடையா ரம்புயப்பொன்
மேடையின்மே லேறி விளையாடும்—கூடல்
உறைகளிறே யுன்பாத முன்னினேன் கண்டாய்
இறைகளிறேன் கூற்றுக் கினி. (க)

கற்றறிவ தென்றுங் கனவினுமுன் ஞமமே
மற்றறியேன் வள்ளி மணவாளா—வெற்றிச்
செழுந்திருக்கை வேலைச் சிறுகாலை வாழ்த்தி
எழுந்திருக்கை வேலை யெனக்கு. (உ)

இவையிரண்டும் திருநெல்வேலி அம்பலவாணக் கவிராயரவர்கள் வீட்டிற் கிடைத்த மதுரைக் கலம்பக ஏட்டுப் பிரதியிலே இருந்தன.

(வஞ்சித்துறை)

ஆறு முகவனை, நாறு மலர்கொடு
கூறு மடியவர், பேறு பெறுவரே. (க)

(குறள் வெண்செந்துறை)

தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே. (உ)

(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற் றழகுபச் சுடம்பிற்
றிவளமா துடனின் றுருடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
றரித்துயர் கிரிப்புறத் தெழுதும்
கவளமால் களிற்றின் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம். (ங)

(கலிவிருத்தம்)

ஆர ணத்தவன் மாலறி யாவருட்
பூர ணத்திரு ஞானம் பொலிந்திடக்
கார ணத்துமை யாள்தரு கைம்முக
வார ணத்திரு பாதம் வணங்குவாம். (௪)

இவை நான்கும் கொங்குநாட்டிற் கிடைத்த மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் ஏட்டுப் பிரதிகள் சிலவற்றில் இருந்தன.

---

# சிறப்புப் பாயிரம்

பின்வரும் சிறப்புப் பாயிரச் செய்யுள், சென்ற நூற்றாண்டில் நீதிநெறி விளக்கத்தைப் பாளையங்கோட்டையிலிருந்த ஒரு பாதிரியார் பதிப்பித்த காலத்தில், அவர் விருப்பத்தின்படி அவருக்குத் தமிழ்ப்பாடஞ் சொல்லி வந்த தேவர்பிரான் கவிராயரென்பவரால் இயற்றப்பெற்று அப்பதிப்பில் சேர்க்கப்பட்டதென்று குமரகுருபரசுவாமிகள் மரபிற் பிறந்த ஒருவரால் அறிந்தேன்.

(நிலைமண்டில வாசிரியப்பா)

திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னக ருதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறு மளவும்
மழக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதா துணர்ந்த போதனும் முன்னர்க்
கலிவெண் பாவெனு மொலிபெறு மலங்கலக்
குகன்றிரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்
பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலையீ றுகச் சால்பமை பிரபந்தம்
* முந்நான் கியற்றித் தன்னுஞ் சமய
நிலையையுங் காட்டி யுலைவிலா தியாரும்
தீதெலா மொருவி நீதியே புரிய

---

* தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பில் இங்கே, "முந்நான் கன்றியு மொழிதரு கைலைக், கலம்பகந் துண்டிக் களிற்றுப் பதிகம், அவ்விரண் டியற்றிச் சைவநற் சமய" என்னும் பகுதி காணப் படுகிறது.

நீதிநெறி விளக்கமென் றேதமில் பனுவலும்
இயற்றின னில்லறந் தியக்குறு நிலையென
இளமையிற் றுறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சுமற் புதகுண குமர
குருபர னெனும்பெயர் மருவிய முனியே.

---

# ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் சரித்திரச் சுருக்கம்

ஒன்பது கைலாசங்களும் ஒன்பது திருப்பதிகளும் தன் கரையில் அமையப்பெற்ற தாமிரபர்ணி நதியின் வடகரையில் ஸ்ரீவைகுண்டமென்று வழங்கும் திருப்பதியின் வடபாலில் ஸ்ரீ கைலாசமென ஒருபகுதி உண்டு. அங்கே பரம்பரையாகத் தமிழ்ப் புலமையும் முருகக்கடவுளது பக்தியும் வாய்ந்த சைவவேளாள குலத்தில் சண்முகசிகாமணிக் கவிராயரென்ற ஒருவர் தம் மனைவியாரான சிவகாமசுந்தரியம்மையாரோடு வாழ்ந்துவந்தார். அவ்விருவருக்கும் ஓர் ஆண் குழந்தை உதித்தது. அதற்குக் குமரகுருபரன் என்னும் பெயர் சூட்டி அவர்கள் வளர்த்து வருவாராயினர்.

குமரகுருபரர் ஐந்தாண்டுவரையிற் பேச்சின்றி ஊமைபோல இருந்துவந்தனர். அதுகண்டு நடுங்கிய பெற்றோர்கள் அவரைத் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்று செந்திலாண்டவர் சந்நிதியிலே வளர்த்திவிட்டுத் தாமும் பாடுகிடந்தனர். முருகவேள் திருவருளால் குமரகுருபரர் பேசும் ஆற்றல்பெற்றுக் கல்வியிலும் சிறப்புற்றனர். செந்திற்பெருமான் திருவருளால் வாக்குப் பெற்ற இவர், அப்பெருமான் விஷயமாகக் கந்தர் கலிவெண்பா என்ற பிரபந்தத்தைப் பாடினர். அப்பால் தம் ஊரிலெழுந்தருளியுள்ள ஸ்ரீகைலாசநாதர்மீது கைலைக் கலம்பகம் என ஒரு பிரபந்தம் இயற்றினர். இவருக்குக் குமாரசுவாமிக் கவிராயரென ஒரு தம்பியார் இருந்தனர்.

குமரகுருபரர் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் ஞானசாத்திரங்களையும் திருவருளால் விரைவில் கற்றுத் தேர்ந்தார்; மருவுக்கு வாசனை வாய்த்தாற்போன்று பக்திஞான வைராக்கியங்கள் இவரிடத்தே உண்டாகி வளரத் தொடங்கின. அப்பால் பல சிவ

தலங்களுக்கும் சென்று சிவதரிசனம் செய்யத்தொடங்கினர். மதுரையிலே சிலகாலம் தங்கியிருந்தார். அப்போது ஸ்ரீமீனாட்சி யம்மையின் திறத்து ஒரு பிள்ளைத்தமிழ் பாடி அக்காலத்தில் மதுரையில் அரசாண்டிருந்த திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றினார். அதனை அரங்கேற்றுகையில் ஸ்ரீ மீனாட்சி யம்மையே குழந்தையுருவாக எழுந்தருளி வந்து கேட்டு மகிழ்ந்தன ரென்றும், குமரகுருபரர் முத்தப்பருவத்தை அரங்கேற்றிக் கொண்டிருக்கையில் தம் திருக்கழுத்திலிருந்த முத்துமாலை யொன்றை எடுத்து இவருக்கு அணிந்துவிட்டு மறைந்தனரென்றும் கூறுவர். அந்தப் பிள்ளைத்தமிழைக் கேட்டு மனமுவந்த திருமலை நாயக்கர் குமரகுருபரருக்குப் பலவகையான ஸம்மானங்களை அளித்து வழிபட்டனர். குமரகுருபரர் பின்னும் சிலகாலம் மதுரையிலே தங்கி மதுரைக்கலம்பக மென்னும் பிரபந்தத்தை இயற்றினர். பிறகு சோழநாட்டு ஸ்தலங்களைத் தரிசிக்கத் தொடங்கித் திருவாரூருக்குச் சென்றார். அங்கே ஸ்ரீ தியாகப்பெரு மானைத்தரிசித்துக் கொண்டு சிலகாலம் இருந்தனர். அக்காலத்தில் திருவாரூர் நான்மணிமாலையென்னும் பிரபந்தத்தை இவர் இயற் றினார்.

சிவஞான வுபதேசம் பெறவேண்டுமென்ற கருத்து இவருக்கு வரவர அதிகமாயிற்று. தமக்குரிய ஞானாசிரியரைத் தேடித் தேர்ந்து சரண்புகவேண்டுமென்று இவர்மனம்ஆவலுற்று நின்றது. அக்காலத்தில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் 4-ஆம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் சிவஞானச் செல்வராக இருப்பதை யறிந்து அவரிடம் சென்றார். அங்கே உண்டான சில குறிப்புக்களால் அப்பெரி யாரே தமக்குரிய ஆசிரியரென்பதை இவர் தேர்ந்தனர். அப்பால் தமக்குத் துறவுநிலை யருள வேண்டுமென்று அத்தேசிகர்பால் குமர குருபரர் வேண்டினர். அங்ஙனம் செய்வதற்குமுன் ஸ்தலயாத் திரை செய்து வரும்படி பணித்தல் அவ்வாதீன மரபாதலின் அப் பெரியார் காசியாத்திரை செய்து வரும்படி கட்டளையிட்டனர். காசிக்குச் சென்று வருவதில் நெடுங்காலம் செல்லுமேயென்று கவன்ற குமரகுருபரரை நோக்கிச் சிலகாலம் சிதம்பரவாசமேனும் செய்யும்படி பணித்தனர்.

ஞானாசிரியர் கட்டளைப்படியே சிதம்பரத்துக்கு இவர் பிரயா ணமாகி இடையே ஸ்ரீ வைத்தீசுவரன் கோயிலில் தங்கித் தரிசனம் செய்துகொண்டுஅங்கே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி விஷயமாக ஒரு பிள்ளைத்தமிழ் இயற்றினார்.

பிறகு சிதம்பரம் சென்று ஸ்ரீ நடராஜப்பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு சிலகாலம் தங்கினர். அக்காலத்தில் சிதம்பர மும்மணிக்கோவை யென்னும் பிரபந்தம் இவரால் இயற்றப்பெற்றது. அதில் முதற் செய்யுளில் காசிக்குச் செல்வதில் உளவாகும் துன்பங்களையும் சிதம்பரத்திற்குச் சென்று தரிசனம் செய்யும் எளிமையையும் "காசியினிறத்த ஞேக்கி" (452) என்பது முதலிய அடிகளில் உணர்த்தியிருக்கின்ருர். அவ்வடிகள், தம்மை ஆசிரியர் காசிக்குச் செல்லப்பணித்ததும் அதன் அருமையைத்தாம் விண்ணப்பித்துக் கொண்டபோது சிதம்பரவாசம் செய்யும்படி கட்டளையிட்டதுமாகிய நிகழ்ச்சிகளின் நினைவிலிருந்து எழுந்தனவென்றே தோற்றுகின்றது.

சிவநேசச் செல்வர்களும் தமிழறிவுடையவர்களுமாகிய சில அன்பர்கள், "யாப்பருங்கலக் காரிகையில் காணப்படும் உதாரணச் செய்யுட்கள் பெரும்பாலும் ஜைனசமயச் சார்புடையனவாக விருத்தலின், அந் நூலின் இலக்கணங்களுக்கு உதாரணமாக ஸ்ரீ நடராஜப் பெருமான் விஷயமான செய்யுட்களை இயற்றித்தர வேண்டும்" என்று பிரார்த்திக்க இவர் அங்ஙனமே சிதம்பரச் செய்யுட்கோவை யென்னும் பிரபந்தத்தை இயற்றி அளித்தார்.

இவர் சிதம்பரத்தில் இருந்தகாலத்திலேயே நீதிநெறிவிளக்கமென்னும் நீதிநூலும் இயற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்று தோற்றுகின்றது. அந்நூலுக்குச் சிதம்பரம் நடராஜப் பெருமானது துதியை முதலிற் காப்பாக அமைத்திருத்தல் இதற்கு ஓர் ஆதாரமாகும்.*

சிதம்பரத்தில் இங்ஙனம் வாழ்ந்துவந்த குமரகுருபரர் பின்பு தம் ஞானதேசிகர்பாற் சென்று தம்முடைய வேட்கையை மீட்டும் விண்ணப்பித்துக் கொண்டனர். இவருடைய பரிபக்குவத்தையறிந்து ஞானதேசிகர் இவருக்குக் காஷாயம் உதவினர். அதுமுதல் இவர் குமரகுருபர முனிவரென வழங்கப் பெறுவாராயினர். அப்பொழுது தம் ஞான தேசிகர் விஷயமாகப் பண்டார மும்மணிக்கோவையென்ற பிரபந்தம் ஒன்றை இயற்றினர்.

அப்பால் ஞான தேசிகரிடம் விடைபெற்றுக் காசிக்குச் சென்று தம்முடைய கல்வியறிவினாலும் தவப்பண்பினாலும் டில்லி பாதுஷாவின் உள்ளத்தைக் கவர்ந்தார். அப்பாதுஷாவின் தாய்மொழியாகிய ஹிந்துஸ்தானியை விரைவில் அறிந்துகொள்ள வேண்டுமென்றெண்ணிச் சகலகலாவல்லி மாலையென்னும் பிரபந்

*திருமலைநாயக்கரது வேண்டுகோளின்படி மதுரையில் இருந்த பொழுதே இது பாடப் பெற்றதென்றும் கூறுவதுண்டு.

தத்தை இயற்றிக் கலைமகளை வேண்டினர், கலைமகள் திருவருளால் அம்மொழியிலே சிறந்த அறிவு பெற்றுப் பாதுஷாவினிடம் பேசிப் பழகினர். அவர் இவர்பால் ஈடுபட்டு இவருடைய விருப்பத்தின் படியே இவர் காசியில் இருத்தற்குரிய மடம் அமைப்பதற்குக் கேதார கட்டத்தில் இடம் உதவினர். குமரகுருபரர் அதுகாறும் மறைபட்டிருந்த *ஸ்ரீ விசுவலிங்கப் பெருமானை வெளிப்படுத்தி அங்கே கோயில் முதலியன நிருமிக்கச் செய்து நித்திய நைமித் திகங்களும் குறைவற நடக்கும்படி செய்தார்.

குமரகுருபரமுனிவர் காசியில் தங்கியிருந்த மடத்திற்குக் குமாரசாமி மடமென்று பெயர். அங்கே இவர் சிவயோகம் செய்து கொண்டு வாழ்ந்துவந்தார். அக்காலத்தில் காசித்துண்டி விநாயகர் பதிகமும் காசிக் கலம்பகமும் இவரால் இயற்றப்பெற்றன. இவர் தாம் வாழ்ந்திருந்த மடாலயத்தில் புராணசாலை ஒன்று ஏற்படுத்தி அங்கே ஹிந்துஸ்தானி பாஷையிலும் தமிழிலும் புராணப் பிரசங் கமும் செய்ததுண்டு. சிறந்த இராமபக்தராகிய துளஸீதாஸர் அந் தப் பிரசங்கங்களைக் கேட்டு உவந்தனரென்றும், கம்பராமாயணத் திலுள்ள கருத்துக்களைத் தாம் ஹிந்துஸ்தானியில் இயற்றிய இரா மாயணத்தில் அமைத்துக்கொண்டனரென்றும் கூறுவர்.

இவருடைய புலமைத்திறம் முதலியன இதன் பின்னுள்ள ஆராய்ச்சியினுல் விளங்கும்.

குமரகுருபரர் பின்னும் ஒருமுறை தருமபுரம் வந்து ஞானு சிரியரைத் தரிசித்து மீட்டும் காசிக்கே சென்று வாழ்ந்து விளங்கி யிருந்து ஒரு வைகாசி மாதத்தில் கிருஷ்ணபக்ஷத் திருதியையிலே சிவபெருமான் திருவடி நீழலிற் கலந்தனர்.

## பின் வந்தவர்கள்

குமரகுருபரர் காலத்திற்குப் பின் (2) ஸ்ரீ காசிவாசி சொக்க நாதஸ்வாமிகள் என்பவர் குமாரசாமி மடத்தில் இருந்து வந்தனர். அவருக்குப் பின் முறையே (3) ஸ்ரீ காசிவாசி அருணசலஸ்வாமிகள் (4) ஸ்ரீ காசிவாசி அம்பலவாண ஸ்வாமிகள் (5) ஸ்ரீ காசிவாசி சடை யப்ப ஸ்வாமிகளென்பவர்களும் அப்பால் (6) ஸ்ரீ காசிவாசி தில்லை நாயக ஸ்வாமிகளும் இருந்தனர்.

---

*கேதார கட்டத்திலுள்ள கேதாரலிங்கத்தை முகம்மதியர் மறைத்திருந்தன ரென்றும் குமரகுருபர முனிவர் அம்மூர்த்தியை வெளிப்படுத்தி ஆலய முதலி யன கட்டுவித்து நித்திய நைமித்திகங்கள் நடத்தச் செய்தனரென்றும் இன் றும் ஆகம விதிப்படி தமிழ்நாட்டு முறையில் சில திருவிழாக்கள் அங்கே நிகழ்கின்றனவென்றும் சிலர் கூறுவர்.

ஸ்ரீ காசிவாசி தில்லைநாயகஸ்வாமிகள் கி. பி. 1756 வரையில் இருந்தனர். அவர் திருப்பனந்தாளில் கி. பி. 1720-இல் ஒரு மடத்தை ஸ்தாபித்தனர். திருப்பனந்தாள்மடம் காசிமடத்தின் தொடர்புடையதாதலின் அதற்குக் காசிமடம் என்னும் பெயர் வழங்கிவருகின்றது.

ஸ்ரீ தில்லைநாயக ஸ்வாமிகளுக்குப் பின் காசிமடத்துத் தலைவர்களாக விளங்கியவர்கள் (7) ஸ்ரீ காசிவாசி குமரகுருபரஸ்வாமிகள் (8) ஸ்ரீ காசிவாசி சிதம்பரநாத ஸ்வாமிகள், (9) ஸ்ரீ காசிவாசி சடையப்ப ஸ்வாமிகள், (10) ஸ்ரீ காசிவாசி கணபதி ஸ்வாமிகள், (11) ஸ்ரீ காசிவாசி இராமலிங்க ஸ்வாமிகள், (12) ஸ்ரீ காசிவாசி சொக்கலிங்க ஸ்வாமிகள், (13) ஸ்ரீ காசிவாசி கணபதி ஸ்வாமிகள், (14) ஸ்ரீ காசிவாசி இராமலிங்க ஸ்வாமிகள், (15) ஸ்ரீ காசிவாசி பொன்னம்பல ஸ்வாமிகள், (16) ஸ்ரீ காசிவாசி சோமசுந்தர ஸ்வாமிகள், (17) ஸ்ரீ காசிவாசி சொக்கலிங்க ஸ்வாமிகள், (18) ஸ்ரீ காசிவாசி சொக்கலிங்க ஸ்வாமிகள், (19) ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் என்பவர்கள்.

இப்போது ஸ்ரீ காசி மடத்தின் தலைவர்களாக எழுந்தளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ **காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகளவர்கள்,** 26–3–1944-ல் காசி மடத்தின் தலைமை ஸ்தானத்தை ஏற்று அதுமுதல் தமிழ்மொழி, தமிழிசை, சைவசித்தாந்தம் இவற்றின் ஆக்கங்கருதியும், பொதுஜன நன்மைகளை உத்தேசித்தும், அவ்வப்போது பல துறைகளில் மனமுவந்து பல அறச்செயல்கள் புரிந்துகொண்டும் திருப்பனந்தாளிலேயே 1944 ஏப்பிரல் மாதத்தில், செந்தமிழ்க்கல்லூரியொன்றை அமைத்து வித்தியா பரிபாலனம் செய்துகொண்டும் விளங்குகிறார்கள். நீடு வாழ்க.

உ

சிவமயம்

# ஆராய்ச்சி

## முன்னுரை

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுடைய செய்யுட்களில் தனிச் சிறப்புப் பெற்றுவிளங்குவது அவற்றின் இன்னோசையே யாகும். ஏனைப்பாட்டுக்களிலிருந்து இவருடைய செய்யுட்களைச் செவிப் புலன் கொண்டே வேறுபடுத்திவிடலாம். இவற்றைக் கேட்கும் போது நமக்குத் தென்பாண்டி நாட்டுப் பொருநை நதியின் ஓட்டம் ஞாபகத்துக்கு வருகின்றது. சொற்களும் சொற்றொடர்களும் ஒன்றோடு ஒன்று செவிக்கினிமை தரும்வண்ணம் பொருந்தி அமைந்துள்ளன. பொருளிலே கருத்துச் செல்வதற்குமுன் செய்யுட்களின் ஓசை நம் கருத்தை இழுக்கின்றது.

சொல்லின்பத்தை விளைவிப்பனவாகிய கருவிகள் அனைத்தும் கம்பீரமாகச் செல்லும் இவருடைய செய்யுள் நடையில் நன்கு அமைந்துள்ளன. எவ்வகை யாப்பையுங் பேராற்றலுடன் அமைக்கும் இம்முனிவருக்குச் சொற்களும் தொடைநயங்களும் சிறிதும் முயற்சியின்றி இயல்பாகவே வந்து அமைகின்றன. வழியெதுகையும் முரண்டொடையும் அச்செய்யுட்களின் ஓசையைப் பொலிவுறுத்துகின்றன. சந்தத்தை இவர் மிக எளிதின் அமைத்துள்ளார்.

விருத்தங்களிலும் வெண்பாவிலும் இவருக்கே உரிய ஓசை நயம் மேம்பட்டு விளங்குகின்றது. அகவல்களிலும் வேறு செய்யுட்களிலும் இவருடைய கருத்துக்கள் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன.

## தமிழன்பு

தமிழில் இவருக்கு இருந்த அன்பு அளவிடற்கரியது. இறைவன்பால் அன்பையும், அன்பர் தொடர்பையும், துறவுள்ளத்தையும் வேண்டும் இவ்வாசிரியர் உலகியற்பொருள்களில் எதனையும் விரும்பவில்லை. ஆயினும் சொல்விற்பனமும் கவிசொல்லவல்ல நல்வித்தையும் வேண்டுமென்ற வேட்கைமாத்திரம் இவரை விடவில்லை.

இப்பிரபந்தங்களில் முதலாவதாகிய கந்தர் கலிவெண்பாவில்,

" ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை
எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து "

(கண்ணிகள் 118-9)

என்று இளமையில் முருகக்கடவுளை வேண்டும் வேண்டுகோளி லும், துறவு பூண்டபின் பாடிய சகலகலாவல்லி மாலையில்,

" நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்வாய் "

" பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காய் "

" பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காய் "

" சொல்விற் பனமு மவதான முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமை கொள்வாய் "

என்று கலைமகளை வேண்டும் பிரார்த்தனையிலும் இக்கருத்து வெளிப்படுகின்றது.

தெய்வத்தன்மையையும், சிவபெருமான் முதலியவர்களால் விரும்பப்பெறும் இயல்பையும் தமிழ்மொழி உடையதென்பதை இவர் அறிந்தவர். அன்றியும் இறைவன் திருவடிக்குப் புரியும் தொண்டுகளிற் சொன்மாலை சூட்டுதலும் ஒன்றென்பதையும் உணர்ந்தவர். வாடும் மலர்மாலையினும் வாடாத பாமாலையே இறை வனுக்கு மிகவும் விருப்பமானதென்று இவர் கூறுகின்றார்.

" ஒண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலும்" (339.)

ஆதலின் அத்தமிழறிவைப் பெற்று அவ்வாற்றலினால் ஆசிரிய ரையும் தெய்வங்களையும் பாராட்டிப் பாடித் திருப்தியுற்றவர் இவர். பண்டார மும்மணிக்கோவையில்,

" விரிக்குஞ் சரியையிப் பாமாலை சேர்த்தது...பாலித்ததே "

என்னும் செய்யுளால் தாம் தமிழ்மாலை சாத்தியது முதலியவற் றைச் சரியை முதலியனவாகவே கருதினரென்பது தெளிவாகின் றது. இவ்வாறு கவிதைபாடி இறைவன் திருவருள் பெறுதல் எளி தென்பது இவருடைய கொள்கை.

" எங் கவிதைகொண் டாட்கொண்ட காசிநாதர் " என்னும் காசிக் கலம்பகச் செய்யுளில், அன்பினால் மனமுருகி இயற்றும் கவிதை திருவருளைக் கூட்டும் கருவியென்பதை உய்த்துணரவைத்தார்,

தமிழ்ப்பாமாலை கொண்டு இறைவனைப் போற்றும் திருப்பணியை இவர் குறைவறச் செய்தமையினால் இவருக்குச் சிந்தையின் நிறைவு அமைந்தது. அதனால் 'செய்வினை முடித்த செம்மல் உள்ளமோடு'

"வாழியெம் மனனு மணிநா வும்மே" (206) என்று தம் மனத்தையும் நாவையும் பாராட்டிக் கொள்கின்றார்.

இங்ஙனம் தம் மனத்தையும் நாவையும் வாழ்த்திக்கொள்ளும் செயல் இவர் நெஞ்சத்தில் நிரம்பியுள்ள உவகையினால் வந்த பெருமிதத்தைக் காட்டுகின்றது. இராமபிரான் வந்தனனென்ற செய்தியைப் பரதன் கேட்ட காலத்து அவன் செயல்களை வருணிக்கவந்த கம்பர்,

"வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழும்
தாதியர் தமைத்தொழுந் தன்னைத் தான்றொழும்"

என்று கூறுகின்றார். அவனுடைய உவகை தன்னைத்தான் தொழும் செய்கையில் உச்சநிலை பெற்று நிற்கின்றது. அங்ஙனமே தாம் பெற்ற தமிழ்ப்புலமையை நல்லாற்றினுய்த்துப் பாமாலை சூட்டி நின்றதனாற் பெற்ற உவகை தம் மனத்தையும் நாவையும் வாழ்த்தும்போது உச்சநிலையில் நிற்பதாயிற்று. மதுரைக்கலம்பக இறுதியிலே இவ்வடிகள் அமைந்துள்ளன. அக்கலம்பகமாலை சூட்டி நிறைவேறுஞ் செவ்வியில் அத்தகைய உள்ள நிறைவும் உவகையும் உண்டாதல் இயல்பேயாகும்.

தமிழினிடத்தே இம்முனிவர் தெய்வத்தன்மையைக் கண்டனர். அதனைத் தெய்வத்தமிழ் (49, 152) என்று பாராட்டுகின்றனர். தாம் பாராட்டும் தெய்வங்களையெல்லாம் தமிழ்த்தொடர்பும் தமிழின்பால் வேட்கையுமுடையவர்களாகக் கூறுகின்றனர். முத்தமிழுக்குச்சிவபெருமானே பயனாக உள்ளாரென்பது இவர் கொள்கை; "பண்முத் தமிழ்க்கோர் பயனே சவுந்தர பாண்டியனே" (149) என்பதைக் காண்க. ஸ்ரீ மீனாட்சியம்மையை, "முதுதமி ழுததியில் வருமொரு திருமகள்" (53) என்றும், "நறைபழுத்த துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே" (62) என்றும் சிறப்பிப்பர். முருகக்கடவுளை, "சங்கத் தமிழின் றலைமைப் புலவா" என்றும், "தோலாத முத்தமிழ் நாவா" (379) என்றும், "தெளி தமிழின் வடித்திடு நவரசமே" (440) என்றும் பாராட்டுவர். திருமாலைப் பைந்தமிழ்ப்பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலென்பர். கலைமகளை, "மதுரமொழுகுங் கொழிதமிழ்ப் பனுவற் றுறைப்படியு மடநடைக் கூந்தலம்பிடி" (55) என உருவகம் செய்வர். சிவபெருமான் சுந்தரேசராகவும் அம்மை தடாதகைப்பிராட்டியாராக

வும் முருகக்கடவுள் உக்கிரகுமாரராகவும் அவதரித்ததற்குக் காரணம் அம்மூவருக்கும் தமிழினிடத்துள்ள வேட்கையே என்று கூறுவர் (196.)

இவருடைய தமிழன்பு தமிழை எல்லை கடந்த நிலையிலும் அமைத்துவிடுகின்றது. இவருடைய தமிழ்ச் செய்யுளில் வரும் காசியில் கொற்றியார் காசிவளமையெல்லாம் கொழுத்த தமிழாற் பாடியாடுகின்றனர் (621); வண்டு கூடத் தாமரையிலிருந்து தமிழ்ப் பாட்டை இசைக்கின்றது (353.)

தமிழின் சிறப்பைப் புலப்படுத்த இவர் அங்கங்கே அமைத்துள்ள தொடர்மொழிகள் வருமாறு:—

அருந்தமிழ் (345), இசை முத்தமிழ் (163), கலைத்தமிழ்த் தீம் பாலமுதம் (707), கொத்துமுத்தமிழ் (351), கொழித்தெடுத்துத் தெள்ளித் தெளிக்குந்தமிழ் (10), கொழிதமிழ் (196, 350, 386), கொழுத்த தமிழ் (621), சங்கத்தமிழ் (157, 174, 376-8), செழுந் தமிழ்ச் செல்வம் (704), செழுந்தமிழ்த் தெள்ளமுது (703), சொற் சுவைபழுத்த தொகைத்தமிழ் (585), தண்டமிழ் (196, 635), தரு சுவை யமுதெழ மதுரமதொழுகு பசுந்தமிழ் (115), தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ் (149), தீஞ்சுவைக்கனியுந் தண்டேனறையும் வடித்தெடுத்த சாரங்கனிந்தூற்றிருந்த பசுந்தமிழ் (394), துறைத்தமிழ் (88), தெள்ளுதமிழ் (449), தெளிதமிழ் (22, 196), தென்னந்தமிழ் (24), தேக்கமழ் மதுரமொழுகிய தமிழ் (4), பண்ணுலாம் வடிதமிழ் (15), புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழ் (105), பைந்தமிழ் (158, 473), மதுரித்துவட்டெழு முத்தமிழ் (5), முத்தமிழ் (176, 379, 436), முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ் (32), முது தமிழுததி (53), மும்மைத்தமிழ் (69, 127, 140, 391-5), வண்டமிழ் (213), வண்டமிழ்க்கடல் (191), விரைத்தேன் பில்குந் தேத்தமிழ் (700.)

தெய்வங்களால் விரும்பப் பெறும் தமிழினிடத்தே அன்பு செறிந்த இவ்வாசிரியர் தம்மைப்போன்ற புலவர்களையும் தாம் சென்ற நெறியே செல்லப் பணிக்கின்றனர்:

"செஞ்செவி கைப்பயான் றெரித்த சின்மொழி
அஞ்செவி மடுத்தாங் களித்தன னதனால்

தேத்தமிழ் தெளிக்குஞ் செந்நாப் புலவீர்
பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை
ஏத்தவும் பிருக்க வேத்துமி னீரே" (700.)

## தமிழும் வடமொழியும்

தமிழின் நலமுணர்ந்து தமிழ்மாலை புனைந்து உவக்கும் குமர குருபரர் வடமொழிக்கு உரிய நன்மதிப்பையும் அங்கங்கே வெளிப் படுத்துவதில் தவறவில்லை. சிறப்பாக வேதங்களைப் பலவாறு இவர் பாராட்டிச் செல்கின்றார். அவற்றின் பழமையும் தெய்வத் தன்மையும் இன்னிசையும் எழுதாக்கிளவியாதலும் சிவபெருமா னுக்குக் குதிரையாதலும் சிலம்பாதலும் அப்பெருமானது திரு வாக்காதலும் பல சாகைகளை யுடைமையும் பிரமனாற் பாராயணம் செய்யப்பெறுவதும் சொல்லப்படுகின்றன. சில இடங்களில் மறைகளின் பழமைப் பண்பும் தமிழின் புதுமைக்கவினும் ஒருங்கே புகழப் பெறுகின்றன.

மீனாட்சியம்மையைத் தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனாகக் கூறியவர் தொடர்ந்து, நறைபழுத்த துறைத் தீந்தமிழி னொழுகுநறுஞ் சுவையாகவும் உரைத்தார் (62); சோம சுந்தரக் கடவுளை,

> " பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
> வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே " (105)

என்று பாராட்டுவர். முருகக்கடவுள் திருவாயை, கடவுண் மறை யும் தமிழும் மணக்கும் வாய் (394) என்பர். கலைமகளை,

> " துறைத்தமிழொடுந் தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி " (88),
> " வட நூற்கடலும், தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்
> செந் நாவினின்று, காக்குங் கருணைக் கடல் " (704)

என்று துதிப்பர்.

ஓரிடத்தில் கலைமகள் 'முதுபாடல் எழுதாமறையோடும் இசை முத்தமிழ் பாடுவதாகக்' கற்பிக்கின்றார் (163.) தம்முடைய ஆசிரியராகிய மாசிலாமணிதேசிகரை 'நான்மறைக்கிழவ' என்று சிறப்பித்தவர், தொகைத்தமிழ்க் கவிஞ (585) என்றும் பாராட் டுவர்.

## தமிழ்ப் புலமை

### எழுத்துச்சொல்லிலக்கணச் செய்திகள்

தமிழின்பால் அன்பும் மற்றக்கலைகளில் விருப்பமும் உடைய இம்முனிவர் 'எழுத்துமுதலா மைந்திலக்கணமுந் தோய்ந்து பழுத்த தமிழ்ப்புலமை'யை யுடையவர். தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களில் இவர் பயிற்சி யுடையவ ரென்பதற்கு அறி குறியாக இவர் செய்யுட்களிற் பல குறிப்புக்கள் காணப்படுகின்

றன. இவர் காலத்தில் நன்னூல் தமிழ் கற்பவராற் பெரிதும் பயி லப்பெற்று வந்தது. இவருடைய செய்யுட்களில் அவ்விலக்கண நூலிலிருந்து சில செய்திகளை மேற்கோள் காட்டுகின்றனர் :

"தன்னுடை யாற்றன் மூன்னோர் முன்னர்த்
தற்புகழ் கிளவியுந் தரும்" (337)

என்பது நன்னூற் பாயிரத்தில் வரும்,

"தன்னுடை யாற்ற லுணரா ரிடையிலும்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே"

என்னும் சூத்திரத்தைப் பெயர்த்தமைத்ததே யாகும் ;

"தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்" (579)

என்பதில் வேற்றுமைத்தொகை என்பதை எடுத்தாண்டுள் ளார் ;

"ஒருவ ரென்ப துயரிரு பாற்றுய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப" என்னும் சூத்திரத்தை

அர்த்தநாரீசுவரத் திருவுருவ சம்பந்தமான கற்பனை ஒன்றிற் பொருத்தியுள்ளார் (535.)

பண்டார மும்மணிக்கோவையில் ஞானாசிரியருடைய திரு வருட் சிறப்பைப் பலவகையிலமைத்துப் பாராட்டுமிடத்து, "நின் திருவருளால் என்னுடைய கரணங்கள் சிவகரணங்களாயின. பிறர்திறத்துத் திரிகரணங்கள் என்னும்தொடர், மூன்று கரணங் களென்னும் ஒரே பொருளுடையதாக வழங்கப்பெறும். என் திறத்திலோ, மூன்று கரணங்கள், சிவகரணங்களாகத் திரிந்த கர ணங்கள் என இரண்டுபொருள்படும் தொடராக அது நிற்கின் றது" (588) என்கின்றார். இங்கே ஒரு பொருட் கிளவி இருபொ ருட் கிளவி என்னும் கிளவிப்பெயர்வகைகளை ஆண்டுள்ளார் ;

"இகபர மிரண்டினு மெதிர்நிறை கொளினும்" (579)

என்பதில் எதிர்நிரனிறை என்னும் பொருள்கோளைப்பற்றிக் கூறு கின்றார் ;

வழக்கு இருவகைப்படுமென்பதை,

"உலகியல் வழக்கும் புலனெறி வழக்குமென்
றிருவகை வழக்கினும்" (452)

என்று உணர்த்துவர்.

## அகப்பொருளிலக்கண வமைதி

அகப்பொருளிலக்கணச் செய்திகளை எடுத்தாள்வதிலும் அவ் விலக்கண அமைதிபெறச் செய்யுளமைப்பதிலும் இவர் மிக வல்ல வர். இந்நூலுள்வரும் அகத்துறைச் செய்யுட்கள் இதனை நன்கு விளக்கும்.

அகத்திணைக்குரிய முதற்பொருளிரண்டனுள் ஒன்றாகிய நிலம் ஐவகைப்படும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்த லென்னும் அவை ஐந்தும் தமக்குரிய கருப்பொருள்களோடு நூல்களில் உணர்த்தப்பெறும். இப்பிரபந்தங்களில் அங்கங்கே சில நிலங்களையும் அவற்றின் கருப்பொருள்களையும் பற்றிய செய்திகளைக் காணலாம்.

மலையும் மலையைச் சார்ந்த இடங்களும் குறிஞ்சியாகும்; அதற்கு முருகக்கடவுள் தெய்வமென்பது தமிழ்மரபு; இவ்வாசிரியர் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழில் குறிஞ்சிநிலத்தை வருணித்து அதற்கு முருகன் தலைவனுதலை உணர்த்துவர்;

" திண்ணென் றடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சீறூரு மூரூர்தொறுஞ்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாஞ்
சீதனக் காணிபெற்றுத்
தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன் " (385)

என்பது காண்க.

வயலும் வயலைச் சார்ந்த இடங்களும் மருதநிலமாகும். இவ்வாசிரியர் பிரபந்தங்கள் பாட எடுத்துக்கொண்ட தலங்களுட் பெரும்பாலன மருத நிலத்தில் அமைந்தவை. ஆதலின் இச்செய்யுட்களில் அந்நிலவருணனை மிகுதியாகக் காணப்படும். சில இடங்களில் அந்நிலங்களை மருதமென்னும் பெயராலே குறிப்பர்.

" மென்பான் மருதத் தண்புனற் கமலை " (325)

என்பதில் திருவாரூர் மருதநிலத்திலுள்ள தலமென்று கூறுவர். ஐந்து நிலங்களுக்குள்ளும் மருதமும் நெய்தலும் மென்பாலெனப்படும். அதனையுணர்ந்த இவ்வாசிரியர் 'மென்பான் மருதம்' என்றார். பின்னும்,

" இறும்பூது பயக்கு நறும்பணை மருதத்
தந்த ணூரூர் " (313),
" பூம்பணை மருதத் தீம்புனற் கமலை " (349),
" மன்றலம் பணைசூழ் மருத வேலிப்
பொன்மதிற் கமலை நன்னகர் " (594)

என அத்திருவாரூரைச் சிறப்பிப்பர்.

சோழநாட்டில் மருதநிலங்களே பெரும்பாலும் அமைந்தமையைக் கருதி,

" மருதக் கோமகன் குடிகொண்ட சோணாட " (446)

என்று முத்துக்குமாரசுவாமியை விளிப்பர்.

தில்லையம்பதியை,

" கொண்டல்கண் படுக்குந் தண்டலை வளைஇத்
தடம்பணை யுடுத்த மருத வைப்பின் " (479)

இருப்பதென்பர்.

" மருதம்வீற் றிருந்து பெருவளஞ் சுரக்கும்
தருமையம் பதி " (570)

என்பதனால் தருமபுரமும்,

" இறும்பூது பயக்கு நறும்பணை மருதக்
கன்னிமதி லுடுத்த காசிமா நகரம் " (657)

என்பதனாற் காசியும் மருதநிலத்தில் இருப்பதைப் புலப்படுத்து கின்றார்.

ஒரு நிலத்துக் கருப்பொருளும் மற்றொரு நிலத்துக் கருப் பொருளும் மயங்கிக் காணப்படுதல் உலக இயற்கை. இதனைத் திணைமயக்க மென்று புலவர் கூறுவர். சான்றோர் செய்யுட்களி லும் பிற்காலத்துக் காப்பியங்களிலும் திணைமயக்க வருணனைகள் காணப்பெறும். இவ்வாசிரியர் நெய்தலும் மருதமும் தம்முள் மயங்கியிருப்பதைப் பின்வருமாறு தெரிவிப்பர்:

"முள்ளைப் புறத்தேகொண்ட நீண்ட இலையையுடைய தாழையானது தனது வெள்ளிய மடலிலே சுழித்த முகத்தை யுடைய சங்கையும் அதனால் ஈனப்பட்ட முத்தையும் தாங்கி நிற் கின்றது. அச்சங்கு சந்திரனைப்போலவும் முத்துக்கள் நட்சத் திரங்களைப் போலவும் தோற்றுகின்றன. தாழை தான் பெறுதற் கரிய சிவபெருமானது சடைமுடியிலே வாழும் பேறுடைய சந்தி ரனை, 'கருங்கழிக்கரையில் வெண்பொடி பூசி, இருந்தவமுழுற் றியும் யாம் பெறற்கரிய செஞ்சடைக்கிடந்த வெண்மதிக் கடவுள் வருக' என்று அழைத்துக் கண்ணீர் வார வெண் சோறேந்தி அச்சந்திரனோடு நட்சத்திரங்களையும் தன் மடலின் கண்ணே தாங்குவதை ஒத்தது இக்காட்சி" என்பது அப்பகுதி.

இதன் கண் தாழையாகிய நெய்தனிலக் கருப்பொருளும் வயலி லுள்ள சங்கும் முத்துமாகிய மருதநிலக் கருப்பொருளும் வந்து மயங்கின. அதனால் இக்காட்சியமைந்த சிதம்பரத்தை,

"நெய்தலொடு தழீஇய மருத வேலித், தெய்வப் புலியூர்" (455)

என்று பாராட்டுகின்றார்.

தலைவனும் தலைவியும் ஒத்த அறிவு அழகு முதலியன உடை யராதல் வேண்டுமென்பது அகப்பொருளிலக்கண வரையறை. இதனை இவ்வாசிரியர் பண்டார மும்மணிக்கோவையில் ஒரு

செய்யுளில் எடுத்தாளுகின்றார். ஞானாசிரியரைத் தலைவராகவும் அடியாரைத் தலைவியாகவும் உருவகம் செய்தவர் தம்புலமை யாற்றல் தோன்ற அவ்விருவருக்கும் ஒப்புமை கூறுகின்றார்(573.) சிவத்துக்கும் சீவனுக்கும் இவ்வாறு ஒப்புமை கூறியபின்,

"முழுவது மொவ்வா தொழியினு மொழிக
உயர்ந்தோன் றலைவ னைத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினு மிழிபெனப் படாதே"

என்றுரைக்கின்றனர்.

இச்செய்திகள்,

"ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே"

(தொல். களவு. 2.)

என்னும் இலக்கணத்தை நினைந்து கூறியவை. பின்னும் சிவத்தோடு கலந்து உயிர்கள் நுகரும் நுகர்ச்சியைத் தலைவன் தலைவியர் இணைந்து இன்புறும் நுகர்ச்சியாக உருவகம் செய்வர். அகத்துறைச் செய்தியையும் சைவசித்தாந்தக் கருத்தையும் இணைத்து இவ்வாசிரியர் பாடியுள்ள இப்பகுதி இவரது புலமைத்திறத்தையும் சைவசித்தாந்த நூற்பயிற்சியையும் ஒருங்கே விளக்குகின்றது.

தலைவனும் தலைவியும் எதிர்ப்படுங் காலத்து அவர்கள் நெஞ்சம் ஒன்றுபடுதலை உள்ளப் புணர்ச்சி யென்பர். தடாதகைப் பிராட்டியார் திக்குவிசயம் செய்த காலத்தில் திருக்கயிலாயத்தில் சிவபெருமானைக் கண்டமாத்திரத்தில் அப்பிராட்டியாருக்குத் திருமார்பிலிருந்த மூன்றாவது நகில் மறைந்தசெய்தியை, காதலரோடு உள்ளப்புணர்ச்சி செய்யும் கருத்தால் உள்ளே ஒடுங்கியதென்று இவ்வாசிரியர் கற்பிக்கின்றார்:

"பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடுஞ்சிப்
பொலந்தேரொ டமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன்முலை மூன்றிலொன்று
கைவந்த கொழுநரொடு முள்ளப் புணர்ச்சிக்
கருத்தா னகத்தொடுங்க" (35.)

உள்ளப் புணர்ச்சியென்னும் தொடரைப் பிறிதோரிடத்தில்,

"வெள்ளப் புணர்ச்சியின் வேட்கையுள் ளடக்கி
உள்ளப் புணர்ச்சியுளு டின னிற்பது" (345) என்று ஆளுகின்றார்

மடலூர்வோர் செஞ்சடைவிரித்தும் வெண்பொடிபூசியும் எருக்கங்கண்ணி சூடியும் வருதல் வழக்கம். உமாதேவியாரைப் பிரிந்த சிவபெருமான் இயற்கைத் திருக்கோலங்கொண்டு வீற்றிருக்கையில் இவை காணப்படுதலின் அக்காட்சி மடலூர் குறிப்பைப் புலப்படுத்துமென்பர்(333.) தலைவியைப் பெருதோர் மடலூர்வரென்னும் செய்தியும் அங்ஙனம் ஊர்வோர் செய்யும் செயல்களும் இப்பகுதியில் அமைந்துள்ளன.

தலைவனது புறத்தொழுக்கத்தில் அவனோடு தொடர்புபெறும் மகளிர் சேரிப்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி என்னும் மூவகையினரென்று அகப்பொருளிலக்கணம் கூறும். இவ்வாசிரியர் தலைவியாக ஞானத்தையும் அத்தலைவியைப் பெருமல் இடைநின்றுகவரும் சேரிப்பரத்தையாக ஆணவத்தையும் காமக்கிழத்தியராகச் சுத்தவித்தை முதலியவற்றையும் உருவகம் செய்கின்றார்(479.)

## அகப்பொருட் செய்திகள்

இவர் செய்யுட்களில் தலைவன்கூற்று, தலைவி கூற்று, தோழி கூற்று, செவிலிகூற்று, என்னும் கூற்றுவகைகள் பயின்றுவரும். பாட்டுடைத் தலைவன் வேருகவும் கிளவித்தலைவன் வேருகவும் அமைந்துள்ள அகத்துறைச் செய்யுட்களும், பாட்டுடைத் தலைவனையே கிளவித் தலைவனுக அமைத்துள்ள புறப் பொருட் பாடாண்டிணைச் செய்யுட்களும் இவருடைய பிரபந்தங்களில் விரவிவந்துள்ளன.

இவ்வகைச் செய்யுட்களிற் பெரும்பாலன தலைவன் பிரிவினல் வருந்தும் தலைவியின் விரகதாபத்தை விரிப்பனவாகவே உள்ளன. அகப்பொருட் செய்திகளை அப்படியப்படியே கூருமல் சொன்னயம் பொருள்நயம் பொருந்தக் கூறுவது இவர் இயல்பு. அவற்றுள் அகப்பொருட் சிறப்பும் சொற்பொருளணியமைதியும் அவ்வத்தலச் செய்திகளுக்கேற்ற கற்பனைகளும் சமற்காரமாக இயைக்கப்பெற்றிருத்தலைக் காணலாம்.

தலைவியைக் கண்டு அவளழகில் ஈடுபட்ட தலைவன் அவளது குறிப்புப் பார்வையை உணர்ந்து மகிழ்கின்ருன். இத்துறை குறிப்பறிதல் என வழங்கும். இத்துறைச் செய்யுள் மூன்று இப்பிரபந்தங்களில் வந்துள்ளன. மூன்றும் கைக்கிளைக்கெனவே யமைந்த மருட்பாவாக உள்ளன. அம்மூன்றிலும் தலைவன் தலைவியினது கண்ணைக் கடலாக உவமிக்கின்ருன். உண்ணமிர்தம் நஞ்சோடு உதவலால் அக்கடலை அருட்பார்வையையும் மருட்பார்வையையும் உடைய கண்களுக்கு உவமை கூறுகின்ருன்.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தலைவியை அவள் ஆயத்துட் செல்லச் செய்தபின் அவள் செல்லும் செலவு கண்டு உளத்தொடு சொல்லுதலாக அமைந்தது பின்வருஞ்செய்யுள்:

"கரிய கண்டங் கரந்தவோர்......ளுவியே" (168.)

இதன்கண் தலைவியை உயிரெனக் கூறப்புகும் தலைவன் உயிர் அருவமென்பாரை மறுப்பான்போல அச்செய்தியைச் செப்ப வைத்தார். இது,

"காணு மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே
சொல்லு மாடு மென்மெல வியலும்
கணைக்கா னுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே"

என்னும் பழம்பாட்டின் சுருக்கமாக விளங்குகின்றது. தலைவன் தலைவியின் நலம் பாராட்டலும் (493), பாங்கனுக்குத் தலைவியினது இயலிடங் கூறுதலும் (116), தலைவியை முன்னிலையாக்கித் தன்னிலை கூறுதலும் (144, 176), மடலேறுவே னென்றலும் (175), பொருள் முற்றி மீளும் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியின் உருவெளிப் பாடு கண்டு கூறுதலும் (188), மேகத்தோடு கூறுதலும் (165), பாகனொடுரைத்தலும், (201) பள்ளியிடத் தழுங்கலும் (120, 336) ஆகிய தலைவன் கூற்றுக்கள் இச்செய்யுட்களிற் பயின்றுள்ளன.

தலைவனது வரவை எதிர்நோக்கித்தலைவி கூடற்சுழியிழைத்துப் பார்த்தல் (125) ஒரு செய்யுளிலும், மடலேறுவதாகக் கூறுதல் (137) ஒரு செய்யுளிலும், பரத்தையிற் பிரிந்த தலைவனிடமிருந்து வந்த பாணனை நோக்கிக் கூறுதல் (178) ஒரு செய்யுளிலும் சொல்லப்பெறுகின்றன.

தலைவனை நகுதலும் (177), தலைவியை மணஞ்செய்துகொள்வீராக வென்றும், மடலேறப்புகின் அவளதுஅவயவமெழுதவரிதென்றும், தலைவி கையுறை யேற்றாளென்றும் தலைவன்பாற் கூறுவனவுமாகிய கூற்றுக்களை (121, 198, 646) யன்றித் தோழி கூற்றாக உள்ள பிற யாவும் தலைவியின் விரகதாபத்தைப் பலபடியாக வெளிப்படுத்துவனவாம்.

தலைவியின் விரகதாப நிலையைப்பற்றிய விரிவான செய்திகளை இப்பிரபந்தங்களிற் காணலாம். அவள் பிறைகண்டு அஞ்சுதலும், மன்மதனுக்கு அஞ்சுதலும், குயில் முதலியவற்றிற்கு அஞ்சுதலும் பருவங்கண்டு அஞ்சுதலும், ஊணின்றியும் துயிலின்றியும் வாடு

தலும் அழுதலும், பசலைமிகுதலும், தூதுவிடுத்தலும், பிறவும் அங்கங்கே பலவேறு சுவைபெறப் புலப்படுத்தப் பெறுகின்றன.

## கண்வழி யுளம்புகுங் கள்வன்

தலைவனைக் கண்ட மாத்திரத்தில் தலைவியின் நெஞ்சம் அவன் பால் ஈடுபடுகின்றது. அதனால் அவள் காமநோய் பெற்று வருந்து கிறாள். இச்செய்தியை,

"கடம்ப வனேசனார், கண்புகுந்தென் கருத்து ளிருக்கவும்" (113),

"இல்லொன் றெனவென் னிதயம் புக்காய்" (668)

என்று தலைவியே கூறுகின்றாள்.

இதனையே தோழி,

"விளங்கனி யொன்றெறி வெள்விடை யோடும் விழிக்கணுழைந் துளங்கனி யப்புகுந் தாய்" (661) என்று உரைக்கிறாள்.

கண்வழி யுள்ம்புகுங் கள்வனாய தலைவனைப் புறத்தே தலைவி தேடுதல் என்ன பேதைமை யென்று செவிலி வியக்கின்றாள் (643.)

## தரிசனத்தாற் பெற்ற காதல்

சிவபெருமானையே தலைவனாக வைத்துப்பாடும் பாட்டுக்கள் சிலவற்றில் அவரைத் தரிசித்துத் தலைவி மயல்கொண்டா ளென்ற செய்தி வருகின்றது. தியாகப் பெருமானது கைம்மானையும், யானைத்தோலையும், கச்சையும், சங்கத் தடங்காதையும், தார்மார் பையும் தரிசித்த தலைவி ஒருத்தி தன் உள்ளத்தே பூண்ட மயற் பெருக்கை,

"அங்கத் தடங்கா தவா" (318) என்று வெளியிடுகின்றாள்.

ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து அவரது நகையிலே ஒரு தலைவி மயங்கி நிற்கிறாள்; இதனை அவளது தோழி,

"கூடார் புரந்தீ மடுக்கின்ற......ரிளமூரலே "(143) என்று அறிவிக் கின்றாள்.

மற்றொரு தலைவி தன் தாயோடு சென்று சொக்கநாதரைத் தரி சித்து மயலுழந்ததை ஒருதோழி கூறுகின்றாள் (195.)

இங்ஙனமே, 'அம்பொன்மணி மதிற்றில்லை நடராசன் அணிமறுகிற், செம்பொன்மணிப் பொலந்திண்டேர்த் திருவுலாப் போதுங்கால்' சென்று தரிசித்த தலைவி யொருத்தி மயலு ழந்த செய்தியை ஒரு செவிலி கூறிப் புலம்புகின்றாள் (539, 543.) இவை உலாவென்னும் பிரபந்த அமைப்பை நினைப்பூட்டுகின்றன.

## சந்திரோபாலம்பனம்

மாலையிளம் பிறையைத் தலைவியும் தோழியும் செவிலியும் கூடி எத்தனை குறை கூறுகிறார்கள் ! ஒரு தலைவி, "இந்தச் சந்திரன் ஒரு யமன். இவன் என் உயிரை வாங்குகிறான். மதுரேசர் என் கருத்தில் இருந்தும் இந்தத் துன்பம் விட்டபாடில்லை. இந்த ஊரிலே நீதி சற்றும் இல்லை. சீசீ! இனி இங்கே இருத்தலொண்ணாது; தோழிகளே புறப்படுங்கள்" (113) என்று கூறுகின்றாள். செவிலித்தாயும் இளம்பிறைக் கீற்றைக் கூற்றின் வரிசையிற் சேர்த்து எண்ணுகின்றாள் (109); பிறையைக் கூற்றென்று இவர்கள் கூறும் உருவகத்தை மற்றொரு தலைவி விரிவுபடுத்தி அந்தக் கூற்றத்திற்குக் கங்குலாகிய எருமைக்கடா வாகனத்தையும் நிலாவாகிய பாசத்தையும் பொருத்திக் காட்டுகின்றாள் :

"கருகு கங்குற் கரும்பக டூர்ந்துவெண்......கென்செய்வேன்"(676.)

இந்தக் கருத்தையே தலைவியோடு மனமொத்துப்பழகும் பாங்கி யொருத்தி,

"குறுமுயலுஞ் சிலகலையு மிழந்தொருமான்...
பாசமே" (192) என்றுரைக்கின்றாள்.

ஒரு தலைவிக்குப் பிறை நெருப்பாகத் தோற்றுகின்றது; "இறைவன்பாற் பூண்ட மயலால் உயிர்போன உடம்புபோலத் திரிகின்றார்கள் சிலர்; அவர்கள் வெந்துவிழ இரவில் இந்த அக்கினி புகையில்லாமல் நின்று எரிகின்றதே" (202) என்று அவள் இரங்குகின்றாள். "தீநிலா வனல் சிந்துமால்" (203) என்று தோழியும், "குடதிசை புகையெழ வழலுமிழ் நிலவு" (182) என்று செவிலியும் சந்திரனை வெறுப்பர்.

ஒரு தலைவிக்குச் சந்திரன் இறைவனது இடக்கண்ணாக இருத்தல் ஞாபகத்திற்கு வருகின்றது. அவள், "இறைவன் நுதற் கண்ணும் இடதுபக்கத்திலுள்ள விழியாகிய சந்திரனும் வெண்ணெருப்பேயாம். ஒன்று காமனை எரித்தது. மற்றொன்று அப்பொழுது தப்பி ஓடிவந்த அவன் படையினரென்றெண்ணி எங்களைக் காய்கின்றது"(627) என்று கற்பிக்கின்றாள். மற்றொருத்திக்கோ, "நல்ல வேளையாக இறைவனுக்கு ஒரு கண் மாத்திரம் சந்திரனாக இருக்கிறது எங்களுக்குப் பகையாகிய காமனையும் இரவையும் முறையே ஒழிக்கும் அக்கினிக்கண்ணும் சூரியனாகிய கண்ணும் உடன் இருப்பதனால் நாங்கள் உயிரோடிருக்கின்றோம். அந்த மூன்று கண்களும் சந்திரனாகவே இருந்து விட்டாற் பிறகு இந்த உலகில் மகளிர்க்கு உய்வுஏது!" (499) என்ற நினைவு உண்டாகின்றது.

காம நோயால் வாடும் மடந்தையொருத்தி நிலாவை மன்மதனது அம்பினாலுண்டான புண்ணிலேயிட்ட கனலாக வுணர்ந்து மறுகுகின்றாள் :

"சிலகணை மதன்வழங்க வவைபோய் ......தரிதே" (138.)

இவள் கூறும் பசும்புண்ணுக்கு வெண்ணிலாவைக் காரச்சீலையாகக் கூறுகின்றாள் ஒருதோழி (145.)

தியாகப்பெருமான்பால் மால்கொண்ட மங்கையொருத்தி பாதி மதியை விடமாகக் கண்டு வெருவுகின்றாள்; உடனே அப்பெருமானை நோக்கி,

"வீதிவிடங் காவடங்கா வேலைவிடம் போலுமதிப்
பாதிவிடங் கா" (310)

என்று வேண்டுகின்றாள். அன்றெழுந்த விடமுழுதும் உண்டு தேவருக்கு இன்பஞ்செய்த பெருமான் இந்தப் பாதிவிடத்திற்கும் ஏதேனும் பரிகாரஞ் செய்தல் கூடுமென்பது அவள் கருத்துப் போலும்!

இவள் மதிக்கு விடத்தை வெறும் உவமையாக மாத்திரம் கூறினாள்; காசிப்பிரான்பாற் கருத்தூன்றிய தலைவி யொருத்தியோ பிறையை முன் பாற்கடலில் எழுந்த விடத்தின் மாறுவேடமென்றே சொல்லுகின்றாள்;

"மறைக்கோலங் கொண்ட வகிலேச ரே...கனல்விடமே" (606.)

## மன்மதோபாலம்பனம்

சந்திரனை வெறுத்துக் கூறும் சந்திரோபாலம்பனச் செய்யுட்களைப் போலவே மன்மதோபாலம்பனச் செய்யுட்களும் மிக்கசுவையுடையனவாகும்.

காசிப்பிரான்பால் ஈடுபட்ட தலைவி யொருத்தி காமன்கணைக்கு இலக்காகி வருந்துகின்றாள்; காமநோய் தாங்காமல் அவள் அவனை நோக்கி, "இவ்விடம் எம்பிரான் படைவீடென்பதை நீ உணரவில்லையோ? ஏன் எம்மைச் சூழ்ந்தாய்? உன்னை முன்னரே எரித்த அனற்கண்ணையும் பகைவரை ஒழிக்கும் மழுப்படையையும் அவர் உடையார்" (649) என்று இயம்புகின்றாள்.

இறைவன் படைவீட்டைத் தன் இடமாக ஆக்கிக்கொண்ட மன்மதனது ஆண்மையையும், அதனால் தாம் கொண்ட அச்சத்தையும் ஒரு தோழி,

"ஆர்க்கும்...சுரைப்பாரார்"(614)

என்று வெளியிடுகின்றாள்.

மன்மதன் இங்ஙனம் ஆண்மை செய்யவும் அதனை விலக்கா

திருக்கும் இறைவனது ஆண்மையை எள்ளி நகையாடுகின்றாள் ஒரு நங்கை:

"மலைகுனித்தென் மாமதனார் சீறிக் குனித்தார் சிலை" (186),
"........காசிப் பிரான்றடங்...செய்திடினே" (695)

இறைவன் திருக்கரத்தில் வலிய பெரிய மலையே வில்லாக இருந்தும் அவர் ஆண்மை பயனற்றிருப்ப,விறல்விளைக்கும் காமன்படையோ மிக மெல்லியனவாக உள்ளன. இதனை நினைந்து தலைவியும் செவிலியும் வியந்து நிற்கின்றனர்.

"வில்வே றில்லைப்........றெழிறுனே" (682)

என்பது தலைவி கூற்று. மென்மைக்கு இருப்பிடமாகிய பூவையே வில்லாகவும் அம்பாகவும் உடையவன், அங்கமில்லாதவன்; இங்ஙனம் இருப்பவும் அவன் பல மகளிரைத் துன்புறுத்துகின்றானென்று அவள் இரங்குகின்றாள்.

இங்ஙனம் போர்க்குரிய கருவியாற் குறைபாடுடையவன் தன் ஆண்மை செலுத்துதற்குக் காரணம் அவனது தவமென்பதை உணர்ந்த செவிலி, "இதுதான் தவம்!" என்று வியக்கின்றாள்:

"சிலையோ........தெனும்" (187.)

இவை யிரண்டும் உறுப்புக்குறை விசேடவணியாகும்.

உலகில் துன்புறுவோர் ஒருவர் மற்றொருவர் வருத்தமுறுவதைக் காணும்போது தமக்குள்ளதைப் போன்ற துன்பமே அவருக்கும் உள்ளதாகக் கருதுதல் இயல்பு. ஒரு மங்கை காமனது அம்பாற் புண்பட்டுத்துன்புறுபவள் சந்திரனை நோக்கி அதன் மெய்யிற் களங்கத்தைக் கண்டாள்; 'இந்தக் களங்கம் மன்மதனது அம்பால் உண்டான புண்போலும்' என்று கருதினாள். ஆயினும் மன்மதன் அதனை யெய்வதற்குக் காரணம் இல்லையே என்று யோசித்த அவளுக்கு ஒரு காரணம் தோற்றியது; "மன்மதன் எம் ஆவியை எய்து அழித்தற்குமுன் சந்திரனை இலக்காகக் கொண்டு எய்து பழகினான். அப்போது உண்டான புண்ணே களங்கமாக விளங்குகின்றது" (660) என்று அதனை அவள் வெளியிடுகின்றாள்.

தலைவி மாலைப்பொழுதாலும்,நிலவாலும்,காமனாலும் வருந்துவதன்றி, குயிலாலும், விடைமணியாலும், மகளிர் கூறும் பழிமொழியாலும், தென்றலாலும், பிறபொருள்களாலும் வருந்துவதைப் பலபடியாக வெவ்வேறு முறையில் தலைவியும் செவிலியும் தோழியும் வெளிப்படுத்துகின்றார்கள். இவ்வாறு ஒவ்வொன்றையும் சில சிலவற்றையும் கூறுவார் ஒருபால் இருப்ப, பலவும் சேர்ந்து தலைவியின் ஓருயிரை அலைத்தலை ஒரு செவிலி கூறி இரங்குகின்றாள்;

"கூற்றென் றலவொரு கோடிகெட் டேன்கொழுக்...பொன்றுமே" (109.)

நாம் அவள் முறையீட்டைக் கேட்கும் பொறுமையுடையோமாயின் அந்த ஒரு கோடிக் கூற்றையும் வரிசையாகச் சொல்லிவிடும் வேகத்தில் அமைந்திருக்கிறது இச்செய்யுள்.

## மெய்ப்பாடுகள்

தலைவனது அருளை எதிர்நோக்கி வருந்தும் தலைமகளது மெய்ப்பாடுகளை அங்கங்கே காணலாம். அவள் துயிலிழந்து பசலைபூத்து வாடுகின்றாள்; மயக்கத்தால் பிறர் நகைத்தற்குரிய செயல்களைச் செய்கின்றாள்; ஊணை வெறுக்கின்றாள்; உடல் மெலிய அவளது வளைகள் நழுவுகின்றன; செயலற்று உயிர் நீங்கும் நிலையிற் கிடக்கின்றாள்; இறைவனது மாலைபெற்றால் அவள் உய்வாளென்று யாவரும் கூறுகின்றனர்.

தலைவனது கூட்டத்தைப் பெறுதற்கு அடையாளமாக அவனது மாலையை விரும்புதல் தலைவியின் இயற்கை. பிரபந்தங்களில் இச்செய்தி மிகுதியாகக் காணப்பெறும்.

சிவபெருமானது மாலையை ஒரு தலைவி வேண்டி நிற்கின்றாள்; அவளுடைய தோழி, "சண்டேசருக்கல்லாமல் அம்மாலை பிறர் கொள வரிது" (543, 640) என்று கூறுகின்றாள். அவளைத் தலைவி முனிந்து பகைநோக்களிக்கின்றாள் (543); "அம்மாலையைப்பெறும் சண்டேசர் தவம் பெரிதுபோலும்!" என வியக்கின்றாள்:

"மலர்த்தாமம்,.........ளறிந்தார்க்கே" (118.)

இறைவனது கருணையினால் வண்டுகூட அவன் அணிந்த மாலையில் மொய்க்குமென்று அறிந்தவளாதலின் தான் பெறுதற்கரிய மாலையை அவ்வண்டு பெறுதற்குப் பெருந்தவம் செய்திருக்க வேண்டுமென்று நினைந்து,

"மின்றிரண்ட தெனப்புரளும் பொலங்கடுக்கைத் ...புகலுவீரே" (653)

என்று தன் தோழியரை நோக்கி வினவுகின்றாள்.

பிரிவால் வருந்தும் மகளிருக்கு மேனியழகு கெடப் பசலை உண்டாகுமென்பர்; இதனைப் பசலைபாய்த லென்னும் மெய்ப்பாடாக அமைப்பர் தொல்காப்பியர் (தொல். மெய்ப்பாடு. 22.) பசலை பொன்னிற முடையது. தலைவியால் விரும்பப்படும் கொன்றைமாலையும் பொன்னிற முடையது; இவ்வொப்புமையால், "நான் பொன்னிறமுள்ள கொன்றைமாலையையே நினைந்திருத்தலின் நானும் பொன்னிறமுற்றேன்" (508) என்று தலைவி பசலை யுண்டானமையைக் கூறுகின்றாள். இதனையே கொன்றையானது தலைவிக்குச் சாரூபம் தந்ததென்று செவிலியும் (553),

"செம்பொ னிதழித் ... பைங்கிளிக்கே" (663)
என்று தோழியும் உணர்த்துகின்றனர்.

மற்றொரு தலைவி காமமயக்கத்தால் உள்ளங்கலங்கித் தன்பால் உண்டான பசலையையே இறைவனது கொன்றைமாலையாக நினைந்து உவக்கின்றாள்;

"............ கமலைப் பதியுளார்க்.........மடவாள்" (344)
என்று இச் செய்தியைத் தோழி வெளியிடுகின்றாள்.

பசி தன்னை வருத்தவும் தலைவி உணவு கொள்ளாளாகி வருந்துகின்றாள்; இது பசியடநிற்றலென்னும் மெய்ப்பாடு; அவளது நிலையை,

"உண்பது நஞ்சமால்" (129), "அயிலா ளன்னமுமே" (163),
"உண்ணுஞ் சனத்துக்கு மஞ்ச வைத்தார்" (675), "தையற் கனமே தீவிடமே" (697) என்று தோழி கூறுகின்றாள்.

இவ்வாறு தான் உண்ணும்படி வைத்த உணவை நஞ்சமென்று பிறர் கூறுவதைக் கேட்டபோது, இறைவனுக்கு நஞ்சம் அமுதாகுமென்ற செய்தி நினைவுக்குவரவே, 'அப்படியாயின் அவருண்ட நஞ்சத்தை நாமும் உண்ணவேண்டும்' என்று எண்ணி உணவை விழுங்கு கின்றாள்; இடையே வேறொரு யோசனை வந்துவிடுகின்றது; 'நம்மனத்துள் தலைவர் இருக்கின்றார்; நாம் உண்ட எச்சிலை அவர் உண்ணுதல் தகாது' என்று கருதி அதனை மீட்டும் உமிழ்ந்துவிடுகின்றாள் (344)

உணவை வெறுத்த தலைவி அதனால் உடல்மெலிகின்றாள்; வளைகள் கழல்கின்றன; இஃது உடம்பு நனிசுருங்கலென்னும் மெய்ப்பாடு. இந்த நிலை,

"குருகுமெய்ந் நாணும் விட்டாள்" (183),
"கைவளையுந் துறந்தாள்" (693),
"சரியோ டொழுகுங் கரவளையே" (697)
என்பவற்றிற் புலப்படுத்தப் பெறுகின்றது.

தலைவி இரவும் பகலும் துயிலாமல் இருத்தல் கண்டுயின்மறுத்தலென்னும் மெய்ப்பாட்டின்பாற் படும்;

"உறக்க மில்லையால்" (129),
"துயிலா ளின்னனமுமே" (163),
"கண்க ளுறங்கா" (697)
என இந்நிலை கூறப்பெறுதல் காண்க.

தலைவி தன் நிலையைத் தலைவனுக்குத் தெரிவிக்க விரும்புதலும் பாங்கியரையும் பிறபொருள்களையும் தூதுவிடுதலும் மரபு. அவள் கருத்தையறிந்து தோழி தூதுவிடுவதாகவும் சில செய்யுட்கள்

இதில் அமைந்துள்ளன. இதனைத் தூது முனிவின்மை யென்னும் மெய்ப்பாடாக உரைப்பர். இச்செய்யுட்களில் பாங்கியும், அன்னம், கிளி, பறவைகள், மேகம், வண்டு என்பவையும் தூதுப்பொருள்களாக வருதலைக் காணலாம்.

தலைவி வருந்தி அழுதலை நினைந்து கூறும் சில செய்திகள் கற்பனைத்திறம் பெற அமைந்துள்ளன. அவள் அழுங் கண்ணீர் பெருவெள்ளமாகிச் சென்று கடலில் விழுந்து அதன் நீரை உப்பாக்கியதென்றும் (612), அஞ்சனத்தைக் கரைத்தோடுங் கண்ணீர் தேங்கித் தன் நிறத்தாற் கருங்கடலைப் போலத் தோற்றியது (675) என்றும் கூறுவன இவ்வகையினவாதல் காண்க.

## தலச்செய்தியும் அகப்பொருட்செய்தியும்

தல சம்பந்தமாக அமைந்த பிரபந்தங்களில் அவ்வத் தல வரலாறுகளை இடைப் பெய்து விளக்குதல் கவிஞர் இயல்பு. விசேடண மாத்திரமாக அமைத்தலினும் கற்பனைகளில் அமைத்துக் காட்டுதல் புலமைத்திறத்துக்கு அடையாளம். குமரகுருபரர் அவ்வாற்றலிற் சிறிதும் குறைவுடையாரல்லர். அகத்துறைப் பொருளமைந்த பல செய்யுட்களில் அவ்வத்துறைப் பொருளுக்கு ஏற்பத் தலச்செய்தியை இணைத்து ஒன்றனுக்கு ஒன்று இன்றியமையாத வண்ணம் கற்பித்திருத்தலைக் காணலாம்.

## மதுரைச் செய்திகள்

மதுரைக் கலம்பகத்தில், மதுரைத் தலத்தில் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் இயற்றிய திருவிளையாடற்செய்திகள் அகத்துறைச் செய்திகளோடு கலந்து அமைந்து பொருளைச் சிறப்பிக்கின்றன.

இந்திரன் பழிதீர்த்த திருவிளையாடற் செய்தி, "கடம்பாடவிச் சுந்தரரே, தேவரீர்பால் மயலுற்று உம்முடைய கொன்றை மாலையை யாம் விரும்பி நிற்ப எமக்கு மத்தின் பெருவாழ்வாகிய பித்த நிலையையா தருவது? இந்திரன் பழியைத் தேவரீர் நீக்கினும் எம்மை வருத்துவதாகிய பெண்பழி போமோ?" (146) என்ற தலைவி கூற்றில் அமைந்துள்ளது.

தடாதகைப் பிராட்டியார் திருமணச் செய்தியைச் செவிலி எடுத்துக்காட்டி, "முன்னர்ப் பாண்டியர் திருமகளாகிய கன்னியை மணந்தல்லவா கன்னிநாடெய்தப் பெற்றீர்? இப்போது இக்கன்னியையும் ஏற்றருளின் பின்னும் செல்வமுண்டாகும்" (164) என்று தலைவியை ஏற்றுக்கொள்ள வேண்டுகின்றாள்.

சோமசுந்தரக் கடவுளிடம் தன் துன்பத்தை முறையிட்டுக் கொள்ளும் தலைவி, "மதியும் தென்றலும் மன்மதனும் என்னைத்

துன்புறுத்தாநிற்ப, தேவரீர் செங்கோல் செலுத்திப் பயன் என்ன?" (167) என்று வினவுகின்றாள். அப்பெருமான் சுந்தரபாண்டியராகி அரசு செலுத்திய செய்தியை நினைந்து கூறியது இது.

மடலேறுவதாகக் கூறப்புக்க தலைவி,

"வெள்ளிமன் றேறுதும்" (137)

என்கிறாள்; மதுரையிலுள்ள வெள்ளிமன்றத்தை இது குறித்து நிற்கின்றது. மடலேறுவார் மன்றிற் செல்வது மரபு.

தலைவியின் நிலையைக் கூறி இரங்கும் செவிலி, "மன்மதனது கரும்பை இவள் வேம்பென்கிறாள். தேவரீர் திருத்தோளிலணிந்த வேம்பைக் கரும்பென்கிறாள். இவள் இவ்வாறு மாறியாடுகின்றாள் (மாறாகப் பேசுகின்றாள்); மாறியாடிய தேவரீரைத் தரிசித்தாருக்கும் மாறியாடும் வல்லபம் வருமோ?" என்று இயம்புகின்றாள். இதன்கண் கால்மாறியாடிய திருவிளையாடல் குறிக்கப்பெற்றது.

மடலேறப் புகுந்த தலைவன் பனைமடலைக் குதிரையாக்கிவரும் தன் செயலுக்கு மதுரேசர் நரியைப் பரியாக்கிய திருவிளையாடலை உவமையாக்குகின்றான் (175.)

சோமசுந்தரக் கடவுள் மண்சுமந்து திருமேனியில் அடிபட்ட காலத்தில் எல்லாவுயிரும் அவ்வடியைப்பெற்றனவென்பதை நினைந்த தலைவி, "அந்தக் காலத்தில் நாமும் அவ்வடிபட்டிருப்போம். இப்போது நம் உடல் காமநோயால் துன்புறுகின்றதே; முன்போல இப்போதும் அவர் திருமேனிக்கு ஏதேனும் தீங்குண்டாயிற்றோ?" (160) என்று கூறுகின்றாள்.

உலவாக் கோட்டையளித்த திருவிளையாடலை நினைந்து தலைவி கூறுவதாக உள்ள செய்யுட்பகுதி ஒன்று வருமாறு:

"அறித்தங் குலவாக் கோட்டை......போலுமால்" (197.)

சந்திரனால் துன்புறும் தலைவி, "கடம்பவனத்தீர், சந்திரனாகிய நெருப்பு மூண்டெழுகின்றது; கன்னிமகளிர் எருவிட்டு அதனை மூட்டுவதுபோதாமல் தேவரீர் சடையின்மேலுள்ள அத்தீயினுக்கு மேலே விறகை வைத்தும் மூட்டியதை என்னவென்று சொல்வது?" என்று சமற்காரமாகக் கூறுகின்றாள். இறைவன் விறகு சுமந்த திருவிளையாடற் செய்தியையே அவள் இங்ஙனம் குறிக்கின்றாள்.

"ஓரானை முனைப்போருக்......டெய்தீ டரே" (121)

என்னும் தோழிகூற்றில் யானையெய்த திருவிளையாடற்செய்தி வந்துள்ளது.

பழியஞ்சுஞ் சொக்கரென்பது மதுரேசருக்கு ஒரு திருநாமம். பழியஞ்சிய திருவிளையாடலால் உண்டாகியது இது. தலைவியின்

நிலையை அப்பெருமான்பால் முறையிடும் செவிலி, "உலகத்தில் நீரே பழியஞ்சியாராதலின் உம்மையன்றி வேறு யாரிடம் இவள் துன்பத்தை உரைப்போம்?" என்றும், "தலைவிக்கு அருள்செய் யாமையால் அவள் உயிர்விட்டாளென்னும் பெண்பழி இப்பழி யஞ்சியார்க்கு வந்ததே" (158) என்றும் கூறுகிறாள். "பழி யஞ்சுஞ் சொக்கருக்குப் பெண்பழி கொள் பாவமே பாவம்" (133) என்று தோழி இயம்புகின்றாள்

தலைவி காமநோயால் உடல்வெம்பிக் கிடக்கையில் தோழி யொருத்தி அவள்மேல் திருநீற்றைத் தடவுகின்றாள்; அது கண்ட தலைவி, "அன்று ஞானசம்பந்தர் கூன்பாண்டியருக்குத் திரு நீற்றைத் தடவியதுபோல் என்மேல் நீ தடவுகின்றாயே. அதனால் அன்று அவன் சுரநோயும் கூனும் நீங்கப்பெற்றான். இப்போது என் காம வெப்பமும் தீரவில்லை; மன்மதன் வளைத்த வில்லின் கூனும் நிமிர வில்லை. இது மதுரையன்றுபோலும்!" (169) என்று இரங்குகின்றாள்.

பொருண்முற்றி மீளுந் தலைமகன் மேகத்தைப் பார்த்து, "உம் மைக் கண்டால் தலைவி இன்னும் யான் வரவில்லையென்று கருதிக் கண்ணீர் விடுவாள். ஆதலின் நீங்கள் மதுரைக்குச் செல்லற்க. அன்றியும் நீங்கள் முன்னர்த் தளைப்பட்ட ஊராயிற்றே; அங்கே யானின்றித் தனித்தேகல் அழகன்று" (165) என்று மதுரைத் தலச் செய்தியொன்றை யமைத்துக் கூறுகின்றான்.

மதுரைத் தெப்பத் திருவிழாவில் சோமசுந்தரக் கடவுளைத் தரி சித்து மயல் பூண்ட தலைவி தனக்குச் சைத்தியோபசாரம் செய்யும் தோழியரை நோக்கி, "சொக்கப்பிரானைக் கரையேற்றிய நீர், காம மடுவிற்பட்ட என்பாற் பின்னும் குங்குமச் சேற்றைக் கொட்டிக் கரையேற விடாமல் தடுக்கின்றீர்களே" (173) என்று வருந்து கின்றாள்.

## காசி வரலாறுகள்

காசியில் இறப்பாருக்கு விசுவநாதர் பிரணவோபதேசம் செய்து சாரூபப் பதவியை வழங்கியருளுவரென்பது அத்தல ஐதி ஹ்யம். இச்செய்தியை அகத்துறையோடு பொருத்தியமைத்த செய்யுட்கள் சில காசிக்கலம்பகத்தில் வருகின்றன.

சந்திரனது தண்கதிரைப் பொறாமல் வெம்பிய தலைவி, "விசு வேசர் தம் அடியார்க்குச் சாரூபம் வழங்குகையில் ஒவ்வொருவருக் கும் ஒரு கலையையுடைய பிறையையணியத் தருகின்றார். இவ் வாறு பலருக்குக் கலைகள் கொய்து கொய்து கொடுக்கவும் இந்த

மதிக்கொழுந்து வளர்ந்துகொண்டேயிருக்கின்றது என்ன வியப்பு!" (611) என்று வியக்கின்ருள்.

இறைவரது மாலைபெருமல் வருந்தும் தலைவி யொருத்தி, "மாலைக்காலம் வந்துவிடுமே; மதிக்கொழுந்து தோன்றுமே; நம் விரகதாபம் கண்டு சுற்றத்தார் நகுவரே" என்று ஏங்குகின்ருள்; பிறகு, "நகைத்தால் நமக்கென்ன? நமக்குத்தான் உயிர் போய் விடும்; அப்பால் காசிப்பிரானைத் தரிசிக்கலாம்; அவரது கொன்றை மாலையையும் பெறலாம்" (654) என்று தைரியம் கொள்கின்ருள்.

பிறமகளிரைத் தூது விடுக்கும் தோழி, "கொன்றைமாலையை இவளுக்குக் கொடாமல் இருக்கும் நினைவுண்டேல் அது கூடாத செயல்; இப்போது நீர் கொடாவிட்டாலும் அதுகாரணமாக இவள் உயிர் துறந்தால், சாரூபம் அடைந்து அம்மாலையைப் பெறுவாள்; எங்ஙனமாயினும் இவள் கொன்றைமாலையை விடுவதில்லை" (693) என்று சொல்லும்படி கற்பிக்கின்ருள்.

விசுவேசரது கொன்றைமாலையைப் பெருது வாடிய தலைவி ஒருத்தி அதனை வாங்கித்தர வேண்டுமென்று சொல்லவந்தவள், "தண்ணென்று நறையிதழித்தார்" என்றவளவிலே ஆற்ருமை மிக்கு உணர்விழந்து தரைமேல் வீழ்ந்தாள். அவள் நிலையைக் காசிநாதருக்குக் கூறும் தோழி, "இங்ஙனம் தான் மூர்ச்சித்துக் கிடத்தலைக் கண்டால் இறந்தாளாகக் கருதித் தேவரீர் பிரண வோபதேசம் செய்ய வருவீரென்று எண்ணி இது செய்யத் துணிந்தனளோ?" (609) என்கின்ருள்.

காசியில் பாவஞ் செய்தவருக்கு யம தண்டனையில்லையென்பதும் வயிரவர் தண்டனை மட்டு முண்டென்பதும் புராணவரலாறுகள்; இதனைத் தலைவி,

"ஆமோ வவிமுத்தத்......பொய்யாமே" (655)

என்பதிற் குறிக்கின்ருள்.

## புறப்பொருளிலக்கணவமைதி

அகப்பொருட் செய்திகளை இவ்வாசிரியர் இவ்வாறு மிக விரிவாகப் பலவகை நயங்களோடு அமைத்துள்ளமை இவருடைய அகப்பொருளிலக்கண நூற்பயிற்சியையும் புலமைத்திறத்தையும் வெளியிடுகின்றது. புறப்பொருட்செய்திகளையும் ஏற்றவிடங்களில் அங்கங்கே இவர் அமைத்துச் செல்கின்ருர்.

போர்செய்யப் புகுவாரும், போர்செய்வாரும், போரில் வென்ருரும் செய்யும் செயல்களையும் போர்க்களத்தே நிகழும் நிகழ்ச்சிகளையும் கவிமரபு பிறழாமற் கூறும் ஆற்றலுடையவர் இவர். போர்க்

கள நிகழ்ச்சிகளைக் கூறும் செய்யுட்கள் ஓசையினாலும் பொருளா லும் வீரச்சுவையைத் தருவனவாக அமைந்துள்ளன.

போர்செய்யப் புகுவார் பகைவேந்தனது பசுநிரையைக் கோடல் தமிழ்மரபு. இங்ஙனம் நிரைகோடற்குமுன் நற்சொல்லா கிய நிமித்தம் பார்த்தலும், ஒற்றரைக் கொண்டு பகைவர்நிலை நிரையின் நிலை முதலியவற்றை ஆராய்தலும் வழக்கம். இவற்றைக் கூறும் செய்யுட்களை வெட்சித்திணையில் முறையே விரிச்சி, வேய் என்னும் துறைகளிலடக்குவர் புறப்பொருள் வெண்பாமாலை யுடையார். இத்துறைச் செய்திகளை,

"வேய்ச்சொற்.........கவ்விளை முடிவதூஉங் காண்டும்" (473)

என்று இவ்வாசிரியர் ஓரிடத்தில் உதகரிக்கின்றார்.

மறவர்மகளைக் கொள்ள எண்ணி ஓரரசன் தூதுவிட அத்தூ தனை இகழ்ந்து மறுக்கும் செய்தியைக் கூறுவதும் கலம்பக உறுப்பி லொன்றாக மறமென்று வழங்கப் பெறுவதுமாகிய இரண்டு செய் யுட்கள் (180, 644) இவர்வாக்கில் வந்துள்ளன; அவையிரண்டும் மகட்பாற்காஞ்சியென்பதன்பாற் படும்.

"உழிஞை தானே மருதத்துப் புறனே" (தொல். புறத். 9)

என்பதன் உரையில் நச்சினார்க்கினியர், 'மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாதலானும்' என்றுரைத்து அதற்குரிய மேற் கோள்களை எடுத்துக் காட்டினர். அதனை யுணர்ந்த குமரகுருபரர்,

"மன்றலம் பணைசூழ் மருத வேலிப்......கமலை" (594),

"இறும்பூது பயக்கு நறும்பணை......காசிமா நகரம்" (657)

என்பவற்றில் மருதத்தையும் மதிலையும் ஒருங்கே அமைந்தனவாகக் கூறினர்.

தும்பைத்திணைப்பொருள் அதிரப்பொருதலென்று கூறுவர்;

"அதிரப் பொருத கலிப்பகை ஞன்றமிழ் நீர்நா டாளாமே" (32)

என்பதில் இவ்வழக்கை அமைத்தனர். அங்ஙனம் பொருவார் தும் பைப் பூவையேனும் மாலையையேனும் முடித்துக் கொள்ளுதல் மரபு; இம்மரபை,

"முரண் மறலி, தும்பைமுடிச்சூ டினும்" (248),

"தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை" (442),

"தோகை யுயிர்முடிப்பான் றும்பைமுடித் தான்மதவேள்" (610)

என்னும் இடங்களில் எடுத்தமைத்தனர்.

இவ்வாறு பொரும் போர்க்களத்தில் படையின் மிகுதியால் தூளிபடலம் எழும்; அதனைச் சேணுபராகமென்பர். அங்கயற் கணம்மை அம்மனை யாடும்பொழுது சோலையிலேயுள்ள வண்டுகள்

ஏழ அச்செயலால் மலர்களிலுள்ள மகரந்தப்பொடி எங்கும் பரந்து இருள் செய அதனைக் கண்டு வானுலகத்தவர், 'தடாதகா தேவியார் நம்மை நோக்கி மீண்டும் படையெடுத்து வருகின்றார்; அந்தச் சேனுபராகம் இது' (78) என எண்ணினரென்றுள்ள கற்பனையிலே இச்செய்தியை இவர் அமைக்கின்றனர்.

போர்வீரர் பொருங்களம் இரத்தத்தாற் சிவந்திருத்தலின் அதனைச் செங்களமென்பது சான்றோர் மரபு; இவரும்,

"கருங்களத் தோடொருவர் செங்களத் தேற்றலும்" (99),

"செங்களம் பட்டு" (383) என்பர்.

போர்க்களத்திற் கவந்தமாடுதலும் (30, 388, 442), கழுகு பந்தரிடுதலும்(39), பேய்கள் தசையுணவுகொண்டு களித்தலும் (442, 443) சொல்லப்படுகின்றன. பேய்கள் களித்துக் குரவையாடுதலைத் தும்பைத் திணைக்குரிய பேய்க்குரவை யென்னும் துறையின்பாற்படுத்துவர் (பு. வெ. 145.) இத்துறைச் செய்தி,

"பைங்குடர் மூளையொ டிம்புதி துண்டு......குரவை பிணைத்தாட" (39)

"......பேய்த்திரள்......வைத்திடவொர்......விடுத்தகு மாரனை" (352)

என்பவற்றிற் காணப்படுகின்றது.

போர்க்களத்தில் தோல்வியுற்று ஓடினோரையும் மயிர்குலைந்தோர் முதலியோரையும் கொல்லுதல் அறமன்று; இதனை நச்சினார்க்கினியர், 'சிறப்புடை அரசியலாவன, மடிந்த உள்ளத்தோனையும் மகப்பெறாதோனையும் மயிர்குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனையும் பெண்பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்த படை யெடாதோனையும் பிறவும் இத்தன்மை யுடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொருதலும் முதலியனவாம்' (தொல். புறத். 10, உரை) என்று உணர்த்துவர். இம்மரபை இவ்வாசிரியர்,

"தாரோ டவிழ்ந்திட்ட......தாவிக்கு வேலி" (441)

என்பதிற் புலப்படுத்துவர்.

புறமுதுகிட்டோரைக் கொல்லாது விடுத்தல் தழிஞ்சியென்னுந் துறையின்பாற்படும் (பு. வெ 55);

"ஓட்டிய...... யாடல்செயும்', (386)

என்பதில் பின்னிட்டவரை முருகக்கடவுள் கொல்லாது விடும் செய்தியை இவ்வாசிரியர் உரைத்தார். "முன்னரே உங்களுடைய கண்ணாகிய கணையினால் விளைக்கும் போரில் தோல்வியுற்று நிற்கும் என்னை மன்மதன் கணை கொல்லுகின்றது" (176) என்று தலைவன் தலைவியினிடம் முறையிடுவதாக உள்ள அகத்துறைச் செய்யுளொன்றில், போரில் தோற்றோடினவரைக் கொல்லுதல் அறமன்

றென்னும் புறத்துறைச் செய்தியைக் குறிப்பாற் புலப்படும்படி அமைத்தார்.

வென்றோர் வாகைமுடிக்கும் மரபை,

"............பானுப்
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்" (1 : 8-9),

"...................மதவேள்
வாகை முடித்திடவும் வல்லனே" (610)

என்பவற்றில் உணர்த்தினர்.

போர்க்களம் வென்றோருக்குரிய தென்னும் செய்தியை,

"செயல்பாய் கடற்றானை செங்களங் கொளவம்மை
திக்குவிச யங்கொண்டநாள்" (56)

என்பதில் வெளிப்படுத்தினர். தோற்றோரது கொடியை வென் றோர் கைக்கொள்ளும் வழக்கை,

"........கருப்பு வில்லியைக் காய்ந்தநாட்
கைப்ப தாகை கவர்ந்து கொண்டதோர் காட்சி" (154)

என்பதிலும், வெற்றிகொண்டோர் தாம் வென்ற இடத்தை எல்லைக்கல் நிறுவி வரையறுக்கும் முறையை,

"இமயத் தொடும்வளர் குலவெற் பெட்டையும்...புரந்து" (40)

என்பதிலும் அமைத்துள்ளார். வென்றோர், போர்க்களத்தில் இறந்தோருடைய தசை முதலியவற்றைப் பேய்கள் உண்ணும்படி செய்து களவேள்வி இயற்றுதலைப் புறப்பொருள் நூல்களும் பரணி நூல்களும் எடுத்துக் கூறும்; இவர்,

"............அவுணர் படக்கள வேள்விசெயாக்
கொற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ" (383),

"சமர்விளை யாடிச் செங்கள வேள்வி செயும்" (438)

என இரண்டிடங்களில் அதனைக் குறித்தனர்.

போரில் வென்றோர் பிறகு நன்னீரில் நீராடுதலை மண்ணுமங்கல மென்னும் துறையிலமைப்பர் (பு. வெ. 224);

"எண்டிசை யுந்தனி கொண்டு புரந்து...வாடு மடப்பிடி" (40)

என்பது அத்துறையின்பாற் படுவதேயாகும்.

போரில் தோற்றோர் காட்டுக்குச் சென்று மறைதலும்(13), பகையரசனுக்கு அஞ்சித் திறையிடுதலுமாகிய (13, 51) செய்திகளை இவர் உரைத்துள்ளார். போரில் இறந்தவீரர்கள் சூரியமண்

டலத்தை ஊடுருவிச்சென்று வீரசுவர்க்கம் பெறுவரென்பது நூற் கொள்கை. இவ்வாசிரியர்,

"ஒண்பருதி யுடல்கிழித் தோடுங் கடற்றானை" (383),

"சமரிற்பட்டவர்...தாமரை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழி றலைநின்றுங்கு" (387)

என இச்செய்தியை அறிவித்தனர்.

தடாதகைப் பிராட்டியின் திக்குவிசயத்தை வருணிக்கும்பகுதியில், "அப்பிராட்டியின் படையிலுள்ள மனிதவீரர் தேவர்களாற் கொல்லப்பெற்று வீரசுவர்க்கத்தை அடைந்து தேவமகளிரைச்சார்ந்து இன்புற்றனர். அவர்கள் உயிர்நீப்பினும் பகைவருடைய பொருள்களைக் கவர்வதை ஒழிந்திலர்" (39) என்னும் கருத்துப்படவரும் செய்யுளிலும், "முருகக்கடவுள் அசுரர்களோடு போரிடுகையில் இறந்த அசுரர்கள் வீரசுவர்க்கம் புகுந்து தேவராகித் தேவர்நுகர்பவற்றைத் தாமும் நுகர்வராயினர்" (383) என்னும் கருத்துப்படவரும் செய்யுளிலும், "போர்க்களத்தில் இறந்துபட்ட அசுரர்கள் தேவராய் வீரசுவர்க்கத்தையடைந்து, தாம் முன்னர் அசுரராயிருந்தமையை மறந்து அசுரர்கூட்டத்தை அழிப்பாயாகவென்று முருகக்கடவுளை வேண்டுவாராயினர்" (387) என்னும் கருத்துப்பட வரும் செய்யுளிலும் போரில் இறந்தோர் வீரசுவர்க்க மெய்தும் செய்தியை நயம்பெற அமைத்துள்ளார்.

இலக்கணத்தாலும் இலக்கிய அமைதியாலும் உணர்ந்த இத்தகைய வேறு சில புறப்பொருட்செய்திகளையும் இவர் செய்யுட்களிலே காணலாகும்.

## யாப்பிலக்கணவமைதி

**பா**வும் பாவினமுமாகிய யாப்புக்களைப் பொருட்சிறப்பமையப் பாடுவதில் இவர் வல்லவரென்பதற்குச் சிதம்பரச் செய்யுட்கோவை ஒன்றே சான்றாகும். மதுரைக்கலம்பகம், காசிக்கலம்பகமென்னும் இரண்டனுள்ளும் பாவும் பாவினமுமாகிய செய்யுட்கள் பல அமைந்துளவெனினும், சிதம்பரச் செய்யுட்கோவை யாப்பிலக்கணத்துக்குரிய இலக்கியமாகவே செய்யப்பெற்றதாதலின் அதன்கண் பாவுக்கும் பாவினங்களுக்குமுரிய இலக்கண அமைதியை நன்றாகக் காணலாம். அந்நூற் செய்யுட்களின்பின் உள்ள குறிப்புக்கள் அவ்விலக்கண அமைதியைத் தெளிவாகப் புலப்படுத்தும். அந்த நூலைப் போலப் பாப்பாவினம், திருவலங்கற்றிரட்டென்னும் இரண்டு நூல்கள் உள்ளன.

இவர் பாடிய செய்யுட்களுள் வெண்பா 190; வெண்டாழிசை

5; வெண்டுறை 5; வெளிவிருத்தம் 2; ஆசிரியப்பா 41; ஆசிரியத் தாழிசை 2; ஆசிரியத் துறை 4; ஆசிரிய விருத்தம் 298; கலிப்பா 38; கலித்தாழிசை 7; கலித்துறை 96; கலிவிருத்தம் 6; வஞ்சிப்பா 2; வஞ்சித்தாழிசை 1; வஞ்சித்துறை 3; வஞ்சிவிருத்தம் 4; மருட்பா 6.

சிதம்பரச் செய்யுட்கோவையில் பலவகைத் தொடைகளும் இருத்தலைக் காணலாம். திரிபு, வழியெதுகையாகிய நயங்கள் இவர் செய்யுட்களில் அங்கங்கே பொருந்தியுள்ளன. திரிபு அமைந்த செய்யுட்கள் வருமாறு: 106, 107, 112, 114, 131, 140, 152, 174, 183, 186, 200, 309, 310, 318, 319, 451, 460, 466, 468, 482, 548, 566, 571, 596, 624, 631, 632, 652, 656, 659, 679, 685, 688, 694.

வழியெதுகை யமைந்த செய்யுட்பகுதிகளிற் சில வருமாறு:

"பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப்பிராட்டி" (10)
" தொந்தி சரிந்திட வுந்திக ரந்தொளிர் சூலுடையால் " (19),
" கங்குன்ம தங்கய மங்கு லடங்கவி டுங்காமன் " (23),
" இரைத்துத் திரைத்து நுரைத்து " (27),
" மூதண்ட வேதண்ட கோதண்ட மோடு " (34),
" வாளிகள் கூளிகள் காளிகள் ஞாளியி லாளியென " (41),
" விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதி " (67),
" கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை வெள்ளைப் பள்ளை " (108),
" தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதும் " (379),
" சோதி யானணி பூதி யானுமை பாதியான் " (536),
" கரும்புஞ் சுரும்பு மரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள் " (555.)

இவ்வாசிரியர் செய்யுட்களில் அடுத்தடுத்து முரண்டொடை அமைந்திருக்கும். இவருடைய நடையின் தனிச்சிறப்புக்களுள் இதுவும் ஒன்று. முரண்டொடையமைந்த இடங்களிற் சில வருமாறு:

" குனிய நிமிர்தரு செரு " (4),
" வெண்புயலுங் கரும்புயலும் " (8),
" செஞ்சூட்டு வெள்ளோதிமம் " (9),
" செங்கயல் கிடக்குங் கருங்கட் பசுந்தோகை " (17),
" பெருநா ணெய்தச் சிறுநா ணெலிசெய்யா " (39),
" கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர்
செங்களத் தேற்றலும் " (99),
" எய்யாது நின்றொருவ னெய்வதுவு மிளையாட... செல்வ ளுரே"(122),
" சிறுமதிநம் பெருமதியி னுகப்படருங் காலம் " (159),
" கண்டமுங் காமர் மெய்யுங் கறுத்தவர் வெளுத்த நீற்றர்,
எண்டரு மதுரை யிற்சிற் றிடைச்சிபே ரிடைச்சி யென்பீர் " (166),

"நெடியவன் முதற்றேவர் குறுகி நிற்பவும்" (414),
"சிற்றம் பலங்கண்டு பேரம் பலத்தைச்செய் யாதவரே" (460),
"இடம்புரி சுரிமுக வலம்புரி" (479),
"கருமிடற்றன் செஞ்சடையன் வெண்ணீற்ற னென்னும்
மழுவலத்தன் மானிடத்த னென்னும்"(509),
"செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச்
சென்னியற்கும்" (554),
"வலம்புரி யென்னவாங் கிடம்புரி திங்கள்" (700.)

இவற்றில் சொன்முரண், பொருண்முரண் என்னும் இரு வகையும் விரவி வந்தது காண்க.

இவர் பாடிய இரண்டுபிள்ளைத்தமிழ்களினும் இலக்கணப்படியே பலவகைச் சந்தப்பாக்கள் அமைந்துள்ளன; கலம்பகமிரண்டனுள்ளும் புயவகுப்பு உள்ளது; இவற்றையன்றி வேறிடங்களிலும் இவர் சந்தச்செய்யுளை அமைத்துள்ளார். இந்தச் சந்த அமைப்பைக் கொண்டு சில திருத்தமான பாடங்கள் கண்டுணர்ந்து அமைக்கப் பெற்றன. அருமையாக வழங்கும் 'தய்ய' என்னும் வாய்பாட்டுச் சந்தத்தை இவர் வாக்கிற் சில இடங்களிற் காணலாம்.

"சிகர வடவரை குனிய நிமிர்தரு
செருவி லொருபொரு வில்லெனக் கோட்டினர்" (4)

என்னும் செய்யுளில் 'வில்லெனக்' என்பது 'தய்யனத்' என்னும் சந்தமாக அமைதல் காண்க.

"கரைபொரு திரங்கு கழிதொரு மிருந்து
கயல்வர வுறங்கு புள்ளீரே" (134)

என்பதில் 'தய்யானு' என்னும் சந்தம் வந்தது.

"குமிழ்மறிந்தவிழி நவ்வியை" (353)

என்பதில் 'தய்யன' என்னும் சந்தம் வந்தது.

சிறப்புப் பெயர்களுக்கு ஏற்றபடி சந்தத்தை அமைத்துப் பாடுவதில் இவர் திறமைபெற்றவர். சித்திவிநாயகன் (5), முத்துக்குமாரன் (6), சவுந்தரமாறர் (115), கடம்பாடவிச் சுந்தரர் (146), மதுரை யழகிய சொக்கர் (198), வேளூர் வயித்திய நாதன் (352), தையல் (353), முப்பத்து மூவர் (13), முப்பத்துமுக்கோடி தேவர்கள் (360) என்னும் பெயர்களுக்கேற்ற சந்தத்தை அமைத்துப் பாடுஞ் செய்யுட்கள் ஓசைநயமும் பொருட்செவ்வியு முடையன.

## அணியிலக்கணவமைதி

இவர்காலத்தில் வடமொழியின் தொடர்பால் அணியிலக்கணம் தமிழில் விரிவடைந்தது. வடமொழியிலும் தென்

மொழியிலும் கற்பனைத்திறம்படப் பாடும் புலவர்கள் மலிந்தனர். இயற்கையின் எழினலங்களைக்கண்டு உள்ளதை உள்ளவாறே கவிதையிலமைத்துக் காட்டும் சங்கப்புலவர்களுடைய பாடல்களுக்கும் பிற்காலத்துப் புலவர் பாடல்களுக்கும் உள்ள வேற்றுமைகளில் இது தலைமையானது. இல்பொருளுவமை, உயர்வுநவிற்சி, தற்குறிப்பேற்றம் முதலிய அணிகளைப் புலவர்கள் மிகுதியாகத் தங்கள் செய்யுட்களிலே அமைக்கத் தொடங்கினர். கண்ணிற் கண்ட காட்சிகளைக் கருத்தால் விரிவுபடுத்திக் கவியிலமைக்கும் இப்புலவர்களுடைய செய்யுட்களில் இயற்கையோடு ஒத்த நிகழ்ச்சிகளையும் காட்சிகளையும் காணுவிடினும், இவர்களுடைய கற்பனையின் அடிநிலையில் இயற்கைக் காட்சிகள் இருப்பதை உணரலாம். மரங்களை உலகிலே கண்ட இப்புலவர் தம் கருத்தினுல் அவற்றை வானளவும் வளரவிட்டுக் கற்பகத்தோடு ஒன்றிநிற்கும்படி கற்பிக்கின்றனர். இத்தகைய வருணனைகள் கவிகளுக்கென்றே அமைந்த ஒரு கற்பனை உலகத்தைப் படிப்போருடைய அகக்கண்முன் தோற்றுவிக்கின்றன.

## உயர்வுநவிற்சி

மருதநிலத்து மகளிர் களிமண்ணையும் சிறு கற்களையும் வைத்துக்கொண்டு சிற்றில் விளையாடுதலையும் சிறுசோறடுதலையும் உலகிற் காண்கின்றோம். இப் புலவருடைய கற்பனையிலே, அவர்கள் மாணிக்கமாகிய தீயை அடுப்பிலே வைத்துப் பவளவிறகை மூட்டித் தேனை உலைநீராகப் பெய்து சங்காகிய பானையில் முத்தாகிய அரிசியை யிட்டுச் சிறுசோறுக்குகிறார்கள் (25); விளையாடும் மகளிர் சிறிய முற்றிலால் வாரிக்குவித்த மணிக்குவியல்கள் ஆகாயவீதியளவும் உயர்ந்து வழியை அடைத்து நிற்க வையையாறு தடைப்பட்டுத் தேங்கி நிற்பதனுல், அத்தேக்கத்தில் சூரியன் பொற்பரிசிலாகவும் பிறை சிறுதோணியாகவும் நட்சத்திரங்கள் சிறுமிதப்புக்களாகவும் தோற்றுகின்றன (59); 'அந்தப் பெரு வெள்ளத்தினிடையே மணிக்குவியலைக் குவித்த மகளிர் எங்கே யிருந்தனர்? உலகம் என்னுயிற்று?' என்று கேட்கும் உரிமை நமக்கு இல்லை. கவிஞர்களின் கனவு அது. கனவிலே தொடர்பையேனும் தக்க காரணத்தையேனும் கண்டுணர முடியாதன்றோ? அவ்வாறே கவிஞருடைய கற்பனை நிகழ்ச்சிகளை இந்த உலகத் தோற்றத்தோடு ஒப்பு நோக்கப்புகின் அந்தக் கற்பனையின் நயத்தைச் சுவைக்க இயலாது.

குமரகுருபரர் அமைக்கும் மதுரையிலே உள்ள சோலைகள் வானுலகளவும் உயர்ந்து நிற்கின்றன; பெண்களின் கூந்தலிலே

வாசஞ் செய்யும் வண்டுகள் அந்தச் சோலைகளிலே புகுந்து உழக்கு வதனால் அங்குள்ள மலர்களின் தாது உக, அதனால் ஆகாயகங்கை தூர்கின்றது; அச் சோலையிலேயுள்ள முசுக்கலை தனக்கருகே தோற்றும் சந்திரனிடத்துள்ள முயலின்மேல் துள்ள அதன் ஆர வாரத்தைக்கண்டு அஞ்சிய மேகங்கள் மருதநிலத்திலே உள்ள நெற்போர்களின் மேல் தங்குகின்றன; அங்கே கள்ளைக் குடித்து மயங்கி நிற்கும் மள்ளர் அம்மேகங்களை எருமைக்கடாவென்று கருதி அவற்றைத் தம்பாலுள்ள எருமைக்கடாக்களோடு சேர்த்துப் பிணையலிட்டுக் கடாவடிக்கின்றனர் (28.)

வானளவும் ஓங்கிய கரும்பு கற்பகவனத்திடையே சென்று வளர அதனை ஐராவதம் உண்கின்றது; அவ்வாறே மதுரை வயலிலே முளைத்த நெல் வானுலகத்திற் கதிர்விட அதனைக் காம தேனு தின்று கடைவாய் குதட்டுகின்றது (50); கமுகும் கரும்பும் சூரியமண்டலத்தளவும் உயர்ந்து சூரியனதுதேரின் இருபுறத் திலும் நின்று அதற்கு அலங்காரம் செய்கின்றன (424); பூமியிலே வளர்ந்த கமுகு வானுலகத்தில் உலாவரும் இந்திராணிக்கும், இந்திரனது திருவோலக்கத்தில் நடமாடும் மகளிருக்கும் கவரிவீசு கின்றது (58,375); இப்படியே குமரகுருபரர் கட்டும் மதில் வானுலகுக்கு ஓர் ஏணியாகவும் கற்பகத்துக்கு வேலியாகவும் அமைகின்றது (374, 567); இவர் கற்பனையாலமைக்கும் மாடங் களிலுள்ள கொடிகள் சூரியனது தேரிலுள்ள குதிரைகளை அடித்து முடுக்குகின்றன; அம்மாடங்களிலே பதித்த நீலமணியின் ஒளியால் ஐராவதமாகிய வெள்ளையானை தன்னிறம் வேறுபட்டுக் கருமேகம்போலத் தோற்ற அதுகண்ட தேவமகளிர், "இது பூவுல கத்திலிருந்து வந்த யானையோ!" என்று ஐயுறுகின்றனர்; அந்த யானையும் தன் நிறங்கண்டு தன்மேற் சேறுபடிந்ததாகக் கருதி ஆகாயகங்கையிலே நீராடுகின்றது (372); மற்றொருசார் பளிக்கு நிலாமுற்றத்தின் மேல் உயர்ந்த சூளிகையிலுள்ள மரகதமணிகள் கதிர்வீச அதனைப் புல்லென்றெண்ணி உண்ணும்பொருட்டுக் காமதேனு தன் நாவை நீட்டுகின்றது (371); அகழியில் நீருண்ண வரும் மேகத்தை யானைப்பாகர் யானையென்றெண்ணிக் கட்டு கின்றனர் (341.) இவற்றில் உயர்வுநவிற்சியும் திரிபதிசயவணியும் அமைந்துள்ளன.

## பிற கற்பனைகள்

கற்பனைத்திறத்தினால் இவர் புனைந்து காட்டும் வேறு சில காட்சிகள் வருமாறு:—

ஒரு சோலையின்கண் பச்சிளங்கமுகமரம் ஒருபால் நிற்ப அதன்கண் முல்லைக்கொடி ஏறி மட்டைகள்தோறும் படர்ந்து மறிந்து கீழே விழுந்து அருகிலுள்ள வாழைமரத்திலே படர்ந்து நிற்கின்றது; அந்தக் கமுகமரத்தின்கண் மயிலொன்று தன் தோகையை விரித்து நடிப்ப நெடிய தாளையுடைய மந்திகள் பக்கத்திலிருக்கும் பலாமரங்களிலுள்ள பழங்களை அடிக்க, மற்றொரு வானரம் ஒரு பழத்தைத் தன்தலைமேற் சுமந்துகொண்டு அந்த முல்லைக்கொடியின் மேலேறி நடக்கின்றது (349.)

இந்தக் காட்சியைத் தம் உள்ளத்திலே அமைத்த இம் முனிவர் இந்தக் கற்பனையை யமைக்கும்போது இதற்கு ஒரு மாதிரிகையாக உலகில் நிகழும் கழைக்கூத்தர் ஆட்டத்தை நினைத்த வண்ணமேயிருந்தனரென்பது இக்காட்சிக்கு அவ்வாட்டத்தை உவமையாகக் கூறுதலால் உணரலாம். முதலில் வானரங்களின் காட்சியைக் கூறிப் பின் கழைக் கூத்தர் செயலை நமக்கு நினைப்பூட்டினும், அவர் முதலில் நினைத்தது கழைக்கூத்த ராட்டமேயென்பதில் தடையில்லை; அதனால்தான் அந்த உவமை தொடர்ந்து விரிவுபட அமைந்துள்ளது.

களிற்றின்மேல் அரசிளங்குமரர் திருவுலாப்போத மாடங்களின் வெண்ணிறத்தால் அக்களிற்றின் நிறம் வெண்மையாகி அவற்றை ஐராவதத்தைப்போலத் தோற்றுவிக்கவும், வீதியிலுள்ள மகளிருடைய பார்வை அக்குமரர் மேனியிற் படிந்து அவர் உடல் முழுவதும் கண்ணிருத்தலைப்போலத் தோற்றுவிக்கவும், பல இந்திரர்களைப்போல அவர்கள் தோற்றமளிக்கின்றனர் (473.) இங்ஙனமுள்ள காட்சிகளைப் பல விடங்களிற் காணலாம் (345, 397, 398, 585, 594.)

## மீனினங்கள்

இவ்வாசிரியர் மீனினங்களையும், எருமைகளையும், வானரங்களையும் தம் கற்பனைக்குரிய பொருளாகப் பலவிடங்களில் எடுத்தாளுகின்றனர்.

ஒரு வாளைமீன் சந்திரனைக் கிழித்து அமுததாரை பொழியச் செய்து மீளுகின்றது (18); ஒரு வாளை முகிற்படலத்தின் வயிறு உடைய உகைத்துக் கற்பகப்பூங்காடும் கங்கையும் நீந்தி மதியின் முயலைத் தடவி நட்சத்திரங்களை நடுங்கச்செய்து அண்டகூடத்தைத் திறந்து பெரும்புறக்கடலிலுள்ள சுறவோடும் விளையாடுகின்றது(26); மற்றொரு வாளை மதியின்வயிற்றைக் கீறிச் சென்று அங்கிருந்து இழியும் வெண்ணிற அமுத அருவியால்

காவேரியை ஆகாயகங்கையாகச் செய்து பிறகு மீட்டும் கற்பக வனத்தை உழக்கி அதன்கண் உள்ள பொன்னிறமுடைய பூந்தாதை ஆகாயகங்கையிலே உதிர்த்து அதனைப் பொன்னி நதியாகச் செய்கின்றது (448); வேறொரு வாளை காமதேனுவின் மடியிலே முட்ட அது தன் கன்றென எண்ணிப் பாலைச் சொரி கின்றது (396); மடுவிலே யிருந்த வாளையொன்று வண்டினொலிக்கு அஞ்சி ஆகாயத்தைக் கடலென்றெண்ணித் தாவ, ஆகாயகங்கை யின் புனல் எதிர்பாராதவண்ணம் அதற்குக் கிடைக்கவே, பிறி தொரு தெய்வத்தை உண்மைப் பொருளென்று மயங்கி அன்பு செய்வார் இறைவன் நல்லருள் செய்ய இறுதிப்பயன் கிடைக்கப் பெற்று மகிழ்ந்தது போல மகிழ்கின்றது (407); பிறிதொன்று கற்பகத்தை உதைத்துத் தான் போகின்ற போக்கிலே தென்னம் பழத்தை விழுத்துகின்றது (425.)

இவ்வாறே சுறவும் (52), கயல்களும் (29, 56, 427), வராலும் (50), சேலும் (447) செய்யும் செயல்களும் இம்முனிவருடைய கற் பனைத்திறத்தை வெளியிடுகின்றன.

## எருமை

இவர் தம் கற்பனையில் எருமைகள் பலவற்றைக் காட்டுகிறார். ஓர் எருமை தன் இளங்கன்றை நினைந்து சொரியும் பாலால் பொய்கை பாற்கடலைப் போன்ற தோற்றத்தைப் பெறு கின்றது (24, 325); சித்தாமிர்தத் தீர்த்தத்தில் பணைமருப்பெருமை யொன்று தன் மடிமடை திறந்த தீம்பாலாறும் பங்கயத்தேனாறும் கலந்து வெண்மையும் செந்நிறமும் தந்து அவ்விரண்டு நிறத்தை முறையே பெற்ற, முருகப் பிரானுடைய புகழையும் பிரதாபத்தை யும் நிகர்க்கும்படி செய்கின்றன (356); மற்றோரிடத்தில் களிற் றின் மதநீர் யமுனை போலவும் தேனாறு வாணிபோலவும் பாய அவற்றோடு கங்கா நதியைப்போல ஓர் எருமை பொழியும் பால் பாய் பெருக்காறு உவட்டெழுகின்றது (447.)

## குரங்குகளின் காட்சிகள்

இப் புலவர்பிரான் குரங்குகளைக் கொண்டு காட்டும் விசித் திரக் காட்சிகள் பல. "தழை கெழு பொழிலின் முசுக்கலை மைப் புய லிற்பாயத் தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே" (42) என்று ஒரு முசுக்கலை தாவுவதை இவர் வருணிக்கும் செய்யு ளின் சந்தம் அந்தக் குரங்கு குதித்துக் குதித்துத் தாவுவது போன்ற அமைப்புப் பெற்று விளங்குகின்றது.

ஒரு பொழிலில் கொழுந்தேன்வெள்ளம் பெருக அதன்கண்

உள்ள பலாமரம் ஒன்றில் இருந்த முசுக்கலையொன்று அப்பலவின் கொம்பு ஒடியவே அதிலிருந்த கனியையே குடமாகக் கொண்டு நீந்துகின்றது (100); சில குரங்குகள் ஒரு கொம்பிலிருந்து பாயும் போது அவை இருந்து செல்லும் விசையினால் அம்மரக்கொம்பு விசைத்தெழுந்து சந்திரனைக் கிழிக்கின்றது (100.) குரங்காட்டிகள் குரங்கைப் பலவகையாக ஆட்டி விநோதங் காட்டுதலை உலகிலே காண்கின்றோம். இப்புலவர் பிரானோ அவர்களாற் காட்ட முடியாத விநோதங்களைத் தம் கவிதையுலகத்திலே காட்டுகின்றார். மந்திகளுக்குக் கழைக் கூத்தருடைய வேடத்தை உவமையலங்காரங் கொண்டு அமைக்கின்றார் (349, 657); முற்பகலில் ஒருவர் பொற்குடம் நிரம்பப் புதைத்து வைத்த நிதியினைத் தும் அஞ்சனத்தாற் பார்த்த கள்வர் கண்டெடுக்கும் காட்சியை, ஒரு மந்தி வேரிடைப் பழுத்துப் பூமியினுள் மறைந்து கிடந்த பலாப்பழத்தைக்கண்டு பொன்னிறமுள்ள அதன் சுளைகளைத் தோண்டியெடுக்கும் செயலாற் காட்டுகின்றார் (588); இருவேறுருவையுடைய மந்தியொன்று பொன்னிறம் பழுத்த சுளைகளையுடைய பலாப்பழத்தைத் தன் மடியிலே வைத்துத் தன் நகத்தால் அதனைப் பிளந்து உள்ளிருக்கும் சுளைகளை எடுத்து உண்ணுவதாகக் கற்பித்து, இரணியனது மார்பைப் பிளந்து குடரையும் நிணத்தையும் உண்ட நரசிங்க மூர்த்தியின் தோற்றத்தை அதற்கு உவமையாக்குகின்றார் (313); பின்னும் ஓரிடத்தில் ஒரு மந்தி கமுகங்குலையைப் பறித்து மீளுங் காட்சியை யமைத்து அக்காட்சிக்குச் சுக்கிரீவன் இராவணனுடைய முடிகளைப் பிடுங்கிப் பாய்ந்த செயலை ஒப்புக் கூறுகின்றார் (700)

## தெய்வங்களைப்பற்றிய கற்பனை

குமரகுருபர முனிவர் தம் கற்பனைக்கு நிலைக்களனாக உலகியற் பொருளை ஆக்குவதோடமையாது தெய்வங்களையும் அங்ஙனம் அமைக்கின்றனர். விநாயகரது விளையாடல்களாகவும் (57, 534, 547), முருகக்கடவுள் விளையாடல்களாகவும் (402, 404, 405) இவராற் கற்பிக்கப்பெறும் காட்சிகள் சில.

முருகக்கடவுள் உமாதேவியாருடைய வயிறு குளிரும்படி தவழ்ந்தேறிச் சிவபிரானது திருமார்பிற் குரவையாடுகின்றார்; அவர் திருக்கரத்திலுள்ள உடுக்கையைச் சிறுபறை போலத் தட்டி முழக்குகின்றார்; அவர் கையிலுள்ள அக்கினியில் அவர் திருமுடியிலுள்ள கங்கைநீரை அள்ளி ஊற்றி அவிக்கின்றார்; பிறையை எடுத்து அப்பெருமான் ஆபரணமாகிய பாம்பின் வாயிலே செருகுகின்றார்; திருமுடியிலணிந்த அறுகம்புல்லை யெடுத்து அவர்கரத்தி

லுள்ள மானுக்கு அளிக்கின்றார்; அப்பிரானது செம்மேனி வெண்ணீறு தூளெழப் புழுதியாட்டு அயர்கின்றார்; சடைக் காட்டிலுள்ள நீரில் துளையமாடுகின்றார்; இத்தகைய சிறு விளையாட்டுகள் ஒரு செய்யுளில் வருணிக்கப் பெறுகின்றன (402)

மற்றொருகாட்சி வருமாறு: முருகக்கடவுள் சிவபெருமான் திருமுடியில் அணிந்த பிறையோடு உமாதேவியார் திருமுடியிற் சூடிய முத்தாலாகிய பிறை யென்னும் அணியை இணைத்துப் பார்க்கும்போது அத்தோற்றம் பூர்ணசந்திரனை ஒத்தது; அதை முழு மதியென்றே கருதிச் செம்பாம்பாகிய கேது வந்து படம் விரித்து ஆட அப்பாம்பைத் தான் சூடும் காந்தளென்று எண்ணி முருகக் கடவுள் அதனைப் பற்றுதற்குச் செல்ல அது வெருண்டோடியது; ஏமாற்றமடைந்து நின்ற முருகக்கடவுள் சிவபிரானது முடியிலுள்ள பிரமன்தலையைக் கண்டு, இயல்பாகவே அது நகுதலையாக இருப்பதை மறந்து தம் செயல் கண்டு நகைப்பதாகக் கருதி, "என்னைப் பார்த்தா சிரிக்கின்றாய்? முன்பு குட்டுப்பட்டதை மறந்து விட்டாயோ?" என்று கோபத்தோடு கூறி இதழதுக்கினர் (404.)

சிவபெருமான் திருமுடியில் நிகழும் கற்பனை நிகழ்ச்சி ஒன்று வருமாறு: அத்திருமுடியில் உள்ள பாம்பு தன் சிறுமூச்சு விடுவதனால் பெருங்காற்று உண்டாக அதனால் அங்குள்ள கங்கையிற் பேரலைகள் உண்டாயின; படம்விரித்தாடும் அப்பாம்பின் கண்ணினின்று உண்டாகிய அழல் கொளுத்தியதால் கங்கைவெள்ளம் சுருங்கியது; அப்போது நெற்றிக்கண்ணிலிருந்து எழுந்த அனற் கொழுந்து சந்திரன் மேற்பட அஃது உருகியதால் அமுதம் பெருகி அக் கங்கையில் உண்டாகிய வெள்ளக் குறைவைப் போக்கியது (467.)

மீனாட்சியம்மை ஊசலாடும்போது அண்டபகிரண்டமும் அசைந்தனவாம். ஏன்? இவர் கூறும் கற்பனை வருமாறு:

பாடல்பாடி அம்பிகை ஊசலாடுங்கால் அப்பாட்டைக்கேட்டும் ஊசலாட்டைக் கண்டும் சிவபெருமான் திருமுடியசைத்தனர்; அப்பொழுது அத்திருமுடியிலுள்ள ஆதிசேடன் அசைந்தனன்; அதனால் பூமியசைந்தது; சராசரங்கள் யாவும் அசைந்தன (98)

## தற்குறிப்பேற்றம்

இயல்பாகவுள்ள காரணமொன்றிருப்ப வேறு காரணத்தைக் கற்பித்துக் கவிஞர் அமைக்கும் செய்திகள் அவர்களுடைய கற்பனைத்திறனை உணர்த்துவதற்குரிய அடையாளங்களுள் ஒன்றாகும். இங்ஙனம் வேறொரு குறிப்பை ஏற்றிக் கூறுவதைத் தற்

638—C

குறிப்பேற்றவணி யென்பர். இம்முனிவருடைய செய்யுட்களில் அவ்வணி பலவிடங்களில் அமைந்துள்ளது.

ஸ்ரீ மீனாட்சியம்மை உதித்தற்குரிய பெருமை சந்திரவம்சத்திற்கு உண்டானதை உன்னிச் சூரியன் முழுவெப்பத்துள் மூழ்கினன் (13) என்பதில், சூரியனது வெப்பத்திற்குக் கவிஞர் வேறு காரணம் அமைக்கின்றார், மேருமலையைச் சிவபெருமான் வளைத்தனரென்னும் செய்தியை இவர், "தியாகர் தடம்புயத்தின் சீர்பெற்றிலேமென்று நாணால் வணங்கிச் சிலையெனவும் பேர்பெற்றது" (311) என்று தம் குறிப்பையேற்றிச் சிலேடை நயமும் பொருந்தக் கூறுகின்றனர். வெண்ணிலாவென்பதைச் சந்திரனது கிரணமென்று நாம் எண்ணி யிருப்ப, இவர் அதனை மறுத்து, "சிவபெருமான் சடைமேலுள்ள சந்திரன், அன்னப்பறவையின் உருவெடுத்தும் அச்சடாமுடியை அடையமுடியாத பிரமதேவரை நோக்கி நகைக்கும் நகையையே இவ்வுலகம் அறியாமையால் நிலாவென்று சொல்கின்றது" (338) என்பர்; இங்ஙனமே சிவபெருமான் அணிந்த நகுதலை பிரமனைப் பார்த்து நகைப்பதாக மற்றோரிடத்திற் கூறுவர் (637.)

தலச்செய்திகளைத் தற்குறிப்பேற்ற அணியமையக் கூறும் செய்யுட்கள் பல:

திருவாரூரிலுள்ளார் யாவரும் சிவகணங்களாகத் தோற்றுவரென்பது புராணவரலாறு; அவர்கள் தம் கையிலே மழுப்படையை வைத்திருப்பது, "இங்கே பிறந்தார் இனிப்பிறவார்" என்று மழுவேந்திச் சத்தியம் செய்வது போல விளங்கும் (337) என்பர்; "திருவாரூர் ஸ்ரீவன்மீகநாதர் ஒரு புற்றிற் குடிகொண்டார்; பாம்பைப் பூணாக அணிந்தார்; விடத்தையும் உண்டார்; இவ்வாறு அவர் அச்சமின்றிப் பாம்பு முதலியவற்றோடு பழகிவருவது தம் பக்கத்தில் ஒரு மயில் இருக்கும் துணிவுகொண்டே" (343) என்பர்.

தியாகேசர் இருந்தாடழகரென்னும் திருநாமமுடையவர். அவர் இருந்தபடியே நடனம் செய்தருள்வதற்கு இரண்டு காரணங்களை இவர் கற்பிக்கின்றனர்; "திருவடி தூக்கி நடனம் புரியின் திருமால் முன் திருப்பதங் காணாது வருந்தியவராதலின் இப்போது தூக்கிய திருவடியைத் தரிசித்து நான் திருவடிகளைக் கண்டேனென்று பிரமதேவனைப் போலப் பொய்ச்சூள் புகல்வாரென்று கருதியோ, முன் உதைப்பட்ட யமன் தூக்கிய திருவடி கண்டு அஞ்சுவனென்று கருதியோ" (326) என்று வினவு முகத்தால் அவ்விரண்டு காரணங்களையும் புலப்படுத்துகின்றனர்.

இருந்தாடுதற்கு இவர் காரணங் கூறின், "நடராசப் பெரு

மான் ஒரு திருவடி தூக்கி நின்று நடனம் செய்தருளுகின்றனரே! அங்கே திருமால் வாராரோ?" என்று ஒருவர் வினவுதலும் கூடும்; அவ்வினவிற்கு ஏற்ற விடையையும் இவர் உணர்த்துகின்றார்; "நடராசப் பெருமான் தூக்கியது இடத்திருவடியே. அவ்வடி திருமாலின் தங்கையாராகிய உமாதேவியாருக்கு உரியது; ஆதலின் திருமால் கண்டாலும் குறைவின்றென்று தூக்கினர் போலும்" (462) என்பர். யமன்பால் தியாகேசருக்கு இரக்கம் இருப்பதாக ஐயுற்ற இவர், நடராசப்பெருமானுக்கு அவ்விரக்கம் இல்லையென்றே கருதினர்போலும்; "நமனாரே, ஜாக்கிரதை! என் பக்கத்தில் வாரற்க. அப்படி வந்தால் உம்முடைய பேரும் ஒழிந்துவிடும். நடராசப் பெருமான் உமக்குரிய தென்திசையை நோக்கி ஒரு திருவடியைத் தூக்கி நடனம் புரிவதன் உட்கருத்தை நினைவில் இருத்துவீராக" (466) என்று இவர் நமனை அச்சுறுத்துகின்றார். நடராசப் பெருமான் குஞ்சிதபாதத்தின் வளைவு இயல்பாக அமைந்ததன்றாம்; அரிபிரமர் முதலானோர் முடிகொண்ட தலைவணக்கின் வளைவெல்லாம் அவ்விடத்தாளிற் சேர்ந்து அப்படியாயிற்றாம் (544.) அப்பெருமான் நடனம் புரியும்போது ஒருகால்காட்டிக் கையமைத்துப் பாதத்தைச் சுட்டிச் செய்யும் அபிநயங்களுக்கு இவர் "ஒருகாற் கும்பிட்டாற் கதி கூடும்" என்று குறிப்பதாகப் பொருள் உரைக்கின்றார் (480.)

## வேற்றுமை வகை

வேற்றுமையணி அமைய இவர் கூறும் கற்பனைகள் சில.

"சிவபெருமான் ஐம்பொறிகளாகிய அரவுகளை ஆட்டுவிக்கும் சித்தர்; அவரை ஒரு பாம்பு தில்லையில் ஆட்டுவிக்கின்றது" (456) என்று பதஞ்சலிக்கு ஆடிய பரமநாடகத்தை இவர் பாராட்டுகின்றார்; இதனையே வேறுவகையாகச் சிலேடையணியும் அமைய, "சென்றவரைத் தாமாக்கும் நடராசப்பெருமானைப் பதஞ்சலியார் பதஞ்சலியாராக்கினர்" (471) என்பர். "பாம்புக்குச் சந்திரன் அஞ்சுவது இயல்பு; ஆனால் சிவபிரான் திருமுடியிலுள்ள சந்திரனோ அஞ்சுவதில்லை; அத்தகைய அது இறைவி நறுநுதலைக்கண்டு அஞ்சுகின்றது. சிவபிரான் திருக்கரத்திலுள்ள மான் காற்புலி (வியாக்கிரபாதர்) க்கு அஞ்சுவதில்லை; இறைவி விழிமானைக் கண்டு அஞ்சுகின்றது" (486) என்று முரண்பாடான இயல்புகளைக் கூறுகின்றார்.

தம் ஆசிரியராகிய மாசிலாமணி தேசிகருடைய பெருமையைப் பலவகையிற் பாராட்டிப் பரவும் இம் முனிவர் அவருடைய திருநாம

சம்பந்தமாகவே பல கற்பனைகளை அமைக்கின்றனர். அந்த மாசிலாமணிக்கும் பிற மணிகளுக்கும் இன்ன இன்ன வேறுபாடுகள் உண்டு என்று நயம்பெறப் பல செய்திகளை இயம்புகின்றார்.

கடலில் வந்த சிந்தாமணி கருதியவற்றையே நல்கும்; இம்மணி கருத்துக்கு எட்டாத பேரின்பத்தை நல்கும் (572.) உலகிலுள்ள மணிகளை மிகவும் முயன்று பெறவேண்டும்; இந்த மணியைச் சும்மா இருந்தாரே பெற்றார் (524.) அந்தமணிகள் தம்மைக் கைக்கொண்டவர்களுடைய பொருளாகும்; இதுவோ கொண்டவரைத் தான் கொண்டு ஆளும் (575) அவை பல பஞ்சு நூல்களிற் கோக்கப்படுவன; இது தமிழ்நூலிற் கோக்கப்படுவது (580.) மணி மந்திர மருந்து மூன்றினாலும் தீராத பிறவிநோயை இந்தமணியொன்றே தீர்த்துவிடும் (587.) மற்ற மணி பாம்பின் முடிமேல் இருக்கும்; இது தன் முடிமேற் பாம்பைக் கொண்டிருக்கும் (592.) மற்ற மணிகள் பொன்கொடுத்துக் கொள்வன; இதுவோ உடல் உயிர் பொருள் மூன்றையும் கொடுத்துக் கொள்வது (595.) இத்தகைய கருத்துக்கள் உள்ளத்திற்கு இன்பமூட்டுங் கற்பனைகளாகத் திகழ்கின்றன. சைவசித்தாந்தக் கருத்துக்களை யமைத்து ஒன்றற்கொன்று மாறுபாடாகத் தோற்றும் வண்ணம் சில செய்திகளைக் கூறுவர் (583, 586.)

நரை வந்ததென்றும் பிணி மூண்டதென்றும் மரணம் வருமென்றும் உலகிலுள்ளார் அஞ்சுதல் இயல்பு; அங்ஙனம் அஞ்சாமல் அவற்றை மகிழ்ச்சியோடு எதிர்நோக்குவாரும் உளரென்றால் நமக்கு ஆச்சரியமாகத் தோற்றும்; இந்த முரண்பாடான நிகழ்ச்சியைக் காசியிலே காணலாமாம்;

"படுத்த பாயுட னேபிணி.........காசியே" (623),
"நரைமு திர்ந்தன.........காசிநன் னகர்தானே" (666)

என்பவற்றில் இக்கருத்தைக் காணலாம்.

## அர்த்தநாரீசுவரர்

இவ்வாறு ஒரே செய்தியைப் பலவேறு நயம்தோற்றும்படி அமைத்துப் பல செய்யுட்கள் பாடும் இயல்பினர் இவ்வாசிரியர் அர்த்தநாரீசுவரத் திருவுருவத்தைப்பற்றிப் பல விடங்களிற், கூறுகின்றார். "ஒன்றேயுடம்பங் கிரண்டே யிடும்பங்கு" (110), "அருமையுடம் பொன்றிருகூறு" (117), "இருகூற்றுருவம்" (551) "ஒருபாதி சக்தி யொரு பாதியும்பரம சிவமெனத் தொகுத்து வைத்தவவி முத்த நாயகர்" (639) என்று இவர் அம்மூர்த்தியைப் பாராட்டுவர். "ஊடலுங்கூட லும் உடம்பொன்றிலே நிகழ்வது

வியப்பு" (126) என்பர். அம்மூர்த்தியின்பால் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட இயல்புகள் உளவாதலைச் சில இடங்களிற் கூறுகின்றார். "கண்டமட்டு மிருண்டு பாதி பசந்து பாதி சிவந்துளார்" (662) என்று நிறத்தில் உள்ள மாறுபாட்டைக் கூறினார். இன்ன நிறத்தால் இன்னார் பாகமிது வென்று தெரியாத மயக்கமும் ஏற்படுவதுண்டாம்; "சிவபெருமானது வலப்பாகம் உமாதேவியார் திருவிழிதோய்ந்து கருநிறம் பெற்றும், சிவபெருமானது பார்வை தோய்வதனால் தேவியாருக்குரிய இடப்பாகம் வேறுநிறமாகியும் தோற்றுவதால் இன்னபாகம் இன்னாருடையதென்று புகலொணாத நிலை உண்டாகின்றது" என்று இவர் கூறுவர் (312); நிறத்திலே முரண்படுவதோடு தொழிலிலும் முரண்படுதலை இவர் இயம்புகின்றார்; "ஓரேகாலத்தில் ஓரே உருவத்தில் இடப்பாகம் முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்ப்ப வலப்பாகம் இரத்தல் இந்த உலகத்தில் இல்லை; ஆயினும் இந்த வியத்தகு காட்சியைத் திருவாரூரிலே கண்டோம்" (317) என்பதில் அம்முரண்பாட்டைக் கூறுதல் காண்க. உமாதேவியார் இடப்பாகத்திலிருந்து அறம்புரியும் செய்தியை, "தியாகேசருக்குப் பெருமையோ பெயரோ இயல்பாக வந்தனவல்ல; அவர் வரந்தரும் வரதஹஸ்த முடையவரென்று கூறுவது உபசாரம். அந்த வரதம்வைத்த திருக்கரம் உமாதேவியாருடையது. அங்ஙனமே அத்தேவியார் அறம்வளர்த்தமையாலேயே தியாகரென்னும் திருநாமம் அவருக்கு உண்டாயிற்று" (323) என்னும் கருத்துப்படவரும் செய்யுளிற் குறிப்பிக்கின்றார். இவ்வாறு ஒன்றுக்கொன்று மாறுபட்ட இரத்தலும் ஈதலுமாகிய தொழில்களை ஒரு திருவுருவத்தின் பப்பாதியிலே காணும் இவர், அவ்வாறே மாறுபட்ட படைத்தலும் அழித்தலுமாகிய தொழில்களையும் அவற்றிலே காண்கின்றார்: "இப்புவனங்களை உருப்பாதி யிற்படைத்து ஓர் பாதியிற்றுடைத்து" (608) என்பது காண்க.

இலக்கணக் கவிஞராகிய இவருக்கு ஒரு சந்தேகம் வந்துவிடுகின்றது; 'சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் உருவொன்று; அவ்வுருவை ஒருத்தனென்று சொல்வதா? ஒருத்தி என்பதா?' என்று யோசிக்கின்றார். சொல்லிலக்கண முழுவதும் நினைத்துப் பார்க்கின்றார்; அப்போது,

> "ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்,
> பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப" (289)

என்னும் நன்னூல் சூத்திரம் ஞாபகத்திற்கு வருகின்றது; "ஆஹா! இந்தச் சொல்லை இலக்கணநூலாற் பெறுவிடின் எவ்வளவு திண்

டாட்டம்நேரும். இந்த ஒருவரென்னும் சொல்லும் இதன் இலக்கணமும் அர்த்தநாரீசுவரத் திருவுருவத்துக்காகவே ஏற்பட்டன வென்றல்லவோ தோற்றுகின்றது!" என்று வியக்கின்றார். அவ் வியப்பின் முடிவில் தோற்றிய செய்யுள் வருமாறு:

"அருவருக்கு .........சொல் கேனே" (535.)

சொல்லிலக்கணம் இவருக்குச் சமயத்தில் உபகாரம் செய்தது போல அணியிலக்கணம் மற்றொரு சமயத்தில் இவரைத் தர்மசங்கடத்திலிருந்து பாதுகாக்கின்றது; அங்கே இவருக்குச் சிலேடை துணையாக நிற்கின்றது. "தேவிக்கும் எம்பெருமானுக்கும் ஒரே திருவுருவம் உள்ளது. அங்ஙனம் ஒன்றுபட்ட திருவுருவத்தை நாம் எவ்வாறு விளித்துப் பாடுவது? தாயேயென்றால் எம்பெருமானைச் சாராது; தந்தையேயெனின் உமாதேவியாரைச் சாராது. அம்மையப்பாவெனின் ஒருமைபோய் இருமையாகுமே" என்று யோசிக்கிறார்; அப்போது இருவருக்கும் பொருந்தும்படி ஏதாவது சொல்லலாமே என்று ஆராய்ந்து ஒரு முடிவுக்குவருகிறார்; அந்த முடிவு பின்வரும் பாட்டிலே வெளிப்படுகின்றது;

"செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச்......
பாடுதுமே" (554.)

## நிந்தையும் துதியும்

ஒருபொருளைப் புகழ்வதுபோலப் பழித்தலும் பழிப்பது போலப் புகழ்தலும் முறையே ஸ்துதிநிந்தை, நிந்தாஸ்துதியென வழங்கும். இவ்விரண்டும் இலேசவணியின்பாற் படும். செல்வமுடையார் இயல்புகளைக் கூறவந்த இவர்,

"இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப" (218)

என்று உலக இயல்பைக் கூறினர். பின் அவ்வியல்பை நியாயமெனக் காட்டுவார்போல,

"பெரிதுந்தாம், முற்பக லோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று"

என்கின்றார். ஆயினும் அவர்கருத்து அங்ஙனம் செய்தல் பேதைமை யென்பதுதான்.

"கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை" (227)

என்றார்; அந்த வெற்றுரைக்கு எத்தகைய வலியுடைமை யுண்டாக முடியுமென்று நாம் யோசிக்கும்போதே,

"...............சொற்றநீர்
இல்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்"

என்று பின்பாதிச் செய்யுளையும் கூறி நம்மைத் திகைக்கவைக் கின்றார். இவையிரண்டும் ஸ்துதி நிந்தையின்பாற்படும்.

சிவபெருமான் பதஞ்சலி வியாக்கிரபாதருக்கு அருளியதையும் கண்ணப்பருக்கு அருளியதையும் உமாதேவியாரைக் கொண்டு முப்பத்திரண்டு தருமங்களை வளர்ப்பித்ததையும் இழிவுக் குறிப்புப்படக் கூறுகின்றார் (464.)

காசியிலே இறப்பவர் சாரூபம் பெறுவரென்னும் செய்தியை இவர் அகப்பொருள் நயமும் அணிநலமும் பெறப் பலவகையி லெடுத்தமைக்கின்றார். "இந்தக் காசியிலே முத்தியை விரும்பி வந்தவர்களுக்கு முடைத்தலையும் எலும்பும் சாம்பலுமே கிடைக் கின்றன. வேறு ஒன்றும் சித்திப்பதில்லைபோலும்; கேவலந்தான் பலமாகப் பலித்தது" (681) என்பதில் சொல்லளவிலே இகழ்ச்சி தோற்றினும் சாரூபமும் முத்தியும் பெறுவரென்பதே கருத்து. "இன்பத், தேனென் றடைந்தவர்க் குண்ணக் கிடைப்பது தீவிடமே" (683) என்பதிலும் சாரூபப் பேற்றையே கூறினார். இங்ஙனம் வருவன வெல்லாம் நிந்தாஸ்துதிகளாகும்.

## நிதரிசனம்

இயல்பாக நிகழும் நிகழ்ச்சிகளாற் சில செய்திகள் புலப்படுவ தாகக் கூறுதலை நிதரிசனவணியின் பாற்படுத்துவர். அங்கயற்க ணம்மை ஊசலாடும்போது சிவபிரான் சித்தத்தை இடங்கொண்டு ஆடுகின்றாளென்பது புலப்படுகின்ற தென்கின்றார். எங்ஙனம் புலப்படுமென்பதை,

"கங்கைமுடி......யெடுத்துரைப்ப" (97)

என்னும் செய்யுட்பகுதி தெரிவிக்கின்றது.

"கொடியா ரெத்துணைக் கொடுமை செய்யினும்
மதியார் செய்திடு முதவியை யுணர்த்தும்"

காட்சியொன்றை இவர் வருணிக்கின்றார்; "வானளவும் உயர்ந்த கொடிகள் சந்திரமண்டலத்தைப் போழ்ந்து அதன் வயிற்றைக் கிழிக்க அம்மதி அமுதத்தை வழங்கி அக்கொடிகள் வெயிலிலிருந்த வெப்பத்தை ஆற்றியது" (317) என்பதுவே அது. இங்கே கொடி யார் மதியார் என்னும் இரண்டுசொற்களையும் கொடியவர், அறி வுடையவரென்னும் பொருளுந் தோன்றவைத்தார்.

## பிற அணிகள்

புணர்நிலையணி (84, 97), திரிபதிசயம் (86, 327, 372-3, 403, 680), சொற்பின் வருநிலை (92, 139, 540), சொற்பொருட் பின்வரு நிலை (116, 149, 171, 206, 342, 361), வேற்றுப்பொருள் வைப்பு (158, 316), ஒப்புமைக் கூட்டம் (212, 233, 248), ஒட்டு (244), பரி வருத்தனை (337, 448), உறுப்புக்குறை விசேடவணி (182, 682) முதலிய அணிகள் அங்கங்கே அமைந்துள்ளன.

## சிலேடைவகை

பலவகைச் சிலேடைகளை இம்முனிவர் ஆண்டுள்ளார்.

குண்டுநீர்ப் பட்டத் தொண்டுறைச் சங்கமும்
வண்டமிழ்க் கடலின் றண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று காவியங் கற்றுச்
சித்திரப் பாட்டிய றேர்ந்தன செல்லும்" (191)

என்பதில் வயலிலுள்ள சங்கம், தமிழ்ச்சங்கம் என்பவற்றின் தொழில்களைச் சிலேடையால் உணர்த்தினார்.

"நவ்வியங்கண் மானுமானு மினிதுகந் திடங்கொள்வார்
நஞ்சமர்ந்தென் னெஞ்சமார்ந்து நனிகளங் கறுத்துளார்
கைவிளங்கு குன்றுமன்றுங் கோவிலாக் குனித்துளார்" (193)

என்பதும் அத்தகையதே.

" காதன் மகளிர் கலக்கக் கலக்குண்டு
பேதுற்றார் நெஞ்சும் பிழைத்தகன்றார் நன்னெஞ்சும்
போதம் படரும் புலியூரே" (497),

" பாவலரு நாவலரும் பண்மலரக் கண்மலரும்
காவலரு மேடவிழ்க்குங் காசியே " (631)

என்பவை அங்ஙனமே இருபொருட்சிலேடைகளாக அமைந்துள்ளன. இவ்விரண்டும் சிலேடைவெண்பா வென்னும் நூலிலமைந்த செய்யுட்களைப் போல்வன.

சொக்கலிங்கப் பெருமானிடத்தில் மால்பூண்ட தலைவியின் வருத்தத்தைக் கண்ட தோழியொருத்தி, "பழியஞ்சியாராகிய இக்கடவுளுக்கு வறிதே ஒரு பெண்பழி வந்துவிட்டதே" என்று கூறுகின்றாள். அப்பால் அங்ஙனம் வந்ததற்குக் காரணம் ஆராய்ந்து கூறுவாள் போல,

"......................அந்தோ,
அடியிடுமுன் னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடியிடமாப் போந்த குறை" (158)

என்கின்றாள். இது காக்கை இடமாகப் போன நிமித்தத்தால்

வந்த குற்றமென்றும், இடப்பாகத்திலே பூங்கொடிபோல்வாளாகிய ஒருத்தி இருத்தலால் வந்த குற்றமென்றும் இருவகைப் பொருள் தோற்றின. இதில் சிலேடையணி வேற்றுப்பொருள் வைப்பணியோடு சேர்ந்து வந்தது.

## தொனிவகை

ஒரு செய்தியைச் சொல்லுமிடத்து வேறொரு பொருளும் உடன்தொனிக்கும்படி பாடும் ஆற்றலும் இம்முனிவர்பால் உண்டு.

பாற்கடலைக் கடைந்த காலத்தில் தோற்றிய ஆலகாலவிடத்தைக்கண்டு தேவர்கள் அஞ்சி நடுங்கச் சிவபெருமான் அதனை எடுத்துண்டு தேவர்கள் இடையூறின்றி அமுதமுண்ணும்படி செய்வித்தனரென்ற செய்தியை ஓரிடத்திற் கூறுகின்றார். அங்கே ஆலகாலவிடத்தை,

> " துழாய்முடித் தீர்த்தனொ
> டெவரு மதித்துப் பராபவத் தீச்சுட
> அமுதுசெய் வித்திட்ட போனகம் " (6)

என்கின்றார். நஞ்சைப் போனகமென்று கூறவந்தவர், 'தீ மூட்டிச் சமைத்து உணவளித்தவர்' என்ற ஒருபொருள் உடன் தோற்றும்படி 'தீச்சுட அமுது செய்வித்திட்ட போனகம்' என அமைக்கின்றனர்.

சிவஞானத்தைக் களிறாக உருவகம் செய்யவந்தவர்,

> " துதிக்கையினாற் பஞ்சமலங்
> காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்" (1 : 70)

என்று யானைக்குரிய துதிக்கை யென்னும் உறுப்பின் பெயர் தோற்றும்படி அமைத்தார்.

புதிய கிரணங்களையுடைய பூரண சந்திரனென்பார்,

> " புது வெண்கலை யுடுத்துமுழு மதியென வுதித்தவமயத்து" (66)

என்கின்றார். இங்கே புதிய ஆடையை உடுத்த மதியென வேறொரு பொருளுந் தோற்றியது. அம்மானை, இடைச்சியார், சித்து, சம்பிரதம், களி என்ற கலம்பக வுறுப்புக்களில் இவ்வாறு அமைந்த தொனியைப் பரக்கக் காணலாகும். ஒரு செய்தியைத் தாம் கூறப் புக்க கருத்துக்கு ஏற்றவகையில் தொனிக்கும்படி அமைக்கும் சதுரப்பாட்டை இச்செய்யுட்களிற் காணலாம். இவரியற்றிய இரண்டு பிள்ளைத்தமிழ்களிலுமுள்ள அம்புலிப்பருவங்களில் சந்திரனுக்கு ஒப்பும் இழிவும் தோற்றும்படி சொற்றொடரமைத்தலைக் காண்க (65, முதலியன.)

தேவர்கள் சந்திரகிரணத்தை உண்ணுவரென்று கூறுதல் மரபு. இதனை இவர்,

"பொங்கமுத மமுதா சனர்க் குதவினாய்" (413)

என்பதில் செய்தியளவிற் சொல்கின்றார்.

"ஓர் கலைமதிக் கலசவமுதுக் கிரைக்கும்
பெருந்தேவர்" (74),

"சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்" (412)

என்பவற்றில் சிறிது உயர்வு தோற்ற இச் செய்தியை யமைத்தார். இதே செய்தியைச் சந்திரனுக்கு இழிவு தோற்றும்படியும் இவர் அமைக்கின்றார்;

"குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த கோது" (65)

என்பதில் இவர் சொல்லாற்றலைக் காணலாம். ஒரே செய்தியைப் புகழ்ச்சியாகவும் இகழ்ச்சியாகவும் தோற்றும்படி செய்யும் இப் புலவருடைய சதுரப்பாடு வியத்தற்குரியது.

சிவபெருமான் சுந்தரபாண்டியராக எழுந்தருளியபொழுது தமக்கு இயல்பாகவுள்ள மாலை, கொடி, ஆபரணம் என்பவற்றைத் துறந்து பாண்டியர்களுக்குரியவற்றை ஏற்றருளினரென்ற செய்தியைப் பல புலவர்கள் பலவிடங்களிற் சொல்லியுள்ளனர். ஆயினும் இவர் அதனைக் கூறும் முறை நயம்பெற விளங்குகின்றது. முன்னை யணி முதலியவற்றைத் துறந்ததனால் அவை துன்புற்றன வென்று ஒரு பொருள் தோற்றும்படி இவர் அச்செய்தியை அமைக்கின்றார். சுந்தரபாண்டியர்,

"பொன்பூத் தலர்ந்த கொன்றைபீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு திருமுடிச் சூடி" னரென்கின்றார்.

பிரிவினால் கொன்றையானது பசலை பூப்பவென்ற ஒரு பொருள் தோற்றவைத்தார்; ஆயினும், பொன்னிறம் பூப்பவென்ற அதன் உண்மையியல்பைக் குறிக்கும் பொருளும் அதில் உள்ளது. இவ்வாறே,

"அண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போற் பிறழுங் கெண்டைவல னுயர்த்து
வரியுடற் கட்செவி பெருமூச் செறியப்
பொன்புனைந் தியற்றிய பைம்பூண் டாங்கி" (105)

என்னும் பகுதியில் திருமால் மண்ணுண்ட செய்தியையும் பாம்பு இயல்பாகவே பெருமூச்செறிவதையும் சிவபிரானுடைய பண்

டைக் கொடியும் பாம்பும் முறையே மண்ணையுண்டு பயனற்றொழிந்தது, ஏக்கத்தாற் பெருமூச்செறிந்தது என்னும் கருத்துத் தோற்றும்படி அமைக்கின்றார்.

இந்த அமுதம்போன்ற தலைவிக்கு பரிகாரம் ஒன்றும் இல்லை என்ற தோழி கூற்றை,

"மாற்றொன் றிலையென் மருந்துக் கந்தோ" (109)

என்று சமற்காரமான சொற்றொடர்களிலே யமைக்கும்போது மாற்று, மருந்து எனத் தொடர்புடைய பொருள் இரண்டன் பெயர்கள் ஒருங்கே தொனிக்கின்றன.

"பரமசிவம் தனக்கென்று ஒருவரையறை யில்லாதது; எவர்க்கும்பொது" (331) என்னுங் கருத்தை விளக்கவந்தவர் சிதம்பரத்திலும் திருவாரூரிலும் சிவபிரான் எழுந்தருளியிருத்தலை அக்கருத்துக்கு உபகாரப்படும் வகையில் அமைத்து,

"எல்லோர்க்கும் பொதுவினிற்கும்
மதுவேய் மலர்ப்பொழி லாரூ ரினும்வைகும்"

என்கிறார். இதில் பொதுவென்பது சிதம்பரத்தையும் ஆரூரென்பது திருவாரூரையும் குறித்து நிற்பினும், யாவருக்கும் பொதுவாக நிற்கும், யாருடைய ஊரிலும் தங்குமென எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ற பொருளொன்றையும் தோற்றுவித்தல் காண்க.

'சாஸ்திரங்களின் முடிவான நிலையிலே இறுதிப் பொருளாக முடிந்து நிற்போய்' என்ற பொருள்பட முருகக்கடவுளைப் பாராட்ட வந்த இவர்,

"கலைமுடிவின் முடிந்திடு மொழுகொளி மரகதமே" (378)

என்றார்; 'ஆடையின் தலைப்பில் முடிந்து கொள்ளப்படும் மரகதமே' என்று மற்றொரு பொருளையும் இது தோற்றுவித்தது. இத்தகைய பிரயோகங்கள் பலவற்றை அங்கங்கே காணலாம்.

## உருவகவுவமைகள்

உருவகவணியும் உவமையணியும் இவர் செய்யுட்களில் நன்கு அமைந்து இவரது புலமைத்திறத்தை விளக்குகின்றன. கந்தர் கலி வெண்பாவில் இருநிலமே சந்நிதியா நிற்குந் தனிச்சுடருக்கு யானெனதென் றற்ற இடமுதலியவற்றைத் திருவடி முதலியனவாக உருவகம் செய்கின்றார் (1:34-6); முருகக்கடவுள் அத்துவாக்களின் நிலையே தம் வடிவமாக நிற்கும் நிலையை விரித்து மந்திர முதலியவற்றைச் சோரி முதலியனவாக உருவகம் செய்கின்றார் (1:60.) அம்பிகை அண்டங்களையுண்டாக்கும் செயலைச் சிற்றில்விளையாட்டாக ஒரு செய்யுளில் உருவகிக்கின்றார் (16.) இளமையை நீர்க்குமி

பூியாகவும் செல்வத்தை அலைகளாகவும் யாக்கையை நீரிலெழுத்தாகவும் (207.) உருவகம் செய்கின்றார். கல்வி, கவித்துவம், செல்வம் என்பவற்றை முறையே ஒருவனுக்கு மனைவியாகவும் புதல்வனாகவும் செல்வமாகவும் உருவகஞ் செய்கின்றார் (210.) வண்மையுடையாரைக்கற்பகதருவாக உருவகம் செய்து அவருடைய கண்ணோக்கை அரும்பாகவும் நகைமுகத்தை மலராகவும் இன்மொழியைக் காயாகவும் வண்மையைப் பழமாகவும் அமைத்து அதனை முற்றுருவகம் ஆக்குகின்றார் (243.)

'நான் யமவாதனைக் குட்படாது நின் அருளால் முத்தியின்பம் பெறவேண்டும்' என்னும் கருத்தை விரித்து; "யமனென்னும் பெயருடைய கொடுந்தொழிலையுடைய வலைஞன் யாக்கையாகிய உவர்நீர்க் கேணியில் அறிவாகிய தலையையுடைய உயிராகிய மீனைத் துன்புறுத்திப் பிடிக்கும் இயல்பினன்; அதற்காக வாத பித்த சிலேட்டுமமென்னும் மூன்று தலையையுடைய தூண்டிலை வைத்து அதன்கண் உள்ள வாழ்நாளாகிய மிதப்பிலே கண்வைத்துப் பல்லைக் கடித்துக்கொண்டிருக்கின்றான்; அவன் தன்னுடைய முயற்சி வீணாகி விட்டதென்று ஏமாற்றமடையும்படி அந்த உயிராகிய மீனத்தை அருட்பெருங்கடலிலே பாயும்படி வைத்துப் பரமானந்தத் திரையொடு முலாவிப் பெருமித மெய்தும்படி திருவருள் நோக்கம் பாலிக்கவேண்டும்" (321) என்று உருவக அணிநலம் பட அமைத்தனர். சிதம்பர மும்மணிக்கோவையில் ஒரு செய்யுளில் ஆணவத்தைச் சேரிப்பரத்தையாக வைத்து அதற்கேற்ப அவ்வுருவகத்தைச் சைவசாஸ்திர கருத்துக்கள் அமைய விரித்துள்ளார் (479.) ஞானசிரியனை உழவனாக உருவகம் செய்து அவ்வுருவகத்தை மிக விரிவாக அமைத்தனர் (576.)

**உவமையணி**யின் பலவகைகளை இவர் அமைத்திருக்கின்றனர். இயற்கைப் பொருள்களுக்கேற்ற உவமைகளைக் கூறுகின்றனர். வெண்கடப்ப மலருக்குத் துகிலும் (73), கோங்கமலருக்குப் பொற்கிழியும் (73), பாம்புக்குக் காந்தளும் (637), தாமரையிலைக்கு மரகதத் தகடும் (567), அதன் மலருக்கு மாணிக்கமும் (567), கொன்றைக்குப் பொன்னும் (537) உவமையாக எடுத்துரைக்கின்றனர். சைவசாஸ்திரக் கருத்துக்களையும் நீதியையும் உவமையாக எடுத்தாள்கின்றார் (76, 471, 588.) நீதிநெறி விளக்கத்திற் பல நீதிகளை உவமையினால் விளக்குகின்றார் (214, 223, 261, 262, 265, 267, 301.) ஒரு பொருளுக்கு ஒரு பொருளை உவமை கூறுதலைச் சில விடங்களிற் காணலாம்; "பிறரை வஞ்சித்து எளியாரது உடைமை கொள்வாருடைய செல்வம் மகளிர் நகில்போலப் பெருத்தாலும்

அவர்கள் இடைபோலத் தேய்ந்துவிடும்; (269) என்பர்; தலையா யார், இடையாயார், கடையாயார் ஆகிய முத்திறத்தினருடைய செல்வங்களுக்குப் பொதுமகள், குலமகள், கைம்பெண் என்பார் நலத்தை உவமை கூறினர் (272); இவை ஓரினமாகிய பொருளுக்கு ஓரினமாகிய உவமையாதல் காண்க.

சிவபெருமானது திருமுடிக்கு ஏனற்புனத்தை ஒரு செய்யு ளில் உவமையாக்குகின்றார்; "கமலேசரது வேணியிலுள்ள தலை புனத்தில் பறவைகளைப் பயமுறுத்த வைத்த தலைபோலும். கங்கை அப்புனத்தில் தினைக்காவல்புரியும் குறமகள் போல்வாள். பிறை அவள் கைக்கொண்ட கவணை ஒக்கும்" (335) என்பது அவ் வுவமையின் விரி.

அத்திருமுடிக்குத் தட்டான் பட்டறையை மற்றொரு செய்யு ளில் உவமை கூறுகின்றனர்:

"கமலைப்பிரான் சடாடவி நெருப்பை ஒத்தது. கொன்றை மலர் அந்நெருப்பில் இட்ட பொன்னை ஒத்தது. அதனை மொய்க்கும் வண்டுகள் நெருப்பில் இட்ட கரியை ஒத்தன. கங்கை ஆபரணம் செய்விக்கும் பெண்ணை ஒத்தாள். பிறை அதனைச் செய்யும் கிழத் தட்டானை யொத்தது" (347.)

## சொல்லணிகள்

இவருடைய வாக்கில் மடக்கு முதலிய சொல்லணிகளும் விரவி வந்துள்ளன. அவற்றுட் சில வருமாறு:

மடக்கு:

"சுடர்ப்பருதி பருதிக் கொடிஞ்சி மான்றேர்" (49),
"சாவமே தூக்கிற் சமனுஞ் சமனன்றே",
"களனுங் களனு வருளா" (175),
"சிலை சிலை யாக்கொண்ட தென்மதுரேசர்" (177.)

இன்னும் விரிவான மடக்குகளை 130, 142, 159, 162, 330, 561, 578, 628, 628, 689, 692, 697 - ஆம் செய்யுட்களிற் காணலாம்.

'ஞானாசிரியரை அடைந்து சீவபோதம் நீங்கப்பெற்றுச் சிவ போத மடைந்தேன்' (589) என்னும் கருத்தை யமைத்து,

"......................நற்கமலை
ஊரிற் குறுகினே னோர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின்"

என்று ஒரு செய்யுளமைத்தார். சீவனென்பது ஒரு மாத்திரை குறைந்தால் சிவனெனவாகும். இது மாத்திரைச் சுருக்கமென்னும் சொல்லணி.

## சமற்காரமான விண்ணப்பம்

வேறு பலவகையான சமற்காரம் பொருந்திய செய்யுட்களை இவர் இயற்றியுள்ளார். அவற்றை வகைப்படுத்தித் தனித்தனியாக ஆராய்ந்தால் மிக விரியுமாதலின் சில உதாரணங்கள் மாத்திரம் இங்கே எடுத்துரைக்கப்படும்.

சிவபெருமானை நோக்கி, 'தேவரீர் இன்னது செய்தல் தகாது; இன்னது செய்தல்வேண்டும்' எனச் சில காரணங் காட்டி இயம்புகின்றனர். "அங்கயற்கண்ணம்மை நாணத்தால் தலைகவிழ்ந்து நிற்பச் சொக்கநாதர் ஊர்தோறுந் திரிந்து முடைத்தலையிற் பலிகொள்ளுதல் அழகன்று" (108) என்பர். "பிரமன் தலைகளைச் சிரத்தில் மாலையாகவும் திருமால் தலைகளைப் பாதத்திற் கிண்கிணியாகவும் அணிதலை இனித் தேவரீர் ஒழிக. இல்லையெனின் முறையே அவ்விருவரும்தேவரீருடைய முடியையும் அடியையும் கண்டுவிட்டதாகப் பொய் கூறப்புகின் அதற்கு அத்தலைகளே சான்றாகும்" (324) என்பர். "தில்லைவாண! திருமால் அமளியும் இடமுமின்றி நின்வாயிலில் நெடுநாள் வைகினராதலின் அவருக்கு அவற்றை அளிப்பாயாக" (557) என்றார்; அவையிரண்டும் அவர் இழந்தமையை, "ஆதிசேடனாகிய அமளியைப் பதஞ்சலியாக்கி நின் அருகில் வைத்துக்கொண்டாய்; அத்திருமாலினுடைய பாற்கடலாகிய இடத்தை வியாக்கிரபாத முனிவர் புதல்வராகிய உபமன்யுவுக்கு அளித்தாய்; அதனால் படுக்கையும் இடமுமின்றி அவர் இருந்தனர்" என்று எடுத்துக் காட்டுகின்றார்.

சிவபெருமானைப் பட்சபாத முடையவரென்று சில செய்யுட்களிற் கூறுகின்றார்: "உன் திருமுடியைக் கங்கையாகிய பெண்ணுக்கும், இடப்பாகத்தை உமாதேவியார்க்கும் வழங்கினை; இந்தத் தலைவிக்குமாத்திரம் உன்புயத்தை வழங்கினையல்லை. பொதுவில் நின்ற உனக்கு நடுநிலையின்மை எங்ஙனம் வந்தது?" (155) என்பது ஒரு தோழிகூற்று; "உமாதேவியும் நீயும் முருகக்கடவுளைமாத்திரம் மடித்தலத்து இருத்தி முத்தாடி உள்ளம் நெக்குருக மோந்தணைத்து உவக்கின்றீர்களே; உலக மெல்லாவற்றையும் பெற்ற உங்களுக்கு அவ்வொருவனிடத்து மாத்திரம் ஆதரவு பிறக்கும் பட்சபாதம் வந்தது எப்படி?" (205, 671) என்று இவர் வினவுகின்றார்.

## வேறுபொருள் கற்பித்தல்

சில சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் இயல்பான பொருளொன்று இருப்ப வேறுபொருளொன்றும் கற்பித்து அதற்கேற்ற செய்திகளை அமைப்பர்:

திருவாரூருக்குக் கமலாலய மென்பது ஒருபெயர். திருமகள் தவம்புரிந்து வாழ்ந்தமையின் அதற்கு அப்பெயர் உண்டாயிற்று. அத்தலத்தை மண்மகளின் இருதயகமலமென்றும் வழங்குவர். மண்மகளின் இருதய கமலமாகிய ஆலயமாதலின் கமலாலயமென்னும் பெயர் வந்ததென்று இவர் வேறுபொருள் விரிப்பர் (316.)

வைத்தீசுவரன் கோயிலுக்கு வேளூரென்பது ஒரு பெயர்; முருகக்கடவுள் பூசித்தலின் அதற்கு அப்பெயர் வந்தது. இவர் அதற்குக் காமனது ஊரென வேறுபொருள் கற்பித்து அதற்கேற்ற காரணத்தை,

> " கஞ்சத் தவிசிற் றிருவன்னார் கடலந் தானைக் கைந்நிமிரக்
> காமன் படைவீ டெனப்பொலியுங் காட்சி யானு மப்பெயரிட்
> டஞ்சொற் றமிழோர் புகழ்வேளூர் " (408)

என அமைக்கின்றார்.

மாசிலாமணி தேசிகரென்னும் தம் ஆசிரியது இயற்பெயருக்கு ஒரு காரணங் கற்பித்து, " சிவபெருமானாகிய கடவுள் மாமணிக்கு மிடற்றில் ஒரு மாசு உண்டு; அந்த மாசு இல்லாமல் எழுந்தருளின திருக்கோல மாதலின் மாசிலாமணி யென்னும் திருநாமம் வந்தது " (570) என்பர். மூன்று கரணங்களென்னும் பொருளையுடைய தம்முடைய திரிகரணங்கள் திரிந்த கரணங்களென்னும்பொருளுக்கும் ஏற்ற இயல்பையுற்றனவென்றமைத்து, " இதுகாறும் அவகரணங்களாக இருந்த அவை ஆசிரியருடைய தொண்டில் ஈடுபட்டுச் சிவகரணங்களாகத் திரிந்தன; ஆதலின் அவற்றைத் திரிகரணங்களெனக் கூறல் தகும் " (588) என்பர்.

## பிற சமற்காரங்கள்

சிவபெருமானது பரத்துவத்திற்குத் திருமால் அவரை இடபமாகத் தாங்குவதே சான்று என்பார் அதனை மடக்கணிபட,

> " நல்லார் தொழுங்கமலை நாதனே நாதனெனக்
> கல்லாதார் சொல்லுங் கடாவிற்கு—வெல்லும்
> விடையே விடையாக மெய்யுணரா ரையுற்
> றிடையே மயக்குமிது வென் " (330)

என்பர்.

' சிவபெருமானால் உதைபெற்ற நமன் பெரிய தவமுடையவன் ' என்று ஒரு செய்யுளிற் கூறுகின்றார். அதைச் சுவைபெற நிறுவத் தொடங்கி, " தேவரீருடைய அடிமுடியைத் தேடிக்காணாமல் நிற்கும் தேவர்கள் இருப்ப, தொண்டரோடு பகைத்தேனும் தேவரீர் திருப்பாதங் கண்டு புகழடைதலின் அவன் தவம் பெரிது " (341) என்கிறார்.

திரிபுரங்களைச் சிவபெருமான் நகைத்தெரித்த செய்தியை இவர் நகைச்சுவைபடப் புலப்படுத்துகின்றார்; "தில்லைவனத்தீசரே, நீர் என்ன காரியஞ் செய்தீர்? சிரிக்கத்தான் சிரித்தீர்! அந்தச் சிரிப்பை முதலிலே சிரித்திருக்கக் கூடாதா? பாம்பை நாணாக ஏற்றிப் பொன் மலையைத் தோள் நோவ வளைத்துப் பிறகு அவற்றைப் பயன்படுத்தாமற் சிரித்தீரே" (477) என்கின்றார். இதிற் பேதைமைபற்றி வந்த நகைச்சுவை தோற்றியது. இதைப்போன்ற கருத்தொன்றைச் சற்று விரிவாக 502-ஆம் செய்யுளில் அமைக்கின்றார்.

"சிவபெருமான் பரசும் பினாகமும் சூலமும் திருக்கரத்திலே சுமந்துகொண்டிருக்கிறாரே; அவற்றால் அவருக்குப் பயன் ஏதாவது உண்டா? முன்பு மன்மதசங்காரஞ் செய்தார்; அதற்கு அவர் நெற்றிக்கண்தான் பயன்பட்டது; திரிபுரதகனம் செய்தது அவருடைய நகை; பிரமன் தலையைக்கொய்ததோ அவருடைய கைந்நகம்; யமனை உதைத்ததோ அவருடைய திருவடி; இப்படி அவர்செய்த பராக்கிரமங்களில் ஒன்றுக்காவது இவை உபயோகப்படாமல் இருப்பவும் இவற்றை அவர் தம் திருக்கை சிவக்கும்படி எதற்காகத் தூக்கிக் கொண்டிருக்கின்றார்!" என்னும் பொருளுடையது அச்செய்யுள்.

திருமால் சிவபிரானது சத்தியென்பது சைவநூற் கொள்கை (573); இதனை நினைந்து,

"பூந்தண் பசுந்துழாய்ப் போது நறுவிரி
தேந்தண் டிரடிண்டோட் டேவற்குந் தேவிக்குங், காந்தன்" (492)

என்று சிவபெருமானை இவர் சமற்காரமாகக் குறிக்கின்றார். பிறிதோரிடத்தில், "மதுரேச, நின் திருவுருவம் ஆணும்பெண்ணுமாகிய ஈருருவும்ஒருருவாய் இயைந்தமைந்தது வியப்பு;துழாய்மாலையணிந்த திருமால் திருமகளுக்கும் நிலமகளுக்கும் கணவராக இருப்பதோடு நினக்கு மனைவியாகவும் நிற்பது அதனினும் வியப்பானது" (199) என்கிறார்.

சிவபெருமான் தமக்கு அருளாமைக்குக் காரணம் கூறப்புகுவார்போலத்தொடங்கி, "பிருகுமுனிவர் கொடுத்த தசாவதாரத்துக்குரிய சாபத்தால் பல பிறப்பெடுக்கும் திருமால் அறிந்ததைப் போலப் பிறத்தலின் துன்பத்தை நீ அறியாய்; ஆதலின் என் பிறவித்துன்பத்திற்காக என்பால் இரங்கி அருளவில்லைபோலும்!" (325) என்று சிவபரத்துவத்தை உணர்த்துகின்றார்.

பக்குவமில்லாத தமக்கும் அருள்புரிய வேண்டுமென்று இறைவனையும், ஞானதேசிகரையும் சில காரணங் கூறி வேண்டுவர்:

"நடராசப் பெருமானே, இதுகாறும் எவ்வளவோ பிறவியை

நானடைந்து துன்புற்றேன். இனிவரும் பிறவிக்கு அஞ்சேன்: ஆனால் உன் திருநடனதரிசனம் பெற்றும் ஒருவன் நற்கதிபெற வில்லையே, வேதம் உண்மையைச் சொல்லவில்லையோ வென்று தேவர்கள் அஞ்சுவர்; அங்ஙனம் அஞ்சாமல் இருத்தற்கேனும் எனக்கு அருள்புரிக" (470) என்பர். இதன்கண் சிதம்பரம் தரிசனமாத்திரத்தில் முத்தியளிப்பதென்னும் செய்தி அமைந்துள்ளது.

"சத்திநிபாதத் தன்மை பெற்றவர்களுக்கு நீ அருள்புரிதல் வியப்பாகாது. ஊமையையும் பேசவைத்த மாணிக்கவாசகரைப் போலவும் அக்கினியாற் பற்றப்படாத வாழைத்தண்டில் தீ மூட்டியதுபோலவும் சிறிதேனும் பக்குவமில்லாத எனக்கு அருள்புரிவது தான் வியப்பாகும். அங்ஙனம் செய்தலே நின் பெருமைக்குத் தக்கதாம்" (582) என்று தம் ஞானதேசிகரிடம் இவர் விண்ணப்பித்துக் கொள்கின்றார்.

## குறிப்பு வகை

இம்முனிவர்பிரான் குறிப்புவகைகளாற் பொருள்புலப்படுத்தும் இடங்கள் சில உண்டு:

கௌமாரி கடல் சுவற வேல்விட்டவளென்பதை,

"கடல்வயி றெரியவொள் வேலினைப் பார்த்தவள்"(12)

என்பர். உடலை விடுதலென்பதனை,

"சுமைபோடுதல்" (249)

என்றும், வீணாக உழைப்பரென்பதை,

"பாழுக் கிறைப்ப" (296)

என்றும், இனியவற்றைக் கரும்பென்றும் (171) இன்னாதவற்றை வேம்பென்றும் (154, 342), மிக்க சிறப்பையுடைய தென்பதை,

"பொன்மலர் நாற்றமுடைத்து" (211)

என்றும், தோன்றுதலினும் தோன்றாமை நன்றென்பதை,

"பூத்தலிற் பூவாமை நன்று" (212)

என்றும், மகளிருடைய கணவர்களைப் பாதுகாப்பவனென்பதை,

"நுந் தாலிக்கு வேலி" (441)

என்றும் உவமைக் குறிப்பாற் குறிப்பர்.

'சிவபெருமான் ஆலகாலவிடம் உண்ணாவிடின் தேவர் இறந்துபட அவர் மனைவியர் மார்பிலடித்துக் கொண்டு புலம்புவர்' என்பதை,

"நாயகன் கண்டங் கறுதேலங் காட்டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளுங் கொங்கைகளும்
சிவக்கும் போலும்" (530)

என்றும், 'முருகக்கடவுளுடைய திருவடியிலே ஏதேனும் பட்டால் அதுகண்டு உமாதேவியார் வருந்துவர்' என்பதை,

"உமையம்மை......கடனன்றால்" (422)

என்றும் குறிப்பாற் புலப்படுத்துவர்.

மகளிருக்கு இடையில்லை யென்று புலவர் கூறும் கருத்தை இவர் வேறுவகையிலமைத்து,

"ஈயாத மாக்க டீமொழி கவர்ந்த, சிற்றிடை" (570)

என்பர்; தீமொழியாவது இல்லையென்பது.

பழிகூறுதலை நாவளைத்தல் (696) என்பர்.

"காசி யாண்டகையார் பெருந்தகைமையழகிதாமே" (641)

என்றவிடத்து அழகிதென்பதை அழகன்றென்னும் எதிர்மறைக் குறிப்புப்பட வைத்தார்.

"வெள்ளென" (18) என்னும் நிறம்பற்றிய குறிப்பால் தோல்வியைக் குறிப்பர். கெட்டேன், கோ என்னும் இரக்கக்குறிப்புச் சொற்களையும், 'ஓ' (494) என்னும் வியப்புக் குறிப்பையும் இவர் அமைக்கின்றார். "நமனர்" (466) என்று யமனை விளிக்கும்போதுள்ள பன்மை இகழ்ச்சிக்குறிப்பில் வந்தது.

இவற்றையன்றி, "கிண்கிணெனுங் கிண் கிணி", "கிணின் கிணினென" (19, 401), "கலின் கலினென" (401), "நெறுநெறு நெறுவென" (540), "கூகாவென்று குரைப்பது" (556), "இழுமென் குதலை" "இழுமென் மழலை" (395, 657), "இழுமெனருவி" (410), "இழுமென் மொழி" (440) என்பவற்றில் அனுகரணவோசைகளாகிய ஒலிக்குறிப்பை அமைக்கின்றனர்.

## பிரபந்தச் செய்திகள்

எழுத்துமுதலாம் ஐந்திலக்கணங்களை இவ்வாசிரியர் நன்குணர்ந்தவரென்பதை இதுகாறும் ஆராய்ந்த செய்திகள் விளக்கும். அலங்கார நூலுள் இலக்கணம் கூறப்பெறும் காப்பியம், முத்தகச் செய்யுள், சித்திரகவி என்பவற்றை ஓரிடத்திற் குறித்துள்ளார். காப்பியம் இயற்றுவதனால் ஒரு புலவனுடைய பேராற்றல் விளங்குகின்றது. காப்பியங்கள் சிறுகாப்பியம் பெருங்காப்பியமென்று இருவகைப்படும். சிறுகாப்பியங்களில் பிரபந்தங்களையும் அடக்குவர். ஆதலின் இம் முனிவரைக் காப்பியக்கவிஞரென்று கூறுதலில் இழுக்கொன்றும் இல்லை. ஒரு கலிவெண்பாவையும், இரண்டு பிள்ளைத் தமிழ்களையும், மூன்று கலம்பகங்களையும், ஒரு நான்மணிமாலையையும், இரண்டு மும்

மணிக்கோவைகளையும், ஒருமாலையையும், நீதிநெறி விளக்கம் என்னும் நீதி நூல் ஒன்றையும், சிதம்பரச் செய்யுட் கோவையையும் இவர் இயற்றினர். பலவகை யாப்புக்களையும் விரவுவித்துப் பாடுதலில் இவருக்கு அதிக விருப்பம் இருந்ததென்பது, பலவகை யாப்புக்களும் விரவியமைந்த கலம்பங்கள் மூன்றும் செய்யுட்கோவை ஒன்றும் இவர் இயற்றி யிருத்தலால் விளங்கும்.

இவ்வாறு சிலவகைப் பிரபந்தங்களையே இவர் இயற்றி யுள்ளனரேனும் வேறு பிரபந்தங்களையும் இயற்றும் ஆற்றல் இவர்பால் உண்டென்பதை இவர்செய்யுட்களால் ஊகித்து அறியலாகும். போர்நிகழ்ச்சிகளையும் பேய்கள் போர்க்களத்திற்குரவையிடுதலையும் களவேள்வி நிகழ்தலையும் இவர் வருணிக்கு மிடங்கள் பரணிநூலிற் கண்ட செய்திகளை நினைப்பூட்டுகின்றன. அகத்துறை யமைதிபெற இவர் பாடிய பல செய்யுட்களும் பொருளாற் கோவைநூற் செய்யுட்களைப் போன்றனவே. இப் புத்தகத்திலுள்ள 539, 543-ஆம் செய்யுட்களில் உலாப்பிரபந்தங்களில் வருவதைப் போன்ற செய்தி அமைந்துள்ளது.

அன்னம் (83), கிளி (83, 157, 179, 183), குயில் (83), பறவைகள் (134, 183, 603), மேகம் (184, 673), வண்டு (658) என்பவற்றைத் தூதுவிடுக்கும் பொருளுடைய செய்யுட்கள் பல இவர் இயற்றியுள்ளார். அவை இவர் தூதுப் பிரபந்த மமைக்கும் திறலினரென்பதை உணர்த்தும். கலம்பகங்களிலும், மும்மணிக்கோவை, நான்மணிமாலை என்பவற்றிலும் செய்யுளந்தாதி அமைந்துள்ளது. தசாங்கப்பத்தென்பது ஒருவகைப் பிரபந்தம்; கந்தர் கலிவெண்பாவில் தசாங்கத்தை (1 : 66-74) அமைத்துள்ளார்.

பெருங்காப்பியத்துக்குரிய நாடு, மலை, ஆறு, காலம் முதலிய வருணனைகளிற் பல இவர் வாக்கில் தனித்தனியே காணப் பெறுகின்றன. அதற்குரிய பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கையும் தனியே நீதிநெறி விளக்கத்திற் காணலாம். இவற்ருல் இவர் முயன்றிருப்பின் பெருங்காப்பியம் அமைக்கும் பெற்றியும் உடையாரென்பது தெளிவாகும்.

இவர் பாடியுள்ள பிரபந்தங்களில் அவ்வப் பிரபந்தங்களுக்குரிய இலக்கணங்கள் விளக்கமாக அமைந்துள்ளன.

## கந்தர் கலிவெண்பா

கந்தர் கலிவெண்பாவென்பது முருகக்கடவுளிடம் விண்ணப்பம் செய்துகொள்ளும் முறையில் அமைந்துள்ளது. இங்ஙனம் கலிவெண்பாவால் அமைந்த பிரபந்தங்கள் பல பிற்காலத்தில் இயற்றப் பெற்றுள்ளன.

## பிள்ளைத்தமிழ்கள்

மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலும் பிள்ளைத்தமிழிலக்கண அமைதிகளைக் காண லாம். கடவுளரையேனும் ஆசிரியரையேனும் உபகாரிகளை யேனும் குழந்தையாக வைத்துக் காப்பு முதலிய பத்துப் பருவங் களைஅமைத்துப் பாராட்டுவது இதன் இலக்கணம். சந்தப்பாக்கள் இதில் விரவிவரும். பெண்பாற் பிள்ளைத்தமிழிலமைந்த பருவங் களுக்கும் ஆண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுக்கும் சில வேறு பாடுகள் உண்டு. அவ் விரண்டு வகைப் பிரபந்தங்களையும் இவர் இயற்றியுள்ளார்.

திருமால் முதலிய தெய்வங்கள் பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்க வேண்டுமென்று அமைப்பது காப்புப் பருவம். திருமால் காப்புக்கடவுளாதலின், காப்புப் பருவத்தின் முதற்செய்யுளை அவரது காப்பாக அமைத்தல் மரபு. இவர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில் முறையே திருமால், வெள்ளியம்பலவாணர், சித்திவிநாயகக்கடவுள், முத்துக் குமரேசர்,பிரமதேவர்,தேவேந்திரன்,திருமகள்,கலைமகள், துர்க்கை, சத்தமாதர்கள், முப்பத்து மூவர்கள் என்பவர்களுக்குரிய காப்பை அமைக்கின்றனர். இவருள் வெள்ளியம்பலவாணர், சித்திவிநாய கக்கடவுள், முத்துக்குமாரர் என்னும் மூவரும் தலமூர்த்திகள். வேளூர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் திருமால், வைத் தியநாதர், தையனாயகியம்மை, கற்பக விநாயகக் கடவுள், பிரம தேவர், தேவேந்திரன், திருமகள், கலைமகள், சத்தமாதர்கள், முப் பத்து முக்கோடி தேவர்களென்பவர்களுக்குரிய காப்புக் கூறினர். இவர்களுள் வைத்தியநாதர் முதல் மூவரும் தலத்து மூர்த்திகள். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் துர்க்கையின் காப்பு இருப்ப அது பின்னதிற் காணப்படவில்லை. வெள்ளியம்பலவாணர் காப்புக் கூறின்பின் மீனாட்சியம்மைக்கும் கூறவேண்டியவர் பாட்டுடைத் தலைவி அவ் வம்பிகையா யிருத்தலின் கூறாமல், அக்குறையை நிரப் புவார் போன்று துர்க்கைக்குக் காப்புக் கூறினர் போலும். முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் தையல்நாயகியம்மை காப்பு இருத் தலைக் காண்க. பின்னதில் முருகக்கடவுள் காப்பு இல்லை, பாட்டு டைத்தலைவர் அவரே யாதலின்.

குழந்தை பிறந்த ஏழாவது நாள் காப்பிடலென்னும் வழக்கம் ஒன்று உண்டு. அதனை யொட்டி இலக்கியவழக்கிலமைந்தது இக்காப்புப் பருவம்.

இரண்டாவது செங்கீரைப் பருவமென்பது. பொருள் தெரி

யாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது. இளங்குழந்தை 'ங்க்', 'ங்க்' என்று கூறக் கேட்டுத் தாய்மார் உவக்கும் பருவம் இது. இவ்வொலிமழலையைக்காட்டிலும்இளம்பருவத்தையுடையது. மழலையேனும் ஒருவகையிற் பொருள் செய்தற்குரியது; இவ்வொலி வெறும் ஒலிமாத்திரமேயாய்த் தோற்றுவது. தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடையென்பதுபோலச் சொல்லுக் குரிய அமைதியில்லாததைச் செங்கீரென்றனர் போலும்; கீர் - சொல். செங்கீரையை ஒரு நிருத்த விசேஷமென்று சொல்வர் பெரிய வாச்சான்பிள்ளை. செங்கீரையென்பதன் சொற்பொருள் முன்னே கூறியதாயினும் செங்கீரையாடுகவென்னும் வழக்கை நோக்கின் அதனைக்குழந்தைகள்பால் இயல்பினமைந்த ஆடல் விசேஷமென்றே கொள்வது பொருந்தும். இவ்வாடலை இவர்,

> "ஒருதா ளுந்தி......
> ஆடுக செங்கீரை" (368)

என்பதிற் புலப்படுத்துகின்றனர். ஆடுக செங்கீரை, செங்கீரை யாடுகவே என்னும் முடிபுகள் செங்கோ செங்கீரை யெனவும் வழங்கும்.

மூன்றாவது தாலப்பருவம். தாலாட்டென்பது தாலெனமருவி வழங்கியது. குழந்தைகளைத் துயிலச்செய்வார் தம் நாவை அசைத் தலும் பாட்டுப்பாடுதலும் வழக்கம்.

> "சிறிய பருமணித் தொட்டிலேற்றித் தாலாட்டி" (38)

என்று இவ்வாசிரியரே கூறுதல் காண்க. இதற்கெனவே தாலாட் டெனத் தனிப்பாட்டுக்களின் தொகுதி சில வழங்குகின்றன. திவ்யப் பிரபந்தத்தில் அவற்றைக் காணலாம். தாலோ தாலேலோ என்னும் அநுகரணத்துடன் இப்பருவப் பாட்டுக்கள் முடி கின்றன.

நான்காவது சப்பாணிப் பருவம். சப்பாணி கொட்டும்படி குழந்தையிடம் கூறுவதாக அமைப்பது இது. சப்பாணியென்றது ஸ:பாணி யென்பவற்றின் தொகை. கையோடு கை சேர்த்துக் கொட்டலென்பது அச்சொற்பொருள். கால்வலியின்றிக் கை வலி கொண்டு நகர்ந்து செல்லுங் குழந்தைகளைச் சப்பாணியென்று கூறும் வழக்கையறிக.

ஐந்தாவது முத்தப்பருவம். குழந்தையை முத்தந் தாவென்று தாயரும் பிறரும் வேண்டுவதாகக் கூறுதல் மரபு. முத்தம் என் னும் சொல் முத்தையும் குறித்தலின் முத்தப்பருவத்திற் புலவர் கள், 'பிறவிடங்களிற் கிடைக்கும் பலவகை முத்தங்களினும் நின் வாய்முத்தமே சிறந்ததாதலின் அதனைத் தருக' என்று அமைத்தல்

வழக்கம். இவ்வாசிரியர் மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில் மாத்திரம் அத்தகைய குறிப்புடைய செய்யுட்களை அமைத்தனர் (47, 48.)

ஆறுவது வருகைப்பருவம். தளர்நடையிட்டுவரும் குழந்தையை வாவென்று அழைப்பதாகக் கூறுவது இப்பருவச் செய்தி.

ஏழாவது அம்புலிப்பருவம். சந்திரனைக் குழந்தையோடு விளையாட வாவென்று அழைத்தலைக் கூறுவது. அம்புலி-சந்திரன். இப்பருவம் ஏனைய பருவங்களைக் காட்டிலும் பாடற்கரியதென்பர்; "பிள்ளைக்கவிக்கம்புலி புலியாம்." அம்புலியை அழைக்கையில் சாம பேத தான தண்டவகையால் முறையே அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவருக்கும் ஒப்புக் கூறுதலும், வேற்றுமை கூறுதலும், விளையாட வரின் அம்புலிக்கு விளையும் நன்மை கூறுதலும், வாரா விடின் நிகழும் துன்பம் கூறுதலும் புலவர் மரபு. சாமமென்பதற்கு இன்சொலென்று பொருள் கூறுவர்; அஃது ஒப்பிலடங்கும். முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் இம்முறையை விளக்கமாகக் காணலாம்.

இவ்வேழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத் தமிழுக்கும் பொது. மேல், பெண்பாற் பிள்ளைத்தமிழில் அம்மானைப் பருவம், நீராடற்பருவம், ஊசற்பருவமென்பவற்றையும், ஆண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றிற்பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவமென்பவற்றையும் அமைத்தல் மரபு.

அம்மானைப் பருவமாவது பாட்டுடைத் தலைவியை அம்மானையாடும்படி கூறுவது. மகளிருக்கே உரிய இவ்விளையாட்டை வேறு இடங்களிலும்,

"பனிமலர்க் குழலியர்.........டம்மனையாட" (196),
"தருநிழற் செய்த......டம்மனை யாடுழி" (470)

என்று கூறுவர். இவ்விளையாட்டுக்குரிய பாடல்கள் தனியே உண்டு. கலம்பக உறுப்புக்களில் அம்மானையென வருவது இவ்விளையாட்டுக்குரிய பாட்டே.

நீராடற் பருவத்தில் பாட்டுடைத் தலைவியை நீராட வேண்டுமென்று வேண்டுதலும் ஊசற் பருவத்தில் ஊசலாடவேண்டுதலும் காணப்படும். ஊசலென்பது மகளிர்க்குரியதொரு விளையாட்டு.

ஆண்பாற் பிள்ளைத்தமிழில் வரும் சிற்றிற்பருவத்தில் சிற்றில் விளையாடும் சிறுமியர் பாட்டுடைத்தலைவர் தம் சிற்றிலை அழிக்கும்போது 'எம் சிற்றிலை அழியாதொழிக' என வேண்டுதல் கூறப்படும்.

சிறுபறைப்பருவத்திற் பாட்டுடைத் தலைவரைச் சிறுபறை முழக்கும்படியும், சிறுதேர்ப்பருவத்தில் சிறுதேருருட்டும்படியும் வேண்டுதல் கூறப்படும்.

## கலம்பகங்கள்

கலம்பகங்கள் மூன்றை இவர் பாடியுள்ளார். கலம்பகமென்பதற்குப் பலவகைப்பொருள் கூறப்படினும் பலவகை மலர்களும் கலந்தமைத்த கலம்பகமாலை யென்று பொருள் கொள்வதே பொருந்தும்; "களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த, அலங் கலந்தொடையல்" (திவ். திருப்பள்ளி. 5); "பலபூக்கள் கலந்து நெருங்கிய கலம்பகமாகிய மாலை" (பெரும்பாண். 174, ந.) என்பவற்றைக் காண்க. கதம்பமென்பது இங்ஙனம் திரிந்தது போலும். இப்பிரபந்தத்தில் பலவகைப் பொருள்களும் அகப்புறத்துறைகளிற் பலவும் பலவகை யாப்புக்களும் விரவிக் கலந்தமையின் இப்பெயர் வந்தது.

சிலவகை மகளிரைக் கண்டு காமுற்ற இளைஞர்கள் தம் காமக் குறிப்புத்தோன்ற அவர்களோடு பேசும் உலகியல்பைத் தழுவி மதங்கியார், பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியா ரென்னும் உறுப்புக்கள் கலம்பகங்களில் அமைக்கப்படும். மதங்கியென்பவள் வாள் சுழற்றி ஆடுபவள்; பிச்சியென்பவள் சிவ வேடம் புனைந்து வருபவள்; கொற்றி வைணவ வேடத்தினள். இவ்வுறுப்புக்களில் அவ்வம்மகளிருடைய தொழிலுக்குரிய செய்திகள் தோற்றும்படி சிலேடையமைத்தல் புலவர்நெறி. இவற்றையன்றி மறம், குறம், சம்பிரதம், சித்து, களி, ஊர், அம்மானை, ஊசல், பாணாற்றுப்படையென்னும் உறுப்புக்கள் கலம்பகங்களில் வரும். மறமென்பது மறச்சாதி மகளொருத்தியை ஒரு மன்னன் மணம் பேசிவிடுப்ப, அச்செய்தியை அறிவிக்கும் திருமுகத்தைக் கொணர்ந்த தூதனை நோக்கி அச்சாதியினர் தலைவன் சினந்து கூறுதல். குறத்தி குறிகூறுவது குறம். பிறரால் இயற்ற முடியாத அரிய செயல்களைத் தான் செய்து விடுவதாகத் தோற்றும்படி ஒருவன் கூறுவதாக அமைப்பது சம்பிரதம். இரசவாதம் செய்யும் ஆற்றலுடைய சித்தனாகத் தன்னை ஒருவன் கூறிக்கொள்வது சித்து; இவ்வுறுப்பில் இரசவாத சம்பந்தமான பொருள் தோற்றுவதோடு இயல்பாக உள்ள பொருளும் தோற்றும்படி அமைப்பர். சித்தர்களுடைய நூல்களில் வரும் செய்யுளைப்போல இச்செய்யுளிலும் அப்பா என்ற விளி வரும் (161.) இவ்வாசிரியர் தாம் இயற்றிய இரண்டு கலம்பகங்களிலும் இவ்வுறுப்புக்குரிய செய்யுட்கள் இரண்டை அமைத்ததன்றிப் பண்டார மும்மணிக்கோவை

யிலும் இத்தகைய பொருளமைதியையுடைய செய்யுளொன்றை (590) அமைத்துள்ளார். கட்குடியன் கூறுவதாக அமைவது களி; கட்குடித்தலும் ஊனுகர்தலும் பெருமைதருஞ் செயல்களென்று தோற்றும்படி அக்கூற்று அமைந்திருக்கும். பாட்டுடைத் தலைவனது ஊரைச் சிறப்பிப்பது ஊர். மகளிர் அம்மானை யாடுதற்கும் ஊசலாடுதற்கும் உரிய செய்யுட்கள் முறையே அம்மானையும் ஊசலும் ஆகும். அம்மானை மூவர் பாடுவதாக அமைவது. இவ்வுறுப்புக்களுக்கு இலக்கியமாக உள்ள செய்யுட்களை இவ்வாசிரியர் சொற்பொருட்சுவை திகழப் பாடியுள்ளார்.

## நான்மணி மாலை

நான்மணி மாலை யென்பது வெவ்வேறு வகையான நான்கு மணிகளைத் தொடுத்தமைத்த மாலைபோல வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா என்பவை முறையே அந்தாதியாக அமைய நாற்பது செய்யுட்கள் பாடுவது. இவர் பாடிய திருவாரூர் நான்மணிமாலையில் அகத்துறைச் செய்யுட்கள் பல விரவி வருகின்றன.

## மும்மணிக் கோவைகள்

மும்மணிக் கோவை யென்பது மூன்று வேறு மணிகளாலாய மாலையைப்போல ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறையென்பன அந்தாதியாக அமைய முப்பது செய்யுட்கள் பாடுவது. இவர் பாடியுள்ள இரண்டு மும்மணிக் கோவைகளுள், சிதம்பர மும்மணிக்கோவையிலுள்ள 475-ஆம் செய்யுள் மாத்திரம் அகத்துறையமைதியையுடையது; ஏனையவை வேறு கற்பனைகள் தோன்ற அமைந்தவை. பண்டார மும்மணிக் கோவையில் அகத்துறைச் செய்யுட்களே இல்லை.

## பிறநூற் கருத்துக்கள்

இவர் இலக்கண இலக்கியங்களில் வல்லவரென்பதை இதுகாறும் எடுத்துக் காட்டிய செய்திகள் விளக்கும் முந்தையோர் நூல்களில் இவருக்குள்ள ஆராய்ச்சியும் பழக்கமும் வேறொரு வகையாலும் பெறப்படும். அந்நூல்களிலுள்ள கருத்துக்களையும் சொற்களையும் இவர் எடுத்து ஆள்கின்றார். குறிப்புரையில் அங்கங்கே காட்டப்பெற்றுள்ள ஒப்புமைப்பகுதிகளால் இதனை உணரலாம். கந்தர் கலிவெண்பாவில் சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய சைவசித்தாந்த சாஸ்திரக் கருத்துக்களும் கந்த புராணச் செய்திகளும் வந்துள்ளன. முருகக் கடவுளுடைய திரு

முகங்களின் வருணனையும் திருக்கரங்களின் வருணனையும் திருமுருகாற்றுப்படைக் கருத்தைத் தெரிந்து பெயர்த்து அமைத்துக் கொண்டவையே யாகும்.

## தொல்காப்பியச் சொல்லமைதி

தொல்காப்பியத்திலிருந்து இவர் சில சொற்றொடர்களை எடுத்தாள்கின்றார்.

"எம்மனோரையு மிடித்துவரை நிறுத்தி" (461)

என்பதிலுள்ள இடித்துவரை நிறுத்தியென்னும் தொடர்,

"இடித்துவரை நிறுத்தலு மவர தாகும்" (கற்பு. 14)

என்னுங் கற்பியற் சூத்திரத்திலிருந்து எடுத்துக்கொண்டது.

"வேம்புங் கடுவுந் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் றெரித்த சின்மொழி" (700)

என்னும் அடிகள்,

"வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றுங்குத லின்றி" (செய்யுள். 112)

என்பதன் நினைவிலிருந்து எழுந்தவையாகும்.

## குறளோடு ஒப்புமை

திருக்குறளில் இவர் சிறந்த பயிற்சியுடையவர். நீதிநெறி விளக்கம் திருக்குறளிற் கண்ட கருத்துக்களை வேறு உருவத்திலே அமைத்துக் கூறுகின்றது. சில இடங்களில் திருக்குறளிலுள்ள சொற்றொடர்களையும் பொன்னேபோற் போற்றி எடுத்தாண்டுள்ளனர்.

"மடங்கொன் றறிவகற்றுங் கல்வி" (209)

என்பதில் அறிவகற்றுமென்பது அறிவை விரிவுபடுத்துமென்னும் பொருளில் வந்தது. இத்தொடர்,

"அறிவகற்றும், ஆகலூ ழுற்றக் கடை" (குறள், 372)

என்பதினின்றும் எடுத்துக்கொண்டதாகும்.

"மனைத்தக்கான் மாண்பில னாயின்" (216) என்பதில்,

"மனைத்தக்க மாண்புடைய ளாகி" (குறள், 51)

என்பதன் சார்பு உள்ளது.

"பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
"கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்" (253)

என்பதிற் பழமையும் கிழமையும் ஒருங்கே அமைத்ததற்கு,

"பழமை யெனப்படுவ தியாதெனின் யாதும்
"கிழமையைக் கீழ்ந்திடா நட்பு" (குறள், 801)

என்னும் குறளின் நினைவே காரணம்.

"முயலாது வைத்து முயற்றின்மை யாலே" (256)
என்பதிலுள்ள முயற்றின்மை என்பது,
"முயற்றின்மை, இன்மை புகுத்தி விடும்" (குறள், 616)
என்பதைக் கண்டு அமைத்துக்கொண்டது.

"கொடிறுடைத்துக் கொல்வான்போற் கைவிதிர்த்து" (279) என்பது,
"கொடிறுடைக்குங் கூன்கையர்" (குறள், 1077)
என்பதை நினைந்து கூறியது.

வேறு பிரபந்தங்களிலும் இங்ஙனமே குறளிலிருந்து எடுத்தமைத்த சொல்லாட்சியைக் காணலாம்.

"ஐயுணர் வடக்கிய மெய்யுணர் வல்லதை" (476) என்பதற்கும்,
"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு" (குறள், 354)
என்பதற்கும் தொடர்பிருத்தல் காண்க.

"உதவியின் வரைத்தோ வடிகள்கைம் மாறே" (558) என்பது,
"உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள், 105)
என்பதனோடு ஒப்புமையுடையது.

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்" (குறள், 370)
என்பதிலுள்ள பேராவியற்கை என்னும் தொடரை இவர்,
"பேரா வியற்கை பெற்றனர்" (455),
"பேரா வியற்கை பெற்றினி திருப்ப" (573)
என இரண்டிடங்களில் எடுத்தாண்டனர்.

## கம்பராமாயணச் சொற்பொருளாட்சி

தமிழ்க் காப்பியங்களுட் சிறந்த கம்பராமாயணத்தில் இம் முனிவருக்கு ஈடுபாடு அதிகம். காசியிலிருந்த காலத்தில் இவர் சில சமயங்களிற் கம்பராமாயணப் பிரசங்கம் செய்து வருவதுண்டாம். இவருடைய செய்யுட்களில் கம்பருடைய கருத்துக்களும் சொல்லாட்சியும் விரவியிருக்கும். அவற்றுட் சில வருமாறு:

"தகரக் குழலி னறையுநறை தருதீம் புகையுந் திசைக்களிற்றின்
தடக்கை நாசிப் புழைமடுப்ப" (61)
என்னும் இவரது கற்பனை கம்பராமாயணத்தில் வரும்,

" ... ... பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாண் மூக்கிடை மடுப்ப" (திந்தனைப். 2)
என்பதை அடியொற்றி வந்தது.

சீதை இராமபிரானைக் கண்டமாத்திரத்தே காமுற்றதை,

" கண்வழி நுழையுமோர் கள்வனேகொலாம் " (மிதிலைக். 55)

என்று கூறுவதாகக் கம்பர் அமைத்தார்; இவ்வாசிரியர்,

" கண்பு குந்தென் கருத்து ளிருக்கவும் " (113)

என்று தலைவி ஒருத்தி கூறுவதாகச் செய்யுள் செய்தார்.

" உனது, முகத்தினழகெம் வடிக்கண்ணுன்
மொண்டுண்டனம் " (424) என்பது,

" இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணின் முகத்தழகு
பருக நோக்கி " (மிதிலைக். 157)

என்பதை நினைப்பிக்கின்றது.

'நமரங்காள்' என்னும் சொல்லை இவ்வாசிரியர் ஐந்து இடங்களில் உபயோகித்துள்ளார். அச்சொல் கம்பராமாயணத்தில் வானரர் களங்காண்படலத்திற் பல இடங்களில் வருகின்றது. கம்பர் அச்சொல்லை,

"நாகக் குன்றி னின்றன காண்மி னமரங்காள் ",
" நளினக் காடே யொப்பன காண்மி னமரங்காள் "

என்பனபோல ஐந்துசீருள்ள செய்யுளில் அங்கே வைத்தார்; இவரும்,

" வெஞ்சம னஞ்ச வேலொ டெதிர்ந்தா னமரங்காள் " (521)

என அத்தகைய செய்யுளில் ஐந்தாஞ் சீராக வைத்துள்ளார்.

" வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்......
வழங்கின மேகமே " (கம்ப, ஆற்றுப். 4)

என்பது கம்பர் வாக்கு;

" மின்செய் கொண்மூ வெள்ளிவீழ் வீழ்ப்ப " (525)

என்பது இவர் வாக்கு.

இவர் சில உவமைகளைக் கம்பர்செய்யுளிலிருந்து எடுத்தாண்டுள்ளார்:

" வறிஞ னோம்பிய செறுவொன் றேய்ப்ப " (585)

என்று இவர் கூறும் உவமை,

" வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்,
செய்யெனக் காத்து " (கம்ப. அரசியற். 12)

என்பதிலுள்ள சொல்லையும் பொருளையும் பெற்று அமைத்ததேயாகும்.

" வச்சை மாக்க ளெனவே முடவலவன்
வளைவா யடைக்கு மழைநாளே " (645)

என்று இவர் கூறிய கார்கால வருணனையும் அலவன் செயலுக்குக் கூறிய உவமையும்,

" இழைபடப் பெடையொடு மெள்ளி னள்ளிகள்
புழையடைத் தொடுங்கின வச்சை மாக்கள்போல் " (கார்காலப். 121)

என்பதிலுள்ள வருணனையையும் உவமையையையும் அறிந்து அமைத்தவையே என்பதில் ஐயமில்லை.

## வடசொற்களும் தொடர்களும்

தமிழ்நூலறிவோடு வடநூலிலும் இவர் அன்புடையவர். வடநூல்களிற் காணப்படும் செய்திகள் பலவற்றை இவர் அங்கங்கே அமைத்துள்ளனர். வடசொற்களும் சொற்றொடர்களும் இவருடைய வாக்கில் விரவி வந்துள்ளன. தமிழுக்கேற்பத் திரிக்காமல் சிலதொடர்களையும் சொற்களையும் வழங்குவர். அவற்றிற் சில வருமாறு:

சொற்கள்: சித்ரம், தர்க்கம், ப்ரதாபம், பத்மம், ரத்நம், லளிதம், லோகம், வ்ருத்தர்.

சொற்றொடர்கள்: அருணரத்நம், கல்யாணசுந்தரர், கல்யாண சௌந்தரி, சந்த்ர சேகரன், சித்ரரதி, த்ரிகூடம், த்ரிசூல, நவ ரத்னம், பக்தசகாய.

பின்வருவன போன்ற வடமொழித்தொடர்கள் பல இவர் வாக்கில் வந்துள்ளன: உபயசரணன், கராசலம், கமலலோசனன், காமானலம், குஞ்சிதகமலம், குஞ்சிதசரணம், குடிலகோடீரம், குணகுணம், கும்பாதிகாரியம், சகதண்டமண்டலம், சரணாரவிந்தம், சுத்தநித்தவட்டம், சேணுபராகம், தசமுகநிசிசரன், பரதபதயுகம், பாலலோசன, பானுவிலோசன, மனோலயம், வதனமண்டலம், விரகானலம்.

பலவகையாகத் திரித்துக்கொண்ட சொற்களிற் சில வருமாறு: அத்திரம், அம்பை, அமராபதி, அயிராபதம், அருக்கியம், அவிமானம், கப்புரம், சடானனன், சாரூப்பியம், சிட்டர், சிட்டி, செந்துக்கள், சென்மம், சொம், தெய்வீகம், பமரம், பரப்பிரமம், பற்பம், பார்ப்பதி, பெந்தம், மயிடம், முட்டி, வாச்சியம்.

சில வடசொற்றொடர்களை வழக்கமாக வழங்கும் உருவத்தை மாற்றி வேறுசொற்களால் அமைப்பர். அவற்றிற் சில தமிழ் மொழிபெயர்ப்பாகவும் சில ஒரு வடசொல்லிற்கு வேறு வடசொல்லமைந்ததாகவும் இருக்கும். நரசிங்கத்தை மானிடமடங்கலென்றும், இரணியனை ஆடகப்பெயரினவுணனென்றும், பானுகோபனை இரவிபகையென்றும் கிரவுஞ்சகிரியைக் குருகுபெயர்க்குன்றமென்றும் மீனாட்சியை அங்கயற்கண்ணாளென்றும், விசாலாட்சியைப் பெருந்தடங்கண்ணாளென்றும், சரத்தை நிலையில் பொருளென்றும் அசரத்தை நிலையியற்பொருளென்றும் கூறுவர்.

சில இடங்களில் வடசொற்றொடரைத் தமிழ்முடிபு பெற வைக்கின்றார்: இரசதவசலம் (540.)

கல்வியை வித்யாவென்ற பெண்பாலாற் குறித்தல் வடமொழி வழக்காதலின் அதனைப் பின்பற்றி, "கல்வியே கற்புடைப் பெண்டிர்" (210) என உருவகம் செய்தார்; முத்தியை, "முத்தித்திரு" (638) என்று கூறுதலும் இத்தகையதே.

## மரபு

வடமொழி தென்மொழி நூற்புலவர்கள் பல செய்திகளை முந்தையோர் கூறிய மரபுபற்றித் தாமும் எடுத்துக்கூறுதல் வழக்கம். இவ்வாசிரியரும் அத்தகைய செய்திகள் பலவற்றைப் புலப்படுத்துகின்றார்.

புகழ் வெண்ணிறமுடைய தென்பது கவிமரபு;

"இவள் பெரும் புகழ்நிலா வெங்கணு நிறைந்திடுவது" (68)

என்பதில் இதனைப் புலப்படுத்தினர். பிரதாபம் செந்நிறமுடைய தென்பது நூல்வழக்கு;

"செந் தேனு றுடன்கடவுள் வானு றெனப்பெருகு
சித்தாமிர்தஞ் சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்கவென்றே" (356),

"மலிபுகழ் நிலவொடு மடுதிறல் வெயிலெழ
மதிகதிர் வலம்வரு வெற்பொத்து நின்றன" (604)

என்பவற்றில் இவ்விரண்டு செய்திகளையும் ஒருங்கே அமைத்தனர்.

மகளிர் உதைக்க அசோகு மலர்தல் (96), சந்திரகாந்தம் நிலா வெறிக்குங்காலத்தில் நீர்சுரத்தல் (373, 582), சந்திரன் சஸ்யாதிபதியாதல் (68, 411, 413), அவன்பாலுள்ள அமுதத்தைத் தேவர் உண்ணுதல் (65, 74, 412), சந்திரன் சூரியனிடத்திலிருந்து ஒளி பெறுதல் (71), தேவர் கண்ணால் துய்த்தல் (1 : 106), அவர் இமையாமை (196), சகரர் கீழ்கடலைத் தோண்டியது (374), கோயிலுக்கு ஏழுபிராகாரம்இருத்தல்(696), நால்வகையோனி,எழுவகைப்பிறப்பு (464) என்பவைபோன்ற செய்திகள் வடமொழி தென்மொழி நூல்களிற் பயிலும் வழக்கைத் தழுவி யமைக்கப்பெற்றவை.

இசைக்குக் கல் உருகுமென்பது நூல்வழக்கு; இதனை இவர்,

"கொத்து மணித்திர ளிற்செபு மம்மனை...சிந்தியிட" (80)

என்பதால் உணர்த்துகின்றார்.

வண்டு இசைபாடப் போது மலருமென்பது ஓர் அருமையான செய்தி; இதனை,

" வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்புஞ் சுரும்பர் பாட " (10),
" குழலிசை பழகளி பாடிடக் கேட்டுடை மடலவிழ் துளபம் " (12),
" அறுகாற் றும்பிபசுந் தோட்டுக் கதவந் திறப்ப " (60),
" பண்மலரக் கண்மலருங் காவலரு மேடவிழ்க்கும் " (631)

என்பவற்றில் இவர் கூறுகின்றார்.

மலர்கள் குறித்தகாலத்தில் மலர்ந்து பொழுதையறிவித்தலின் போதென்னும் பெயரையுடையனவாயின ; இதனை இவ்வாசிரியர்,

" போதுதெரி யாமையிற் குமுதமொடு சதவிதழ்ப்
போதுமே யிருபோதையும்
தெரிக்குந் தடம்பணை யுடுத்தத்தமிழ் வேளூர " (435)

என்பதில் தெரிவிக்கின்றார்.

ஆடவரது மேனிச்சாயலுக்கு நீரின்சாயலை உவமித்தலும், அவர்மேனி முல்லைமணமுடைய தென்பதும் நல்லிசைச் சான்றோர் வழக்கு ; இவரும் அவ்வழக்கை யடியொற்றி,

" முருகுயிர்க்கு நறுந்தெரியன் மொய்குழலின் மையுண்கட்
பொருகயற்குன் றிருமேனி புதுவெள்ளப் புணரியே "
" தேன்மறிக்கும் வெறித்தொங்க லறற்கூந்தற் றிருந்திழைகண்
மான்மறிக்குன் றிருமேனி மலர்முல்லைப் புறவமே " (538)

என்கின்றார்.

" காசிக் கடவுணுதல், விழியு மிடக்கண்ணும்
வெண்ணெருப்பே " (627)

என்பதில் நெருப்புக்கு வெண்ணிறங்கூறியது நியாயநூலார் வழக்கைப் பின்பற்றியது.

## இசைச் செய்திகள்

துறவறத்தாருடைய இயல்பு கூற வந்த இம் முனிவர்,

" பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணொடு
பாடல் செவிமடார் " (291)

என்றுரைக்கின்றார். பண்ணொடு பாடலைச் செவிமடாமை துறவிகள் இயல்பென்று கூறினும், பெண்டிர்பாடும் பண்ணும் பாடலும் செவிமடா ரென்றே பொருள் கொள்ளுதல் வேண்டும். இல்லையேல் இம்முனிவர் 'பண்ணிடத்தும் பாடலித்தும் வெறுப்புடையர் போலும்!' என்பதோர் ஐயம் உண்டாகும். இவர் இசையினிடத்து விருப்பம் உடையவர்; இசைநூற் செய்திகளைப் பலவிடங்களில் எடுத்து ஆள்கின்றார்.

" பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காய் " (706)

என்று சகலகலாவல்லியை இவர் வேண்டிக்கொள்ளும்பொழுது பண்ணை முதலிலே வைத்தல் காண்க.

பண்ணைப் (291, 540, 626, 706) பொதுவகையாற் குறித்த லோடு விளரிப்பண் (81), செவ்வழிப்பண் (151, 353) என இரண்டு பண்களின் பெயர்களைக் குறிப்பர். மந்தர மத்திம தாரங்களாகிய மூன்று ஸ்தாயிகளை மூவகை நிலயம் (582) என்பர். ஏழுஸ்வரங் களை, " ஏழிசை " (313, 657) என்றும், " ஏழு சுரம் " (582) என் றும் குறிப்பிடுவர்.

குழலிசையை வேயிசை (203), தீங்குழற்கானம் (678) எனப் பாராட்டுவர். வீணை வாசிப்போரை,

" விபஞ்சிபயி றருமதங்கர் " (353)

என்பர். யாழ்வகைகளில் மகரயாழும் (73), சீறியாழும் (150, 657) இவராற் கூறப்பெறுகின்றன. சீறியாழை யுடையவன் சிறுபாண னென்று பத்துப்பாட்டால் தெரிகின்றது.

" தெள்விளி யெடுக்குஞ் சீறியாழ்ப் பாண " (657)

என்பதில் இவர் சீறியாழையுடைய சிறுபாணனைக் குறிப்பிடுகின் றார். யாழ் வாசிக்கும் முறையை இரண்டிடங்களிற் (582, 657) சுருக்கமாகக் கூறுகின்றார்.

## உலகியலறிவு

மதிநுட்பமும் நூலறிவும் ஒருங்கு வாய்ந்த இப் பெரியார் உலகியலறிவும் நன்கமைந்தவர். தம் கண்ணை மலரத் திறந்து உல கைப் பார்த்துக் களித்தலின்றி நூல்களிலுள்ள பொருள்களை மாத் திரம் மாற்றி மாற்றி யுரைக்கும் சிலரைப்போலல்லாமல் இவர் தம் கண்ணால் உலகைநன்கு அறிந்து தாம் கண்டும் கேட்டும்அறிந்தவற் றைத் தம்முடைய கவிதைப் பிரவாகத்திலே கலந்து செலுத்துகின் றார். ஒருகடவுள், ஒரு மொழி, ஒரு கலை, ஒரு நாடு என்னும் வரை யறையின்றிப் பல கடவுளையும் பல மொழிக் கருத்துக்களையும் பல கலைச் செய்திகளையும் பலநாட்டு வருணனைகளையும் இவருடைய செய்யுட்களிற் காண்கின்றோம். இந்நாட்டின் தென்றிசையிலுள்ள செந்தூரையும் வடநாட்டிலுள்ள காசியையும் இவர் கண்டறிந்து பாடுகின்றார். தாம்பிறந்த பாண்டிநாட்டையும், குருவைப்பெற்ற சோழநாட்டையும், வாழ்ந்துவந்த கங்கைக்கரையையும் வருணிக் கின்றார். சிவபெருமான்முதல் கலைமகள் வரையுள்ள தெய்வங்க ளைப் பாராட்டுகின்றார். தென்றமிழ் மொழியையும் ஹிந்துஸ்தா

னிச் சொல்லையும் இணைத்துப் பாடுகின்றார்' சைவபரிபாஷைக ளோடு வைணவ பரிபாஷைகளையும் ஒருசார் அமைக்கின்றனர். இவற்றால் இவர், "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்னும் மனோபாவமும் விரிந்த உலகியலறிவும் உடையவரென்பதை உண ரலாகும்.

ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர்வரையிலுள்ளவற்றின் இயல்பு களை இவர் தெரிந்து செய்யுள் செய்கின்றார்.

## தாவரங்கள்

நிலத்தைக் கீண்டு பொற்சுளைகளோடு பழுத்து நிற்கும் குடக் கனிகளை யுடைய வேர்ப்பலாவின் வருணனையைப் பல இடங்களிற் காணலாம். கமுகமரத்தின் பாளையிலுள்ள அரும்புகள் முத்துப் போலத் தோற்றுதலும் அப்பாளை கவரிபோலிருத்தலும் காய் மர கதத்தை ஒத்தலும் பழம் பவழத்தைப்போலத் தோற்றுதலும் சில இடங்களில் இவரால் சொல்லப்பெறுகின்றன. தென்றல் வரத் தேமாமரம் மலர்தலும் (24), வேங்கை மலரை வண்டு விரும்பாமை யும் (579), புன்னை இலையறப் பூத்தலும் (579), வெண்கடப்பமலர் துகிலைப்போலத் தோற்றுதலும் (73), கோங்கமலர் பொற்கிழியைப் போலிருத்தலும் (73) ஆகிய மரச் செய்திகளை அங்கங்கே பார்க்க லாம். தேங்காயை முப்புடைக்கனி (56, 375) என்பர். ஓரிடத்தில் (673) அரையென்னும் ஒரு மரத்தைக் குறிப்பிடுகின்றார்; வேழக் கரும்பென்னும் ஒரு கரும்பின் சாதியைக்கூறுவர் (424); நெல்லிலும் கமுகிலும் முத்துண்டாகு மென்பர் (329, 376); தாழை வெண் சோறு ஏந்துதலைச் சில இடங்களிற் கூறுவர் (455, 696.)

கொன்றை கார்காலத்தில் மலர்தலையும் (525, 540), அதன் பூந் தாது பொன்போன்றிருத்தலையும் (327), முல்லைமலர் கார்காலத்தி லும் (159), மல்லிகைமலர் மாலையிலும் (353) மலரு மென்பதையும் இவர் உணர்த்துகின்றார்.

## பறவை இயல்புகள்

இவர் உணர்த்தும் பறவை இயல்புகளிற் சில வருமாறு: அன் னம் தொடுதோலடியையும் செஞ்சூட்டையுமுடையது (24), பாலி லிருந்து நீரைப் பிரிக்கும் ஆற்றலுள்ளது (692); குயில் கார்மேகத் தைக் கண்டு வருந்துவது (523, 546); மாமரத்தை விரும்புவது (523); சகோரம் நிலவை அருந்துவது (102, 373, 383, 414); மயில் மேகத்தைக் கண்டு ஆடுவது (436, 523); கொக்கு இரைவருதலைக் கருதிக் கபடமாக உறங்குவது (191.)

## விலங்கியல்புகள்

விலங்கியல்புகளாக இவர் புலப்படுத்தியவற்றிற் சில வரு மாறு: எருமை கயவாயையும் செங்கண்ணையு முடையது (24), அதன் கொம்பு இரும்புபோல்வது (325), நெற்கதிரைக் கறித்துக் குதட்டுவது (356); யானை புழுதியாட்டயரும் இயல்பினது (2), ஏழு யர் மும்மத யானை (594), காட்டில் விளையாடுவது (11), மதக்களிப் பால் பாகனை மீறுதல் (251); காட்டுப் பசு நக்கி உயிர் வாங்குவது (281); குரங்கு குழிந்த கண்களையுடையது (100), ஒருவகைக் குரங்கு இரு வேறுருவையும் கருவிரலையுமுடையது,பலாப்பழத்தை யுண்பது (313), நெடுந்தாளை யுடையது (349), மழைக்காலத்தில் கால் தழுவி ஒடுங்குவது (523.)

## மக்கள் இயல்புகள்

மக்களிற் பருவத்தாலும் சாதியாலும் பல்வேறு இயல்புகளும் தொழில்களும் அமைகின்றன. அவற்றை யறிந்து செய்யுள் செய் தலினும் இவர் வல்லவர்.

இவர் பாடிய இரண்டு பிள்ளைத் தமிழ்களினும் குழந்தைக ளின் இயல்புகளையும் விளையாடல்களையும் புலப்படுத்துகின்றார்: கண்பிசைந் தழுதல் (420), குழந்தையன்பு (473), குறுமென்னடை (421), சப்பாணி கொட்டுதல் (3), சிற்றில் சிதைத்தல் (421), சிறு குறும்பு செய்தல் (392, 402), சிறுதேருருட்டல், சிறுபறை முழக்கு தல், செங்கீரை யாடுதல், செவிலியர் மார்பில் உதைத்தல் (392), தளர்நடை யிடுதல் (115), தாளுதைத்து அழுதல் (420), தொட்டிலை உதைத்தல் (368), பண்டிசரிந்தாடல் (366), புழுதி யளைதல் (367, 402), பெருவிரல் சுவைத்தல் (37, 368), வாய்த்தேறல் (14, 37, 115, 313, 367, 391), வாய்நீர் துகிலை நனைத்தல் (14, 401), விம்மிப் பொருமியழுதல் (368.)

இவர் புலப்படுத்திய மகளிர் இயல்புகளும் வழக்கங்களும் பல; அவற்றிற் சில வருமாறு :—

மகளிர் விளையாட்டு வகை: அம்மானையாடுதல், அன்னம் கிளி மயில் மானென்பவற்றை வளர்த்தல், ஊசலாடுதல், கண்பொத்தி விளையாடுதல், கழங்காடுதல், கிளியொடு முத்தாடுதல், சுண்ணமெ றிந்து விளையாடுதல், சோலையில் விளையாடுதல், நீர்வீசு கருவியா கிய சிவிறி வீசுதல், புதுவெள்ளமாடுதல், வண்டலாடுதல், சிறுமி யர் சிற்றில் விளையாடுதல், முற்றிலால் மண்கொழித்தல்.

அவர் விளையாட்டுக்குரிய கருவிகளாகப் பறவைகளும், மானும், முற்றிலும், சிவிறியும், பொற்கழங்கும், மாணிக்கக் கழங்கும், முத்

துப் பந்தும், நீலம், பவழம், மரகதம், முத்து என்பவற்றாற் செய்த அம்மானைகளும் கூறப்படுகின்றன.

அவர்கள் தம் அடிக்குச் செம்பஞ்சுக்குழம்பு பூசுதலும், பல வகை ஆபரணங்களையணிதலும், அகிற்புகையாற் கூந்தலைப் புலர்த்தலும், நகில்களில் தொய்யில் எழுதிக்கொள்ளுதலும் வழக்கம். தட்டான் பட்டறையிலே தாமே முன்னிருந்து ஆபரணம் செய்விப்பரென்று ஒரு செய்யுளிற் புலப்படுத்துகின்றனர்.

குழந்தைகளுக்கும் மகளிருக்கும் பிறருக்கும் உரியனவாகிய ஆபரணங்கள் பலவற்றை இவ்வாசிரியர் உணர்த்தியுள்ளார்; அவை வருமாறு: அரைஞாண், அரைமணி, அரைவடம், ஆரம், இலைமுகப்பூண், உடைதாரம், ஒட்டியாணம், கச்சை, கலாபம், கழல், கிண்கிணி, குண்டலம்,குதம்பை, குழை, கேயூரம், கைவளை, சரி, சன்னவீரம், சிலம்பு, சிறுதொடி, சுடிகை, சூடகம், சூழியம், சூளாமணி, தமனியக்கொப்பு, தரள உத்தரியம், தலைமாலை, தொடலைக்குறுந்தொடி, தோள்வளை, நடுநாயகமணி, நித்திலச்சுட்டி, பட்டம், பாடகம், பிறையென்னுமாபரணம், புயவலயம், பொட்டு, பொற்குதம்பை, பொற்பட்டம், மகரக்குழை, மகரகுண்டலம், மங்கலநாண், மணிமுடி, மணிமேகலை, முத்துக்கச்சு, முத்துக்குதம்பை, முதாரி, முற்றிழை, மேகலை, வாளி முதலியன.

மகளிர் குழந்தைகளை உச்சிமோப்பதும், காலிற் கிடத்திக் குளிப்பாட்டுதலும், வாயிதழ் நெரித்துப் பாலூட்டுதலும், துடையிற் கண் வளர்த்தலும், முத்தாடுதலும், குஞ்சிதிருத்தலும், முகந் துடைத்தலும் சொல்லப்படுகின்றன.

நாணத்தால் தலைகுனிதலும் கடைக்கண்ணால் நோக்குதலும் நகிற்கண்ணை பார்த்தலும், கவலைமிகுதியால் கன்னத்தை உள்ளங் கையாற்றாங்கி நிற்றலும் மகளிர் இயல்பு. அவர்களுடைய முதற் கற்பை ஒருபாட்டிற் குறிப்பிக்கின்றார்(105); பொதுமகள், குலமகள், கைம்பெண் என்னும் மூவர் இயல்பும் இன்னவென்று ஒரு செய்யுளில் (272) புலப்படுத்துகின்றார். மகளிரது அழகு பல வேறு விதமாக வருணிக்கப்பெறுகின்றது.

கன்னிமகளிர் சந்திரனை எருவிட்டிறைஞ்சுதல், கணவனைப் பிரிந்த மகளிர் கூடலிழைத்துப் பார்த்தல், மகளிர் காமபானம் செய்தல், கணவர் இறந்துபடின் மார்பில் அறைந்துகொள்ளுதல், பல்லாண்டிசைத்தல் என்னும் மரபுகள் இவர் செய்யுட்களில் வந்துள்ளன.

"காதோலை பாலித்த தயவாளர்" என்பது மகளிரது ஓலை திரு

மங்கலநாணைப் போன்ற மங்கலமுடையதாகக் கருதப்பட்ட அரிய வழக்கைத் தெரிவிக்கின்றது.

## சாதி இயல்புகள்

சாதியியல்புகளாக இவர் பாடல்களிற் கண்ட செய்திகளிற் சில: கடைசியர் குரவையிடுதல், கட்குடித்தல்; குயவர் திரிகை திரித்தல்; குறமகளிர் தினைப்புனம் காத்தல், குறமகள் குறிபார்த்தல், குறவர் தேனும் தினைமாவும் உண்ணுதல்; வேடர் சீறூரிற் குடிகொள்ளுதல்.

## தொழிலாளர் இயல்புகள்

பலவகைத் தொழிலாளர்களுடைய செயல்களை இவர் எடுத்துணர்த்துகின்றார்; அவை வருமாறு: அஞ்சனத்தாற் புதையல் எடுத்தல், அரிப்பரித்தல், இந்திரசாலம் புரிவோன் யாவரையும் மயக்கித்தான் அதிற்சாராதிருத்தல், இரசவாதம் செய்தல், உழவுத் தொழில், உளியாற் கல்லைத் தகர்த்தல், ஓவியர் எழுதுகோலைக் கொண்டு படம் எழுதுதல், கழைக்கூத்தர் கூத்தாடுதல், தேர்ப் பாகர் முட்கோல் பிடித்தல், படியெடுத்தல், பொற்கொல்லர் ஆபரணம் செய்தல், மருத்துவர் சத்திரவைத்தியம் செய்தல், மள்ளர் பிணையலிடுதல், முத்துக் குளித்தல், விறகு விற்றல், வீடு கட்டுதல்.

## வேறு பலவகை வழக்கங்கள்

அசதியாடுதல், அம்பெய்வோர் இலக்குகளில்எய்து பழகுதல், அருக்கியம் உதவுதல், அளவையினளந்து கொண்டு உத்தியிற் றெளிதல், ஆடையால் வீசுதல், ஆடையின் தலைப்பில் மணியை முடிதல், ஆடையை உதறி உடுத்துதல், உபகாரிகள் இசைப்புலவருக்குத் துகிலும் பொற்கிழியும் அளித்தல், கண்ணேறு காக்க வேம்பை அணிதல், கலியாணத்தில் சோற்றுருண்டையை எடுத்தெறிதல், கலியாணத்தில் மஞ்சள்நீர் விளையாடுதல், கலியாணத்தில் முரசும் சங்கமும் ஒலித்தல், கன்னத்திலடித்தல், கன்னத்தில் தெறித்தல், குடங்கொண்டு நீந்துதல், குழந்தைக்காகத் தாய் மருந்துண்ணுதல், கைகோத்துக்கொண்டு செல்லுதல், கைதட்டியழைத்தல், கையெழுத்திடுதல், கொடைக்கு முரச முழக்குதல், சுரநோயுற்றோருக்குத் திருநீறு பூசுதல், தும்மலாலும் காக்கையாலும் நெல்லாலும் பல்லிசொல்லாலும் நிமித்தம் பார்த்தல், தேரிற் கரும்பு கட்டுதல், தோள் கொட்டுதல், நிழலுக்கு ஒதுங்குதல், பாரத்தால் முதுகுளுக்குதல், பிடர் பிடித்து உந்துதல், பிடரைக் கையால் தாங்கி அண்ணாந்து பார்த்தல், புகையால்

வாழைப் பழத்தைப் பழுக்க வைத்தல், புண்ணிற் காரம் வைத்தல், புயங்கொட்டி நடனமிடுதல், பொழிலைக் குத்தகையாகத்தருதல், பொன்னை உரைத்து மாற்றறிதல், மணம்பேசத் தூதரை விடுத்தல், மணமகளைத் தாரை வார்த்துக்கொடுத்தல், மணிமந்திர ஔஷதங்களால் நன்மை பெறுதல், மருந்துக்கு மாற்றுத் தருதல், மருந்தை உயிர் நீங்கும் வரையிற் கொடுத்தல், மழுவேந்திச் சத்தியம் செய்தல், வடிகட்டுதல், வீட்டைப் புதுக்கி வெள்ளை தீற்றுதல், வெள்ளத்திற்கு அணைபோடுவார் பாம்பென்னும் வைக்கோற்புரியை உருட்டுதல்.

## உலக வழக்குச் சொற்கள்

உலக வழக்கங்களை அறிந்தமைத்ததுபோலவே உலக வழக்குச் சொற்களையும் ஏற்புடைய இடங்களில் இம்முனிவர் அமைக்கின்றார். தென்பாண்டிநாட்டினராகிய இவர் வைத்து என்னும் சொல்நடையை உபயோகித்தல் (256, 325) அந்நாட்டு வழக்கு. அலுவல் (காரியம், 72), திரிய (மீட்டும், 206), தோரணம் வைத்தல் (614), முட்டு (முழங்கால், 644) என்பவை பாண்டிநாட்டு வழக்குக்கள்.

உலக வழக்கிலே பயின்று வழங்கும் சொற்களும் சொற்றொடர்களும் இவர் வாக்கில் வருதற்குப் பின்வருவன உதாரணங்களாகும்: அப்பா (161), அமர்க்களம் செய்தல் (695), அருமைப் பிள்ளை (427), அருவருப்பு (452, 535), இந்தா (114), இன்று நாளையிலே (137), இன்றைக் குழந்தை (418), உடுப்பு (540), உளதோ இலையோ (187), எட்டிப் பிடித்தல் (79), ஓடியாடித்திரிதல் (79), கம்முதல் (368), காயம் (660), கிழம் (531), கிழவி (115), குஞ்சு (184), குத்தகை (336), கொட்டிப்போதல் (437), சரக்கு (697), சிணுங்குதல் (442), சிறு பிள்ளை (353), செட்டு (111), செலவாய் விடுதல் (662), திக்கு (417, 687), துவக்குதல் (159), துளையமாடுதல் (402), நாளையின்றெனை நவிற்றல் (594), நேரிட்டிடப்பட்ட (363), பயல் (622), பரபரப்பு (296), பாவி (384), பிஞ்சு (184), பெண்பிள்ளை (33, 664), பொழுதைக்கு (128), முகப்பு (95, 155, 698), வரத்து (181), வேலை (90, 691.)

அந்த (346), எந்த (1 : 116), மார் (539), நஞ்சு (நைந்து, 675) என்பன போன்ற மரூஉமொழிகளையும் இவர் ஆள்கின்றார். மலையாள வழக்காகிய சோதித்தல் (விஞ்சுதல், 1 : 97), நங்களுக்கு (107) என்பன இவர் செய்யுட்களில் வந்துள்ளன. ஹிந்துஸ்தானிச் சொற்களாகிய சலாம் (6), கபாய் (12, 506) என்பவற்றையும்

பிறதிசைச் சொற்களாகிய துரை (29, 72, 83, 93), சலாபம் (48) என்பவற்றையும் இவர் விலக்கின்றி உபயோகிக்கின்றார்.

இவர் உதித்த ஊராகிய ஸ்ரீவைகுண்டம் ஒரு விஷ்ணு ஸ்தலம். அங்கே வைஷ்ணவர்கள் மிகுதியாக உள்ளனர். அவர்களோடு பழகிய இவருக்கு அவர்களுடைய பரிபாஷையின் பழக்கமும் இருப்பது இயல்பே. இவர் அவர்கள் பரிபாஷைப்படியே திருமாலைப் பரமவீட்டத்தன் (34) என்றும், வீட்டைத் திருமாளிகை (357) என்றும் கூறுவர். அவர்கள் பரிபாஷையைச் சைவ விஷயங்களிலும் பயன் படுத்துகின்றார். ஸ்ரீ வைஷ்ணவர்களைத் ததியரென்றல் பெருவழக்கு; இவர் அச்சொல்லை,

"தவமார், ததியருளத் தானே" (571)

என்று சைவர்களைக் குறிக்க வழங்குவர். பரந்தாமமென்றும், பரமபதமென்றும் முக்தியைக் கூறுதல் வைஷ்ணவர்களிற் பெருவழக்கு; இவரும் முக்தியைக் குறிக்க அச் சொற்களை ஆளுவர் (601, 638, 655-6, 672, 693.)

## அரும்பதங்களும் தொடர்களும்

இவர் சில அரும்பதங்களும் தொடர்களும் வழங்குகின்றார்; அவை: இரைத்தல் - மோக முறுதல் (74), கலாம் - மயிற் கலாபம் (6, 18, 86), கொங்குரை - பொன் (178), சில - இரண்டு (105, 119, 452), தட்டுமாறல் (13), தய்வு (132), திடுக்கம் (197), படலை - தொகுதி (26), புளிறுதல் (104) முதலியன. இவர் வாக்கில் அசும்பு, உச்சிமுச்சி, உவட்டெழுதல், தசும்பசும்பு, மழலைக்குதலை யென்பன பலவிடங்களில் வருகின்றன.

## பாண்டிநாட்டுச் செய்திகள்

பாண்டிநாட்டினராகிய இவர் அந்நாட்டிலுள்ள செந்தில், மதுரை என்னும் இரண்டு தலங்களைப் பற்றியும் இயற்றியுள்ள பிரபந்தங்களில் அவற்றைச் சிறப்பிக்கின்றார். பாண்டிநாட்டின் பெருமை பலவிடங்களிற் கூறப்படுகின்றது. அந் நாட்டைத் தண்டமிழ் நாடென்றும், கன்னிவளநாடென்றும், வைகைவளநாடென்றும் கூறுகின்றார்; அந்நாட்டுக்குரிய பொருநை, வைகை யென்னும் நதிகளையும், குமரித்துறை கொற்கைத்துறை யென்னும் துறைகளையும், பொதியமலையையும், பாண்டியனையும் பாராட்டுகின்றார்.

## சோழநாட்டுச் செய்தி

இவ்வாறு தாம் பிறந்த பாண்டிநாட்டை இவர்பாராட்டுகின்

றது போலவே ஏனையநாட்டின் பெருமையையும் உணர்ந்து ஏற்ற விடங்களிற் சிறப்பிக்கின்றார். இவர் சோழநாட்டுத் தலங்களாகிய சிதம்பரம், திருவாரூர், தருமபுரம், வைத்தீசுவரன் கோயிலென்ப வற்றின் சம்பந்தமான பிரபந்தங்களை இயற்றியுள்ளார். சோணாட்டை, திருவீற்றிருந்த சோணாடு (430), காவிரிநாடு (423, 427, 428, 445, 447, 449), காவேரி வளநாடு (432), புனல்நாடு (429, 448) என்று புகழ்கின்றார். காவிரி நதியையும் அதனாற் சோணாட்டி லமைந்த நிலவளத்தையும் சோற்று வளத்தையும் பாராட்டுகின்றார் (355, 419, 420, 423, 424 -6.)

## கங்கை

தாம் உறைந்த காசிக்குக் கலம்பகம் செய்த இவர் அத்தலத்துள்ள கங்கையின் பெருமைகளை விரிவாகக் கூறியுள்ளார். அது வெண்ணிறமுடையதென்றும், பலதுறைகளை யுடையதென்றும் கூறுவர். அதனை ஆயிரமுகக் கங்கை, தெய்வக் கங்கை, பாகிரதி, மந்தாகினி, வரநதி என்பர்.

## திரிவேணி சங்கமம்

கங்கையும் யமுனையும் வாணிநதியும் சேரும் இடம் திரிவேணி சங்கமமெனப்படும். இவ்வாசிரியர் அங்கே சென்று நீராடியவர். அதன் காட்சி இவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. அதனை நான்கு இடங்களில் உவமையாக எடுத்தாளுகின்றார்.

கங்கை வெண்ணிறமும் யமுனை நீலநிறமும் வாணி செந்நிறமு முடையது. இம் முந்நிறமும் கலக்கும் பொருள்களைப்பற்றிச் சொல்லுகையில் திரிவேணி சங்கமத்தை ஒப்புக் கூறுகின்றார்.

வையைநதியில் மகளிர் நீராடுகின்றனர்; அவர்கள் அணிந்த செஞ்சந்தனக் குழம்பையும், கரிய கத்தூரியையும், வெள்ளிய பச்சைக் கருப்பூரத்தையும் வையைநீர் கரைத்தோடும்போது அந்த மூன்று பொருள்களுக்குமுரிய முந்நிறத்தையும் பெற்றுத் திரிவேணி சங்கமத்தின் தோற்றத்தை அளிக்கின்றது:

“ கண்ணுறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமுங் கத்தூரியும்
கப்புரமு மொக்கக் கரைத்தோடி வாணியுங்
காளிந்தி யுங்கங்கையாம்
விண்ணுறு மளவலாய் விளையாடு புதுவைகை” (86.)

திருவாரூர்த் திருவீதியில் பலவகை மணிகளைப் பதித்த மாடங்கள் விளங்குகின்றன. அந்த மாடங்களிற்பதித்த வயிரங்கள் வெண்சோதியை வீசுகின்றன; நீலமணிகள் கருஞ்சுடரை

விரிக்கின்றன; மாணிக்கங்கள் செவ்வொளி காலுகின்றன. இம் மூவகைச் சோதியும் திருவீதியிலே ஒருங்கு வீசுவதனால் அவ்வீதி கங்கை முதலிய மூன்று நதிகளும் சேர்ந்து விளங்கும் திரிவேணி சங்கமத்தை ஒத்தது :

"புரிகுழன் மடந்தையர் பொன்னெடு மாடத்
தொண்கதிர் வயிரமுந் தண்கதிர் நீலமும்
சேயொளி பரப்புஞ் செம்மணிக் குழாமும்
மாயிரு ளிரிந்து மழுகதி ரெறிப்பச்
சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவநீண் மறுகிற் செல்வது கடுப்ப" (321.)

திருவாரூரில் சோமாஸ்கந்த மூர்த்தியாக எழுந்தருளியுள்ள தியாகராசப்பெருமானது திருக்கோலத்திலே திரிவேணி சங்கமக் காட்சியைக் கண்டு உவக்கின்றார் இவ்வாசிரியர். ஆரூர்ப் பெருமான் திருமேனியிலே கங்கையின் தோற்றத்தையும், உமாதேவியாரின் கோலத்தில் யமுனையின் நிறத்தையும், முருகக்கடவுள் திருவழகிலே வாணிநதியின் காட்சியையும் கண்டு தனித்துக் குடையப் புகுகின்றார் :

"தம்மேனி வெண்பொடியாற் றண்ணளியா லாரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே—அம்மேனி
மானே யமுனையந்த வாணிநதி யுங்குமரன்
தானே குடைவேந் தனித்து" (346.)

பிறிதோரிடத்தில், "யானையின் மதமும் தேனும் எருமையின் பாலும் ஒருங்கே பாய்தல் முறையே யமுனையும் வாணியும் கங்கையும் சேர்ந்து பாய்தலை ஒத்தது" (447) என்கின்றார்.

இதுகாறும் கூறிய விஷயங்கள் இவருடைய பரந்த உலகியலறிவை எடுத்துக் காட்டும்.

## நீதிகள்

தவத்தாலும் அறிவாலும் முதிர்ந்த இம்முனிவர்பிரான் உலகினருக்கு உறுதிபயக்கும் அறம்பொருளின்ப வீடுகளாகிய நால்வகைப் பொருளையுங் குறித்துப் பல அரிய நீதிகளை எடுத்து உணர்த்துகின்றார். நீதிகளைத் தனியே எடுத்து நீதிநெறி விளக்கத்தில் உணர்த்தியதன்றி மற்ற இடங்களிலும் சிலவகையில் அமைத்துத் தெரிவிக்கின்றார்.

### இல்லறமும் துறவறமும்

இல்லறம் துறவறம் என்னும் இரண்டன் இலக்கணங்களும் சிதம்பர மும்மணிக்கோவையில் ஒரு செய்யுளிற் சுருக்கமாக உரைக்கப் பட்டுள்ளன.

"நல்ல நூல்களைக் கற்று அவற்றின் வழிநின்று கற்புடைய மனைவியோடு மகப்பேற்றை விரும்பி நன்ஞளில் இன்பந்துய்த்து அன்பும் அருளும் உடையவனுகி இன்சொற் கூறி விருந்தினரை உபசரித்து அருந்தவத்தினரைப் பாதுகாத்து ஐவகை வேள்வியை யாற்றிப் பிற நல்ல அறங்களை நிறைவேற்றிப் புகழ்பூண்டு பிறன் மனையை நயவாமல் வாழ்தல் இல்லறம்" என்பது அங்கே கூறப் படும் இல்லற இலக்கணம்.

"இல்லறம் பூண்டு வாழ்ந்தபின் ஞானசாஸ்திரங்களைக் கேட்டு மெய்யறிவு வாய்க்கப்பெற்றுப் பொருளையும் இன்பத்தை யும் நீங்கி அருள், பொறை, ஆற்றல், ஒழுக்கம், வாய்மை, தவம், தூய்மையென்னும் குணங்கள் பொருந்தி ஓரறிவுயிர்க்குவரும் துன்பத்தையும் பாதுகாத்துக் காலால் நடந்து தோலுடுத்து என்பு தோற்றும்படி உடம்பினைத் துன்பங்களுக்கு நடுங்காமல் மலை காடு என்பவற்றிற்குச் சென்று சருகையும் நீரையும் காற்றையும் அருந்திப் பனிக்காலத்தில் தண்புனலில் மூழ்கியும் வேனிற்காலத் தில் பஞ்சாக்கினியிலிருந்தும் தவம் புரிந்து ஒழுகுவது துறவறம்" (452) என்பது இவர் கூறும் துறவற இலக்கணம்.

## கல்வி

கல்வியைப்பற்றி நீதிநெறிவிளக்கத்தில் உள்ள செய்திகள் வருமாறு: கல்வி அறம்பொருளின்பம்வீடென்னும் நான்கையும் பயக்கும்; பெரும்புகழை உண்டாக்கும்; கவலையுற்றவிடத்துத் துணையாக இருந்து உதவும். அதைக்காட்டினும் சிறந்த துணை வேறில்லை. தொடங்கும்போது துன்பமாகிப் பிறகு இன்பத்தைப் பயக்கும்; அறியாமையை நீக்கி அறிவை விரிவுபடுத்தும். அது கற்புடைய மனைவியை ஒப்பது: அம்மனைவியினுற் பெறும் செல் வப் புதல்வனே இனிய செய்யுளாகும்; சொல்வன்மை செல்வமா கும். அந்தச் செல்வத்தால் சபை மகிழ்வுறும்படி செய்யும் இயல் புடையோர் சிலரே யாவர்.

எவ்வளவுதான் கற்றிருப்பினும் உய்த்துணர்தல் இல்லை யெனில் அக்கல்வி பயனுருது; உய்த்துணர்வு இருந்தும் சொல் வன்மை இல்லையெனின் அது பயன்பெருது; சொல்வன்மை இருப் பின் பொன்மலர் மணம்பெற்றது போலாகும். அவைக்கு அஞ்சி நடுங்குவோரது கல்வியும் அவைக்கு அஞ்சாத பேதைய ருடைய ஆரவாரச் சொற்களும் பயனற்றனவாம்.

புலவர்களுக்குப் பிரமனும் ஒப்பாகான். அவர்கள் செய்யும் செய்யுட்கள் புகழோடு என்றும் நின்று நிலவுவனவாம்.

தாம் நெடுங்காலம் கற்ற கல்வி சபையிற் பயன்படாமல் நடுங்குவோருக்கு அக்கல்வி அயலானிடத்திற் காணும் தன்மனை வியைவிடப் பொல்லாதது; அவளையேனும் நீத்துவிடலாம்; அக் கல்வி நீக்கினாலும் நீங்குவதன்று.

முன்னரே வருந்திக் கற்றவற்றைப் பாதுகாவாமல் பின்னரும் சில பயிலத் தொடங்குதல் கையிலே உள்ள அரிய பொருள்களை எறிந்துவிட்டு அரிப்பரித்துப் பொருளீட்டத் தொடங்குவது போலாகும். எவ்வளவினதாக இருப்பினும் வறியோரது கல்வி சிறிதேனும் சிறப்படைய மாட்டாது. கல்வியையுடையோருக்கு அக்கல்வியே பெரிய அழகாகும்.

எத்தகைய கல்வி யுடையோராயினும் முழுதுங் கற்றோ மென்று இறுமாப்படைதல் தகாது. முற்றுணர்ந்தவர் உலகில் இல்லை. தம்மைக்காட்டிலும் அதிகமாகக் கற்றோரை நோக்கி, ' இவருக்கு நாம் எம்மாத்திரம்!' என்று கருத்தழிய வேண்டும்.

கல்வி கற்பார் மிகவும் பணிவுடைய ராதல் வேண்டும். கற் றுப் பிறர்க்குரைத்துத் தாம் அவ்வழி நில்லாதாரை உலகத்தினர் பழிப்பர். தாம் கற்றவற்றைப்பிறருக்குப் பயன்படுதற்கு மாத்திரம் அளிப்பார் யமனது துன்பத்துக்கு ஆளாதலையன்றி வேறு பயன் பெறார். கற்கும் நல்லூழ் இல்லாதார் கல்விக்கழகத்தில் தம்மு டைய ஊத்தை வாயைத் திறத்தலினால் தமது அறியாமையைத் தாமே வெளிப்படுத்திக்கொள்வர்.

குற்றமற்ற கல்வியானது அறிவுடையார்பாலல்லாமல் பிறர் பாற்சேராது. கற்றவற்றை உரியவர்களுக்குச் சொல்லவேண்டுமே யன்றிக் கல்லாத பேதையருக்குச் சொல்லப்புகின் குற்றமே உண்டாகும்.

### ஈகைமுதலியன

இங்ஙனமே ஈகையின் இயல்பு, பொருளீட்டும் முறை, இல் லற இயல்பு, முயற்சியின் பெருமை, தற்புகழ்ச்சியின் தீமை, அர சர் இயல்பு, துறவற விலக்கண மென்பன விரிவாகச் சொல்லப் பெறுகின்றன;

" கற்றுத்துறைபோய காதலற்குக் கற்பினாள்... துன்பமலா தில்" (306) என்பதில் இல்லறச் செய்தியை துறவற இலக்கணத்திற்கு உவமை யாக்கி அவ்விரண்டன் இயல்பையும் ஒருங்கே புலப்படுத்தினார்.

சில இடங்களில் யோகியர் இயல்பும் சிவயோகசாதன இயல்பு களும் கூறப்பட்டுள்ளன.

" செல்வ மென்பது சிந்தையி னிறைவே
அல்கா நல்குரவ வாவெனப் படுமே" (476)

என்னும் அடிகள் பொன்னெழுத்திற் பொறிக்கத்தக்கவை.

" பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல் " (226)

என்பது யாவரும் உலகில் நன்மதிப்பை அடைதற்குரிய சிறந்த உபாயமாக உள்ளது.

" ...என்சொலினும்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம் " (217)

என்பதில் உலகத்தாருடைய பேதைமையை விளக்குகின்றார்.

" ஈகையரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
* * * *
ஆவாவிவரென்செய் வார் " (274)

என்பதனால் கடுஞ்சொற் கூறுவார்பால் இவருக்கிருந்த வெறுப்பு எத்தகையதென்பது புலனாகின்றது.

அவாவறுத்துத் தவம்புரிந்து மெய்யறிவு பெற்ற இம்முனிவர் விளக்கும் இத்தகைய கருத்துக்கள் பன்முறையும் ஆராய்ந்து பயன் படுத்தற்குரியன.

## சமய உணர்ச்சியும் தெய்வ பக்தியும்

சைவசமயத்தில் உதித்துச் சைவ ஆசிரியர் ஒருவருக்கு அடியராகிச் சைவ சந்நியாசம் பூண்டு வாழ்ந்த இவருடைய சைவப்பற்றும், சைவ சித்தாந்த நூற்பயிற்சியும், மூர்த்தி தலந் தீர்த்தங்களிலுள்ள அன்பும், குருபக்தியும், தொண்டர்பாலுள்ள பெருமதிப்பும் அளவிடற் கரியவை.

### சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

சைவ சித்தாந்தக் கருத்துக்கள் இவருடைய வாக்கிற் பல உருவங்களில் இடையிடையே மிடைந்து விளங்குகின்றன. பதி பசு பாசங்களென்னும் முப்பொருள்களின் இயல்பைச் சித்தாந்த நூல்களின் கருத்துக்கிணங்க அமைத்துச் சொல்கின்றார்: 'பதி, நாதமும் நாதாந்தமுடிவும் நவைதீர்ந்த போதமும் காணாத போதமாய் ஆதிநடு அந்தங் கடந்து சச்சிதானந்தமயமாகி இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கிய பரஞ்சுடராய் மிளிர்வது; தனக்கென ஒரு குறியும் குணமும் கோலமும் இன்றி எங்கும் செறிந்திருப்பது; அறிவுக்கு அநாதியாகவும் ஐந்துயிர்க்கும் அப்புறத்ததாகவும் மனம் முதலியவற்றிற்கு எட்டாததாகவும் இருப்பது; பஞ்சவித ரூப பர சுகமாய்ப் பூரணமாய் நித்தமாய் இலகுவது; இந்திரசாலம் புரிவோன் எல்லோரையும் தான் மயக்கினும் அம்

மயக்கில் தான் சாராமல் நிற்பதுபோல் ஒட்டற நிற்கும் இயல்பினது; கருவின்றி நின்ற கருவாகவும் உருவின்றி நின்ற உருவாகவும் விளங்குவது; இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்னும் மூன்றையும் திரிகரணங்களாகக் கொண்டு சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களைச் செய்வது; பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் பொருட்டுத் தானே குருவாக வருவது; உயிர்கள் உய்யும்பொருட்டுப் பஞ்சகிருத்தியங்களை நடத்துவது; காலத்தொடு கற்பனை கடந்து ஒளிர்வது; துவாதசாந்தப் பெருவெளியில் துரியங்கடந்த பரநாத மூலத்தலத்தில் முளைத்த முழுமுதலாவது' எனப்பதியின் இலக்கணங்களை விரிக்கின்றார்.

'பசுக்களாகிய ஆன்மாக்கள் அநாதியாகவே பாசத்தாற் கட்டுண்டு நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறவியுள் 84 லக்ஷம் உடல்வகைகளிற் பிறந்துவருவன; நல்வினைப் பயத்தால் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் பெற்று, இறைவனே ஆசானாக எழுந்தருள அவனருளால் பசுகரணம் நீங்கிப் பதிகரணம் பெற்று விளங்குவது. இறைவன் ஒருமலமுடைய விஞ்ஞானகலருக்கு அகக்கண்ணில் திருவுருவக் கோலங்காட்டியும் இருமலமுடைய பிரளயாகலருக்குப் புறத்தே இடபவாகனராகக் காட்சி கொடுத்தும் அருள் புரிவான்' எனப் பசுவின் இயல்புகளையும் அவை அருள் பெறுமாற்றையும் கூறுகின்றார்.

'சிவபெருமான் அருவம் நான்கு உருவம் நான்கு அருவுருவம் ஒன்று என்னும் நவந்தருபேதமாகவும் அட்டமூர்த்தியாகவும் விளங்குவன்; அவனது திருவடியே வீடாக இருக்கும்; அவன் எண்குணத்தான், திகம்பரன், தன் திருச்செவியில் வீணை வாசிக்கும் கந்தருவர்களைக் குழைகளாக அணிந்தவன், சூரியமண்டலத்திடையே வீற்றிருப்பவன், புவனங்களே திருமேனியாக உடையவன்; மலைகளே அவன் புயங்கள், ஆகாயமே திருமேனி, அண்ட கூடமே திருமுடி, பாதலமே பாதம்; அவனே மும்மூர்த்தியுமாக இருந்து முத்தொழிலையும் நடத்துகின்றான்; ஏகபாதருத்திரமூர்த்தியுருவத்தில் தன் இருபுறத்தும் திருமாலையும் பிரமதேவனையும் தாங்கிநிற்கின்றான்; திருமாலை இடப்பாதியிற்கொண்டு சங்கரநாராயண மூர்த்தியாக உள்ளான்; அவன் செய்யும் ஐந்தொழிலும் விளையாட்டுநிமித்தம்; அவனது அருள்மேவின் ஒருதுரும்பும் அகிலாண்டத் தொகுதிகளையும்படைத்தளிக்கும்' என்னும் செய்திகளும், "அத்துவாக்கள் ஆறு; அவை மந்திரமுதலியன; சத்திநிபாதம் நால்வகை; உடல் அறுபத்தெட்டு; நிலம் ஏழு; அவத்தை மூன்று; ஓங்காரம் ஐந்தாலாகியது; மலம் ஐந்து; நாதம் ஒன்பது; வாதனை இரண்டு; மலம்

மூன்று ; குணம் மூன்று" என்பவையும் இடையிடையே சொல்லப் படுகின்றன.

சத்திசிவ தத்துவங்களுக்குள்ள தொடர்பை விரிவாகக் கூறு கின்றார் (514, 549.)

சிவபெருமானே முழுமுதலென உணராமல் வியாசமுனிவர் தம் கை நின்றவாறே நிற்கப்பெற்றாரென்ற செய்தியை இவர் மூன் றிடங்களிற் (467, 494,548) கூறுகின்றனர்; சிவபரத்துவத்தைச்சில செய்யுட்களில் (330, 337, 341, 391, 532, 540, 542) எடுத்தியம்பு கின்றனர்.

சைவசித்தாந்தத்தின் சிறப்பைப் பண்டாரமும்மணிக்கோவை யில் ஒரு செய்யுளில் விரிவாகஉரைக்கின்றார் : "இறைவன் உயிர்த் தொகுதிகள் உய்யும்பொருட்டுச் சுத்தமாயை யென்னும் வயலி னிடையே அருளாகிய வித்தையிட்டுக் கருணையாகிய நீரைப் பாய்ச்சி வேதமென்னும் மரத்தை வளர்த்தான். அம்மரத்தினைச் சார்ந்தவர்களுள் பலர் இலைகொண்டு உவந்தனர்; பலர் தளிர் கொண்டு உவந்தனர்; ஏனையோர் அரும்பும் மலரும் பிஞ்சும் காயும் கொணர்ந்து உவந்தனர். இங்ஙனம் இருப்ப வேதாந்தமென்னும் உச்சியிலே பழுத்த இன்பந்தரும் அருங்கனிபிழிந்து அதன் சாரங் கொண்ட சைவசித்தாந்தமாகிய தேனை நுகர்ந்தனர் சிலரே" (576) என்று இவர் அங்கே கூறுகின்றார். இதன்கண் சைவசித்தாந்தத் தின் தனிப்பெருமையை இவர் விளக்கி யிருத்தல் அறிந்து மகிழ்தற் குரியது.

"மறைமுடிவாஞ் சைவம்" (1 : 104-5) எனவும்,

"அருட்பெருஞ் சைவம்" (567) எனவும்,

"திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தம்" (570)

எனவும் அதனைப் பாராட்டுவர்.

உருத்திராக்கம் திருநீறு என்னும் சிவசின்னங்களையும் பஞ் சாட்சரத்தையும் சில சில இடங்களிற் குறிப்பிடுவர். உருத்திராக் கத்தைக் கண்டிகையென்பர் (1: 55,566.) திருநீற்றை வெண்பொடி, வெண்ணீறு, வெண்பலி, வெண்சாந்து, பூதி என்பர்; திரிபுண்டரத் தைச் சில விடங்களிற் குறித்துச் செல்வர் (1: 38. 14, 136.) பஞ் சாட்சரத்தை,

"ஐந்தெழுத்தைக் கூறி" (1 : 68-9)

என்றவிடத்துக் குறித்ததோடு "கலைமறைக்கு நாயகமா மஞ்சக் கரம்" (631) என்று சிறப்பிப்பர்.

## சம்பிரதாயம்

சைவசம்பிரதாயப்படி இவர் வழங்கும் சொற்களிற் சில: அடிகள், திருக்கூத்து, திருச்சாந்து, திருச்செவி, திருநடம், திருமுன், திருமேனி, திருவடி, திருவமுது, திருவரை, திருவுலா. தாம் ஒன்றை விண்ணப்பித்துக் கொள்ளும்போது,

"பொன்னடிக் கொன்றிது பன்னுவன் கேண்மதி" (470)

"............திருவடிக் கீழ்ச்
சொல்லுவதொன்றிது சொலக்கேண்மதி" (557)

என்று கூறுதலும், ஆணவமலத்தை மகரமென்றலும் (667) சைவ சம்பிரதாயத்தைச் சார்ந்தனவே.

## குருபக்தி

தம்முடைய ஞானதேசிகராகிய தருமை மாசிலாமணிதேசிகரைப் பரசிவமாகவே மரபுபற்றிப் பாராட்டுவர். இவருடைய குருபக்தியின் சிறப்பைப் பண்டாரமும்மணிக்கோவை தெளிவாக எடுத்துக்காட்டும். குருபரம்பரையினர் அனைவரையும் ஒருவராகவே பாவித்தல் மரபாதலின் இவரும் தம் ஆசிரியரைக் கமலை ஞானப்பிரகாசராகவும் தருமை ஞானசம்பந்தராகவும் பாராட்டுகின்றார். இம்முனிவர்பிரானுடைய புகழுக்குரியவராகிய அப்பெரியார் நான்மறை பயின்ற அறிஞரென்பதும், தமிழ்க்கவிஞரென்பதும், கல்விப்பிரசங்கம் செய்பவரென்பதும் இவர் வாக்கால் அறியப்படுகின்றன. தருமபுர ஆதீனத்தில் வழிபடப் பெறும் மூர்த்தி சொக்கலிங்கப் பெருமானென்பதை 588-ஆம் செய்யுளில் உணர்த்துகின்றார்.

## திருத்தொண்டர்கள்பாலன்பு

இவர் திருத்தொண்டர்கள் பாலும் பெருமதிப் புடையவராக விளங்குகின்றார். சிவபக்தர்கள் அரவொலி செய்தலை 4-ஆம் செய்யுளிற் குறிக்கின்றார். அவர்களுடைய திருவுள்ளத்தை,

"சிவமணங்கமழ விண்ட தொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில்" (55)

என்பர். அவர்கள் விண்மிசை யுலகையும் வேண்டாரென்றும் (531), யமபயமில்லாதவரென்றும் (334) கூறுவர். சிவஞானிகளை விழித்துறங்குந் தொண்டரெனவும், ஆனந்தத் திரைக்கடன் மடுத்துழக்குஞ் செல்வச் செருக்கர்களெனவும் புகழ்வர்.

"நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே" (461)

என்று தொண்டர் தொடர்பின்பயனைக் கூறுவர்.

சைவசமய ஆசிரியர்களுள் ஞானசம்பந்தர் முதலியோருடைய வரலாறுகளும் பெருமைகளும் இவருடைய வாக்கில் வந்துள்ளன :

ஞானசம்பந்தரைக் கழுமல மதலையென்றும், கவுணியர் பெருந் தகையென்றும், புகலியர் குரிசிலென்றும் சிறப்பிப்பர். அவர் ஞானப்பாலுண்டது, தாளம் பெற்றது, வையையில் ஏடு எதிரேறச் செய்தது, அமணரை வாதில் வென்றது என்னும் வரலாறுகள் சொல்லப்படுகின்றன.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் உள்ள,

"பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்"

என்னும் அடியைப் பின்பற்றி,

"பொன்னடிக் கொன்றிது பன்னுவன் கேண்மதி" (470)

என்பதை அமைத்தார். மதுரைப் பெருமானை அப்பர்,

"மூலைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி"

என்பர். இவர் அதனைக் கருத்திற் கொண்டு,

"மூலலிங்கம்" (140, 206) என்பர்.

சுந்தர மூர்த்தி நாயனாரை நாவலர் பெருமான், ஒருபெரும் புலவன், பாவலனென வழங்குவர். அவர் சிவபெருமானுக்குச் சொன்மாலை சாத்தியதும், திருத்தொண்டத்தொகை பாடியதும், ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்திற் றேடியதும், சிவபிரானை இருமுறை பரவை நாச்சியார்பால் தூது அனுப்பியதுமாகிய வரலாறுகள் இவராற் குறிக்கப்பெறுகின்றன.

மாணிக்கவாசகரைப் பைந்தமிழ் நவின்ற செங்நாப் புலவன், சொற்றமிழ் விரகனென்பர்; அவரது திருக்கோவையாரைக் காமஞ் சான்ற ஞானப்பனுவலென்பர். அவர் சிவபெருமானைக் குதிரைவீரராக வரச்செய்தது, ஊமையைப் பேசவைத்தது, திருக்கோவையாருக்குத் தில்லைநடராசப் பெருமானே பொருளென்றது ஆகிய செய்திகளை இவர் எடுத்தாள்வர்.

பிற நாயன்மார்களுள் தில்லை மூவாயிரவரை,

"திருத்தொண்டத் தொகைக்கு முதற்பொரு ளாகி
அருமறை கிளந்தசின் றிருவாக்கிற் பிறந்த
அறுபதிற் றாகிய வைம்பதிற்று முனிவர்" (473)

என்று பாராட்டி, அவருள் நடராசப் பெருமானும் ஒருவர் என்பர். சாக்கிய நாயனார் சிவபெருமானைக் கல்லாலருச்சனை புரிந்த செய்தியை 345-ல் உவமையாக அமைக்கின்றார். சண்டீசர் தம் தந்தை தாளெறிந்ததையும், சிவபெருமானணிந்த மாலை முதலியவற்றைப் பெறும் உரிமையுடையாரென்பதையும் புலப்படுத்துவர் (118, 543., 640.) கண்ணப்பநாயனார் காளத்தி இறைவருக்குத் தம் வில்வலி

யால் ஊன் கொணர்ந்து நிவேதித்ததையும் திருமுடியிற் செருப்புக் காலை வைத்ததையும் கூறுகின்றார் (464, 688); அவர்பால் இறைவர் எளியராயினமையை,

"ஊனுண் வாழ்க்கைக் கானவர் குருசில்
உண்டுமிழ் நீர் ருவந்தன ராடியும்
விருப்படிக் கொண்ட மிச்சிலூன் மிசைந்தும்
செருப்படிக் கடிகள் செம்மாந் திருந்தும்
... ... ...
எளிய ராயினர்" (345)

என்ற அடிகளில் இறைவனது கருணைத்திறம் புலப்படக் கூறுவர்.

## மூர்த்திகளின் புகழ்

### விநாயகர்

பலவகை மூர்த்திகளின் புகழையும் இவருடைய செய்யுட்களிற் காணலாம். விநாயகர் யானைமுகமுடையவராதலின் யானையின் இயல்புகளை அவர்பால் ஏற்றித் துதிப்பர். அவர் மும்மதம் பெருக நிற்றலும் புழுதி விளையாட்டயர்தலும் கூறப்படுகின்றன. அவர் தம் தந்தையர்பால் விளையாடுதலைப் பல செய்யுட்களில் (57, 75, 315, 547) கூறுகின்றார்; மதுரைத் தலத்திலுள்ள சித்திவிநாயகர், வேலூரிலுள்ள கற்பக விநாயகர், சிதம்பரத்திலுள்ள கற்பக விநாயக ரென்பாருக்குக் காப்புக் கூறியுள்ளார். விநாயகரைச் சிறுகட் பெருங் கொலைய மழவிளங்களிறு, தொந்தித்தந்தி, கரடமதகரி, கம்பமதத்தர், படாமணி மத்தகத்தந்தி, அஞ்சு கஞ்சக்கரக் கற்பகம், மால்யானைக்கன்று, ஒருகோட்டு மழகளிறு, கைந்நாகத் தானனத்தான், பொழிமதங் கரையும் மழவிளங் களிறு எனப் பாராட்டுவார். 198-ல், "கடமுடையு நறுநெய்க்குண் முழுகியெழு வதையொத்த கரடமதகரி" என்று வருணிக்கின்றார். அவர் தூய்மையுடையவர்களாற் பரவப் பெறுவதும், வீடு பெறும் பொருட்டு முக்காலமும் தொழுவார்க்கு முன்னிற்றலும், கவிதை நலம் பாலித்தலும், மும்மூர்த்திகளாலும் தொழப்பெறுதலும் கூறுவர். அவரை யானையாக உருவகம் செய்து, "புலங்களாகிய யானைகள் ஓடும்படி முழங்கும் யானை" (104) என்றும், "மலையிலே உண்டான கன்னிப்பிடியளித்த ஓரானை என்மனத்துள் வந்து பாசமாகிய தளையை யறுத்துப் பாவமாகிய கடலைக் கலக்கி நேசமாகிய தளையிலே பட்டு நிற்கும்" (600) என்றும் புகழ்வார்.

### முருகக் கடவுள்

இவர் பலவேறு தெய்வங்களையும் பாடும் இயல்பினராயினும் தம்மை இளமையிலே ஆட்கொண்ட முருகக்கடவுளிடத்தே தனி

யன்பு பூண்டவர். அவரையே வழிபடு கடவுளாகக் கொண்டவர். முருகக் கடவுள் விஷயமாக இரண்டு பிரபந்தங்களை இவர் இயற்றியுள்ளார். பிறவிடங்களிலும் அவருடைய புகழ்வகைகளை விரித்துச் செல்வர்.

அவருடைய திருவவதாரம் முதலிய வரலாறுகளைச் சுருக்கமாகக் கந்தர் கலிவெண்பாவில் அமைத்திருக்கின்றார். அவருடைய திருவிளையாடல்கள் பலவற்றையும் அங்கங்கே பாராட்டிச் செல்கின்றார். சரவணப் பூந்தொட்டிலில் விளையாடியது, இந்திரன் முதலியோரை எதிர்த்தது, தகரேறியது, நான்முகனைக் குட்டிச் சிறையிருத்தியது, சிவபெருமானுக்குப் பிரணவோபதேசம் புரிந்தது, வீரவாகு தேவருள்ளிட்ட நவவீரர்களைத் துணைகொண்டது, கிரவுஞ்ச மலையின்மேல் வேலெறிந்தது, சூரசங்காரம் செய்தது, தேவயானையை மணம்புரிந் தருளியது, வள்ளிநாயகியை ஆட்கொண்டு மணந்தது முதலியவற்றைச் சுவைபெறக் கூறுகின்றார். சிவபெருமானும் உமாதேவியாரும் முருகக்கடவுளைச் சீராட்டு தலைப் பல விடங்களில் எடுத்துரைப்பர்.

முருகப்பெருமான் பரசிவத்தினின்றும் வேறல்லரென்னும் கொள்கையையுடைய இவ்வாசிரியர் கந்தர் கலிவெண்பாவில் பரசிவத்துக்குரிய இயல்புகளனைத்தையும் அக் கடவுளுக்கு அமைக்கின்றார்.

"மறைமுடிவில் நின்று நிறை செல்வன்" (353),
"தனிமுத்திக் கொரு வித்தே" (376),
"அறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே" (409),
"அழியாத வீடுந் தரக்கடவன்" (416)

என்பவற்றிலும்அக்கடவுள் பரசிவத்துக்குரிய இயல்புகளுடைமை புலப்படுத்தப் பெற்றுள்ளது.

"தினகரபுரித் தேவ தேவன்" (356),
"செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள" (361-5),
"ஆதிப் பிரானென்று மும்முதற்
கடவுளு மடித்தொழும் பாற்ற" (365),
"முத்தேவா மிறைவரு முறைமுறை
பணிய விருக்கு முதற்றேவே" (390),
"ஒருவ னிருவ ரொடுகை தொழுந வுபய சரணன்" (410),
"மூலமெ னக்குல நான்மறை யோலிடு முழு முதலே" (376),
"தினகர புரிவரு தனிமுதல்" (389),

என்பவற்றில் முருகவேளுடைய முழுமுதற்றன்மையை உணர்த்துகின்றார்.

" திருவடித் துணையென் முடிபதித்தவடு
வாருத மெய்ப்புக ழாளியை " (352),
" எம் ஐயனை " (353),
" எனை முத்தித் தடங்கரை விடுப்பவன் " (419)

என்பவற்றில் அவர் தமக்கு அருள் செய்ததைக் குறிப்பிக்கின்றார்.

" ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழியவெவ ரெவர்கட்கு
மூன்கண் ணுளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை " (416)

என்னும்போது இவருக்கு அத்தெய்வத்தின்பாலுள்ள முறுகிய பக்தி புலனாகின்றது. அவ்வத் தெய்வங்களைத் தலைமையாக வைத்துப் பாராட்டும்போது அவற்றை உயர்வாகச் சிறப்பிக்கும் இம் முனிவர் பிரான் தியாகப்பெருமானைச் சொல்லுகையில்,

" என்னுயிர்க் கொக்கு மிளஞ்சேயொ டேழுல கீன்றவனை
மன்னுயிர்க் கொக்குங் கமலைப் பிரான் " (327)

என்கின்றார். இங்கே பிறதெய்வத்தைப்புகழும்போதும், " என்னுயிர்க் கொக்கு மிளஞ்சேய் " என்று முருகப்பிரானைப் பாராட்டுமிதனால் அக்கடவுளை இவர் மறப்பினும் இவர்நா மறவாதென்பதை உணர்ந்துகொள்ளலாம்.

இம்முனிவர்பிரானுடைய நாமமாகிய குமரகுருபரரென்பது முருகக்கடவுளுக்குரிய திருநாமங்களுள் ஒன்றே. இவர் அப்பெயரால் அக்கடவுளை,

" அருள்குடி கொண்ட குமரகுருபரன் " (401-5)

எனக் குறிக்கின்றனர்.

முருகப்பெருமானுக்கு வள்ளியம்மையோடு விளையாட்டுப் புரிவதிற் பெருவிருப்பம் உண்டு; அவ்விளையாடல்களைத் தண்டமிழ் மொழியிற் சுவைபடப்பாடுவது இம்முனிவருக்கு விருப்பம். எத்தனை விதமாக அவ்விளையாட்டை மனக்கண்ணாற் கற்பனை செய்து பார்க்கின்றார்! எத்தனை காட்சிகளைத் தம் செய்யுளோவியத்தில் அமைத்துக் காட்டுகின்றார்!

" திருமகளைப் போலப் பேரழகுடன் தோன்றிய தேவயானையாகிய குமரி இருப்ப, மயில் நடனம்புரியும் குளிர்ந்த தினைப்புனம் நிறைந்த மலைச்சாரலிற்போய்ச் சிறுகுறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமரன் " (6) என்று ஒரு முறை கூறுகின்றார்.

"பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட் புலோமசை வளர்த்த தேவயானை விளையாடுபன்னிருபொருப்பன்" என்று முதலிற் கூறியவர் தொடர்ந்து, "விருப்பனைத்தும் கோமேவு சாரற் குறச் சிறுமி மேல் வைத்த குழகன்" (351) என்று புகழ்கின்றார்

அவர் கிழத்திருக்கோலங்கொண்டு வள்ளிநாயகிபாற் சென்று அவளை மணந்த செய்தியை,

"தெய்வ மகக்கோல மேழுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமு னடந்துமற்றத்
திருக்கோல முடனொரு மணக்கோல
மானவன்" (361)

என்று அழகுபெற அமைக்கின்றார்.

மும்முதற் கடவுளும் ஆதிப்பிரானென்று தம் அடித்தொழும் பாற்றி நிற்ப அவரோ,

"கூனேறு மதிநுதற் றெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவடொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி" (365)

நிற்கின்றார்;

"அம்பவளக்கொடி யேவளர் கொம்பே" (369)

என்று தினைப்புனத்தில் உயிர் சோர்கின்றார்;

"கனியொடு சுவையமு தொழுகிய சொற்பயி றத்தாய்வேள்
கணையொடு பிணையென வுலவு கடைக்கண் மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய வெழிலி தழைத்த குழற்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே" (390)

எனவும்,

"பெருகு சுவைத்தெளி நறவொழு கக்கனி கனியமுதே
பிடிநடை கற்றிட வடிகள் பெயர்த்திடு மடவனமே
கருவரை நெக்குட னுருக மிழற்றுமொர் கிளியரசே
கருணை செயத்தகு மளியனிடத்து" (439)

எனவும் பாராட்டி நிற்கின்றார்.

"இயலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன்" (410)

ஆகிய அப்பெருமானை,

"அழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி" (367)

என்று இவர் போற்றுகின்றார். எழுதற்கரிய அத்திருவுருவை முருகனடியார்கள் விழிகளிலும் மனத்திலும் எழுதி எழுதி இன்புறுவார்களென்பதை,

"வடிவி னழகு மெழுத வரிய புயமு நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின் மணியு மணிகொள் கச்சையும்
கடவு மயிலு மயிலு மொழுகு கருணை வதன பத்மமும்
கமல விழியும் விழியு மனமு மெழுதி யெழுதி நித்தலும்
அடிக ளெனவு னடிகள் பணியு மடியர்" (400)

என்பதில் தெரிவிக்கின்றார். அவ்வடியார் குழுவில் ஒருவராகிய இவர் தம்முடைய முதற்பிரபந்தத்திலே செந்திற்பிரான் திருக்கோலத்தைக் கேசாதிபாதமாக வருணித்து உவக்கின்றார். பிறரால் எழுதுதற்கரிய முருகப்பிரான் திருவுருவை அடியர் தம் மனத்திலும் விழியிலுமெழுதுவர்; இவர் அவற்றோடு நில்லாது நாமும் ஓரளவு அனுபவிக்கும்படி தமது செய்யுளில் சித்திரித்து அமைத்து வைத்திருக்கின்றார்.

## அம்மை

உமாதேவியாரைப் பற்றிய செய்திகளாக இவர் கூறுவன வருமாறு:—

அவ்வம்மை திருமாலுக்குத் தங்கையென்பது, இறைவன் நடனம் புரியும்போது அம்மை தாளங் கொட்டுவது, சதாசிவ மூர்த்தியின் துடையில் அம்மை வீற்றிருத்தல் (37), அம்மையின் கண்களிலிருந்து கலைமகளும் திருமகளும் உதித்தது (53), அம்மையின் கலாபேதங்களுள் சந்திரனும் ஒன்று (64), திருமகளும் கலைமகளும் தேவியின் சேடியர், அம்மை கரும்புவில்லையும் பஞ்சபாணத்தையும் உடையவள், சந்திரமண்டலத்தில் வீற்றிருப்பள் (70, 75), கலைமகள் அம்மையின் ஒருகூறு (95), சர்வம் சக்திமயம் (86, 362), அம்மை தன் திருக்கரத்திற் கிளியை ஏந்தியிருத்தல், சிவபெருமானுக்கு மனைவி தாய் தங்கை மகளென்று முறைகூறும் தொடர்புடையளாதல் (514), அம்மையின் கையில் கங்கை உதித்தது (540); இவற்றுட் சில தேவிக்குரிய நூல்களாலே தெரியக்கூடியவை.

## தல வரலாறுகள்

பிற்காலத்தில் இந்நாட்டில் தலவழிபாடு பெருகியது. தலங்களின் வரலாறுகளை அறிவதில் யாவரும் ஊக்கங் கொண்டனர். தலபுராணங்கள் பல உண்டாயின. புலவர்கள் தல சம்பந்தமான பிரபந்தங்களை இயற்றி அவற்றில் தலவரலாறுகளை அமைத்துக் காட்டினர். இத்தகைய காலத்தே அவதரித்த குமரகுருபரர் இயற்றிய நூல்களில் இரண்டை யன்றி ஏனையவை தலங்களின் சார்புடையனவாகவே உள்ளன.

தலச் செய்திகளை இவர் பலவகையிற் சமற்காரமாக அகத்

துறையமைதிபெறவும் பிறவாறும் அமைப்பது முன்னமே கூறப் பட்டது.

திருச்செந்தூரை அலைவாயென்றும், செந்திப்பதி யென்றும் கூறுகின்றனர்.

## மதுரை

மதுரைத் தலத்தின் பெருமையை அந்தத் தலத்தைச் சிறப்பிப் பதனாலும் அங்குள்ள திருக்கோயில் தீர்த்தம் என்பவற்றையும் மூர்த்திகளையும் சிறப்பிப்பதனாலும் வெளிப்படுத்துவர்.

மதுரையின் திருநாமங்கள் : ஆலவாய், கடம்பவனம், கூடலம் பதி, சிவராசதானி, சீவன் முத்தித்தலம், துவாதசாந்தத்தலம், நான் மாடக்கூடல், நீபவனம், மதுரைமூதூர், மாடக்கூடல்.

அங்கே சங்கமிருந்தமையாலும் பல புலவர்கள் தமிழ் ஆராய் தற்கு இடமாக இருந்தமையாலும் அத்தலத்தை, தமிழ்மதுரை, தண்டமிழ்க்கூடல், சங்கத்தமிழ்க்கூடல், முச்சங்கம் வளர்கூடல், தமிழின் இயல்பயில் மதுரை, முத்தமிழ் தேர்தரு மதுரை, விரி தமிழ்க்கூடல் என்பர். வடகலை முதலிய பலவகைக் கலைகளை ஆராய்ச்சி செய்வார் இருந்தனரென்பதை,

" வடகலை யலபல கலையொடு தமிழ்வள ருங்கூடல் " (182),
" வடகலை தென்கலை பலகலை யும்பொதி மதுரை வளம்பதி " (204)
என்பவற்றால் அறிவிப்பர்.

" அறம்வளருந் தமிழ்க்கூடல் " (199)
என்பதனால் அறச்சிறப்பும்,

" செய்யாள்செய் சரக்கறையாந் திருவாலவாய் " (122)
என்பதனால் பொருட்சிறப்பும் உடையதென்பது கூறப்பட்டது.

அத்தலத்துத்தீர்த்தங்களாகிய வையையும், பொற்றாமரையும் புகழப்பெறுகின்றன. பொற்றாமரைத் தீர்த்தத்தைக் கனகமன்னு தடநளினி (13) என்பர். அங்கே சோமசுந்தரக் கடவுள் இந்திர விமானத்துள் எழுந்தருளியிருப்பதும், அவ்விந்திர விமானம் எட்டு யானைகளால் சுமக்கப் பெறுவதும் சொல்லப்படுகின்றன. வெள்ளி யம்பலம், அறுகாற்பீடமென்பனவும், அத்தலத்திற் கோயில் கொண்டெழுந்தருளிய முருகக் கடவுள் திருநாமமாகிய முத்துக் குமாரரென்பதும் குறிக்கப்படுகின்றன. அங்கே நிகழும் பிட்டுத் திருவிழா, தெப்பத்திருவிழா முதலியவற்றின் தொடர்புடைய செய்திகள் இடையிடையே வருகின்றன.

சோமசுந்தரக் கடவுளின் திருநாமங்கள்: அபிடேகச் சொக்கர், அழகிய சொக்கர், கடம்பவனச் சொக்கர், கடம்பவனேசர், கர்ப்

பூரச் சொக்கர், கலியாண சுந்தரர், சவுந்தரமாறர், சுந்தரர், சொக்கப் பெருமான், சோமசுந்தரர், பழியஞ்சியார், புழுகுநெய்ச் சொக்கர், மதுரேசர் முதலியன.

சோமசுந்தரக்கடவுள் சுந்தரபாண்டியராக எழுந்தருளி அரசாண்டவராதலின் அவரைச் சுந்தரமீனவன், சவுந்தர மாறன், கைதவக்களிறு எனப் பாராட்டுவதோடு, அவ்வரசிற்குரியனவாகிய வேப்பமாலை, மீனக்கொடி, கனவட்டமென்னுங் குதிரை (105) என்பவற்றையும் எடுத்து இசைப்பர்.

மீனாட்சியம்மையின் திருநாமங்கள் : அங்கயற்கணம்மை, அணங்கரசு, அபிடேகவல்லி, அபிராமவல்லி, கயற்கட்குமாரி, கர்ப்பூரவல்லி, கவுரியர்குலமணி, குமரித் துறையவள், கோமகள், சங்கம் வளர்ந்திட நின்றபொலன்கொடி, சுந்தரவல்லி, தடாதகாதேவி, பாண்டிப்பிராட்டி, மங்கையர்க்கரசி, மகரத்துவசமுயர்த்தபொலங்கொடி, மதுராபுரித்தலைவி, மதுரைக்கரசு, மதுரைத் துரைமகள், மதுரைப் பெருமாட்டி, மரகதவல்லி, மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளி, மாணிக்கவல்லி, மும்முலைத் திரு, வழுதிமகள், வைகைத் துறைவி, வைகைவள நாட்டரசு.

மீனாட்சியம்மை அரசாண்ட சிறப்பையும் (13, 32), திக்குவிஜயச் சிறப்பையும் (30, 33, 35, 39, 40, 41, 99) பலவிடங்களில் எடுத்துரைப்பர்.

இவரது வாக்கில் வந்துள்ள மதுரைத் திருவிளையாடற் செய்திகள் வருமாறு :

சோமசுந்தரக் கடவுள் அங்கம் வெட்டியது, இந்திரன் பழி தீர்த்தது, இறையனாரகப் பொருள் நூலை அருளியது, உக்கிரபாண்டியருக்கு வேலளித்தது, உலவாக்கோட்டையருளியது, கரிக்குருவிக்கு அருள் செய்தது, கல்லானைக்குக் கரும்பருத்தியது, கால்மாறியாடியது, ஞானசம்பந்தரது ஏடு வையையில் எதிரேறச் செய்தது, தருமிக்குப் பொற்கிழியளித்தது, நரியைப் பரியாக்கியது, நாரைக்கு முத்தி கொடுத்தது, பழியஞ்சியது, பன்றிக் குட்டிகளுக்குப் பால் கொடுத்தது, பாண்டியன் சுரந் தீர்த்தது, பாணபத்திரருக்குப் பலகையிட்டது, பிட்டுண்டது, மண் சுமந்தது, மாபாதகந் தீர்த்தது, மாமிக்குக் கடல் வருவித்தது, யானை யெய்தது, வலைவீசியது, வளை விற்றது, விருத்தகுமார பாலரானது, விறகு விற்றது, வெள்ளை யானை சாபந் தீர்த்தது, முருகக்கடவுள் உக்கிர குமாரராகியது, அவர் கடல் சுவறவேல் விட்டது, மேகத்திற்குத் தளையிட்டது முதலியன.

## திருவாரூர்

திருவாரூரை அந்தணரூர், ஆரூர், கமலாலயம், கமலை யென்பர். அது மண்மகளின் இதய கமலமாதலையும், அங்குள்ளார் சிவகணங்களாகத் தோற்றுதலையும், அத்தலத்திற் பிறத்தலால் முத்தியுண்டென்பதையும் கூறுவர். அங்குள்ள ஆழித்தேரின் சிறப்பும் (310), ஆலயமாகிய பூங்கோயிலின் பெருமையும், திருமதிற்பெற்றியும், தேவாசிரயனென்னும் காவணத்தின் உயர்வும், செங்கழுநீரோடையின் புகழும் உரைக்கப்பெறுகின்றன.

அத்தலத்தில் வன்மீகநாதர் புற்றிற்கோயில் கொண்டெழுந்தருளியிருத்தலை ஒருசெய்யுளிற் கூறுவர் (343,) தியாகேசர் சோமாஸ்கந்த மூர்த்தியென்பதைக் சிலவிடங்களிற் புலப்படுத்துவர் (313, 340, 346.) அவர் திருமாலின் மார்பிலிருந்து பூவுலகுக்கு எழுந்தருளிய வரலாற்றையும் (349), அரசுவீற்றிருந்ததையும் (333), சுந்தரமூர்த்திநாயனாரின் பொருட்டுப் பரவைநாச்சியார்பால் இருமுறை தூதுசென்றதையும் உரைக்கின்றார். அவரை அருமைப் பெருமாள், இருந்தாடுபவர், கமலேசர், கமலைப்பிரான், கிண்கிணிக்காலழகர், செல்வத்தியாகர், தியாகேசர், தேவரகண்டர், வீதிவிடங்கர் என்னும் திருநாமங்களாற் குறிப்பர்,

## சிதம்பரம்

சிதம்பரத்தைத் தில்லை, தெய்வப்புலியூர், புண்டரீகபுரம், புலியூர், பெரும்பற்றப் புலியூரென்னும் நாமங்களாற் குறிப்பர். அத்தலம் விராட்புருடனது உள்ளக்கமல மென்பர். அங்கே எழுந்தருளியுள்ள கற்பகவிநாயகரையும், கோவிந்தராசப்பெருமாளையும் பற்றிய செய்திகளைக் கூறுவர். நடராசப்பெருமான் திருநடம்புரியும் திருச்சிற்றம்பலத்தை அம்பலம், கடவுண்மன்று, சிற்சபை, சிற்றம்பலம், புண்ணியப்பொது, பொது, பொற்றூது பொதிந்த சிற்சபை, பொன்மன்றம், மணிமன்று, மன்று என்பர். ஒரு செய்யுளில் சிற்றம்பலம், பேரம்பலம், பொன்னம்பலமென்பவற்றை ஒருங்கேயுரைத்தார்; இவை மூன்றும் சிதம்பரத்திலுள்ள வெவ்வேறு சபைகளாகும்.

நடராசப் பெருமானை அம்பலக்கூத்தன், அற்புதக் கூத்தன், வைதிகக் கூத்தன் என்பர். அவர் ஆடுந் திருக்கூத்தை அற்புதக் கூத்து, ஆனந்தநடம், தாண்டவம், பரமநாடகம், மாநாடகம் என்று புகழ்வர். அத்திருநடனத் திருக்கோலம் ஓமெனும் எழுத்தின் வடிவையுடையதென்றும் ஐந்தொழிலையும் அறிவிப்பதென்றும் உரைப்பர். பதஞ்சலிக்காக நடனம் புரிந்தருளியதையும்,

காளியோடு வாதுசெய்து ஊர்த்துவ தாண்டவமாடியதையும், பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் அருள்பெற்றதையும், உபமன்யு முனிவருக்குப் பாற்கடல் அருளியதையும், இடத்தாளைத் தூக்கி யாடுதலையும் பாராட்டுவர். இடத்திருத்தாளைக் குஞ்சிதகமல மென்பர்.

திருநடனத்தை தம் உளக்கண்ணால் அனுபவித்த இம்முனிவர் பிறரையும் அக்காட்சி பெறும்படி ஒருசெய்யுளில் அறிவுறுத்துகின்றார்:

"ஊற்றிருக்குந் தில்லைவனத் தசும்பிருக்கும் பசும்பொன் மன்றத்
தொருதா ளூன்றி...
........................
கண்டறு டுந்திறங் காண்மினோ காண்மினோ" (518.)

நடனதரிசனம் கண்டார் யமபயமிலராவரென்பதையும் முத்தியடைவரென்பதையும் சில செய்யுட்களால் தெரிவிக்கின்றார்.

## புள்ளிருக்குவேளூர்

புள்ளிருக்குவேளூராகிய வைத்தீசுவரன் கோவிலுக்குப் பல திருநாமங்கள் உண்டு. அவற்றுள் ஆதிவயித்திய நாதபுரி, கந்தபுரி, குருகூர், சடாயுபுரி, தினகரபுரி, பருதிபுரி, புள்ளூர், வேதபுரி, வேளூரென்பன இவராற்கூறப்பெறுகின்றன. இங்கே எழுந்தருளியுள்ள கற்பகவிநாயகரையும், வைத்தியநாதரையும், தையல் நாயகியம்மையையும் இவர் பாராட்டுகின்றார். வைத்தியநாதரைத் தீராதவினைதீர்த்த தம்பிரானென்பர். இத்தலத்துள்ள முருகக் கடவுளுக்குரிய முத்துக்குமாரர், சேனாதிபதியென்னும் திருநாமங்களை வெளியிடுவர். இங்கே இராமர், இலக்குவன், எழுமுனிவர், சடாயு, சம்பாதி, சூரியன், வேதங்கள் பூசித்த செய்தியை யுரைப்பர். சித்தாமிர்தத் தீர்த்தத்தைச் சிறப்பிப்பர். இந்தத் தலத்தில் திருக்கோயில் விபூதிக்குண்டத்திலிருந்து வெண்சாந்தெடுத்தும் அங்கசந்தானத் தீர்த்தத்தினின்று மண்ணெடுத்தும் உண்டோர் நோய்நீங்கிச் சுகம்பெறுதலையும் (415), பேய்பிடித்தோர் வந்து ஆடுதலையும் (417) இவர் தெரிவிக்கின்றனர்.

## காசி

காசித்தலத்தை அவிமுத்தம், ஆனந்தவனம் என்றும், விசுவநாதரை அகிலேசர், காசிநாதரென்றும், விசாலாட்சியம்மையைப் பெருந்தடங்கணம்மை, ஆனந்தவல்லியென்றும் கூறுவர். இங்குள்ள கங்கையையும் மணிகர்ணிகைத் துறையையும் சிறப்பிப்பர்.

இங்கே உயிர்கள் இறக்கும்போது விசுவநாதர் எழுந்தருளி வந்து பிரணவோபதேசம் செய்வரென்பதும் அவ்வுயிர்கள் சாரு

பம் பெறுமென்பதும் பலவகை நயம்படச் சொல்லப்பெறுகின்றன. இத்தலத்தில் யமபயமின்மையும் வைரவக்கடவுளே இங்கே தண்டிக்கும் அதிகாரியாக உள்ளாரென்பதையும் இவர் உணர்த்துகின்றூர்.

## பிறதலங்கள்

இத்தலங்களையன்றிப் பிறதலங்களைப்பற்றிய செய்திகளும் இடையிடையே வருகின்றன.

காஞ்சீபுரத்தில் அம்பிகை அறம்வளர்த்தமையும், திருநெல்வேலியில் இறைவர் வேயீன்ற முத்தராக எழுந்தருளியதும், திருவிடைமருதூரில் தம்மைத் தாமே பூசித்துக்கொண்டதும், கயிலாயம், காளத்தி, பொதியில், முதுகுன்றம், மேருவென்னுமிடங்களில் எழுந்தருளியிருப்பதுமாகிய செய்திகளை இவர் செய்யுட்களிலே காணலாம்.

## திருமால்

சைவசமயக் கடவுளரைப் போற்றிப் பாராட்டும் இவர் ஏனைய தெய்வங்களையும் உரிய இடங்களிற் பரவிச் செல்கின்றூர். திருமாலை,

"பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்" (3) "துழாய்முடித் தீர்த்தன்" (6) "திருவைப் புணர்பொற் புயமைப்புயல்" (176) "ஆழியான்" (179) "தாமரைக் கண்டுயிலுமால்" (184) "மலர்மடந்தை கொழுநர்" (324) "பொன்னுயிர்க் கொண்கண்" (327) "நடுமுதல்" (328) "பைந்துழாய் முகில்" (333) "கருங்கடல் வண்ணன்" (337) வண்டுழாய் முகுந்தன்" (349) "பங்கயச் செல்வியிருகொங்கைக் குவட்டுவளர் பச்சைப் பசுங்கொண்டல்" (351) "நேமியான்" (364) "முண்டகக் கண்ணன்" (385) "ஆதி நான்மறை வேதியற் பயந்த ...மாதவர்" (464) "மாயோன்" (464) "புயல்வண்ணப் பண்ணவன்" (539) "வாரித்தண் புனற்றுஞ்சும் மால்" (539) "மலர்மகள் கொழுநன்" (540) "துழாய்முதல்" (545) "பைந்துழாய் மௌலிப் பண்ணவன்" (546) "வண்டுமு துழக்குந் தண்டுழா யலங்கற் புரவுபூண் டகிலம் பொதுக்கடிந் தளிக்கும் கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணன்" (567) "அராவணையினறி துயிலமர்ந்த கடவுள்" (570) "புருடோத்தமன்" (573) "கொண்டல் மணிவண்ணன்" (672) "துழாய்ப் படலை விடலை" (673)

என்னும் தொடர்களால் குறிப்பர்.

அவருடைய திருமார்பில் திருமகளும் திருத்துடையிற் பூமிதேவியும் இருத்தலை ஓரிடத்தில் உய்த்துணரவைப்பர் (105); அவர் புட்கொடி கொள்ளுதலும் (206), பீதாம்பர முடைமையும் (327), மோகினி யுருவமெடுத்ததும் (696), தசாவதார மெடுத்ததும் (464) சொல்லப்பெறுகின்றன.

" கேசவன் கால்வீச வண்டகோ ளகைமுகடு
கிண்டுவெள் ளருவி பொங்கி " (100)

என்பதில் திரிவிக்கிரமாவதாரச் செய்தியைக் காணலாம்.

" தம்பஞ் சுமந்தீன்ற மானிட விலங்கு " (70),

" மானிட மடங்க றாணிடைத் தோன்றி
ஆடகப் பெயரி னவுணன்மார் பிடந்து
நீடுபைங் குடரி னிணங்கவர்ந் துண்டென " (313)

என்பவற்றில் நரசிங்காவதாரச் செய்தி வந்தது.

" மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி வில்லியார் " (365)

என்று இராமாவதாரத்தைச் சுட்டுவர்.

கண்ணபிரானையும் அவர் செயலையும்,

" குடமொடு குடவியர் பாணிகைக் கோத்திடு.........
கார்முகச் சூற்புயல் " (12)

" நின்றூதுங் குழலிசை பழகிய மழைமுகில் " (22)

" புள்வாய் கிழித்த தூவியம்பு " (319)

"செங்காற் கருங்கட் பைந்தொடியார்
சிற்றூப் பாடிப் பெருங்குடியிற்
றீம்பா றிருடிக் கட்டுண்டு
திரியா வண்ணம் " (355)

"விளங்கனி யொன்றெறி வெள்விடை" (661)

என்பவற்றிற் குறித்துள்ளார்.

## இந்திரன் முதலியோர்

இந்திரன், இந்திராணி, காமன், குபேரன், சத்தமாதர், சூரியன், திருமகள், துர்க்கை, நந்திதேவர், பிரமன், முப்பத்துமுக்கோடி தேவர், யமன்,வருணனென்னும் தெய்வங்களைப்பற்றிய செய்திகள் இவர்செய்யுட்களில் விரவிவரும்.

## கலைமகள்

கலைமகள்பால் இவர் பேரன்பு பூண்டவர். சகலகலாவல்லி மாலை யெனப் பத்துச் செய்யுட்களாலும், இரண்டு பிள்ளைத்தமிழ்களிலு முள்ள இரண்டு செய்யுட்களாலும் அப்பிராட்டியை நாவாரத் துதித்துப் புகழ்வதோடு வேறிடங்களிற் சார்த்துவகையாலும் அவள் பெருமையை உணர்த்துகின்றார்.

" புண்டரிக வீட்டிற் பொலிந்து மதுரச்
சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்
றவளுநின் சொரூபம்" (95)

என்று அம்பிகையை நோக்கிக் கூறும் செய்யுளால் கலைமகளைத் தேவியின் அம்சமாகவே இவர் கொண்டனரென்று தெரியவரு

கின்றது. காளிதாசராகிய கவிஞர் அங்ஙனமே கொண்டனர். அதனால் அவ்வம்மையை மிகச் சிறப்பாக இவர் பாராட்டுகின்றார்.

கலைமகள் வெண்டாமரையில் எழுந்தருளியிருத்தலும், பிரமன் நாவில் இருத்தலும், தொண்டர் நாவில் இருத்தலும், அன்பர்களுடைய கண்ணுங் கருத்தும் நிறைந்து இலங்குதலும் இவர் செய்யுட்களிற் கூறப் பெறுகின்றன.

அத்தேவியைக் கலைக்கொடி, சொற்கொடி, சொற்கடற்றெள்ளமுது,ஞானப்பிராட்டியென்பர். அவள் ஞானத்தின்றோற்றமென்ன நிற்பவளென்றும், தெளிக்கும் பனுவற்புலவோர் கவி மழை சிந்தக்கண்டு களிக்குங் கலாபமயிலென்றும், நூற்பெருங் கடலுள் நுண்பொருள் தெரித்து நாற்பயன் கொள்ளும் நாமகளென்றும், கல்விப் பெருஞ் செல்வப்பேறென்றும் பொதுவகையில் கல்விக்குத் தெய்வமாதலை எடுத்துரைத்தும், தமிழொடுந் தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி, முதுபாடலெழுதா மறையோடும் இசைமுத் தமிழ்பாடும் இளமான், வடநூற் கடலுந் தமிழ்ச் செல்வமும் காப்பவளென்று இருமொழிக்கும் உரிமையுடையளாதலை விளக்கியும்,

> " தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலி னன்பினைந்
> திணையென வெடுத்த விறைநூற்
> றெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதிமம்" (10),

> " மதுர மொழுகுங்
> கொழிதமிழ்ப் பனுவற் றுறைப்படியு மடநடைக்
> கூந்தலம்பிடி " (55)

என்பவற்றில் தமிழின்பால் தனியுரிமை பூண்டிருத்தலைச் சிறப்பித்தும் செல்கின்றார்.

> " நளினப் பொகுட்டெமது நன்னெஞ்செனக்
> குடிபுகும் ஞானப் பிராட்டி " (358)

என்பதில் கலைமகள் தம் நெஞ்சிலும்,

> " என்னவி லுறைந்த வெள்ளை
> வள்ளக் கமலத்தவள் ... இசைத்தனள்" (598)

என்பதில் தம் நாவிலும் குடிகொண்டமையைப் புலப்படுத்துகின்றார். இவற்றால் இவர் கலைமகளின் திருவருட்குப் பாத்திரராகி நாவன்மை பெற்றவரென்பதை அறியலாகும். இல்லையெனிற் பரம சைவராகிய இவர்,

> " விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும் விளம்பிலுன்போற்
> கண்கண்ட தெய்வ முளதோ சகல கலாவல்லியே" (710)

என்பதற்கு நியாயமில்லை யன்றோ?

## சிறப்பியல்கள்

இதுகாறும் கூறிய செய்திகள் இம்முனிவர்பிரானது புலமையையும், உலகியலறிவையும், சமயஞானத்தையும், தெய்வபக்தியையும் விளக்கும். இவர்பாலமைந்துள்ள சிறப்பியல்புகள்சில இவருடைய சான்றாண்மையை நிலைநிறுத்தும் பெற்றியுடையனவாக உள்ளன.

### அடக்கம்

நிறைபுலமை சான்ற இவர் தம்முடைய இன்சுவை நிரம்பிய செய்யுட்களை,

"சிறிய வெனது புன்மொழி" (4),
"என் பொருளில் புன்மொழி" (313),
"என் புன்மொழிக்கடு" (601)

என்று கூறிக்கொள்ளும்போது இவர் கல்விச்செருக்கு எட்டுணையுமிலரென்பது புலப்படுகின்றது.

தவவொழுக்கத்திற் சிறந்த சீலத்தினராகிய இம்முனிவர் தம்மை,

"உரனில் காட்சி யிழுதையன்" (458),
"செய்தவ வேட மெய்யிற் றாங்கிக்
கைதவ வொழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்" (461),
"ஒருபெருந் தவமு முளுற்றிலன்" (461),
"யானே புலனு நலனுமிலன்" (503),
"தவமில் பேதையேன்" (582)

என்று கூறிக் கொள்ளுதலினாலும்,

"குற்றம் பலபொறுத் தென்னையு மாண்டு
கொண்டோன்" (460)

என்பதனாலும் இவருடைய அடக்கம் விளக்கமாகின்றது.

### தொண்டர் உறவு வேண்டுதல்

இவர் தொண்டரது உறவைப் பெரிதும் விரும்புவர்; மதுரேசர்பால் அவருடைய,

"சிற்றடி யவர்க்கே குற்றேவல் தலைக்கொண்
டம்மா கிடைத்தவா வென்று
செம்மாப் புறாஉந் திறம்" (105)

வேண்டி நிற்கின்றார்.

"ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக" (458)

வேண்டுமென்று நடராசப் பெருமானைப் பிரார்த்திக்கின்றார்.

தம் ஆசிரியர்பால்,

" நின், பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகல மாந்தியிப் பவக்கட லுழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையு மயரா தவதரிப்பது " (570)

ஆகிய பிறப்பைத் தரின் திருமால்பதவி முதலியவற்றையும் விரும்பாமல் அதனை ஏற்பதாகக் கூறுகின்றார்.

## நிராசை

இவர் உள்ளத்துறவும் நிராசையும் நிரம்பிய மெய்ஞ்ஞானச் செல்வர். சிந்தையினிறைவே செல்வமென்றும் அவாவே நல்குரவென்றும் உணர்ந்தவர். ஆதலின்,

" அவாவெனப் படுமவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வ மளித்தரு ளெனக்கே " (476)

என நடராசப்பெருமானை வேண்டுகின்றார். இவர் தில்லைவாணரிடத்திற் கேட்கும் வரமொன்றுண்டு; அது வருமாறு:

" பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த வொருதுணி யல்லது
பிறிதொன்று கிடையா தாக வறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடக்கைக்
கிடம்பிறி தில்லை யாக கடும்பசிக்
குப்பின் றட்ட புற்கையு ணல்லது
மற்றோ ருண்டி வாய்விட் டரற்றினும்
ஈகுந ரில்லை யாகநா ளுளும்
..................................இத்திறம்
உடனீங் களவு முதவிக் கடவுணின்
பெரும்பத மன்றியான் பிறிதொன்
றிரந்தனன் வேண்டினு மீந்திடா ததுவே " (458.)

இவருடைய நிராசையின் அளவு இத்தகையதென்பதை இச்செய்யுட்பகுதி தெளிவாகக் காட்டும். " பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை " என்பதை இவர் நன்குணர்ந்து தம்முடைய துறவை மெய்த்துறவாக்கி நின்றவரென்பதில் ஐயமில்லை.

குமரகுருபரர் கருவிலே அருளுடையவர்; பிறக்கும்போதே அருள் கூட்ட நல்லிளமையில் தமிழறிவும் தெய்வபக்தியும்வாய்ந்து பலகலையும் அறிந்து தலவழிபாடு செய்து ஞானசிரியரது உபதேசம் பெற்றார்; புலமையாற் பெற்ற பெருமையோடு தவவொழுக்கத்தாற் பெற்ற பெருமையும் சேர்ந்து ' பொன்மலர் நாற்றமுடைத்து ' என்

பதுபோல இவருடைய சிறப்பை மிகுதியாக்கியது. இவர் ஒரு சிறந்தபக்தர்; நிறைபுலமையுடைய நாவலர்; உலகியலறிந்த பேரறிவாளர்; உயர்குணம் நிறைந்த தவச்சீலர்; பிறருக்கு நல்லுரை நவிலும் பெரியார். இவருக்குரிய நல்லியல்புகளை விளக்கிக்கொண்டும் தமிழ் நாட்டாரது உள்ளத்துக்கு உவகை யூட்டிக்கொண்டும் விளங்குவனவே இப்புத்தகத்திலுள்ள இன்சுவைச் செய்யுட்கள்.

குமரகுருபர முனிவருடைய புகழ் வாழ்க!

---

## மூன்று தனிப் பிரபந்தங்களைப்பற்றிய

# குறிப்பு

### 1. மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை

இரட்டைமணிமாலை யென்பது பவளமும் முத்தும் ஆகிய இருவேறு மணிகள் மிடைந்த மாலைபோல வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் அந்தாதியாக அமையவும் ஈறும் முதலும் மண்டலிக்கவும் இருபது செய்யுட்களாற் பாடப்பெறும் பிரபந்தம். மதுரை மீனாட்சியம்மை விஷயமாகப் பாடப்பெற்றது இம் முதற் பிரபந்தம். இது முதல் மூன்றையும் இயற்றியவர் இன்னாரென்று தெரியவில்லை.

இவ்விரட்டைமணி மாலையிலிருந்து இதன் ஆசிரியர் தேவி உபாசகரென்பதும் அவ்வுபாசனையால் வாக்குவன்மை பெற்றவரென்பதும் தெரியவருகின்றன. "இவட்காடல்வே றில்லையெமைப், பாட்டுவிப்பதுங் கேட்பதும்" (7) என்பதும், "கற்பூர வல்லி கருத்திற் புகப் புகுந்தாள், நற்பூர வல்லியுமென் று" (15), "வனைந்தாளெம் வாயுமனமும்...நமது, சொற்பதமே நாறுஞ் சுவை" (17) என்பவையும் இவற்றை யுணர்த்தும். மீனாட்சியம்மை தம் மனத்தில் உறைவதைப் பலவிடத்தும் குறிக்கின்றனர்.

> "நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி ழுண்டு நயந்தசில
> பாவுண் டினங்கள் பலவுமுண் டேபங்கிற் கொண்டிருந்தோர்
> தேவுண் டுவக்குங் கடம்பா டவிப்பசுந் தேனின்பைந்தாட்
> பூவுண்டு நாரொன் றிலையாந் தொடுத்துப் புனைவதற்கே"

என்னும் செய்யுள் படித்து மகிழ்தற்குரியது.

## 2. மதுரை மீனாட்சியம்மை குறம்

ஒரு குறத்தி குறிகூறுவதாக அமையும் பிரபந்தம் குறமென்று வழங்கும். கலம்பகத்திற் குறமென்று ஓர் உறுப்பு உண்டு; "இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும், திறப்பட வுரைப்பது குறத்தி பாட்டே" என்பது பன்னிருபாட்டியற் சூத்திரம். அந்த இலக்கணம் அமைந்ததாகவே இக்குறமென்னும் பிரபந்தம் உள்ளது. இதில் இசைப்பாட்டும் கலந்துவந்தது. குறவஞ்சியென்னும் பிரபந்தமொன்றும் குறத்தி குறிகூறும் செய்தியைக் கூறுவதே. ஆயினும் குறத்தில் குறத்தியின் கூற்றுமாத்திரம் இருப்பக் குறவஞ்சியில் வேறு பலர் கூற்றுக்களும் இருக்கும்.

பாட்டுடைத் தலைவனைக் காமுற்ற தலைவியொருத்தியைக் கண்டு குறத்தி குறிகூறுவதாக அமைப்பது மரபு. இங்கே பாட்டுடைத்தலைவி மீனாட்சியம்மை; ஆதலின் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான்பால் கருத்திழந்த தலைவி கூறப்படுகின்றாள். மீனாட்சியம்மையின் திருநாமமும் புகழும் சார்த்துவகையாற் சொல்லப் பெறுகின்றன.

இதில் முதற்பாட்டு, சித்திவிநாயகர் காப்பாக உள்ளது. அப்பால் குறத்தியின் கூற்று விரிவாக அமைந்திருக்கின்றது.

* தான் பொதியமலையில் வாழும் குறத்தியென்பதை அவள் முதலிற் கூறிக்கொண்டு, தலைவிக்குச் சொக்கப்பெருமானோடு அளவளாவும் பேறு கிடைக்குமென்று ஊக்கமளிக்கிறாள். அப்பால் புழுகினாலே தரையை மெழுகிப் பிள்ளையார் பிடித்துவைத்துக் கோலமிட்டு நிறைநாழியை வைக்கும்படி தலைவியிடம் சொல்லி அவளது கையை நீட்டும்படிசெய்து அதைப் பார்த்துக் குறிகூறத் தொடங்குகின்றாள்.

"நான் சொல்லும் குறி மோசமானால் அப்பால் இந்த உலகத்தில் யாருடைய வார்த்தையும் பொருளற்ற பரியாசச் சொல்லேயாகும். ஆடையும் காசும் வை; குறிசொல்கிறேன்; சொக்கலிங்கப் பெருமான் உன்னை நிச்சயமாக அணைவார்" என்று அவள் கூறும்போது உலகியலறிந்தவ ளென்பதை அறிகின்றோம்.

கைக்குறி, முகக்குறி, கவுளி, கன்னிமார்வாக்கு, இடக்கண் துடித்தல் என்பவற்றை ஆராய்ந்து, "அங்கயற்கட் பூவை மாதின், மெய்க்குறியும் வளைக்குறியு முலைக்குறியு மணிந்தவர்தோண் மேவுவாயே" என்று பலன் பகர்கின்றாள்.

பின்பு தனக்குரிய பொதிய மலையின் பெருமையையும் வளத்தையும் பாராட்டிப் பேசுகின்றாள். அந்தமலை தமிழின் தொடர்புடையதென்பதை, "தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழு

மலை" (13), "தென்னந் தமிழும் பசுங்குழவித் தென்றற் கொழுந் துந் திளைக்குமலை" (14), "வடகலைதென் கலைபயிலு கலையெங்கண் மலையே" (15) என்பவற்றால் விளக்குகின்றாள்.

குறத்தி அப்பால் ஆறிருதோட் சிறுவனுக்குக் கொச்சைச் சிறுமிதனைக் கொடுத்த குலம் தங்கள் குறவர்குலமென்றுரைத்து அக்குறக்குடிக் குரிய இயல்புகளையும் அவர்கள் குடியிருக்கும் குறிச்சியிலேயுள்ள காட்சிகளையும் விரித்துரைக்கின்றாள். "முன்பு குறவர்கள் தங்கள் மலையாட்சியை முருகக்கடவுளுக்குச் சீதனமாக வழங்கினர். இப்போதோ பிள்ளை தனக்கெண்ணெயிலை; அரைக்கு மொருதுணியிலை" என்றும், தன்னுடைய கணவன் மற்றொருத் தியை மணம் செய்துகொண்டபின் இந்த நிலை தனக்கு வந்ததென் றும் இயம்புகின்றாள்.

தான் பல தலங்களுக்குச் சென்று குறிசொல்லியதாகக் குறத்தி கூறுகின்றாள்; அங்கே பாண்டிநாட்டுக்குரிய பதினன்கு தலங்க ளின் பெயர்களும் வந்துள்ளன.

அப்பால் அவள் தன் உறவின்முறையார் இன்னாரின்னாரென் றும் இன்னாரின்னாருக்கு இன்ன இன்னபடி நிகழுமென்று தான் கூறியபடியே குறிகள் பலித்தனவென்றும் சொல்லிவிட்டு, "ஒரு காலங்கஞ்சியுமென் குஞ்சுதலைக் கெண்ணெயுமோ ருடுப்பு மீந் தால், பொருகால வேற்கண்ணாய் மனத்துநீ நினைத்தவெலாம் புகல் வன் கண்டாய்" (24) என்று இரக்கின்றாள்.

"வருகால நிகழ்காலங் கழிகால மூன்றுமொக்க வகுத்துப் பார்த்துத், தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதரிதன் றெங்கள் குறச் சாதிக் கம்மே" என்று அவள் கூறுவது, பன்னிரு பாட்டியற் சூத் திரத்துக் கண்ட இலக்கணத்தை நினைப்பூட்டுகின்றது.

பின்னர், தரையை மெழுகிக் கோலமிட்டுத் தூபங்காட்டிப் பிள்ளையாரைத் தென்மூலையில் ஆவாகனம் செய்யும்படி குறத்தி தலைவிக்குப் புகல்கின்றாள். விநாயகருக்கு மலரும் அறுகும் சாத்தி விளக்கும் நிறைநாழியும் வைத்த பின்பு முறத்திலே நெல்லைக் கொணரச் செய்து அதை எண்ணிப் பார்த்துக் குறி கூறுகின்றாள் இங்ஙனம் முறத்திலே நெல்லை வைத்துக் குறிபார்த்தலைக் கட்டுப் பார்த்தலென்று கூறுவர். அதனைப் பார்க்கும் பெண்பாலுக்குக் கட்டுவித்தி யென்னும் பெயர் வழங்கும்.

குறத்தி, நெற்குறி, பல்லிசொற்குறி, பத்தினிப் பெண்கள் வாக்காகிய விரிச்சி, தும்மல், ஆந்தையின் குரல் என்பவற்றால் நன் னிமித்த முண்டாதலை யறிந்து கூறித் தலைவியின் கையைப்

புகழ்ந்து பாராட்டிக் கைக்குறியும் மெய்க்குறியும் உணர்ந்து சொல்லுகின்றாள்.

பிறகு மீனாட்சியம்மையைப் பாடி வாழ்த்துகின்றாள். இவ்விடத்தில் மீனாட்சியம்மைக்குரிய தசாங்கங்கள் குறிக்கப் பெறுகின்றன. ஒரு கண்ணியில் ஔவையார், "பஞ்சவன்றன், நான்மாடக் கூடலிற் கல் வலிது" (33) என்று மதுரையைப்பாடிய செய்தி சொல்லப்படுகிறது.

இப் பிரபந்தத்தின் இறுதிச் செய்யுளாகிய வாழ்த்திலுள்ள 'கச்சிநகர்த் திருமலை பூபதி வாழி' என்ற பகுதியினால் இந்நூலாசிரியரை ஆதரித்த உபகாரியின் பெயர் தெரியவருகின்றது.

## 3. தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை

இப் பிரபந்தத்திலுள்ள பல செய்யுட்களில் இறைவனுடைய பெருமையினும் இறைவியின் பெருமை பெரிதென்பது குறிப்பிக்கப்படுகின்றது.

"வன்னஞ் செறிவளைக் கைச்சிற காற்றன் வயிற்றினுள்வைத்
தின்னஞ் சராசர வீர்க்குஞ் சணைத்திரை தேர்ந்தருத்திப்
பொன்னம் பலத்துளொ ரானந்த வாரிபுக் காடும்பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம்பல் ஸ்ரயிர வண்டமுமே" (10)

என்பதில் சிவகாமியம்மையை அன்னமாக உருவகம் செய்திருத்தல் அறிந்து இன்புறற்குரியது.

உ

செந்திலாண்டவன் துணை

ஸ்ரீ காசிமடம்—திருப்பனந்தாள்



ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள்

உ

கணபதி துணை

# திருச்செந்தூர்க்

# கந்தர் கலிவெண்பா

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும்—தேமேவு
2. நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமாய்—ஆதிநடு
3. அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய்—வந்த
4. குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்கும்
செறியும் பரம சிவமாய்—அறிவுக்

## குறிப்புரை

1 - 36. முருகக்கடவுளுக்கும் சிவபெருமானுக்கும் வேற்றுமை இன்மையின் சிவபெருமானுக்குரிய விசேடணங்கள் பல இக்கண்ணிகளில் முருகக் கடவுளுக்கு ஏற்றிக் கூறப்படும்.

1. செங்கமலப் புத்தேள் - பிரமதேவர். பிரமதேவர் செந்தாமரையில் இருப்பதாகவும் வெண்டாமரையில் இருப்பதாகவும் இருவேறு வகையாகக் கூறுவதுண்டு. ஒரே ஆசிரியர் இவ்விரண்டும் கூறுவது, "புறத்து மாயிரம் வெள்ளித ழாலொரு புண்ட ரீகமு மண்ணலும் போலவே", "செந்தா மரை யோனே" (தக்க. 282, 698) என்பவற்றையும் அவற்றின் உரை முதலியவற்றையுங்கொண்டு அறியலாகும். பா - யாப்பு; பரப்புமாம். பாமேவு தெய்வப் பழமறை: "தொடுக்குங் கடவுட் பழம்பாடல்" (62.) தே மேவு - தெய்வத்தன்மை பொருந்திய. புத்தேளும் பழமறையுமென்று கூட்டுக.

2. நாதமும் - நாத தத்துவமும். நவை தீர்ந்த - குற்றமற்ற. போதம் - அறிவு.

3. நித்தியம் ஆனந்தம் போதம்: இம்மூன்றும் சச்சிதானந்தமெனப் படும். பந்தம் தணந்த - இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கிய.

4. குறி - பெயர். கோலம் - உருவம். எங்கும் செறியும் பரமசிவமாய்: "எங்கும், நீக்கமற நின்ற நிலைகாட்டி" என்பர் பின் ; 28.

5. கருதியா யைந்தொழிற்கு மப்புறமா யன்றே
மருதிகளுக் கெட்டா வடிவாய்த்—தருதருளின்

6. பஞ்சவித ரூப பரசுகமா யெவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்குந் தனிப்பொருளாய்—எஞ்சாத

7. பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வும்
காரணமு மில்லாக் கதியாகித்—தாரணியில்

8. இந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்கும்
தந்திரத்திற் சாராது சார்வதுபோல்—முந்தும்

9. கருவின்றி நின்ற கருவா யருளே
உருவின்றி நின்ற வுருவாய்த்—திரிகரணம்

10. ஆகவரு மிச்சை யறிவியற்ற லாலிலய
போகவதி காரப் பொருளாகி—ஏகத்

11. துருவு மருவு முருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவாய்—இருண்மலத்துள்

12. மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
பாகமுற வேகடைக்கண் பாலித்துத்—தேகமுறத்

---

5. மருதிகளுக்கு - மனம் முதலிய கரணங்களுக்கு.

6. பஞ்சவித ரூபம் - பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவருருவம்; " ஐந்தொழிற்கும், நீங்காத பேருருவாய் நின்றோனே " என்பர் பின்; 59. தஞ்சம் - பற்றுக்கோடு. எஞ்சாத - குறையாத.

7. புணர்வு - சம்பந்தம்; " போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே " (திருவா. சிவபுராணம்.)

9. கருவின்றி நின்ற கரு - ஸ்வயம்பு; " கருவிலு லன்றியே கருவெலா மாயவன் " (தென்குடித் திட்டைத் தேவாரம்.) அருளே உருவாய்: " கருணை திருவுருவாய் " என்பர் பின்; 24.

9 - 10. திரிகரணம் ஆகவரும் இச்சை அறிவு இயற்றல்: " கண்ட சத்தி மூன்றுட் கரணமாய் " என்பர் பின்; 63. இச்சைஅறிவு இயற்றல் - இச்சா ஞானக் கிரியாசத்திகள்; " இச்சை செயலறிவு " (35.) இலயம் - ஒன்றுதல். போகம் - துய்த்தல். அதிகாரம் - தொழில் புரிதல். இச்சை முதலியவற்றின் இயல்புகளை, சிவஞானசித்தியார் 1-ஆம் சூத்திரத்து 63-ஆம் செய்யுளாலும் அதன் உரையாலும் உணரலாகும்.

11. உரு - உருவத் திருமேனி நான்கு; அரு - அருவத்திருமேனி நான்கு; உருவரு - அருவுருவத் திருமேனி ஒன்று; இவற்றை நவந்தரு

13. தந்த வருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுதல்

14. ஆறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரும்

15. ஈரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பான்
ஆரவந்த நான்குநா ருயிரத்துள்—தீர்வரிய

16. கன்மத்துக் கிடாய்க் கறங்குஞ் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய

17. சொர்க்காதி போகமெலாந் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்கா ரணஞ்சிறிது நண்ணுதலும்—தர்க்கமிடும்

---

பேதமென்பர். பருவ வடிவம் - அடியார்களின் பக்குவத்திற்கேற்பக் கொள்ளப்படும் திருவுருவங்கள்.

13. விந்து - சுத்த மாயை; குடிலையெனவும் வழங்கும். மோகினி - அசுத்தமாயை. மான் - பிரகிருதி மாயை (479.) பெந்தம் - கட்டு.

13 - 4. மந்த்ர முதல் ஆறு அத்துவா - மத்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா; 60-62-ஆம் கண்ணிகளைப் பார்க்க; அத்துவா - வழி. அண்டத்தார்ந்த அத்துவாவெனத் தனியே பிரித்துக் கூறினமையின் முதற்கூறிய ஆறத்துவாவும் பிண்டத்தி லுள்ளன வெனக் கொள்க. (பிண்டம் - சரீரம்.) சிமிழ்ப்பு - கட்டு; சிவஞான சித்தியார், சூ. 8 : 7 - 9, உரையைப் பார்க்க. (பி - ம்.) 'உட்கூறத் தகும்'

15. ஈரிரண்டு தோற்றம் - நான்குவகையான பிறப்பு; முட்டையிற் பிறப்பனவாகிய அண்டசம், வேர்வையிற் பிறப்பனவாகிய சுவேதசம், வித்திற் பிறப்பனவாகிய உற்பிசம், கருவிற் பிறப்பனவாகிய சராயுச மென்பன. எழுபிறப்பு - நிற்பன, நெளிவன, தத்துவன, தவழ்வன, நடப்பன, கிடப்பன, பறப்பன என்பனவாம் (464.) யோனி யெண்பான் ஆர வந்த நான்கு நூறுயிரம் - எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங் கள்; "உரைசேரு மெண்பத்து நான்குநா றுபிரமாம் யோனி பேதம்" (திருஞா. தே.); "ஊர்வ பதினொன்று மொன்பது மானிடம், நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம் - சீரிய, பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த, அந்தமில்சீர்த் தாவரநா லைந்து" என்ற பழஞ்செய்யுள் எழுவகைப் பிறப் பின் வகையையும் தொகையையும் தெரிவித்தல் காண்க. தீர்வரிய - அனு பவித்தாலன்றித் தீர்தற்கரிய.

16. கடாய் - வயப்பட்டு. கறங்கு - காற்றுடி. சகடம் - வண்டியின் சக்கரம். சென்மித்து - பிறந்து. "ஆடுங் கறங்குந் திரிகையும் போல வலைந் தலைந்து" (தாயுமானவர் பாடல்.) திரோதித்து - மறைத்து. நிரயம் - நரகம்.

18. தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல்

19. விரதமுத லாயபல மெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்—தருள்பெருகு

20. சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை யகற்றுவித்து—நால்வகையாம்

21. சத்திநி பாதந் தருதற் கிருவினையும்
ஒத்துவருங் கால முளவாகிப்—பெத்த

22. மலபரி பாகம் வருமளவிற் பன்னாள்
அலமருதல் கண்ணுற் றருளி—உலவா

23. தறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக்

24. கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—திருநோக்கால்

---

19. சரியை கிரியா யோகம் - சரியையும் கிரியையும் யோகமும்.

18 - 9. "புறச்சமய நெறிநின்றும்" (சிவஞானசித்தியார், சுபக்கம், சூ. 8 : 11) என்னுந் திருவிருத்தத்தால் இக்கண்ணிகளின் கருத்து விளங்கும்.

20. புசிப்பித்து - அனுபவிக்கச்செய்து. ஆலோகம் - தெளிந்த அறிவு. அகற்றுவித்து – விரிவடையச் செய்து. ஆலோகம் என்பதை அலோகமென் பதன் விகாரமெனக்கொண்டு ஆலோகந்தன்னை யகற்றுவித்தென்பதற்கு அறியாமையை நீக்கியெனப் பொருள் கோடலும் ஆம்; அலோகம் - அறியாமை.

20 - 21. சத்தி நிபாதம் - சத்தி பதிதல். நால்வகையாம் சத்திநிபாதம் - மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென்ற நான்குவகைப் பக்குவங்கள்; "பித்திது வெனப்பிறர் நகைக்கவரு நாலாம், சத்தி பதிய" (திருவிளை. வாதவூரடிகளுக்குபதேசித்த. 31.) இருவினையும் ஒத்துவருங் காலம் - இருவினை யொப்பு உண்டாகுங் காலம்; "வினையொத்தபின், கணக்கி லாத்திருக் கோல நீவந்து காட்டி னய்கழுக் குன்றிலே" என்பது திருவாசகம். பெத்தம் - கட்டு.

22. மலபரிபாகம் - மலம் அழிதற்குரிய பக்குவநிலை. அலமருதல் - சுழலுதல்.

23. பிறியா - பிரியாத.

24. காசினிக்கே - பூமியில்; உருபு மயக்கம். சிவபெருமானே குருபரனாகி எழுந்தருளி அருளுவரென்பது ஆகமநூற்றுணிபு: "அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர னாகி யருளிய பெருமையை" (திருவா. போற்றித்திருவகவல்.) திருநோக்கால் - சக்ஷுதீக்ஷையால்.

25. ஊழ்வினையைப் போக்கி யுடலறுபத் தெட்டுநிலம்
ஏழுமத்து வாக்க ளிருமூன்றும்—பாழாக

26. ஆணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணும்

27. அடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாது

28. தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப்—போக்கும்

29. வரவு நினைப்பு மறப்பும் பகலும்
இரவுங் கடந்துலவா வின்பம்—மருவுவித்துக்

30. கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்மழுவு மானுமுடன் மால்விடைமேல்—மின்னிடத்துப்

31. பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி—மூத்த

---

25. "ஊழ்வினை - இங்கே சஞ்சிதம். உடல் அறுபத்தெட்டும் - தூல தேகக் கருவிகள் அறுபதும் சூக்கும தேகக்கருவிகள் எட்டும். நிலம் ஏழும் - ஆதாரம் ஆறும் அதற்குமேலுள்ள சூனியாகாசமும்; "ஆதியா தார மாதி யடுக்கெனப் பன்னி றத்த, சோதியேழ் நிலைகள்", "எந்நிலங் களினு மிக்க வெழுநிலம்" எனப் பிறரும் கூறுதல் காண்க.

26. ஆணவம் - ஆணவ மலம். படலம் - கண்ணொளியை மறைப்ப தொரு நோய்; "ஞானக்கண் காட்டி" எனக் கூறுதலால், 'படலங் கிழித்து' என்றார்.

30. கன்மமலத்தார் - பிரளயாகலர்.

30-31. மின் இடத்துப்பூத்த - ஒருமின் இடப்பக்கத்திலே தோன்றிய; மின் என்றது உமாதேவியாரை. மலர்க்கண் மூன்றும்......வடிவாகி: முருகக் கடவுளும் சிவபிரானும் வேறல்லராகலின் இங்கே இவ்வாறு கூறப் பட்டது; இதனை, "செறியும் பரம சிவமாய்", "ஐந்தெழுத்தைக் கூறி கடாத்துங் குரகதமும்", "ஐந்து முகத்தோ டதோமுகமுந் தந்து......... உய்ப்ப" (4, 69, 76-7), "ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யாமும் பேதக மன்றானம்போற் பிரிவிலன் யாண்டு நின்றான்" (கந்த. திருவிளை. 19

32. கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள்செய் துண்ணின்
றொருமலத்தார்க் கின்ப முதவிப்—பெருகியெழு

33. மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
ஆன்றபர முத்தி யடைவித்துத்—தோன்றவரும்

34. யானெனதென் றற்ற விடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானம்

35. திருவுருவா விச்சை செயலறிவு கண்ணா
அருள துவே செங்கை யலரா—இருநிலமே

36. சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவம்

37. தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும்—தேய்ந்தபிறைத்

38. துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட

---

என்பவற்றாலும் உணரலாகும். மூத்த - அநாதி காலமாகத் தொடர்ந்த கன்ம மலத்தார்க்கு......விடைமேல்......வடிவாகி : “ஏற்றுக், குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி” (திருவிளை. கடவுள்,)

32. ஒரு மலத்தார் - விஞ்ஞானகலர். ஒரு மலத்தார்க்கு உள் நின்று இன்பம் உதவியெனக் கூட்டுக; “வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுணருள்ளந் தோறும், சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி” (திருவிளை. கடவுள்.)

33. மூன்றவத்தை - கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை. முத்தர் - மலங்களினின்றும் விடுபட்டவர்.

34. யான் எனது - அகங்கார மமகாரங்கள்; “யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்” (குறள், 346.)

34-5. ஞானம் திரு உருவா: “நீயான ஞான விநோதம்” (கந்தரலங்காரம்); “ஆணவ மகன்ற சுத்த வறிவல்லா லுருவ மில்லாத், தாணு” (திருவானைக்காப். கடவுள்.) இச்சை செயல் அறிவு - இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி.

36. எவ்வுயிர்க்கும் - எவ்வுயிரிடத்திலும். பின்னம் - வேறுபாடு.

37-57. இக்கண்ணிகளில் முருகக் கடவுளுடைய திருவுருவ வர்ணனை கூறப்படும்.

38. நிரை தோன்ற - வரிசையாகத் தோன்றும்படி. துண்டமாகிய ஆறு பிறைகளை வரிசையாகப் பதித்தாற்போன்ற புண்டரங்கள்; பிறைகளை

39. பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள்பொழியுங் கண்மலரீ ராறும்—பருதி

40. பலவு மெழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும்—நிலவுமிழும்

41. புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்—வின்மலிதோள்

42. வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூர னைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமும்—எவ்வுயிர்க்கும்

43. ஊழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமும்—சூழ்வோர்

44. வடிக்கும் பழமறைக ளாகமங்கள் யாவும்
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப்

45. பாச விருடுரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும்—நேசமுடன்

46. போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோக மளிக்கு முகமதியும்—தாகமுடன்

---

நுதலுக்கு உவமையாக்கி, பதித்தனைய நுதல், புண்டரம் பூத்த நுதலெனக் கூட்டிப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும்.

40. பல - இங்கே பன்னிரண்டு.

41. வில் மலி தோள் - விற்படை பொருந்திய தோள். வில்லென் பதற்கு ஒளியென்று பொருள்கொண்டு தொடி முதலியவற்றின் ஒளி நிறைந்த தோளெனினும் ஆம்.

42. இது முதல் திருமுகங்களின் செயல்கள் கூறப்படும். போற்று இசைக்கும் - தோத்திரம் செய்யும். தெவ்வர் - பகைவர்.

43. உலவாத - அழியாத.

44. பழமறைகள்: "பாமேவு தெய்வப் பழமறையும்" என்றார் முன்னும்; 1. முடிக்கும் - ஐயமின்றி முற்றுப்பெறச் செய்யும். விடுத்து அகலா - உயிர்களை விட்டு நீங்காத.

45. பல் கதிரின் - பல சூரியர்களைப்போல.

46. புத்தேளிர் பூங்கொடி - தெய்வயானையம்மையார்.

47. வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையும்—கொந்தவிழ்ந்த

48. வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும்—ஆரமுதம்

49. தேவர்க் குதவுந் திருக்கரமுஞ் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமும்—ஓவாது

50. மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர வணிந்த திருக்கரமும்—மார்பகத்தில்

51. வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமும்
உய்த்த குறங்கி லொருகரமும்—மொய்த்த

52. சிறுதொடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையும்
கறுவுசம ரங்குசஞ்சேர் கையும்—தெறுபோர்

53. அதிர்கே டகஞ்சுழற்று மங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்குங் கரமும்—முதிராத

---

42-7. இவற்றிற் கூறப்பட்ட திருமுகங்களின் செயல்கள், "மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுகம், ஆர்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக், காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொரு முகம், மந்திர விதியின் மரபுளி வழாஅ, அந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுகம், எஞ்சிய பொருள்களை யேமுற நாடித், திங்கள்போலத் திசைவிளக் கும்மே யொருமுகம், செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக், கறுவுகொ ளெஞ்சமொடு களம்வேட் டன்றே யொருமுகம், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே" என்னுந் திருமுருகாற்றுப்படையினைத் தழுவிக் கூறப்பட்டன.

48. வேரி - தேன். விரைக் குரவும் - மணத்தையுடைய குராமலரும். புயசயிலம் - மலைபோன்ற தோள்கள்.

49. இதுமுதல் திருக்கரங்களின் செயல்கள் கூறப்படும்.
சூர்மகளிர் - தேவமகளிர். மேவ - விரும்ப. ஓவாது - ஒழியாமல்.

51. வாமமருங்கில் - இடையின் இடப்பக்கத்தில். குறங்கில் - திருத்துடையில். தொடி - வீரவளை.

53. விதிர்க்கும் - அசைக்கும்.

49-53. இங்கே கூறப்பட்ட திருக்கரங்களின் செயல்கள், "விண்செலன் மரபி னையர்க் கேந்திய, தொருகை யுக்கஞ் சேர்த்திய தொருகை, நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை, அங்குசங் கடாவ வொருகை யிருகை, ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை

54. கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற்

55. புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையும்
அரைஞாணுங் கச்சை யழகும்—திருவரையும்

56. நாதக் கழலு நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமும்—சோதி

57. இளம்பருதி நூறு யிரங்கோடி போல
வளந்தருதெய் வீக வடிவும்—உளந்தனிற்கண்

58. டாதரிப்போர்க் காருயிரா யன்பரகத் தாமரையின்
மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே—ஓதியவைந்

59. தோங்காரத் துள்ளொளிக்கு முள்ளொளியா யைந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய

---

மார்பொடு விளங்க வொருகை, தாரொடு பொலிய வொருகை, கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை, பாடின் படுமணி யிரட்ட வொருகை, நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை, வானர மகளிர்க்கு வதுவை சூட்ட, ஆங்கப், பன்னிரு கையும் பாற்பட வியற்றி" (முருகு. 107-18) என்பதைத் தழுவிக் கூறப்பட்டன.

55. புரிநூல் - பூணூல். கண்டிகை - உருத்திராக்க மாலை. பூம்பட்டு - பூத்தொழில் அமைந்த பட்டு. கச்சை - அரைக்கச்சை; "கச்சைச் திருவரையும்" என்பர் பின்; 114-5.

56. நாதக்கழல் - நாத தத்துவமாகிய கழல்; ஒலியைச்செய்யும் கழலெனினுமாம். நகு - விளங்குகின்ற. பரிபுரம் - சிலம்பு.

57. இளம்பருதி - உதயசூரியன். தெய்வீக வடிவு : "தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்" (முருகு. 287.) இளம்பருதி...வடிவு: "விண்ணொடு மண்ணை விழுங்கி யருட்கதிர் விரியு மிளஞ்சுடரே" (378); "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" (முருகு. 1-2); "சதகோடி சூரியர்க ளுதயமென......ஒருசோதி வீசுவதும்" (திருவகுப்பு.)

58. ஆதரிப்போர் - அன்பு செய்வோர். அகத்தாமரை - இதயகமலம்.

58-9. ஐந்து ஓங்காரம் - அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து. ஓங்காரத்துள்ளொளிக்கு முள்ளொளியாய்: "ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருக னுருவங்கண்டு" (கந்தரலங்காரம்.) ஐந்தொழில் - படைப்பு முதலியன.

60. மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால்

61. ஒத்த புவனத் துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த

62. கலையே யவயமாக் காட்டுமத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய்—பலகோடி

63. அண்ட முருவாகி யங்கஞ் சராசரமாய்க்
கண்டசக்தி மூன்றுட் கரணமாய்த்—தொண்டுபடும்

64. ஆவிப் புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலும்
ஏவித் தனிநடத்து மெங்கோவே—மேவ

65. வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானம்
தருமட்ட யோகத் தவமே—பருவத்

66. தகலாத பேரன் படைந்தோ ரகத்துட்
புகலாகு மின்பப் பொருப்பும்—சுகலளிதப்

---

60. மந்திரம் - மந்திராத்துவா. சோரி - இரத்தம். வான் - பெருமை. பதம் - பதாத்துவா. தொந்தம் - கட்டு. வன்னம் - வர்ணத்துவா. தொக்கு - தோல். பந்தனை - பாசம்.

61. புவனம்-புவனத்துவா. தத்துவங்கள்-தத்துவாத்துவா. சத்த தாது- எழுவகைத் தாதுக்கள்; சோரியும் தொக்குமாகிய இரண்டு தாதுக்களை முன்னே கூறினமையின், இங்கே அவை யொழிந்த ஐந்தையே கொள்க.

62. கலை - கலாத்துவா.

63. அங்கம் - உறுப்பு. சத்திமூன்று: 9-10, குறிப்பைப் பார்க்க. உட்கரணம் - அந்தக்கரணம்; "இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக" (சிவ. சித்தி. சூ. 5: 7.) (பி - ம்.) 'மூன்று கரணமாய்'

60-63. இங்கே கூறப்பட்ட அத்துவா வடிவத்தைச் சிவபெருமானுக்குரிய உபசாரத் திருமேனி யென்பர் (சிவஞான சித்தியார், சூ. க: 56, சிவஞான.)

63-4. "அலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி யைந்து, நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப ளுதன்" (சிவ. சித்தி. சூ. 6: 7.)

65. அட்டமூர்த்தம் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானனென்பன. அட்டயோகம் - இமயம் முதலிய எட்டு அங்கங்களையுடைய யோகம்.

66. இதுமுதல் தசாங்கம் கூறப்படும்.
இன்பப் பொருப்பு - ஆனந்தமலை. லளிதம் - அழகு.

67. பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானம்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்பம்

68. எல்லாங் கடந்த விருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த வணிநகரும்—தொல்லுலகில்

69. ஈறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமும்—ஏறுமதம்

70. தோய்ந்து களித்தோர் துதிக்கையினுற் பஞ்சமலம்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்—வாய்ந்தசிவ

71. பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையும்—காரணத்துள்

72. ஐந்தொழிலு மோவா தளித்துயர்த்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசும்—சந்ததமும்

73. நீக்கமின்றி யாடி நிழலசைப்பான் போற்புவனம்
ஆக்கி யசைத்தருளு மாணையும்—தேக்கமழ்ந்து

---

67. இன்பவெள்ளப் பெருக்காறு : "ஆனந்தங் காணுடையா னாறு" என்பது திருவாசகம். மீதானம் - மேலான இடம்.

68. போக்கு வரவல்லாதுயர்ந்த அணிநகரென்றது பரானந்த முத்தியை ; "போக்கும் வரவும்......கடந்துலவா வின்பம்" என்றார் முன்னும் ; 29.

69. குரகதம் - குதிரை. மதம் - சமயம் ; யானைக்குரிய மதமென்பது மற்றொரு பொருள்.

70. துதிக்கையினுல் - தோத்திரம் செய்வதனுல் ; தும்பிக்கையினுலென்பது மற்றொரு பொருள். பஞ்சமலம் - ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி. கடாக்களிறு - மதயானை. சிவஞானக்கடாக்களிறு : "சிவசமயத்திரு ஞான வேழமே" (திருவகுப்பு)

71. போதம் - அறிவு. நார் - அன்பு ; மாலைகட்டுதற்குரிய நாரென்பது மற்றொரு பொருள் : "பூவுண்டு நாரொரன் றிலையான் றொடுத்துப் புனைவதற்கே" (மீனுட்சியம்மையிரட்டைமணிமாலை) ; "தொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல் சூட்ட" (திருவிளை.)

72. வான் கொடி - பெருமையையுடைய கொடி. நவநாதம் - புதுமை தரும் நாத தத்துவம். நாத முரசு : "பருமித்த நாதப் பறை" (திருவா.)

73. ஆடி - கண்ணுடி. தான் ஆடி, கண்ணுடியில் நிழலை அசையச் செய்பவன்போல். புவனம் ஆக்கி அசைத்தருளும் ஆணை : "தன்வலியானை

74. வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே—தேசுதிகழ்

75. பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—ஆங்கொருநாள்

76. வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமும்—தந்து

77. திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப—விரிபுவனம்

78. எங்கும் பரக்க விமையோர்கண் டஞ்சுதலும்
பொங்குந் தழற்பிழம்பைப் பொற்கரத்தால்—அங்கண்

79. எடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோய்—அடுத்ததொரு

80. பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்

---

தாங்கி, மூவண்ண றன்சந் நிதிமுத் தொழில் செய்ய" (திருவிளை.) தேக் கமழ்ந்து - இனிமை பொருந்தி: தெய்வத்தன்மை பொருந்தியென்றலும் ஆம்.

74. பனுவல் - நூல். விபுதர் - புலவர். தேசு - தேஜஸ் என்ற வட சொல்லின் சிதைவு.

75. **இதுமுதல் முருகக்கடவுளின் திருவவதாரம் கூறப்படும்.** கோதை இடப் பாங்கு உறையும் - உமாதேவியார் தம்முடைய வாமபாகத்திலே வீற்றிருக்கப்பெற்ற.

76. தகுவர் - அசுரர்கள். முறை - முறையீடு. ஐந்துமுகம் - ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம். அதோ முகம் - கீழ் நோக்கிய முகம்.

76-7. இக்கண்ணிகளிற் கூறப்பட்ட செய்தியை, "வந்திக்கு மலரோ னாதி வானவ ருரைத்தல் கேளாப், புந்திக்கு ளிடர்செய் யற்க புதல்வனைத் தருது மென்னா, அந்திக்கு நிகர்மெய் யண்ண லருள்புரிந் தறிஞ ராயோர், சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்", "........... சிற்பரன் றன்கொண் டுள்ள திருமுக மாறு தம்மிற், பொற்புறு நுதற்கண் டோறும் புலிங்கமொன் றொன்று தந்தான்" (கந்த. திருவவதாரப். 43-4) என்னும் செய்யுட்களால் அறியலாகும்.

78. பிழம்பு - திரட்சி.

80. என - என்று வாயு கூற. தீக்கடவுள் - அக்கினிதேவன். பகீரதி=பாகீரதி - கங்கையாறு. போது ஒரு சற்று - சிறிது நேரம்.

81. றன்னவளுங் கொண்டமைதற் காற்ருள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய்—முன்னர்

82. அறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்

83. கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள்கண் டவ்வுருவ மாறினையும்—தன்னிரண்டு

84. கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்ருக மேவுவித்துச்—செய்ய

85. முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பால்
அகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த

86. வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி

87. மங்கை சிலம்பின் மணியொன் பதிற்ரோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்

---

81. ஆற்ருள் - வன்மையற்றவளாகி. சரவணம் - சரவணப் பொய்கை; சரவணம்=சரவனம் - நாணற்காடு. முன்னர் - முதலில்.

81-2. அறுமீன் - கார்த்திகை மாதர் அறுவர். பின்பு உமாதேவியார் அளித்த பாலையும் உண்டமையால் இங்கே, 'முன்னர், அறுமீன் முலை யுண்டு' என்ருர். அறுமீன் முலையுண் டழுது: "அறுவர் கொங்கை, விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும், குருந்தை" (கந்தரலங்காரம்.). நறுநீர் - கங்கை. நாதன் - சிவபெருமான். குறுமுறுவல் - புன்சிரிப்பு.

83. கன்னி - உமாதேவியார். காதல் உரு - திருமகனுடைய திருவுரு வத்தை; காதல் - பிள்ளை.

83-4. கந்தன் - சேர்க்கப்பட்டவன்; "அந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் ருகிக், கந்த னென்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்", "சேயவன் வடிவ மாறுந் திரட்டிநீ யொன்ருச் செய்தாய், ஆயத னலே கந்த னெனு நாமம் பெற்ருன்" (கந்த. சரவணப். 21, திருவிளை. 17); "ஆறு மோருருவ தாக வாக்கலிற் கந்த னெனன்" (தணிகைப். சீபரி. 29.)

85. முலைப்பாலை அளித்து.

85-6. சகத்தளந்த வெள்ளை விடை - உலகத்தை அளந்த திருமா லாகிய வெண்மையையுடைய இடப வாகனம்.

88. இதுமுதல் முருகக்கடவுளின் திருவிளையாடல்கள் கூறப்படும். மங்கை - உமாதேவியார். மணி ஒன்பது - நவரத்தினங்கள். மடவார் - நவசக்திகள். அவர்களாவர்: (1) மாணிக்கவல்லி (2) மௌத்திகவல்லி (3)

88. விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்

89. தங்கட் புவன மனைத்து மழித்துலவும்
செங்கட் கிடாயதனைச் சென்றுகொணர்ந்—தெங்கோன்

90. விடுக்குதியென் றுய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கும்
நடத்தி விளையாடு நாதா—படையெடுப்போன்

91. அகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தென்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையால்

92. சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனம்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்

93. பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே—கொன்னெடுவேற்

---

புட்பராகவல்லி (4) கோமேதகவல்லி (5) வைடூரியவல்லி (6) வைரவல்லி (7) மரகதவல்லி (8) பவளவல்லி (9) இந்திரநீலவல்லி யென்பார்.

88. நவவீரர் - வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராட்சசர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் என்போர். மரு பாயும் தார் - மணம் பரவிய மார்பின் மாலையையுடைய; தார் - மார்பின் மாலை. நெருப்பில் - நாரதமுனிவர் வேட்ட வேள்வித்தீயில்.

89. கிடாய் - ஆட்டுக்கிடாய்; "நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாய்" (அகநா. 156 : 14.) எம் கோன் - எம்முடைய தலைவனே.

90. விடுக்குதி - செலுத்தியருள்வாயாக. படைப்போன் - பிரமதேவன்.

91. (பி - ம்.) 'ஆதியெழுத்தாம்'

92. சிட்டி = ஸ்ருஷ்டி - படைப்பு; "சிட்டி செய்வதித் தன்மைய தோவெனச் செவ்வேள், குட்டி னைய னன்குமா முடிகளுங் குலுங்க" (கந்த. அயனைச். 14.) மட்டு - தேன்.

93. பொன் அம் கடுங்கை-பொன்போன்ற அழகிய கொன்றைமல்லை அணிந்த. போற்று இசைப்ப - துதி கூற. பிரமம் - பிரணவப் பொருளை; "ஓ மெனு மெழுத்திற் பிரமம் பேசிய, நான்மறை விதியை" (கல். கடவுள் வாழ்த்து, 2.) கொல் நெடு வேல்-கொல்லுதற்குக் காரணமாகிய நெடிய வேற் படையையுடைய; கொல் - கொற்றொழிலுமாம்; "கொன்னுனை வேலம் பல வன்" (சிறு. 231); கொன் - பகைவர்க்கு அச்சத்தைத் தருமென்பதுமாம்.

94. ரூரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்

95. தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்

96. கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனும்

97. சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன்

98. வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்க ணாற்படையுஞ் சங்கரித்துப்—பானுப்

---

94. மாயம் தட கிரி - மாயையொடு பொருந்திய பெரியமலை; என்றது கிரௌஞ்சமலையை. வீர வடிவேல்: "வீரவேல்" (முருகு. இறுதிவெண்பா.) அலைவாய் - கடலிடத்தே.

94-6. சீரலைவாய்த் தெள்ளுதிரை கொழிக்கும் செந்தூர்: "அலைவாய்ச் செருமிகு சேஎய்" (அகநா. 266); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவேள்" (புறநா. 55); "நஞ்செந்தின் மேய வள்ளி மணாளன்" (தே.) தவிசு - பீடம். கடலருகே வெள்ளமென விருந்தென்றது ஒரு நயம்.

95-6. வெள்ளைக் கயேந்திரன்-வெள்ளை யானையையுடைய இந்திரன். அஞ்சல் - அபயம்; இப்பொருள் அதற்கு உளதாதலை, மாயூரத்தில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் திருநாமமாகிய அபயாம்பிகை என்பது தமிழில் அஞ்சல் நாயகியென்று வழங்கும் வழக்காற்றுலறியலாகும். மயேந்திரம் - வீரமகேந்திரம்: சூரனது இராசதானி. மயேந்திரம்=மஹேந்திரம்; வடமொழி. முப்பத்து மூன்றாவது மெய்யாகிய ஹகாரத்திற்குத் தமிழில் யகரம் வருவதற்கு இலக்கணம், "முப்பானுறுமூன், றதனுக் குலோபமும் யவ்வொடு கவ்வு மறைவர்களே" (வீரசோழியம், தத்திதப். 7) என்பதாம்; இச்சூத்திரத்தின் உரையிற் காட்டிய வைதேயி, மயிமை, மயிதலம் என்ற உதாரணங்களையும் காண்க. சயேந்திரன் - வெற்றியையுடைய அசுரர் தலைவன்; இந்திரனென்பது தலைவனென்னும் பொருள் குறித்து நின்றது, மிருகேந்திரனென்புழிப்போல.

97. சோதித்து - வினவி: சோதித்தல் - வினுதல்; இது மலைநாட்டு வழக்கு. வருகென்று - வருக என்று. தடந்தோள் விசயவீரன் - வீரவாகுதேவர்.

98. விட்டென்னும் வினையெச்சம் வணங்காமையா லென்பதன் முதனிலையைக் கொண்டு முடிந்தது. தானவர்கள் - அசுரர்கள். நாற்படை - ரதகச துரகபதாதிகள்.

99. பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த

100. வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுணன்

101. அங்கமிரு கூறு யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னூர்த்தெழுந்து தோன்றுதலும்—அங்கவற்றுள்

102. சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்து மிளையோனே—மாறிவரு

103. சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர்

104. குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே—மறைமுடிவாம்

---

98-9. பானுப்பகைவன் - பானுகோபன் (கந்த. புதல்வரைப். 15-6.) வாகை - வெற்றிமாலை. முடித்தோய் - அணிந்தவனே.

100. புதிய மாவாய் - புதுமையையுடைய மாமரமாகி ; வேர் மேலும் மரத்தின் ஏனைய பகுதிகள் கீழுமாகச் சூரன் நின்றானென்பது ஒரு சாரார் கொள்கையாதலின் அங்கே அச்செயலையே புதுமையாகக் கொண்டார் போலும் ; "அகறிரைப் பரப்பிற் சடையசைந் தலையாது, கீழிணர் நின்ற மேற்பகைமாவின், ஒருட விரண்டு கூறுபட விடுத்த......அரத்தநெடு வேலோய்", "மணிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேல்", "பெருங்கல விணர்தந் தலைகீழ்க் குலவிய, விடமாக் கொன்ற நெடுவேற் குளவன்" எனவரும் கல்லாடச் செய்யுட்கள் இக்கருத்தை வலியுறுத்தும். அவுணன் - அசுரன் ; இங்கே சூரன்.

102. சித்ரமயில் - அழகையுடைய மயில். இளையோன் - என்றும் அழியாத இளமையை உடையவன் ; "என்றும், இளையாய்" (முருகு. இறுதிவெண்பா) ; "என்று மழியாத விளமைக்கார" (திருப்புகழ்.)

103. பகைவனாகிய சூரனே சேவலுருவம் எடுத்தமையின் சேவற் பகையென்றார். பதாகை - பெருங்கொடி. தனித்துயர்த்த - பிற கொடிக ளெல்லாம் தனக்குத் தாழ்ந்து நிற்ப, அவற்றிற்கெல்லாம் மேலாக உயர்த்திய; "புலியேறு தனியேற" (நக்க. 4) என்பதும், 'புலியேறு தனியேற என்றதனால் பரராட்டிரத்து இராசாக்களுடைய அநேக கொடிகள் சேவிக்கும் முறையில் அயற்கண்ணே தாழ வரையப்பட்டிருப்ப' என்ற அதன் விசேடவுரையும் இங்கே உணரற்பாலன. மூவர் - மும்மூர்த்திகள்.

100-103. இவற்றிற் கூறப்பட்ட செய்திகளின் விரிவைக் கந்த புராணம், சூரன் வதைப்படலத்தால் உணரலாகும்.

105. சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே—பொய்விரவு

106. காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு

107. கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்

108. தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—உள்ளமுவந்

109. தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்

---

105. இதுமுதல் முருகக்கடவுள் தெய்வயானையம்மையாரையும், வள்ளி நாச்சியாரையும் முறையே திருமணஞ் செய்தருளியது கூறப்படும்.

வானுதவும் தெய்வக் களிறு - தெய்வயானை யம்மையார்; இங்கே களி றென்பது யானையென்னும் பொருட்டாய் நின்றது; "குமர நாயகன் றெய் வதக் களிற்றொடுங் கூடி", "சேணு தித்திடு தெய்வதக் களிற்றினைச் செவ்வேள், நாணினிற் கட்டி" (கந்த. தெய்வயானையம்மை திருமணப். 260, 264.)

106. கலைமுனிவன் - கலைகளை யுணர்ந்த முனிவன்; என்றது சிவமுனி வரை; மடமானென்பதற்கேற்ப, கலையாகிய முனிவனென்னும் ஒரு பொருள் தொனித்தல் காண்க; கலை - ஆண்மான். கண் அருளால் - பார்வையினுற் றுய்த்த கருணையினால்; தேவர்கள் கண்ணால் துய்த்தல் இயல் பாதலின் தேவரையனைய இம்முனிவரும் இங்ஙனம் செய்தல் அமையும்; 'தேவர் நோக்கத்தால் நுகர்ந்தாற் போல' (சீவக. 222, ந.)

107. 'பூங்குயில் போல்' என்றது காக்கையால் வளர்க்கப்பெற்ற குயில் பின்பு தன் இனத்தோடு சேர்தலைப்போல, குறவர்களால் வளர்க்கப் பெற்றுப் பின்பு தமக்குரிய இடத்தைச் சேர்ந்தாரென்ற கருத்தை உள்ளடக் கியது; "கானமென் குயில்போல் வந்துமீ ளவுந் தன் காவலர் குலத்திடைக் கலந்தாள்" (வி. பா. குருகுலச். 106) என்பதை ஒப்புநோக்குக. ஏனற் புனம் - தினைக்கொல்லை.

107-8. கானக்......வள்ளிக் கொடி: "கானக் குறப்பெண் குடி யிருந்த கன்னிப் புனத்துத் தினைமாவுங் கமழ்தேன் றெளிவு முண்டுசுவை கண்டாய்" (426.)

109. ஆறு திருப்பதி - திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவா வினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலையென்பன; இவற்றை ஆறு படைவீடென்பர். ஆறெழுத்து - ஷடாக்ஷரம்.

110. கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்

111. பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி

112. பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும்—தீதகலா

113. வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம்வந் தெம்மை யெதிர்ந்தாலும்—அவ்விடத்திற்

114. பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்
அச்ச மகற்று மயில்வேலும்—கச்சைத்

115. திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள்விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணம்

116. சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறும்
எந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்கண்

117. எல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமாம்

---

110. கந்திப் பொதும்பர் - கமுகஞ்சோலை. எழு கார் - எழுகின்ற மேகத்தை. சீரலைவாய்ச் செந்திப்பதி - திருச்சீரலைவாயாகிய திருசெந்தூர்; சிறப்புடைய கடற்கரையிடத்தே உள்ள திருச்செந்தூரென்பதும் பொருந்தும். ஜயந்தி என்பது செந்தியென வந்ததென்பர். (பி - ம்.) 'செந்திற்பதி' செவ்வேள் : முருகக் கடவுள் சிவந்த மேனியையுடையவரென்பது, "செய் யன்" (முருகு. 206) என்பதனால் அறியலாகும்.

111. இது முதல் வேண்டுகோள் கூறப்படும்.
அவமிருத்து - அகால மரணம். விக்கினம் - இடையூறு.

112. பாதகம் - மகாபாதகம், அதிபாதகம், உபபாதகமென்னும் மூவகைப் பாதகங்கள். செய்வினை - சூனியம் முதலியன; ஏவலென்பர். பசாசு: பைசாச மென்பதன் சிதைவு. தீ நீரும் - தீயும் நீரும். படை - ஆயுதம்.

113. எம்மையென்றது அடியார்களையும் உளப்படுத்தியபடி.

114. அயில் வேல் - கூர்மையையுடைய வேலாயுதம்.

115. சீறடி - சிறிய திருப்பாதங்கள்.

117. உல்லாசமாக - மகிழ்ச்சியாக; "உல்லாச நிராகுல யோகவிதச், சல்லாப விநோதனு நீயலையோ" (கந்தரனுபூதி.)

118. ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை

119. எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுடன்

120. இம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்

121. தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய

122. கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின் றருள்.

---

118. நாற்கவி - ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி. அட்டாவதானம் - ஒரே சமயத்தில் எட்டுவகை வினாக்களுக்கு விடையளித்தல்; அவதானம் - கவனம். இயல் - இலக்கணம். "நாற்கவியும், பாடும் பணியிற் பணித்தருள்வாய்", "சொல்விற் பனமு மவதான முங்கவி சொல்ல வல்ல, நல்வித்தையுந்தந் தடிமைகொள்வாய்" (702, 708) என இவ்வாசிரியர் கலைமகள் மாட்டும் நாற்கவி, அவதானம் முதலியவற்றை விரும்பித் துதிப்பர். ஓசை - ஒலி.

119. எழுத்து முதலாம் ஐந்து இலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்பவற்றின் இலக்கணம்.

120. இருவாதனை - அகப்பற்று, புறப்பற்று. மும்மைப் பெருமலங்கள் - ஆணவம், கன்மம், மாயை. மோசித்து - நீக்கி. தம்மை விடுத்து - பசுபோதம் நீங்கி; "தன்னை யிழந்தவர்முன், யானென்று சென்றிடுங் காசிப்பிரான்" (683.)

121. பழைய அடியார் - தொன்றுதொட்டு அடிமைத்திறம் பூண்டோர்; "பழைய தொண்டர்கள்" (தே. திருஞா. திருக்கண்டியூர்); "ஐயா பழவடியோம்" (திருவா.) அடியாருடன் கூட்டி: "அடியேனுன், அடியார் நடுவுளிருக்கு மருளைப் புரியாய்" (திருவா.) பரபோகம் - பேரின்பம். துய்ப்பித்து - நுகரச் செய்து. சேய - சிவந்த; நண்ணற்கரிய எனலுமாம்; சேய்மை - தூரம்.

122. கடி ஏற்கும் - மணத்தைக் கொண்ட.

முடிபு: போதம் முதலியன (2) ஆகிப் பாலித்தல் முதலியன (12) செய்து (33) இடம் முதலியன திருவடி முதலியனவாக (34) நிற்கும் தனிச் சுடரே, பெருமானே (36), மணிமுடி முதலியவற்றை (37) உளந்தனிற்

கண்டு (57) ஆதரிப்போர்க்கு உயிராய் இருக்கும் ஒளியே (58), நின்றோனே (59), மந்திரம்முதலியன சோரி முதலியனவாக (60) நின்றோய் (62), கோவே (64), வாழ்வே, தவமே (65), இன்பப் பொருப்பு முதலியவற்றைத் (66) தசாங்கமெனப் பெற்றோனே (74), பரஞ்சோதி (75) உய்ப்ப (77) அளிப்ப (79) உய்ப்ப (80), உய்ப்பத் திருவுருவாய் (81) விளையாடி (82) உயர்ந்தோனே (86), நாதா (90), கோமானே (92), மொழிந்தோனே (93), விடுத்தோனே (94), விடுத்தோனே (97), முடித்தோய் (99), வேலோய் (100) இளையோனே (102), மேலோனே (103), தேவே (104), செய்தோனே (105), மணந்தோனே (108), குடிகொண்டோனே (109), செவ்வேளே (110), செம்மப்பகை முதலியன (111) எதிர்ந்தாலும் (113) மயில்வாகனம் முதலியன (114) எதிர்தோன்ற வந்து (116) உளத்திருந்து (117) நாற்கவி முதலியன (118) தோய்ந்து பழுத்த புலமை பாலித்து (119) அகற்றி, மோசித்துக் (120) கூட்டித்துய்ப்பித்துக் (121) காட்டி ஆட்கொண்டு முன்னின்று அருள் (122.)

மதுரை

# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

## விநாயகக் கடவுள் துதி

(ஆசிரிய விருத்தம்)

**2.** கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட்
கடைக்கடைக் கனலுமெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி
கடைக்கா றிரட்டவெங்கோன்
போர்கொண்ட வெண்டோட் பொலங்குவடு பொதியும்வெண்
பொடிதுடி யடித்துவைத்துப்
புழுதியாட் டயராவொ ரயிராவ ணத்துலவு
போர்க்களிற் றைத்துதிப்பாம்

---

2. (அடி, 1.) கார்கொண்ட மதம்: கார் - கருமை; மதம் கரிய நிறம் உடையது; "கருங்கட மூன்றுகு நால்வாய்க் கரி" (சிற். 55.) கவுள் - கன்னம். மதக்கடை வெள்ளம் - மதமாகிய பிரளய காலத்து வெள்ளம். கட்கடைக் கடைக்கனலும் - கண்ணின் கடையிலே தோன்றும் பிரளய காலத்து அக்கினியும். மதமும் கண்ணிலுள்ள சினத்தீயும் மிகுதிபற்றிக் கடைவெள்ளமாகவும் கடைக்கனலாகவும் உருவகிக்கப்பெற்றன; கடை - யுகமுடிவு. தடவுச்செவி, குழைச்செவி; தடவு - பெருமை; குழை - இலை; இங்கே தாமரை இலை; யானைச் செவிக்குத் தாமரையிலை உவமை; அகநா. 176. கடைக்கால் - யுகாந்த காலத்துக் காற்று; இதுவும் மிகுதி பற்றி இங்ஙனம் கூறப்பட்டது. திரட்ட - புறத்தே பரவாமல் தொகுக்க; தடுக்க வென்றபடி. எங்கோன் - சிவபெருமான்.

(2.) எண்டோளாகிய பொலங்குவடு; பொலங்குவடு - மேருமலை. (பி - ம்.) 'பொலன்குவடு' பொதியும் - மறைத்த. வெண் பொடி - திருநீற்றை. துடியடி - உடுக்கையைப்போன்ற அடியினால்; விநாயகருக்குத் துடியடி யின்றேனும் யானைக்கன்றென்னும் பொதுமைபற்றிக் கூறினர். "மும்மதத்தன்" (சிவஞான. காப்பு) என்றதுபோல. புழுதியாட்டு அயரா - புழுதியில் விளையாடுதலைச் செய்து; இது யானைக்கு இயல்பு. அயிரா வணத்து - அயிராவண மென்னும் யானையைப்போல; அயிராவணம் ஈராயிரங் கொம்பையுடையதும் சிவபெருமானுக்குரியதுமாகியதொரு வெள்ளையானை. விநாயகர் திருநீற்றை அளைந்து மேனி முழுதும் வெண்ணிறம் பெற்றமையின் அயிராவணம் உவமை கூறப்பட்டது. களிறு - விநாயகர்.

(1-2.) கடைக்கால் கடைவெள்ளத்தையும் கடைக்கனலையும் கடவாது திரட்ட, துவைத்து அயரா உலவு களிற்றைத் துதிப்பாம் என்க.

தார்கொண்ட மதிமுடி யொருத்தன் றிருக்கண்மலர்
சாத்தக் கிளர்ந்துபொங்கித்
தவழுமிள வெயிலுமழ நிலவுமள வளவலாற்
றண்ணென்று வெச்சென்றுபொன்
வார்கொண் டணந்தமுலை மலைவல்லி கர்ப்பூர
வல்லியபி ராமவல்லி
மாணிக்க வல்லிமர கதவல்லி யபிடேக
வல்லிசொற் றமிழ்தழையவே.

---

## க. காப்புப் பருவம்

### திருமால்

3. மணிகொண்ட நெடுநேமி வலயஞ் சுமந்தாற்று
மாசுணச் சூட்டுமோட்டு
மால்களிறு பிடர்வைத்த வளரொளி விமானத்து
வாலுளை மடங்கருங்கும்

---

(அடி, 3.) தார்கொண்ட மதி - தாராகக் கொண்ட சந்திரன்; இங்கே தாரென்றது கண்ணியை; "தாரென்ன வோங்குஞ் சடைமுடி மேற்றனித் திங்கள்வைத்த" (சிற். 56.) மதி - பிறை. தார் - பூவுமாம்; "மேகமோ டோடுதிங்கண் மலராவணிந்து" (தே.) திருக்கண்மலர் சூரியனும் சந்திரனு மாதலால் இளவெயிலும் நிலவும் அளவளாவின. வெச்சென்று - வெம்மை யுடையதாகி; "தண்ணெனவும் வெச்செனவுந் தந்து" (சேது. கடவுள்.); "தண்ணெனவும் வெச்செனவுந் தாராதே" (வருணகுலாதித்தன் மடல்.) (பி - ம்.) 'மழவெயிலு மிளநிலவும்'

(4.) வார் - கச்சு. அணந்த - மேல் நோக்கிய; (பி - ம்.) 'அணிந்த' கர்ப்பூரசுந்தரரென்பது சோமசுந்தரக்கடவுளுக்குரியதொரு திருநாமம்; அதற்கேற்ப அங்கயற்கணம்மைக்குக் கர்ப்பூரவல்லி யென்னும் திருநாமம் உண்டாயிற்று; "கர்ப்பூர வல்லிதலை கவிழ்ந்து நிற்ப" (108.) அபிராம வல்லி - பேரழகையுடைய கொடிபோல்வாள். மாணிக்க வல்லி - மாணிக்கக் கொடிபோல்வாள். மரகதவல்லி - மரகதக்கொடிபோல்வாள். அபிடேக வல்லி - திருமுடியையுடையவள்; "அம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லி யொடும்" (105.) சொற்றமிழ் - புகழையுடைய தமிழ்நூல்; இங்கே பிள்ளைத் தமிழ். (முடிபு.) தமிழ் தழையக் களிற்றைத் துதிப்பாம்.

3. (1.) மணி - முத்து முதலிய ரத்தினங்கள். நெடு நேமி - ஆழ மாகிய கடல். நேமிசூழ்ந்த வலயம்: பூமி. சுமந்தாற்றும் - சுமக்கும்; "ஒறுத்தாற்றும்" (குறள், 579, பரிமேல்.) மாசுணச்சூட்டு மோட்டு மால் களிறு பிடர் வைத்த - ஆதிசேடனுடைய தலையினுச்சியில் பெருமையையும்

அணிகொண்ட பீடிகையி னம்பொன்முடி முடிவைத்தெம்
ஐயனொடு வீற்றிருந்த
அங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியையெம்
அம்மனையை யினிதுகாக்க
கணிகொண்ட தண்டுழாய்க் காடலைத் தோடுதேங்
கலுழிபாய்ந் தளறுசெய்யக்
கழனிபடு நடைவயிற் கமலத் தணங்கரசொர்
கையணை முகந்துசெல்லப்
பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோ ளெருத்தலைப்பப்
பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே. (1)

---

மயக்கத்தையும்உடைய களிறுகள் தம் கழுத்திலே வைத்த. விமானம்-இந்திர விமானம். வால் உளை மடங்கல் - வெள்ளிய பிடரிமயிரையுடைய சிங்கம்.

(அடி, 2.) பீடிகை - ஆசனம். இந்திர விமானம் ஆதிசேடனாலும் எட்டுத் திக்கயங்களாலும் முப்பத்திரண்டு சிங்கங்களாலும் அறுபத்து நான்கு கணங்களாலும் தாங்கப்படுவதென்பர் (திருவிளை. 1 : 83.) எம் ஐயன் - சுந்தரேசுவரர். அங்கயற்கண்ணமுதை - மீனாட்சி யம்மையை. அம்மனை - தாய்.

(3.) கணி - கண்ணி; இடைக்குறை. துழாய்க்காடு - திருமால் திருமார்பில் அணிந்த துளவத்தொகுதி. தேங் கலுழி - தேனின் வெள்ளம். காட்டை அலைத்து ஓடும் வெள்ளம். அது பாய்தலால் வழி சேறுபட்டுக் கழனிபோல் ஆயிற்று. அளறு - சேறு. கழனி - வயல். நடவை - வழி. கமலத்து அணங்கரசு - திருமகள். கையணை முகந்து - கையாகிய அணையைப் பற்றிக்கொண்டு.

(4.) பணி - ஏவல். முடவுப் படப்பாய்ச் சுருட்டு - வளைவையுடைய படங்களையுடைய பாம்பாகிய பாயின் சுருள். பணைத்தோள் - திரட்சியையுடைய தோள். எருத்து அலைப்ப - பிடரியை வருத்த. பச்சைப்பசுங் கொண்டல் - மிகப்பசிய மேகம் போன்ற திருமால்.

**பைந்தமிழ்ப் பின் சென்ற கொண்டல்:** திருவெஃகாவிற் கோயில் கொண்டெழுந்தருளிய பெருமாள், "கணிகண்ணன் போகின்றான்" என்ற திருமழிசை யாழ்வார் செய்யுளைக் கேட்டுத் தம்முடைய பாயலைச் சுருட்டிக் கொண்டு அவருடன் சென்றனரென்பதொரு வரலாறு; இதன் விரிவைத் திருமழிசையாழ்வார் சரித்திரத்தால் உணரலாகும்; "ஆடரவத், தாழ்பாய லாளரைநீ தானே தொடர்ந்தாயோ, சூழ்பாயோ டுன்னைத் தொடர்ந்தாரோ" (தமிழ்விடு. 92-3)

(முடிபு.) கலுழி அளறுசெய்ய, அணங்கரசு செல்ல, சுருட்டு அலைப்ப, மறைகள் முறையிட, சென்ற கொண்டல் அம்மனையைக் காக்க.

## சிவபெருமான்

### (சந்த விருத்தம்)

4. சிகர வடவரை குனிய நிமிர்தரு
செருவி லொருபொரு வில்லெனக் கோட்டினர்
செடிகொள் பறிதலை யமண ரெதிரெதிர்
செலவொர் மதலைசொல் வையையிற் கூட்டினர்
திருவு மிமையவர் தருவு மரவொலி
செயவ லவர்கொள நல்குகைத் தீட்டினர்
சிறிய வெனதுபுன் மொழியும் வடிதமிழ்
தெரியு மவர்முது சொல்லெனச் சூட்டினர்
பகரு மிசைதிசை பரவ விருவர்கள்
பயிலு மியலெறி வெள்வளைத் தோட்டினர்
பசிய வறுகொடு வெளிய நிலவிரி
பவள வனமடர் பல்சடைக் காட்டினர்
பதும முதல்வனு மெழுத வரியதொர்
பனுவ லெழுதிய வைதிகப் பாட்டினர்
பரசு மிரசத சபையி னடமிடு
பரத பதயுக முள்ளம்வைத் தேத்துதும்

---

4. (சந்தக்குறிப்பு.) தனன தனதன தனன தனதன தனன தனதன தய்யனத் தாத்தன.

(அடி, 1.) வடவரை - மேருமலை. குனிய - வளைய. செருவில் - திரிபுராதிகளோடு செய்ய எண்ணிய போரில். கோட்டினர் - வளைத்தவர். வடவரை குனியக் கோட்டினர். செடிகொள் - நாற்றத்தைக் கொண்ட. பறிதலை அமணர் - தாமே தம் மயிரைப்பறிக்கும் தலையையுடைய சைனர்; மயிர் பறித்தல் அவர்கட்கு ஒரு விரதம். அமணரெதிர் - அமணருக்கு முன்னே. எதிர்செல - நீருக்கு எதிரே செல்ல. மதலை - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார். சொல் : 'வாழ்க வந்தணர்' என்னும் பாசுரம். கூட்டினர் - கூடச்செய்தவர்.

திரு - திருமகள். தரு - கற்பகம். அர ஒலி - ஹரவென்னும் ஒலியை. ஹரவென்னும் திருநாமத்தைச் சொல்வோர் திருமால் பதவியையும் இந்திர பதவியையும் கொள்வரென்பது கருத்து. கைத்தீட்டு - கையெழுத்து; இங்கே உத்தரவுக்காயிற்று. முதுசொல் - தேவார முதலியன.

(2.) இருவர்கள் - கம்பளாசுவதரர்கள். இயல் - இயல்பு. வெள்வளைத் தோடு - வெள்ளிய சங்கத்தோடு. அறுகு - அறுகம்புல். நில - நிலா. பவளவனம் அடர் - பவளக்காட்டைப்போல் அடர்ந்த. பனுவல் : 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் செய்யுள். இறைவன் திருவாக்கில் வருவன

தகர மொழுகிய குழலு நிலவுமிழ்
தரள நகையுமெ மையனைப் பார்த்தெதிர்
சருவி யமர்பொரு விழியு மறுகிடை
தளர வளர்வதொர் செவ்விமுற் றுக்கன
தனமு மனனுற வெழுதி யெழுதரு
தமது வடிவையு மெள்ளிமட் டேற்றிய
தவள மலர்வரு மிளமி னொடுசத
தளமின் வழிபடு தையலைத் தூத்திரை
மகர மெறிகட லமுதை யமுதுகு
மழலை பழகிய கிள்ளையைப் பேட்டனம்
மடவ நடைபயில் பிடியை விரைசெறி
வரைசெய் புயமிசை வையம்வைத் தாற்றிய
வழுதி யுடையகண் மணியொ டுலவுபெண்
மணியை யணிதிகழ் செல்வியைத் தேக்கமழ்
மதுர மொழுகிய தமிழி னியல்பயில்
மதுரை மரகத வல்லியைக் காக்கவே. (உ)

---

வெல்லாம் வேதமாதலின் வைதிகப்பாட்டினரென்றார். இரசதசபை - வெள்ளியம்பலம்; மதுரைத்தலத்துள்ளது. பதயுகம் - இரண்டு திருவடிகள்.

(அடி, 3.) தகரம் - மயிர்ச்சாந்து. எம் ஐயனை - சிவபெருமானை. சருவி - பின்னிட்டு. மறுகு - வருந்துகின்ற. எழுதரு - பிறரால் எழுதுதற்கரிய. மட்டு - தேன். தவளமலர் வரும் இளமின் - கலைமகள். சததளமின் - திருமகள்; சத தளம் - நூறு இதழையுடைய தாமரைப் பூ.

(4.) மகரத்தை எறிகின்ற; மகரம் - மகரமீன். மழலை - எழுத்து வடிவம் பெற்றுத் தோற்றும் இளஞ்சொல்; "மெய்பெறு வெழுத்துயிர்க்கு மழலை" (சீவக. 181, ந.) பேட்டனம் - பெண் அன்னம். மடவ நடை - இள நடை. வரைசெய் - மலையையொத்த; செய்: உவம வுருபு. வழுதி - மலயத்துவச பாண்டியன். வரைசெய்புய முதலியன வழுதிக்கு அடை. தேக்கமழ் மதுரம் - தேனிற் பரவிய இனிமை. தமிழின் இயல் பயில் மதுரை: "தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை" (சிறுபாண்.66-7); "கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழ்" (சிற்.)

(முடிபு.) குழலும் நகையும் விழியும் தனமும் எழுதி எள்ளி இளமினொடு சததளமின் வழிபடு தையலை, அமுதை, கிள்ளையை, பிடியை, பெண்மணியை, செல்வியை, மதுரை மரகதவல்லியைக் காக்க, வைதிகப் பாட்டினருடைய பதயுகம் ஏத்துதும்.

## சித்திவிநாயகக் கடவுள்

(வேறு)

5. கைத்தல மோடிரு கரடக் கரைத்திரை
கக்குக டாமுடை கடலிற் குளித்தெமர்
சித்தம தாமொரு தறியிற் றுவக்குறு
சித்திவி நாயக னிசையைப் பழிச்சுதும்
புத்தமு தோவரு டழையத் தழைத்ததொர்
பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு
முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலத்துறை
முத்தன மேவுபெ ணரசைப் புரக்கவே. (௫)

## முருகக்கடவுள்

(வேறு)

6. பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமொர்
பகடு நடத்திப் புலோமசைச் சூர்ப்புயல்
பருகி யிடக்கற் பகாடவிப் பாற்பொலி
பரவை யிடைப்பற் பமாதெனத் தோற்றிய

5. (சந்தக்குறிப்பு.) தத்தன தானன தனனத் தனத்தன.

(அடி, 1.) கைத்தலமும் இரண்டு கரடங்களுமாகிய கரையின்கண்; கரடம் - மதம்பாயும் சுவடு; இவை செவியடிகள். திரையைக் கக்கும். கடாம் - மதம். கடாமாகிய உடைகடல். எமரென்றது அடியார்களை.

(2.) தறி - யானைகட்டும் தம்பம்; "பத்தர் சித்தத் தறியணையும்...... ஒண்களிறே" (முந்த. திருவிரட்டை. 18.) துவக்குறு - கட்டப்படுகின்ற. சித்தி விநாயகன் : மதுரைத் தலவிநாயகர்.

(3.) மதுரித்து - இனித்து. உவட்டெழு - பெருக்கெழுகின்ற.

(4.) முத்தனம் - மூன்று நகில்கள். தேவி தடாதகைப்பிராட்டியாராக அவதரித்தகாலத்து மூன்று நகில்கள் இருந்தமையின் இங்ஙனம் கூறினர்.

(3, 4.) அமுதோ கொடியோவென உறை பெண்ணரசு.

(முடிபு.) பெண்ணரசைப் புரக்க, சித்தி விநாயகனது இசையைப் பழிச்சுதும்.

6. (சந்தக்குறிப்பு.) தனன் தனத்தத் தனதனத் தாத்தன.

(அடி, 1.) பமரம்=ப்ரமரம் - வண்டு (31, 196.) வண்டு யானையின் மதத்தை உண்ணும். பகடு - ஐராவதமென்னும் யானை. புலோமசை யென்னும் தெய்வமகளாகிய மேகம்; சூர் - தெய்வப்பெண். (பி - ம்.) 'புலோமிசை' புயல்: எழுவாய். பருகியிட - இன்பம் நுகர. பரவை - கடல்; என்றது இந்திரனை; இந்திரன் கரிய நிறத்தினன். பற்பமாது - திருமகள். (பி - ம்.) 'பத்மமாது' இந்திரனிடத்தே தெய்வயானை தோற்றினளென்பது உபசாரம். நடத்திப் பருகியிடப் பொலி பரவையென்க.

குமரி யிருக்கக் கலாமயிற் கூத்தயர்
குளிர்புன மொய்த்திட் டசாரலிற் போய்ச்சிறு
குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு
குமர னைமுத்துக் குமாரனைப் போற்றுதும்
இமிழ்திரை முற்றத் துமேருமத் தார்த்துமுள்
எயிறுகு நச்சுப் பணாடவித் தாம்பிசைத்
திறுக விறுக்கித் துழாய்முடித் தீர்த்தனொ
டெவரு மதித்துப் பராபவத் தீச்சுட
அமுதுசெய் வித்திட் டபோனகத் தாற்சுடர்
அடரு மிருட்டுக் கிரீவமட் டாக்கிய
அழகிய சொக்கற் குமால்செயத் தோட்டிகல்
அமர்செய் கயற்கட் குமாரியைக் காக்கவே. (ச)

---

(அடி, 2.) குமரி - தெய்வயானை. கலாமயில் - கலாபத்தையுடைய மயில் (18,86); கலாபமென்றது கலாமென நின்றது. மயிற்கூத்து: சந்த நோக்கி லகரம் றகரமாயிற்று. புனம்-தினைக்கொல்லை. குறவர் மகள்-வள்ளி நாச்சியார். சலாமிடல்: "சலாமிட" (திருப்புகழ்.) ஏக்கறு - ஆசையால் தாழ்கின்ற. முத்துக்குமாரன்: இவர் இத்தலத்தில் அம்பிகை திருக்கோயிலில் உட்பிராகாரத்தில் வாயுமூலையிற் கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவர்.

(3.) இமிழ் - முழங்கும். முற்றம் - பரப்பு. மேருமத்து: மந்தரத்தை மத்தாகக் கூறுவதே வழக்கமாயினும் அது மேருவின் வட சிகரமாதல்பற்றி மேருவாகவே கூறுதலும் மரபு. ஆர்த்து - கட்டி. முள் எயிறு உகு நச்சு - முள்ளைப்போலக் கூரிய பல்லிலிருந்து உகுகின்ற நஞ்சையுடைய. பணாடவித் தாம்பு-படக்கூட்டங்களை யுடைய கயிறு; என்றது ஆதிசேடனை. வாசுகியைத் தாம்பாகக் கொண்டாரென்பதே பெரும்பான்மை வழக்காயினும், ஆதிசேடனைக் கூறுதலும் உண்டென்பது, "திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத், திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தேற்றி, மகர மறிகடல் வைத்து நிறுத்துப், புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கும், அமுது கடைய விருவயி னாகி, மிகாஅ விருவட மாழியான் வாங்க, உகாஅ வலியி னொருதோழங் காலம், அறாஅ தணிந்தாருந் தாம்" (பரி. திரட்டு. 1: 64-71); "பொன்னெடு மலையைப் பன்னிரு வடங்கொடு, புணரியைக் கடைந்தாட் புணர்த்த பன்னகவரசன்" (பழம்பாட்டு; தக்க. 645, மேற்.) என்பவற்றாலும் தெரிய வருகின்றது. துழாய் முடித்தீர்த்தன் - திருமால். மதித்து - கடைந்து. பராபவத் தீ - அவமானமாகிய தீ; அவமானமென்றது ஆலகாலத்திற்கு அஞ்சியதைக் குறித்தது.

(4.) அமுது செய்வித்திட்ட போனகம் - உண்ணும்படியாகச்செய்த ஆலகாலமாகிய உணவு. சுடர் அடரும் - சந்திர சூரியர்களையும் வருத்தும்.

## பிரமதேவர்

(ஆசிரிய விருத்தம்)

7. மேகப் பசுங்குழவி வாய்மடுத் துண்ணவும்
விட்புலம் விருந்தயரவும்
வெள்ளமுதம் வீசுங் கருந்திரைப் பைந்துகில்
விரித்துடுத் துத்திவிரியும்
நாகத்து மீச்சுடிகை நடுவட் கிடந்தமட
நங்கையைப் பெற்றுமற்றந்
நாகணைத் துஞ்சுதன் றந்தைக்கு வந்துதவு
நளினக் குழந்தைகாக்க
பாகத்து மரகதக் குன்றொன்றொர் தமனியக்
குன்றொடு கிளைத்துநின்ற
பவளத் தடங்குன் றுளக்கண்ண தென்றப்
பரஞ்சுடர் முடிக்குமுடிமூன்
றாகத் தமைத்துப்பி னொருமுடிதன் முடிவைத்
தணங்கரசு வீற்றிருக்கும்
அபிடேக வல்லியை யளிக்குல முழக்குகுழல்
அங்கயற் கண்ணமுதையே. (ரு)

---

கிரீவம் - கழுத்து; (பி - ம்.) 'கிரீபம்' அழகிய சொக்கர்: சோமசுந்தரக் கடவுள் திருநாமம் (108, 157); சொக்கர் - பேரழகுடையவர். தோட்டிகல் - காதணியோடு பொருகின்ற.

7. (அடி, 1.) விட்புலம் - வானோர்; ஆகுபெயர். வெள்ளமுதம் - வெள்ளிய நீர், வெள்ளிய அமிர்தம். திரையாகிய துகில். உத்தி-படப் பொறி.

(2.) நாகத்து மீ - ஆதிசேடனாகிய நாகத்துக்கு மேல். சுடிகை நடுவண்- உச்சிக்கு நடுவில். நங்கை - பூமிதேவி. தன் தந்தையென்றது திருமாலை. நளினக் குழந்தை - தாமரைமலர் மேலுள்ள பிரமதேவர்.

(3.) பாகத்து - பக்கத்தில், மரகதக்குன்று: திருமால். தமனியக் குன்று: பிரமதேவர். பவளத்தடங்குன்று: சிவபெருமான். சிவபிரா னுடைய வலப்புறத்துப் பிரமனும் இடப்புறத்துத் திருமாலும் தோன்றுவ ராதலின் இங்ஙனம் குறித்தனர்; ஏகபாதருத்திர மூர்த்தியைக் குறித்த தெனலுமாம். முடிமூன்றென்றது மூன்று நகில்களை.

(4.) ஆகம் - மார்பு. அணங்கரசாக வீற்றிருக்கும். வீற்றிருத்தல் - கவலையின்றியிருத்தல். அளிக்குலம் - வண்டின் தொகுதி.

## தேவேந்திரன்

(வேறு)

8. சுழியுங் கருங்கட் குண்டகழி
சுவற்றுஞ் சுடர்வேல் கிரிதிரித்த
தோன்றற் களித்துச் சுறவுயர்த்த
சொக்கப் பெருமாள் செக்கர்முடி
பொழியுந் தரங்கக் கங்கைவிரைப்
புனல்கால் பாய்ச்சத் தழைந்துவிரி
புவனந் தனிபூத் தருள்பழுத்த
பொன்னங் கொடியைப் புரக்கவழிந்
திழியுந் துணர்க்கற் பகத்தினற
விதழ்த்தேன் குடித்துக் குமட்டியெதிர்
எடுக்குஞ் சிறைவண் டுவட்டுறவுண்
டிரைக்கக் கரைக்கு மதக்கலுழிக்
குழியுஞ் சிறுக ணேற்றுருமுக்
குரல்வெண் புயலுங் கரும்புயலும்

---

8. (அடி, 1.) (பி - ம்.) 'சுழியுண்' கருங்கட் குண்டகழி - கரிய இடத்தையும் ஆழத்தையுமுடைய கடலாகிய அகழியை. சுவற்றும்-வற்றச் செய்யும். சுடர் வேலை. கிரி - மேருமலை. தோன்றல் - உக்கிரகுமார பாண்டியன். (பி - ம்.) 'வேற்கிரி திரித்த' 'சொக்கப்பெருமான்' செக்கர் முடி யென்றார் சடை செந்நிறமுடைமையின்.

(அடி, 2.) (பி - ம்.) 'விரைபுனல்' கால் பாய்ச்ச - காலிலே பாய்ச்ச; வாய்க்காலின்வழியே பாய்ச்சவென்பது வேறொரு பொருள். பொன்னங் கொடி - அங்கயற்கண்ணம்மை. சிவபெருமான் ஊடற்காலத்தில் அம்பிகையை வணங்கும் செயலை நினைந்து இச்செய்தி கூறப்பட்டது. கொடி யென்றதற்கேற்பப் புனல்பாய்ச்சலும், பூத்தலும், பழுத்தலும் சொல்லப் பட்டன. "முழுமணி மிடற்றன் கனன்மழு வீரன் முக்கணண் டகைநின தெழில்கூர் - முகம்புலர்தலைக்கண் டெல்வளைந் தடியின் முனைப்பிறைக் கோடுகொண்டுழுது, விழுமணி யரவ நுழைசடா டவியின் விண்ணதித் தண்புனல் விடுப்ப - விரைவொடு குளிர்ந்து முகமலர் தலினுன் மென்கொடி யெனநினை யுணர்ந்தேன்" (பெரிய நாயகியம்மை விருத்தம், 1) என்பது இங்கே அறிதற்குரியது.

(3.) துணர் - பூங்கொத்து. நறவு - வாசனை. எதிரெடுக்கும் - கக்கும். உவட்டுற-தெவிட்ட. இரைக்க - ஒலிப்ப. கரைக்கும்-கரைந்தோடச்செய்யும்.

(4.) வெண்புயல் - ஐராவதம். கரும்புயல் - கரிய மேகம். குலைய - குலையும்படி. குலிசம் - வச்சிராயுதம். புத்தேள் - இங்கே இந்திரன். இந்திரன்

குன்றங் குலைய வுகைத்தேறும்
குலிசத் தடக்கைப் புத்தேளே. (சு)

## திருமகள்

(வேறு)

9. வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப்பாயல்
மீமிசைத் துஞ்சுநீல
மேகத்தி னாகத்து விடுசுடர்ப் படலைமணி
மென்பர லுறுத்தநொந்து
பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்
படுமிள வெயிற்குடைந்தும்
பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழ லொதுங்குமோர்
பசுங்கொடியை யஞ்சலிப்பாம்
மஞ்சூட் டகட்டுநெடு வான்முகடு துருவுமொரு
மறையோதி மஞ்சலிக்க
மறிதிரைச் சிறைவிரியு மாயிர முகக்கடவுண்
மந்தா கினிப்பெயர்த்த

---

உகைத்தேறுவதனால் தமக்கு இன்னும் என்ன துன்பம் நேருமோவெனக் குன்றம் குலைந்தன.

9. (அடி, 1.) படப்பாயல் - ஆதிசேடனாகிய படுக்கை. நீலமேகம் - திருமால். ஆகத்து - மார்பில். சுடர்ப்படலை - ஒளியின் தொகுதி; படலை - தொகுதி (26.) மணியாகிய மெல்லிய பரல்; மணி - கௌஸ்துபம்; பரல் - பருக்கைக்கல்.

(2.) பஞ்சு - செம்பஞ்சுக் குழம்பு. அதன் - அந்த மணியின். (பி - ம்.) 'கதிர்ப்படும்' பைந்துழாய்க் காடு - திருமால் திருமார்பிலுள்ள துளவ மாலையின் மிகுதி; "தண்டுழாய்க் காடு" (3) என்றார் முன்னும். பசுங் கொடி - திருமகள்.

(3.) மஞ்சு ஊட்டு அகடு நெடு வான்முகடு - மேகங்களைச் செறித்த உள்ளிடத்தையுடைய நீண்ட வானத்தின் உச்சியை. துருவும் - ஆராயும். ஒருமறை யோதிமமென்றது அன்னப்பறவையின் உருவெடுத்த பிரம தேவனை. மறிதிரை - கீழ் மேலாகின்ற அலைகளையுடைய. திரையாகிய சிறை. ஆயிர முகத்தையுடைய ஓதிமம், கடவுண் மந்தாகினிப்பெயர்த்த ஓதிமமென்க; என்றது கங்கையை. கங்கை ஆயிரமுகமுடைய தென்பது, "நிலைதளரா வாயிரமா முகத்தினோடும், பாய்ந்தொருத்தி படர்சடைமேற் படரக் கண்டும்" (தே. திருநா.), "கங்கை, துறைகொ ளாயிர முகமுஞ் சுழல" (கல்.) என்பவற்றாலும் உணரப்படும்.

செஞ்சூட்டு வெள்ளோ திமங்குடி யிருக்கும்வளர்
செஞ்சடைக் கருமிடற்றுத்
தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை மும்முலைத்
திருவைப் புரக்கவென்றே. (எ)

¹கலைமகள்

10. வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்புஞ் சுரும்பர்பாட
விளைநறவு கக்கும் பொலம்பொகுட் டலர்கமல
வீட்டுக் கொழித்தெடுத்துத்
தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலி னன்பினைந்
திணையென வெடுத்தவிறைநூற்
றெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதி மத்தினிரு
சீறடி முடிப்பம்வளர்பைங்
கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை யொழுகுதீங்
கிளவியுங் களிமயிற்குக்
கிளரிளஞ் சாயலு நவ்விக்கு நோக்கும்விரி
கிஞ்சுகச் சூட்டரசனப்
பிள்ளைக்கு மடநடையு முடனுடு மகளிர்க்கொர்
பேதைமையு முதவிமுதிராப்
பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொருபாண்டிப்
பிராட்டியைக் காக்கவென்றே. (அ)

---

பெயர்த்த - பெயரையுடைய. செஞ்சூட்டு - சிவந்த உச்சிக்கொண்டை; ஓதிமமென்றதற்கேற்க இது கூறப்பட்டது. தடாதகைப்பிராட்டியார் திக்கு விசயம் செய்தபொழுது கைலைக்கும் சென்று சிவபெருமான்முன் நின்றதை யெண்ணி, 'தேவுக்கு முன்னின்ற தெய்வம்' என்றார்.

10. (அடி, 1.) வெள்ளித்தகட்டைப்போன்ற நெடிய இதழ்களை; என்றது வெண்டாமரையின் இதழ்களை. அவிழ்த்து - மலர்த்தி. கக்கும் - சொரியும்.

(2.) தெள்ளித் தெளிக்கும்: 703. அன்பினைந்திணையென எடுத்த இறைநூல் - அன்பினைந் திணையென்னுந் தொடக்கத்தையுடைய இறையனாரகப் பொருளென்னும் இலக்கணம். நூலாகிய அமுது; "அன்பினைந் திணையென் றறுபது சூத்திரம், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெரிதரக் கொடுத்த தென் றமிழ்க் கடவுள்" (கல்.) கமலவீட்டின் கண் அமுதத்தைக் கூட்டுணுமென்க. வெள்ளோதிமம் - கலைமகள். கலைமகளுக்கு வெள்ளையன்னம் உவமை: 325, 707.

(3.) கிள்ளைக்குக் கிளவி கற்பித்தல்: 664. நவ்வி - மான். கிஞ்சுகச் சூட்டு - முருக்கம் பூவைப்போன்ற உச்சிக்கொண்டையையுடைய.

(4.) பிள்ளைமை - இளமைப்பருவம்.

## துர்க்கை

11. வடிபட்ட முக்குடுமி வடிவே றிரித்திட்டு
வளைகருங் கோட்டுமோட்டு
மயிடங் கவிழ்த்துக் கடாங்கவிழ்க் குஞ்சிறுகண்
மால்யானை வீங்கவாங்கும்
துடிபட்ட கொடிநுண் ணுசுப்பிற் குடைந்தெனச்
சுடுகடைக் கனலிதூண்டும்
சுழல்கண் முடங்குளை மடங்கலே யுகைத்தேறு
சூரரிப் பிணவுகாக்க
பிடிபட்ட மடநடைக் கேக்கற்ற கூந்தற்
பிடிக்குழாஞ் சுற்றவொற்றைப்
பிறைமருப் புடையதொர் களிற்றினைப் பெற்றெந்தை
பிட்டுண்டு கட்டுண்டுநின்
றடிபட்ட திருமேனி குழையக் குழைத்திட்ட
அணிமணிக் கிம்புரிக்கோ
டாகத்த தாகக் கடம்பா டவிக்குள்விளை
யாடுமொர் மடப்பிடியையே. (௧)

---

11. (அடி, 1.) வடிபட்ட - வடிக்கப்பட்ட ; "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" (புறநா.312.) முக்குடுமி வடிவேல் - முத்தலைச் சூலம்; வடி - கூர்மை. மோட்டு மயிடம் - பெரிய உடம்பையுடைய மகிஷாசுரனை. (பி - ம்.) 'மகிடம்' யானையென்றது நகில்களை. வாங்கும் - சுருங்கும்.

(2.) துடிபட்ட - உடுக்கையைப்போன்ற. (பி - ம்.) 'நுசுப்புக்கு' உடைந்தென - உடைந்ததென. கடைக்கனலி - யுகாந்தகாலத்துத் தீ. முடங்கு உளை - வளைந்த பிடரி மயிர். மடங்கல் - சிங்கம். வென்றுரைத் தோற்றூர் சுமத்தல் மரபு. சூர் அரிப்பிணவு - அச்சத்தைத் தரும் பெண் சிங்கம் ; என்றது துர்க்கையை.

(3.) பிடிபட்ட மடநடை - பிடியைப்போன்ற மெல்லிய நடை ; பிடியானது அழிந்தொழிதற்கேதுவாகிய நடையெனலும் ஆம். ஏக்கற்ற - யாம் இது பெற்றிலேமேயென்ற வேட்கையால் அலந்த. கூந்தற் பிடிக்குழாம் - கூந்தலையுடைய பெண் யானைகளின் கூட்டம் ; "கூந்தலம் பிடியும்" (55.) ஒற்றைப்பிறை மருப்புடைய களிறு-விநாயகர். எந்தை-சோமசுந்தரக்கடவுள்.

(4.) மணிக்கிம்புரிக்கோடென்றது நகில்களை. மடப்பிடியாக உருவகம் செய்தமையின் இங்ஙனம் கூறினர். கடம்பாடவி - மதுரை. அடவியிற் பிடி விளையாடுவது இயற்கை.

மடப்பிடியை அரிப்பிணவு காக்கவென்க.

## சத்த மாதர்கள்

(சந்த விருத்தம்)

12. கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள்
கவிகுவி துறுகலின் வாரியைத் தூர்த்தவள்

கடல்வயி றெரியவொள் வேலினைப் பார்த்தவள்
கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள்

இடியுக வடலரி யேறுகைத் தார்த்தவள்
எழுதரு முழுமறை நூலினிற் கூர்த்தவள்

எயிறுகொ டுழுதெழு பாரினைப் பேர்த்தவள்
எனுமிவ ரெழுவர்க டாண்முடிச் சூட்டுதும்

குடமொடு குடவியர் பாணிகைக் கோத்திடு
குரவையு மலதொர்ப ணுமுடிச் சூட்டருள்

குதிகொள நடமிடு மாடலுக் கேற்பவொர்
குழலிசை பழகளி பாடிடக் கேட்டுடை

---

12. (சந்தக்குறிப்பு.) தனதன தனதன தானனத் தாத்தன.

(அடி, 1.) கபாய் - சட்டை; "கம்பக் கரடக் களிற்றின் கபா யணிந்த" (506.) போர்த்தவள்: மாகேசுவரி. கவி குவி துறுகலின் - குரங்குகள் குவித்த உருண்டைக்கற்களால். வாரியை - சமுத்திரத்தை. தூர்த்தவள்: நாராயணி. வயிறு - நடுவிடம். பார்த்தவள்: கௌமாரி. தரு மலர் - கற்பகத்தின் மலரை. சேர்த்தவள்: இந்திராணி.

(2.) அரியேறு - ஆண் சிங்கம். ஆர்த்தவள்: காளி. எழுதரு - எழுதுதற்கரிய. கூர்த்தவள் - மிக்க ஊக்கத்தையுடையவள்; அபிராமி. பேர்த்தவள்: வாராகி. தலைவர்கள் செயல்களை அவர்கள் சக்திகளுக்கும் கூறுதல் மரபாதல்பற்றி எழுமகளிர் செயல்கள் இங்கே இங்ஙனம் கூறப் பட்டன.

(3.) குடமொடு - குடமென்னும் கூத்தோடு: குடக்கூத்தென்பது திருமாலுக்குரியது; விநோதக் கூத்தின் வகையுள் ஒன்று; அதற்குரிய உறுப் புக்கள் ஐந்து; அக்கூத்தாவது தலையிலே அடுக்குக்குடம் இருக்க, இரண்டு தோள்களிலும் குடம் இருக்க, இரண்டு கைககளிலும் குடங்களை ஏந்தி ஆகா யத்திலே எறிந்து ஆடுவதென்பர். குடவியர் - கோவியர். பாணி - கைகளை. குரவை - குரவைக்கூத்து. ஓர் பணுமுடிச் சூட்டென்றது காளியனது முடியை. நடமிடுதல் - நர்த்தனம் செய்தல். குழல் - வேய்ங்குழல். அளி - வண்டு; "குழலிசை தும்பி கொளுத்திக்காட்ட" (மணி. 4 : 3.)

மடலவிழ் துளபந ருவெடுத் தூற்றிட
மழகளி றெனவெழு கார்முகச் சூற்புயல்
வரவரு மிளையகு மாரியைக் கோட்டெயில்
மதுரையில் வளர்கவு மாரியைக் காக்கவே. (கo)

## முப்பத்து மூவர்

(வேறு)

13. அமரில் வெந்நிடும வுதியர் பின்னிடுமோர்
அபயர் முன்னிடுவ னத்தொக்க வோடவும்
அளவு மெம்முடைய திறையி தென்னமுடி
அரச ரெண்ணிலரோர் முற்றத்து வாடவும்
அகில மன்னரவர் திசையின் மன்னரிவர்
அமர ரென்னுமுறை திக்கெட்டு மூடவும்
அமுத வெண்மதியின் மரபை யுன்னியுனி
அலரி யண்ணன்முழு வெப்பத்து மூழ்கவும்

---

(அடி, 3-4.) பாடிடக் கேட்டு உடைகின்ற மடலவிழ்கின்ற துளபம்; வண்டு இசைபாடப் போது மலருமென்பது இங்கே அறிதற்குரியது. கார்முகம் - வில். சூற்புயல் - திருமால். வர வரும் - அவர் முன்வரத்தான் பின்னே தோற்றிய; அம்பிகையைத் திருமாலுக்குத் தங்கையென்றல் மரபு (22-3.) கோட்டு எயில் - சிகரங்களையுடைய மதில்.

13. (சந்தக் குழிப்பு.) தனன தன்னதன தனன தன்னதன தனன தன்னதன தத்தத்த தானன.

(1.) வெந் இடும் - புறங் காட்டும். அ உதியர்-அந்தச் சேரர்; அ: உலகறி சுட்டு. அபயர் - சோழர். தோற்றவர் காட்டில் ஓடி ஒளித்தல் மரபு; வனம் - காடு. அளவும் - அளக்கும். திறை - கப்பம். அரசர் முற்றத்து வாடுதல்: "பல்வேறு வகையிற் பணிந்த மன்னர்..............தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச், செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்து" (பெரும்பாண். 428-35); "வேந்தர் வைகு முற்றத்தான்" (கம்ப. குகப். 65.) அகில மன்னர் - பூமியில் உள்ள பல்வேறுதேசத்து அரசர். திசையின் மன்னர் - திக்குப் பாலகர். அலரியண்ணல் - சூரியன். வெப்பமென்றது அழுக்காற்றைக் குறித்தது. தன்னினும் ஒளியால் தாழ்வு பட்ட மதியின்மரபு அம்பிகையின் அவதாரத்தால் இத்தகைய சிறப்படைதல் பற்றிச் சூரியன் மனம் புழுங்கினன்; பாண்டியரது மரபு மதிமரபென்பது கினைத்தற்குரியது.

குமரி பொன்னிவயை பொருநை நன்னதிகள்
குதிகொள் விண்ணதியின் மிக்குக்கு லாவவும்
குவடு தென்மலையி னிகர தின்மைசுரர்
குடிகொள் பொன்மலைது தித்துப்ப ராவவும்
குமரர் முன்னிருவ ரமர ரன்னையிவள்
குமரி யின்னமுமெ னச்சித்தர் பாடவும்
குரவை விம்மவர மகளிர் மண்ணிலெழில்
குலவு கன்னியர்கள் கைக்கொக்க வாடவும்
கமலன் முன்னிவிடு மரச வன்னமெழு
கடலி லன்னமுட னட்புக்கை கூடவும்
கரிய செம்மலொடு மிளைய செம்மல்விடு
கருடன் மஞ்ஞையொரு கட்சிக்கு ளூடவும்
கடவி விண்ணரசு நடவும் வெம்முனைய
களிறு கைம்மலைசெல் கொப்பத்து வீழவும்
கனக மன்னுதட நளினி துன்னியிரு
கமல மின்னுமொரு பற்பத்துண் மேவவும்

---

(அடி, 2.) குமரி - குமரியாறு. பொன்னி - காவிரி, வயை - வையை நதி; சந்தம்பற்றி வையை வயையென்றாயிற்று. (பி - ம்.) 'வைகை' பொருநை - தாமிரபர்ணி, விண்ணதியின்மிக்கு - ஆகாய கங்கையைக் காட்டிலும் சிறப்படைந்து. இவளது ஆட்சியில் இருத்தலின் குமரி முதலியன சிறப்படைந்தன. தென்மலையின் நிகரதாகிய குவடு உலகில் இன்மையைப் பொன்மலை துதித்துப் பராவவும்; தென்மலை - பொதியின்மலை (சிலப். 8 : 19.) குவடு - மலை. பொன்மலை - மேரு. குமரர் இருவர் - விநாயகரும் முருகக்கடவுளும். குரவை - குரவைப்பாட்டு. விம்ம - மிகுதியாக. ஆட - குரவைக் கூத்தாட.

(3.) கமலன் - பிரமதேவன். எழு கடல் - மதுரையிலுள்ளதொரு சிவதீர்த்தம், கரிய செம்மல் - திருமால். இளைய செம்மல் - முருகக் கடவுள். விடு கருடன், விடுமஞ்ஞை யென்க. கட்சி-பறவைக் கூடு. (பி-ம்.) 'மஞ்ஞையொடொர்' கடவி - செலுத்தி. விண்ணரசு - இந்திரன். முனை - போர்க்களம். கொப்பம் - யானையைப் பிடிப்பதற்காக வெட்டப்பட்ட பெருங்குழி. கனக மன்னுதட நளினி-பொற்றாமரைத்தீர்த்தம். இருகமலமின்னும் - திருமகளும் கலைமகளும். பற்பம் - பத்மம்; "பற்பநாபனுயர்வறவுயரும் பெருந்திறலோன்" (திருவாய்மொழி, 2. 7 : 11.) (பி - ம்.) 'பத்மத்துண்'

இமய மென்னமனு முறைகொ டென்னருமெம்
இறையை நன்மருகெ னப்பெற்று வாழவும்
எவர்கொல் பண்ணவர்க ளெவர்கொன் மண்ணவர்கள்
எதுகொல் பொன்னுலகெ னத்தட்டு மாறவும்
எழில்செய் தென்மதுரை தழைய மும்முலையொ
டெழுமெ னம்மனைவ னப்புக்கொர் காவலர்
இருவ ரெண்மர்பதி னொருவர் பன்னிருவர்
எனும விண்ணவர்கண் முப்பத்து மூவரே. (கக)

## உ. செங்கீரைப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

14. நீராட்டி யாட்டுபொற் சுண்ணந் திமிர்ந்தள்ளி
நெற்றியிற் றொட்டிட்டவெண்
ணீற்றினொடு புண்டரக் கீற்றுக்கு மேற்றிடவொர்
நித்திலச் சுட்டிசாத்தித்
தாராட்டு சூழியக் கொண்டையு முடித்துத்
தலைப்பணி திருத்திமுத்தின்
தண்ணொளி ததும்புங் குதம்பையொடு காதுக்கொர்
தமனியக் கொப்புமிட்டுப்

(அடி, 4.) இமயமென்ன - இமயவரசனைப்போல. தென்னர்-பாண்டியர். இறையை - சிவபெருமானை. மருகு - மருகன். பண்ணவர்கள் - தேவர்கள். தட்டுமாற - தடுமாற; விரித்தல். இருவர் - அசுவினி தேவர். எண்மர் - அட்டவசுக்கள். பதினொருவர் - ஏகாதச ருத்திரர். பன்னிருவர் - துவாதசாதித்தர்.

(முடிபு.) அம்மனை வனப்புக்குக் காவலர் முப்பத்துமூவர் என்க.

14. (1.) ஆட்டு பொற் சுண்ணம் - அரைத்த பொற் சுண்ணம். திமிர்ந்து - பூசி. தொட்டு இட்ட வெண்ணீறு - வெண்ணீற்றுத் திலகம். புண்டரக்கீற்று - வெண்ணீற்றுப் புண்டரம். ஏற்றிட - திலகத்துக்கும் புண்டரத்திற்கும் பொருந்தும்படி வெண்மையாக.

(2.) தார் ஆட்டு - மாலையை அசைக்கும். சூழியக்கொண்டை - உச்சிக் கொண்டை (19.) தலைப்பணி - தலையாபரணம்; சிதேவி முதலியன (முருகு. 23.) குதம்பை - காதணி. தமனியக் கொப்பு - பொற்கொப்பு; இது மேற்காதில் அணியப்படுவது.

பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுத மூட்டியொருநின்
பானுறு குமுதங் கனிந்தூறு தேறறன்
பட்டாடை மடிநனைப்பச்

சீராட்டி வைத்துமுத் தாடும் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடியருளே. (க)

15. உண்ணிலா வுவகைப் பெருங்களி துளும்பநின்
றுன்றிருத் தாதைநின்னை
ஒருமுறை கரம்பொத்தி வருகென வழைத்திடுமுன்
ஓடித் தவழ்ந்துசென்று

தண்ணுலா மழலைப் பசுங்குதலை யமுதினிய
தாய்வயிறு குளிரவூட்டித்
தடமார்ப நிறைகுங் குமச்சே றளைந்துபொற்
ருடோய் தடக்கைபற்றிப்

---

(அடி, 3.) பெருந்தேவி : அரசன் தேவியருள் உடன்முடி கவித்தல் முதலிய சிறப்புக்குரியவள் (பெருங். 2. 4 : 21-4.) (பி - ம்.) 'தடமுலை' குமுதமென்றது திருவாயை. தேறல் என்றது வாய்நீரை (37, 402); "செவ்வாய்க் குதலை மெய்பெறு மழலை, சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப" (மணி. 3 : 137-8.)

(4.) முத்தாடுதல் - முத்தமிடுதல். கிள்ளை : விளி. பொன்மலை மன்னன் - இமய மன்னன். செல்வி - மகள். செங்கீரையாடியருள் - செவ்விய சொற்களைச் சொல்லியருள்; செங்கீரையாடுதல் ஒரு நிர்த்தவிசேட மென்பர் பெரியவாச்சான் பிள்ளை.

(முடிபு.) பெருந்தேவி சீராட்டித் திமிர்ந்து சாத்தி முடித்துத் திருத்தி இட்டு ஊட்டி நனைப்பச் சீராட்டி முத்தாடும் கிள்ளை, ஆடியருள்.

15. (அடி, 1.) துளும்ப - ததும்ப. தாதை - மலயத்துவச பாண்டியன். கரம் பொத்தி - கைகொட்டி.

(2.) தண் - தண்மை. குதலையாகிய அமுது; குதலை - எழுத்து வடிவம் பெருத சொல். தாய் - காஞ்சனமாலை. தாள் தோய் தடக்கை - முழந்தாளைத் தோய்ந்த பெரிய கை.

பண்ணுலாம் வடிதமிழ்ப் பைந்தாமம் விரியும்
பணைத்தோ ளெருத்தமேறிப்
பாசொளிய மரகதத் திருமேனி பச்சைப்
பசுங்கதிர் ததும்பமணிவாய்த்

தெண்ணிலா விரியநின் றுடும் பசுந்தோகை
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடியருளே. (உ)

16. சற்றுநெடு நேமிச் சுவர்க்கிசைய வெட்டுச்
சுவர்க்கா னிறுத்திமேருத்
தூணென்று நடுநட்டு வெளிமுகடு மூடியிரு
சுடர்விளக் கிட்டுமுற்ற

எற்றுபுன லிற்கழுவு புவனப் பழங்கலம்
எடுத்தடுக் கிப்புதுக்கூழ்
இன்னமுத முஞ்சமைத் தன்னைநீ பன்முறை
இழைத்திட வழித்தழித்தோர்

முற்றவெளி யிற்றிரியு மத்தப் பெரும்பித்தன்
முன்னின்று தொந்தமிடவும்
முனியாது வைகலு மெடுத்தடுக் கிப்பெரிய
மூதண்ட கூடமூடும்

---

(அடி, 3.) தமிழ்ப்பைந்தாமம் - தமிழ்ப்பாமாலை. தோள் எருத்தம் - தோளைச் சார்ந்த பிடரி. மரகதத் திருமேனி, அம்பிகையினது. மணி - பவளம்.

(4.) தோகை : விளி.

16. (அடி, 1.) நேமிச்சுவர் - சக்கரவாளகிரியாகிய சுவர். எட்டுச் சுவர்க்கால் - குலாசலங்கள் எட்டு; "வெற்பெட்டும்" (34.) சுவரைச் சார்த்தியமைத்த கால்களின்மேல் மேற்பரப்பின் பாரம் தங்கும்படி அமைத்தலும் இடையிலே ஒரு தூண் நடுதலும் ஒருவகைச் சிற்பம். வெளிமுகடு - ஆகாயத்தின் உச்சி. இரு சுடர் - சூரிய சந்திரர். முற்ற - முழுவதும்.

(2.) புனல் - கடல். புனலிற் கழுவுதலென்றது பிரளய கால வெள்ளத்தில் உலகு அமிழ்தலைக் குறித்தது. புதக் கூழ் - புதுக்கிய ஊழ், புதிய கூழ்; சிலேடை (71.) இழைத்திட - செய்ய.

(3.) வெளியில் முற்ற - வெளியில் முழுதும். தொந்தமிடல் - கூத்தாடல் (30.) வைகலும் - நாள்தோறும். முதிய அண்டகடாகத்தால் மூடும்.

சிற்றில்விளை யாடுமொரு பச்சிளம் பெண்பிள்ளை
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடியருளே. (௩)

17. மங்குல்படு கந்தரச் சுந்தரக் கடவுட்கு
மழகதிர்க் கற்றைசுற்றும்
வாணயன மூன்றுங் குளிர்ந்தமுத கலைதலை
மடுப்பக் கடைக்கணோக்கும்

பொங்குமதர் நோக்கிற் பிறந்தவா னந்தப்
புதுப்புணரி நீத்தமையன்
புந்தித் தடத்தினை நிரப்பவழி யடியர்பாற்
போகசா கரமடுப்ப

அங்கணெடு ஞாலத்து வித்தின்றி வித்திய
வனைத்துயிர் களுந்தளிர்ப்ப
அருண்மடை திறந்தகடை வெள்ளம் பெருக்கெடுத்
தலையெறிந் துகளவுகளும்

செங்கயல் கிடக்குங் கருங்கட் பசுந்தோகை
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடியருளே. (ச)

---

(அடி. 4) சிற்றிலென்றது அண்டங்களை. பச்சிளமை - மிக்க இளமை. பெண்பிள்ளை: விளி; வழக்கு.

அம்பிகை உலகத்தை அடிக்கடியாக்குதலும் அவற்றைச் சிவபெருமான் அழித்தலுமாகிய செய்கைகளை, சிறுமியர் சிற்றிலிழைத்தலும் சிறுவர் அதனை யழித்தலுமாகிய செயல்களாக உருவகித்துக் கூறினர்.

17. (அடி, 1.) மங்குல் படு - கருமேகத்தையொத்த. கந்தரம் - கழுத்து. கந்தரச் சுந்தரக் கடவுள்: 107. மழகதிர்க் கற்றை: 2.

(1-2.) கடைக்கண்ணால் நோக்கும் நோக்கில், பொங்கும் நோக்கி லென்க; நோக்கு - பார்வை. நிரப்புதலால் அடியார்கள்பால் போக சாகரம் மடுப்ப; அடியர் - இங்கே ஆன்மாக்கள். சிவபெருமான் போகியாக நிற்ற லின் உயிர்களும் போகத்தை அடையுமென்பது கருத்து.

(3.) (பி - ம்.) 'மடைதிறந்து' அருள்மடை....................கயல்: "கருணையின் முழுகிய கயறிரி பசிய கரும்பே" (22.)

(4.) (பி - ம்.) 'செங்கயல் கடக்கும்' தோகை: விளி.

18. பண்ணுறு வரிமிடற் றறுகான் மடுப்பப்
பசுந்தேற லாறலைக்கும்
பதுமபீ டிகையுமுது பழமறை விரிந்தொளி
பழுத்தசெந் நாவுமிமையாக்
கண்ணுறு மரகதக் கற்றைக் கலாமஞ்ஞை
கணமுகி றதும்பவேங்கும்
கார்வரையும் வெள்ளௌவொர் கன்னிமா டத்துவளர்
கர்ப்பூர வல்லிகதிர்கால்
விண்ணுறு மதிமுயற் கலைகிழிந் திழியமுத
வெள்ளருவி பாயவெடிபோய்
மீளுந் தகட்டகட் டிளவாளை மோதமுகை
விண்டொழுகு முண்டகப்பூந்
தெண்ணுறு வருவிபாய் மதுரைமர கதவல்லி
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடியருளே. (ரு)

(வேறு)

19. முகமதி யூடெழு நகைநில வாட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட

---

18. (அடி, 1.) பண் - இசை. வரி - ஒருவகைப் பாட்டு. அறுகால் - வண்டு. பதும பீடிகை - திருமகள் வாழும் செந்தாமரை மலராகிய ஆசனம். முது பழமறை - மிகப் பழைய வேதம். செந்நா - கலைமகள் வீற்றிருக்கும் பிரமனது நா.

(1-2.) இமையாக் கண்ணென்றது மயிலின் தோகையிலுள்ள கண்களை. கலாமஞ்ஞை: 6. ததும்ப - ஒலிக்க. கார்வரை - இங்கே விந்தமலை. வெள்ளென - நாணத்தால் வெண்ணிறமடைய. அங்கயற்கண்ம்மை கன்னி மாடத்தில் வளர்வது நோக்கி, 'இம்மாடம்பெற்ற பேறு யாம் பெற்றிலேமே' எனத் திருமகளைத் தாங்கும் தாமரையும், கலைமகளைத் தாங்கும் பிரமன் நாவும், துர்க்கையைத் தாங்கும் விந்தமலையும் நாணமடைந்தன வென்பது கருத்து.

(3.) முயலையுடைய மதிக்கலை யென்று மாறிப் பொருள் கொள்க. பாய - பாயும்படி. வெடிபோய் - துள்ளி. தகடு அகடு - வெள்ளித் தகடு போன்ற வயிறு. வாளை பாய்வதனால் மதியின் கலை கிழிந்து அமுதம் பாய்ந்தது.

(4.) நறுவருவி - தேனருவி.

19. (அடி, 1.) முடிச் சூழியம் - உச்சிக்கொண்டை. முரி - வளைந்த புருவமாகிய கொடி. முரிப்பு - வளைவு.

இகல்விழி மகரமு மம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட
இடுநூ புரவடி பெயரக் கிண்கி
ணெனுங்கிண் கிணியாடத்
துகிலொடு சோர்தரு கொடிநுண் மருங்குல்
துவண்டு துவண்டாடத்
தொந்தி சரிந்திட வுந்தி கரந்தொளிர்
சூலுடை யாலடைமற்
றகில சராசர நிகிலமொ டாடிட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (சு)

20. தசைந்திடு கொங்கை யிரண்டல வெனவுரை
தருதிரு மார்பாடத்
தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு
ததும்புபு னகையாடப்
பசைந்திடு ஞால மலர்ந்தமை வெளிறியொர்
பச்சுடல் சொல்லவுமோர்
பைங்கொடி யொல்கவு மொல்கி நுடங்கிய
பண்டி சரிந்தாட

---

(அடி, 2.) விழியாகிய மகரம்; விழிக்கு மகரமீனைக் கூறியது மீனென்னும் பொதுமைபற்றி; "மகரக் கருங்கட் செங்கனிவாய் மடமான் கன்று" (61.) இருமகரம் - இரண்டு மகர வடிவமான குண்டலங்கள். நூபுரம் - காலணி.

(3.) கொடியைப் போன்ற நுண்ணிய மருங்குல்; மருங்குல் - இடை. உந்தியினிடத்தே யாவற்றையும் கரந்து ஒளிரும் சூலையுடைய ஆலிலை போன்ற திருவயிறு: ஆலடை - ஆலிலை. (பி - ம்.) 'சூலுடையாலிலை'

(4.) அகிலம் - அழிவில்லாதவை. நிகிலம் - உலகம் யாவும்.

20. (அடி, 1.) இரண்டலவென்றது மூன்றென்னும் குறிப்பை யுடையது. குழந்தையைத் தாயே வருக வென்பவர், அச்சொல்லுக்குச் செம்பொருள் கொள்ளாமல் மகளென்று பொருள் கொள்வர்; அம்பிகையை அழைப்பவரும் அங்ஙனமே கொண்டனர்; தாயென்னும் சொல்லுக்குச் செம்பொருளே கொள்ளல் இங்கே ஏற்புடைத்தாயினும் உலக வழக்குப் படியே மகளென்று கொள்வாராதலின் அதனைப் பேதைமை யென்றார். ததும்பு - மேல் எழுந்த. (பி - ம்.) 'நன்னகை'

(2.) பசைந்திடு ஞாலம் - தேவியின் அன்பைப் பெற்ற உலகம். அலர்ந்தமை - வெளிப்பட்டமை. இயல்பான பச்சுடலை மகவின்றாரது பச்சுடலாகக் கூறினர். பைங்கொடி யென்றது திருவிடையை. பண்டி - வயிறு.

இசைந்திடு தேவை நினைந்தன வென்ன
இரங்கிடு மேகலையோ
டிடுகிடை யாட வியற்கை மணம்பொதி
இதழ்வழி தேறலினோ

டசைந்தொசி கின்ற பசுங்கொடி யெனவினி
தாடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (எ)

21. பரிமள மூறிய வுச்சியின் முச்சி
பதிந்தா டச்சுடர்பொற்
பட்டமு டன்சிறு சுட்டியும் வெயிலொடு
பனிவெண் ணிலவாடத்

திருநுதன் மீதெழு குறுவெயர் வாடத்
தெய்வம ணங்கமழும்
திருமே னியின்முழு மரகத வொளியெண்
டிக்கும்வி ரிந்தாடக்

கருவிளை நாறு குதம்பை ததும்பிய
காது தழைந்தாடக்
கதிர்வெண் முறுவ லரும்ப மலர்ந்திடு
கமலத் திருமுகநின்

அருள்விழி யொடும்வளர் கருணை பொழிந்திட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (அ)

---

(அடி, 3.) தேவை - சிவபெருமானை. இரங்கிடும் - ஒலிக்கும்; வருந்து மென்பது வேறு பொருள். இடுகு இடை - ஒடுங்கிய இடை. இதழ் வழி தேறல் : 14.

21. (அடி, 1.) முச்சி - கொண்டை. பட்டத்தால் வெயிலும் சுட்டியால் நிலவும் ஆட.

(3.) கருவிளையென்றது கண்களை. குதம்பை - காதணி. திருவிழிகள் காதளவும் சென்றமையின் கருவிளை நாறு குதம்பை யென்று கூறினர். தழைந்து - தாழ்ந்து.

(சந்த விருத்தம்)

22\. குருமணி வெயில்விட மரகத நிழல்விரி
குன்றே நின்றாதும்
குழலிசை பழகிய மழைமுகி லெழவெழு
கொம்பே வெம்பாசம்

மருவிய பிணிகெட மலைதரு மருமைம
ருந்தே சந்தானம்
வளர்புவ னமுமுணர் வருமரு மறையின்வ
ரம்பே செம்போதிற்

கருணையின் முழுகிய கயறிரி பசியக
ரும்பே வெண்சோதிக்
கலைமதி மரபிலொ ரிளமதி யெனவளர்
கன்றே யென்றேதும்

திருமகள் கலைமக டலைமகண் மலைமகள்
செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமொ ரிளமயில்
செங்கோ செங்கீரை. (கூ)

---

22\. (சந்தக் குறிப்பு.) தனதன தனதன தனதன தனதன தந்தா தந்தான.

(அடி, 1.) குரு - நிறம். மணிகள் அம்பிகை யணிந்த ஆபரணங்களி லுள்ளவை. முகில்: திருமால். எழ எழு கொம்பு - முன்னே வரப் பின்வந்த பூங்கொம்பு போல்வாள்; அவர் தங்கை யென்றபடி.

(2.) மலை மகளாதலாலும் பிறவிப்பிணி கெடச் செய்தலாலும், மலைதரு மருந்தே யென்றார்; மருந்து - பச்சிலை; மலைமருந்து சிறந்தது. சந்தானம் வளர். புவனம் - சந்தான மென்னும் தரு வளர்கின்ற தேவ லோகம்; சந்தானம் - ஐந்து தருக்களில் ஒன்று. செம்போதென்றது திருமுகத்தை.

(3.) கயல் என்றது கண்களை. கன்றே - மான்கன்று போல்வாய்.

(4.) திருமகளுக்கும் கலைமகளுக்கும் தலைமகள்; விளி. செங்கீரை யென்றது செங்கோவென மருவியது; அதன்பின் ஆடியருளே யென்பது எஞ்சி நின்றது.

(வேறு)

23. சங்குகி டந்தத டங்கைநெ டும்புயல்
தங்காய் பங்காயோர்
தமனிய மலைபடர் கொடியென வடிவுத
மைந்தா யெந்தாயென்
றங்கணெ டும்புவ னங்கடொ ழுந்தொறும்
அஞ்சே லென்றோதும்
அபயமும் வரதமு முபயமு முடையவ
ணங்கே வெங்கோபக்
கங்குன்ம தங்கய மங்குல டங்கவி
டுங்கா மன்சேமக்
கயல்குடி புகுமொரு துகிலிகை யெனநின
கண்போ லுஞ்சாயற்
செங்கய றங்குபொ லன்கொடி மின்கொடி
செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமொ ரிளமயில்
செங்கோ செங்கீரை. (கo)

---

23. (சந்தக் குழிப்பு.) தந்தன தந்தன தந்தன தந்தன தந்தா தந்தான தனதன தனதன தனதன தனதன தந்தா தந்தான.

(அடி, 1.) புயல் - திருமால். தங்காய் - தங்கையே. தமனியமலை - சிவபெருமான். எந்தாய் - எம் தாயே (554.)

(2.) அம் கண் - அழகிய இடத்தையுடைய. அபயமும் வரதமுமாகிய இரண்டும்; உபயம் - இரண்டு.

(3.) மதகய மென்றது மதங்கய மெனச் சந்தம் நோக்கி நின்றது. மதங்கயமாகிய மங்குல்; மங்குல் - இருள்; மன்மதனுக்கு இருள் யானை. துகிலிகை - துவசம். (பி - ம்.) 'துகிலிகையனநின்.'

(3-4.) பொலன் கொடியையுடைய மின் கொடி. காமனுடைய கயற்கொடி போன்ற கயற்கொடியை யுடையா யென்றபடி. எனத் தங்கு என இயைக்க. அங்கயற்கண்ணம்மையாதலின் 'கண்போலுஞ் சாயற் செங்கயல்' என்றார்.

## ௫. தாலப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

24. தென்னந் தமிழி னுடன்பிறந்த
சிறுகா லரும்பத் தீயரும்பும்
தேமா நிழற்கண் டுஞ்சுமிளஞ்
செங்கட் கயவாய்ப் புனிற்றெருமை
இன்னம் பசும்புற் கறிக்கல்லா
இளங்கன் றுள்ளி மடித்தலநின்
றிழுபா லருவி யுவட்டெறிய
எறியுந் திரைத்தீம் புனற்பொய்கைப்
பொன்னங் கமலப் பசுந்தோட்டுப்
பொற்றா தாடிக் கற்றைநிலாப்
பொழியுந் தரங்கம் பொறையுயிர்த்த
பொன்போற் றுடுதோ லடிப்பொலன்சூட்
டன்னம் பொலியுந் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (க)

---

24. (அடி, 1.) தென்னந் தமிழ் - தென்றமிழ்; அம்: சாரியை. சிறு கால் - தென்றல். தென்றற்காற்று வீசுங் காலத்து மாமரம் சிவந்த தளிர் விடுவதை, 'சிறுகாலரும்பத் தீயரும்பும்' என்று குறித்தார்; "திருந்துந் தளிர் காட்டித் தென்றல்வரத் தேமா" (நன்னெறி. 19.) மாந்தளிருக்குத் தீ உவமை (ஐங். 349.) கயவாய் - ஆழமான வாய்; (பி - ம்.) 'கருவாய்' புனிறு - ஈன்ற அணிமை.

(2.) உவட்டெறிய - பெருக்கெடுப்ப.

(3.) பசுந்தோட்டுப் பொற்றாது - இளைய இதழிலுள்ள பொன்போன்ற பூந்தாது. தரங்கம் பொறையுயிர்த்த பொன் - கடலாற் பெறப்பட்ட திருமகள். சூட்டு - உச்சிக் கொண்டை.

(4.) 'தாலோ தாலேலோ' என்றது குழந்தையைத் தாலாட்டுவார் கூறும் ஒருவகை வாய்பாடு. தம் நாவை ஆட்டி இதனைப் பாடுவதனால் இதற்குத் தாலாட்டென்னும் பெயர் வந்தது; தால் - நா; தாலாட்டுப் பருவமென்றது தாலப் பருவமென நின்றது.

எருமை தன் கன்றை நினைந்து சொரிந்த பாலால் பொய்கை பாற்கடல் போலத் தோன்றத் தாமரைத் தாதினிடையே ஆடிப் பொன்னிறம் பெற்று அம்மலரிலே இருந்த அன்னம் திருமகளைப் போலத் தோற்றியது.

25. வீக்குஞ் சிறுபைந் துகிற்றோகை
விரியுங் கலாப மருங்கலைப்ப
விளையாட் டயரு மணற்சிற்றில்
வீட்டுக் குடிபுக் கோட்டியருள்
சீக்குஞ் சுடர்தூங் கழன்மணியின்
செந்தீ மடுத்த சூட்டடுப்பிற்
செழுந்தாட் பவளத் துவரடுக்கித்
தெளிக்கு நறுந்தண் டேறலுலை
வாக்குங் குடக்கூன் குழிசியிலம்
மதுவார்த் தரித்த நித்திலத்தின்
வல்சி புகட்டி வடித்தெடுத்து
வயன்மா மகளிர் குழாஞ்சிறுசோ
றுக்கும் பெருந்தண் பணைமதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (உ)

26. ஓடும் படலை முகிற்படலம்
உவர்நீத் துவரி மேய்ந்துகரு
ஊறுங் கமஞ்சூல் வயிறுடைய
உகைத்துக் கடவுட் கற்பகப்பூங்

---

25. (அடி, 1.) வீக்கும் - கட்டிய. துகில் தோகை - ஆடையின் தலைப்பு. கலாபம் - ஒருவகை மேகலை. மருங்கு - இடை. சிற்றிலாகிய வீட்டில்.

(2.) அழலுகின்ற மாணிக்கமாகிய தீயை மடுத்த; மடுத்த - வைத்த. சூட்டடுப்பு - ஒருவகை யடுப்பு. பவளமாகிய துவர்; துவர் - விறகு. தேறல் உலை - தேனாகிய உலைநீர்.

(3.) குடக்கூன் குழிசி - குடம்போன்ற வளைந்த சங்காகிய பானை. வல்சி - அரிசி. வயல் மா மகளிர் - மருதநிலத்தில் வாழும் சிறுமியர்.

(4.) தண்பணை - மருதநிலம். அருள் சூற்கொண்ட கண் என்க.

மருத நிலத்திலுள்ள சிறு பெண்கள் சிற்றிலில் மாணிக்கமே தீயாகவும் பவளமே விறகாகவும் தேனே உலைநீராகவும் சங்கே பானையாகவும் முத்தே அரிசியாகவும் கொண்டு சிறுசோறாக்கி விளையாடும் செயல் இதிற் கூறப் பட்டது.

26. வானையின் செயல் இதிற் கூறப்படும்.

(அடி, 1.) படலை முகிற்படலம் - தொகுதியாகிய மேகப்பரப்பு. கம சூல் - நிறைந்த கருப்பம்.

காடுந் தரங்கக் கங்கைநெடுங்
கழியு நீந்தி யழுதிறைக்கும்
கலைவெண் மதியின் முயறடவிக்
கதிர்மீன் கற்றை திரைத்துதறி

மூடுங் ககன வெளிக்கூட
முகடு திறந்து புறங்கோத்த
முந்நீ ருழக்கிச் சினவாளை
மூரிச் சுறவி னோடும்விளை

யாடும் பழனத் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (ரு)

27. ஊறுங் கரடக் கடத்துமுகந்
தூற்று மதமா மடவியர்கின்
றுதறுங் குழற்பூந் துகளடங்க
ஓட விடுத்த குங்குமச்செஞ்

சேறு வழுக்கி யோட்டறுக்கும்
திருமா மறுகி லரசர்பெருந்
திண்டே ரோதுங்கக் கொடுஞ்சிநெடுஞ்
சிறுதே ருருட்டுஞ் செங்கண்மழ

---

(அடி, 2.) கங்கையாகிய கழியென்க; கழி - இங்கே ஆறு. திரைத்து - சுருட்டி.

(3.) ககன வெளிக் கூட முகடு - வானவெளியாகிய அண்டகூடத்தின் உச்சி. புறங்கோத்த முந்நீர் - அண்டத்திற்கு அப்புறத்திலுள்ள கடல். (பி - ம்,) 'மூரிச்சுறவோடு கண்டுவிளை'

(முடிபு.) வாளை உவரி மேய்ந்து உகைத்து நீந்தித் தடவித் திரைத்து உதறித் திறந்து உழக்கி விளையாடும் பழனமென்க.

27. (அடி, 1.) கரடம் - மதம்பாய் சுவடு. கடம் - குடம்; கும்ப மெனவும் வழங்கும். மதமா - யானை.

(1-2,) மதமாவானது சேற்றில் வழுக்கி ஓடுதலைத் தவிர்க்கும் மறுகு; வழுக்கி - வழுக்குதலால்; எச்சத்திரிபு.

(2.) சிறு தேர் - அளவிற் சிறிய தேர்.

வேறு பொருவே லிளைஞர்கட
விவுளி கடைவாய் குதட்டவழிந்
திழியும் விலாழி குமிழியெறிந்
திரைத்துத் திரைத்து நுரைத்தொருபே

ராறு மடுக்குந் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (௪)

28. வார்க்குன் றிரண்டு சுமந்தொசியும்
மலர்க்கொம் பனையார் குழற்றுஞ்சும்
மழலைச் சுரும்பர் புகுந்துழக்க
மலர்த்தா துகுத்து வானதியைத்

தூர்க்கும் பொதும்பின் முயற்கலைமேல்
துள்ளி யுகளு முசுக்கலையின்
துழனிக் கொதுங்கிக் கழனியினெற்
சூட்டுப் படப்பை மேய்ந்துகதிர்ப்

போர்க்குன் றேறுங் கருமுகிலை
வெள்வாய் மள்ளர் பிணையவிடும்
பொருகோட் டெருமைப் போத்தினொடும்
பூட்டி யடிக்க விடிக்குரல்விட்

---

(அடி, 3.) கடவு இவுளி - செலுத்துகின்ற குதிரை. (பி - ம்.) ‘ இளைஞர் கடமிவுளி ’ விலாழி - குதிரையின் வாய்நுரை. இரைத்து - ஒலித்து. திரைத்து - அலையெறிந்து.

28. (அடி, 1.) வார்க்குன்று இரண்டு - இரண்டு நகில்கள்; வார் - கச்சு, குழலில் துஞ்சும், சுரும்பர் - வண்டுகள். அவை உழக்குதலால் பொதும்பு மலர்த்தாதை உகுத்தது.

(2.) பொதும்பு - சோலை. முயற்கலை - முயலையுடைய சந்திரன். முசுக்கலை - ஆண் குரங்கு. துழனி - ஆரவாரம். பொதும்பிலுள்ள முசுக்கலை. படப்பை - வைக்கோற் போர்; இது தென்பாண்டி நாட்டு வழக்கு.

(2-3.) கதிர்ப் போர்க் குன்று - நெற்கதிர்களை அடுக்கிய போராகிய குன்று. (பி - ம்.) ‘மேய்ந்த கதிர்’ முசுக்கலையின் ஒலிக்கு ஒதுங்கிக் கருமுகில் கதிர்ப்போர்க் குன்றில் ஏறியது.

டார்க்கும் பழனத் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (௫)

(வேறு)

29. காரிற் பொழிமழை நீரிற் சுழியெறி
கழியிற் சிறுகுழியிற்
கரையிற் கரைபொரு திரையிற் றலைபிரி
கண்டலில் வண்டலினெற்

போரிற் களநிறை சேரிற் குளநிறை
புனலிற் பொருகயலிற்
பொழிலிற் சுருள்புரி குழலிற் கணிகையர்
குழையிற் பொருகயல்போய்த்

தேரிற் குமரர்கண் மார்பிற் பொலிதரு
திருவிற் பொருவில்வரிச்
சிலையிற் றிரள்புய மலையிற் புலவி
திருத்திட வூழ்த்தமுடித்

---

(3.) வெள்வாய் மள்ளர் - கள்ளையருந்தினமையால் வெள்ளியன வாகிய வாய்களையுடைய மள்ளர்; அவர்கள் கள்ளுண்ட மயக்கத்தால் அறியாமல் முகிலை எருமையோடு பிணையலிட்டனர். (பி - ம்.) 'பேழ்வாய் மள்ளர்', 'பிணையல் விடும்' பிணையலிடுதல் - பிணைத்தல். எருமைப்போத்து - ஆணெருமை. இடியாகிய குரல்.

29. கணிகையருடைய கண்கள் கயல்மீனைப்போலப் பல இடங்களிற் பாயுமென்பது இதிற் கூறப்படும்.

(அடி, 1.) காரிலிருந்து பொழியும் மழை. சுழிகளை எறிகின்ற கழி. தலைபிரி - உச்சியின்கண் இதழ்பிரிந்து மலர்ந்த. (பி - ம்.) 'தலைவிரி' கண்டல் - தாழை. வண்டல் - மகளிர் விளையாடும் இடம்; வண்டலுள்ள இடமுமாம்.

(2.) சேர் - நெல்லைச் சேமித்துவைக்கும் கூடு. பொழிலைப் போலச் சுருள் புரிந்த குழல். (பி - ம்.) 'சுருள்விரி' குழலையுடைய கணிகையர். குழையிற் பொருகயல் - குழையோடு பொருகின்ற கயல்போன்ற கண்கள்.

(3.) தேரிலுள்ள குமரர்கள். பொலிதரு திருவையும் பொருவில்லாத சிலையையும் உடைய திரண்ட புயமாகிய மலை. புலவி திருத்திட - ஊடலை நீக்கும் பொருட்டு; என்றது அவர் கணிகையர் காலில் பணிதலைச் சுட்டியது. ஊழ்த்த - அவிழ்ந்த.

தாரிற் பொருதிடு மதுரைத் துரைமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (சு)

30. சேனைத் தலைவர்க டிசையிற் றலைவர்கள்
செருவிற் றலைவர்களாய்ச்
சிலையிற் றிடமுடி தேரிற் கொடியொடு
சிந்தச் சீந்தியிடும்

சோனைக் கணைமழை சொரியப் பெருகிய
குருதிக் கடலிடையே
தொந்த மிடும்பல் கவந்த நிவந்தொரு
சுழியிற் பவுரிகொள

ஆனைத் திரளொடு குதிரைத் திரளையும்
அப்பெயர் மீனைமுகந்
தம்மனை யாடு கடற்றிரை போல
அடற்றிரை மோதவெழும்

---

(4.) துரைமகள் - அரசி.

கணிகையரது (கண்களாகிய) கயல்கள், மழைநீரிலும் கழியிலும் குழியிலும் கரையிலும் திரையிலும் கண்டலிலும் வண்டலிலும் போரிலும் சேரிலும் புனலிலும் பொருகின்ற கயலைப்போல, போய் மார்பிலும் புயமலையிலும் தாரிலும் பொருதிடுமென்க.

30. தடாதகா தேவியின் திக்குவிசயத்தில் நிகழ்ந்த செய்தி கூறப்படும்.

(அடி, 1.) சேனைத்தலைவர்கள் - அம்பிகையின் சேனைத்தலைவர்கள்; எழுவாய். திசையில் தலைவர்கள் செருவில் தலைவர்களாகி வந்து தம் சிலை இற்றிடவும் முடி சிந்தவும். சீந்தியிடும் - கோபிக்கும்; இது கணைக்கு அடை; "சீந்தா நின்ற தீமுக வேலான்" (சீவக. 1055.) (பி - ம்.) 'தலைவர்களாற்'; 'சிலையிற்றட'; 'சிந்தியிடும்'

(1 - 2) சேனைத்தலைவர்கள், பகைப்படையில் தலைவர்களாகி வந்த திசைத்தலைவர்களுடைய சிலை இற்றிடவும் முடி சிந்தவும் கணைமழையைச் சொரிய, அதனால் பெருகிய குருதிக்கடல். சோனை - விடாமழை. மழை சொரியக் கடல் பெருகியதென்பது ஒரு நயம். தொந்தமிடல் - கூத்தாடல்; பிணைந்தாடலுமாம். பவுரி - சுழன்றாடல்.

(3.) அப் பெயர் மீன் - யானைமீன், குதிரைமீன்; யானைமீன்: தக்க. 384, உரை. அடற்றிரையென்றது குருதிக்கடலின் அலையை.

தானைக் கடலொடு பொலியுந் திருமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (எ)

31. அமரர்க் கதிபதி வெளிறக் களிறெதிர்
பிளிறக் குளிறியிடா
அண்ட மிசைப்பொலி கொண்ட லுகைத்தடும்
அமரிற் றமரினொடும்

கமரிற் கவிழ்தரு திசையிற் றலைவர்கள்
மலையிற் சிறகரியும்
கடவுட் படையொடு பிறகிட் டுடைவசு
கண்டு முகங்குளிராப்

பமரத் தருமலர் மிலையப் படுமுடி
தொலையக் கொடுமுடிதாழ்
பைம்பொற் றடவரை திரியக் கடல்வயி
றெரியப் படைதிரியாச்

---

(4.) தானைக் கடல் - சேனா சமுத்திரம்.

31. இதில் உக்கிரகுமாரபாண்டியருடைய வெற்றிச் செயல்கள் கூறப்படும்.

(அடி, 1.) வெளிறு அக்களிறு - ஐராவதம். குளிறியிடா - முழங்கி. (பி - ம்.) 'உகைத்திடும்'

(2.) கமர் - வெடிப்பு. திசையிற் றலைவர்கள் - திக்குப் பாலகர்கள்; இவர்கள் இந்திரன் படைத்தலைவராய் வந்தவர்கள். மலையிற் சிறகரியும் கடவுட் படை - இந்திரனது சேனை; கடவுள் படையென்றது ஓசை நோக்கி விகாரமாகி நின்றது. முகம் குளிரா - முகம் குளிர்ந்து. (பி - ம்.) 'குளிரப்'

(3.) பமரம் - வண்டு. தருமலர் - கற்பகத்தின் மலர். மிலையப்படும் முடி - மிலையும்முடி; என்றது இந்திரனது முடியை; மிலைதல் - சூடுதல். (பி - ம்.) 'மலையப்' பைம்பொற்றடவரை - மேருமலை. படைதிரியா - ஆயுதத்தைச் சுழற்றி எறிந்து. இந்திரன் முடிமேல் வளையையும், மேருமலையின் மேற் செண்டையும், கடலில் வேலையும் விட்டனர்.

சமரிற் பொருதிரு மகனைத் தருமயில்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (அ)

(சந்த விருத்தம்)

32. முதுசொற் புலவர்தெ ளித்தப சுந்தமிழ்
நூல்பாழ் போகாமே
முளரிக் கடவுள்ப டைத்தவ சுந்தரை
கீழ்மே லாகாமே

அதிரப் பொருதுக லிப்பகை ஞன்றமிழ்
நீர்நா டாளாமே
அகிலத் துயிர்கள யர்த்தும றங்கடை
நீணீர் தோயாமே

சிதைவுற் றரசிய னற்றரு மங்குடி
போய்மாய் வாகாமே
செழியர்க் கபயரு மொப்பென நின்றுண
ராதா ரோதாமே

மதுரைப் பதிதழை யத்தழை யுங்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன்வ ளர்த்தப சுங்கிளி
தாலோ தாலேலோ. (கூ)

---

(4.) திருமகன் - உக்கிர குமாரபாண்டியர்.

(முடிபு.) அமரர்க் கதிபதி உகைத்து அடும் அமரில், தலைவர்கள் பிறகிட்டுடைவது கண்டு குளிர்ந்து, முடி தொலையவும் வரை திரியவும் வயிறு எரியவும் படை திரித்துப் பொரு திருமகன் என்க.

32. (சந்தக் குறிப்பு.) தனனத் தனதன தத்தன தந்தன தானு தானு.

(அடி, 1.) முதுசொற் புலவர் - தமிழ்ச்சங்கப் புலவர்கள். முளரிக் கடவுள் - பிரமதேவன். வசுந்தரை - பூமி.

(2.) (பி - ம்.) 'பொருத' தமிழ் நீர் நாடு - பாண்டியநாடு. அயர்த்தும் - மறந்தும். அறங்கடை நீள் நீர் - பாவச் செயலாகிய பெருங்கடலில்.

(3.) அரசியல் சிதைவுற்றுத் தருமம் மாய்வாகாமே. செழியர் - பாண்டியர். அபயர் - சோழர். (பி - ம்.) 'ஒன்றுணராதார்'

மதுரைப்பதி தழைவதனால் தமிழ்நூல் பாழ்போதல் முதலியன நிகழவில்லை; அதற்குக் காரணம் அம்பிகையின் அருளென்றபடி.

33. தகரக் கரியகு ழற்சிறு பெண்பிளை
நீயோ தூயோன்வாழ்
சயிலத் தெயிலைவ ளைப்பவ ளென்றெதிர்
சீறு வீறோதா

நிகரிட் டமர்செய்க ணத்தவர் நந்திபி
ரானோ டேயோடா
நிலைகெட் டுலையவு டற்றவு டைந்ததொ
ரானே றகாமே

சிகரப் பொதியமி சைத்தவ ழுஞ்சிறு
தேர்மே லேபோயோர்
சிவனைப் பொருதச மர்த்தனு கந்துள
சேல்போன் மாயாமே

மகரத் துவசமு யர்த்தபொ லன்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன்வ ளர்த்தப சுங்கிளி
தாலோ தாலேலோ. (௩௦)

---

33. அம்பிகையின் மீனக்கொடியினது பெருமை கூறப்படும்.

அங்கயற்கண்ணம்மை திக்குவிசயம் செய்த காலையில் கயிலையின்கண் சிவபிரானுடைய படைத்தலைவர்கள் புறகிட்டு ஓடும்போது அவர்கள் பிடித்த விடைக் கொடியைப்போலவும், சிவபெருமானுடைய யோகத்தைக் கலைத்தற்குச் சென்ற மன்மதனுடைய மீனக்கொடியைப் போலவும் அம்பிகையின் கொடி தோல்வியடையவில்லை யென்பது இதிற் கூறப்படும் செய்தி.

(அடி, 1.) தகரம் - மயிர்ச் சாந்து. பெண் பிளை = பெண்பிள்ளை; விளி; வழக்கு. தூயோன் - சிவபெருமான். சயிலம் - கயிலை மலை.

(2.) நிகரிட்டு - எதிர்த்து. கணத்தவர் - பூதகணத்தினர். உடற்ற - போர் செய்ய. உடைந்ததாகிய ஓர் ஆனேறு; என்றது சிவபெருமானது கொடியிலுள்ள விடையை.

(3.) சமர்த்தன் - மன்மதன். (பி - ம்.) 'உகந்தருள்' மன்மதன் எரிந்த காலத்தில் அவன் கொடியும் எரிந்ததாதலின் சேல்போல் மாயாமே யென்றார்.

(4.) மகரத் துவசம் - மீனக்கொடி.

(முடிபு.) என்று சீறு ஓதா நிகரிட்டு அமர்செய் கணத்தவர் நந்தி பிரானோடே ஓடா, கெட்டு உலைய உடற்ற அப்போது உடைந்த ஆனேறு; ஆனேறு ஆகாமலும் சேல்போல் மாயாமலும் மகரத்துவசத்தை உயர்த்த கொடியென்க.

## ச. சப்பாணிப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

34. நாளவட் டத்தளிம நளினத் தொடுந்துத்தி
நாகணையும் விட்டொரெட்டு
நாட்டத்த னும்பரம வீட்டத்த னுந்துஞ்சு
நள்ளிருளி னுப்பணண்ட

கோளவட் டம்பழைய நேமிவட் டத்தினொடு
குப்புற்று வெற்பெட்டுமேழ்
குட்டத்தி னிற்கவிழ மூதண்ட வேதண்ட
கோதண்ட மோடுசக்ர

வாளவட் டஞ்சுழல மட்டித்து நட்டமிடு
மதமத்தர் சுத்தநித்த
வட்டத்தி னுக்கிசைய வொத்திக்க னத்ததன
வட்டத்தை யொத்திட்டதோர்

---

34. (அடி, 1.) நாளவட்டத் தளிம நளினம் - தண்டையுடைய வட்டமாகிய மெத்தையைப் போன்ற தாமரை மலர்; இது பிரமதேவர் இருப்பிடம். துத்தி - படப்பொறி. நாகணை - நாக அணை; அணை - படுக்கை. எட்டு நாட்டத்தன் - எட்டுக் கண்களையுடைய பிரமதேவன். பரம வீடு அத்தன் - வைகுண்டத்தின் தலைவனாகிய திருமால்; வைகுண்டத்தைப் பரமபதமென்றல் மரபு. நள்ளிருள் - செறிந்த இருள்; என்றது யுகாந்த காலத்து இருளை.

(2 - 3.) பழைய நேமி வட்டம் - பழையதாகிய கடலாற் சூழப்பட்ட பூமி. குப்புற்று - கவிழ்ந்து. ஏழ்குட்டம் - ஏழுகடல்; கடலைக் குட்டமென்னும் வழக்கு, "கடற்குட்டம் போழ்வர் கலவர்" (நான்மணிக்.) என்பதனாலும் உணரப்படும். மூதண்ட வேதண்ட கோதண்டம் - முதிய வானத்தை யளாவிய மேருமலையாகிய வில். சக்ரவாள வட்டம் - வட்டமான சக்கரவாளகிரி. மட்டித்து - அமிழ்த்தி. மதமத்தர் - ஊமத்த மலரை யணிந்த சிவபெருமான்; மதமத்தம் - ஊமத்தமலர்; "கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர் மதியம், உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமான்" (தே.) (பி - ம்) 'மதுமத்தர்' சுத்த நித்தம்: ஒருவகை நடனம்; இது சொக்க நிருத்த மென்றும் கூறப்படும்; சாந்திக் கூத்தின் வகையுள் ஒன்று (சிலப். ௩ : 12, அடியார்.) (பி - ம்.) 'நிர்த்த வட்டம்' ஒத்தி - கொட்டி. (பி - ம்.) 'ஒற்றிக்'

தாளவட் டங்கொட்டு கைப்பாணி யொப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (ச)

35. பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடுஞ்சிப்
பொலந்தேரொ டமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன்முலை மூன்றிலொன்று

கைவந்த கொழுநரொடு முள்ளப் புணர்ச்சிக்
கருத்தா னகத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண் வைத் திடுமொரு
கடைக்கணைக் கமுதமூற்ற

---

(4.) கைப்பாணி - கைத்தாளம். சப்பாணி கொட்டல் - இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல்; ஸ: பாணியென்பது சப்பாணி யென வந்ததென்பர்.

(அடி, 1 - 4.) நள்ளிருளில் நட்டமிடும் மதமத்தர் : "நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே" (திருவா. சிவபுராணம்.) சிவபெருமான் பிரளயகால தாண்டவம் செய்கையில், உமாதேவியார் உடனின்று தாளங் கொட்டினா ரென்பது புராண வரலாறு.

(முடிபு.) நள்ளிருளின் நாப்பண், குப்புற்றுக் கவிழ, சுழல, மட்டித்து நட்டமிடும் மதமத்தரது நித்த வட்டத்தினுக்கு இசைய ஒத்திக் கொட்டு கைப் பாணி யென்க.

35. (அடி, 1.) பொய்வந்த நுண் இடை - பொய்யின் தன்மையைப் பெற்ற நுண்ணிய இடை. நுடங்க - அசைய. கொடுஞ்சி - தாமரை மொட்டின் வடிவமாகச் செய்து தேர்முன் அமைப்பதோருறுப்பு. (பி - ம்.) 'கொடிஞ்சி' பொன்மேரு வில்லி - சிவபெருமான். அம்மை-அம்மையாகிய நீ.

(1 - 2.) சிவபெருமானைக் கண்ட மாத்திரத்தில் தடாதகைப் பிராட்டியாருடைய மூன்று நகில்களில் ஒன்று மறைந்ததற்குத் தற்குறிப்பேற்ற அணியமைய வேறொரு காரணம் கற்பித்தார். உள்ளப் புணர்ச்சி - காதலர் இருவருடைய மனமும் ஒத்தல். உள்ளத்துள்ளே நிகழும் புணர்ச்சிக்கண் பயன்பட ஒரு நகில் உள்ளே சென்றதென்றார்.

மெய்வந்த நாணியொடு நுதல்வந் தெழுங்குறு
வெயர்ப்பினொ டுயிர்ப்புவீங்கும்
விம்மிதமு மாய்நின்ற வுயிரோவ மெனவூன்று
விற்கடை விரற்கடைதழீஇத்

தைவந்த நாணியொடு தவழ்தந்த செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (உ)

36. பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலையின்ற
புனைநறுந் தளிர்கள்கொய்தும்
பொய்தற் பிணுக்களொடு வண்டற் கலம்பெய்து
புழுதிவிளை யாட்டயர்ந்தும்

காமரு மயிற்குஞ்சு மடவனப் பார்ப்பினொடு
புறவுபிற வும்வளர்த்தும்
காந்தள்செங் கமலத்த கழுநீர் மணந்தெனக்
கண்பொத்தி விளையாடியும்

தேமரு பசுங்கிள்ளை வைத்துமுத் தாடியும்
திரள்பொற் கழங்காடியும்
செயற்கையா னன்றியு மியற்கைச் சிவப்பூறு
சேயிதழ் விரிந்ததெய்வத்

(3.) உயிர்ப்பு - மூச்சு. உயிர் ஓவம் - உயிரோடமைந்த சித்திரம்; "உடுக்கும் புவனங் கடந்துநின்றவொருவன் றிருவுள் ளத்திலழ - கொழுக வெழுதிப் பார்த்திருக்கு முயிரோ வியமே" (62.) விற்கடை - வில்லின் கால்களை. விரற்கடையால் தழுவி.

36. அம்பிகையின் இளமைப் பருவத்து விளையாட்டுக்கள் கூறப்படும்.

(1.) மரு வெடிப்பப் பூ முகை விண்ட - நறுமணம் வெளிப்படும்படி பூவானது அரும்பவிழ்ந்த. தண்டலை - சோலை. தளிர் கொய்தல் மகளிர் விளையாட்டு. பொய்தற் பிணுக்கள் - விளையாட்டு மகளிர்; பொய்தல் - விளையாட்டு. வண்டல் கலம் பெய்து - விளையாட்டுக்குரிய செப்புக்களை வைத்து; இது சிறு சோறடுதலைக் குறித்தது. புழுதி விளையாட்டு - புழுதியிலே விளையாடுதல்.

(2.) மடவனப் பார்ப்பு - இளைய அன்னப்பறவையின் குஞ்சு. புறவு - புறா. பிறவும்—மற்றப் பறவைகளும்; அவை நாகண வாய்ப்புள் முதலியன. கைக்குக் காந்தளும் முகத்துக்குக் கமலமும் கண்ணுக்குக் கழுநீரும் உவமை; கழுநீர் - இங்கே கருங்குவளை. (பி - ம்.) 'முகந்தெனக்'

(3.) முத்தாடி - முத்தமிட்டு. பொற்கழங்கு - பொன்னாலாகிய கழற்சிக்காய்; "முத்த வார்மணற் பொற்கழங் காடும்" (பெரும்பாண். 335.)

தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (சு)

37. விண்ணளிக் குஞ்சுடர் விமானமும் பரநாத
வெளியிற் றுவாதசாந்த
வீடுங் கடம்புபொதி காடுந் தடம்பணை
விரிந்ததமிழ் நாடுநெற்றிக்

கண்ணளிக் குஞ்சுந்த ரக்கடவுள் பொலியுமறு
காற்பீட மும்மெம்பிரான்
காமர்பரி யங்கக் கவான்றங்கு பள்ளியங்
கட்டிலுந் தொட்டிலாகப்

பண்ணளிக் குங்குதலை யமுதொழுகு குமுதப்
பசுந்தேற லூறவாடும்
பைங்குழவி பெருவிரல் சுவைத்துநீ பருகிடப்
பைந்தேற லூறுவண்கைத்

---

(4.) இயல்பாகவே செந்நிறம் பொருந்திய கைகள் தளிர்கொய்தல் முதலியவற்றாற் பின்னும் சிவப்பேறின. தாமரை பழுத்தகை - தாமரையைப் போன்ற இயல்பு முதிர்ந்த கை; பழுத்த: உவம உருபுமாம்.

37. இச் செய்யுளின் முற்பகுதியில் அம்பிகை இருக்கும் இடங்கள் கூறப்படும்.

(அடி, 1.) விமானம் - இந்திர விமானம். துவாத சாந்தம் - பிரமரந்தரத்திற்கு மேலே பன்னிரண்டு தானங்களுக்கு அப்பாலுள்ளது; "துவாத சாந்தப் பெருவெளியிற் றுரியங் கடந்த பரநாத, மூலத்தலத்து முளைத்தமுழு முதலே" (44) என்பர் பின்; திருவிளை. சு: 7, சுச: 54-ஆம் செய்யுட்களைப் பார்க்க.

(2.) அறு காற் பீடம்: இது திருக்கோயிலிலுள்ளது. பரியங்கம் - துயிலுமிடம். கவான் - தொடை; துவாத சாந்தத்திலுள்ள சதாசிவ மூர்த்தியின் இடத்துடையில் அம்பிகை வீற்றிருப்பதாகத் தேவியைப் பற்றிய நூல்கள் கூறுமென்பர். (பி - ம்) 'கவின்றங்கு'

(3.) குமுதமென்றது வாயை. குமுதப் பசுந்தேறல் - வாய் நீர் (14, 402.) பைங்குழவியாகிய நீ. குழந்தைகள் தம் பெருவிரலைச் சுவைத்தல் இயல்பு. (பி - ம்.) 'சுவைத்துநீர் பருகிட'

தண்ணளிக் கமலஞ் சிவப்பூற வம்மையொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (ச)

38. சேலாட்டு வாட்கட் கருங்கடற் கடைமடை
திறந்தமுத மூற்றுகருணைத்
தெண்டிரை கொழித்தெறிய வெண்டிரை நெருப்பூட்டு
தெய்வக் குழந்தையைச்செங்
கோலாட்டு நின்சிறு கணைக்காற் கிடத்திக்
குளிப்பாட்டி யுச்சிமுச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பு மிட்டுவளர்
கொங்கையிற் சங்குவாக்கும்
பாலாட்டி வாயிதழ் நெரித்தூட்டி யுடலிற்
பசுஞ்சுண்ண முந்திமிர்ந்து
பைம்பொற் குறங்கினிற் கண்வளர்த் திச்சிறிய
பருமணித் தொட்டிலேற்றித்

---

(3-4.) குழவி நீ பருகிடத் தேறல் ஊறு கைக்கமலம்.

(முடிபு.) விமானமும் வீடும் காடும் நாடும் பீடமும் கட்டிலும் தொட்டிலாக ஆடும் குழவிநீ கொட்டியருள்.

38. இதில், உக்கிரகுமார பாண்டியரை அம்பிகை வளர்த்தமுறை கூறப்படும்.

(அடி, 1.) வெண்டிரை - கடல். தெய்வக் குழந்தை - உக்கிர குமார பாண்டியர். அவர் கடல் சுவற வேலெறிந்த வரலாற்றை நினைந்து இங்ஙனம் கூறினர்.

(2.) கோல் - திரட்சி. கோல் - அம்பு; இங்கே ஆகு பெயராய் அம்பறுத்தூணியைக் குறிப்பதெனக் கொள்ளலுமாம். உச்சி - உச்சந்தலை. முச்சி - உச்சிக்கொண்டை. குஞ்சி - ஆண் தலைமயிர். (பி - ம்.) 'முச்சி யுச்சி'; 'நெய் பொத்தி' வெண் காப்பு - திருநீறு.

(2-3.) கொங்கையிற் பால், சங்கு வாக்கும் பால். ஆட்டி - அசைத்து. குழந்தைக்குப் பாலூட்டுவார் அதனை அசைத்துக் கலக்கியூட்டுதல் வழக்கம். வாயிதழ் நெரித்தூட்டல்: "நெய்பா லடைக்கலந் தாய்வைத்து வாய்நெரித் தூட்ட வழுமையனே" (திருவரங்கத்தந். 18.) திமிர்ந்து - பூசி. (பி - ம்.) 'பருஉமணித்'

தாலாட்டி யாட்டுகைத் தாமரை முகிழ்த்தம்மை
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௫)

(வேறு)

39. வானத் துருமொ டுடுத்திரள் சிந்த
மலைந்த பறந்தலையில்
மண்ணவர் பண்ணவர் வாளின் மறிந்தவர்
மற்றவர் பொற்றொடியார்

பானற் கணையு முலைக்குவ டும்பொரு
படையிற் படவிமையோர்
பைங்குடர் மூளையொ டும்புதி துண்டு
பசுந்தடி சுவைகாணுச்

சேனப் பந்தரி னலகைத் திரள்பல
குரவை பிணைத்தாடத்
திசையிற் றலைவர்கள் பெருநா ணெய்தச்
சிறுநா ணுலிசெய்யாக்

(4.) முகிழ்த்து - குவித்து.

(முடிபு) குழந்தையைக் கிடத்திக் குளிப்பாட்டிப் போற்றி இட்டு ஆட்டி நெரித்து ஊட்டித் திமிர்ந்து வளர்த்தி ஏற்றித் தாலாட்டி ஆட்டு கை. கைத் தாமரை முகிழ்த்துக் கொட்டியருள்.

39. தடாதகைப் பிராட்டியார் திக்குவிசயம் செய்கையில் தேவர் படைகளோடு அமர்புரிந்த செய்தி இதிற் கூறப்படும்.

அம்பிகையின் படையில் உள்ள சிலர் போரில் உயிர்துறந்து சுவர்க்க வாழ்வு பெறுதலும், தேவர் உடல் அழிய அவற்றைப் பேய்கள் உண்ணுதலும் இதிற் காணப்படும்.

(அடி, 1-2.) உரும் - இடி. பறந்தலை - போர்க்களம். மண்ணவர் - பிராட்டியாருடைய படையில் இருந்த வீரர்கள். மறிந்தவராய். அவர் பொற்றொடியார் - தெய்வப் பெண்கள். பானற்கணை - கண். முலையாகிய குவடு. மண்ணவர், வாளின் மறிந்தவராய்த் தெய்வப் பெண்களுடைய கண்களும் தனமுமாகிய பொருபடையிற் பட ; வீரசுவர்க்கத்தையடைந்து தெய்வப் பெண்களின் நலந்துய்த்தாரென்றபடி. தடாதகைப் பிராட்டியாரது படையிலுள்ளோரிற் சிலர் உயிர் நீப்பினும் பகைஞருடைய பொருளைக் கவர்ந்தனரென்றது ஒருநயம். இமையோரது குடர். இதுவரை உண்ணப் படாமையின் ‘ புதிதுண்டு ’ என்றார். பசுந்தடி - பச்சை நிணம்.

(3.) சேனம் - பருந்து. அலகைத் திரள் - பேய்க்கூட்டம். குரவை - கைகோத்தாடல் ; இங்கே பேய்க்கூத்து. (பி - ம்.) ‘ சில குரவை ’

கூனற் சிலையி னெடுங்கணை தொட்டவள்
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (சு)

40. சமரிற் பிறகிடு முதியரு மபயரும்
எதிரிட் டமராடத்
தண்ட தரன்செல் கரும்பக டிந்திரன்
வெண்பக டோடுடையாத்
திமிரக் கடல்புக வருணன் விடுஞ்சுற
வருணன் விடுங்கடவுட்
டேரி னுகண்டெழ வார்வில் வழங்கு
கொடுங்கோல் செங்கோலா
இமயத் தொடும்வளர் குலவெற் பெட்டையும்
எல்லைக் கல்லினிறீஇ
எண்டிசை யுந்தனி கொண்டு புரந்து
வடாது கடற்றுறைதென்
குமரித் துறையென வாடு மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (எ)

---

40. அம்பிகை போர்புரிகையில் பகைப்படைகள் தம்முள்ளே முரணிப் பொருத செய்தி கூறப்படும்.

(அடி, 1.) பிறகிடும் - முதுகிட்டோடும். உதியர் - சேரர். அபயர் - சோழர். தண்டதரன் - யமன். அவன் செல் கரும்பகடு - எருமைக்கடா. வெண்பகடு - வெள்ளை யானை; ஐராவதம். உடையா - தோற்று.

(2.) திமிரக் கடல் - இருளாகிய கடலில். சுறவு - சுறுமீன்; இது வருணன் வாகனம். அருணன் - சூரியன் தேர்ப்பாகன். சுறவு உகண்டெழ. கோல் - அம்பு. கொடுமை அம்புக்கு அடை; "கணைகொடிது" (குறள், 279.)

(3) குலாசலங்கள் எட்டையும் தன் ஆட்சிக்குரிய நிலத்திற்கு எல்லைக் கல்லாக நிறுத்தி; ஆட்சிநிலத்தின் எல்லையில் கல் நடுவது மரபு. தனி கொண்டு - பொதுவாக இருந்த நாடுகளைத் தனக்கே உரியனவாகக் கொண்டு.

(4.) பிடி: விளி.

41. சென்றிடு வாளிகள் கூளிகள் காளிகள்
ஞாளியி லாளியெனச்
செருமலை செம்மலை முதலியர் சிந்தச்
சிந்திட நந்திபிரான்

நின்றில ஞேடலு முன்னமு கும்மவன்
பின்னமு குங்காணு
நிலவுவி ரிந்திடு குறுநகை கொண்டு
நெடுங்கயி லைக்கிரியின்

முன்றிவி ஞடன் மறந்தம ராடியொர்
மூரிச் சிலைகுனியா
முரிபுரு வச்சிலை கடைகுனி யச்சில
முளரிக் கணைதொட்டுக்

குன்றவி லாளியை வென்ற தடாதகை
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (அ)

---

41. இதில் தேவி கைலையங்கிரியை அடைந்து இறைவனை வயப்படுத்திய செய்தி கூறப்படும்.

(அடி,1-2.) வாளிகள் - தேவி செலுத்திய அம்புகள். கூளிகள், காளிகள், வைரவக் கடவுள் முதலியோர் சிவபெருமானுக்குரிய படையைச் சார்ந்தோர். கூளி - பெண்பேய். ஞாளி - நாய்; இது வைரவரது வாகனம். ஆளி - சிங்கம்; இஃது அவருக்கு உவமை. ஞாளியில் ஆளியெனச் செருமலை செம்மல் - வைரவக் கடவுள். செம்மலை: ஐ, சாரியை. செம்மல் முதலியர் சிந்தும்படி தேவியின் வாளிகள் சிந்திட. தேவியால் எய்யப்பட்டனவாயினும் வாளியின் செயலாகக் கூறினர், அச்செயல் தேவிக்கேற்ற பெருமையை உடையதன்றென நினைந்து. (பி - ம்.) 'நின்றவரோடலும்'

(3.) ஆடல் - முன்பு தான் இறைவனுடன் கைலையில் விளையாடிக் கொண்டிருந்தமையை. முரி புருவச்சிலை - வளைந்த புருவமாகிய வில்லை. சில - இரண்டு. முளரிக்கணை - தாமரை மலராகிய அம்பு; என்றது கண்களை; அக்கினிக்கணை யென்னும்பொருளும் தோற்றுகின்றது; முளரி - நெருப்பு.

(4.) குன்றவிலாளி - மேருமலையாகிய வில்லை ஆள்பவர். தடாதகை: விளி.

(முடிபு.) வாளிகள் சிந்திட ஓடலும், காணு நகைகொண்டு சிலைகுனியாத் தொட்டு வில்லாளியை வென்ற தடாதகை.

(சந்த விருத்தம்)

42. ஒழுகிய கருணையு வட்டெழ வைத்தவ ருட்பார்வை
குளநெகி ழடியர்ப வக்கடல் வற்றவ லைத்தோடிக்
குழையொடு பொருதுகொ லைக்கணை யைப்பிணை யைச்சீறிக்
குமிழொடு பழகிம தர்த்தக யற்கண்ம டப்பாவாய்
தழைகெழு பொழிலின்மு சுக்கலை மைப்புய லிற்பாயத்
தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே
மழைபொழி யிமயம யிற்பெடை கொட்டுக சப்பாணி
மதுரையில் வளருமடப்பிடி கொட்டுக சப்பாணி. (௯)

43. செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயைக்
களிறொடும் வளரவ ளர்த்தவ ருட்செவி லித்தாயே
குழலிசை பழகிமு ழுப்பிர சத்திர சத்தோடே
குதிகொளு நறியக னிச்சுவை நெக்கபெ ருக்கேபோல்
மழலையி னமுதுகு சொற்கிளி கொட்டுக சப்பாணி
மதுரையில் வளருமடப்பிடி கொட்டுக சப்பாணி. (௧௦)

---

42. (சந்தக் குழிப்பு.) தனதன தனதன தத்தன தத்தன தத்தான.
(அடி, 1-2.) அம்பிகையின் திருவிழிகளது பெருமை கூறப்படும்.
(1.) உவட்டெழ - பெருக்கெழும்படி. பவக்கடல் - பிறவியாகிய கடல்.
(2.) குழை - காதணி. பிணை - பெண்மான். குமிழென்றது மூக்கை. பாவாய் - பாவையே. ஒடிப்(1) பொருது சீறிப் பழகி மதர்த்த கண்.

(3-4.) முசுக்கலை - ஆண் குரங்கு. முசுக்கலை மேகத்திற் பாய, அம் மேகத்தின்மேல் தவழ்கின்ற சந்திரன் கிழிதலால் ஒழுகுகின்ற அமுதத்தோடு மேகம் நீரைப் பொழியும் இமயமென்க. மைப்புயல் - நீருண்டு கறுத்த மேகம்.

43. (அடி, 1.) மறையினின்றும் வடித்த; மறை - உபநிடதம். அறிதற்கரிய உபநிடதப் பொருளைத் தேவாரத் திருப்பதிகம் எளிதில் அறியும்படி செய்கின்ற அருமை குறிக்கப்படுகின்றது.

(2.) கழுமலம் - சீகாழி. கழுமல மதலை - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பாலால் (1) நிரப்பி. மயிற் சேய் - முருகப் பிரான். களிறு - விநாயகர். (பி - ம்.) ‘மயிற்சேய்கைக் களிறொடும்.’

(3.) பிரசத்து இரசம் - தேனின் இனிமை. நெக்க - நெகிழ்ந்த. குழலின் இசையும் தேனின் இனிமையும் கனியின் சுவையும் அமுதும் மழலைச் சொல்லுக்கு உவமைகள்.

## ரு. முத்தப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

44. காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுண் மணியே யுயிரால
வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த
மலர்க்கற் பகமே யெழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்
சோலைக் கிளியே யுயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியிற்
றுரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
ம்முதலே முத்தந் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே. (க)

---

44. (அடி, 1.) கற்பனை - கற்பித்தல். கருவூலம் - பொக்கிஷம். (பி-ம்.) 'கருகூலத்துப்' பழம்பாடல் - வேதம். செல்வர் - ஞானியர். தேடி வைத்த - அறிந்து வைத்த. கருவூலத்தில் வைத்த மணி.

(1-2.) ஆலவாலம் - பாத்தி. உணர்வு - மெய்ஞ்ஞானம். (பி - ம்.) 'உணர்வின்னீர்'; 'அருள்பழுத்த' தேவியைக் கற்பகமென்று உருவகித் ததற் கேற்பப் பாத்தியும் நீர்பாய்ச்சலும் பூத்தலும் பழுத்தலும் கூறப் பட்டன. குதலை - எழுத்து வடிவம் பெறாத சொல்.

(3.) தோன்றாத்துணை - இறைவன்; "தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே" (தே.)

(4.) முக்கட் சுடர் - சிவபெருமானுடைய கண்களாகிய மூன்று சுடர்கள்; சோம சூரியாக்கினிகள் (63.)

45. உருகி யுருகி நெக்குநெக்குள்
உடைந்து கசிந்திட் டசும்பூறும்
உழுவ லன்பிற் பழவடியார்
உள்ளத் தடத்தி லூற்றெடுத்துப்

பெருகு பரமா னந்தவெள்ளப்
பெருக்கே சிறியேம் பெற்றபெரும்
பேறே யூறு நறைக்கூந்தற்
பிடியே கொடிநுண் ணுசுப்பொசிய

வருகுங் குமக்குன் றிரண்டேந்தும்
மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்
மதுரங் கனிந்த பசுங்குதலை
மழலை யரும்பச் சேதாம்பல்

முருகு விரியுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே. (உ)

46. கொழுதி மதர்வண் டுழக்குகுழற்
கோதைக் குடைந்த கொண்டலுநின்
குதலைக் கிளிமென் மொழிக்குடைந்த
குறுங்கட் கரும்புங் கூன்பிறைக்கோ

---

45. (அடி, 1.) நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து. உள்உடைந்து - உள்ளம் உருகி. அசும்பு - துளி. உழுவல் அன்பு - ஏழுபிறப்பும் தொடர்ந்த அன்பு; உழுவலன்பென்பதன் பொருளைப் பழவடியாரென்பதனாலும் வற்புறுத்தினர். தடம் - தடாகம்.

(2.) (பி - ம்.) 'பெருகும்' ஊறும் நறை - ஊறுகின்ற தேன்; நறை - நறுமணமுமாம். (பி - ம்.) 'நாறுநறை' பிடியின் தலைமயிரைக் கூந்தலென்பர். நுசுப்பு - இடை.

(3) குங்குமக்குன்று இரண்டென்றது நகில்களை (59.) சேதாம்பல் - செவ்வாம்பலினது.

(4.) முருகு - நறுமணம்.

46. மேகம் முதலியவை அம்பிகையின் கூந்தல் முதலியவற்றிற்குத் தோற்றனவாதலின் அவற்றில் உண்டாகும் முத்துக்கள் அம்பிகையின் திருவாய் முத்தை (- முத்தத்தை) ஒவ்வாவென்பது கூறப்படும்.

(அடி, 1.) கொழுதி - கிண்டி. குழற்கோதை - சுருளுதலையுடைய கூந்தல். உடைந்த - தோற்ற. கொண்டல் - மேகம், குறுங்கண் - குறிய கணுக்கள்,

டுழுத பொலன்சீ றடிக்குடைந்த
செந்தா மரையும் பசுங்கழுத்துக்
குடைந்த கமஞ்சூற் சங்குமொழு
கொளிய கமுகு மழகுதொய்யில்

எழுது தடந்தோட் குடைந்ததடம்
பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்புந் தருமுத்துன்
திருமுத் தொவ்வா விகபரங்கள்

முழுதுந் தருவாய் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே. (௩)

47. மத்த மதமாக் கவுட்டொருநான்
மருப்புப் பொருப்பு மிசைப்பொலிந்த
வானத் தரசு கோயில்வளர்
சிந்தா மணியும் வடபுலத்தார்

நத்தம் வளர வளகையர்கோன்
நகரில் வளரும் வான்மணியும்
நளினப் பொகுட்டில் வீற்றிருக்கும்
நங்கை மனைக்கோர் விளக்கமெனப்

---

(1-2.) பிறைக்கோடுழுத பொலன்சீறடியென்றது சிவபெருமான் தேவியினது ஊடலை நீக்கும் பொருட்டு வணங்கியதை நினைந்து கூறியது; "முழுமணி மிடற்றன் கனன்மழு வீரன் முக்கணுண் டகைநின தெழில்கூர், முகம்புலர் தலைகண் டடல்வளைந் தடியின் முனைப்பிறைக் கோடுகொண் டுழுது" (பெரியநாயகி. ஆசிரிய. 1.) சங்கும் கமுகுமாகிய இரண்டும் கழுத்துக்கு உடைந்தன.

(3.) (பி - ம்.) 'தொடித்தோள்' பணை - மூங்கில். திருமுத்து - வாய் முத்தம்; முத்தம் முத்தெனநின்றது, 'முத்தாடி' என்புழிப்போல.

47. (அடி, 1.) மத்தம் - களிப்பு (சிற். 388, பேர்.) கவுட்டு - கவுளை யுடையதாகிய. நான் மருப்புப் பொருப்பு - ஐராவதம். வானத்தரசு கோயில் - இந்திரனது அரண்மனையில். வடபுலத்தார் - இயக்கர்கள்.

(2.) நத்தம் - ஊர். அளகையர்கோன் - குபேரன்; இவன் வட திசைக்கு அதிபன்.

பைத்த சுடிகைப் படப்பாயற்
பதும நாபன் மார்பில்வளர்
பருதி மணியு மெமக்கம்மை
பணியல் வாழி வேயீன்ற

முத்த முகந்த நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே. (ச)

48. கோடுங் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையிற் படுமுத்தும்
கொற்கைத் துறையிற் றுறைவாணர்
குளிக்குஞ் சலாபக் குவான்முத்தும்

ஆடும் பெருந்தண் டுறைப்பொருநை
ஆற்றிற் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியுங் குளிர்முத்தும்

வாடுங் கொடிநுண் ணுசுப்பொசிய
மடவ மகளி ருடனாடும்
வண்டற் றுறைக்கு வைத்துநெய்த்து
மணந்தாழ் நறுமென் புகைப்படலம்

---

(3.) பைத்த - விரித்த. பருதிமணி - சூரியன் போன்ற மணி; கௌத்துவமணி. அம்மை - தாயாகிய நீ. பணியல் - தந்தருளாதே.

(3-4.) வேயீன்ற முத்தம் - சிவபெருமான்.

48 (அடி. 1.) கோடு - கரை. குவடு - மலை. கொற்கை - பாண்டி நாட்டுக் கடற்றுறைப்பட்டினம். துறைவாணர் - நெய்தல் நிலத்தார். சலாபம்- முத்துக் குளித்தல். குவால் - குவியல். கொற்கைமுத்து; "விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்......நற்கொற்கையோர் நசைப்பொருந" (மதுரைக். 135-8); "மல்குநீர் வரைப்பிற் கொற்கை முன்றுறை, ஊதை யீட்டிய வுயர்மண லடைகரை, ஓத வெண்டிரை யுதைத்த முத்தம்"(தொல். களவு. 11, ந.மேற்.)

(2.) பொருநையாறு - தாமிரபன்னிநதி; "பொதியில் நதியிலேவிளை கின்றன முத்தம்" (திருவிளை.)

(3.) வண்டற்றுறை - விளையாட்டிடங்கள். நெய்த்து - பளபளப்பை யுடையதாகி. நறுமென் புகைப்படலம் - அகிற்புகை முதலியவற்றின் பரப்பு.

மூடுங் குழலாய் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே. (ரு)

(வேறு)

49. பைவைத்த துத்திப் பரூஉச்சுடிகை முன்றிற்
பசுங்கொடி யுடுக்கைகிழியப்
பாயிருட் படலங் கிழித்தெழு சுடர்ப்பருதி
பருதிக் கொடுஞ்சி மான்றேர்

மொய்வைத்த கொய்யுளை வயப்புரவி வாய்ச்செல்ல
முட்கோல் பிடித்துநெடுவான்
முற்றத்தை யிருள்பட விழுங்குந் துகிற்கொடி
முனைக்கணை வடிம்புநக்கா

மைவைத்த செஞ்சிலையு மம்புலியு மோடநெடு
வான்மீன் மணந்துகந்த
வடவரை முகந்தநின் வயக்கொடி யெனப்பொலியும்
மஞ்சிவர் வளாகநொச்சித்

---

49. மதுரையிலுள்ள மதிற்கொடிகளின் சிறப்பு இதிற் சொல்லப்படும்.

(அடி, 1.) பை - படம். துத்தி - படப் பொறி. சுடிகை முன்றில் - ஆதிசேடனது உச்சிப்பரப்பு. அதிலுள்ள கொடி போல்வாள் பூமி தேவி. அவளது உடுக்கை கடல். சுடர்ப்பருதி - சூரியனது. கிழிய எழு பருதி யென்க. பருதியையும் கொடுஞ்சியையும் உடைய தேர்; பருதி - தேருருளை; மான்றேரென்பது தேரென்னும் மாத்திரையாய் நின்றது. (பி - ம்.) ‘ பரிதி பரிதிக்கொடுஞ்சி மான்றேர் ’

(2.) சூரியனது தேரிற்கட்டிய புரவி வாவிச்செல்லும்படி. முட்கோல் - குதிரையை ஓட்டுதற்குரிய தாற்றுக்கோல்; என்றது இங்கே கொடியின் உச்சியிலுள்ள கூரிய உறுப்பை; அதுவே முட்கோலைப் போல உதவியது. செல்லப் பிடித்து என்க. துகிற்கொடி; எழுவாய். (பி - ம்.) ‘ நிழற்றுந் துகிற்கொடி ’

(2 - 3) துகிற்கொடிக்கும் அம்பிகையின் கயற்கொடிக்கும் சிலேடை.

முனைக்கணை - முனையையுடைய அம்பினது. வடிம்பு - விளிம்பு. நக்காச் சிலை - பொருந்தாத சிலை; வெளிப்படை. சிலை - இந்திரவில், சேரரது விற்கொடி. அம்புலி - சந்திரன், சோழர்க்குரிய அழகிய புலிக்கொடி. மீன் -

தெய்வத் தமிழ்க்கூட றழையத் தழைத்தவள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (சு)

50. பின்னற் றிரைக்கடன் மதுக்குட மறத்தேக்கு
பெய்முகிற் காருடலவெண்
பிறைமதிக் கூன்குயக் கைக்கடைஞ ரொடுபுடை
பெயர்ந்திடை நுடங்கவொல்கும்
மின்னற் றடித்துக் கரும்பொற் றொடிக்கடைசி
மெல்லியர் வெரீஇப்பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
விட்புலம் விளைபுலமெனக்

---

மீனராசி, கொடியிலெழுதிய மீன். உகந்த வடவரை - உயர்ந்த மேருமலை; "உகப்பே யுயர்வு" (தொல். உரி.) வளாகம் - பரப்பு. நொச்சி - மதில்.

(4.) திருப்பவளம் - வாய்.

(முடிபு.) துகிற்கொடி சிலையும் அம்புலியும் ஓட மீனை மணந்து நின் கொடியெனப் பொலிதற்கு இடமாகிய நொச்சியையுடைய கூடல்.

50. வானளவும் உயர்ந்து வளர்ந்த கரும்பும் நெல்லும் அவ் வானத்தை விளைபுலம் போலத் தோற்றும்படி செய்வதாகக் கற்பித்து அதற்கேற்ப மேகத்தை மள்ளர்களாகவும் மின்னலைக் கடைசியராகவும் விண்மீன்களை மீன்களாகவும் உருவகம் செய்கின்றார்.

(அடி, 1.) கடலாகிய மதுக்குடம். அற - முழுவதும். தேக்கு - நிறைய உண்ட. காருடலையும் மதியாகிய குயக்கையையும் உடைய கடைஞர். முகிலாகிய கடைஞர். கடைஞர் - மள்ளர். கூன்குயம் - வளைவையுடைய அரிவாள். (பி - ம்.) 'காருடலம் வெண்'; 'கடையரொடு'

(2.) மின்னற் றடித்து - மின்னுதலையுடைய மின்னல். கரும்பொற் றொடி - இரும்பாலாகிய கைவளையையுடைய; கரும்பொன் - இரும்பு. தடித்தாகிய கடைசி மெல்லியர். வான்மீன்கணம் - நட்சத்திரக்கூட்டம், வெள்ளிய மீன்களின் தொகுதி. வெடி வரால் - துள்ளும் வரால்மீன். விளை புலம் - வயல். என - என்று யாரும் சொல்லும்படி.

(1-2.) கடைஞரொடு மெல்லியர் பெயரவும் மீன்கணம் வெருக்கொள்ளவும் வரால் குதிகொள்ளும்.

கன்னற் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
கடவுண்மா கவளங்கொளக்
காமதே னுவுநின்று கடைவாய் குதட்டக்
கதிர்க்குலை முதிர்ந்துவிளையும்

செந்நெற் படப்பைமது ரைப்பதி புரப்பவள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (எ)

51. சங்கோ லிடுங்கடற் றானைக்கு வெந்நிடு
தராபதிகண் முன்றி றூர்த்த
தமனியக் குப்பையுந் திசைமுதல்வர் தடமுடித்
தாமமுந் தலைமயங்கக்

கொங்கோ லிடுங்கைக் கொடுங்கோ லொடுந்திரி
குறும்பன் கொடிச்சுறவுநின்
கொற்றப் பதாகைக் குழாத்தினொடு மிரசதக்
குன்றினுஞ் சென்றுலாவப்

---

(3.) கன்னல் - கரும்பு. கடவுண்மா - ஐராவதம். கன்னற் காட்டைக் கடவுண்மா கவளம் கொள. கடைவாய் குதட்ட - தின்று அசை போடும்படி. (4.) படப்பை - இங்கே வயல். "பாசவற் படப்பை" (புறநா. ௬ : 14.)

இதனால் மதுரையின் நிலவளம் சிறப்பிக்கப்பட்டது. "நிலத்துக் கணி யென்ப நெல்லும் கரும்பும்" (நான்மணிக்.) என்பராதலின் அவ்விரண்டா லும் அச்சிறப்பை இங்கே புலப்படுத்தினர்.

51. தடாதகைப்பிராட்டியின் செங்கோற் சிறப்புக் கூறப்படும்.

(அடி, 1.) கடல்போன்ற தானை. சங்கு ஒலிடுதல் கடலுக்கும் தானைக்கும் பொது. வெந்நிடு தராபதிகள் - புறங்காட்டிய அரசர்கள். முன்றில் - தடா தகைப் பிராட்டியாரின் அரண்மனை முற்றம். தமனியக் குப்பை - பொற்குவி யல்; இது பிற அரசர்கள் இட்ட திறை. திசை முதல்வர் - திக்குப் பாலகர். முடித்தாமம் - முடியிலணிந்த கற்பக மலர் மாலை; அது பொன்னிறத்தது. தலைமயங்க - ஒன்றனோடு ஒன்று கலந்து கிடப்ப.

(2.) கொங்கு - நறுமணம். கொடுங்கோலென்றது மலரம்புகளை, குறும்பன் - மன்மதன். கொற்றப்பதாகை - வெற்றிக்கொடி. இரசதக் குன்று - கைலாயம். அம்பிகை சென்றதனால் சிவபெருமான் திருவுள்ளத்தே விருப்பம் விளைவிக்க ஏதுவுண்டா மாதலாலும், அம்பிகையின் கொடிக்கும்

பொங்கோல வேலைப் புறத்திறே டகத்தினிமிர்
போராழி பருதியிரதப்
பொங்காழி மற்றப் பொருப்பாழி யிற்றிரி
புலம்பைப் புலம்புசெய்யச்

செங்கோ றிருத்திய முடிச்செழியர் கோமகள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே (அ)

(சந்த விருத்தம்)

52. பருவரை முதுபல வடியினி னெடுநில
நெக்ககு டக்கனியிற்
படுநறை படுநிறை கடமுடை படுவக
டுப்பவு வட்டெழவும்

---

தன் கொடிக்கும் வேறுபாடு இன்மையாலும், முன்பு அழிவுற்ற காமன் அம்பிகையின் கொடியைத் துணையாகப் பெற்றுத் தன் கொடியோடு கைலைக்குச் சென்றானென்பது கருத்து.

(3.) சூரியனது தேர் உலவுகின்ற எல்லையாகிய சக்கரவாள கிரியளவும் தடாதகைப் பிராட்டியாரின் ஆணை சென்றதென்பர்.

போராழி - ஆஞ்ஞா சக்கரம். பருதியின் இரதத்தின் ஆழி ; ஆழி - தேர் உருளை. பொருப்பாழியில் - சக்கரவாள கிரியில். புலம்பை - தனிமையை ; புலம்பு செய்ய - வருத்த ; தனிமையைப் போக்கியதென்றபடி. அம்பிகையின் ஆட்சி காலும் சூரியன் தேரின் ஒற்றையாழி தனியே சக்கரவாளகிரியைச் சுற்றிய தெனவும், அம்பிகையின் ஆட்சியில் அவளது ஆஞ்ஞா சக்கரமும் உடன் செல்லுதலினால் தனிமையை யொழிந்த தெனவும் கூறினர். கதிரவன் தேர்ச் சக்கரமும் ஆஞ்ஞா சக்கரமும் உலகு முழுவதும் நடப்பதில் ஒத்தன வென்றவாறு ; இதனை, "குலநேமி ரவிபோல வலநேமி தனிகோலு குல தீபனே, நிலநேமி பொலநேமி யளவாக வுககோடி நெடிதாளவே "(தக்க.2) என்பதனாலும் உணரலாகும். (பி - ம்) 'திரிபுலம்பப் புலம்பு செய்ய'

(4.) செழியர் - பாண்டியர்.

52.(சந்தக் குழிப்பு.) தனதன தனதன தனதன தனதன தத்தன தத்தனன.

பலாப்பழத்தின் தேனும் கமுகம்பாளையின் தேனும் பாய்ந்து நிறைந்த தடாகத்தின் நீரையுண்ட களிறு முழங்க, அதனெதிர் மேகம் முழங்க, அவ்விரண்டன் முழக்கத்தினும் இருமடங்குமிக மும்முரசம் மதுரையில் அதிருமென்பர்.

(அடி, 1.) பரு அரை - பருத்த அடி மரம். குடக்கனி - குடம்போன்ற பலாப் பழம். படும் நறை - உண்டாகும் தேன். படு நிறை கடம் - கள் நிறைந்த குடம். கடுப்ப - ஒப்ப. உவட்டெழ - பெருக்கெடுப்ப.

விரிதலை முதலொடு விளைபுல முலையவு
முக்கிய முட்சுறவின்
விசையினின் வழிநறை மிடலொடு கமுகின்வி
ழுக்குலை நெக்குகவும்

கரையெறி புணரியி னிருமடி பெருகுத
டத்தும டுத்தகடக்
களிறொடு பிளிறிட விகலிய முகிலினி
ரட்டியி ரட்டியமும்

முரசதிர் கடிநகர் மதுரையில் வளர்கிளி
முத்தம ளித்தருளே
முழுதுல குடையவொர் கவுரியர் குலமணி
முத்தம ளித்தருளே. (சு)

53. புதையிருள் கிழிதர வெழுதரு பருதிவ
ளைத்தக டற்புவியிற்
பொதுவற வடிமைசெய் திடுவழி யடியர்பொ
ருட்டலர் வட்டணையிற்

றதைமலர் பொதுளிய களியளி குமிறுகு
முற்றிரு வைத்தவளச்
சததள முளரியின் வனிதையை யுதவுக
டைக்கண்ம டப்பிடியே

---

(2.) விரிதலை முதல் - நெல்லும் கரும்புமாகிய பயிர்கள். முள்ளையுடைய சுறு மீன். நறை - கள். நறை நெக்கு உகவும்.

(3.) தடத்து - தடாகத்தில். இரட்டி இரட்டிய - இரு மடங்கு ஒலித்த.

(3-4.) மும்முரசு - வீரமுரசு, தியாகமுரசு, மணமுரசு என்பன. (புறநா. ருஅ : 12, உரை.) (பி-ம்.) 'கடிமதில்' கவுரியர் - பாண்டியர்.

(முடிபு.) நறை உவட்டெழவும் வழிநறை உகவும் இருமடி பெருகு தடத்தில் மடுத்த களிறொடு பிளிறிட இகலிய முகிலின் இரட்டி இரட்டிய மும் முரசு அதிர் மதுரை.

53. (அடி. 1.) பருதி வளைத்த - சூரியனாற் சுற்றப்படும். பொதுவற அடிமை செய்திடு - வேறு ஒருவருக்கும் அடிமை செய்யாது அம்பிகைக்கே அடிமைத்திறம் பூணும்; " பொதுவினிற் றீர்த்தென்னை யாண்டோன் " (திரு. 146.) அலர் வட்டணை - தாமரை மலராகிய வட்ட அணை.

(2.) சததளம் - நூறு இதழ். வனிதை - கலைமகள். திருவையும் வனிதையையும் உதவு கடைக்கண். அம்பிகையின் வலக்கண்ணிற் றிருமக

பதுமமொ டொழுகொளி வளையுநி னளினமு
கத்துமி டற்றுமுறப்
பனிமதி யொடுசுவை யமுதமு நுதலொடு
சொற்குத லைக்கணிநீஇ

முதுதமி ழுததியில் வருமொரு திருமகள்
முத்தம ளித்தருளே
முழுதுல குடையவொர் கவுரியர் குலமணி
முத்தம ளித்தருளே. (௧௦)

---

## ௬. வருகைப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

54. அஞ்சிலம் போலிட வரிக்குரற் கிண்கிணி
அரற்றுசெஞ் சீறடிபெயர்த்
தடியிடுந் தொறுநின் னலத்தகச் சுவடுபட்
டம்புவி யரம்பையர்கடம்

---

ளும் இடைக்கண்ணிற் கலைமகளும் உதித்தனரென்பர் ; திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப், பெருமக ளுதற்க ணகப் பெற்று வான் செல்வங் கல்வி, அருமைவீ டளிப்பாள் யாவ ளவள்'' (திருவிளை. ௧௧ : 2.)

(1-2.) அடியர் பொருட்டுத் திருவையும் கலைமகளையும் உதவும் மடப்பிடி. அம்பிகையின் அடியார்கள் திருவையும் கல்வியையும் பெறுவரென்றபடி.

(3-4.) அம்பிகையைத் திருமகளாக உருவகம் செய்கின்றார்.

பதுமம் - பத்ம நிதி. வளை - சங்க நிதி. இவை முறையே முகத்திலும் கழுத்திலும் உற்றன. திருமுகத்திற்குத் தாமரையும் கழுத்திற்குச் சங்கும் உவமை கூறும் மரபை நினைந்து இங்ஙனம் அமைத்தார். மதி நுதற்கு உவமை. அமுதம் சொல்லுக்கு உவமை. தமிழ் உததி - தமிழ்க் கடல்.

திருமகள் பாற்கடலில் தோற்றிய பொழுது பத்மநிதி, சங்கநிதி, சந்திரன், அமுதம் முதலியன எழுந்தனவாதலின் இங்கே அவற்றில் ஒவ்வொன்றற்கும் ஒவ்வோருறுப்பைக்கூறினர். தனித்தனியே எழுந்த அவற்றைத் தன் திருமேனியின் உறுப்பாகவே கொண்டெழுந்தாளென்பது ஒரு நயம். குலமணி ; விளி.

54. (அடி, 1.) சிலம்பு ஓலிட. அரிக்குரல் - தவளை போன்ற குரலையுடைய. அலத்தகச் சுவடு - செம்பஞ்சுக் குழம்பின் அடையாளம். அம்புவியில்.

மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையு மெந்தைமுடி
வளரிளம் பிறையுநாற
மணிநூ புரத்தவிழு மென்குரற் கோவசையும்
மடநடைக் கோதொடர்ந்துன்

செஞ்சிலம் படிபற்று தெய்வக் குழாத்தினொடு
சிறையோதி மம்பின்செலச்
சிற்றிடைக் கொல்கிமணி மேகலை யிரங்கத்
திருக்கோயி லெனவெனெஞ்சக்

கஞ்சமுஞ் செஞ்சொற் றமிழ்க்கூட லுங்கொண்ட
காமர்பூங் கொடிவருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணு யகிவருகவே. (க)

55. குண்டுபடு பேரகழி வயிறுளைந் தீன்றபைங்
கோதையும் மதுரமொழுகும்
கொழிதமிழ்ப் பனுவற் றுறைப்படியு மடநடைக்
கூந்தலம் பிடியுமறுகால்

---

(1-2) அளகத்து இளம்பிறை - கூந்தலில் அணியும் பிறையென்னும் ஆபரணம். எந்தை - சிவபெருமான். நாற - தோன்ற. அம்பிகையின் திருவடிகளில், பக்தியினால் வணங்கிய அரம்பையர் தலையணியாலும், ஊடலை நீக்கும்பொருட்டு வணங்கிய சிவபெருமான் திருமுடியிலுள்ள பிறையினாலும் உண்டான அடையாளங்கள் பாதச்சுவட்டிலும் தோற்றின. நூபுரம் - சிலம்பு.

(3.) (பி - ம்.) 'தெய்வக் குழாத்தொடுஞ்'

(2-3.) சிலம்பொலிக்கு அன்னத்தின் ஒலியை உவமை கூறுவர். அன்னம் சிலம்பொலியைத் தம் இனத்தின் ஒலியென்றுநினைத்தும், அம்பிகையின் நடையைக் கற்பதற்கெண்ணியும் தொடர்ந்தது.

(4.) கற்பகாடவியின் - கற்பகச்சோலையிலிருத்தலைப்போல. கடம்பாடவி - மதுரை. தேவி அமிர்தக்கடலின் இடையேயுள்ள மணித்தீவில் கற்பகச் சோலையினிடையே திருக்கோயில் கொண்டுள்ளாளென்பது நூற்றுணிபு. இதனைச் சியாமளாதண்டகம், தக்கயாகப்பரணி முதலியவற்றால் உணரலாம்.

(முடிபு.) அம்புவியில், பிறை இரண்டும் நாற, தெய்வக் குழாத்தினொடு ஓதிமம் பின்செல, மேகலை இரங்க வருக.

55. (அடி, 1.) குண்டு - பள்ளம். பேரகழி - இங்கே பாற்கடல் (64.) பைங்கோதை - திருமகள். தமிழ்ப் பனுவற்றுறைப் படியும் பிடி - கலைமகள்.

வண்டுபடு முண்டக மனைக்குடி புகச்சிவ
மணங்கமழ விண்டதொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லிவில்வேள்

துண்டுபடு மதிநுதற் றோகையொடு மளவில்பல
தொல்லுரு வெடுத்தமர்செயும்
தொடுசிலை யெனக்ககன முகடுமுட் டிப்பூந்
துணர்த்தலை வணங்கிநிற்கும்

கண்டுபடு கன்னல்பைங் காடுபடு கூடற்
கலாபமா மயில்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணு யகிவருகவே. (உ)

56. முயல்பாய் மதிக்குழவி தவழ்சூ லடிப்பலவின்
முட்பொதி குடக்கனியொடு
முடவுத் தடந்தாழை முப்புடைக் கனிசிந்த
மோதிநீ ருண்டிருண்ட

---

(2.) முண்டகமனை - செந்தாமரையும் வெண்டாமரையுமாகிய வீடுகள். விண்ட - மலர்ந்த. மானதத் தடமலர்ப் பொற் கோயில் - மனமாய பெரிய தாமரை மலராகிய அழகிய கோயிலில்; "என் னெஞ்சக் கஞ்சமுஞ் செஞ்சொற் றமிழ்க்கூட லுங்கொண்ட காமர் பூங்கொடி" என்றார் முன்னைப் பாட்டிலும். மாணிக்கவல்லி: விளி. வில்வேள் - காமன்.

(1-2.) திருமகளும் கலைமகளும் வெறுந்தாமரைமலரிற் குடிபுக நீ சிவமணம் கமழும் அடியார் இதயமாகிய தாமரைமலரிற் புகுவாயென்று பாராட்டினார்.

(3.) தோகை - இரதி. சிலை - வில்.

(4.) கண்டுபடு கன்னல் - கற்கண்டு உண்டாவதற்குக் காரணமான கரும்பு; எழுவாய். காடுபடு - காட்டைப்போல உண்டாகும்; "கரும்பல்லது காடறியாப், பெருந்தண்பணை" (புறநா. கசு: 15-6); "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடும்" (சீவக. 2902.)

(3-4) மதுரையிலுள்ள கருப்பங்காடு மன்மதன் பல்வேறு உருவம் எடுத்து இரதியுடன் சேர்ந்து அமர் செய்வதற்கு உதவும் விற்களைப் போல வளர்வதென்றார்.

56. இச் செய்யுளில் கயல்மீனின் செயல் கூறப்படும்.

(அடி, 1.) சூல் அடிப்பலவு - ஈரப்பலா; சூல் - கருப்பம் (52.) குடக்கனி - குடம்போன்ற பழம். முடவு - வளைவு. தாழை முப்புடைக் கனி - தேங்காய்.

புயல்பாய் படப்பைத் தடம்பொழில்க ளன்றியேழ்
பொழிலையு மொருங்கலைத்துப்
புறமூடு மண்டச் சுவர்த்தல மிடித்தப்
புறக்கடன் மடுத்துழக்கிச்

செயல்பாய் கடற்றானை செங்களங் கொளவம்மை
திக்குவிச யங்கொண்டநாள்
தெய்வக் கயற்கொடிக டிசைதிசை யெடுத்தெனத்
திக்கெட்டு முட்டவெடிபோய்க்

கயல்பாய் குரம்பணை பெரும்பணைத் தமிழ்மதுரை
காவலன் மகள்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண ணயகிவருகவே. (ரு)

57. வடம்பட்ட நின்றுணைக் கொங்கைக் குடங்கொட்டு
மதுரவமு துண்டுகடைவாய்
வழியும்வெள் ளருவியென நிலவுபொழி கிம்புரி
மருப்பிற் பொருப்பிடித்துத்

தடம்பட்ட பொற்றாது சிந்துரங் கும்பத்
தலத்தணிவ் தொப்பவப்பிச்
சலராசி யேழுந் தடக்கையின் முகந்துபின்
தானநீ ரானிரப்பி

---

(2.) படப்பை - தோட்டக்கூறு. ஏழ். பொழில் - ஏழு தீவு; ஏழு சோலைகளென்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும். அண்டச் சுவர்த் தலம் - வானமாகிய சுவர். அப்புறக் கடல் - பெரும்புறக் கடல்.

(3.) தானை - அம்பிகையின் படை; 30. செங்களம் கொள - இரத்தத்தாற் சிறந்த போர்க்களத்தைத் தன்தாக்கிக் கொள்ள; இது வெற்றி பெற்றார் செய்யும் செயல். கயற்கொடிகள் - அம்பிகையின் துவசங்கள், எடுத்தென - எடுத்தாற்போல. வெடிபோய் - துள்ளிச் சென்று.

(4.) கயல்: எழுவாய். குரம்பு அணை - கரைகள் பொருந்திய. பெரும் பணை - பெரிய வயல். மதுரை காவலன் - பாண்டியன்; தொகுத்தல்.

(முடிபு.) கயல், சிந்த மோதி அலைத்து இடித்து மடுத்து உழக்கி வெடி போய்ப் பாயும் பணையென்க.

57. இச் செய்யுளில் விநாயகக் கடவுளின் திருவிளையாடல் கூறப்படும்.

(அடி, 1.) வடம் - முத்து வடம். மதுர வமுது - இனிய பால். கொம் பின் ஒளிக்குப் பால் உவமை. கிம்புரி - தந்தத்தில் அணியப்படும் பூண்.

(2.) பொற்றாதை அப்பி. சலராசி - கடல். தானநீர் - மதநீர்.

முடம்பட்ட மதியங் குசப்படை யெனக்ககன
முகடுகை தடவியடுமீன்
முத்தம் பதித்திட்ட முகபடா மெனவெழு
முகிற்படா நெற்றிசுற்றும்

கடம்பட்ட சிறுகட் பெருங்கொலைய மழவிளங்
களிறீன்ற பிடிவருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணு யகிவருகவே. (௪)

58. தேனொழுகு கஞ்சப் பொலன்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின்குழம்பாற்
றெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்
செக்கர்மதி யாக்கரைபொரும்

வானொழுகு துங்கத் தரங்கப் பெருங்கங்கை
வாணிநதி யாச்சிவபிரான்
மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு
மரகதக் கொம்புகதிர்கால்

மீனொழுகு மாயிரு விசும்பிற் செலுங்கடவுள்
வேழத்தின் மத்தகத்து
வீற்றிருக் குஞ்சே யிழைக்கும் பசுங்கமுகு
வெண்கவரி வீசும்வாசக்

---

(3.) மதியை அங்குசமாகிய தன் ஆயுதமென்று எண்ணி. மேகத்திற்கு முகபடாமும் நட்சத்திரங்களுக்கு அதிற் பதித்த முத்துக்களும் உவமை.

(4.) களிறு - விநாயகரை. (பி - ம்.) 'கன்றீன்ற'

58. (அடி, 1-2) சிவபெருமான் அம்பிகையின் ஊடலை நீக்கும் பொருட்டு வணங்கும்போது அவள் திருவடியிலுள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு இறைவன் திருமுடியிலுள்ள பிறையும் கங்கையும் செந்நிறத்தை அடைதல் கூறப்படும்.

கஞ்சம்போன்ற சீறடி. பசுங்குழவி வெண்டிங்கள்: 499. செக்கர் மதி - சிவப்பு நிறமுள்ள சந்திரன். வாணி நதி செந்நிறமுடையது. மகுட கோடீரம் - மகுடமாகிய சடை. மரகதக் கொம்பு: விளி.

(3.) சேயிழை - இந்திராணி. (பி - ம்.) 'வேழத்து' கமுகமரம் தன் பாளையால் இந்திராணிக்கு வெண்கவரி வீசியது.

காரொழுகு தடமலர்க் கடிபொழிற் கூடல்வளர்
கவுரியன் மகள்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண்ணி யகிவருகவே. (ரு)

(வேறு)

59. வடக்குங் குமக்குன் றிரண்டேந்தும்
வண்டன் மகளிர் சிறுமுற்றில்
வாரிக் குவித்த மணிக்குப்பை
வானா றடைப்ப வழிபிழைத்து

நடக்குங் கதிர்பொற் பரிசிலா
நகுவெண் பிறைகைத் தோணியா
நாண்மீன் பரப்புச் சிறுமிதப்பா
நாப்பண் மிதப்ப நாற்கோட்டுக்

கடக்குஞ் சரத்தின் மதநதியும்
கங்கா நதியு மெதிர்கொள்ளக்
ககன வெளியுங் கற்பகப்பூங்
காடுங் கடந்து கடல்சுருங்க

மடுக்குந் திரைத்தண் டுறைவைகை
வளநாட் டரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (கா)

---

(4.) கவுரியன் - பாண்டியன்.

59. வையைநதியின் வெள்ளநீர் வானளாவி வரும் நிலை சொல்லப் படும்.

(அடி, 1.) குங்குமக் குன்று - நகில்கள். வண்டல் மகளிர் - சிற்றில் விளையாடல் புரியும் பெண்கள். முற்றில் - சிறுசுளகால். வானாறு அடைப்ப - ஆகாய வழியை அடைத்தலினால். வழி பிழைத்து - செல்லும் கதி மாறி.

(2.) கதிர் - சூரியன். பொற்பரிசிலா - பொன்னாலாகிய பரிசிலாகவும்; பிறை கைத்தோணியா - பிறை சிறுதோணியாகவும் (433, 534.) நாண் மீன் - நட்சத்திரம். மிதப்பு - ஒருமரத் தோணி.

(3.) குஞ்சரம் - ஐராவதம்.

(4.) (பி - ம்.) 'மடக்கும்'

(முடிபு.) குப்பை அடைப்பப் பிழைத்து நடக்கும் கதிர்; கதிர் பரிசிலாக வும் பிறை தோணியாகவும் மீன்பரப்பு மிதப்பாகவும் மிதப்ப, மதநதியும் கங்காநதியும் எதிர்கொள்ளக் கடந்து கடல் சுருங்க மடுக்கும் வைகை யென்க.

60. சுண்ணந் திமிர்ந்து தேனருவி
துளைந்தா டறுகாற் றும்பிபசுந்
தோட்டுக் கதவந் திறப்பமலர்த்
தோகை குடிபுக் கோகைசெயும்
தண்ணங் கமலக் கோயில்பல
சமைத்த மருதத் தச்சன்முழுத்
தாற்றுக் கமுகு நாற்றியிடும்
தடங்கா மணப்பந் தரில்வீக்கும்
விண்ணம் பொதிந்த மேகபடாம்
மிசைத்தூக் கியபன் மணிக்கொத்து
விரிந்தா லெனக்கா னிமிர்ந்துதலை
விரியுங் குலைநெற் கற்றைபல
வண்ணம் பொலியும் பண்ணைவயல்
மதுரைக் கரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (எ)

61. தகரக் குழலி னறையுநறை
தருதீம் புகையுந் திசைக்களிற்றின்
தடக்கை நாசிப் புழைமடுப்பத்
தளருஞ் சிறுநுண் மருங்குல்பெருஞ்

---

60. மருதநிலவளம் கூறப்படும்.

(அடி, 1.) திமிர்ந்து - பூசி. (பி - ம்.) 'சுண்ணந்துதைத்து' தோடு கதவம் - இதழாகிய கதவு. மலர்த்தோகை - திருமகள்.

(2) மருதநிலமாகிய தச்சன். முழுத்தாற்றுக் கமுகு - நன்றாக முதிர்ந்த காய்க்குலையையுடைய கமுகமரங்களை. நாற்றி - தொங்கக் கட்டி. பந்தர்க்காலில் கமுக மரத்தைக் குலையுடன் கட்டுதல் வழக்கமாதலின் இவ்வாறு கூறினார். தடங்கா மணப்பந்தர் - பெரிய சோலையாகிய மணப்பந்தல். (பி - ம்.) 'காவணப்பந்தர்' வீக்கும் - கட்டிய. (பி - ம்.) 'பந்தரிற் கட்டும்'

(3.) மேகபடாம் - மேகமாகிய மேற்கட்டி (வி. பா. அர்ச்சுனன் தீர்த்த. 51.) படாம் - இங்கே மேற்கட்டி. நெற்கற்றைக்கு மேற்கட்டியிலிருந்து நாலவிட்ட மணிக்கொத்து உவமை.

61. (அடி, 1.) தகரம் - மயிர்ச் சாந்து. நறை - இயற்கை மணம். நறைதரு தீம்புகை - அகிற்புகை முதலியன; நறை - நறைக்கொடியுமாம் (சீவக. 131, ந.). கையாகிய நாசி; "மூரி யேழ்கட லுந்தரு மூக்கின" (தக்க. 273) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க. "பரிமள கந்தம், மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின் வரிக்கைவான் மூக்கிடை மடுப்ப" (கம்ப. நித்தனைப். 2.) மருங்குல் - இடை; எழுவாய்.

சிகரக் களபப் பொம்மன்முலைத்
தெய்வ மகளிர் புடையிரட்டும்
செங்கைக் கவரி முகந்தெறியும்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க

முகரக் களிவண் டடைகிடக்கும்
முளரிக் கொடிக்குங் கலைக்கொடிக்கும்
முருந்து முறுவல் விருந்திடுபுன்
மூர னெடுவெண் ணிலவெறிப்ப

மகரக் கருங்கட் செங்கனிவாய்
மடமான் கன்று வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (அ)

62. தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்

தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே யெறிதரங்கம்

---

(1-2) புடை - பக்கத்தில். இரட்டும் - மாறி வீசும். சிறு கால் - மெல்லிய காற்று. ஒசிந்து - தளர்ந்து. குடிவாங்க - வேற்றிடம் பார்க்க. மருங்கல் சிறு காற்றுக்கு ஒசிதல் : "ஈக்காற்றுக் காற்ரு விடை" (தனிப்.)

(3.) முகரம் - ஒலி. முளரிக் கொடி : திருமகள். கலைக் கொடி - கலை மகள். முருந்து - மயிலிறகின் அடிக்குறுத்து. முறுவல் - பல். புன் மூரல் - புன்னகை.

(4.) மகரக் கருங்கண் : 19.

(முடிபு.) நறையும் புகையும் மடுப்ப, மருங்குல் ஒசிந்து குடிவாங்க, முறுவல் நிலவெறிப்ப வருக வென்க.

62. (அடி, 1.) கடவுட் பழம் பாடல் - வேதம் (க : 1, 44, 431 - 5.) நறை - தேன். துறைத் தீந்தமிழ் - அகமும் புறமுமாகிய துறைகளையுடைய இனிய தமிழ். அகந்தை - ஆணவம்.

(2.) தொழும்பர் - அடியார். "தொண்டர் மானதத் தடமலர்ப் பொற் கோயில் குடிகொண்ட மாணிக்கவல்லி" என்றார் முன்னும் (55.) சிமயம் - சிகரம். பொருப்பென்றதற்கேற்பப் பிடி என்றார்.

உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்

மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலையத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (௯)

63. பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்

விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்

குருந்தே வருக வருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்

மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (௧௦)

---

(3.) ஒருவன் - சிவபெருமான். உயிரோவியம்: "அத்தன் மனத்தெழு தியவுயிரோவியம்" (80.) மதுகரம் - வண்டு.

(4.) குழலாகிய காடு: 702.

63. (அடி, 1.) (பி - ம்.) 'உறைக்கும்', 'இரைக்கும்'

(1-2) முக்கட் சுடர்க்கிடு விருந்து: 44-8. முக்கண்ணாகிய சுடர். மும்முதல் - பிரமன் முதலிய மும்மூர்த்திகள். (பி - ம்.) 'விளைக்கும் பரமானந் தத்தின்'

(3.) குருந்து - குருத்து. (பி - ம்.) 'அளிபழுத்த'

(3-4) பிறவிப்பிணிக்கோர் மருந்து: 22.

## எ. அம்புலிப் பருவம்

64. கண்டுபடு குதலைப் பசுங்கிளி யிவட்கொரு
கலாபேத மென்னநின்னைக்
கலைமறைகண் முறையிடுவ கண்டோ வலாதொண்
கலாநிதி யெனத்தெரிந்தோ

வண்டுபடு தெரியற் றிருத்தாதை யார்மரபின்
வழிமுத லெனக்குறித்தோ
வளர்சடை முடிக்கெந்தை தண்ணறுங் கண்ணியா
வைத்தது கடைப்பிடித்தோ

குண்டுபடு பாற்கடல் வருந்திருச் சேடியொடு
கூடப் பிறந்ததோர்ந்தோ
கோமாட்டி யிவணின்னை வம்மெனக் கொம்மெனக்
கூவிடப் பெற்றாயுனக்

கண்டுபடு சீரிதன் றுதலா லிவளுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (க)

---

64. அம்பிகை சந்திரனிடம் அன்பு பூணுவதற்குரிய காரணங்கள் சொல்லப்படும்.

(அடி, 1.) கண்டு - கற்கண்டு. படு: உவமவுருபு. அம்பிகையும், சிவ பெருமானைப் போலவே எட்டு உருவங்களை யுடையளாதலின் அவ்வுருவங் களில் சந்திரன் ஒருவனென்பது குறித்து அவனை ஒரு கலாபேதமென்றார். முறையிடுவ - முறையிடுதல். கலாநிதி - கலைகளுக்கு இருப்பிடம்; கலை - வித்தை, கிரணம்.

(2.) தாதையார் - பாண்டியர். வழிமுதல் - குலமுதல்வன் (71); "செருமாண் டென்னர் குலமுத லாதலின், அந்தி வானத்து வெண்பிறை தோன்றி" (சிலப். ச : 22-3.) எந்தை - சிவபெருமான். கண்ணி - தலையிற் சூடும் மாலை; "மாதர்ப் பிறைக்கண்ணி யானை" (தே.)

(3) குண்டு - ஆழம். திருச்சேடி - திருமகளாகிய தோழி. வம்மென- வாவென (72.) கொம்மென - விரைவாக.

(4.) அண்டுபடு - பொருந்தும். ஆணிப்பொன் - உரையாணிப்பொன்,

65. குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென்று மழல்விடங் கொப்புளிக் கின்றவிரு
கோளினுச் சிட்டமென்றும்

கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட
கயரோகி யென்றுமொருநாள்
கண்கொண்டு பார்க்கவுங் கடவதன் றெனவும்
கடற்புவி யெடுத்திகழவிட்

புலத்தோடு முடுமீன் கணத்தோடு மோடுநின்
போல்வார்க்கு மாபாதகம்
போக்குமித் தலமலது புகலில்லை காண்மிசைப்
பொங்குபுனல் கற்பகக்கா

டலைத்தோடு வைகைத் துறைப்படி மடப்பிடியொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லியுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (உ)

---

65. சந்திரனுடைய குறைகள் நீங்குமென்பது கூறப்படும்.

(அடி, 1.) தெய்வக்குழாம் - தேவர்களின் தொகுதி; தேவர்கள் சந்திர கிரணத்தை உண்பரென்றல் மரபு; "பிறைவளர் நிறைமதி யுண்டி, அணி மணிப் பைம்பூ ணமரர்க்கு ","உலகுபயம் பகர வோங்குபெறும் பக்கம் வழி யது பக்கத் தமர ருண்டி, மதி" (பரி. ௧ .52, ௧௧ : 34-6.) கோது -சக்கை. இருகொள் - இராகு கேதுக்கள். உச்சிட்டம் - எச்சில்.

(2.) கலைத்தோடு - கலைத்தொகுதி; ஆடையின் தொகுதியென்பது வேறு பொருள்; கலை : சிலேடை (66.) களங்கம் - சந்திரனிடத்துள்ள கறுப்பு. கயரோகி - க்ஷயரோகத்தை யுடையவன்; என்றது உடல் தேய்வது கருதிக் கூறியது. ஒருநாள் - விநாயக சதுர்த்தி; அன்று சந்திரனைப் பார்த்தல் கூடாதென்பர்; "சிங்கமா மதியிடைச் சேர்முன் பக்கத்துத், தங்குநஞ் சதுர்த்தியிற் றன்னைக் காணற்க, மங்குல்வான் முன்புபோன் மற்றை நாளெ லாம், அங்கவ னுருவினை யாருங் காண்கவே" (விநாயக. சந்திரன் அனுட் டித்த. 23.)

(3.) ஒருவனுடைய மாபாதகத்தை ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் இங்கே போக்கியருளினர்; இதனை மாபாதகம் தீர்த்த திருவிளையாடலால் உணரலா கும். புகல் - அடைக்கலத் தானம்.

66. இற்றுமதி யெனநிலவு தோற்றுபரு வத்திலொளி
கிளர்நுதற் செவ்விவவ்விக்
கெண்டைத் தடங்கணு ரெருவிட் டிறைஞ்சக்
கிடந்தது முடைந்தமுதம்விண்

டூற்றுபுது வெண்கலை யுடுத்துமுழு மதியென
உதித்தவம யத்துமம்மை
ஒண்முகத் தொழுகுதிரு வழகைக் கவர்ந்துகொண்
டோடினது நிற்கமற்றை

மாற்றவ ளொடுங்கேள்வர் மௌலியி லுறைந்ததும்
மறந்துனை யழைத்தபொழுதே
மற்றிவள் பெருங்கருணை சொற்றிடக் கடவதோ
மண்முழுதும் விம்முபுயம்வைத்

தாற்றுமுடி யரசுதவு மரசிளங் குமரியுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (ஙு)

67. விண்டலம் பொலியப் பொலிந்திடுதி யேலுனது
வெம்பணிப் பகைவிழுங்கி
விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதிவெயில்
விரியுஞ் சுடர்ப்பருதியின்

---

66. சந்திரனிடத்து அம்பிகைக்குக் கோபம் உண்டாதற்குரிய காரணங்கள் சில கூறப்படும்.

(அடி, 1.) இற்றுமதி - பிறை. ஸ்யாதிபதியென்று மதி கூறப்படுமாதலின் அவனை எருவிட்டிறைஞ்சுதல் மரபென்பர் (189.)

(2.) கலை - கிரணம், ஆடை ; சிலேடை.

(3.) மாற்றவள் - தங்கை.

(4.) ஆற்று - தாங்கும். முடியரசு - மலையத்துவச பாண்டியன்.

67. சந்திரன் அடையும் துன்பங்கள் சில கூறப்படும்.

(அடி, 1-2.) வெம்பணிப்பகை - வெவ்விய பாம்புகளாகிய பகை ; இராகு கேதுக்கள்.(65.) தொக்கு - சேர்ந்து. அமாவாசையில் சூரியனும் சந்திரனும் சேர்தலை நினைந்து, சூரிய மண்டலம் புக்க காலையில் ஒளி மழுங்குமென்றூர் ; "இந்துவோ டிரவி கூட்ட மமாவாசை" (சூடா. தெய்வப்.) எந்தை - சிவபெருமான். மாசுணம் - அவர் திருமுடியிலணிந்த பாம்பு.

மண்டலம் புக்கனை யிருத்தியெனி ஞெள்ளொளி
மழுங்கிட வழுங்கிடுதிபொன்
வளர்சடைக் காட்டெந்தை வைத்திடப் பெறுதியேல்
மாசுணஞ் சுற்றவச்சம்

கொண்டுகண் டுஞ்சா திருப்பது மருப்பொங்கு
கோதையிவள் சீறடிகணின்
குடர்குழம் பிடவே குமைப்பதும் பெறுதியெங்
கோமாட்டி பாலடைந்தால்

அண்டபகி ரண்டமு மகண்டமும் பெறுதியால்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (சு)

68. எண்ணில்பல புவனப் பெருந்தட்டை யூடுருவி
இவள்பெரும் புகழ்நெடுநிலா
எங்கணு நிறைந்திடுவ தங்கதனின் மெள்ளநீ
எள்ளளவு மொண்டுகொண்டு

வெண்ணிலவு பொழிவது கிடைத்தனை மடுத்திவள்
விழிக்கடை கொழித்தகருணை
வெள்ளந் திளைத்தாடு பெற்றியாற் றண்ணளி
விளைப்பதும் பெற்றனைகொலாம்

மண்ணிலொண் பைங்கூழ் வளர்ப்பது னிடத்தம்மை
வைத்திடுஞ் சத்தியேகாண்
மற்ஞெருசு தந்தர நினக்கென விலைக்கலை
மதிக்கடவு ணீயுமுணர்வாய்

---

(3.) குமைப்பது - உதைப்பது ; இஃது ஊடற்கட் செயல். துஞ்சாதிருப்பதும் குமைப்பதும் பெறுதி.

(4.) அண்டமும் பகிரண்டமுமாகிய அகண்டமும் ; அகண்டம் - முழுவதும்.

68. (அடி, 1.) தட்டு - அடுக்கு.

(3.) பைங்கூழ் - பசிய பயிர். சந்திரன் ஸஸ்யாதிபதியாதலின் பைங்கூழை வளர்ப்பதாகக் கூறினர் (71.)

அண்ணலங் களியானை யரசர்கோ மகளுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (௫)

69. முன்பும்ப ரரசுசெய் பெரும்பாவ முங்கோவ
மூரிமாத் தொடர்சாவமும்
மும்மைத் தமிழ்ச்செழியன் வெப்பொடு கொடுங்கூனும்
மோசித்த வித்தலத்தின்

தன்பெருந் தன்மையை யுணர்ந்திலைகொல் சிவராச
தானியாய்ச் சீவன்முத்தித்
தலமுமாய்த் துவாதசாந் தத்தலமு மானதித்
தலமித் தலத்தடைதியேல்

மன்பெருங் குரவற் பிழைத்தபா வமுமற்றை
மாமடிக ளிடுசாவமும்
வளரிளம் பருவத்து நரைதிரையு முதிர்கூனும்
மாற்றிடப் பெறுதிகண்டாய்

அன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (௬)

---

69. மதுரையின் சிறப்பும் அதனை அடைந்தால் சந்திரன் அடையும் பேறுகளும் கூறப்படும்.

(அடி, 1.) உம்பர் அரசு - இந்திரன். (பி-ம்.) 'முன்பெரும் பாவிசெய்' மூரிமா - வலியையுடைய யானையாகிய ஐராவதம். சாவம் - சாபம். (பி-ம்.) 'சாபமும்' மும்மைத் தமிழ் - முத்தமிழ். செழியன் - கூன்பாண்டியன். வெப்பு - சுரம். மோசித்த - நீக்கிய (1 :௧௨௦.))

(2.) சிவராசதானி : "சீர்கொண்ட கூடற் சிவராச தானி", "திரு மதுரை, தானே சிவராச தானி" (தமிழ்விடு. 1, 265-6.) சீவன் முத்தித் தலம், துவாதசாந்தத்தலம் : திருவிளை. தலவிசேடப். 21.

(3.) குரவன் - பிருகஸ்பதி. மாமடிகள் - மாமனார் (548.) தக்கன் இடு சாபம் : சந்திரன் உரோகிணியிடத்து மிக்க விருப்புடையவனாகி யிருந்து மற்ற மனைவியரைப் புறக்கணித்தமையின், கலை குறைகவென்று தக்கன் சாபமிட்டானென்பது வரலாறு (கந்த. சந்திரசாபப்.)

(4.) அன்பர் என்புருகக் கசிந்திடு தேன் :76.

70\. கும்பஞ் சுமந்தமத வெள்ளநீர் கொட்டும்
கொடுங்களி றிடும்போர்வையான்
குடிலகோ டீரத் திருந்துகொண் டந்நலார்
கொய்தளிர்க் கைவருடவும்
செம்பஞ் சுறுத்தவும் பதைபதைத் தாரழற்
சிகையெனக் கொப்புளிக்கும்
சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதும்
திருவுளத் தடையாதுபொற்
றம்பஞ் சுமந்தீன்ற மானிட விலங்கின்
தனிப்புதல்வ னுக்குவட்டத்
தண்குடை நிழற்றுநினை வம்மென வழைத்தனள்
தழைத்திடு கழைக்கரும்பொன்
றம்பஞ் சுடன்கொண்ட மகரக் கொடிக்கொடியொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (எ)

71\. துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியுநின்
தொன்மரபு தழையவந்து
தோன்றிடுங் கௌரியர் குலக்கொழுந் தைக்கண்டு
துணைவிழியு மனமுநின்று

---

70\. அம்பிகை சந்திரன்பாற் சினங்கொள்ளுதற்குரிய ஏதுக்கள் இருப்பவும் அவள் அவற்றை மறந்து அழைத்தனளென்ற செய்தி சொல்லப்படும்.

(அடி, 1.) போர்வையான் - சிவபிரான். குடில கோடீரம் - வட்டமான சடை.

(1 - 2.) அந்நலார் - தேவியின் தோழிகள். இருந்துகொண்டு செய்வதும் என்க. அடையாது - கொள்ளாமல்.

(3.) மானிட விலங்கு - நரசிங்கம். புதல்வன் - காமன்.

(3 - 4.) கரும்புவில்லும் பஞ்சபாணமும் அம்பிகைக்கு உரியன (75.)

71\. சந்திரனுடைய இழிவு கூறப்படும்.

(அடி, 1.) கௌரியர் - பாண்டியருடைய ; குலக்கொழுந்து - அம்பிகை.

களிதூங்க வளவளாய் வாழாம லுண்ணமுது
கலையொடு மிழந்துவெறுமட்
கலத்திடு புதுக்கூழி னுக்கிரவு பூண்டொரு
களங்கம்வைத் தாயிதுவலால்

ஒளிதூங்கு தெளிவிசும் பினினின்றொ டொத்தவன்
ஒருத்தன் கரத்தின்வாரி
உண்டொதுக் கியமிச்சி னள்ளிருளி லள்ளியுண்
டோடுகின் றுயென்செய்தாய்

அளிதூங்கு ஞிமிறெழுந் தார்க்குங் குழற்றிருவொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (அ)

72. மழைக்கொந் தளக்கோதை வம்மென்ற வளவினீ
வந்திலை யெனக்கடுக லும்
வாண்முகச் செவ்விக் குடைந்தொதுங் கினவனெதிர்
வரவொல்கி யோபணிகள்கோள்

இழைக்குங்கொல் பின்றொடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலுமெனயாம்
இத்துணையு மொருவாறு தப்புவித் தேம்வெகுளின்
இனியொரு பிழைப்பில்லைகாண்

---

(2.) அமுது கலையொடும் இழந்து - அமிர்தத்தைக் கிரணங்களோடு இழந்து ; உணவையும் உடையையும் இழந்தென்பது வேறுபொருள். மட்கலத்திடு புதுக்கூழினுக்கு இரவு பூண்டு - பூமியில் உண்டாகின்ற புதிய பயிர்களின் பொருட்டு இராக்காலத்தின் தலைமையைப் பூண்டு ; மண்பாண்டத்தில் இடும் புதிய கூழுணவின்பொருட்டு இரத்தலை மேற்கொண்டென்பது வேறுபொருள். களங்கம் - கறுப்பு, வசை. (பி-ம்.) 'வைத்தாயித்ல்லால்'

(3.) ஒருத்தன் - சூரியன். கரம் - கிரணம், கை. நள்ளிருள் - இரவு. சூரியனிடத்திலிருந்து பெற்றுச் சந்திரன் ஒளியை வீசுகின்றனென்பராதலின் இங்ஙனம் கூறினர்.

(4.) அளியும் ஞிமிறும் ஆர்க்கும்.

72. (அடி, 1.) கொந்தளக் கோதை - கூந்தலையுடைய அம்பிகை ; கோதை - மாலைபோல்வாள் ; உவமவாகுபெயர். (பி - ம்.) 'வம்மினென்றளவினீ' கடுதல் - கோபித்தல். ஒல்கியோ - தளர்ந்தோ. பணிகள் - இராகு கேதுக்கள்.

(2.) பிழைப்பு - தப்பும் வகை.

தழைக்குந் துகிற்கொடி முகிற்கொடி திரைத்துமேற்
றலம்வளர் நகிற்கொடிகளைத்
தாழ்குழலு நீவிநுதல் வெயர்வுந் துடைத்தம்மை
சமயமிது வென்றலுவலிட்

டழைக்குந் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (௩)

73. ஏடகத் தெழுதாத வேதச் சிரத்தர
சிருக்குமிவள் சீறடிகணின்
இதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்
தெண்ணியன் றேகபடமா

நாடகத் தைந்தொழி னடத்தும் பிரான்றெய்வ
நதியொடு முடித்தல்பெற்றாய்
நங்கையிவ டிருவுள மகிழ்ச்சிபெறி னிதுபோலொர்
நற்றவப் பேறில்லைகாண்

---

(3.) துகிற்கொடி : எழுவாய். முகிற்கொடி - மேகத்தின் ஒழுங்கினை. திரைத்து - சுருட்டி. மேற்றலம்-விண்ணுலகம். நகிற் கொடிகள் - தெய்வ மகளிர். அம்மை சமயம் - அம்பிகை தரிசனம் அளித்தற்குரிய செவ்வி. அலுவலிட்டு - வேலையில் ஏவி.

(4.) துரைப் பெண் : 29.

73. (அடி, 1.) வேதச்சிரம் - உபநிடதம். சந்திரனிடத்து அம்பிகை எழுந்தருளியிருப்பதாக நூல்கள் கூறும் ; "மதிமண்டலத் தமுத மாயம்மை தோன்றுகின்றதும்" (95); 'சந்த்ரமண்டல மத்யகா' என்பது லலிதா ஸஹஸ்ரநாமம் (240.)

(1 - 2.) கபடமா நாடகத்து ஐந்தொழில் நடத்தும் பிரான் - புறத்தார்க்குப் புலப்படாத உட்கருத்தை யுடைய தன் நடனத்தில் ஆக்கல் முதலிய ஐந்தொழிலையும் புரியும் பெருமான்; நாடகம் - கூத்தென்னும் துணையாய் நின்றது. சிவபிரானது திருநடனக்கோலம் ஐந்தொழிலையும் நடத்துதற்குரிய அடையாளமாக நிலவுவதென்பது உண்மை விளக்கம் முதலிய நூல்களால் அறியப்படும். (பி - ம்) 'ஐந்தொழி னடிக்கும்பிரான்'

மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துகிர்
வடிம்புதை வருமங்நலார்
மகரயாழ் மழலைக்கு மரவங்க ளுண்டுகில்
வழங்கக் கொழுங்கோங்குதூங்

காடகப் பொற்கிழி யவிழ்க்குமது ரைத்திருவொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (௧௦)

## அ. அம்மானைப் பருவம்

74. கரைக்குங் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று
களிறுபெரு வயிறுதூர்ப்பக்
கவளந் திரட்டிக் கொடுப்பதெ னவுஞ்சூழ்ந்தொர்
கலைமதிக் கலசவமுதுக்

கிரைக்கும் பெருந்தேவர் புன்கண் டுடைத்திட
எடுத்தமுத கலசம்வெவ்வே
றீந்திடுவ தெனவுமுழு முத்திட் டிழைத்திட்ட
எறிபந்தி னிரையென்னவும்

(3.) மாடகம் - முறுக்காணி. திரித்து - முறுக்கி. உகிர் - நகம். யாழ் மழலைக்கு - யாழ்ப்பாட்டாகிய மழலைக்கு. மரவம் - வெண்கடம்பு; அதன் மலர் துகில் போல்வது (சீவக. 1558.)

(3 - 4.) கோங்கின் மலருக்குப் பொன் உவமை. ஆடகப் பொற்கிழி - பொன்முடிப்பு.

74. (அடி, 1.) கரைக்கும் - ஒழுகவிடும். கவுளாகிய குடம்; கவுள் - கன்னம். (பி - ம்.) 'உடைத்தூற்றும்.' களிறு: விநாயகர். தூர்ப்ப - நிறைப்ப. மதியாகிய கலசம்.

(2.) இரைக்கும் - மோகமுறும் (தக்க. 129, உரை.) புன்கண் - துன்பத்தை. ஒரு கலசத்தை விரும்புபவர்களுக்கு வெவ்வேறு கலசம் ஈந்திடுவதென்பது ஒரு நயம். பந்தின் நிரை - பந்தின் வரிசை.

விரைக்குந் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந் தார்த்தபிள்ளை
வெள்ளோ திமத்திரளி தெனவுங் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந்துவைத்

தரைக்குந் திரைக்கைவெள் ளருவிவை கைத்துறைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (க)

75\. திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருகுதிரு மணவாளன்மேற்
செழுமணப் பந்தரி லெடுத்தெறியு மமுதவெண்
திரளையிற் புரளுமறுகாற்

பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
பனிமதி மிசைத்தாவிடும்
பருவமட மானெனவெ னம்மனைநி னம்மனைப்
படைவிழிக் கயல்பாய்ந்தெழ

வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமிதென
மேகக் குழாத்தைமுட்டி
விளையாடு மழகளிறு கடைவாய் குதட்டமுகை
விண்டவம் பைந்துகோத்த

(3.) விரைக்கும் - மணம் வீசும். கையாகிய தாமரைமலரில் துஞ்சி. ஓதிமத்திரள் - அன்னத்தின் தொகுதி. அம்பிகை அன்னத்தை வளர்த்தல்; 83.

(1-3.) அம்மானைக்குச் சோற்றுருண்டையும் அமுதகலசமும் முத்துப் பந்தும் அன்னமும் உவமைகள்.

(4.) திரைக்கை - அலையாகிய கை. அருவியென்றது இங்கே நீரோட்டத்தை. (பி - ம்.) 'பாகம் புகுந்த'; 'பாகம் பகிர்ந்த'

75\. (அடி, 1-2.) அம்பிகை அம்மானை விளையாடும்போது அவ்வம் மானைகளின்மேல் திருவிழிகள் பாய்தலுக்குச் சில உவமைகள் கூறப்படும்.

அமுதவெண்டிரளை - சோற்றுருண்டை. (பி - ம்.) 'படர்ந்தவெண்பனி மதி' அம்மனை - தாய், அம்மானை. அம்மானைக்குச் சோற்றுருண்டையும் மதியும், அதிற் பாய்கின்ற அம்பிகையின் திருவிழிக்கு வண்டும் மானும் உவமைகள்.

(3.) மேகக்குழாத்தை யானைக்கூட்டமென்றெண்ணி. இது : தொகுதி யொருமை. மழகளிறு - விநாயகக் கடவுள்.

அங்கட் கரும்பேந்து மபிடேக வல்லிதிரு
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (௨)

76. கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற வமுதூறு பார்வைக்
கடைக்கட் கறுப்பூறியும்

நள்ளூறு மறுவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
நற்றரள வம்மனையொர் சிற்குணத் தினைமூன்று
நற்குணங் கதுவல்காட்ட

உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவிரும்
உற்றிடு துவாதசாந்தத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்

கள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேறல்
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (௩)

---

(3-4.) அம்பு ஐந்தும் கருப்புவில்லும் அம்பிகைக்கு உரியன. அக் கரும்பைக் கண்டு விநாயகர் வாய் குதட்ட, குதட்ட ஏந்தும் என்க.

(76.) அம்பிகையின் கரம், கண், நகை என்பவற்றால் அம்மானையின் நிறம் வேறுபடுதல் கூறப்படும்.

(அடி, 1-2.) பார்வைக்கடைக்கண் கறுப்பு - பார்வையையுடைய கடைக்கண்ணின் கறுப்பு. நள் ஊறு - நடுவிலே அமைந்த, மறுவாகிய ஊறு. சிற்குணம் - சித்தினது குணம்; சித்து - ஆன்மா. மூன்று நற்குணம் - சத்துவ ராஜஸ தாமஸ குணங்கள். அம்மானை பலநிறம் தோய்தல்: 82.

(3.) விழித்துறங்கும் தொண்டர்: "விழித்துறங்கும், உபாயந்தெரிவீர்" (**பாசவதைப், 29**); "விழித்த கண்குரு டாத்திரி வீரரும் பலரால்" (**திருவிளை. ருஅ : 38.**)

(3 - 4.) தொண்டர் என்புருக ஊறு தேறல்: 69.

77\. குலைபட்ட காந்தட் டளிர்க்கையிற் செம்மணி
குயின்றவம் மனைநித்திலம்
கோத்தவம் மனைமுன் செலப்பின் செலுந்தன்மை
கோகனக மனையாட்டிபாற்

கலைபட்ட வெண்சுடர்க் கடவுடோய்ந் தேகவது
கண்டுகொண் டேபுழுங்கும்
காய்கதிர்க் கடவுளும் பின்றொடர்வ தேய்ப்பக்
கறங்கருவி தூங்கவோங்கும்

மலைபட்ட வாரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளைவாரி
மறிதிரைக் கையா லெடுத்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறியோடும்

அலைபட்ட வைகைத் துறைச்சிறை யனப்பேடை
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (ச)

---

77\. அம்பிகை மாணிக்க அம்மானையும் முத்திழைத்த அம்மானையும் ஆடுதல் கூறப்படும்.

(அடி, 1.) குலைபட்ட காந்தள் - குலையாகப் பூத்த காந்தண் மலர். காந்தட்கை, தளிர்க்கை யென்க. செம்மணி குயின்ற - மாணிக்கம் பதித்த. செம்மணி குயின்ற அம்மனை முத்தாலாகிய அம்மனைக்குப் பின்னே சென்றது. கோகனக மனையாட்டி - தாமரை மலராகிய மனைவி.

(2.) வெண்சுடர்க் கடவுள் - சந்திரன். காய்கதிர்க் கடவுள் - சூரியன். ஏய்ப்ப - ஒப்ப.

(1-2) அம்பிகையின் திருக்கரத்திற்குத் தாமரையும், மாணிக்க வம்மானைக்குச் சூரியனும், முத்திழைத்த அம்மானைக்குச் சந்திரனும் உவமைகள்.

(3.) மலை பட்ட ஆரம் - மலையில் உண்டான முத்து. (பி - ம்.) 'பிறவுமா மணித்திரளை வாரி வாரி' நாற்கோட்டு மதகளிறு - ஐராவதம். (பி - ம்.) 'மழகளிறு'

(4.) அனப்பேடை : விளி.

(முடிபு.) ஏய்ப்ப ஆடியருள் என்க.

78. தமரான நின்றுணைச் சேடியரி லொருசிலர்
தடக்கையி னெடுத்தாடுநின்
தரளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரிதிரியா

நிமிராமு னம்மனையொ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய வாய்க்ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றவகி லாண்டமும்
நிரைத்துவைத் ததுகடுப்ப

இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூ
டெழுந்தபைந் தாதுலகெலாம்
இருள்செயச் செய்துநின் சேனு பராகமெனும்
ஏக்கமள காபுரிக்கும்

அமரா பதிக்குஞ்செய் மதுரா புரித்தலைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (ரு)

79. உயிரா யிருக்கின்ற சேடியரின் மலர்மீ
துதித்தவ ளெதிர்த்துநின்னோ
டொட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
ஓடியா டித்திரியநீ

---

78. அம்பிகை சேடியரோடு அம்மானையாடுதல் கூறப்படும்.

(அடி, 1.) சிலர் பிடித்து வீசி வீசித் திரியா ; திரியா - திரிந்து.

(2.) நிரை - வரிசை. நிற்கின்றது - நிற்கும் காட்சி. நிரைத்து வைத்தது - வரிசைப்படுத்தி வைத்த செயலை.

(3.) இமிரா - ஒலித்து (பி - ம்) 'ஆர்த்தெழும்.' அம்பிகை பல அம் மானைகளை வீசி ஆடியதனால் வண்டுகள் அஞ்சி ஆர்த்தெழுந்தன. அவை யெழவே அவற்றின்மேற் படிந்திருந்த பூந்தாது எங்கும் பரந்து செறிந்தது. சேனுபராகம் - சேனையின் புழுதி. (பி - ம்.) 'எக்கரளகாபுரிக்கும்'

(3-4.) பூந்தாதின் செறிவை அம்பிகை திக்குவிசயம் செய்தகாலத்தில் அவள் சேனைக்குமுன் எழுந்த தூளிப்படலம் போன்றதெனக் கருதி அளகா புரியினரும் அமராபதியினரும் அஞ்சினர்.

79. அம்பிகை அம்மனையாடுதலைக் கண்டு சிவபிரான் களித்தல் கூறப் படும்.

(அடி, 1.) மலர் மீது உதித்தவள் - திருமகள். ஒட்டி - பந்தயம் கூறி. உதித்தவள் திரிய,

பெயரா திருந்துவிளை யாடுவது கண்டெந்தை
பிறைமுடி துளக்கமுடிமேற்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
பெண்கொடியு மாடன்மான
வெயரா மனம்புழுங் கிடுமமரர் தச்சனும்
வியப்பச் செய்யுந்தவளமா
மேடையுந் தண்டரள மாடமுந் தெண்ணிலா
வீசத் திசைக்களிறெலாம்
அயிரா பதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (சு)

(வேறு)

80. முத்தம முத்திய வம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்
கொத்து மணித்திர ளிற்செயு மம்மனை
குயிலின்மி ழற்றியநின்
குழலினி சைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட

(2.) எந்தை - சிவபிரான். துளக்க - அசைக்க. சிவபெருமான் முடி துளக்கியதால் அவர் சிரத்தின்மேலுள்ள கங்கையில் நுரைபொங்கியது; அந்நுரை அம்மானை போலத் தோற்றுதலின் கங்கையும் அம்மனையாடும் தோற்றத்தை அளித்தது. அப்பெண்கொடி - கங்கை. (பி - ம்.) 'பொங்குவ தம்மனையையப்பெண்'

(3.) தவளம் - வெண்மை.

80. முத்து, மாணிக்கம், பவளம் என்பவற்றால் இயற்றிய அம்மனைகளை அம்பிகை ஆடுதல் கூறப்படும்.

(அடி, 1.) கையிலிருந்து சென்ற அம்மானை தாமரையின் மணத்தை வீச அதன்மேல் அந்தமணம் பற்றி வண்டு மொய்த்தது. அம்பிகையின் திருக்கரம் தாமரையின் நறுமணத்தை யுடையதென்றபடி. மைவிழி வண்டின் - கரிய விழியாகிய வண்டைப்போல்; கண்கள் அம்மனையை நோக்கின வாதலின் இங்ஙனம் கூறினர்.

(2.) மணி - மாணிக்கம். குழலினிசை - வேய்ங்குழல் போன்ற இசை. அம்மனையாடுவார் அதற்குரிய இசைப்பாட்டுப் பாடுவார்; "கருந்தடங்கண்

வித்துரு மத்தில் இழைத்தவு நின்கை
விரற்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய

அத்தன் மனத்தெழு தியவுயி ரோவியம்
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (எ)

81. விளரிமி ழற்றளி குமுறுகு ழற்கொடி
வீசிய வம்மனைபோய்
விண்ணி னிரைத்தெழு வதுகக னந்திரு
மேனிய தானவருக்

கிளநில வுமிழ்பரு முத்தின் கோவை
யெடுத்தவர் திருமார்புக்
கிடுவ கடுப்பவு மப்பரி சேபல
மணியி னியற்றியிடும்

---

ணர்கழல்பந் தம்மானைப் பாட்டயருங் கழுமலமே" (தே. திருஞா.) அம்பிகை பாடும் பாட்டுக்கு மாணிக்கப் பந்து உருகியதென்றபடி. இசைக்குக் கல் லுருகு மென்பதுபற்றி இச்செய்தியை யமைத்தார்; "வாமொப்பி லாதவன் சேயொப்பிலாத மழவதிரை, ஆழிக் கடல்விட்டு நீ பாடுங் காலத் தரிசெலுங் கால், நீழற்கவுத்துவ நீத்துச்செல் வானந்த நீண்மணிதான், காமொப் பினு நின் னிசைகேட்குங் காற்கரைந் தேகுமென்றே" (தமிழ்நா.); "சுருக்கா விசையின் மணி கரைந்து சோர்ந்து, திருக்கா தரவுகனந் தீர" (திருக்கழுக் குன்றத்து உலா, 102.)

(3.) வித்துருமம் - பவளம் (பி - ம்.) 'போயது மீள்வதுமாய்த்'

(4.) உயிரோவியம்: 62.

81. அம்பிகை முத்தினாலும் பலநிறமணிகளாலும் செய்த அம் மனைகளை ஆறுதல் கூறப்படும்.

(அடி, 1.) விளரி - ஒரு பண். குமுறுதல் - ஒலித்தல். கொடியாகிய நீ. வீசிய அம்மனை யென்றது இங்கே முத்தினாலாகிய அம்மனைகளை. நிரைத் தெழுவது - வரிசையாகி எழுதல். (பி - ம்.) 'விண்ணினிரைத்திடுவது' ககனம் திருமேனியதானவர் - ஆகாசமே திருமேனியாக உள்ள சிவ பெருமான்; அது: பகுதிப்பொருள் விகுதி (83); "வேத மொழிவிசும்பு மேனி" (திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம், 2.)

வளரொளி விம்மிய வம்மனை செல்வது
வானவி லொத்திடவும்
மனனெக் குருகப் பரமா னந்த
மடுத்த திருத்தொண்டர்க்

களிகனி யத்திரு வருள்கனி யுங்கனி
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (அ)

82. கைம்மல ரிற்பொலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
கமலச் சுடர்கதுவச்

செம்மணி யிற்செய் திழைத்தன வெனவும்
சிற்சிலர் கட்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தன கொல்லெனவும்

தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
சமயத் தமைவுபெறூர்
தத்தமி னின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்

---

(2-3) பலமணி - பல நிறமணிகள். பல நிறமணிகளாகிய அம்மனைகள் மேலே செல்கையில் வானவில்லின் தோற்றத்தை உண்டாக்கின.

(4.) அம்பிகையைக் கனியென்றல் : 113.

82. அம்பிகை முத்தாலாகிய அம்மனையாடும்போது அவள் நகை, கை, கண் ஆகியவற்றின் ஒளி தோய்கையில் அது நிறமாறிக் காட்டுதலால் பிற ருக்கு உண்டாகும் மயக்கம் கூறப்படும்.

(அடி, 1.) நகையாகிய முத்தின் ஒளியை. நிற்க - ஒன்றும் கூறாமல் நிற்ப.

(1-3.) கையின் செந்நிறம் பாய்ந்து சிவப்பாகத் தோற்றக் கண்டார் அவ்வம்மனைகள் மாணிக்கத்தாற் செய்யப்பட்டன வெனவும், கண்ணின் கருநிறம் பாய்ந்து கரியனவாகத் தோற்றக் கண்டார் நீலமணியாலான வெனவும் கூறினர். அங்ஙனம் கூறுவார் கூற்றுக்கள் புறச்சமயத்திலுள் ளார் தத்தம் சமயக் கொள்கைகளே சிறந்தனவென்று கூறுவதை ஒத்தன ; "தத்தங் கருத்துக் கமைந்தபடி சாற்றிச் சாற்றி முழுமாயச் சலதி மூழ்கித் தடுமாறுஞ் சமயத்தவர்போற் றலைமயங்கும்" (406); "சமய வாதிக டத்த மதங்களே, அமைவதாக வரற்றி மலைந்தனர்" (திருவா.)

கம்மனை யாயவர் தம்மனை யானவள்
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (கூ)

83. ஒள்ளொளி மரகத மும்முழு நீலமும்
ஒண்டர ளத்திரளும்
ஒழுகொளி பொங்க விழைத்திடு மம்மனை
ஒருமூன் றடைவிலெடாக்

கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பாற்செலநின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்

பிள்ளைவெ ளோதிம மும்முறை முறையாற்
பெருகிய காதலைமேற்
பேச விடுப்ப கடுப்ப வணைத்தொரு
பெடையோ டரசவனம்

---

(3 - 4.) தனிமுதல் யாமென்பார் - சிவபிரான். அம்மனை - தாய். சத்திதத்துவத்தினின்றும் சதாசிவதத்துவம் தோன்றுதலின் அம்பிகையைச் சிவபிரானுக்குத் தாயாகக் கூறினர்; "கனக மார் கவின்செய் மன்றில், அனக நாட கற்கெம் மன்னை, மனைவிதாய் தங்கை மகள்" (514); "இம வான் மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன் றகப்பன்" (திருவா. திருப் பொற். 13); "தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ண றன்னொருபால், அவளத்த னாமக னாந்தில்லையான்" (திருச்சிற். 112); "சத்தி யீன்ற சதாசிவம்" (திருமந்திரமாலை); சத்திதான் சிவத்தை யீன்றும்" (சிவஞா. சித்தி.) அம்மனை யாய்ப் பின் அவர் தம்மனை ஆனவள்; தம்மனை - மனைவி; "அம்மனை தம்மனையா" (634.)

83. மரகதம், நீலம், முத்து என்பவற்றாலாகிய அம்மனைகளை அம்பிகை வானில் வீசி ஆடுதல் சிவபெருமானிடத்துக் கிளியையும் குயிலையும் அன் னத்தையும் தூது விடுப்பதை ஒக்குமென்பர்.

(அடி, 1.) ஒள்ளொளி - மிக்கவொளி. அடைவில் - முறையாக. எடா - எடுத்து.

(2.) கோதையாகிய நீ. விசும்பு இறைவன் திருமேனியாதலின் அங்கே வீசும் அம்மனைகள் அவன்பால் தூது செல்வன போன்றன.

(1. - 3.) மரகத அம்மனைக்குக் கிளியும், நீலமணியாலாகிய அம்மனைக் குக் குயிலும், முத்தாலாகிய அம்மனைக்கு அன்னமும் உவமைகள். பேச.

அள்ளல் வயற்றுயின் மதுரைத் துரைமகள்
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (௯0)

---

## ௯. நீராடற் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

84. வளையாடு வண்கைப் பொலன்சங் கொடும்பொங்கு
மறிதிரைச் சங்கோலிட
மதரரிக் கட்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்த முண்டுவண்டின்

கிளையாடு நின்றிருக் கேசபா ரத்தினெடு
கிளர்சைவ லக்கொத்தெழக்
கிடையாத புதுவிருந் ததிர்கொண்டு தத்தமிற்
கேளிர்க டழீஇக்கொண்டெனத்

தளையாடு கறையடிச் சிறுகட் பெருங்கைத்
தடங்களி றெடுத்துமத்தத்
தவளக் களிற்றினெடு முட்டவிட் டெட்டுமத
தந்தியும் பந்தடித்து

---

பேசுதற்கு. விடுப்ப - விடுத்தல். (பி - ம்.) 'முறை முறையா'; 'பேசிவிடுப்ப' அம்பிகை அம்மனை யாடுதல் தூது பேச விடுப்பதை யொத்தது.

(4.) அள்ளல் - சோறு. துரைமகள் - அரசி.

(முடிபு.) பேச விடுப்ப கடுப்ப ஆடியருள் என்க.

84. (அடி, 1.) வளை - கையிலுள்ள சங்கரேகை. பொலன் சங்கு - பொன் வளையல். ஓலிட - முழங்க. கட்கயல் - கண்ணாகிய கயல். வரிக் கயல்: நீரில் உள்ளது. மகரந்தம் - தேன்.

(2.) கேசபாரம் - கூந்தற் றெகுதியாகிய சுமை. (பி - ம்.) 'கேசபாசம்' சைவலக்கொத்து - கொடிப்பாசியின் தொகுதி. கேளிர்கள் - உறவினர்.

(3.) தளை - சங்கிலி. கறை அடி - உரல் போன்ற அடி. (பி - ம்.) 'மற்றத் தவளக்களிற்றினெடு' தவளக்களிறு - ஐராவதம். எட்டு மததந்தி - அட்ட திக்கயங்கள்.

விளையாடு வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (ச)

85. நிரைபொங் கிடுஞ்செங்கை வெள்வளை கலிப்பநகை
நிலவுவிரி பவளம்வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவறல்
நெறிகுழற் கற்றைசரியத்

திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங்கைநுண்
சிறுதிவலை யாப்பொங்கு மானந்த மாக்கடல்
திளைத்தாடு கின்றதேய்ப்பக்

கரைபொங்கு மறிதிரைக் கையாற் றடம்பணைக்
கழனியிற் கன்னியர்முலைக்
களபக் குழம்பைக் கரைத்துவிட் டள்ளற்
கருஞ்சேறு செஞ்சேறதாய்

---

(4.) சிவபெருமான் சுந்தர பாண்டியராகிய பொழுது அம்பிகை தன் அரசையும் கயற்கொடியையும் அவருக்கு அளித்தனள்.

85. நீராடுதலால் அம்பிகையின் உறுப்புக்களில் உண்டாகும் வேறுபாடுகள் கூறப்படும்.

(அடி, 1.) கலிப்ப - ஒலிக்க. பவளம் - வாயிதழ். நீலக் கருங்குவளை செங்குவளை பூப்ப - கரிய கண்கள் செந்நிறத்தையடைய. அறல் - கருமணல்.

(2.) ஆடுவ - ஆடுதல். சிவபிரானது அளவை நோக்குகையில் கங்கை சிறுதிவலையாகு மென்க. ஆனந்த மாக்கடல் - சிவபெருமான். அவர் திருச்சடையில் கங்கை ஒரு திவலைபோல் அடங்கியதாதலின் இங்ஙனம் கூறினர்; "புன்னு னித்தரு பனியென வரநதி புனிதன், சென்னி யிற்கரந் தொளிதர" (கம்ப. அகலிகைப். 56.) (பி - ம்.) 'சிறு துவலை'

(1 - 2.) அம்பிகை வையைத் துறையில் ஆடுதலால் உண்டான வேறுபாடுகள் சிவபெருமானோடு அளவளாவுங் காலத்து உண்டானவற்றை ஒத்தன; "செய்ய வாய்வெளுப் பக்கண் சிவப்புற, நெய்ய ராக மழியத் துகி னெகத், தொய்யின் மாமுலை மங்கையர் தோய்தலால், பொய்கை காதற் கொழுநரும் போன்றதே" (கம்ப. நீர்விளையாட்டுப். 19.) நதித்துறையில் ஆடுதல் கடலில் ஆடியதை ஒத்ததென்றது ஒரு நயம்.

(3.) பணையாகிய கழனி.

விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (௨)

86. பண்ணுறு கிளிமொழிப் பாவைநின் றிருமேனி
பாசொளி விரிப்பவந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்

தண்ணுறு மல்லற் றுறைச்சிறை யனங்களி
தழைக்குங் கலாமஞ்ஞையாய்ச்
சகலமு நின்றிருச் சொருபமென் றோலிடும்
சதுர்மறைப் பொருள்வெளியிடக்

கண்ணுறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமுங் கத்தூரியும்
கப்புரமு மொக்கக் கரைத்தோடி வாணியும்
காளிந்தி யுங்கங்கையாம்

விண்ணுறு மளவலாய் விளையாடு புதுவைகை
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (ரு)

---

(4.) வேகவதி - வைகையாறு.

86. (அடி, 1 - 2.) அம்பிகையினது திருமேனியின் மரகதச்சோதி யால் எல்லாப் பொருள்களும் பச்சைநிறம் பெற்றன வென்பர்.

பாசொளி - பச்சை ஒளி. (பி - ம்.) 'பாசொளி பரப்ப' பவளக் கொடி நீராடுந் துறையிலுள்ளது. கலாமஞ்ஞை: 7. தேவியின் பச்சை யொளியால் யாவும் பசிய நிறம் அடைதல் (தக்க. 166.) 'ஸர்வம் சக்தி மயம்' என்பது வேதத்தின் கூற்றென்பர்; "அனைத்துந்தன் மயமெனுஞ் சுருதிகரி யாவைத்தும்" (362); தக்க. 116, உரையையும், விசேடக் குறிப் பையும் பார்க்க.

(3 - 4.) குடம் போன்ற கொங்கை. செங்களபம் - செஞ்சந்தனக் குழம்பு. கத்தூரி கருநிறமுடையது. கப்புரம் - பச்சைக் கருப்பூரம்; "கப் புரப் பசுந்திரை" (சீவக. 197.) வாணி - சரஸ்வதி நதி; இது செந்நிற முடையது. காளிந்தி - யமுனை; இது கருநிறமுடையது. கங்கை வெண் ணிறமுடையது. அளவலாய் - கலந்ததை ஒத்து. (பி - ம்.) 'அளவளாய்' வைகை செஞ்சந்தனக்குழம்பால் வாணிநதியையும், கத்தூரியால் யமுனை

87. தூங்குசிறை யறுகா லுறங்குகுழ லின்றுணைத்
தோழியர்கண் மேற்குங்குமம்
தோயும் பணித்துறைச் சிவிறிவீ சக்குறுந்
துளியெம் மருங்குமோடி

வாங்குமலை வில்லியார் விண்ணுரு நனைத்தவர்
வனைந்திடு திகம்பரஞ்செவ்
வண்ணமாச் செய்வதச் செவ்வான வண்ணரொடு
மஞ்சள்விளை யாடலேய்ப்பத்

தேங்குமலை யருவியொடு நீத்தத்து மாசுணத்
திரள்புறஞ் சுற்றியீர்ப்பச்
சினவேழ மொன்றொரு சுழிச்சுழலன் மந்தரம்
திரைகடன் மதித்தன்மானும்

வீங்குபுனல் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (௭)

88. துளிக்கும் பணித்திவலை சிதறக் குடைந்தாடு
துறையிற் றுறைத்தமிழொடும்
தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி யெனுந்துணைத்
தோழிமூழ் கிப்புனன்மடுத்

---

யையும், பச்சைக் கருப்புரத்தால் கங்கையையும் ஒத்தது. புது வைகை; புதுமை நீருக்கு அடை. (பி - ம்.) 'வைகைபுது வெள்ள நீர்'

87. (அடி, 1.) தூங்கு சிறை - செறிந்த சிறகுகள்; "தூங்கிருள்" (சீவக. 310.) அறுகால் - வண்டு. குழல் - குழலையுடைய நீ. குங்குமம் - குங்குமம் கலந்த நீரை; பெருங். க. 41 ; 17 - 8. துறையிற் சிவிறியால்வீச; சிவிறி - நெடுந்துருத்தி யென்னும் நீர் வீசு கருவி.

(2.) மலை வில்லியார் - சிவபெருமான். விண்ணுரு - ஆகாயமாகிய திருவுருவம் (81, 83, 89.) திகம்பரம் = திக் அம்பரம் - திசையாகிய ஆடை. அது நனைதலாவது வெளி முழுவதும் நீர்த்துளி செறிதல். மஞ்சள் விளையாடல் - திருமணக் காலத்தில் ஒருவர்மேல் ஒருவர் மஞ்சள் நீரை வீசி விளையாடுதல்.

(3.) (பி - ம்.) 'மழையருவி' மாசுணம் - பெரும்பாம்பு. ஒரு சுழிச் சுழல்வ - ஒரு சுழியின்கண் சுழலுதல். யானைக்கு மந்தரமலை உவமை.

88. (அடி, 1.) துறைத் தமிழ் : 62. கலைக் கொடி - கலைமகள். புனல் மடுத்து - நீரிற் புகுந்து.

தொளிக்கும் பதத்துமற் றவளென வனப்பெடையை
ஓடிப் பிடிப்பதம்மை
ஒண்பரி புரத்தொனியு மடநடையும் வெளவின
துணர்ந்துபின் றொடர்வதேய்ப்ப

நெளிக்குந் தரங்கப் பெருங்கங்கை யுடனொட்டி
நித்திலப் பந்தாடவும்
நிரைமணித் திரளின் கழங்காட வுந்தன்
நெடுந்திரைக் கையெடுத்து

விளிக்கும் பெருந்தண் டுறைக்கடவுள் வைகைநெடு
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (௫)

(வேறு)

89\. துங்க முலைப்பொற் குடங்கொண்டு
தூநீர் நீந்தி விளையாடும்
துணைச்சே டியர்கண் மேற்பசும்பொற்
சுண்ண மெறிய வறச்சேந்த

அங்கண் விசும்பி னின்குழற்காட்
டறுகாற் சுரும்ப ரெழுந்தார்ப்ப
வையன் றிருமே னியிலம்மை
அருட்கட் சுரும்பார்த் தெழன்மானச்

---

(2.) பதத்து - சமயத்தில். மற்று: அசைநிலை. அவளென - அக் கலைமகளென்று எண்ணி. அனப்பெடையைப் பிடித்து; பிடிப்பவள் அம் பிகை. (பி - ம்.) 'அனப்பேடை யோடிப்' பரிபுரத் தொனி - சிலம்பொலி. அன்னத்தின் ஒலி அம்பிகையின் சிலம்பொலிக்கும், அதன் நடை அவள் நடைக்கும் உவமை (53.)

(3.) (பி - ம்.) 'தரங்கத் தடங்கங்கை' ஒட்டி - பந்தயம் கூறி. திரை யாகிய கை.

(3 - 4.) கங்கையை விளிக்கும்.

89\. (அடி, 1.) நகிலாகிய குடம். குடத்தைத் தழுவிக்கொண்டு நீந்து தல் வழக்கம் (100.) எறிய - அம்பிகை எறிய. அறச் சேந்த - முற்றும் சிவந்த.

(2.) ஐயன் திருமேனி - ஆகாயம் (81, 83, 87.)

செங்க ணிளைஞர் களிக்காமத்
திமூண் டிடக்கண் டிளமகளிர்
செழுமென் குழற்கூட் டகிற்புகையாற்
றிரள்காய்க் கதலி பழுத்துநறை

பொங்கு மதுரைப் பெருமாட்டி
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (௬)

90. இழியும் புனற்றண் டுறைமுன்றில்
இதுவெம் பெருமான் மண்சுமந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
இசைப்பக் கசிந்துள் ளுருகியிரு

விழியுஞ் சிவப்ப வானந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்தவற்கோர்
வேலை யிடுதன் மிகையன்றே

பிழியு நறைக்கற் பகமலர்ந்த
பிரச மலர்ப்பூந் துகண்மூழ்கும்
பிறைக்கோட் டயிரா பதங்கூந்தற்
பிடியோ டாடத் தேனருவி

---

(3.) காய்க் கதலி - கதலிக்காய். வாழைக்காயைப் புகையூட்டிப் பழுக்கவைத்தல் வழக்கம்; இதுபோன்ற பல விஷயங்கள் 'உத்பலபரிமளம்' என்னும் வடநூலிற் கூறப்பட்டுள்ளன என்பர். நறை - தேன்.

(4.) பொருநை - தாமிரபன்னி.

90. (அடி, 1.) துறைமுன்றில் இது - துறைப்பரப்பாகிய இது. வெண் கமலப் பெண் - கலைமகள். இசைப்ப - நினக்குச் சொல்ல.

(2.) ஆனந்த வெள்ளம் - உவகைக் கண்ணீர்ப் பெருக்கு. மீண்டும் பெருக விடுத்து - மறுபடியும் நின் கண்ணீரால் வையை நதி பெருகும்படி செய்து. அவற்கு - சோமசுந்தரக் கடவுளுக்கு. ஓர் வேலை யென்றது மண் சுமத்தலை; வேலை - தொழில் (691.) மிகையன்றே - மிகையல்லவா.

(3.) (பி - ம்.) 'அயிராவதங்' துகளில் மூழ்கிய யானை அதுபோக அருவியாடுதல் இயல்பு.

பொழியும் பொழிற்கூ டலிற்பொலிவாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (எ)

91. மறிக்குந் திரைத்தண் புனல்வைகை
வண்ட லிடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோ ரம்மைதுணை
மணிப்பொற் குடத்திற் கரைத்தூற்றும்

வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் பெறிரொருத்தி
வெண்பிட் டிடவு மடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்

குறிக்கு மிடத்திற் றடந்தூநீர்
குடையப் பெறினக் கங்கைதிருக்
கோடீ ரத்துக் குடியிருப்பும்
கூடா போலும் பொலன்குவட்டுப்

பொறிக்குஞ் சுறவக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (அ)

---

91. (1 - 3.) அம்பிகை நீராடுங்கால் அவள் நகிலிலுள்ள குங்குமக் குழம்பு கரைந்து கரையிற் படிதலால் அந்த வண்டல் மண்ணைச் சுமப்பதற்குச் சிவபெருமான் விரும்புவாரென்பதும், அடிக்கடி அம்பிகை நீராடின் சிவபெருமான் அடுத்தடுத்துச் சுமக்க நேருமென்பதும், அதனால் கங்கைக்கு வருத்தமுண்டாமாதலின் அவர் திருமுடிமேல் இருத்தலை அவள் விரும்பாளென்பதும் இங்கே கூறப்படும் கருத்துக்கள்.

(1.) சுமந்தோர் - சோமசுந்தரக் கடவுள்; எழுவாய். (பி - ம்.) 'வாரிச் சுமந்தோர்க்கம்மை' குடம் - நகில்.

(2.) வெறி - நறுமணம். (பி - ம்.) 'எக்கலிடும்'; 'போலொருத்தி' ஒருத்தி - செம்மனச் செல்வி யென்னும் பிட்டு வாணிச்சி. ஒருவன் - அரிமர்த்தன பாண்டியன். வேலை கொள்ளுதல் - உடைப்பை அடைக்க ஏவுதல். பெறின் வேண்டுமென இயைக்க.

(2-3.) என குறிக்கும் இடம் - என்று (சிவபெருமான்) கருதும் இடம். (பி - ம்.) 'குறிக்கு மிடத்தித் தடநதிநீர்' கோடீரம் - சடை. பொலன் குவடு - மேரு மலை.

(4.) (பி - ம்.) 'சுறவுக் கொடி'

(வேறு)

92. சொற்கொடி யோடு மலர்க்கொடி கொய்து
தொடுத்த விரைத்தொடையும்
சுந்தரி தீட்டிய சிந்துர மும்மிரு
துங்கக் கொங்கைகளின்

விற்கொடி கோட்டிய குங்கும முங்குடை
வெள்ளங் கொள்ளைகொள
வெளியே கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்துசெய

இற்கொடி யோடு கயற்கொடி வீரன்
எடுத்த கருப்புவி லும்
இந்திர தனுவும் வணங்க வணங்கும்
இணைப்புரு வக்கொடிசேர்

பொற்கொடி யிமய மடக்கொடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீராடுகவே. (க)

93. கொள்ளைவெ ளருவி படிந்திடு மிமயக்
கூந்தன் மடப்பிடிபோற்
கொற்கைத் துறையிற் சிறைவிரி யப்புனல்
குடையு மனப்பெடை போல்

---

92. (அடி, 1.) சொற்கொடி - கலைமகள். மலர்க் கொடி - திருமகள். தொடை - மாலை. சுந்தரி - இந்திராணி.

(2.) விற்கொடி கோட்டிய - தூர்க்கை எழுதிய. வடிவழகு - இயற்கை யழகு.

(3.) இற்கொடி - மனைவி; இங்கே இரதி. கயற்கொடி வீரன் - காமன். காமன் மனைவியொடு வில்லெடுத்தல்: 55. இந்திர தனு - வான வில். இரதியின் வில்லும் காமன் வில்லுமாகிய இரண்டு விற்களும் இந்திர தனுக்கள் இரண்டும் புருவங்களுக்கு உவமை; இந்திரதனு இரண்டென் பது, "எழிலியும், தனிதனித்திரு தனுவெடுத்தன" (தக்க. 159) என்பதனு லும் அதன் விசேடக் குறிப்பினாலும் உணரப்படும்.

93. (அடி, 1.) கொள்ளை - மிகுதி. இமயக் கூந்தல் மடப்பிடி: 62, 376. மடப்பிடி முதலியன அம்பிகைக்கு உவமை.

தெள்ளமு தக்கட னடுவிற் றோன்று
செழுங்கம லக்குயில்போல்
தெய்வக் கங்கைத் திரையூ டெழுமொரு
செம்பவ ளக்கொடி போற்

கள்ளவிழ் கோதையர் குழலிற் குழலிசை
கற்றுப் பொற்றருவிற்
களிநற வுண்ட மடப்பெடை யோடு
கலந்து முயங்கிவரிப்

புள்ளுறை பூம்பொழின் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே. (௯௦)

---

## ௧௦. ஊசற்பருவம்

94. ஒள்ளொளிய பவளக் கொழுங்கான் மிசைப்பொங்கும்
ஒழுகொளிய வயிரவிட்டத்
தூற்றுஞ் செழுந்தண் ணிலாக்கால் விழுந்தனைய
ஒண்டரள வடம்வீக்கியே

அள்ளிட வழிந்துசே யொளிதுளும் புங்கிரண
அருணரத் நப்பலகைபுக்
காடுநின் றோற்றமப் பருதிமண் டலம்வளர்
அரும்பெருஞ் சுடரையேய்ப்பத்

---

(2.) அமுதக் கடல் - பாற்கடல்; அமுதம் - பால். கமலக் குயில் - திரு மகள்.

(3.) குழல் - கூந்தல். குழலிசை - வேய்ங்குழலிசை. பொற்றரு - கற் பகம்.

(3-4) வரிப்புள் - கீற்றுக்களையுடைய ஆண்வண்டு.

94. அம்பிகை மாணிக்கவூசல் ஆடுதல் கூறப்படும்.

(அடி, 1.) கால் - தூண். வயிரத்தாலாகிய விட்டம். கால் விழுந் தனைய - ஒழுகினாற்போன்ற. தரளவடம் - முத்துவடம் (பி - ம்.) 'வீக்கிடும்'

(2.) அள்ளிட - அள்ளிக் கொள்ளும்படி. (பி - ம்.) 'செற்றொளி' அருணரத்நப் பலகை - மாணிக்கப் பலகை; அருணம் - சிவப்பு. சிவபெரு மான் சூரியமண்டலத்தில் எழுந்தருளியிருப்பர்.

தெள்ளுசுவை யமுதங் கனிந்தவா னந்தத்
திரைக்கடன் மடுத்துழக்கும்
செல்வச் செருக்கர்கண் மனக்கமல நெக்கபூஞ்
சேக்கையிற் பழையபாடற்

புள்ளொலி யெழக்குடி புகுந்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (க)

95. விற்பொலிய நிலவுபொழி வெண்ணித் திலம்பூண்டு
விழுதுபட மழகதிர்விடும்
வெண்டரள வூசலின் மிசைப்பொலிவ புண்டரிக
வீட்டிற் பொலிந்துமதுரச்

சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின் றவளுநின்
சொருபமென் பதுமிளநிலாத்
தோற்றுமதி மண்டலத் தமுதமய மாயம்மை
தோன்றுகின் றதும்விரிப்ப

எற்பொலிய வொழுகுமுழு மாணிக்க மணிமுகப்
பேறிமழை முகிறவழ்வதவ்
வெறிசுடர்க் கடவுடிரு மடியிலவன் மடமகள்
இருந்துவிளை யாடலேய்க்கும்

---

(3.) ஆனந்தமாகிய கடல். செல்வம் - சிவஞானமாகிய செல்வம். செருக்கர்கள் - இறுமாப்புடையவர்கள்; "இருங்களி யாயின்றி யானிறு மாப்பவின் பம்பணிவோர், மருங்களி யாவன லாடவல் லோன்" (திருச்சிற். 52) என்பதில் இறுமாப்புக் கூறியது காண்க. மனக் கமலமாகிய சேக்கை; பூ - பொலிவு. பழைய பாடல் - வேதம்.

(4.) புள் - வண்டு. கமலமென்றதற்கேற்பப் புள்ளொலி கூறப்பட்டது. புழுகுநெய்ச் சொக்கர்: 157.

(3-4) சேக்கையிற் புகுந்த வென்க.

95. அம்பிகை முத்தாலாகிய ஊசலை ஆடுதல் கூறப்படும்.

(அடி, 1.) பொலிவ - விளங்குதல். புண்டரிகம் - வெண்டாமரை. (பி - ம்.) 'வீட்டுப்'

(2.) சொல்லுகின்றவள் - கலைமகள். கலைமகளை அம்பிகையின் ஒரு கூறென்பர். (பி - ம்.) 'தூற்றுமதி மண்டலத் தமுதமாயம்மை நீ' அம்பிகை சந்திரமண்டலத்தில் இருத்தல்: 73.

(3.) எல் - ஒளி. மாணிக்க மணிமுகப்பு - மாணிக்கம் பதித்த அழகிய வாயில்மாடம். சுடர்க்கடவுள் - சூரியன். மடமகள் - யமுனைநதி; அது நீல

பொற்புரிசை மதுரா புரிப்பொலி திருப்பாவை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (உ)

96. உருகிய பசும்பொன் னசும்பவெயில் வீசுபொன்
னூசலை யுதைந்தாடலும்
ஒண்டளி ரடிச்சுவ டுறப்பெறு மசோகுநற
வொழுகுமலர் பூத்துதிர்வதுன்

திருமுனுரு வங்கரந் தெந்தையார் நிற்பது
தெரிந்திட நமக்கிதுவெனுச்
செஞ்சிலைக் கள்வனொரு வன்றொடை மடக்காது
தெரிகணைகள் சொரிவதேய்ப்ப

எரிமணி குயின்றபொற் செய்குன்று மழகதிர்
எறிப்பவெழு செஞ்சோதியூ
டிளமதி யிமைப்பதுன் றிருமுகச் செவ்விவேட்
டெழுநாத் தலைத்தவமவன்

புரிவது கடுக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௩)

---

நிறமுடையது. மாணிக்கமாடத்துக்குச் சூரியனும் அதில் தவழும் மேகத்துக்கு யமுனையும் உவமைகள்.

96. அம்பிகை பொன்னூசல் ஆடுதல் கூறப்படும்.

(அடி, 1.) அசும்ப - துளிப்ப. மகளிர் உதைத்தலால் அசோகு மலரு மென்பர்; "ஏடவிழ் மகிழ்சு வைக்க வெழிற்பாலை நண்பு கூடப், பாடல நிந்திக் கத்தேம் படிமுல்லை நகைக்கப் புன்னை, ஆடநீள் குராவ ணைக்க வசோகுதைத் திடவா சந்தி, பாடமாப் பார்க்க வார்சண் பகநிழல் படத்த ளிர்க்கும்" (சூடா. 12 - ஆம். 95.) அசோகமரத்தில் தொடுத்த ஊசலாதலின் இங்ஙனம் கூறினர்; "ஒண்டளிர்ச் செயலை, ஓங்குசினைத் தொடுத்த வூசல்" (அகநா.சுஅ : 5-6); "செந்தளிர்ப்பிண்டிச் சினைதொறுந் தொடுத்த............ ஊக்கமை யூசல்" (பெருங். க. 46 : 176-9.)

(2.) தெரிந்து இடம் நமக்கு இது எனு; இடம் - சமயம்; "இடனறிந் தூடி" (நாலடி. 384.) கள்வன் - மன்மதன்.

(1-2.) அசோகமலரும் மன்மதன் அம்புகளில் ஒன்றுதலின் இங்ஙனம் கூறினர்.

(3.) எரிமணி - நெருப்பைப்போன்ற மாணிக்கம் (25.) குயின்ற - பதித்த. இமைப்பது - விளங்குவது. எழுநாத்தலை - அக்கினியில். அவன் - சந்திரன்.

97. கங்கைமுடி மகிழ்நர்திரு வுளமசைந் தாடக்
கலந்தாடு பொன்னூசலக்
கடவுடிரு நோக்கத்து நெக்குருகி யிடநின்
கடைக்கணேக் கத்துமற்றச்

செங்கண்விடை யவர்மனமு மொக்கக் கரைந்துருகு
செய்கையவர் சித்தமேபொற்
றிருவூச லாவிருந் தாடுகின் றுயெனும்
செய்தியை யெடுத்துரைப்ப

அங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தோடுவேர்
அடியிற் பழுத்தபலவின்
அளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதேன்
அருவிபில மேழுமுட்டிப்

பொங்கிவரு பொழின்மதுர மதுரைநா யகிதிருப்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (ச)

98. சேர்க்குஞ் சுவைப்பாட லமுதொழுக வொழுகுபொற்
றிருவூசல் பாடியாடச்
சிவபிரான் றிருமுடி யசைப்பமுடி மேற்பொங்கு
செங்கணர வரசசிலம்மைத்

தார்க்கும் பணுடவி யசைப்பச் சராசரமும்
அசைகின்ற தம்மனையசைந்
தாடலா லண்டமு மகண்டபகி ரண்டமும்
அசைந்தாடு கின்றதேய்ப்பக்

---

97. அம்பிகையாடும் ஊசலுக்கும் சிவபெருமான் திருவுள்ளத்திற் கும் ஒப்புமை கூறப்படும்.

(அடி, 1.) நோக்கத்து - பார்வையினுல்; அவர் கண்களுள் ஒன்று அக்கினியாதலின் அதனுற் பொன்னூசல் உருகிற்றென்றுர்.

(3.) விடர் - பிளப்பு. வேரடியிற் பழுத்த பலவு: 52, 56. அளி - மிகக்கனிந்த. பொற்சுளை - பொன்போன்ற சுளை. பிலம் ஏழும் - கீழுலகங் கள் ஏழினையும்.

(4.) (பி-ம்.) 'மதுரை மதுரநாயகி'

98. (அடி, 1.) பாடலைப்பாடி ஊசலை ஆட என்க. மகிழ்ச்சியால் சிவ பிரான் தலையசைத்தனர் (79.) அரவரசு - ஆதிசேடன். அகிலம் - உலகம்.

(2.) பணுடவி - படங்களின் தொகுதி (6.) அம்மனை - தாயாகிய நீ. அகண்ட பகிரண்டமும் - வெளியிலுள்ள அண்டங்கள் முழுவதும்.

கார்க்கொந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு
கமழ்நறும் புகைவிண்மிசைக்
கைபரந் தெழுவதுரு மாறிரவி மண்டலம்
கைக்கொள விருட்படலம்வான்
போர்க்கின்ற தொக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௫)

99. தேர்க்கோல மொடுநின் றிருக்கோல முங்கண்டு
சிந்தனை புழுங்குகோபத்
தீயவிய மூண்டெழுங் காமா னலங்கனற்
சிகையென வெழுந்துபொங்கத்
தார்க்கோல வேணியர்த முள்ளமென வேபொற்
றடஞ்சிலையு முருகியோடத்
தண்மதி முடித்ததும் வெள்விடைக் கொண்மணி
தரித்ததும் விருத்தமாகக்
கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர்
செங்களத் தேற்றலுமலர்க்
கட்கணை துரக்குங் கரும்புருவ வில்லொடொரு
கைவிற் குனித்துநின்ற

---

(3) கொந்தளக் கோதை மடவியர் - கூந்தலில் மாலையை அணிந்த மகளிர்; கோதை - மாலை. ரவிமண்டலம் - சூரிய மண்டலத்தை. இருட்படலம் - இருளின் பரப்பு. புகைக்கு இருட்படலம் உவமை.

99. அம்பிகை திக்கு விசயம் செய்த காலத்துக் கைலைக்குச் சென்றபோது சிவபெருமான் முன் நின்றதும், அவர் அம்பிகையின்பாற் காதல் பூண்டதும் கூறப்படும்.

(அடி, 1.) கோபம் கைலைமேற் படையெடுத்து வந்தமை கருதி உண்டாயது. (பி - ம்.) 'தீயணைய' கோபத்தீ அவியக் காமத்தீ எழுந்ததென்றது ஒரு நயம். வெகுளியைக் காமம் வென்றது. (பி - ம்.) 'காமானலங் கான்ற சிகையென வெழுந்து பொங்கும்', 'சிகையெழ.'

(2.) தாரை அணிந்த கோலத்தையுடைய வேணி; வேணி - சடை. காமாக்கினியால் சிவபிரானுள்ளமும் மேருமலையும் ஒருங்கே உருகின. தடஞ்சிலை - பெரிய வில்லாகிய மேருமலை. காமமயக்கம் உடையவர்களுக்குச் சந்திரனும் விடைமணியோசையும் துன்பத்தை மிகுவிப்பனவாதலின் அவ்விரண்டும் விருத்தமாயின; விருத்தம் - பொருந்தாதன; பகையென்றபடி.

(3.) நீலக் கருங்களம் - கருங்குவளை மலரைப்போன்ற கரிய கழுத்து; "குவளைக் களத்தம் பலவன்" (திருச்சிற். 33.) ஒருவர் - சிவபெருமான். ஏற்ற

போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௬)

100. குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
குறும்பலவி னெடியபாரக்
கொம்பொடி படத்தூங்கு முட்புறக் கனியின்
குடங்கொண்டு நீந்தமடைவாய்

வழியுங் கொழுந்தே னுவட்டெழு தடங்காவின்
வள்ளுகிர்க் கருவிரற்கூன்
மந்திக ளிரிந்தேகும் விசையினில் விசைத்தெழு
மரக்கோடு பாயவயிறு

கிழியுங் கலைத்திங்க ளமுதருவி தூங்குவ
கிளைத்தவண் டுழுபைந்துழாய்க்
கேசவன் கால்வீச வண்டகோ ளகைமுகடு
கீண்டுவெள் ளருவிபொங்கிப்

பொழியுந் திறத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௭)

---

லும் - எதிர்த்தவுடன். மலர்க்கட்கணை துரக்கும் கரும்புருவ வில் - மலர் போன்ற கண்ணாகிய கணையைச் செலுத்தும் கரிய புருவமாகிய வில்; மலராகிய தேனையுடைய அம்பைச் செலுத்தும் கரும்பின் உருவமாகிய வில். புருவ வில்லையும் கைவில்லையும் வளைத்து. (பி - ம்.) 'ஏற்றலமரக்'; 'கருப்புருவ வில்'

100. குரங்குகளின் செயல்கள் கூறப்படும்.

(அடி, 1.) பொழிலில் உண்டாகும் தேன்வெள்ளத்தில் பலாப்பழத்தைக் குடமாகக்கொண்டு முசுக்கலை நீந்தியது; வெரீஇ - அஞ்சி. முட்புறக் கனி - பலாப்பழம். கனியாகிய குடம்; இன் : வேண்டா வழிச்சாரியை. (பி - ம்.) 'மடல் வாய்'

(2.) உவட்டெழு - பெருக்கெடுக்கின்ற. வள் உகிர் - கூரிய நகம். மந்தி - பெண் குரங்கு. இரிந்து ஏகும் - கெட்டு ஓடுகின்ற. (பி - ம்.) 'இருந்தேகும்'

(3) தூங்குவ - ஒழுகுதல். அண்டகோளகைமுகடு - வானத்தின் உச்சி. கீண்டு - பிளந்து; "கீள்வது செய்த கிழவோன்" (திருச்சிற். 247.) வெள்ளருவி - இங்கே, கங்கை.

101. ஒல்குங் கொடிச்சிறு மருங்கிற் கிரங்கிமேல்
லோதிவண் டார்த்தெழப்பொன்
ஊசலை யுதைந்தாடு மளவின்மலர் மகளம்மை
உள்ளடிக் கூன்பிறைதழீஇ

மல்குஞ் சுவட்டிணை வலம்புரிக் கீற்றிதுகொல்
வாணியென் றசதியாடி
மணிமுறுவல் கோட்டநின் வணங்கா முடிக்கொரு
வணக்கநெடு நாண்வழங்கப்

பில்குங் குறும்பனிக் கூதிர்க் குடைந்தெனப்
பிரசநா றைம்பாற்கிளம்
பேதையர்க ளூட்டுங் கொழும்புகை மடுத்துமென்
பெடையொடு வரிச்சுரும்பர்

புல்குந் தடம்பணை யுடுத்தமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (அ)

102. கொன்செய்த செழுமணித் திருவூச லரமகளிர்
கொண்டாட வாடுந்தொறும்
குறுமுறுவ னெடுநில வருந்துஞ் சகோரமாய்க்
கூந்தலங் கற்றைசுற்றும்

---

101. (அடி, 1.) ஒல்கும் - தளர்கின்ற. (பி - ம்.) 'சிறு மருங்குற்கு' ஓதி - கூந்தல். எழ - எழும்படி.

(1-2.) உள்ளடிக் கூன்பிறை தழீஇ மல்கும் சுவடு - உள்ளங்காலில் உள்ள வளைந்த பிறையின் சுவடு; இது சிவபெருமான் அம்பிகையின் ஊடலை நீக்கும் பொருட்டுப் பணிந்த காலத்து அமைந்தது. வலம் புரிக் கீற்று - சங்க ரேகை. வாணி: விளி. அசதியாடல் - பரிகாஸம் செய்தல் (சீவக. 1871.) முறுவல் கோட்ட - நகைப்ப. (பி - ம்.) 'முறுவல் கோடல்' திருமகள் அசதியாடி நகைத்தலினால் அம்பிகை நாணமடைந்து தலை வணங்கினள். வணக்கத்தை நெடிய நாணம் உண்டாக்க.

(3.) கூதிர்க்கு உடைந்தென - கூதிர்ப்பருவத்திற்கு மெலிவுற்றதாக. பிரசம் - தேன். ஐம்பாற்கு - கூந்தலுக்கு. கூதிர்க்குளிரால் வருந்திய வண்டு புகையின்கண் சென்று குளிர் காய்ந்தது.

(4.) தடம் பணை - பெரிய வயல்கள்.

102. (அடி, 1.) கொன் - பெருமை. அரமகளிர் - தெய்வப்பெண்கள். முறுவலாகிய நிலவை. சகோரம் - நிலவை உண்ணும் பறவை.

தென்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின்
செங்கைப் பசுங்கிள்ளையாய்த்
தேவதே வன்பொலிவ தெவ்வுருவு மாமவன்
திருவுருவின் முறைதெரிப்ப

மின்செய்த சாயலவர் மேற்றலத் தாடிய
விரைப்புனலி னருவிகுடையும்
வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நாறமட
மென்பிடியை யஞ்சிநிற்கும்

பொன்செய்த மாடமலி கூடற் பெருஞ்செல்வி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கூ)

103. இருபதமு மென்குரற் கிண்கிணியு முறையிட்
டிரைத்திடு மரிச்சிலம்பும்
இறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும்பொன்
எழுதுசெம் பட்டுவீக்கும்

---

(2.) (பி-ம்.) 'நங்கையின்' அம்பிகை தன் திருக்கையில் கிளியை ஏந்துவள். தேவதேவன் - சிவபெருமான். (பி-ம்.) 'தேவர் தேவன்'

(1-2.) சிவபெருமான் அம்பிகையின் முறுவல் முதலியவற்றாற்சிறந்த இன்பத்தை அடைய வேண்டிச் சகோரப்பறவையாகவும் வண்டாகவும் கிளியாகவும் ஆயினர். அச்செயல் உலகிலுள்ள எல்லாவுருவமும் அவரது வடிவமே யென்னும் இயல்பை வெளிப்படுத்தியது.

(3.) மேற்றலத்து - மேன்மாடத்தில். மகளிர் மேன்மாடத்தில் நீர் ஆட அந்நீர் கீழே வந்து வெள்ளானையை ஆட்டியது. இதனால் மாடங்களின் உயர்வு கூறப்பட்டது. வெள்ளானை தன்னுடைய வேற்றுநாற்றத்தை அறிந்து பிடி ஊடுமென்று அஞ்சி நின்றது.

103. அம்பிகையின் பாதாதிகேசம் கூறப்படும். தெய்வங்களைப் பாதாதிகேசமாக வருணித்தல் மரபென்பர்.

(அடி, 1.) அரிச் சிலம்பு - உள்ளிடு பரலையுடைய சிலம்பு. (பி-ம்.) 'மறைச்சிலம்பும்' இறும் - ஒடியும். வீக்கும் - கட்டிய.

திருவிடையு முடைதார மும்மொட் டியாணமும்
செங்கைப் பசுங்கிள் ளையும்
திருமுலைத் தரளவுத் தரியமும் மங்கலத்
திருநாணு மழகொழுகநின்

றருள்பொழியு மதிமுகமு முகமதியி னெடுநில
வரும்புகுறு நகையுஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துகுழை மகரத்தொ
டமராடு மோடரிக்கட்

பொருகயலும் வடிவழகு பூத்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கo)

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்
முற்றிற்று.

(2.) உடைதாரம், ஒட்டியாணம் : இடையிலணியும் ஆபரணங்கள். தரள உத்தரியம் - முத்தாலாகிய மேலாடை. (பி-ம்.) 'தரளமு முத்தரிகமும்'

(3.) குழையாகிய மகரம்.

(4.) கயலுமாகிய வடிவழகு என்க.

# மதுரைக் கலம்பகம்

## காப்பு

(கட்டளைக் கலித்துறை)

104. **பு**ந்தித் தடத்துப் புலக்களி ·றோடப் புளிறுதொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் றண்மலர்தூய்
வந்திப் பதுந்தனி வாழ்த்துவ தும்முடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமன்றிச் சித்தி விநாயகன் சேவடியே. (க)

## நூல்

(மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா)

—தரவு—

105. மணிகொண்ட திரையாழி சுரிகிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி யரங்காடும் பைந்தொடியும்
பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயற் றிருந்திழையும்

---

104. புந்தித்தடம் - உள்ளமாகிய இடம். புலக்களிறு - புலன்களாகிய ஆண் யானைகள். புளிறுதல் - பிளிறுதல்; மோனைபற்றிப் பிளிறு புளிறென்றாயிற்று. (பி-ம்.) 'பிளிறு' புலக்களிறு ஓடும்படி புந்தித்தடத்திலே புளிறுகின்ற, தொந்தி - பெருவயிறு. தந்தி - விநாயகக்கடவுள். தந்தை தமிழ்க்கு உதவு - நின் தந்தையார்மேற் பாடுகின்ற தமிழ் நூலுக்கு உதவி புரிவாயாக. என்பது என் - என்று கூறுவது எதற்கு? மிகை யென்றபடி. (பி-ம்.) 'தண்ணளிதூய்' சித்திவிநாயகன் - மதுரையிலுள்ள தலவிநாயகர். சித்திவிநாயகன் சேவடியை வந்திப்பதும் வாழ்த்துவதும் சிந்திப்பதுமன்றி, உதவு என்பது என் என இயைக்க.

விநாயகக் கடவுளை வந்திப்பது முதலியன செய்தால் அவர் வேண்டுவனவற்றைத் தாமே உணர்ந்து அருள்புரிவராதலின் அவர்பால் இன்னது வேண்டுமென விண்ணப்பித்தல் மிகையென்பது கருத்து.

சித்திவிநாயகனென்று பின் கூறினமையின் தந்தி யென்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது.

105. (தரவு.) சுரி - மடிப்பு. மருங்கு அசைஇ - இடையில் உடுத்து. பணிகொண்ட முடிச் சென்னி அரங்கு - ஆதிசேடனாகிய பாம்பு கொண்ட முடியையுடைய தலையாகிய இடத்தில், பைந்தொடி - பூமிதேவி. புனத்

மனைக்கிழவன் றிருமார்பு மணிக்குறங்கும் வறிதெய்தத்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் றலைநிற்ப
அம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லியொடும்
செம்பொன்மதிற் றமிழ்க்கூடற் றிருநகரம் பொலிந்தோய்கேள்.

—தாழிசை—

க. விண்ணரசும் பிறவரசுஞ் சிலரெய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே.

உ. தேம்பழுத்த கற்பகத்தி னறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்து நறைக்கண்ணி முடிச்சென்னி மிலைச்சினையே.

ஈ. வானேறுஞ் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேறே வானேறும் விடுத்தடிக ளெடுப்பதே.

---

துழாய் - முல்லைநிலத்துக்குரிய துளசி. தேம் ததும்பு - தேன் பொங்கும். நறை - வாசனை. கஞ்சத்து - தாமரைமலரில் இருக்கும். திருந்திழை - திருமகள். துழாய் நீழல்வளர் திருந்திழை: "பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழ லொதுங்கு மொர்பசுங்கொடி" (9.) மனைக்கிழவன் - திருமால். அவர் திருமார்பு திருமகளுக்கும் துடை பூமிதேவிக்கும் உரியனவாதலின் எதிர் நிரனிறையாகக் கொள்க. முதற்கற்பு - தலைமைக் கற்பு. வேறொரு தெய்வமாகிய அம்பிகையை வணங்குதலினால் பூமிதேவியும் திருமகளும் தம் கற்பிற் பிறழ்ந்திலர்; தம் கணவர் ஏவலின்படி குலதெய்வத்தை வணங்குதல் கற்புடைய மகளிர்க்கு இயல்பு (தொல். மெய்ப். சூ. 24.) அபிடேக வல்லி - அங்கயற்கண்ணம்மை; அபிடேகம் - கிரீடம் (பி - ம்.) 'முடிச் சூட்டும்' பூமிதேவியும் திருமகளும் தத்தம் இடத்தை விட்டு வந்து அங்கயற்கண்ணம்மைக்குப் பணி பூண்டனர்.

இது தரவாதலின் பாட்டுடைத் தலைவரைப் பொலிந்தோயென முன்னிலைப் படுத்தினர்.

(தாழிசை) க. விண்ணரசு - தெய்வலோகத்தின் அரசுரிமை. பிற அரசு - பிரமலோகம், வைகுண்டம் முதலியவற்றின் அரசுரிமை. பெண்ணரசு - அங்கயற்கணம்மை. பிறருக்கு வேறு வேறு அரச பதவிகளை உதவிய நீ ஒரு பெண் அளித்த அரசை ஏற்றாய். இஃது என்னை!

உ. கற்பகத்தின் நறுந்தெரியல் - கற்பகமலர் மாலை. சிலர் - இந்திரன் முதலியோர். வேம்பின் பூவை அழுத்துகின்ற கண்ணி; கண்ணி - தலையிற் சூடுவது.

ஈ. வானேறு - இடி; இஃது இந்திரனது கொடி; "அசனித் துவசத் தோன்" (திருக்கழுக்குன்ற உலா, 3.) சிலபுள் - அன்னமும் கருடனும்; சில - இரண்டு; "சின்மலர் பழிச்சுதும்" என்பர் பின். மீனேறு - ஆண்மீனை வரைந்த கொடி. ஆனேறு - விடைக்கொடி. அடிகள் - ஸ்வாமியாகிய தேவரீர்.

௪. மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே.

௫. விண்ணாறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணாறு குடைந்துவைவைத் தண்டுறையும் படிந்தனையே.

௬. பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே.

—அராகம்—

௧. அவனவ ளதுவெனு மவைகளி லொருபொருள்
இவனென வுணர்வுகொ டெழுதரு முருவினை.

௨. இலதென வுளதென விலதுள தெனுமவை
அலதென வளவிட வரியதொ ரளவினை.

௩. குறியில னலதொரு குணமில னெனநினை
அறிபவ ரறிவினு மறிவரு நெறியினை.

௪. இருமையு முதவுவ னெவனவ னெனநின
தருமையை யுணர்வுறி னமிழ்தினு மினிமையை.

—தாழிசை—

௧. வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே.

---

௪. மனத்தின்கண் வட்டமிடும் சுருதி; சுருதி - வேதம்; அது மனனம் செய்யப்படுதலின் இங்ஙனம் கூறினர். வய - வலி. மாறு அன்றே - விரோதமல்லவா? கனவட்டம் - பாண்டியர்களின் குதிரையின் பெயர். களிப்பது மாறன்றே.

௫. விண்ணாறு - கங்கை. அது சிறு துளியளவாய் ஒரு சடையில் அடங்கினமையின் இறைவர் நனைந்திலர். (பி - ம்.) 'வைகை' ஒரு பெரிய ஆற்றைத் தலையிலே கொண்டும் நனையாத தன்மையையுடைய நீ வையையும் பொருநையும் ஆகிய சிற்றாறுகளில் நீராடுதல் பொருந்துமோ வென்றபடி.

௬. தமிழின் மழலை - தமிழாகிய மழலைச் சொல்லை. கன்னித்தமிழா தலின் தமிழின் மழலையென்றார்.

(அராகம்.) 3. (பி - ம்.) 'அறிபவரறியினும்' 4. 'உதவுவதெவன்'

(தாழிசை.) க. (பி - ம்.) 'வையைக்கோ' கங்கை வானதிக்கோ - கங்கை நதிக்குக் கரை கட்டவோ. (பி - ம்.) 'அறியோமாற்' திருமுடியின்மேல் மண்சுமந்த காலத்து அவர் தலையிலுள்ள கங்கையின் மேலும் மண்பட்ட தாதலின் இங்ஙனம் கூறினர்.

௨. அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே.

௩. மூலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றே
மலைகொண்ட புயத்தென்னீ வளைகொண்டு சுமந்ததே.

௪. ஊன்வலையி லகப்பட்டார்க் குட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையிற் பட்டன்றே.

—அம்போதரங்கம்—

போகமாய் விளைந்தோய் நீ, புவனமாய்ப் பொலிந்தோய் நீ
ஏகமா யிருந்தோய் நீ, எண்ணிறந்து நின்றோய் நீ.

வானு நீ, நிலனு நீ, மதியு நீ, கதிரு நீ,
ஊனு நீ, உயிரு நீ, உளது நீ, யிலது நீ.

எனவாங்கு,

---

௨. அரும்பை இட்டு: "மொட்டரு மலர்பறித் திறைஞ்சிப், பத்தியாய் நினைந்து பரவுவார்" (திருவா.) பச்சிலையிட்டு; "நொச்சி யாயினுங் கரந்தை யாயினும், பச்சிலை யிட்டுப் பரவுந் தொண்டர்" (திருவிடைமும். கக: 9-10); "போதும் பெருவிடிற் பச்சிலை யுண்டு" (திருக்கழுமலமும். 12.) அன்னை - செம்மனச் செல்வியென்னும் பிட்டு வாணிச்சி. பிட்டுப் பிட்டு உண்டாய் - பிட்டென்னும் சிற்றுண்டியை விண்டு உண்டாய். தலையன்பு - அவளது சிறந்த அன்பு.

௩. மொய் வளை - உமாதேவியாரது. அன்றே - அல்லவே. அங்ஙனம் இருப்பவும், நீ வளை சுமந்தது என்? மதுரையில் சோமசுந்தரக் கடவுள் வளையல் விற்ற திருவிளையாடலைக் குறித்தபடி.

௪. ஊன்வலை - உடம்பாகிய வலை; ஊனை ஆகுபெயராக்கிப் பிறவி யென்று பொருளுரைத்தலும் பொருந்தும். நின் புயத்து ஓர். ஒருத்தி - உமா தேவியார். அம்பிகை ஒரு வலைஞன் திருமகளாக வளர்ந்தமையின் அவளை மணம் செய்து கொள்ள வலைஞராயினர். இவ்வரலாறு வலை வீசின படலத்தால் அறியப்படும்.

(அம்போதரங்கம்.) கதிர் - சூரியன். ஊன் - உடல்.

எனவாங்கென்றது தனிச்சொல். என - என்று. ஆங்கு: அசைநிலை.

—சுரிதகம்—

பொன்பூத் தலர்ந்த கொன்றைபீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு திருமுடிச் சூடி
அண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போற் பிறழுங் கெண்டைவல னுயர்த்து
௫ வரியுடற் கட்செவி பெருமூச் செறியப்
பொன்புனைந் தியன்ற பைம்பூண் டாங்கி
முடங்குளைக் குடுமி மடங்கலந் தவிசிற்
பசும்பொனசும் பிருந்த பைம்பொன்முடி கவித்தாங்
கிருநிலங் குளிர்தூங் கொருகுடை நிழற்கீழ்
௧௦ அரசுவீற் றிருந்த வாதியங் கடவுணின்
பொன்மலர் பொதுளிய சின்மலர் பழிச்சுதும்
ஐம்புல வழக்கி னருஞ்சுவை யறியாச்
செம்பொருட் செல்வநின் சீரடித் தொழும்புக்
கொண்பொருள் கிடையா தொழியினு மொழிக
௧௫ பிறிதொரு கடவுட்குப் பெரும்பயன் றரூஉம்
இறைமையுண் டாயினு மாக குறுகிநின்
சிற்றடி யவர்க்கே குற்றேவ றலைக்கொண்

(சுரிதகம்) (௧.) பொன்னிறத்தைப் பெற்று. பீர் பூப்ப - பிரிவினால் நிற வேறுபாடு அடைய; பீர் - பசலை. இயல்பாக நிகழ்வதைச் சிவபெருமான் அணியாமையால் உண்டானதாகக் கூறினர். (௨.) கருஞ்சினை வேம்பு - கரிய கொம்புகளையுடைய வேம்பினது மலரை. (பி - ம்.) 'பொன்முடிச்சூடி' (௩.) ஆனேறு திருமாலாதலின் மண்ணுண்டு கிடப்ப என்றார்; தன்னால் ஒரு பயனின்மை கண்டு வீழ்ந்து கிடப்ப வென்பது வேறொரு பொருள். (௪.) கண்போல் - மகளிர் கண்ணைப்போல. (௫.) கட்செவி - முன்பு ஆபரண மாக அணிந்த பாம்பு. பெரு மூச்செறிய - நம்மை விடுத்தனரே என்ற ஏக்கத் தால் பெருமூச்சுவிட; பாம்பு இயல்பாகவே பெருமூச்செறிதலுக்கு வேறொரு காரணம் கற்பித்தார். (௧௧.) சின் மலர் - இரண்டு மலர்போன்ற திருவடிகளை. பழிச்சுதும் - புகழ்வேம். (௧௨.) ஐம்புலன்களின்கட் செல்லுதலால் உண்டா கும் சுவையை யறியாத: "பொறிவாயிலைந்தவித்தான்" (குறள்.) (௧௩.) செம்பொருளென்றது முத்தியை. (௧௩ -௪.) நின் அடித்தொழும்பின் பய னாகச் சிறந்த பொருளொன்றும் கிடையாமற்போயினும். (௧௫ - ௬.) நின்னை யன்றி வேறொரு கடவுளுக்கே பெரும்பயனை யளிக்கும் தலைமை இருப்பினும்

டம்மா கிடைத்தவா வென்று
செம்மாப் புறாஉந் திறம்பெறற் பொருட்டே. (௨)

(நேரிசைவெண்பா)

106. பொருணான் கொருங்கீன்ற பொன்மாடக் கூடல்
இருணீ றிருண்டகண்டத் தெம்மான்—சரணன்றே
மண்டுழா யுண்டாற்குக் கண்மலரோ டொண்மவுலித்
தண்டுழாய் பூத்த தடம். (௩)

(கட்டளைக்கலித்துறை)

107. தடமுண் டகங்கண் டகத்தாள தென்றுநின் றண்மலர்த்தாள்
நடமுண் டகமகங் கொண்டுய்ந்த வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண் டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தரச் சுந்தர சுந்தர மீனவனே. (௪)

---

இருக்க ; இறைமை - தலைமை. (கஅ.) அம்மா கிடைத்தவா - நமக்கு இப் பேறு கிடைத்தவாறு என்ன ஆச்சரியம்? (கக.) செம்மாப்பு - இறுமாப்பு; "இறுமாந்திருப்பன் கொலோ" (தே. அங்கமாலை.)

(முடிபு.) பொலிந்தோய் கேள் : திறம் பெறற்பொருட்டு, என, நின் சின் மலர் பழிச்சுதும்.

106. பொருள் நான்கு - அறமுதலிய உறுதிப் பொருள்கள் நான்கு. சரண் - திருவடி. அன்று, ஏ : அசைநிலைகள், மண் துழாய் உண்டான் -திரு மால்;துழாய் - துழாவி. தண் துழாய் - குளிர்ந்த துளவம். தடம் - குளம், இடம்; சிலேடை. திருமால் தம் கண்மலரால் திருவடிகளை அருச்சித்ததனா லும் திருமுடி பட வணங்கும்போது அதன்கண் உள்ள திருத்துழாய் வீழ் வதனாலும் அவ்விரண்டற்கும் உரிய தடமென்றார்.

107. தடம் முண்டகம் - தடாகத்திலுள்ள தாமரைமலர். கண்டகத் தாளது - முள்ளையுடைய தண்டையுடையது. என்று - என்று வெறுத்து. தாளாகிய நடஞ்செய்யும் முண்டகத்தை. அகம் - மனம்.உய்ந்தவா - உய்ந்தது என்ன வியப்பு! திடம் உண்டு - வன்மை உளதாயிற்று. உண்டிலை - இல்லை. எனவிண்ணோர் தேற. விடமுண்ட பின்னர்த் தேறினர். கந்தரச் சுந்தர - கழுத்தால் அழகு பெற்றவரே; "கறை நிறுத்திய கந்தரச் சுந்தரக் கடவுள்" (திருவிளை. நாடு. 1.) சுந்தர மீனவன் - சுந்தர பாண்டியர்.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

108. மீனேறுங் கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை
வெள்ளைப் பள்ளை
ஆனேறும் வலனுயர்த்த வழகியசொக் கர்க்கிதுவும்
அழகி தேயோ
கானேறுங் குழல்சரியக் கர்ப்பூர வல்லிதலை
கவிழ்ந்து நிற்ப
ஊனேறு முடைத்தலையிற் கடைப்பலிகொண் டூரூர்புக்
குழலு மாறே. (௫)

(கட்டளைக் கலித்துறை)

109. மாற்றின் றிலையென் மருந்துக்கந்
தோசொக்கர் மாலைகொடார்
கூற்றென் றலவொரு கோடிகெட்
டேன்கொழுந் தொன்றுதென்றற்
காற்றென் றிளம்பிறைக் கீற்றொன்று
கார்க்கட லொன்றுகண்ணீர்

---

108. மீனேறும் - மீனக்கொடியையும். கொடிமுல்லை விடு - முல்லைக் கொடியை வளர விடுகின்ற. கொல்லைக் கடி முல்லை - புனங்களையுடைய காவல் பெற்ற முல்லை நிலத்துக்குரிய. வெள்ளைப் பள்ளை ஆனேறும் - வெண்ணிறத்தையும் பருத்த வயிற்றையும் உடைய திருமாலாகிய இடபத்தையும்; திருமால் முல்லை நிலத்திற்குத் தெய்வம். உயர்த்த - கொடியாக எடுத்த. இது வென்றது பிற்கூறும் பலிகொண்டுழலுதலைச் சுட்டியது. கான் - நறுமணம். கர்ப்பூரவல்லி - அம்பிகை. தாம் அறஞ்செய்யத் தம் கணவர் இரந்துண்டாரென்பதுபற்றியும், தாம் கர்ப்பூரவல்லியாயிருப்ப இறைவன் புலால் நாறும் தலையிற் பலிகொள்ளுதல் பற்றியும் அம்பிகை தலை கவிழ்ந்தனள் (487, 618.) ஊனேறு முடைத்தலையில் - பிரமகபாலத்தில்; முடை - புலால் நாற்றம். கடைப்பலி - வாயில்தோறும் வாங்கும் பிச்சை. உழலுமாருகிய இதுவென்க.

109. சோமசுந்தரக் கடவுளைக் காமுற்ற தலைவியின் வருத்தம் கண்டு செவிலி இரங்கிக் கூறியது.

மாற்று - பரிகாரம். மருந்து - அமுதம் போன்ற மகள். மருந்துக்கு மாற்றில்லையென்றது ஒரு நயம். கூற்று - யமன்; உயிரையும் உடம்பையும் வேறு படுத்துபவன். ஒரு கோடி : பலவென்னும் பொருளது. கெட்டேன் : இரக்கக் குறிப்பு. கொழுந்து ஒன்று தென்றற் காற்று - இளந்

ஊற்றெருன் றிவளுக் குயிரொன்
றிலையுண் டுடம்பொன் றுமே. (சு)

(*விருத்தக் கலித்துறை)

110. ஒன்றே யுடம்பங் கிரண்டே யிடும்பங் குடம்பொன் றிலார்
என்றே யறிந்தும்மி னின்றே யிரங்கென் றிரக்கின் றவா [செயும்
குன்றே யிரண்டன்றி வெண்பொன் பசும்பொன் குயின்றே
மன்றே யிருக்கப் புறங்கா டரங்காட வல்லாரையே. (எ)

---

தென்றல். கண்ணீரூற்று ஒன்றிய இவளுக்கு. உயிர் ஒன்று இல்லை - உயிரென்பதொன்று இல்லை. உடம்பு ஒன்று மாத்திரம் உள்ளது (202.)

காமமயக்கமுடையோருக்குத் தென்றலும் பிறையும் கடலும் துன்பம் செய்வன.

110. தலைவியின் பேதைமையைக் குறித்துத் தோழி இரங்கிக் கூறியது.

(பி - ம்.) * நெட்டிலை விருத்தம், நெடிலடி விருத்தம்.

உடம்பு ஒன்றே. அதில் ஒரு பங்கு தமக்கும் ஒரு பங்கு உமாதேவியாருக்கும் உரியனவாதலின் இடும் பங்கு இரண்டு என்ருர். தமக்கென முழு உடம்பொன்று இலர். ஒரு பங்கு உமாதேவியாருக்கும் ஒரு பங்கு திருமாலுக்கும் உரியனவாதலின் தமக்கென உடம்பொன்று இல்லாதவரென்று கொள்ளுதலும் ஒன்று ; " ஒருபாதி மால்கொள மற்றொரு பாதியுமைகொளவே, இருபா தியையு மிழந்தான் புராரி " (தனிப்.); " திருமேனியிலோர் - பாதியா ளுமைமற்றைப் பாதியுள தென்னின், மேகமே நிகர்மேனி மாலுளன்மற் றதற்கும் - வெறுவெளியே யிவர்க்குளது மெய்ம்மையிது மகளே " (வாட்போக்கிக் கலம்பகம், 18.) மின்னின்று - வழிபட்டு. இரக்கின்றவா - இரத்தல் என்ன பேதைமை? குன்றே இரண்டென்றது வெள்ளி மலையையும் பொன்மலையையும். வெண்பொன் குயின்ற மன்று - மதுரையிலுள்ள வெள்ளியம்பலம். பொன்மன்று - சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலம். புறங்காடு - மயானம். வல்லாரென்றது இகழ்ச்சிக்குறிப்பு. வல்லாரை இரக்கின்றவாறு.

தமக்கென உடம்பில்லாரும், பொன்னும் வெள்ளியும் செறிந்த இடங்கள் இருப்பவும் அவற்றை நீத்துப் புறங்காட்டில் ஆடுபவருமாகிய ஒருவரை இரப்பதனால் வரும் பயன் என் என்பது கருத்து.

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்)

111. வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு விற்பீர்போல்
மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல் லாங்கொள்ளை
கொள்கின் றீராற்
பவங்கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன் றுனீரிப்
பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ கொள்வதற்கோ
புறப்பட் டீரே. (அ)

(நேரிசை வெண்பா)

112. பட்டிருக்கத் தோலசைஇப் பாண்டரங்கக் கூத்தாடும்
மட்டிருக்கு நீப வனத்தானே - கட்ட
விரும்பரவத் தானேநின் மென்மலர்த்தா ளன்றே
தரும்பரவத் தானே தனை. (கூ)

---

111. இது கண்டோர் கூற்று.

சோமசுந்தரக்கடவுள் வளையல் விற்ற திருவிளையாடலை நினைந்து கூறியது.

(பி - ம்.) 'விற்பார்போல்' சிவபெருமான் திருவழகைக் கண்ட மகளிர்க்கு உடல் மெலிந்தமையால் வளைகள் கழன்றன வென்பதை நினைந்து கைவளையெல்லாம் கொள்ளை கொள்கின்றீராலென்றார். செட்டு - வியாபாரம். செட்டுப் பலித்தலாவது அதிக லாபம் உண்டாதல். நன்று- அழகிது; ஆல் : அசை.

112. அசைஇ - கட்டி. பாண்டரங்கக் கூத்து - திரிபுரசங்கார காலத்தில் சிவபெருமான் ஆடிய திருநடம் (கலி. க :9, ந.) மட்டு- தேன். நீப வனம்- மதுரை ; நீபம் - கடம்பு. கட்ட விரும்பு அரவத்தானே ; கட்ட - கச்சாகக் கட்டிக் கொள்ளுதற்கு ; அரவம் - பாம்பு. மலர்த்தாள் பரவத் தன்னைத் தானே தருமென்க ; நின்னைப்பரவுதல் மிகையென்றபடி. "நின்னிற் சிறந்த நின்றாளிணையவை " (பரி. ச: 62) என்பதும், 'வீடளிக்குங்கால் நின்னினும் சிறந்த நின்தாளிணையை யுடையை' என்னும் அதனுரையும் இங்கே அறிதற்குரியன. திருவடியே வீடாயிருக்குமாதலின் அவ்வடி தன்னைத் தருமென்றது முத்தியையளிக்குமென்னும் கருத்தை யுடையது (முருகு. 62-3,ந.)

(கட்டளைக் கலிப்பா)

113. தனியி ருப்பவ ரென்படு வார்கெட்டேன்
சற்று நீதியொன் றற்றவிவ் வூரில்யாம்
இனியி ருப்பதொண் ணாதும டந்தைமீர்
இடம ருங்குஞ் சடைமருங் கும்மிரு
கனியி ருக்குங் கடம்பவ னேசனார்
கண்பு குந்தென் கருத்து ளிருக்கவும்
பனியி ருக்கும் பிறைக்கூற்ற முற்றியென்
பாவி யாவியை வாய்மடுத் துண்பதே. (௧௦)

(நேரிசை வெண்பா)

114. உண்ணமுத நஞ்சாகி லொண்மதுரைச் சொக்கருக்கென்
பெண்ணமுத நஞ்சேயோ பேதைமீர் - தண்ணிதழி

---

113. தலைவி கூற்று. தனியிருப்பவர் - தம் கணவரைப் பிரிந்து தனித்திருப்பவர். கெட்டேன் : இரக்கக் குறிப்பு. சிவபெருமான் தன் நெஞ்சில் இருப்பவும் தன்னைச் சந்திரன் வருத்துஞ் செயலை அநீதியென்றாள். சந்திரனது செயலை ஊரின்மேல் ஏற்றிக் கூறினாள். (பி - ம்.) 'இருப்ப வொண்ணாது' இரு கனி - உமாதேவியாரும் கங்கையும். கடம்பவனமென்றதற்கேற்பக் கனியென்பதற்குப் பழம் என்னும் ஒரு பொருள் தொனிக்கின்றது. கண் புகுந்து - கண்வழியே புகுந்து ; "கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்" (கம்ப. மிதிலைக். 55.) பிறைக் கூற்றம் : "இளம்பிறைக் கீற்றென்று" (109.) முற்றி - சூழ்ந்து. உண்பது - உண்ணுகின்றது.

சிவபெருமான் தன் மனத்துள் இருப்பதனால் தலைவரோடு சேர்ந்து இருப்பவர்களில் ஒருத்தியாக எண்ணுதற்குரிய தன்னைத் தனித்திருப்பவரைத் துன்புறுத்துவதுபோலப் பிறை துன்புறுத்தியதென்றாள். தலைவனோடு சேர்ந்திருக்கும் தன்னையே பிறை வருத்தும்போது தலைவரைப் பிரிந்து தனித்திருக்கும் மடவார் என்ன துன்பத்துக்கு ஆளாவரென்று இரங்கினாள்.

இது காமமிக்க கழிபடர் கிளவிவகையுள் ஒன்று. இதனைச் சந்திரோபாலம்பனம் என்பர்.

114. செவிலி கூற்று ; சொக்கப் பெருமான் மாலை தாராமையால் தலைவி வருந்தினாளென்று கூறுகின்றாள்.

உண் அமுதம் - உண்ணுகின்ற உணவு. என் பெண்ணமுதம் . 109. (பி - ம்.) : 'பெண்ணமுதும்' சொக்கருக்கு உணவு நஞ்சு ; அஃது இயல்பாகவே நஞ்சுதான். என் பெண்ணாகிய அமுதம் வெறுக்கத் தகும் நஞ்சாகுமோ வென்றபடி ; நஞ்சென்றது வெறுக்கப்படும் பொருளென்னும்

இந்தா நிலமே யெனச்சொலா ரென்செய்வாள்
மந்தா நிலமே வரின். (கக)

## புயவகுப்பு

(சந்தம்)

115. வரியளி பொதுளிய விதழியொ டமரர்
மடந்தையர் நீல வனம்புக் கிருந்தன
மதியக டுடைபட நெடுமுக டடைய
நிமிர்ந்தபொன் மேரு வணங்கப் பொலிந்தன
மழகதிர் வெயில்விட வொளிவிடு சுடர்வ
லயங்கொடு லோக மடங்கச் சுமந்தன
மதுகையொ டுதிறன் முறைமுறை துதிசெய்
தணங்கவ ராடு துணங்கைக் கிணங்கின
பொருசம ரிடையெதிர் பிளிறுமொர் களிறு
பிளந்தொரு போர்வை புறஞ்சுற் றிநின்றன
புகையெழ வழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொ ராடை மருங்குற் கணிந்தன

---

குறிப்பை யுடையது. இதழி - கொன்றைமலர்மாலை. இந்தா - இதோ பெற்றுக் கொள்; "இந்தா விஃதோ ரிளங்குழவி யென்றெடுத்துச், சிந்தா குலந்தீரத் தேவிகையி லீந்தனனே" (கந்த. வள்ளியம்மை. 35); இச்சொல் இதோ என்பதன் மரூஉ (பரி. அ : 60, பரிமேல்.) நிலம் மேவு - விரகதாபத்தால் உயிர் நீங்காமல் நெடுங்காலம் இவ்வுலகத்தில் விரும்பியிரு. எனச் சொலார் - என்று சொக்கநாதர் கூறார். 'இந்தா நிலமே யெனச் சொலீர்' என்ற பாடத்திற்குத் தோழிகள் கூறுவதைக் கொண்டுகூறியதாகக் கொள்க; இதற்கு, நில் அம்மேயென்று பிரித்துப் பொருள் கொள்க. மந்தாநிலம் - தென்றற் காற்று.

115. (சந்தக் குறிப்பு.) தனதன தனதன தனதன தனன தனந்தன தான தனந்தத் தனந்தன.

(அடி, 1.) வரியளி - வரிகளையுடைய வண்டுகள். இதழி - கொன்றை. நீலவனம் - மகளிர் கண்களாகிய கருங்குவளை மலர்களின் தொகுதி. மதியின் வயிறு கிழியும்படி நீண்ட வானத்தின் உச்சியளவும் உயர்ந்த மேருமலை. அடைய - முழுதும். மேரு வணங்கப் பொலிதலாவது அம்மலையை வளைத்து விளங்குதல். மழகதிர் - இளைய கிரணம். சுடர் வலயம் - சுடர் வீசும் தோள் வளை. இறைவன் உலகைப் பாதுகாக்கும் செயலை லோகமடங்கச் சுமப்பதாகக் குறித்தனர். மதுகை - வலி. திறலைத் துதிசெய்து. அணங்கவர் - பேய் மகளிர். துணங்கை - ஒரு வகைக் கூத்து; இங்கே, போர்க்களத்தே பேய்கள் வெற்றிபெற்ற வீரனை வாழ்த்தியாடுங் கூத்து (முருகு. 51 - 6.)

(2.) களிறு - தாருகாவன முனிவர் விட்ட யானை. போர்வை - யானைத் தோலாகிய போர்வையை. உழுவை - தாருகாவன முனிவர் விட்ட புலி.

புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீர மொடுங்கத் துரந்தன
புகலியர் குரிசில்ப ஞெடுதமி ழருமை
அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன

உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண ஞெதுங்கத் திரிந்தன
உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துணி மேலி டுவெண்பிட் டுகந்தன
உறுதியொ டவண்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடை மணுந்திச் சொரிந்தன
உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன

தருசுவை யமுதெழ மதுரம தொழுகு
பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியன் மலைமகள் வரிவளை முழுகு
தழும்பழ காக வழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடுமிள மதலையின் மழலை
ததும்பிய வூற லசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே. (கஉ)

---

புலவு எயிறு அயில் தரு குருதியாடு உலவு மடங்கல் - புலால் நாற்றம் வீசும் பற்களில், தான் உண்ட இரத்தத்தோடு உலாவுகின்ற நரசிங்கம். வீர மொடுங்கத் துரந்தன வென்றது சரபாவதாரமெடுத்து நரசிங்கத்தின் வலி யழித்ததைக் குறித்தவாறு. (பி - ம்.) 'ஒடுங்கத் தொடர்ந்தன' புகலியர் குரிசில் - திருஞான சம்பந்தர். அவருக்குத் தாளம் வழங்கியது திருக்கோலக்கா வென்னும் தலத்தில்.

(3.) வெடி - ஓசை. கறுவி - கோபித்து. நடந்த ஒரு பாணன் - நடந்து வந்த பாணனாகிய ஏமநாதனென்பவன். ஒதுங்க - ஓட. இது பாணபத்திரன் பொருட்டு விறகு சுமந்து சென்று சாதாரி பாடி ஏமநாதனென்னும் பாணன் தானே ஓடும்படிசெய்த திருவிளையாடலைக் குறித்தது. ஓர் கிழவி - செம்மனச் செல்வி. மனை - அடைப்பதற்காக வரையறுத்த இடம். உந்தி - நுனிக் காலை யூன்றி நின்று. (பி - ம்.) 'மண் முந்திச்' சுரிகை - உடைவாள்.

(4.) மதுரம் - இனிமை. வளைமுழுகு தழும்பு - வளைத் தழும்பு; இவ்வர லாறு காஞ்சிப் புராணத்துள்ள தழுவக் குழைந்த படலத்தால் விளங்கும். இளமதலை - முருகக் கடவுள். ஊறல் - வாய்நீர் (205, 313, 402, 601.) (பி - ம்.) 'கனிந்தன' குமரி - தடாதகைப் பிராட்டியார்.

(கட்டளைக் கலித்துறை)

116. புயல்வண்ண மொய்குழல் பொன்வண்ணம்
தன்வண்ணம் போர்த்தடங்கண்
கயல்வண்ண மென்வண்ண மின்வண்ண
மேயிடை கன்னற்செந்நெல்
வயல்வண்ணப் பண்ணை மதுரைப்
பிரான்வெற்பில் வஞ்சியன்னாள்
இயல்வண்ண மிவ்வண்ண மென்னெஞ்ச
மற்றவ் விரும்பொழிலே. (கரு)

## அம்மானை

(கலித்தாழிசை)

117. இருவருக்குங் காண்பரிய வீசர்மது ரேசனார்
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகில்

---

116. தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் இயலிடங் கூறல்.

மொய்குழல் புயல்வண்ணம். தன்வண்ணம் பொன்வண்ணம் - தலைவியின் நிறம் பொன்வண்ணம்; "பொன்னேர் மேனி" (குறுந். ௨௧௧.) கண் கயல்வண்ணம். மின்வண்ணம் ஏய் இடை என்வண்ணம்; ஏய்தல் - ஒத்தல்; இடை தன்னைப்போல மெலிந்துள்ளதென்பான் இங்ஙனம் கூறினான். என் வண்ணமும் மின்வண்ணமுமே இடை எனினும் ஆம். கன்னற் செந்நெல் - கரும்பைப்போன்ற செந்நெற்பயிர்; "கரும்புற்ற செந்நெல் வயற்கமலேசர்" (343), "கன்னல்கொல் கமுகுகொ லெனவளருஞ் சாலி" (376), "கரும் பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன" (பெரிய. நாட்டு. 15.) பண்ணை - இங்கே மருதநிலம். இயல் - இயற்கையழகு. இரும்பொழிலே என் நெஞ்சம்; தலைவி பொழிலில் இருக்கின்றாளென்றபடி.

117. மூன்றுமகளிர் தம்முள் வாதஞ்செய்து அம்மானை யாடுவதைக் கூறுவது இது. இதில் முதலிரண்டடியும், அடுத்த இரண்டடியும், ஈற்றடியும் தனித்தனியே ஒவ்வொருத்தி கூற்று.

இருவர் - பிரமதேவரும் திருமாலும். (பி - ம்.) 'மதுரேசர்' விருதுகட்டி - வெற்றிக்குரிய சின்னங்களை அணிந்து. அங்கம்வெட்டி - சித்தனென்பவனுடைய அங்கத்தை வெட்டி; அங்கம் வெட்டுதல்: யுத்தபரிபாஷைகளுள்

அருமையுடம் பொன்றிருகூ றுவதே னம்மானை
ஆனாலுங் காயமிலை யையரவர்க் கம்மானை. (கச)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

118. அம்ம கோவெனும் விழுமழு மெழுந்துநின்
றருவிநீர் விழிசோர
விம்மு மேங்குமெய் வெயர்த்துவெய் துயிர்க்குமென்
மெல்லிய லிவட்கம்மா
வம்மின் மாதரீர் மதுரையுங் குமரியும்
மணந்தவர் மலர்த்தாமம்
தம்மி னோவெனுந் தவப்பயன் பெரிதெனும்
தந்தைதா ளெறிந்தார்க்கே. (கரு)

---

ஒன்று (திருவால. கரு : 14.) இரு கூறு - இரண்டு துண்டம்; இறைவன் கூறும், அம்பிகையின் கூறும்; அர்த்த நாரீசுவர வடிவத்தைக்குறித்தபடி; "ஒன்றே யுடம்பங் கிரண்டே யிடும்பங்கு" (110.) காயம் - புண், உருவத் திருமேனி; சிலேடை.

தோற்றவருக்கு அல்லாமல் வென்றவருக்கு உடம்பு இருகூறுதற்குக் காரணமில்லை யென்றபடி.

சிவபத்திச் செல்வம் வாய்ந்தவரும் ஆயுதக்கலைகளைக் கற்பித்து வந்தவருமான தன் ஆசிரியர்பால், அவருடைய மாணாக்கனான சித்தனென்பவன் பொறாமை கொண்டு, தானும் ஒரு கருடிக்கூடம் உண்டாக்கிச் சிலருக்குக் கற்பித்து அவருடைய வருவாயைக் குறைத்தற்கு முயன்று வேறு தீங்கும் இழைத்த பொழுது, கருணையங்கடலாகிய சோமசுந்தரக்கடவுள் அந்த ஆசிரியரது வடிவங்கொண்டு அவனைப் போருக்கு அழைத்து அவனுடைய அங்கங்களை வெட்டி வென்றாரென்பது இங்கே குறிக்கப்பட்ட வரலாறு. இச்செய்தி அங்கம் வெட்டின படலத்தால் அறியப்படும்.

118. சொக்கநாதருடைய மாலையைப் பெற விரும்பிய தன்மகளின் நிலையைக் குறித்துத் தோழிமாரை நோக்கிச் செவிலி இரங்கிக் கூறியது இச்செய்யுள்.

(பி - ம்.) 'விழிசோரும்' என் மெல்லியல் அம்மவோ என்னும் - என் மகள் அம்மேயோ வென்பாள். பின்வரும் முற்றுக்களுக்கும் இங்ஙனமே பொருள் கொள்க. மாதரீரென்றது தோழிமார்களை. மணந்தவர் - கலந்தவர். தாமம் - கொன்றை மாலையை. தம்மின் - தாரும். இவட்கு மலர்த்தாமம் தம்மின். ஓ எனும் - ஓ வென்று கதறுவாள். தந்தைதாள் எறிந்தார் - சண்டேசநாயனார். தவப்பயன் பெரிதென்றது கொன்றைமாலையை அவர் எளிதிற் பெற்றமைபற்றி (543, 640); "பெற்றவர்தாள், வீசுமழு வாற்றுணிய வெட்டுமவர்க் கல்லாது, வாசமலர்க் கொன்றை வழங்கிரோ" (ஏகாம்பர. உலா, 401 - 2.)

## மதங்கியார்

(எழுசீர்ச் சந்த விருத்தம்)

119. எறிவே லிரண்டுமென துயிர்சோ ரவுண்டுலவ
இகல்வா ளிரண்டு விசிறு
வெறிசேர் கடம்பவன மதுரே சர்முன்குலவி
விளையா டுமின்கொ டியனீர்
சிறு நூன் மருங்குலிறு மிறுமா கொலென்றுசில
சிலநூ புரஞ்சொன் முறையி
டறியீ ரெனெஞ்சுமல மரவே சுழன்றிடுநும்
அதிவே கநன்ற றவுமே. (கசு)

(கட்டளைக் கலித்துறை)

120. அறந்தந்த பொன்பொலி கூடற் பிரான்வெற்பி லம்பொற்படாம்
மிறந்தந்த கும்ப மதயா னையுநெடுந் தேர்ப்பரப்பும்
மறந்தந்த விற்படை வாட்படை யுங்கொண்டு மற்றொருநீ
புறந்தந்த வாவணங் கேநன்று காமவெம் போரினுக்கே. (கஎ)

---

119. (சந்தக்குறிப்பு.) தனன தனந்ததன தனன தனந்ததன தனன தனந்த தனன. இரு கைகளிலும் வாட்படைகளை ஏந்தி வீசிப் பாடி ஆடும் ஒரு மதங்கச்சாதிமங்கையை நோக்கி ஓரிளைஞன் காமுற்றுக் கூறும் கூற்று இது. மதங்கர் - இசைக்கும் கூத்துக்கும் உரிய ஒரு சாதியார்.

எறிவேலிரண்டென்றது கண்களை. விசிறு - விசிறி. வெறி - நறுமணம். மின்கொடியனீர் - மின்னற்கொடியை ஒப்பவரே. நூலைப்போன்ற மருங்குல். ஆ: இரக்கக்குறிப்பு. நூபுரம் - சிலம்பு. சொல் முறையிடு - முறையிட்டுச் சொற்களை. (பி - ம்.) 'சிலை நூபுரம்'

இரண்டு கண்களுமே என்னுடைய உயிரைக் கவராநிற்ப இரண்டு வாள்களைச் சுழற்றுவது மிகையென்றபடி.

120. நாணத்தால் தன்முகத்தை நோக்காமல் தலைவி புறங்காட்டிய போது தலைவன் கூறியது இது. இது புறங்காட்டல் என்னும் துறை.

பொன் - அம்பிகை. படாம் - முகபடாம், கச்சு. மதயானையென்றது நகில்களை. தேர்ப்பரப்பு: அல்குல். விற்படை: புருவங்கள். வாட்படை: கண்கள். காமவெம்போர் - புணர்ச்சி. புறந்தந்தவா - முதுகைக்காட்டியது என்ன வியப்பு? புறங்காட்டுவது தோற்றோர் செயல்.

போர்க்குரிய கருவிகளாகிய யானை முதலியவற்றையுடைய நீ காமப் போரில் புறங்காட்டியது பொருத்தமன்றென்றபடி.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

121. போரானை முதுகுறைப்பப் பொறையாற்றுஞ் சினகரத்துப்
புழைக்கை நால்வாய்க்
காரானைப் போர்வைதழீஇ வெள்ளானைக் கருள்சுரந்த
கடவு ளேயோ
ஓரானை முனைப்போருக் கொருகணைதொட் டெய்திடுநீர்
ஒருத்தி கொங்கை
ஈரானை முனைப்போர்க்கும் வல்லீரே லொருகணைதொட்
டெய்தி டீரே. (கஅ)

122. எய்யாது நின்றொருவ னெய்வதுவு மிளையாடன்
இளைப்பும் புந்தி
வையாதார் வைதலுறின் மதியார்தா மதித்திடுதல்
வழக்கே யன்றோ

---

121. தலைவியை மணஞ்செய்து எய்துவீராகவென்று தோழி தலைவனை நோக்கிக் கூறியது.

போரானை - விமானத்தைச் சுமக்கும் எட்டு யானைகள். பொறையாற்றும் - சுமக்கும். சினகரத்து - கோயிலில். ஆனைப்போர்வை - முனிவர்கள் யாகத்திலுண்டாக்கி யனுப்பிய யானையின் தோலாகிய போர்வை. வெள்ளானைக்கு அருள் சுரந்தது - ஐராவதத்திற்குத் துருவாச முனிவர் இட்ட சாபத்தைப் போக்கியருளியது; இது வெள்ளானை சாபந்தீர்த்த திருவிளையாடலால் அறியப்படும். ஓரானை முனைப் போர்க்கு - சைனர்கள் விடுத்த யானையின் பயத்தைப் கெடுத்தற்கு. ஒரு கணை - நரசிங்காத்திரம். இவ்வரலாறு யானையெய்த திருவிளையாடலால் அறியலாகும். வல்லீரேல் - வல்லமையுடையீராயின். ஒரு கணை என்றது மன்மதனுடைய பாணங்களுள் ஒன்றாகிய தாமரைமலர் போன்ற தலைவியின் கையை. எய்திடீர் - அடைவீராக.

122. பாங்கி கூறியது.

எய்யாது - பிறர் அறியாமல்; அம்பை எய்யாமலென்பது வேறு பொருள். இளையாள் - தலைவி; இளைத்தலில்லாதவளென்பது வேறுபொருள். புந்திவையாதார் - புத்தியிற் கொள்ளாத தாயர் முதலியோர்; வையாதார் - வையாதவர்களென்பது வேறுபொருள்; வைதல் - பழிமொழி கூறல். மதியார் - சந்திரனை அணிந்தவர்; மதித்தலில்லாதவரென்பது வேறு பொருள். (பி - ம்) 'மதியீர்தா மதித்திடுதல் வழக்கே போலும்' மெய்யாத மெய் - மெய்யாகாத உடம்பு. வீடாத வீடு - அழியாத முத்தி. வீழார் வீழ - தம் நிலையினின்றும் இறங்கி வாராதவர்களும் விரும்ப; வீழார் - முத்திபெற்றவர்கள்;

மெய்யாத மெய்கடிந்து வீடாத வீடெய்தி
வீழார் வீழச்
செய்யாள்செய் சரக்கறையாந் திருவால வாயிலுறை
செல்வ னூரே. (கக)

(எழுசீர்ச் சந்த விருத்தம்)

123. ஆறுதலை வைத்தமுடி நீணிலவெ றிப்பவெமை
ஆளுடைய பச்சை மயிலோ
டேறுமுத லற்றமது ராபுரியி லுற்றபர
மேசரொரு சற்று முணரார்
நீறுபடு துட்டமதன் வேறுருவெ டுத்தலரின்
நீள்சிலைகு னித்து வழிதேன்
ஊறுகணை தொட்டுவெளி யேசமர்வி ளைப்பதுமென்
ஊழ்வினைப லித்த துவுமே. (உ௦)

## தழை

(கட்டளைக்கலித்துறை)

124. பல்லா ருயிர்க்குயி ராமது ரேசரப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பன்று காணின் களபக்கொங்கை

---

விரும்பாதவர்கள் விரும்ப வென்பது வேறு பொருள். செய்யாள் செய் - திருமகளாற் செய்யப்பட்ட; செய்யாள் - செய்யாதவளென்பது வேறு பொருள். சரக்கறை - பொன்னறை, "சரக்கறை யோவென் றனிநெஞ்சமே" (தே.) தேவரீர் தலைவியைப் பாதுகாத்தருளவேண்டுமென்பது கருத்து. இச்செய்யுள் முரண்விளைந்தழிவணி.

123. (சந்தக் குறிப்பு.) தானதன தத்ததன தானதன தத்ததன தானதன தத்த தனனா.

தலைவி இரங்கிக் கூறல். ஆறு - கங்கை நதியை. முடி - சடைமுடி. பச்சைமயில் - மரகதவல்லியாகிய அங்கயற்கணம்மை (198) ஒரு சற்றும் - சிறிதும். துட்டமதன்: 185. அலரின் நீள்சிலை - பூவாகிய நீண்ட வில்லை; இன்: வேண்டாவழிச் சாரியை. மன்மதனுக்குப் பூவும் வில்லென்பர்; "பூங்குலைசிலையாக் கொண்டவர்" (177); இது காமநூலென்றும், காமகாண்டமென்றும் கூறப்படும் (சிலப். உ: 42-5, அடிக்.); காமனை, 'புஷ்பதந்வா' என்பர் வடமொழியாளர்.

மதன் சமர்விளைப்பதையும், ஊழ்வினை பலித்ததையும் பரமேசர் சற்றும் உணரார்.

124. பாங்கி தலைவன் தந்த தழையை ஏற்றுக் கொள்ளும்படி தலைவியிடம் சொல்லுதல்.

பாண்டியன் - அபிஷேகபாண்டியன். கல்லானைக்குக் கரும்பருத்தியது திருவிளையாடற் புராணத்தால் அறியப்படும். கொங்கையாகிய ஆனைக்கு,

வல்லானைக் கேயிட வாய்த்தது போலுமென் வாட்கணன்னுய்
வில்லார் புயத்தண்ண றண்ணளி யாற்றந்த மென்றழையே.(உக)

(வஞ்சித்துறை)

125. தழைத்திடுங் கூடலார்
குழைத்துடன் கூடலார்
பிழைத்திடுங் கூடலே
இழைத்திடுங் கூடலே. (உஉ)

(வஞ்சி விருத்தம்)

126. கூட லம்பதி கோயில்கொண்
டாடல் கொண்டவ ராடலே
ஊட லும்முடம் பொன்றிலே
கூட லும்மொரு கொம்பரோ. (உங)

---

அன்றுயென்றது தலைவியை (தொல். பொருளியல், 52, ந.) (பி - ம்.) 'வாட் கணிறுய்' வில் ஆர் - வில் பொருந்திய; வில் - விற்றழும்பெனினும் ஆம் (சீவக. 21, ந.) அண்ணல் - தலைவன். தழை - மலர்களையும் இலைகளையும் சேர்த்துக் கட்டிச் செய்யப்பட்ட உடை; முருகு. 201- ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க. தண்ணளியாற் றந்த என்றதனுல், அக்கரும்பினும் இத்தழை சிறந்ததென்பதைப் புலப்படுத்தினுள்.

125. தலைவி கூற்று. கூடலிழைத்தலென்னும் துறை.

கூடலார் - கூடற்பதியையுடையவர்; கூடல் - மதுரை. குழைத்து உடன் கூடலார் - மனத்தை உருக்கி என்னேடு சேரார். இழைத்திடும் கூடல் - மணலில் இழைத்திடும் கூடற்சுழி; எழுவாய். கூடல் பிழைத்திடும் - கூடுதல் பிழைத்திடும்; கூடல் - ஒருதலைப்பு மற்றெரு தலைப்புடன் கூடுதல்.

தலைவரைப் பிரிந்த மகளிர் அவர் வரவை எதிர்நோக்கிப் பார்க்கும் நிமித்தங்களுள் கூடற்சுழி ஒன்று. மணலிற் சுழியைச் சுழித்துப்பார்க்கையில் அது முதலும் கடையும் கூடுமாயின் வருவரென்றும் கூடாதாயின் வாராரென்றும் கொள்ளுதல் மரபு; "நீடு நெஞ்சு ணினைந்துக ணீர்மல்கும், ஓடு மாவினெ டொண்டொடி மாதராள், மாட நீண்மரு கற்பெரு மான்வரிற், கூடு நீயென்று கூட லிழைக்குமே" (தே. திருநா.)

126. பதி - ஊரை. ஆடல் கொண்டவர் - ஆளுதல் கொண்டவர். ஆடலே - அவர் திருவிளையாட்டு என்ன வியப்பைத்தருகின்றது! ஒரு கொம்பு ஊடலும் கூட்லும் உடம்பு ஒன்றிலேதான்; கொம்பு - உமாதேவியார். வேறு வேறுன உடம்புகளாற் செய்யப்படும் ஊடலும் கூடலும் ஒருடம்பிலே நிகழ்கின்றன; இஃது என்ன வியப்பென்பது கருத்து.

## ஊசல்

(கலித்தாழிசை)

127. கொம்மைக் குவடசையக் கூர்விழிவேல் போராடக்
கம்மக் கலனுஞ் சிலம்புங் கலந்தார்ப்ப
மும்மைத் தமிழ்மதுரை முக்கணப்பன் சீர்பாடி
அம்மென் மருங்கொசிய வாடுகபொன் னூசல்
அழகெறிக்கும் பூண்முலையீ ராடுகபொன் னூசல். (உச)

## களி

(*எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

128. அழகுற்றதொர் மதுரேசனை யமரேச னெனக்கொண்
டாடுங்களி யானின்றிசை பாடுங்களி யேம்யாம்
பொழுதைக்கிரு கலமூறுபைந் தேறற்பனை யினைநாம்
போற்றிக்குரு மூர்த்திக்கிணை சாற்றத்தகு மப்பா
பழுதற்றதொர் சான்றுண்மை பயின்றார்தின முயன்றாற்
பலமுண்டத னலமுண்டவ ரறிவார்பல கலைநூல்

---

127. கொம்மைக்குவடு - தனமாகிய மலைகள்; கொம்மை - நகில். கம்மக்கலன் - கம்மியரது தொழிற்சிறப்பைப் பெற்ற ஆபரணங்கள்; "கம்மப் பல் கலம்" (சீவக. 991.) அம் மென் மருங்கு - அழகிய மெல்லிய இடை.

128. கட்குடியர் கள்ளையும் அஃது உண்டாகும் பனைமுதலியவற்றை யும் சிறப்பித்துக் கூறுவது இது. (பி - ம்)* தாழிசை.

மதுரேசன் - மதுரையென்னும் நகர்க்குத்தலைவர்; மதுரை - கள்ளென் பது வேறு பொருள். மதுரேசனானமையால்தான் அமரேசனானா னென்பது களியின் கருத்து; அமரேசன் - மரணமில்லாத தேவர்களுக்குத் தலைவன். களியால் - களிப்பினால். இருகலம்-அறுத்த பாளையிற் செருகி வைத்திருக்கும் இரண்டு மண் கலயங்கள்; இரண்டுகலமென்னும் அளவை யென்பது வேறு பொருள். தேறல் - கள். சாற்றத்தகும் - சாற்றவேண்டும். சான்றுண்மை: சிலேடை. (பி - ம்) 'பயின்றாரிதின் முயன்றால்' பலம் - பிரயோசனம், பழம். நலத்தை உண்டவர் அறிவார். கலைநூல் - கலைகள். ஏடு - பனையேடு. வீடு - முத்தி, குடியிருக்கும் வீடு. வற்று - வன்மையுடையது. பனையோலையால் வீட்டை வேய்தல் பற்றி, 'வீடும் தரவற்று' என்றான். எழுதாததொர் திரு மந்திரம் - கள், உபதேசித்தற்கு உரிய வேதமந்திரம். சான்றுண்மை பயிலு

எழுதப்படு மேடுண்டது வீடுந்தர வற்றால்
எழுதாததொர் திருமந்திர மிளம்பாளை யுளுண்டே. (உரு)

(கலி விருத்தம்)

129. உண்பது நஞ்சமா லுறக்க மில்லையால்
வண்பதி கூடலே வாய்த்த தென்னுமாற்
பெண்பத நின்னதே பெரும வேள்கணை
எண்பது கோடிமே லெவன்கொ டுப்பதே. (உசு)

மடக்கு

(கட்டளைக் கலிப்பா)

130. தொடுத்த ணிந்தது மம்புத ரங்கமே
சுமந்தி ருந்தது மம்புத ரங்கமே
எடுத்து நின்றது மாயவ ராகமே
எயிறி றுத்தது மாயவ ராகமே
அடுப்ப தந்தணர் பன்னக ராசியே
அணிவ துஞ்சில பன்னக ராசியே

---

தல், பலமளித்தல், கலை எழுதிய ஏடுகளைத் தாங்கல், வீடளித்தல், மந்திரம் ஆகிய இவைகள் ஆசிரியனிடத்தும் உள்ளனவாதலால் பனையைக் குரு மூர்த்திக்கு ஒப்பாகச் சாற்றத்தகும் என்றான்.

129. தலைவியின் வருத்தத்தைத் தோழி தலைவனிடம் கூறல். முதலிரண்டடிகளில் தலைவிக்கும் சொக்கநாதருக்கும் உள்ள ஒப்புமை கூறப்படும்.

இவள் உண்பது நஞ்சமாக உள்ளது; பெண்ணின் பதம் உம்முடைய நிலையைப்போன்றது; பதம் - நிலைமை; இவள் உம்மைப்போன்றவளாயிருப்ப உம்மால் வெல்லப்பட்ட மன்மதன் இவளைத் துன்புறுத்தல் பொருந்தாதென்றபடி. தலைவனும் தலைவியும் ஒத்த நிலையினராதல் வேண்டுமென்னும் தமிழ்மரபுபற்றி இது கூறினள் (தொல். களவு. 2.) எண்பது கோடி: பலவென்னும் பொருளது.

130. தொடுத்து அணியப்பட்டது அழகிய தேவர்களுடைய என்பு; புதர் - தேவர்; அங்கம் - என்பு. சுமந்திருந்தது தரங்கத்தையுடைய அம்பை; தரங்கம் - அலை; அம்பு - நீர்; கங்கை. தம் மேலே எடுத்து நின்றது மாயவரது ஆகத்தை; மாயவர் - திருமால். இது காயாரோகண மூர்த்தியைக் குறித்தது. இவ்வரலாறு காஞ்சிப்புராணத்தால் உணரலாகும். மாயும்படி வராகத்தின் எயிறு இறுக்கப்பட்டது. அந்தணர் பல் நகர் ஆசி அடுப்பது - அந்தணர்களுடைய பல வீடுகளிலே செய்யப்படும் ஆசியே அடுக்கப்படுவது; நகர் - வீடு. பன்னக ராசி - பாம்பின் கூட்டம். கொடுப்பது ஐயர்கள்தம் பல

கொடுப்ப தையர் கடம்பவ னத்தையே
கொள்வ தையர் கடம்பவ னத்தையே. (உஎ)

(நேரிசை வெண்பா)

131. கடங்கரைக்கும் வெற்பிற் கரைகரைக்கும் வைகைத்
தடங்கரைக்க ணின்றவர்நீர் தாமோ—நெடுந்தகைநும்
கூட்டம் புயமே கொடாவிடில்வேள் கூன்சிலையில்
நாட்டம் புயமே நமன். (உஅ)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

132. நம்பா நினக்கோல முறையோ வெனக்கால
நஞ்சுண்டு பித்துண்டு நாந்தேவ ரென்பார்
தம்பாவை யர்க்கன்று காதோலை பாலித்த
தயவாளர் கூடற் றடங்காவில் வண்டூர்
செம்பாதி மெய்யுங் கரும்பாதி யாகத்
திருத்தோளு மார்பும் வடுப்பட்ட துங்கண்

---

னத்தை - அடியார்களுக்குக் கொடுப்பது தேவர்களுடைய உலகத்தை. ஐயர் கொள்வது கடம்பவனத்தை - ஐயராகிய தாம் இருப்பிடமாகக் கொள்வது மதுரையை.

131. கடம் - மதம். கடம் கரைக்கும் வெற்பின் - யானையின்மீது; யானையைப்போல் வென்பதும் பொருந்தும். " மணியார் வைகைத், திருக் கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்" (தே. திருநா. திருப்பூவணம்.) இது பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலை நினைந்து கூறியது. நும் கூட்டத்தை நும்புயம் கொடாவிடில். வேள் - காமன். சிலை - வில். நாட்டு அம்புயம்; அம் புயம் - தாமரைமலராகிய அம்பு.

பிட்டுத் திருவிழாக் காலத்துச் சோமசுந்தரக்கடவுள் யானைமேல் எழுந் தருளுதல் வழக்க மென்பர்.

132. இது செவிலி கூற்று.

ஓலம், முறையோ வென்பன முறையீட்டுக்குரிய சொற்கள். என - என்று தேவர்கள் முறையிட. காலநஞ்சு - முடிவைச் செய்யும் ஆலகால விஷம்; காலம் - முடிவு. பித்துண்டு - மயக்கமுற்று. பாவையர் - தெய்வ மங்கையர். காதோலை மாங்கலியம் போன்ற சிறப்புடையது; அதனைப் பாலித்தலாவது அவர்களுடைய மங்கலம் கெடாமல் நிலவும்படி திருத்துதல். தயவு: தயாவென்னும் வடசொல்லின் இறுதி குறுகி உகரம் பெற்றது. செம் பாதி மெய் கரும்பாதியாகவென்றது காமத்தால் அம்பிகையை ஒரு பாதியில் வைத்ததைக் குறிப்பித்தபடி. அம்பிகை தழுவினமையால் தோளும் மார்பும்

டெம்பாவை யைப்பின்னு மம்பாவை செய்வார்
எளியாரை நலிகிற்பி னேதா மிவர்க்கே. (உகூ)

(*கொச்சகக் கலிப்பா)

133. ஆவமே நாணே யடுகணையே யம்மதவேள்
சாவமே தூக்கிற் சமனுஞ் சமனன்றே
ஓவமே யன்று ளுயிர்விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே. (௩௦)

## பறவைவிடு தூது

(சந்த விருத்தம்)

134. கரைபொரு திரங்கு கழிதொறு மிருந்து
கயல்வர வுறங்கு புள்ளீரே
பருவமு மிழந்தென் மகடுய ருழந்து
படுவிர கமொன்று முள்ளீரே
அருமையொ டுமெங்கள் பெருமையை யறிந்து
மருள்புரி யவிங்கு வல்லீரே
மருவிய கடம்ப வனமது புகுந்தெ
மதுரைய ரன்முன்பு சொல்லீரே. (௩௧)

---

முறையே வளைத்தழும்பும் நகிற்றழும்பும் பெற்றன ; இது காஞ்சித்தலத்து நிகழ்ந்த செய்தி. காமநோயால் வரும் துன்பத்தைத் தாம் அறிந்திருந்தும் அவளுக்கு அத்துன்பத்தை மிகுவிக்கின்றாரென்றாள். கண்டுமென்னும் உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது. அம்பாவை செய்வார் - அழகிய பாவையைப் போலச் செயலற்றிருப்பவளாகச் செய்வார். நலிகிற்பின் - நலிந்தால். (பி - ம்.) ' நலியிற்பின் ' ஏது ஆம் - என்ன பயன் உண்டாகும்.

133. (பி - ம்) *இன்னிசை. இது தோழிகூற்று. ஆவம் - அம்பறுத்தூணி. மதவேளுடைய ஆவம் முதலியவற்றை ஆராய்ந்தால்; ஏகாரங்கள் எண்ணுப் பொருளன. சமனுஞ் சமன் அன்று - யமனும் ஒப்பு அல்லன். இவை உயிரை உடலினின்றும் பிரிக்குந் திறத்தில் அவனினும் ஆற்றலுடையன வென்றவாறு. ஓவம் - சித்திரம். முன் ஒரு பெண்கொலையால் வரும்பழியை அஞ்சும் சொக்கருக்கு இப்போது பெண்பழி பாவமாகு மென்றாள் ; இச் செய்தி பழியஞ்சிய படலத்தால் அறியப்படும். (பி - ம்.) ' பழியஞ்சிச் '

134. (சந்தக் குறிப்பு.) தனதன தனந்த தனதன தனந்த தனதன தனந்த தையானு.

இது செவிலி கூற்று. இரங்குதல் - ஒலித்தல். புள்ளீரே - பறவைகளே ; கயல்வர உறங்கு புள்ளீரென்றமையின் நாரை முதலியவற்றைக் கொள்க. பருவம் - மங்கைப்பருவம். விரகம் - பிரிவாலுண்டாகும் துன்பம்.

(கொச்சகக் கலிப்பா)

135. ஈரித்த தென்ற விளவாடை திங்களென்றோர்
பேரிட்ட மும்மைப் பிணியோ தணியாவாற்
பாருக்கு ணீரே பழியஞ்சி யாரெனின்மற்
றூருக் குரைக்கே மடிகே ளடிகேளோ. (௩௨)

### பிச்சியார்

(கட்டளைக் கலிப்பா)

136 அடுத்த தோர்தவ வேடமும் புண்டரம்
அணிந்த முண்டமு மாய்வெள்ளி யம்பலத்
தெடுத்த தாள்பதித் தாடிக் கடைப்பிச்சைக்
கிச்சை பேசுமப் பிச்சனெ னச்செல்வீர்
கடைக்க ணோக்கமும் புன்மூர லும்முயிர்
கவர்ந்து கொள்ள விடுத்த கபாலிபோற்
பிடித்த சூலமுங் கைவிட்டி லீரென்றே
பிச்சி யாரெனும் பேருமக் கிட்டதே. (௩௩)

### மடல்

(கட்டளைக் கலித்துறை)

137. இடங்கொண்ட மானும் வலங்கொண்ட
வொண்மழு வும்மெழுதும்
படங்கொண்டு வந்தனை யானெஞ்ச
மேயினிப் பங்கயப்பூங்

---

135. செவிலிகூற்று; தலைவி கூற்றுமாம்.

வாத பித்த சிலேட்டுமமென்னும் மூன்றால் வரும்பிணியை நினைந்து மும்மைப் பிணியென்றார்.

136. பிச்சியார் - பிச்சை வாங்கச் செல்லும் சிவவேடங்கொண்ட பெண். பிச்சியாருக்கும் சிவபெருமானுக்கும் ஒப்புமை கூறப்படும்.

முண்டம் - நெற்றி. கடை - வீட்டு வாயில்கள். நோக்கம் மன்மதனை எரித்தது; மூரல் புரத்தை எரித்தது. பிச்சியார் இயல்பு: 615.

137. இது தலைவி மடலேறக் கருதிக் கூறியது. காமமிக்கவர் தம் அன்புக்கு உரியாரைப் பெறுவிடத்துத் தம் இருவர் படத்தையும் எழுதிக் கைக்கொண்டு பனைமடலாற் செய்த குதிரையில் ஏறிப் பொதுவிடத்தே வருவதாகச் செய்யுள் செய்தல் மரபு. ஆண்மக்களே மடலேறுவர்; மகளிர் மடலேறுதல் மரபன்று; தொல். அகத். 35; "கடலன்ன காம முழந்து மடலே

தடங்கொண்ட கூடற் சவுந்தர
மாறர்பொற் ருள்பெயர்த்து
நடங்கொண்ட தோர்வெள்ளி மன்றே
றுதுமின்று நாளையிலே. (கூச)

(சந்த விருத்தம்)

138. இருநில னகழ்ந்ததொரு களிறுவெ ளிறும்படியொர்
இருளியி னணைந்த ணையுமாக்
குருளையை மணந்தருளி னிளமுலை சுரந்துதவு
குழகரி துணர்ந்தி லர்கொலாம்
கருகியது கங்குலற வெளிறிய துகொங்கைசில
கணைமதன் வழங்க வவைபோய்
உருவிய பசும்புணில்வெ ணிலவனல் கொளுந்தியதெம்
உயிர்சிறி திருந்த தரிதே. (கூரு)

## கொற்றியார்

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

139. அருநாம மரசிவசங் கரநாம மெனக்கொண்
டவற்றொருநா மம்பகர்ந்தோர்க் கரியயனிந் திரனும்

---

ருப், பெண்ணிற் பெருந்தக்க தில்"(குறள்); ஆயினும் மடலேறுவேமென்று அவர்கள் கூறுவதாக அமைத்தல் புலவர்க்கு இயல்பு; திவ்யப்பிரபந்தத்தி லுள்ள சிறிய திருமடலிலும், பெரிய திருமடலிலும் இச் செய்தி விளங்கக் காணப்படும். (பி - ம்.) 'வந்தனையோ நெஞ்சமே' மடலேறுவார் மன்றிற் செல்லுதல் வழக்கம். இன்று நாளையிலே - இன்றேனும் நாளையேனும்.

138. (சந்தக்குறிப்பு.) தனதன தனந்ததன தனதன தனந்ததன தனதன தனந்த தனனு.

தலைவி கூற்று.

களிறு - ஆண்பன்றியாகிய திருமால். வெளிறும்படி - நாணமடையும் படி; இயல்பாகவே வெண்ணிறமுள்ளதாக இருத்தற்கு வேறுகாரணம் கற் பித்தார். இருளி - பன்றி. அணையும் மாக்குருளையை - தாயென் நினைந்து பொருந்திய கரிய பன்றிக் குட்டிகளை. (பி - ம்.) 'அணையுமக்' மணந்து - பொருந்தி. பன்றிக் குட்டிகளுக்கு முலையருத்திய திருவிளையாடற்செய்தி இது. அற - முற்றும். வெளிறியது - விளர்த்தது. நிலவாகிய அனல்.

139. கொற்றியார் - பிச்சைக்கு வரும் வைணவப் பெண்.

அரசிவ சங்கர நாமங்களை அரிய நாமம் எனக்கொண்டு. கருநாமம் - பிறவி யச்சம். பெற்றியாரது மதுரையிலுள்ள கொற்றியார்; அண்மை

பெருநாமங் கொடுத்தவர்தங் கருநாமந் துடைக்கும்
　　பெற்றியார் தமிழ்மதுரைக் கொற்றியார் கேளீர்
ஒருநாமம் பயந்தவர்முன் றருநாமம் வியந்திங்
　　குலகரிடு நாமமதொன் றுள்ளதீர் வெள்ளைத்
திருநாம மிட்டவன்றே கெட்டவன்றோ விளையோர்
　　தெரித்திடுநா மமுமுனிவோர் தரித்திடுநா மமுமே.

(நேரிசை வெண்பா)

140. மும்மைத் தமிழ்க்கூடன் மூலலிங்கத் தங்கயற்கண்
அம்மைக் கமுதா மருமருந்தை—வெம்மைவினைக்
கள்ளத் திருக்கோயிற் காணலாங் கண்டீர்நம்
உள்ளத் திருக்கோயி லுள். (௩௭)

(கட்டளைக் கலித்துறை)

141. உள்ளும் புறம்புங் கசிந்தூற் றெழநெக் குடைந்துகுதி
கொள்ளுஞ்செந் தேறல் குனிக்கின்ற வாபத்திக் கொத்தரும்ப

---

விளி. பயந்தவர் - பெற்றோர். அவர் முன் தருநாமமாகிய ஒரு நாமம் - இயற்பெயர். உலகரிடு நாமமென்றது கொற்றியாரென்பதனை. இயல்பாக உள்ள பெயரொன்றையும் தொழிலால் வந்த பெயரொன்றையும் உடையீரென்றபடி. (பி - ம்.) 'உலகரிடு நாமமுமொன்று' வெள்ளைத்திருநாமமென்றது திருமண்ணை. இட்ட அன்றே - நெற்றியிலணிந்த அன்றே. இளையோர் தெரித்திடு நாமம் - இளைஞர்களது ஆராய்ச்சிக்குரிய புகழ். (பி - ம்.) 'இளையோர்', 'இமையோர்' இளைஞரும் முனிவரும் நும்மைக் கண்டால் மயலுற்றுத் தம் நிலையழிவரென்பது கருத்து.

140. மூலலிங்கத்து - எத்தலத்திற்கும் முன்பு தோன்றிய இலிங்கத்தில் எழுந்தருளியுள்ள (206); "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தே.திருநா.) கள்ளத் திருக்கு ஓயில்; திருக்கு - மாறுபாடு. உள்ளமாகிய திருக்கோயிலுள் காணலாம்; "கண்ணி னிற்பர் மனத்திருக் கோயிலே காசியேயவர்க் கோர்திருக் கோயிலே" (629); "திருவரங்கந் திருக்கோயில் சேர்ந்துமது திருக்கோயில்" (திருவரங்கக்.).

141. தேறல் - தேன்; இங்கே சிவபிரான்; "மாற்றேனெனவந்தகாலனை யோல மிடவடர்த்த, கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன்" (திருச்சிற்.150); "கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றம்" (விக்கிரம. உலா.)குனிக்கின்றவா-ஆடுகின்றது என்ன ஆச்சரியம்; குனிக்கின்றவாறென்பதன் ஈறு தொக்கது. பத்திக் கொத்து - பத்தியின் தொகுதி; எண்வகைப்பத்தி; "விம்மிதம் புளகம் போர்த்தல் விழிப்புனன் மொழிதள ளாடல், செம்மைசேர் சரியை யாதி திருத்தொண்டு துதிதி யானம், அம்மவோ திருப்ப ணிக்கென் நீட்டுவ தழித்

விள்ளுங் கமலத்தும் வேத சிரத்தும்விண் மீனைமுகந்
தள்ளுங் கொடிமதிற் பொற்கூடல் வெள்ளி யரங்கத்துமே.(௩௮)

## மடக்கு

(*கட்டளைக் கலிப்பா)

142. அரங்க மையற்கு வெள்ளிய ரங்கமே
ஆல யம்பிற வெள்ளிய ரங்கமே
உரங்கொள் பல்கல னென்பர வாமையே
உணர்வு ருமையு மென்பர வாமையே
விரும்பு பாடலு மாகவி மானமே
மேவு மானமு மாகவி மானமே
திருந்து தானந் தடமதிற் கூடலே
செயற்கை வெள்ளித் தடமதிற் கூடலே. (௩௯)

(†விருத்தக் கலித்துறை)

143. கூடார் புரந்தீ மடுக்கின்ற துஞ்சென்று கும்பிட்டவோர்
ஏடார் குழற்கோதை யுயிருண்ப தும்மைய ரிளமூரலே

---

துண் ணுமை, எம்மையா ளுடையான் றொண்ட ரெண்வகைப் பத்தி மாதோ" (திருகுற்றுலப். நூற்பயனுரைத்த. 27.) (பி - ம்.) 'கொத்தரும்பு' விள்ளும் கமலம் - அடியார் இதயகமலம். வேதசிரம் - உபநிடதம்.

142. (பி - ம்) * தாழிசை. அரங்கம் - நடனசாலை. (பி - ம்) 'அரங்கும்' ஐயற்கு - சோமசுந்தரக்கடவுளுக்கு. வெள்ளியரங்கம் - வெள்ளியம்பலம். பிற எள்ளியர் அங்கம் - சிவபெருமானையன்றிப் பிறபொருள்களை வெறுத்தவர்களுடைய மனம்; அங்கம் - மனம்; அம் கம் - அழகிய சிரமென்று கொண்டு பிரமரந்திரஸ்தானமென்று கொள்ளுதலும் ஒன்று; "நண்ணுமாலய மாதவரங்கமே" (629.) உரம் - வன்மை; மார்பெனினும் ஆம். கலன் என்பு அரவு ஆமை; கலன் - ஆபரணம். உணர்வுருமையும் என் பரவாமை - அவர் அறியாதிருப்பதும் என்னுடைய துதியாதிருக்கும் தன்மையே. அறிந்தால் அருள்செய்திராரென்றபடி. மானமுடைய மாகவி; மானம் - பெருமை. அங்கே கவியென்றது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முதலியோருடைய திருப்பாசுரங்களை. மேவும் மானம் - விரும்பி வீற்றிருந்தருளும் விமானம். மாக விமானம் - இந்திர விமானம். தானம் - இருப்பிடம். தட மதில் கூடல் - வளைந்த மதில்களையுடைய மதுரை. வெள்ளித் தடமதிற் கூடல் செயற்கை; வெள்ளித்தடம் - வெள்ளிமலை; கைலாயம். அதில் இருத்தல் செயற்கை; மதுரையிலிருத்தலே அவருடைய இயற்கை யென்றவாறு.

143. (பி - ம்.) † நெடிலடி விருத்தம், கட்டளைக் கலித்துறை விருத்தம். இது தோழி கூற்று. கூடார் - பகைவருடைய. இளமூரல் - புன்னகை. கன்னி வளநாடு - பாண்டிநாடு. வைத்தாள் - தடாதகைப் பிராட்டியார். நகையாது - அவள் பரி

வாடாத செங்கோல் வளர்ப்பீ ரெனக்கன்னி வளநாடெனும்
நாடாள வைத்தாளு நகையா தினிப்போடு நகையாடவே. (சo)

(*கொச்சகக் கலிப்பா)

144. நகையே யமையுமிந்த நாகரிக நோக்கு
மிகையே யனங்கன் வினைகொளல்வீ ணன்றே
தகையேர் மதுரேசன் றண்டமிழ்நா டன்னீர்
பகையே துமக்கு நமக்கும் பகர்வீரே. (சக)

(கலிவிருத்தம்)

145. வீரம் வைத்தவில் வேள்கணை மெய்த்தன
பாரம் வைத்த பசும்புண் பசும்புணே
ஈரம் வைத்த விளமதி வெண்ணிலாக்
காரம் வைத்தென் கடம்பவ னேசனே. (சஉ)

(† எழுசீர்ச்சந்த விருத்தம்)

146. கடங்கால் பொருப்பொன் றிடும்போர் வைசுற்றும்
கடம்பா டவிச்சுந் தரரேநும்

---

கசியாமல். இனிப்போடு - இனிமையோடு. நகையாட - தேவரீர் நகைத்தலைச் செய்க; ஆட: வியங்கோள்; "நிவந்தோங்கு வெண்குடை மண்ணக நிழற்செய" (மணி. உஉ: 14.) (பி - ம்.) 'நகையாடலே'

முன்பு நகைத்ததனால் இன்னுமை விளைந்தது; இப்போது இனிமை விளையும்படி நகைக்கவேண்டு மென்றவாறு.

144. (பி - ம்,) * இன்னிசை. இது தலைவியை முன்னிலைப்படுத்தி அவள் தன்னை வருத்திய வண்ணத்தைத் தலைவன் உரைத்தல்.

அமையும் - என்னை வருத்துவதற்குப் போதுமானது. நாகரிகம் - கண்ணோட்டம். அனங்கன் வினைகொளல் - மலரெய்தல் முதலிய செய்கைகளைக் காமன் மேற்கொள்ளுதல். அவன் முயலாமலே நீர் அம்முயற்சியின் பயனை உண்டாக்கினீரென்றபடி. தகை - அழகு. (பி- ம்.) 'தகைசேர்' பகை ஏது; இல்லையென்றபடி. பகையில்லாதிருப்பவும் இங்ஙனம் நகையாலும் பார்வையாலும் வருத்துதல் முறையன்றென்பது தலைவன் கருத்து.

145. தோழிகூற்று; தலைவி கூற்றுமாம். தனபாரத்தில் கணை உண்டாக்கிய. மதியின் நிலாவாகிய காரம். வைத்து என் - வைத்ததனாற்பயன் யாது? புண்ணுக்குக் காரம்வைத்தால் ஆறிவிடும்; நீர் காரம்வைத்தும் பசும்புண் பசும்புண்ணாகவே இருக்கின்ற தென்றபடி.(பி-ம்.) 'காரம்வைத்த'

146. (சந்தக் குழிப்பு.) தனந்தா தனத்தந் தனந்தா தனத்தந் தனந்தா தனத்தந் தனதானா. (பி - ம்.) † எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

இது சோமசுந்தரக்கடவுள்பால் காமுற்ற மகளிர் கூற்று. கடங்கால் பொருப்பு - யானை. (பி - ம்.) 'போர்வைகட்டும்' உன்மத்தின் பெருவாழ்வு -

தடந்தோள் குறித்திங் கணைந்தே மெனிற்பின்
தரும்பே றுன்மத்தின் பெருவாழ்வோ
தொடர்ந்தே யுடற்றிந் திரன்சா பமுற்றும்
துரந்தா லுமிப்பெண் பழிபோமோ
அடைந்தே மிடைக்கொன் றையந்தா ரெவர்க்கென்
றமைந்தே கிடக்கின் றதுதானே. (சங)

## ஊர்

(அறுசீர்ச்சந்த விருத்தம்)

147. தான வெங்களி றேடு மிந்திரன் சாப முந்தொலையா
மேனி தந்தகல் யாண சுந்தரர் மேவு வண்பதியாம்
வானி மிர்ந்திட வாடு மொண்கொடி வால சந்திரனும்
கூனி மிர்ந்திட வேகி மிர்ந்திடு கூட லம்பதியே. (சச)

## கைக்கிளை

(மருட்பா)

148. அஞ்சேன் மடநெஞ் சபிடேகச் சொக்கரருட்
செஞ்சே வடிக்கடிமை செய்யார்போற் - றுஞ்சா
தெறிதிரைக் கருங்கட லேய்க்கும்
அறலியற் கூந்தற் காடமர்க் கண்ணே. (சரு)

---

மயக்கமுறுதலாகிய பெரிய வாழ்க்கை; ஊமத்தமலரைப்போல் ஒன்றுக்கும் பயன் படாத வாழ்வென்பது வேறுபொருள்; யாம் விரும்புவது உயர்ந்த கொன்றைமலராயிருப்பவும் நீர் அளிப்பது இழிந்த ஊமத்தமலரோ வென்பதும் வேறொரு குறிப்புப் பொருள். இந்திரன் பழியையே சாபமென்றார்(147.) அடைந்தேமிடை - அடைந்தேமாகிய எங்களுக்குள். (பி - ம்.) 'அடைந்தேம் விடக்' இப்பாடத்திற்கு, அடைந்த எம்மைவிட என்று பொருள்கொள்க.

147. (சந்தக் குழிப்பு.) தான தந்தன தான தந்தன தான தந்தனஅ. தானம் - மதம். வெங்களிற்றின் சாபத்தோடு இந்திரன் சாபத்தையும். மேனி - முன்னைமேனி. (பி - ம்.) 'மேன்மைதந்த' வாலசந்திரன் - பிறை.

148. தலைவன் கூற்று. நெஞ்சு: அண்மைவிளி. அபிடேகச் சொக்கர் - திருமுடியை யணிந்த சொக்கநாதக் கடவுள்; 157. செஞ்சேவடி - மிகச் செம்மையாகிய அடி. ஆடு அமர்க்கண் - வெற்றியையும் அமர்த்தலையும் உடைய கண். கண் கடலை யொக்குமென்றது கடலில் அமுதமும் நஞ்சும் தோற்றியதுபோலக் கண்களிலும் அருட்பார்வையும் மருட்பார்வையும் தோற்றினவென்னும் கருத்தை உட்கொண்டது (563, 669.) அமுதங் கடைந்தது கருங்கடலென்பது ஒரு சாராசிரியர் கொள்கை (தக்க. 284, உரை, விசேடக் குறிப்பு.)

(கட்டளைக் கலித்துறை)

149. கண்முத் தரும்பின கொங்கைபொன் பூத்த கனிபவளத்
தொண்முத் தரும்புமென் பெண்முத்துக் கேமுத்த முண்டிமயத்
தண்முத் தமைந்த தமனிய மேதலைச் சங்கம்பொங்கும்
பண்முத் தமிழ்க்கொர் பயனே சவுந்தர பாண்டியனே. (சக)

(பதினுன்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

150. பாணரு மழலைச் சிறியாழ் மதுரப்
பாடற்குத் தோடுவார் காதும்
பனிமதிக் கொழுந்துக் கவிர்சடைப் பொதும்பும்
பாலித்தாய் பாட்டளி குழைக்கும்

கோணரு வுளைப்பூங் கொத்தலர் குடுமிக்
குறுங்கணெட் டிலைச்சிலை குனித்த
கூற்றுயிர் குடித்தாய்க் காற்றலா மலதென்
கொடியிடைக் காற்றுமா றுளதோ

---

149. செவிலித்தாய் கூற்று. கண்முத்து - கண்ணீர்த்துளி. பொன் - பசலை. கனி பவளத்து ஒண்முத்து - பல்; பவளமென்றது வாயை. முத்தம் உண்டு - இத்துயரிலிருந்து விடுதலை உண்டோ; உண்டெனபது காகுஸ்வர மென்னும் ஓசை வேறுபாடு உடையது; இமயத்தண் முத்து -உமாதேவியார். (பி - ம்) 'தபனியமே' தலைச்சங்கத்திற் பொங்கிய.

150. செவிலி கூற்று.

(அடி, 1.) பாண் - பாட்டு. சிவபெருமான் தம்முடைய இரண்டு திருச் செவிகளிலும் இசைபாடும் இரண்டு கந்தர்வர்களை அணிந்துள்ளாரென்பது புராண வரலாறு; "தோடுவார் காதன்றே தோன்றாத் துணையையர், பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே" (திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம்.) சடையாகிய காடு. அளி - வண்டு.

(2.) கோண் - வளைவு. உளைப்பூ - உளையைப்போன்ற பூ; "தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி" (நாலடி. 199); உளை - தலையாட்டம். குறுங் கண் - குறுகிய கணுக்கள். நெட்டிலைச் சிலை - கரும்புவில். கூற்றென்றது இங்கே காமனை. காமனது உயிரைப் போக்கின நினக்குப் பிரிவுத் துன் பத்தை ஆற்றுதல் எளிதாகும். கொடியிடை - தலைவி.

சேணுருப் பசும்பொற் றசும்பசும் பிருக்கும்
சிகரியிற் றகரநா றைம்பாற்
சேயரிக் கருங்கட் பசுங்கொடி நுடங்கும்
செவ்வியிற் சிறைமயி லகவத்
தூணுரு முழவுத் தோண்மடித் தும்பர்
சுவல்பிடித் தணந்துபார்த் துணங்கும்
தோரண மாடக் கூடலிற் சோம
சுந்தரா சந்த்ரசே கரனே. (சஎ)

(நேரிசை யாசிரியப்பா)

151. கரும்பொறிச் சுரும்பர் செவ்வழி பாடச்
சேயிதழ் விரிக்கும் பொற்பொகுட் டம்புயம்
பாண்மகற் கலர்பொற் பலகை நீட்டும்
கடவுள்செங் கைக்குப் படியெடுப் பேய்க்கும்
ரு தடமலர்ப் பொய்கைத் தண்டமிழ்க் கூடல்
ஒண்ணுத றழீஇய கண்ணுதற் கடவுள்
எண்மர் புறந்தரூஉ மொண்பெருந் திகைக்குத்
தூய்மைசெய் தாங்குப் பானிலா விரிந்த
இரசதங் குயின்ற திருமா மன்றகம்
கo பொன்மலை கிடப்ப வெள்ளிவெற் புகந்தாய்க்குச்
செம்பொன் மன்றினுஞ் சிறந்தன் றுயினும்
கருந்தாது குயின்றவென் கன்னெஞ் சகத்தும்
வருந்தியும் வழங்கல் வேண்டும்
இருவே றமைந்தநின் னொருபெருங் கூத்தே. (சஅ)

---

(3.) சிகரி - கோபுரம். தகரம் - மயிர்ச் சாந்து. பசுங்கொடி - மகளிர். செவ்வியின் - அழகைப்போல. (பி - ம்.) 'களி மயில்' அகவ - ஆட.

(4.) மகளிர் உள்ள மாடம் தம் உலகத்திற்கும் மேலே சென்றிருத்தலின் தேவர் தலைநிமிர்த்துப் பார்த்தனர்; 582 : 7 -10. உம்பர் - தேவர். சுவல் - பின்கழுத்து.

151. (அடி, 1 - 4) தாமரைமலருக்குச் சிவபெருமான் திருக்கரம் உவமை. செவ்வழி - ஒரு பண். பாண்மகற்கு - பாணபத்திரனுக்கு. படியெடுப்பு - ஒப்பாகியதொரு பொருளை எடுத்தல்.

(6.) கடவுள் : விளி.

(7.) எண்மர் புறந்தரூஉம்-திக்குப்பாலகர் எண்மர் பாதுகாக்கும். திகை - திசை. (பி - ம்.) 'புறந்தரூஉ மொருபே ருடுக்கைக்குத்'

(9 - 11.) இரசதம் - வெள்ளி. வெள்ளியம்பலம் நினக்குப்பொன்னம்பலத்தினும் சிறந்தது. சிறந்தன்று - சிறந்தது.

(10 - 12.) கருந்தாது - இரும்பு. வழங்கல் - செய்தருளல். இருவேறமைந்த கூத்து - இயல்பாக ஆடிய கூத்தும் மாறி யாடிய கூத்தும். (பி - ம்.) 'இருபே றமைந்த'

(நேரிசை வெண்பா)

152. தேத்தந்த கொன்றையான் றெய்வத் தமிழ்க்கூடல்
மாத்தந்த வேழ மதமடங்க—மீத்தந்த
மாகவி மானம் வணங்கினமாற் கூற்றெமைவிட்
டேகவி மானமுனக் கேன். (௪௯)

(கட்டளைக் கலித்துறை)

153. ஏனின் றிரங்குதி யேழைநெஞ் சேவண் டிமிர்கடப்பங்
கானின் றதுவுமோர் கற்பக மேயந்தக் கற்பகத்தின்
பானின்ற பச்சைப் பசுங்கொடி யேமுற்றும் பாலிக்குமால்
தேனின்ற வைந்தருச் சிந்தா மணியொடத் தேனுவுமே. (௫௦)

(*பதினான்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

154. தேன ருதசி லைக்க ரும்புகொ லைக்க ரும்பொரு வேம்பெனும்
தேம்பு யத்தணி வேம்பி னைக்கனி தீங்க ரும்பெனு மிவ்வணம்
மான ருதம ழைக்க ணங்கையு மாறி யாடத் தொடங்குமால்
மாறி யாடுநின் வல்ல பங்தொழ வந்த பேர்க்கும்வ ருங்கொலோ

---

152. தேத்தந்த - தேனைத் தந்த. மாத்தந்தம் - பெரிய கொம்பையுடைய. மதமடங்கும்படி அமிழ்த்தும் கனமுடையதென்றபடி; "போரானை முது குறைப்பப் பொறையாற்றுஞ் சினகரத்து" (121) என்றார் முன்னும். மாக விமானம் - இந்திர விமானம். கூற்று: விளி. எமை விட்டு ஏகு; அவிமானம் உனக்கு ஏன்; அவிமானம் - உயிரைப் பிரித்துக்கொண்டேகும் தொழிலில் உள்ள பற்று. ஏகு அவி மானம் உனக்கு ஏன் எனப்பிரித்தலும் ஆம்; அவி - அழிக; மானம் - பெருமை.

153. ஏன் நின்று. கடப்பங்கானில். (பி-ம்.) 'கானின்றது மற்றோர் கற்பகமே' கற்பகமென்றது சோமசுந்தரக்கடவுளை. பச்சைப் பசுங்கொடி - மரகதவல்லியாகிய அங்கயற்கண்ணம்மை. ஐந்தரு - ஐந்து கற்பக தருக்கள். அ: உலகறி சுட்டு. தேனு - காமதேனு. சிந்தாமணி ஆகியவற்றை முற்றும் அக் கொடியே பாலிக்கும் என்க.

154. செவிலி கூற்று.

(பி-ம்.) * தாழிசை. கொலைக்கு அரும்பு - கொலைத்தொழில் செய்தற்குத் தோன்றிய. வேம்பெனுமென்றது வெறுப்பாளென்னும் பொருளது; "விற்கரும்பன் கைக்கரும்போ வேம்பென்னும்" (342.) தேம்புயத்தணி வேம்பு - சிவபெருமான் சுந்தரபாண்டியராகிய காலத்தில் திருப்புயங்களில் அணிந்த வேப்பமாலை. கரும்பெனுமென்றது விரும்புவாளென்றபடி. மான ருத கண், மழைக்கண் என்க; மான் - மான்கண்ணின் தன்மை. மாறியாட - இயல்புக்கு மாறாகிப் பேச; என்றது கரும்பை வேம்பென்றும் வேம்பைக்

கான ருதசு ருப்பு நாண்கொள் கருப்பு வில்லியைக் காய்ந்தநாட்
கைப்ப தாகை கவர்ந்து கொண்டதொர் காட்சி யென்னவெடுப்ப
மீன ருதவ டற்ப தாகைவி டைப்ப தாகையு டன்கொளும் [தோர்
வீர சுந்தர மாற மாறடும் வெள்ளி யம்பல வாணனே. (௫௧)

(ஷை வேறு)

155. வாணிலாப் பரப்பு மகுடகோ டீரம்
மறிபுனற் கங்கைநங் கைக்கும்
வையமீன் றளித்த மரகதக் கொடிக்குன்
வாமபா கமும்வழங் கினையால்
பூணுலாங் களபப் புணர்முலை யிவட்குன்
பொற்புயம் வழங்கலை யெமர்போற்
பொதுவினின் றுய்க்கு நடுவின்மை யிடையே
புகுந்தவா றென்கொலோ புகலாய்
தூணுலாம் பசும்பொற் றேரண முகப்பிற்
சூளிகை நெற்றிநின் றிறங்கும்
சுரிமுகக் குடக்கூன் வலம்புரிச் சங்கம்
தோன்றலு மூன்றுநா ணிரம்பா
நீணிலா வெனக்கொண் டணங்கனூர் வளைக்கை
நெட்டிதழ்க் கமலங்கண் முகிழ்க்கும்
நீடுநான் மாடக் கூடலிற் பொலியும்
நிமலனே மதுரைநா யகனே. (௫௨)

---

கரும்பென்றும் கூறுதலைக் குறித்தது. மாறியாடும்- கால்மாறியாடும். ஆடல்- கூத்தாடுதல், பேசுதல்; சிலேடை. வல்லபம் - வன்மை. கான் - வாசனை. சுருப்பு நாண் - வண்டாகிய நாணி. கருப்பு வில்லி - மன்மதன். ஒருவர் மற்றொருவரை வென்றதற்கு அறிகுறியாக அவரது கொடியைக் கைக்கொள்ளுதல் மரபு. (பி-ம்.) 'வீற சுந்தர' மாறு அடும் - பகையைக் கொல்கின்ற.

155. தோழி கூற்று; செவிலித்தாய் கூற்றுமாம்.

(அடி, 1.) மகுட கோடீரம் - முடியாக உள்ள சடையை.

(2.) இவட்கு - தலைவிக்கு. புயத்தில் ஒருவரும் இன்மையின் அதனை வழங்குதலால் தவறில்லை யென்பது குறிப்பு. எமரென்றது மகளிரை. பொதுவில் நின்றுய்க்கு - மன்றத்தில் நின்ற நினக்கு; நடுநிலைமையில் நின்ற நினக்கென்பது வேறு பொருள். நடுவின்மை - நடுநிலையின்மை; மகளிரோடு உவமித்ததற்கேற்ப இடையில்லாமையென வேறொரு பொருள் தோற்றியது.

(3-4.) முகப்பு - வாயில்மாடம். சூளிகை - உச்சிமாடம். கன்னி மகளிர் பிறையை வணங்குதல் மரபு (189.) பிறையைக் கண்டு கமலம் குவிதல் இயல்பாதலின் கைக்கமலங்கள் முகிழ்க்குமென்றார்.

(கட்டளைக் கலிப்பா)

156. மதுமலர்க்குழ லீர்பிச்சை யென்றுநம்
மனைதொ றுந்திரி வார்பிச்சை யிட்டபோ
ததிலொர் பிச்சையுங் கொள்ளார்கொள் கின்றதிங்
கறிவு நாணுநம் மாவியு மேகொலாம்
பதும நாறும் பலிக்கலத் தூற்றிய
பச்சி ரத்தம் பழஞ்சோ றெனிற்பினைப்
புதிய துந்நம் முயிர்ப்பலி யேயன்றோ
பூவை பால்கொள் புழுகுநெய்ச் சொக்கர்க்கே. (௫௩)

## கிள்ளைவிடு தூது

(கட்டளைக் கலித்துறை)

157. புழுகுநெய்ச் சொக்க ரபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்கர்
அழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்க ரங்கயற்கண்
தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்க ரென்றென்று சந்ததநீ
பழகிய சொற்குப் பயன்றேர்ந்து வாவிங்கென் பைங்கிளியே.

(நேரிசை வெண்பா)

158. பைந்தமிழ்தேர் கூடற் பழியஞ்சி யார்க்கவமே
வந்ததொரு பெண்பழியென் வாழ்த்துகேன்—அந்தோ
அடியிடுமுன் னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடியிடமாப் போந்த குறை. (௫௫)

---

156. (பி-ம்.) 'மதுமலர்க் குழலாய்' பதுமநாறும் பலிக்கலம் - பிரம கபாலம். பூவை பால் கொள் - உமாதேவியாரை ஒரு பாகத்திற்கொண்ட; நாகணவாய்ப்புள் பாலைக் கொண்டவென்பது வேறு பொருள்.

157. தலைவி கூற்று. அங்கயற்கண் - மீனாட்சியம்மை. பயனென்றது சொக்கநாதருடைய உடன்பாட்டை. தேர்ந்து வா - ஆராய்ந்து வா.

158. செவிலி கூற்று. அவமே - வீணாக. பெண்பழியென்றது தலைவியை அவர் புறக்கணித்தலால் அவள் உயிர் நீக்கிவிடுமென்னும் துணிவு பற்றிக் கூறியது. அடுத்தவா - அடுத்தது என்ன ஆச்சரியம்? கெட்டேன்: இரக்கக் குறிப்பு. கொடி இடமாப் போந்த குறை - காக்கை இடமாகச் சென்ற துந்நிமித்தமாகிய குறையே; காரணம் உமாதேவியார் இடப்பாகத்தில் அமைந்த குறையென்பது உண்மைப் பொருள். காக்கை இடமாதல் நன்னிமித்தமன்று; "இடமும், காகம்முத வியமுந்திய தடைசெய்வன கண்டான்" (கம்ப. பரசுராமப். 5.)

## காலம்

### மடக்கு

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

159. குறுமுகைவெண் டளவளவின் மணந்துவக்குங் காலம்
கொழுநரொடு மிளமகளிர் மணந்துவக்குங் காலம்
மறுகுதொறு நின்றெமர்க ளுருத்திகழுங் காலம்
வரிசிலைகொண் டுருவிலியு முருத்திகழுங் காலம்
சிறுமதிநம் பெருமதியி னுகப்படருங் காலம்
தென்றலிளங் கன்றுமுயி ருகப்படருங் காலம்
நிறையினொடு நாணினொடு மகன்றிரியுங் காலம்
நேசர்மது ரேசர்வரை யகன்றிரியுங் காலம். (ருசு)

(நேரிசை வெண்பா)

160. அம்மாநம் மேலன்று பட்ட தருட்கூடற்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே - இம்முறையும்
எம்மேனி காமநோய்க் கீடழிந்த வாவடிகள்
செம்மேனிக் குண்டாங்கொ றீங்கு. (ருஎ)

---

159. கார்கால வரவு கண்டு தலைவி இரங்கிக் கூறியது. குறுமுகையாகிய வெண்டளவு; தளவு - முல்லை. அளவு இல் - அளவில்லாத. மணம் துவக்கும் - நறுமணம் வீசத் தொடங்கும். மகளிர் மணந்து உவக்கும் காலம். எமர்கள் - மகளிர். உரு திகழும் காலம். உருவிலி - காமன். உருத்து இகழும் - கோபித்து இகழ்ச்சி செய்யும். சிறுமதி - பிறை. பெருமதியின் உகப்பை அடருங்காலம்; உகப்பு - மகிழ்ச்சி. உயிர் உகும்படி படரும் காலம். அகன் திரியும் - மனம் வேறுபடும். நேசர் - தலைவர். மதுரேசருக்குரிய வரையை அகன்று நீங்கும் காலம். தலைவர் தன்னைப் பிரிந்திருத்தலைச் சுட்டியது இது.

இது சோமசுந்தரக்கடவுளைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டு பாடியது.

160. தலைவி கூற்று. முன்பு சோமசுந்தரக்கடவுள்மேற் பட்ட அடி நம் மேற் பட்டது; இப்போது அவருக்கு முதலில் உண்டான காமநோய் நமக்கும் உண்டாயிற்றென்று தலைவி கூறினாள். (பி-ம்.) 'இம்மேனி' ஈடு - பெருமை. அழிந்தவா - அழிந்தவாறு.

## சித்து

(கட்டளைக் கலிப்பா)

161. குரும்பை வெம்முலை சேர்மது ரேசர்பொற்
கோபு ரத்திற் கொடிகட்டு சித்தர்யாம்
கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர்
கையிற் செங்கல் பசும்பொன்ன தாக்கினேம்
இருந்த வீடும் வறும்பாழ தாமவர்க்
கெருத்துக் கொட்டிலும் பொன்னேய்ந் திடச்செய்தோம்
அருந்த னந்நமக் கோதன மேயப்பா
ஆட கத்துமற் றுசையவ் வையர்க்கே. (௫௮)

## மடக்கு

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

162. ஐய மணிக்கல மென்பணியே
அன்பணி யக்கொள்வ தென்பணியே
மெய்யணி சாந்தமும் வெண்பலியே
வேண்டுவ துங்கொள வெண்பலியே

---

161. இரசவாதிகள் தம்முடைய திறமையைக் கூறுவது.

கரும்பை......சித்தர் - எல்லாம்வல்ல சித்தராகிய சிவபெருமான். செங்கல் பசும் பொன்னதாக்கினேம் - செங்கல்லைப் பசிய பொன்னாகச் செய்தேம்; செம்மையாகிய பசும்பொன்னாக ஆக்கினேம் என்றது உண்மைப் பொருள். இயல்பாகவே இருப்பதைத் தாம் ஆக்கியதாகத் தோற்றும்படி சொல்லுதல் சித்தர்களுக்கு வழக்கம். பின்வருவனவற்றையும் இப்படியே கொள்க. அவர் இருந்த வீடுகூட வறும்பாழாக இருந்தது; அந்த நிலையை மாற்றி அவருடைய எருத்துக் கொட்டிலையும் பொன்னாலமையும்படி நாம் செய்தேமென்பது வேறு பொருள். வறும்பாழென்றது சிதாகாயத்தை. எருத்துக்கு ஒட்டு இல்லும் பொன் ஏய்ந்திடச் செய்தேம் என்பது ஏற்ற பொருள்; திருமாலாகிய இடபத்துக்குப் பொருந்திய திருமகளைப் பொன்னிறம் பொருந்தச் செய்தேம். (பி - ம்.) 'பொன் மேய்ந்திடச் செய்தேம்' ஓதனம் - சோறு. அப்பா என்ற விளி சித்தர்வாக்கில் அடிக்கடி வரும். ஆடகத்து - பொன்னில்; ஆடுகின்ற நடனசாலையிலென்பது வேறுபொருள்.

எல்லாம் வல்ல சித்தருக்கும் தனக்கும் உள்ள வேறுபாட்டைச் சித்தன் இதனால் தெரிவித்தான்.

162. ஐய - வியக்கத்தக்க; "ஐவியப் பாகும்" (தொல். உரி. 87.) கலம் என்பாகிய அணியே; கலம்- ஆபரணம். கொள்வது என் பணி; பணி- தொண்டு. சாந்தம் - சந்தனம். வெண்பலி - திருநீறு. கொளவேண்டுவது எண் பலி; எண்பலி - எளிமையையுடைய பிச்சை. எடுப்பது ஓர் செம்மலே;

எய்ய வெடுப்பதோர் செம்மலையே
ஏந்தி யணைப்பதோர் செம்மலையே
வையகம் வாய்த்த வளம்பதியே
வாழ்வது கூடல் வளம்பதியே. (௫௯)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

163. ஏடார் புண்டரிகத் திளமான் முதுபாடல்
எழுதா மறையோடு மிசைமுத் தமிழ்பாடப்
பீடார் கூடல்வளம் பாடா வாடல்செயும்
பெருமான் முன்சென்றாள் சிறுமா னென்சொல்கேன்
பாடா ளம்மனையு நாடா ளெம்மனையும்
பயிலா டண்டலையு முயலாள் வண்டலையும்
ஆடாண் மஞ்சனமுந் தேடா ளஞ்சனமும்
அயிலா ளன்னமுமே துயிலா ளின்னமுமே. (௬0)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

164. இன்னியந் துவைப்பச் சங்க மேங்கிடச் செழிய னீன்ற
கன்னியை மணந்தே யன்றோ கன்னிநா டெய்தப் பெற்றார்
மின்னிவண் முயக்கும் பெற்றால் வெறுக்கைமற் றிதன்மே லுண்டோ
கொன்னியல் குமரி மாடக் கூடலம் பதியு ளார்க்கே. (௬க)

---

செம்மலை- செம்பொன்னாலாகிய மேருமலை. ஏந்தி யணைப்பது ஓர் செம்மலை; செம்மல் - முருகக் கடவுள். (பி - ம்.) 'ஏந்தி யெடுப்பதொர்' வாய்த்தவள், அம் பதி; பதி - கணவர். கூடலே வளப்பமிக்க பதி; பதி - நகரம்.

163. செவிலிகூற்று; தோழி கூற்றுமாம்.

ஏடு - இதழ். புண்டரிகம் - வெண்டாமரை. இளமான் - கலைமகள். முது பாடலாகிய மறை. இளமான் பாடுதலால் பீடு ஆர்ந்த; பீடு - பெருமை. பாடா - பாடி. சிறுமான் - தலைவி. அம்மனை - அம்மனைப்பாட்டு. எமது மனையை நாடாள். தண்டலையிற் பயிலாள்; தண்டலை - சோலை. வண்டலை முயலாள் - விளையாடுதலை முயன்று செய்யாள். அஞ்சனம் - கண்ணுக் கிடும் மை.

164. செவிலிகூற்று; தோழி கூற்றுமாம்.

இன்னியம் - இனிய இசைக்கருவிகள். துவைப்ப - முழங்க. இன்னியம் .........ஏங்கிட: "மத்தளங் கொட்ட வரிசங்க நின்றூத" (நாச்சியார் திருமொழி.) கன்னி - தடாதகைப்பிராட்டியார். கன்னி நாடு - பாண்டி நாடு. மின் இவள் - இத்தலைவி. வெறுக்கை - செல்வம். குமரி - அழியாமையை யுடைய.

முன்னம் ஒரு பெண்ணை மணந்ததனால் ஒரு நாட்டைப் பெற்றார்; இப் போது இப்பெண்ணையும் மணந்தால் மின்னும் செல்வம் பெறுவாரென்றாள்.

## கார்

(விருத்தக் கலித்துறை)

165. கேளார் புரஞ்செற்ற வின்னாரி தோயக் கிளர்ந்துற்றதோர்
தோளாளர் கூடற் பதிக்கேகு முகில்காள் சொலக்கேண்மினோ
வாளாவொர் மின்னுங்கண் மழைசிந்த வென்சொன் மறுத்தேகன்
தாளாண்மை யன்றோ தளைப்பட்ட வூரிற் றனித்தேகலே. [மின்

## இடைச்சியார்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

166. கண்டமுங் காமர் மெய்யுங் கறுத்தவர் வெளுத்த நீற்றர்
எண்டரு மதுரை யிற்சிற் றிடைச்சிபே ரிடைச்சி யென்பீர்
தொண்டைவா யமுதிட் டென்றன் பாலிங்குத் தோயீர் வாளா
மண்டுமென் னகத்தி லென்னீர் மத்திட்டு மதிக்கின் றீரே. (௬௬)

---

165. பொருள் முற்றி மீளும் தலைவன் மேகத்தோடு கூறியது.

வில் நாரி தோய கிளர்ந்து உற்றதோர் தோளாளர் - வில்விற்பூட்டிய நாண் தோய அக்காலத்தில் பருத்த தோளையுடையவர். புரஞ்செற்ற தோளாளரென இயைக்க. மின் மழைசிந்தவென்றது ஒரு நயம்; மின்னென்றது தலைவியை. மின்னும்: உம்மை எச்சப் பொருளது. மேகத்தைக் கண்டு கார்காலம் வந்தபின்பும் தலைவன் வந்திலனென்று தலைவி வருந்து வாளாதலின் ஏகன்மின் என்றான். ஏகல் தாளாண்மையன்று. தாளாண்மை - முயற்சி. மேகம் தளைப்பட்ட ஊர் - மதுரை; முன் உக்கிரகுமார பாண்டியன் மேகங்களுக்கு விலங்கிட்டா னென்பது பழைய வரலாறு (206.) அங்கே தனித்து ஏகல் நன்றன்று : என்னோடு வருவீராக என்றபடி.

166. தயிர் விற்கும் இடைச்சாதிமங்கையின் மீது காமுற்ற ஓர் இளைஞன் கூறியது இது.

காமர் - அழகு. மெய் கறுத்தவரென்றது அம்பிகையின் பாகத்தைக் கருதி. காமர் மெய் - மன்மதனது உடம்பை எனினுமாம். கறுத்தவர் - கோபித்தவர்; சிலேடை. சிற்றிடைச்சி - சிறிய இடையை யுடையவள். பேர் இடைச்சி என்பீர் - இடைச்சியென்று சொல்லப்படும் சாதிப்பெயரை யுடையீர். தொண்டைவாய் அமுது இட்டு - அதரபானம் செய்யும்படி செய்து. என்றன் பால் இங்குத் தோயீர் - என்னிடம் வந்து இங்கே அளவளாவுவீராக. என் அகத்தில் - என் மனத்தில். நீர் மத்து இட்டு மதிக்கின்றீர் - நீர் மயக்கத்தை உண்டாக்கி வருத்துகின்றீர்; மத்து = மத்தம் - மயக்கம்.

இடைச்சாதிக்கு ஏற்பத் தோற்றும் பொருள் வருமாறு:—அமுதிட்டென்றது பிரை குத்தலை நினைந்து ; அமுது - மோர் ; வழக்கு. அதனையிட்டு என்னுடைய பாலை இங்கே தயிராகத் தோயச்செய்வீராக. வீணாக என் வீட்டின்கண் பாலுமின்றிப் பிரைகுத்தலுமின்றி நீரைமட்டும் மத்தையிட்டுக் கடைதலால் என்ன பயன்? மதித்தல் - கடைதல்.

(கட்டளைக் கலித்துறை)

167. ஈர மதிக்கு மிளந்தென் றலுக்குமின் றெய்யுமதன்
கோர மதிக்குங் கொடுங்கோ லுளகொடுங் கோன்மைமுற்றும்
தீர மதிக்குஞ்செங் கோன்மையென் னுஞ்சில தேவர்மதி
சோர மதிக்குங் கடற்றீ விடங்கொண்ட சொக்கருக்கே.(கசஎ)

வஞ்சி விருத்தம்

168. கரிய கண்டங் கரந்தவோர்
நிருபர் கூடலி னெஞ்சிரே
உருவ மும்பெண் ணுருக்கொலாம்
அருவ மென்பதென் னாவியே. (கசஅ)

---

167. தலைவி கூற்று.

(பி-ம்.) 'தென்றலுக்குமுன் னெய்யுமதன்' இன்று - இன்றைக்கு. கோரமதி - கொடுமையையுடைய புத்தி. கொடுங்கோல் உள - கொடுங் கோற் றன்மைகள் உள்ளன. (பி-ம்.) 'கொடுங்கோ லுமாம்', 'கொடுங்கோ லுமே' கொடுங்கோன்மையானது முழுவதும் நீங்கும்படி அதனை வருத்தும் தேவரீருடைய செங்கோன்மை யாதாகும்? அதனாற் பயனில்லை யென்றபடி. சோமசுந்தரக்கடவுள் சவுந்தரபாண்டியராயிருந்து ஆண்டமை பற்றி இங்ஙனம் கூறினாள். மதிக்கும் கடல் - கடைந்த பாற்கடல்.

168. செல்லும் தலைவியின் செலவு கண்டு தலைவன் நெஞ்சை நோக்கிக் கூறியது.

சோமசுந்தரக்கடவுள் மானிடத் திருமேனிகொண்டு வந்தருளினமையின் 'கரிய கண்டங் கரந்த' என்றார். நெஞ்சிரே - நெஞ்சே. என் ஆவியை அருவம் என்பது என்; அதன் உருவமும் பெண் உரு. தலைவியையே உயிராகக் கருதிக் கூறியபடி. (பி-ம்.) 'அருவமென்ப தவாவினே'

"காணா மரபிற் றுயிரென மொழிவோர், நாணிலர் மன்ற பொய்ம் மொழிந் தனரே, யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே, சொல்லு மாடு மென்மெல வியலும், கணைக்கா னுணுகிய நுசுப்பின், மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே" (தொல். களவு. 10, ந. மேற்.); "புலனன் றென்ப வின்னுயி ரதுவே, அலர்முலை யாகந் தாங்கி, நிலவொளி மதியி னிலவுமென் னுயிரே" (தமிழ்நெறி. 15, மேற்.) என்னுஞ் செய்யுட்கள் இத னோடு ஒப்பு நோக்கற்பாலன.

(கலிநிலைத்துறை)

169. ஆவா வென்னே தென்னவர் கோறகன் றணிசாந்தம்
நீவா நின்றாய் நின்றில காமா னலமென்னே
கோவாம் வில்லி கொடுந்தனு வுங்கூ னிமிராதால்
மூவா முதலார் மதுரையி தன்றோ மொழிவாயே. (௬௯)

வலைச்சியார்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

170. மொழிக்கய லாகி வேத முடிவினின் முடிந்து நின்ற
வழிக்கய லாகார் கூடல் வலைவாணர் பெருவாழ் வன்னீர்
கழிக்கயல் விற்பீர் மற்றிக் காசினி யேழு முங்கள்
விழிக்கய லுக்கே முற்றும் விலையென்ப விளக்கிட் டீரே.(௭௦)

(நேரிசை வெண்பா)

171. விற்கரும்பே யொன்றிதுகேண் மென்கரும்பே யன்னார்தம்
சொற்கரும்பே முற்றுமலர் தூற்றுமால் - நற்கரும்பை

---

169. தன் மெய்வெப்பத்தையறிந்து திருநீற்றைப் பூசிய தோழியை நோக்கித் தலைவி கூறியது.

தென்னவர்கோன் - கூன்பாண்டியன். சாந்தம் - இங்கே திருநீறு. நீவா நின்றாய் - பூசுகின்றாய். இதனாற் காம வெப்பம் தணிந்திலது. வில்லி - மன்மதன். தனு - அவனுடைய கருப்பு வில், உடம்பு; சிலேடை.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பூசிய திருநீற்றாற் பாண்டியனுடைய சுரநோயும் கூனும் நீங்கியதுபோல, என்னுடைய சுரமும் மன்மதனுடைய வில்லின் வளைவும் நீங்கில;ஆதலால் இவ்வூர் மதுரை யன்றோ வெனத் தலைவி மயக்கத்தாற் கூறினாள். இது, "கானவர் தாந்தினை கொய்தனரோ" என்னும் தனிப்பாடலிலுள்ள 'நானவன்றானலவோ ' என்னும் பகுதியை நினைப்பிக்கின்றது. மந்திரவாதிகள் சுரத்தைத் திருநீறிட்டுத் தணியச் செய்வர்.

இங்கேயுள்ள வரலாறு பாண்டியன் சுரந்தீர்த்த படலத்தால் அறியப்படும்.

170. மீன் விற்கும் வலைச்சியை நோக்கி அவள்பாற் காமமுற்ற ஓரிளைஞன் கூறியது இது.

மொழிக்கு அயலாகி - சொல்லுக்குப் புறம்பாகி. வேத முடிவு - உபநிடதம். வலைவாணர் - வலைஞர். கழிக்கயல் - உப்பங்கழியிலே யுள்ள கயல்மீன்கள். விழியாகிய கயலுக்கே. உங்கள் பார்வையில் யாவரும் மயங்குவரென்பது கருத்து. தான் மயங்கியதை இளைஞன் உலகின்மேலேற்றிக் கூறினான்.

171. பாங்கி மன்மதனது கருப்புவில்லை நோக்கிக் கூறியது.

மென்கரும்பேய் அன்னார் - மெல்லிய கரிய பேயை யொத்த தோழிமாரும் பிறமகளிரும். சொற்கரும்பே - சொல்லாகிய கரும்புகளே. கரும்

ஆளார் கடம்பவனத் தையருமற் றென்னீயும்
வாளா வலர்தூற்று வாய். (கூஅ)

(கட்டளைக் கலிப்பா)

172. வால வ்ருத்த குமார னெனச்சில
வடிவு கொண்டுநின் றுயென்று வம்பிலே
ஞால நின்னை வியக்கு நயக்குமென்
நடனங் கண்டும் வியவாமை யென்சொல்கேன்
பால லோசன பானுவி லோசன
பற்ப லோசன பக்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
கம்ப சாம்ப கடம்ப வனேசனே. (கூகூ)

(கலிவிருந்தம்)

173. கட்டு வார்குழ லீர்கயற் கண்ணினுட்
கிட்ட மாஞ்சொக்க ரைக்கரை யேற்றினீர்
மட்டில் காம மடுப்படிந் தேற்கெனே
கொட்டு வீர்பின்னுங் குங்குமச் சேற்றையே. (எ௦)

---

பென்றது அச்சொல்லுக்கு இயல்பாக உள்ள இனிமை பற்றி. நற்கரும்பை - தலைவியை. நீயும்: உம்மை இறந்தது தழுவியது. வாளா - வீணே. அலர் தூற்றல் - பழிமொழியைக் கூறுதல், மலரம்பை எய்தல்; சிலேடை.

172. வால வ்ருத்த குமாரனெனச் சிலவடிவுகொண்ட வரலாறு விருத்த குமார பாலரான படலத்தால் உணரப்படும். வம்பிலே - வீணுக. என் நடனம் கண்டு - பிறந்து பிறந்து பலமுறை பாலனுகவும் பின் குமரனுகவும் பின் கிழவனுகவும் ஆகும் என் ஆடலைக் கண்டு. பாலலோசன - நெற்றிக் கண்ணை யுடையவரே. பானு விலோசன - சூரியனுகிய கண்ணையுடையவரே. பற்பலோசன - தாமரைபோன்ற கண்ணை யுடையவரே ; என்றது, குளிர்ந் துள்ள சந்திரனுகிய திருவிழியைக் குறித்தபடி. (பி - ம்.) 'பரமலோசன', 'பாம லோசன'

173. தெப்பத் திருவிழாவில் சொக்கநாதரைக் கரையில் எழுந்தருளு வித்ததைக் கண்டு காமுற்ற தலைவியொருத்தி கூறியதாக அமைத்த செய்யுள் இது.

கட்டிய நீண்ட குழலையுடையீர் ; என்றது சொக்கநாதரைக் கரையேற் றுகையில் உடனிருந்த உருத்திரகணிகையரை. சொக்கநாதரைமட்டும் கரை யேற்றிவிட்டுக் காமமடுவில் வீழ்ந்த என்னைக் கரையேற்ருமல் என்மேல் சேற்றைக் கொட்டுதல் உங்கள் இயல்புக்கு முரணன்ருே வென்பது குறிப்பு. குங்குமச்சேறென்றது தலைவியின் காமவெப்பம் தணிதற்பொருட்டுப் பூசிய குங்குமக் குழம்பை.

(நேரிசைவெண்பா)

174. குங்குமச்சே றூடுங் கொடிமாட வீதியில்வெண்
சங்குமொய்க்குஞ் சங்கத் தமிழ்க்கூடல் - அங்கயற்கண்
அம்மையிடங் கொண்டாரை யஞ்சலித்தே மஞ்சலமற்
றிம்மையிடங் கொண்டார்க் கினி. (எக)

மடல்

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

175. இன்னீ ரமுதுக் கிடமுங் கடுவுக்
கெழிலார் களனுங் களனு வருளா
நன்னீ ரமுதக் கடலா கியுளார்
நரியைப் பரியாக் கிடத் தினரால்
அந்நீர் மையின்மிக் கென்னீர் மையெனு
அடன்மா மடன்மா வரமா றுசெயா
மைந்நீ ரளகத் திளமா னையனீர்
வருவேன் மதுரைத் திருவீ தியிலே. (எஉ)

174. குங்குமச் சேறு ஆடும் வீதி - மகளிர் ஊடற்காலத்தில் எறிந்த குங்குமக் கலவை அளைந்த வீதி; "கோதை மடவார் குலாவுமெய் யிற்றி மிர்ந்த, சீதக் களபச் செழுஞ்சேற்றூல் - வீதிவாய், மானக் கரிவழுக்கும்" (நள.) சங்கத்தமிழ்க்கூடல் - தமிழ்ச்சங்கத்தையுடைய மதுரை. அங்கயற் கணம்மையை இடப்பாகத்திற் கொண்டாரை. இ மயிடம் கொண்டார்க்கு இனி அஞ்சேம்; மயிடம் - மஹிஷம்; 1 : ௬௫ - ௬, உரையைப்பார்க்க; இது திரிபு நோக்கி மையிடமென்று வந்தது. கொண்டாரென்று பன்மையாற் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு; "காமனை வென்ற கண்ணோன்" (திருச்சிற். 164, பேர்.) என்புழிப்போல.

175. தலைவன் மடலேறுவேனென்றல்.

இன்னீர் அமுதுக்கு இடமும்-இனிய இயல்பையுடைய அமுதம்போன்ற உமாதேவியாருக்கு இடப்பாகத்தையும். கடு - விடம். களம் - கழுத்து. களனு - இருப்பிடமாக. நன்னீர் அமுதக்கடல் - நல்ல இயல்புடைய பாற்கடல்; தம்பால் வந்தோருக்குப் பேரின்பத்தை அளித்து இறவாத நிலையைத் தருத லின் அமுதக்கடலென்றூர். பாற்கடலில் விடமும் அமுதமும் தோற்றியன வென்பதை இது நினைப்பிக்கின்றது. மிக்கதென்றது மிக்கெனக் குறைந்து வந்தது; என் நீர்மை அந்நீர்மையின் மிக்கது. எனு - என்று கண்டோர் கூறும்படி. (பி - ம்.) 'நீர்மையென' மடல் மா அடல் மா வர மாறு செயா - பனைமடலாலாகிய குதிரையை அடல்மாவாக வரும்படி வேறுபடுத்தி; மா - குதிரை. சொக்கநாதர் உயிருள்ள ஒரு விலங்கை மற்றொரு விலங்காகச் செய்வார்; யான், உயிரில்லாத பனைமடலால் ஒரு குதிரையை உயிருள்ள குதிரை போலச் செய்வேனென்பது கருத்து. வீதியில் வருவேன்.

(எழுசீர்ச் சந்தவிருத்தம்)

176. திருவைப் புணர்பொற் புயமைப் புயல்கைத்
திகிரிப் படையுய்த் தவர்கூடற்

றருமொய்த் தருமைச் சிறைபெற் றனமுத்
தமிழ்வெற் பமர்பொற் கொடிபோல்வீர்

புருவச் சிலையிற் குழைபட் டுருவப்
பொருகட் கணைதொட் டமராடுஞ்

செருவிற் றொலைவுற் றவரைக் கொலுநற்
சிலைசித் தசர்கைச் சிலைதானே. (எசு)

(கட்டளைக் கலித்துறை)

177. சிலைசிலை யாக்கொண்ட தென்மது ரேசர் சிலம்பில்வில்வேள்
மலைசிலை யாக்கொண்ட வாணுத லாய்நின் மருங்குல்சுற்றும்

---

176. (சந்தக்குறிப்பு.) தனனத் தனனத் தனனத் தனனத் தனனத் தனனத் தனதான.

தலைவன் கூற்று.

மைப்புயல் கை - திருமாலின் கையில். திகிரிப்படை உய்த்தவர் - சக்கராயுதத்தைக் கொடுத்தவராது. தருக்கள் மொய்க்கப்பெற்று அதனாற் சிறை பெற்றார் போன்ற முத்தமிழ் வெற்பு; கூடலைச் சார்ந்த வெற்பு. மரங்கள் மலையின் சிறகுகளை ஒத்தன. குழை - காதணி. புருவமாகிய சிலையில் கண்ணாகிய கணையைத் தொடுத்து. தொலைவுற்றவரை - தோற்றவரை. (பி - ம்.) 'தொலைவற்றவரை' நற்சிலை யென்றது இகழ்ச்சி; 'கற்கறித்து நன்கட்டாய்' என்றது போல. சித்தசர் - காமன்; பன்மை இகழ்ச்சிபற்றி வந்தது. நின் கண்ணால் வருந்தியவரைப் பின்னும் வருத்திக் காமன் அம்பு கொல்லும்; தோல்வியுற்றவரைக் கொல்லுதல் அறமன்றாதலின் அங்ஙனம் செய்தல் பொருந்தாதென்றபடி.

177. தலைவன் தலைவியும் தோழியும் ஒருங்கிருந்தவழித் தழையேந்தி, 'யான் எய்த அம்போடு ஒருமான் ஈண்டுப் புக்கதோ' என்று கேட்ட காலத்தில் தோழி தலைவியை நோக்கிக் கூறி நகையாடியது இது.

சிலை சிலையாக் கொண்ட - மலையை வில்லாகக்கொண்ட. வேள் - மன்மதன். மலை சிலையாக் கொண்ட வாள் நுதலாய் - போர் செய்கின்ற வில்லாகக்கொண்ட ஒளி பொருந்திய புருவத்தையுடையாய்; மலைசிலை : வினைத்தொகை; நுதல் - புருவம். புருவத்திற்குக் கருப்புவில் உவமை (சிலப். உ :44-5.)

இலைசிலை யாக்கொண் டிளமானை யெய்திடு மிங்கிவர்பூங் [றே.
குலைசிலை யாக்கொண் டவர்போலு மாற்செம்மல் கொள்கைநன்

## பாண்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

178. கொங்குரை யாற்றி லிட்டுக் குளத்தினிற் றேட நீடு
மங்குறோய் முதுகுன் றையர் மதுரையோ மதியில் பாணு
எங்கையர் மனைக்கண் வைத்தாங் கெம்மிடைத் தேர்தி மற்றம்
மங்கையர் மனம்போ லன்றே மகிழ்நர்தம் வாழ்க்கை தானே.

---

நின் மருங்குல் சுற்றும் இலை - நின் இடையைச்சுற்றி உடுத்தற்குரிய தழையை. பூங்குலை சிலையாக் கொண்டவர் - பூங்கொத்தை வில்லாகக் கொண்ட காமன் (123.) செம்மல் - தலைவன். தலைவன் வேட்டையென்று கூறுவது பொய்; வந்த நோக்கம் வேறென்று தோழி கூறினாள்.

178. பரத்தையிற் பிரிந்த தலைவனிடமிருந்து வந்த பாணனை நோக்கித் தலைவி கூறியது; தோழி கூற்றுமாம்.

கொங்குரை - பொன்னை. (பி-ம்.) 'கொங்குலாமாற்றில்' கொங்கு நாட்டிற் பலவிடத்துப் பொன் அகப்படுதலினாலும் அஃது மாற்றறிய உரைக்கப்படும் ஆணிப்பொன்னாதலாலும் அதனைக் கொங்குரை யென்றார்; உரை - உரையாணிப்பொன்; "சிற்றம்பல முகடு, கொங்கிற் கனக மணிந்தவா தித்தன்" (திருத்தொண்டர் திருவந்தாதி, 65.) சோழர்களிற் சிலர் கொங்கு நாட்டு அரசர்களை வென்று அந்நாட்டிலிருந்து பொன் கொணர்ந்தனரென்பது பழைய வரலாறு. சுந்தரமூர்த்தி நாயனார் ஒரு முறை சிவாஞ்ஞையால், திருமணி முத்தாற்றில் இட்ட பொன்னைத் திருவாரூர்க் கமலாலயத்தில் எடுத்தனர். முதுகுன்று ஐயர் மதுரையோ - முதுகுன்றையருடைய மதுரையோ நீ வாழுமிடம்; அதனால்தான் தலைவரைப் பரத்தையர் வீட்டிற்கு அழைத்துச் சென்று அங்கே வைத்துவிட்டு இங்கே தேடுகின்றாயென்றாள். எங்கையரென்றது பரத்தையரை. வைத்து - தலைவனை இருக்கச் செய்து. பரத்தையர் வீட்டில் தலைவனை வைத்தவன் பாணன். தேர்தி - தேடுகின்றாய். மகிழ்நர் வாழ்க்கை அம்மங்கையர் மனம்போல் அன்றே - தலைவருடைய வாழ்க்கை பரத்தையர் மனம்போல் அமைந்ததல்லவா; அவர்களுடைய விருப்பப்படியே ஒழுகுகின்றாரென்றபடி. எங்கையர் வீட்டிலிருப்பதை நீ அறியாயோ என்றாள்.

## கிள்ளைவிடு தூது

(நேரிசை வெண்பா)

179. வாழிமடக் கிள்ளாய் மதுரா புரிவாழும்
ஊழி முதல்வர்க் குருவழிந்தேன் - ஆழியான்
சேய்தொடுத்த வம்போ திரண்முலையுங் கண்மலரும்
தாய்தொடுத்த வம்போ தலை. (எசு)

## மறம்

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

180. தருமுகத்து நிமிர்குடுமி மாடமலி கூடற்
சவுந்தரபாண் டியர்குடியாஞ் சமரினிடை யாற்று
தொருமுகத்தி லொருகோடி மன்னர்மடிந் தொழிந்தார்
உனைவிடுத்த மன்னவன்யா ருரைத்திடுவாய் தூதா

---

179. தலைவி கூற்று.

கிளியை ஏவப்புகுந்த தலைவி அதனை முதலில் வாழ்த்தினள்; "வாழி நெஞ்சமே" (வைராக்கிய சதகம், 1) என்றாற்போல. உரு அழிந்தேன் - அழகு கெட்டேன். (பி-ம்.) 'உருவழிந்தே யாழியான்' ஆழியான் சேய் - காமன். தொடுத்த-எய்த. அம்புகள் திரள்முலையிலும் கண்மலரிலும் பட்டன. தாய் தொடுத்த பழிமொழியோ தலையளவும் உள்ளது; வம்பு - பழிமொழி. மன்மதன் தொடுத்த அம்பின் பயனாகிய பசலை நகிலிலும் நீர்ப்பெருக்கு கண்ணிலும் உள்ளனவென்பது கருத்து; "கண்முத் தரும்பின கொங்கை பொன் பூத்த" (149) என்றார் முன்னும். தாய் கூறும் வம்பு தலை மயக்கத்தைத் தருவதென்றலும் பொருந்தும் மன்மதன் தொடுத்த அம்புகள் திரண்ட முல்லையரும்பும் கள்ளையுடைய பிற மலர்களுமென்பதும் ஒன்று.

180. மறக்குடியிற் பிறந்த பெண் ஒருத்தியை மணஞ் செய்துகொள்ள எண்ணிய அரசனிடமிருந்து வந்த தூதனைப் பார்த்து அப்பெண்ணின் தந்தையாகிய ஒரு மறவன் கூறுவது; இது மகட்பாற் காஞ்சியென்னும் புறத்திணைத்துறையின்பாற் படும்.

தருமுகத்து நிமிர் குடுமி-கற்பக மரத்தின் முன்னே சென்று அதனினும் உயர்ந்த உச்சியையுடைய; மாடத்தின் உயரத்தைச் சிறப்பித்தவாறு. (பி-ம்.) 'மாடக் கூடற்' யாம் சவுந்தர பாண்டியருக்குரிய குடி. (பி-ம்.) 'சமரிலாற்று', 'மன்னவர் யார்', 'மடக் கொடியை', 'வார்த்தை சொன்னாய்' சொன்னாயென்பது வரையில் வந்த தூதுவனைப் பார்த்தும்,

மருமுகத்த நெறிக்குழலெம் மறக்கொடியை வேட்பான்
மணம்பேசி வரவிடுத்த வார்த்தையது சொன்னாய்
திருமுகத்தி லெழுத்திதுவேற் றிருமுடியி லெழுத்தும்
தேர்ந்தறியக் கொண்டுவா சிகையினொடுஞ்சென்றே.(எஎ)

## குறம்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

181. செல்விட்ட பொழின்மதுரைத் தேவர்மணந் தடாதகா
தேவிக் கன்று
சொல்விட்ட குறுமகள்யான் றும்மலுநல் வரத்தேகாண்
சுளகி லம்மை
நெல்விட்ட குறிக்குநீ நினைந்ததொரு பொருளதுநித்
திலக்கச் சார்க்கும்
வல்விட்ட குறியினொடும் வளையிட்ட குறியுளதோர்
வடிவு தானே. (எஅ)

(* சந்தக் கலித்துறை)

182. வடகலை யலபல கலையொடு தமிழ்வள ருங்கூடல்
விடவர வரையினர் திருமுனி தொருவர்வி ளம்பாரோ

திருமுகத்திலென்பது முதல் தன்பாலிருந்த ஒரு மறவனை நோக்கியும் தலைவனை மறவன் உரைத்தன. திருமுகத்தில் எழுத்து - ஓலையிலுள்ள எழுத்து. திருமுடியில் எழுத்து - தலையெழுத்து. சிகை - குடுமி. தூதுவிட்ட அரசனது தலையை வெட்டிக் கொண்டுவாவென்று சினந்து கூறினன்.

181. ஒரு குறத்தி தலைவியை நோக்கிக் கூறுதல்.

செல் - மேகம். தேவரது மணத்தை. சொல்விட்ட - சொல்லிய. குறத்தி குறிகூறத் தொடங்குகையில் அருகே இருப்பாருள் ஒருவர் தும்மினர்; அதனைக்கேட்டு, 'தும்மலு நல்வரத்தே காண்' என்றாள்; 'தும்மல் நன்னிமித்தம்' (சீவக. 323, ந.) வரத்து - வரவு; "இவண் வரத்தை விட்டனர்" (அழகர் கலம். 44.) சுளகு - சிறுமுறம். ஒரு சுளகில் தலைவி நெல்லை இட அந்நெல்லை எண்ணிப்பார்த்துக் குறத்தி குறிகூறத் தொடங்கினாள். குறிக்கு - குறிக்குப் பயன் யாதெனின். நீ நினைத்தது ஒரு பொருளாகும். அது இத்தகையதென் கின்றாள் பின். நித்திலக் கச்சு - முத்தாலாகிய கச்சு (528.) வல் - அம்பிகையின் நகில். அது வடிவு. தான், ஏ: அசை நிலைகள்.

182. (சந்தக் குழிப்பு.) தனதன தனதன தனதன தனதன தந்தானா.

செவிலி கூற்று; தோழி கூற்றுமாம். (பி-ம்.) * நெடிலடி விருத்தம்.

கூடலில் வடகலையும் தமிழும் வேறு பல கலையும் வளருமென்பது கருத்து (204.) விட அரவையுடைய அரையினர்; அரை - இடை. சிவபெருமான் பாம்பை அரைக்கச்சாக அணிந்துள்ளார். திருமுன் - ஸந்நிதியில்,

குடதிசை புகையெழ வழலுமிழ் நிலவுகொ ழுந்தோடப்
படவர வெனவெரு வருமொரு தமியள்ப டும்பாடே. (எகூ)

(கட்டளைக் கலித்துறை)

183. பாட்டுக் குருகுந் தமிழ்ச்சொக்க நாதர் பணைப்புயமே
வேட்டுக் குருகுமெய்ந் நாணும்விட் டாள்வண்டு மென்கிளியும்
பேட்டுக் குருகும்விட் டாளென்செய் வாளனல் பெய்யுமிரு
கோட்டுக் குருகு மதிக்கொழுந் துக்கென் குலக்கொழுந்தே.

## மேகவிடு தூது

(எழுசீர்ச் சந்தவிருத்தம்)

184. ஏமவெற் பென்றுகயி லாயவெற் பென்றுமல
யாசலத் தென்று முறைவார்
கோமகட் கன்பர்மது ரேசர்முச் சங்கம்வளர்
கூடலிற் சென்று புகலீர்
தாமரைக் கண்டுயிலு மாலெனச் சந்தமலி
சாரலிற் றுஞ்சு முகில்காள்
மாமதிப் பிஞ்சுமிரை தேர்குயிற் குஞ்சுமுயிர்
வாய்மடுத் துண்டொ ழிவதே. (அக)

---

இதுவென்றது தலைவி படும் பாட்டைக் குறித்து நின்றது. புகையெழும்படி அழலை உமிழ்கின்ற நிலவானது குடதிசையின்கண் கொழுந்தோட. பிறை யாதலின் குடதிசையைக் கூறினள். நெருப்பைக் கண்டு அரவு அஞ்சும். படும் பாடாகிய இதனை விளம்பாரோ. யாரேனும் தூதுசென்று விளம்பினால் நலமென்பது எச்சப் பொருள்.

183. செவிலி கூற்று.

குருகும் மெய்ந்நாணும்; குருகு - வளை; பேட்டுக் குருகும் - பெண் நாரையையும்; குருகென்பது ஒருவகைப் பறவையென்று கூறுவதுமுண்டு (சீவக. 2102.) விட்டாள் - தூதாக விடுத்தாள். இரு கோடு குருகு மதிக் கொழுந்துக்கு - இரண்டு முனையையுடைய இளம்பிறைக்கு; குருகு - குருத்து; "குருகு பறியா நீளிரும் பனைமிசை" (புறி. உ; 43.) கொழுந்துக்கு என் செய்வாள்.

184. (சந்தக் குறிப்பு.) தானனத் தந்ததன தானனத் தந்ததன தானனத் தந்த தனனா.

தலைவி கூற்று.

ஏமவெற்பு - மேருமலை; ஏமம் - பொன். மலயாசலம் ஏமவெற்பையும் கயிலாய வெற்பையும் போன்றதென்று அதில் எழுந்தருளியிருப்பார். மயி லாசலம் - பொதியில் மலை; அம்மலை ஒரு வைப்புத்தலம்; "கயிலையும் பொதியிலுமிடமென வுடையார்" (தே.) கோமகட்கு அன்பர் - அரசியாகிய தடாதகைப்பிராட்டியாருக்குக் கணவர்; அன்பராகிய மதுரேசர். முச்சங்கம் வளர்கூடல் - இயல் இசை நாடகமென்னும் மூன்று தமிழுக்கும் உரிய சங் கங்கள் வளர்ந்த மதுரை. உயிர் - என் உயிரை. உண்டொழிவதைப் புகலீர்.

## சம்பிரதம்

### (சந்தவிருத்தம்)

185 மட்டறுக டற்புவிய னைத்துமொரி மைப்பினின்ம
றைத்துடன்வி டுத்தி டுவனேற்
றெட்டுவரை யைக்கடலை முட்டியுள டக்கிடுவன்
இத்தனையும் வித்தை யலவாற்
றுட்டமத னைப்பொடிப டுத்திமது ரைக்குளுறை
சொக்கர்குண மெட்டி னொடுமா
சிட்டர்கடு தித்திடும கத்துவம னைத்துமொரு
செப்பினுள டக்கி டுவனே. (அஉ)

---

185. (சந்தக் குறிப்பு.) தத்தனன தத்தனன தத்தனன தத்தனன தத்தனன தத்த தனனா.

சம்பிரதம் - இந்திரசால வித்தையில் வல்லவன் தன் சிறப்பைத்தானே கூறுதல். செய்தற்கெளிய செயல்களையே செய்தற்கரிய செயல்களெனப் பொருள் படுவதற்கேற்ற சொல்லமைதியால் இதனைக் கூறுவர் ஆசிரியர்.

மட்டு - எல்லை. ஓர் இமைப்பினின் மறைத்து உடன் விடுத்திடுவன் - ஒரு கணத்துள் மறைத்து உடனே வெளிப்படுத்துவேனென்பது வேறு பொருள்; ஒருமுறை இமைத்தலினால் மறையச்செய்து உடனே இமைத்தலை விடுப்பேனென்பது செம்பொருள்; கண்ணை இமைக்கும்போது இமைப்பவனுக்கு அக்கணத்தில் உலகம் மறைதல் இயல்பே. ஏற்று எட்டுவரையைக் கடலை முட்டியுள் அடக்கிடுவன் - தாங்கி எட்டுமலைகளையும் சமுத்திரத்தையும் மூடிய கைக்குள் அடக்கிவிடுவேனென்பது வேறு பொருள்; வாங்கிக் கொண்டு எள் துவரை கடலையென்னும் தானியங்களை முஷ்டிக்குள் அடக்கி விடுவேனென்பது செம்பொருள். (பி - ம்.) 'மற்றெட்டுவரை' இத்தனையும் வித்தையலவென்றது என் பெருவன்மையாற் செய்வனவென வேறு பொருளுக்கேற்ற குறிப்பையும் யாவரும் செய்தற்குரிய எளிய செயல்களே யெனச் செய்யும் பொருளுக்கேற்ற குறிப்பையும் கொண்டது. துட்டமதன்: 123. குணம் எட்டாவன: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை யென்பன (குறள், 9, பரிமேல்.) சிட்டர்கள் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முதலியோர். ஒரு செப்பு - ஒரு சொல் (பிரணவம்); ஒருவகைப் பாத்திரம் என்பது வேறு பொருள்; "ஆங்கவர் செப்பிற் கடங்காது...அரங்கத் திருப்பெட் டகத்து ளொருமணியே" (தனிப்.)

(நேரிசை வெண்பா)

186. அடுத்த பதஞ்சலியா ரஞ்சலியா நிற்ப
எடுத்த பதஞ்சலியா ரேனும் - தடுத்தவற்கா
மாறிக் குனித்தார் மலைகுனித்தென் மாமதனுர்
சீறிக் குனித்தார் சிலை. (அசு)

(எழுசீர்ச் சந்தவிருத்தம்)

187. சிலையோ கரும்புபொரு கணையோ வரும்புசிவ
சிவவா வியொன்று முளதோ
இலையோ வறிந்திலமிம் மதனுண் மையென்புகல்வ
திதுவே தவம்பி றிதெனும்

---

186. தலைவி கூற்று; தோழி கூற்றுமாம்.

அடுத்த பதஞ்சலியார் - தம்மை அடைந்த பதஞ்சலி முனிவர். எடுத்த பதம் சலியார் - ஆட எடுத்த திருப்பாதம் சலியாதவர். பதஞ்சலி முனிவர் வேண்ட இத்தலத்தில் திருநடனம் புரிந்தாரென்பர்; "பதஞ்சலிக் கருளிய பரம நாடக" (திருவா. கீர்த்தித்திருவகவல், 138); **திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்**துள்ள 'பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடல்' என்னும் பகுதியாலும் இது விளங்கும். பதஞ்சலியார்: 471. தடுத்தவற்கா - தடுத்த ஒரு பாண்டியனுக்காக. மாறிக் குனித்தார் - கால்மாறியாடினர். மலை குனித்து என் - மலையை வில்லாக வளைத்ததனல் என்ன பயன்? சிலை - வில்லை. இவர் வளைத்ததனல் பயன் யாது? காமன் தன் செயலை ஒழிந்தான ல்லன் என்ருள். மா மதனுரென்ற பன்மை இகழ்ச்சிக்குறிப்பு.

187. (சந்தக் குறிப்பு.) தனனா தனந்தனன தனனா தனந்தனன தனனா தனந்த தனனா.

செவிலி கூற்று.

கணை அரும்பு: "அரும்பும் பொரும்படைக் காமர் வில்வேள்" (555); "சுருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவ" (மணி. கஅ: 105.) சிவசிவ: இரக்கக் குறிப்பு; "சிவ, சிவநச்ச ராவு மிலையோ" (**சங்கரநயினர் கோயி லந்தாதி**.) ஆவி யென்றது தலைவியின் உயிரை. வன்மையற்ற வில்லையும் அம்பையும் கொண்டு எய்து காமன் இவள் ஆவி உளதோ இலதோ வென்று எண்ணும்படி செய்தமையின் அவனது ஆண்மையும் அதனைப் பெற அவன் செய்த தவமும் சிறந்தன வென்ருள். இதுவே தவம் - இதுவே உண்மை

முலையே யணிந்தமுகிழ் நகையீ ரொர்பெண்கொடியின்
முலையோ டுமுன்கை வளையால்
மலையே குழைந்திடுத மிருதோள் குழைந்துறைநம்
மதுரே சர்தந்த வரமே. (அச)

## உருவெளிப்பாடு

(கட்டளைக் கலித்துறை)

188. வரும்புண்ட ரீக மிரண்டாலொர் கல்லுமென் வன்னெஞ்சமாம்
இரும்புங் குழைத்த மதுரைப் பிரான்வெற்பி லேழ்பரியோன்
விரும்புந் தடமணித் தேர்வல வாவெஞ் சுரமிதன்றே
கரும்புங் கனியு மிளநீரும் பாரெங்குங் கண்களினே. (அரு)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

189. கருவிட்ட காடெறிந்து கடம்பவனத் திருப்பீர்நும்
கடுக்கைக் காட்டின்

---

யான தவம். இஃது உறுப்புக்குறைவிசேட அணி. பிறிது என் ஆம் - வேறு தவம் என்ன பயனுடையதாகும்? முலை - முல்லை. "முலையணிந்த முறுவலாள்" (கலி. க.) முகிழ்நகை - தோற்றிய சிரிப்பு. ஓர் பெண் கொடி - உமாதேவியார். குழைந்திடும் - குழைவதற்குக் காரணமாகிய. (பி - ம்.) 'குழைந்தது நம்' மதனனது ஆண்மை மதுரேசர் தந்த வரத்தால் வந்ததென்பது கருத்து (555.)

188. வினைமுற்றி மீளும் தலைவன் இடைவழியில் தலைவியின் உருவெளித் தோற்றத்தைக் கண்டு தேர்ப்பாகனோடு கூறியது.

புண்டரீகம் இரண்டாலென்பதைக் கல்லுக்கும் இரும்புக்கும் தனித்தனியே கூட்டுக. கல் - மேருமலை; அதனைக்குழைத்த புண்டரீகமிரண்டென்றது திருக்கரங்களை. நெஞ்சமாகிற இரும்பைக் குழைத்த புண்டரீகம் இரண்டு: திருவடிகள். ஏழ்பரியோன் - சூரியன். அவன் விரும்புதலாவது தன் தேரை ஓட்டுதற்கு இவன் தக்கவனென்று விரும்புதல். வலவா - பாகனே. சுரம் - பாலைநிலம். கரும்பென்றது புருவங்களை. கனி: இதழ். இளநீர்: நகில். கண்களின் - கண்களால். (பி - ம்.) 'பாகும் கனமே' மருதநிலத்தில் தோன்றுதற்கு உரிய கரும்பு முதலியன பாலைநிலத்தில் தோற்றியது என்ன வியப்பென்றான்.

189. தலைவி கூற்று; சந்திரோபாலம்பனம்.

இது விறகு சுமந்த திருவிளையாடலை நினைந்து கூறியது.

கரு இட்ட காடு எறிந்து - கருப்பத்திற் செலுத்தும் பிறவியின் தொகுதியைப் போக்கி. கடம்பவனம் - மதுரை. ஒருகாட்டை வெட்டி எறிந்து ஒரு காட்டில் இருக்கின்றீரே என்றாள். கடுக்கைக் காட்டின் மரு - கொன்றை

மருவிட்ட கொன்றைவெள்ள மடுப்படிந்து மூண்டெழுமால் மதித்திக் கெட்டேன்
செருவிட்ட விழிமடவார் வாயிட்டுச் சுடுவதல்லாற் செங்கை யிட்டும்
எருவிட்டு மூட்டிடநீர் விறகிட்டு மூட்டியவா றென்சொல் கேனே. (அகூ)

(*கலி நிலைத்துறை)

190. என்போ டுள்ளமு நெக்குரு கப்புக் கென்போல்வார்க்
கன்போ டின்பு மளித்தருள் கூடலெம் மடிகேளோ
தன்போற் காமன் சாப முடித்தாற் றாழ்வுண்டே
முன்போர் காமன் சாப மனைத்து முடித்தாய்க்கே. (அஎ)

---

மலர்த்தொகுதியின் நறுமணம். வெள்ளமென்றது கங்கை நீரை. சிவபெருமான் திருமுடியில் கொன்றை, கங்கை, சந்திரன் என்பன ஒருங்கிருத்தல் பற்றி இங்ஙனம் கூறினள். நீருட்படிந்தும் இந்தத்தீ மூண்டதென்றது விரோதாலங்காரம். செரு இட்ட - போரைச் செய்த. வாயிட்டுக் சுடுவது அல்லால் - தாம் கூறும் பழிமொழியால் என்னை வருத்துவதல்லாமல். செங்கை இட்டும் எரு இட்டும் மூட்டிட : கன்னிமகளிர் அஞ்சலி செய்தும் எருவிட்டும் சந்திரனை வணங்குஞ் செய்தியை இங்ஙனம் கூறினள். மகளிர் எரு முட்டையிட்டும் கையால் விசிறியும் தீமூட்டுதல் இயல்பு (66.) (பி - ம்.) 'செங்கை யிட்டும்' சோமசுந்தரக் கடவுள் விறகு சுமந்த காலத்தில் அவர் திருமுடிமேற் சந்திரன் இருப்ப அதன்மேல் விறகு வைக்கப்பட்டதனையே விறகிட்டு மூட்டியதாகக் கூறினள். மூட்டியவா - மூட்டியவாறு.

190. (பி - ம்.) * விருத்தக் கலித்துறை, நெடிலடி விருத்தம். இது தலைவி கூற்று.

அன்போடு இன்பு. "ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த வின்பமே யென்னுடை யன்பே" (திருவா. கோயிற்றிருப். 1); "அன்பினு லின்ப மார் வார்", "இறவாத வின்பவன்பு வேண்டி" (பெரிய. தடுத்தாட். 196, காரைக் கால். 60.) அடிகேள் - ஸ்வாமீ ; ஓ : அசைநிலை. தன்போற் காமன் - தன்னைத்தானே ஒத்த காமன் ; சாபம் - வில். தாழ்வு உண்டே - குறைவு உண்டோ. ஓர் கா மன் சாபம் - ஒப்பற்ற இந்திரனது சாபத்தை : கா - கற்பகச்சோலை. இத்தலத்தில் இந்திரன் சாபம் தீர்ந்தது (146-7.)

(நேரிசை யாசிரியப்பா)

191\. முட்டாட் பாசடை நெட்டிதழ்க் கமலத்
திரைவர வுறங்குங் குருகு விரிசிறைச்
செங்கா ளுரைக்குச் சிவபதங் கிடைத்தெனப்
பைம்புனன் மூழ்கிப் பதும பீடத்
௫ தூற்றமி ளுமு முலப்பில் பஃறவம்
வீற்றுவீற் றிருந்து நோற்பன கடுக்கும்
குண்டுநீர்ப் பட்டத் தொண்டுறைச் சங்கமும்
வண்டமிழ்க் கடலின் றண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று காவியங் கற்றுச்
௧௦ சித்திரப் பாட்டிய றேர்ந்தன செல்லும்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்
இடங்கொண் டிருந்த விமையா முக்கட்
கருமிடற் றொருவனின் றிருவடி வழுத்துதும்
தாய்நலங் கவருபு தந்தையுயிர் செகுத்தாங்

---

191\. (அடி, 1-6.) முள்ளையுடைய தண்டையும் பசிய இலையையும் நெடிய இதழையும் உடைய தாமரைமலரில். குருகு - நாரை. பதுமபீடம்- தாமரையாகிய இருக்கை; யோகம் புரிவார்க்குரிய பதுமாஸனமென்று வேறொரு பொருள் தோற்றியது. ஊற்றம் - மனவுறுதி. உலப்பில் - அழி வில்லாத. வீற்று வீற்று இருந்து - தனித்தனியே இருந்து. கடுக்கும்-ஒக்கும்.

(7-10.) சங்குக்கும் தமிழ்ச்சங்கத்துக்கும் சிலேடை. குண்டு -ஆழம். பட்டம் - குளம். சங்கம் - சங்கு. தமிழாகிய கடலின் குளிர்ந்த துறைகளைப் பயிலும் சங்கமும்; சங்கம் - புலவர் கூட்டம். சங்கு முத்தை அகத்தே பயின்று காவில் இயங்குதல் அற்று, சித்திரமாகிய பாட்டின் இயல்பைத் தேர்ந்து முழங்குவனவாகச் செல்லும் என்க; கா - சோலை; இயங்கு - இயங் குதல்; சித்திரம் - அழகு; பாட்டு - பலவகை ஒலி. தமிழ்ச் சங்கமானது முத் தகமென்னும் செய்யுளைப் பயின்று காவியங்களைக் கற்றுச் சித்திரகவிகளின் இலக்கணத்தை ஆராய்வனவாகி நடைபெறும்; முத்தகம் - வினைமுற்றிய தனிச் செய்யுள்; சித்திரப் பாட்டியல் - அழகையுடைய பாட்டியலென்னும் இலக்கணமும் ஆம்.

(11.) தட பணை - பெரிய வயல்கள்.

கடு கிருபெருங் குரவரி னொருபழி சுமந்த
புன்றொழி லொருவற்குப் புகலின்மை தெரீஇ
அன்றருள் சுரந்த தொன்றோ சென்றதோர்
வலியாற் கருள்வ தூஉ நோக்கி
எளியார்க் கெளியைமற் றென்பது குறித்தே. (அஅ)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

192. குறுமுயலுஞ் சிலகலையு மிழந்தொருமா னுயிரைக்
கொள்ளைகொள்ள வெழுந்தமதிக் கூற்றே யாற்றாச்
சிறுதுயிலும் பெருமூச்சுங் கண்டுமிரங் கலையாற்
றெறுமறலி நீயேயித் தெண்ணி லாவும்

---

(14-9.) சோமசுந்தரக் கடவுள் மாபாதகந்தீர்த்த திருவிளையாடற் செய்தியும், கரிக்குருவிக்கு அருள் செய்த திருவிளையாடற்செய்தியும் இவ்வடிகளிற் கூறப்படும்.

தாய் நலம் கவருபு : இடக்கர். செகுத்து - கொன்று. ஆங்கு : அசைநிலை. ஒருபழி - ஒப்பற்ற பாதகம். புகல் - அடைக்கலத் தானம். தெரீஇ - உணர்ந்து. சென்றதோர் - தன்பால் வந்து அடைந்ததாகிய ஒரு. வலியான் - கரிக்குருவி. எளியார்க்கு எளியை - எளியவர்களுக்கு எளியையாக உள்ளாய்; "எளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந், தளியை யாவதுன் னருளின் வண்ணமே" (திருவிளை. சஎ : 15.) மற்று : அசைநிலை.

(முடிபு.) ஒருவ, எளியை யென்பது குறித்து வழுத்துதும்.

(கருத்து.) எளியார்க்கெளியையாதலை யெண்ணி எளியேமாகிய எம்மையும் ஆண்டருள்வாயென்னும் கருத்தினால் நின்னை வழுத்துவேம் யாம்.

192. இது பிறையை நோக்கித் தோழி கூறியது.

முயலென்றது களங்கத்தை. கலை - கிரணம். பிறைக்குக் களங்கமில்லையாதலின் முயலையிழந்ததாகக் கூறினாள். பிறையே, நீ ஒரு முயலையும் சில ஆண்மான்களையும் இழந்துவிட்டு வேறொரு பெண்மானின் உயிரைக் கொள்ள எழுந்தாயென ஓர் இகழ்ச்சிப்பொருள் தோற்றியது. ஒரு மான் - தலைவி. மதியாகிய கூற்றே; கூற்று - யமன். பெருமூச்சு - துயரமிகுதியால் விடும் மூச்சு; உயிர் நீங்குவோர்க்கு உளதாகும் ஊர்த்துவ சுவாச மென்பது வேறு பொருள். மறலி - யமன். (பி - ம்) 'பாசமுமே' உன்னுடைய பாசம் நிலாவுருவத்தை யெடுத்தது (676); கரிய உடலையுடைய நீ முதுகு வளைந்து முதிர்ந்த நரையினால் அக்கரிய நிறத்தையுமிழந்தாய். இங்ஙனம்

எறியுநெடும் பாசமே யுடலுமறக் கூனி
 இருணிறமு முதிர்நரையா யிழந்தாய் போலும்
நறுநுதலா ரென்கொலுனை மதுரேசர் மிலைச்சும்
 நாகிளவெண் டிங்களெனை நவில்கின் றுரே. (அகூ)

(* பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

193. நவ்விய ங்கண் மானுமானு மினிது கந்தி டங்கொள்வார்
 நஞ்ச மார்ந்தெ னெஞ்ச மார்ந்து நனிக ளங்க றுத்துளார்
கைவி ளங்கு குன்று மன்றுங் கோவி லாக்கு னித்துளார்
 கன்னி நாடர் மதுரை வாணர் கயிலை வெற்பர் வெற்பனீர்
கொவ்வை வாய்வி ளர்ப்ப மைக்க ருங்க ணுஞ்சி வப்பவே
 குளிர்த ரங்க வைகை நீர்கு டைந்து டன்றி ளைத்திராற்
பைவி ரிந்த வல்கு லீர்நும் மன்னை மார்கள் சங்கையிற்
 படில வர்க்கு வீணி னீவிர் பரிக ரித்தல் பாவமே. (கூ०)

---

கொடுமையும் முதுமையும் உடைய நின்னை மகளிர் கருணையங்கடலாகிய சிவபெருமான் அணியும் இளந்திங்களென்று கூறுதல் என்ன பேதைமை? நாகிள வெண்டிங்கள் - மிக இளைய சந்திரன்.

193. (பி - ம்) * சந்தத்தாழிசை. தோழி கூற்று.

நவ்வியங்கண் மான் - உமாதேவியார். இடம் - வாம பாகம், இடத் திருக்கரம். நஞ்சம் ஆர்ந்து - விடத்தை உண்டு. நெஞ்சம் ஆர்ந்து - உள்ளத்தில் எழுந்தருளி. (பி - ம்). 'நெஞ்சமர்ந்து' நஞ்சம் ஆர்ந்து களம் கறுத்துளார்; களம் - கழுத்து. நெஞ்சம் ஆர்ந்து களங்கு அறுத்துள்ளார்; களங்கு - களங்கம்; அறியாமை; நிமித்தம் நிமித்தென்று வந்ததுபோன்றது இது (நன். 49.) கைவிளங்கு குன்று - மேருமலை; கோவில்லாக் குனித்துளார் - தலைமையையுடைய வில்லாக வளைத்தார். மன்று கோவிலாகக் குனித்துளார் - அம்பலத்தைக் கோயிலாகக் கொண்டு திருநடம் புரிந்தார். வெற்பு அன்னீர். விளர்ப்ப - வெண்ணிறமடைய. (பி - ம்.) 'கொழி தரங்க' உடன் - ஒருங்கு. திளைத்திர் - ஆடினீர். பை - படம். சங்கையிற் படில் - ஐயமுற்றால்; ஐயமுறுதலாவது நீராடியதனால் உண்டான வேறுபாடுகளைத் தலைவரோடு அளவளாவியதனால் வந்தனவெனக் கொள்ளுதல். பரிகரித்தல் - போக்குதல். பாவமென்றது இரக்கத்தைக் குறித்து நின்றது. தாய்மாரது ஐயத்தைப் போக்குதல் அரிதென்றபடி.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

194. பாமிக்குப் பயின்மதுரைப் பரஞ்சுடரே யொருத்திகயற்
பார்வை மட்டோ
காமிக்கு மடந்தையர்கட் கயலெல்லா முமையடைதல்
கணக்கே யன்றோ
மாமிக்குக் கடலேழும் வழங்கினீ ரொருவேலை
மகனுக் கீந்து
பூமிக்குட் கடலைவறி தாக்கினீர் பவக்கடலும்
போக்கி னீரே. (கூக)

195. நீரோடு குறுவெயர்ப்பு நெருப்போடு நெட்டுயிர்ப்பும்
நெடுங்கண் ணீரிற்
பீரோடு வனமுலையுங் குறையோடு நிறையுயிரும்
பெற்றா ளன்றே
காரோடு மணிகண்டர் கடம்பவனச் சொக்கர்நறை
கமழ்பூங் கொன்றைத்
தாரோடு மனஞ்செல்லத் தளையோடுந் தான்செல்லாத்
தமிய ளானே. (கூஉ)

---

194. கண்டோர் கூற்று.

ஒருத்தி - அங்கயற்கண்ணம்மை. காமிக்கும் - விரும்பும். கணக்கு - நியாயம் (418.) மாமி - காஞ்சனமாலை. கடலேழும் வழங்கியது : காஞ்சன மாலை கடல்நீராடும் பொருட்டு மதுரையிலுள்ள ஒரு சிவதீர்த்தத்தில் எழு கடலும் வரும்படி செய்தருளியது. ஒரு வேலை - ஒரு வேற்படையை ; ஒரு சமுத்திரத்தை யென்பது வேறு பொருள். மகன் - உக்கிரகுமார பாண்டியர்; அவர் கடல் சுவற வேல்விட்டமையின், 'கடலை வறிதாக்கினீர்' என்றார். பவக்கடல் - பிறவிக் கடல்.

எழுகடலை மாமிக்கு ஈந்து, ஒரு கடலை மகனுக்கு ஈந்து, பூமிக்குள் கடலை வற்றச் செய்து, பவக்கடலையும் போக்கியதனால் கயல்கள் தாம் வாழ்தற் குரிய இடங்களைப் பெறுவாகி உம்மை யடைந்தன ; இது நியாயமே என்பது இச்செய்யுளின் கருத்து.

195. சொக்கநாதரைத் தரிசித்து மயலுழந்த தலைவியின் நிலைக்கு இரங்கித் தோழி கூறியது.

நீர் ஓடிய குறு வெயர்ப்பு ; வெயர்ப்பு - வேர்வை. நெருப்பு - வெம்மை. கண்ணீரோடு பீர் ஓடும் முலை ; பீர் - பசலை. குறையோடு நிறைந்த உயிரும். அன்று, ஏ : அசை நிலைகள்; தளை = தள்ளை - தாய் ; கட்டு. தள்ளையோடு தான் செல்லாத் தமியளென்றது தானே தனித்துச் சென்றாளென்றவாறு ; தாயோடு சென்றிருப்பின் இவை உண்டாதற்கு ஏது இராதென்பது குறிப்பு. (பி - ம்.) 'தன்னோடுந் தான்செல்லாத்'

(பதினான்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

196. தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர்
கொண்டதுந் தண்டமிழ் மதுரம்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்
பமரம்யாழ் மிழற்ற நறவுகொப் புளிக்கும்
பனிமலர்க் குழலியர் பளிக்குப்
பானிலா முன்றிற் றூநிலா முத்தின்
பந்தரிற் கண்ணிமை யாடா
தமரர்நா டியரோ டம்மனை யாட
ஐயநுண் ணுசுப்பள வலவென்
றமரரு மருளுந் தெளிதமிழ்க் கூடல்
அடலரா வலங்கல்வே ணியனே. (கூந)

---

196. முதல் இரண்டடியில் தமிழின் பெருமை கூறப்படும்.

(அடி, 1.) தமரம் - ஒலி. ஈன்றாள் - உமாதேவியார். சவுந்தரமாறன் - சுந்தரபாண்டியர்.

(2.) வழுதி உக்கிரன் - உக்கிர குமாரபாண்டியர். மதுரம் - இனிமை. கூட்டுண - கொள்ளை கொண்டுண்ண. கொழிதமிழ் : 386-8.

(3.) பமரம்=பிரமரம் - வண்டு. நறவு - தேன். குழலியர் - மதுரையி லுள்ள மகளிர். பால் போன்ற நிலா வீசும் முற்றத்தில்.

(3-4.) கண்ணிமையாடாது அம்மனையாடுதல் அவ்விளையாட்டில் அவர் களுக்கிருந்த ஊக்கத்தைப் புலப்படுத்தியது. அமரர் நாடியர் - தெய்வ மக ளிர். ஐயம் நுண் நுசுப்பளவு அல்ல - சந்தேகம் அவரது நுண்ணிய இடை யின் திறத்தில் மட்டும் அன்று ; உடலிலும் உண்டு. இயல்பாகவே இம்மக ளிருக்கு இடை உண்டோ இல்லையோவென்ற ஐயம் இருந்தது. இப்பொழுது இவர்கள் கண் இமையாதிருத்தலினாலும் பேரழகாலும் இவர் மேனிகள் தெய்வ மகளிர் மேனியை ஒப்பத் தோன்றுதலின், ‘ இவர் தெய்வமகளிரோ ’ என்னும் ஐயத்தை அவை உண்டாக்கின (470.) அராவாகிய அலங்கல்(485.)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

197. அடுத்தங் குலவாக் கோட்டைசுமந்
தளித்தி ரொருவற் கதுநிற்கத்
தொடுக்குங் கணைவே டனக்குலவாத்
தூணி கொடுத்தீர் போலுமால்
எடுக்குங் கணையைந் தெய்தகணை
எண்ணத் தொலையா வென்செய்கேன்
றிடுக்கங் கொளமால் சிலைமதனைச்
சினத்தீர் கடம்ப வனத்தீரே. (கூசு)

(எழுசீர்ச் சந்தவிருத்தம்)

198. கடமுடையு நறுநெய்க்குண் முழுகியெழு வதையொத்த
கரடமத கரிபெற்றொர் பிடியேபோல்
மடவநடை பயில்பச்சை மயிலையொரு புறம்வைத்த
மதுரையழ கியசொக்கர் வரைவேலோய்

---

197. தலைவி கூற்று.

உலவாக் கோட்டை - எடுக்க எடுக்கக் குறையாத நெற்கோட்டையை. ஒருவற்கு - அடியார்க்கு நல்லாரென்னும் ஒரு வேளாளருக்கு. உலவாக் கோட்டையருளிய திருவிளையாடற் செய்தி இது. கணைவேள் - அம்பை யுடைய மன்மதன். உலவாத்தூணி - எடுக்க எடுக்கக் குறையாத அம்பறுத் தூணி; தூணியென்பதற்கு நான்கு மரக்காலென்று வேறொரு பொருள் தோற் றியது. எடுக்கும் கணை ஐந்தாலும் எய்த கணையோ எண்ணத் தொலையா; ஆதலின், அவனுக்கு உலவாத் தூணியொன்று இருக்குமென்றும் அது தேவரீராற் கொடுக்கப்பட்டதென்றும் தோற்றுகின்றதென்றாள். மால் திடுக் கங்கொளல் - திடுக்கிடல். மதன் தம் பிள்ளையாதலின் திடுக்கிட்டார். சினந் தீரென்றது வனத்தீரே என்ற எதுகைக் கேற்ப வலித்தல் விகாரம் பெற்றது. நீர் காமனைச் சினந்தும் பயனில்லையென்பது குறிப்பு.

198. (சந்தக்குறிப்பு.) தனதனன தனனத்த தனதனன தனனத்த தனதனன தனனத்த தனதானா.

இது தலைவன் மடலேறுவேனென்றபொழுது தலைவியின் அவயவங் களைப் படத்தில் எழுதுதல் அரிதெனக் கூறித் தோழி தடுத்தது. இத்துறை எழுதரிதென்ன ஏந்தலை விலக்கலெனவும் வழங்கும்.

கடம் - குடம். கரடம் - மதச்சுவடு. கரி - விநாயகர். மடவநடை பயில் மயில்: 4. மடலேறத் துணிந்த தலைவன் தலைவியின் படத்தை எழுதிக் கைக் கொண்டு வருவதாகக் கூறினமையின் தோழி இது கூறினாள். நடை - தலைவி

நடையுமெழு துவைசிற்கு நிலையுமெழு துவைசொற்குள்
நலமுமெழு துவைசித்ர ரதிபோல்வாள்
இடையுமெழு துவைமுற்று மிலதொர்பொரு ளையுமொக்க
எழுதிலெவ ருனையொத்த பெயர்தாமே. (௬௫)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்).

199. மேதகைய பலகலைபோர்த் தறம்வளருந் தமிழ்க்கூடல்
விகிர்த கேண்மோ
ஏதமினின் றிருவுருவொன் றீருருவாய் நின்றதினும்
இறும்பூ தந்தோ
போதலர்பைந் துழாய்ப்படலைப் புயல்வண்ணத் தொருவனிரு
பூவை மார்க்குக்
காதலனும் மற்றுனக்கோர் காதலியாய் நிற்பதொரு
காட்சி தானே. (௬௬)

(நேரிசை வெண்பா)

200. காண்டகைய செல்வக் கடம்பவனத் தானந்த
தாண்டவஞ்செய் தாண்டவர்நீர் தாமன்றே—பூண்டடியர்
உள்ளத் திருப்பீரெம் முள்ளத்தை யும்முமதா
மெள்ளத் திருப்பீர் மிக. (௬௭)

---

யின் நடை. முழுதும் இல்லாததொரு பொருளை எழுதும் வல்லமை உனக்கு உளதானால் இவள் நடை முதலியவற்றை எழுத இயலும் என்றாள்; அவை எழுதுதற்கு அரியனவென்பது கருத்து. எழுதின், எழுதுவையெனஇயைக்க.

199. பல கலை போர்த்து - பலவகைக் கலைகளை உடையதாகி. போர்த்து என்ற சொற்கிடக்கையால் கலையென்பதற்கு ஆடையென்று ஒரு பொருள் தொனித்தது; "பலகலையும் பொதிமதுரை" (204) என்பர் பின். மதுரையிற் பல கலையிருத்தல்: 182. விகிர்த - வேறுபாடுடையோய்; இது பின் கூறும் செய்திகளுக் கேற்ப அமைந்த விளி. அர்த்தநாரீசுவர வடிவத்தையே திருவுருவொன்று ஈருருவாய் நின்றதென்றார் (535.) இறும்பூது - ஆச்சரியம். அந்தோ: வியப்பின்கட்குறிப்பு; 'ஐயோவென்பது உவகைக்கண் வந்தது' (திருச்சிற். 384, பேர்.) என்பதுபோல. புயல் வண்ணத் தொருவன் - திருமால். இரு பூவைமார் - திருமகளும் நிலமகளும். காதலி - மனைவி. திருமாலைச் சிவபெருமானுக்குரிய சக்தியாகக் கூறுதல் மரபு; "அரியலாற் றேவி யில்லை யையனை யாற னூர்க்கே" (தே. திருநா.)

200. ஆனந்த தாண்டவம் - பதஞ்சலி முனிவருக்காகச் செய்தருளிய சொக்கத் தாண்டவம் (திருவால. ரு : 5.) செய்து ஆண்டவர். பூண்டு - அன்பு பூண்டு. உள்ளத்து இருப்பீர். மெள்ளத் திருப்புவீராக; "பாசநெஞ்சை, மடைமாறி யுன்றன் றிருவடிக் கேவர வைத்தருளே" (திருவரங்கத்துமாலை, 108.)

(கட்டளைக் கலித்துறை)

201. மிக்கார் முகத்தருள் கூடற் பிரான்விட நாண்டுவக்காக்
கைக்கார் முகத்தன்ன தேர்வல வாகை பரந்துசெலும்
இக்கார் முகக்க வெழுந்தகொல் லாமெம தாவியென்னத்
தக்கார் முகத்தடங் கண்ணீ ருகாந்த சலதியையே. (கூஅ)

(எழுசீர்ச் சந்தவிருத்தம்)

202. சலராசி தங்கு கணையேவு மொய்ம்பர் சரணார விந்த மிசையே
மலராகி டந்த நயனார விந்தர் மதுரேசர் முன்பு புகலார்
சிலராவி யின்றி யுடலேசு மந்து திரிவார்கள் வெந்து விழவே
புலராத கங்கு லிடையேயொ ரங்கி புகையாது நின்றெ ரிவதே.

---

201. வினைமுற்றி மீளும் தலைமகன் இடைச்சுரத்தில் தேர்ப்பாகனோடு கூறியது.

மிக்கார் முகத்து - அறிவின் மிக்கார் திறத்தில். பிரானது கார்முகம். விடநாண் துவக்கா - விடத்தையுடைய பாம்பாகிய நாணால் கட்டப்படாத. கைக் கார்முகம் - கையிலுள்ள வில்; மேருமலை; இது தேருக்கு உவமை. வலவா - பாகனே. கை பரந்து - பக்கத்திற் பரவி. இ கார் - இந்த மேகங்கள்; எழுவாய். எமது ஆவியென்னத் தக்காரென்றது தலைவியை. முகத்திலுள்ள பெரிய கண்களிலிருந்து வரும் நீராகிய யுகாந்தகாலத்துக் கடலை. சலதியை முகக்க எழுந்தகொல்லாம்; எழுந்தகொல்லாம் - எழுந்தன போலும். என்னுடைய பிரிவினால் வருந்தும் தலைவி இம்மேகங்களைக் காணின் கார்ப்பருவம் வந்தபின்பும் தலைவர் வரவில்லை யென்றெண்ணி மிக அழுவாளென்பது கருத்து. நீ விரைவாகத் தேரைச் செலுத்துகவென்பது எச்சம்.

202. (சந்தக்குழிப்பு.) தனதான தந்த தனதான தந்த தனதான தந்த தனனா.

- தலைவி கூற்று. யாரேனும் தலைவரிடம் தூதுபோதல் வேண்டுமென்று புலப்படுத்துகின்றாள்.

சலராசி தங்கு கணை - பாற்கடலில் தங்கும் திருமாலாகிய அம்பு. மொய்ம்பர் - வலியையுடையவர். சரணார விந்தமிசையே மலராகிடு அந்த நயனாரவிந்தர் - திருவடியின்கண் மலராக அமைந்த அந்தத் திருமாலின் விழியையுடையவர். (பி - ம்,) 'நயனாரவிந்த மதுரேசர்' திரிவார்களாகிய சிலர். ஓர் அங்கி யென்றது சந்திரனை (189); "வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே யெழுந்த வெண்ணெருப்பே" (கம்ப. மிதிலைக்.76.)

(*பதினான்கு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

203. தேன்வ ழங்குக டுக்கை யார்கரு மான்வ ழங்குமு டுக்கையார்
திருவி ருந்தவி டத்தி னாரருள் கருவி ருந்தந டத்தினார்
மான டங்கிய வங்கை யார்சடைக் கான டங்கிய கங்கையார்
வைகை யொன்றிய கூட லாரிவள் செய்கை யொன்றையு நாடலார்
கான வேயிசை கொல்லு மாலுற வான வாய்வசை சொல்லுமால்
கன்றி யன்றிலி ரங்கு மாலுயிர் தின்று தென்றலெ ருங்குமால்
தீநி லாவனல் சிந்து மாற்கொல வேனி லான்மெல முந்துமால்
தினமி டைந்திடை நொந்த போன்மகண் மனமு டைந்துது ணர்ந்துமே.

ஊர்

(அறுசீர்ச் சந்தவிருத்தம்)

204. உடையதொர் பெண்கொடி திருமுக மண்டலம்
ஒழுகுபெ ருங்கருணைக்
கடலுத வுஞ்சில கயல்பொரு மொய்ம்புள
கடவுணெ டும்பதியாம்

---

203. (பி - ம்.) * சந்தத் தாழிசை.

தோழிகூற்று; செவிலி கூற்றுமாம்.

கடுக்கையர் - கொன்றைமாலையை அணிந்தவர். கருமான் - யானை. உடுக்கை - உடை; இங்கே போர்வை. திரு - உமாதேவியார்; "அறந்தந்த பொன்", "மின்னுழை மருங்குற் பொன்" (120, 206) என்றும் கூறுதல் காண்க. இடத்தினார் - இடப்பாகத்தை உடையவர். நடம் - சொக்கத் தாண்டவம். சிவபெருமான் ஆன்மாக்களை உய்யக்கொள்ளும் பொருட்டுப் பஞ்ச கிருத்திய நடனம் புரிதலின், அருள் கருவிருந்த நடத்தினாரென்றாள். மான் - மான்கன்று. சடைக்கான் - சடையாகிய காட்டில். கூடலார் - மதுரையை யுடையவர். இவளென்றது தலைவியை. கானவேயின் இசை; வேய் - வேய்ங்குழல். உறவான ஆய் - அன்புடைய நற்றாய்; உறவான வாயெனப் பிரித்து, நட்புடையோர் வாய்களென்று பொருள் கொள்ளுதலும் ஆம். (பி . ம்.) 'உறவான வேய்' கன்றி - வருந்தி. தீ நிலா: 202. வேனி லான் - காமன். தினம் இடைந்து இடை நொந்தபோல் - நாள்தோறும் மெலிந்து இடையானது நொந்ததுபோல. மனம் உடைந்தது - உள்ளம் உருகி யது. (பி - ம்.) 'மன மிடைந்தது'

204. (சந்தக் குழிப்பு.) தனதன தந்தன தனதன தந்தன தனதன தந்தனனா.

பெண்கொடி - அங்கயற்கணம்மை. கருணைக் கடலை உதவும் கயல்; சில கயல்; சில - இரண்டு; கயலென்றது கண்களை. மொய்ம்பு - தோள்.

புடைகொள் கருங்கலை புனைபவள் வெண்கலை
புனையுமோர் பெண்கொடியா
வடகலை தென்கலை பலகலை யும்பொலி
மதுரைவ ளம்பதியே. (௨௦௪)

(பதினான்கு சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

205 வள்ளைவாய் கிழித்துக் குமிழ்மறிந் தமர்த்த
மதரரிக் கண்ணியு நீயும்
மழலைநா றமுதக் குமுதவாய்க் குழவி
மடித்தலத் திருத்திமுத் தாடி
உள்ளநெக் குருக வுவந்துமோந் தணைத்தாங்
குகந்தனி ரிருத்திரா லுலகம்
ஒருங்குவாய்த் தீருக் கொருதலைக் காமம்
உற்றவா வென்கொலோ வுரையாய்
வெள்ளிவெண் ணிலவு விரித்தகோ டீரம்
வெஞ்சுடர்க் கடவுளுங் கிடைத்து
வீற்றிருந் தனைய விடுசுடர் மகுட
மீக்கொளூஉத் தாக்கணங் கனையார்

---

புடைகொள் - பக்கத்திலே கொண்ட. கருங்கலை - கரிய ஆடை; என்றது கடலை. அதனைப் புனைபவள் நிலமகள். வெண்கலை புனையும் ஓர் பெண்கொடியா - புகழாகிய வெள்ளாடையை அணியும் ஒரு பெண்கொடி யாகும்படி; உலகமுழுதும் புகழ் பரவவென்பது கருத்து; நிலமகள் கலைமகளைப் போலத் தோற்றும்படி யென்பது வேறுபொருள். (பி - ம்.) 'பெண் கொடியாம்', 'பலகலையும் பொலி' மதுரைவளம்பதி கடவுளின் நெடும்பதி ஆகும் என்க.

205. (அடி, 1.) வள்ளை: காது. குமிழ்: நாசி. கண்ணி - கண்ணை யுடையவள்; உமாதேவியார். குழவியை மடித்தலத்தில் இருத்தி; குழவி - முருகக்கடவுள். முத்தாடி - முத்தமிட்டு.

(2.) (பி - ம்.) 'எடுத்து மோந்து' அணைத்து ஆங்கு. வாய்த்திருக்கு - பெற்றவர்களாகிய உங்களுக்கு. ஒரு தலைக் காமம் - பட்சபாதம். உற்றவா - உண்டானவிதம். உலகமெல்லாம் பெற்ற உங்களுக்கு உலகத்தி லுள்ளோர் யாவரும் பிள்ளைகளாயிருப்பவும், முருகக்கடவுளைமட்டும் மடியி லிருத்திப் பாராட்டுதல் பட்சபாதமன்றோ வென்றார் (671.) சிவபெருமானும் உமாதேவியாரும் முருகக் கடவுளைப் பாராட்டுதல்: 313, 450, 601.

(3.) வெள்ளி வெண்ணிலவு - மிக்க வெண்மையையுடைய நிலவு; "வெள்ளி வெண்கடல்" (கம்ப. வீடண. 133.) கோடீரம் - சடையை. வெஞ்சுடர்க்கடவுளும் - சூரியனும். கிடைத்து - அணுகி. மகுடத்திற்குச் சூரியன்

கள்ளவாட் கருங்கண் ணேறுகாத் திட்ட
காப்பென வேப்பலர் மிலேச்சும்
கைதவக் களிறே செய்தவக் கூடற்
கண் ணுதற் கடவுண்மா மணியே. (கoஉ)

(நேரிசை யாசிரியப்பா)

206. கட்புலங் கதுவாது செவிப்புலம் புக்கு
மனனிடைத் துஞ்சி வாயிடைப் போந்து
செந்நா முற்றத்து நன்னடம் புரியும்
பலவேறு வன்னத் தொருபரி யுகைத்தோய்
௫ புட்கொடி யெடுத்தொரு பூங்கொடி தன்னொடு
மட்கொடி தாழ்ந்த வான்கொடி யுயர்த்தோய்
ஓரே ழாழி சீர்பெறப் பூண்டு
முடவுப் படத்த சுடிகையுட் கிடந்து
நெடுநிலை பெயரா நிலைத்தே ரூர்ந்தோய்

---

உவமை : "திருமுகத் திருக்கண் ணுகிச் சேர்ந்துறை நம்மு ணியே, சுருதிசொ லெகினங் காணுச் சுடர்முடி யுற்று வாழ்ந்தாய், ஒருவற வினியான் வாழ்வ லென்றெரு மதியைத் தள்ளி, மருவுசெங் கதிருற் றென்ன மாணிக்க மகுடஞ் சூடி" (தியாகராச. ௧: 12.) மகுடத்தின்மேலே. தாக்கணங்கனையார் - தீண்டி வருத்தும் தெய்வத்தைப் போன்ற மகளிர்.

(4.) கண்ணேறு - திருஷ்டிதோஷம். வேப்பலர் - வேம்பினது பூவை. கண்ணேறு படாதபடி வேம்பின் பூவைச் சூடுதல் வழக்கம். கைதவக்களிறு - பாண்டியர்களுள் ஆண்யானை போன்றவர் ; கைதவன் - பாண்டியன்.

206. (அடி, 1-4.) கட்புலம் கதுவாது - கண்ணுற் பார்த்தற்கு இயலாமல்; வேதம் எழுதாக்கிளவியென்பதை விளக்கியபடி. செவிப்புலம் புக்கு - கேள்வி யளவாக நின்று ; சுருதி யென்னும் பெயர்ப்பொருளை உணர்த்தியபடி. மன னிடைத் துஞ்சி - மனத்தில் நிலைபெற்று ; "மனவட்ட மிடுஞ்சுருதி வயப் பரி" (105) என்றார் முன்னும். வன்னம் - எழுத்து ; நிறமென்பது வேறு பொருள். ஒரு பரி - வேதமாகிய குதிரை.

(5-6) புட்கொடி - கருடக்கொடி. பூங்கொடி - திருமகள். மட்கொடி - நிலமகள். தாழ்ந்த - தன்பால் தங்கப்பெற்ற. வான்கொடி - திருமாலாகிய பெருமையையுடைய கொடியை ; "புட்கொடியைக் கொண்டு பொறிக் கொடிமார் மிற்கொண்மரைக், கட்கொடி" (திருவிளை. உ௰, 143.)

(7-9.) ஆழி -கடல் ; சக்கரமென்பது வேறு பொருள். சுடிகை - முடி. முடவுப்படத்த சுடிகை - ஆதிசேடனது முடி. நிலைத்தேர் - பூமியாகிய ஓடாத தேர். ஏழு சக்கரங்களைப் பெற்றும் ஓடாத நிலைத்தேரை ஊர்ந்தோ யென்று பொருள்படுவது ஒருநயம்.

௧௦ மீனவர் பெருமான் மானவேல் பிழைத்தாங்
கெழுபெருங் கடலு மொருவழிக் கிடந்தென
விண்ணின் றிறங்குபு விரிதிரை மேய்ந்த
கொண்மூக் குழும்பு கொலைமதக் களிற்றொடும்
வேற்றுமை தெரியாது மின்னுக்கொடி வளைத்தாங்

௧௫ காற்றல்கொ டுற்றபா கலைத்தனர் பற்றத்
திரியமற் றெம்மைத் தீச்சிறை படுக்கெனப்
பருதிவே லுழவன் பணித்தனன் கொல்லென
மெய்விதிர்த் தலறுபு வெரீஇப்பெயர்ந் தம்ம
பெய்முறை வாரிப் பெரும்பெய லல்ல

௨௦ நெய்பா றயிர்முதற் பல்பெய றலைஇப்
பெருவளஞ் சுரந்த விரிதமிழ்க் கூடல்
இருநில மடந்தைக் கொருமுடி கவித்தாங்
கிந்திர னமைத்த சுந்தர விமானத்
தருள்சூற் கொண்ட வரியிளங் கயற்கண்

௨௫ மின்னுழை மருங்குற் பொன்னொடும் பொலிந்தோய்

---

(10-21.) மீனவர் பெருமான் - உக்கிரகுமாரபாண்டியர். பிழைத்து - தப்பி. கிடந்தன - கிடந்தனவென்று கருதி. கடல் சுவற வேல் விட்ட உக்கிர குமார பாண்டியருடைய வேலுக்குத் தப்பி ஏழுகடல்களும் ஓரிடத்திற் கிடந் தனவென்று கருதி; விரிதிரை - விரிந்த திரையையுடைய அகழி. கொண் மூக் குழும்பு - மேகக் கூட்டம்; குழும்பு - கூட்டம்; "களிற்றுக் குழும்பு" (மதுரைக். 24.) (பி - ம்.) 'கொண்மூக் குறும்பு', 'கொண்மூக் குழுமலைக்' யானைப் பாகர் நீருண்ண வந்த மேகங்களை யானையென்றெண்ணி மின்ன லைக் கொண்டு கட்டினர் (341.) பாகு - பாகர். திரிய - மீண்டும் (386.) (பி-ம்.) 'திரியும்' மற்று: அசைநிலை. தீச்சிறை - மிக்க துன்பத்தைத் தரும் சிறை யில். பருதி வேலுழவன் - உக்கிரகுமார பாண்டியர். விதிர்த்து - நடுங்கி. தம்மைப் பாகர் பிடித்த காலத்தில், முன் தம்மைத் தளை செய்த பாண்டியன் மீட்டும் இவர்களை விட்டுச் சிறைசெய்வித்தான் போலும் என்று அஞ்சி அவன் சினம் மாறவேண்டுமென்று கருதி நீரைச் சொரிதலோடு நெய் பால் தயிர் முதலியவற்றையும் பெய்தன. வாரி - நீர். (பி - ம்.) 'பெயும் பெயல்' பல் பெயல் தலைஇ - பல மழையைப் பெய்து.

(22-5.) இந்திர விமானம் நிலமகளின் முடிபோல் விளங்குகின்றது. நுழை மருங்குல் - நுண்ணிய இடை. பொன் : 120.

துரியங் கடந்த துவாத சாந்தப்
பெருவெளி வளாகத் தொருபெருங் கோயிலுள்
முளையின்று முளைத்த மூல லிங்கத்
தளவையி னளவா வானந்த மாக்கடல்
௩௦ நின்பெருந் தன்மையை நிகழ்த்துதும் யாமென
மன்பெருஞ் சிறப்பின் மதிநலங் கொளினே
பேதைமைப் பாலரே பெரிது மாதோ
வேத புருடனும் விராட்புரு டனுமே
இனையநின் றன்மைமற் றெம்ம னோரும்
௩௫ நினையவுஞ் சிலசொற் புனையவும் புரிதலின்
வாழிய பெருமநின் றகவே
வாழியெம் மனனு மணிநா வும்மே. (க௦௩)

**மதுரைக் கலம்பகம்**

முற்றிற்று.



---

(26-9.) வளாகம் - பரப்பு. மூலலிங்கம்: 140. அளவை - பிரமாணம் (601.) கடல்: விளி. கடலாகிய நின் (30) என்று கூட்டுதலும் ஆம்.

(30-33.) மன் பெருஞ் சிறப்பின் - தம்பால் நிலை பெற்ற பெரிய சிறப் பினால். (பி - ம்.) 'சிறப்பிற்றம்' வேதபுருடனும் விராட்புருடனும் பேதைமைப் பாலர்; அவர்களால் நின் தன்மை நிகழ்த்துதற்கு அரிதென்றபடி; 467.

(34-7.) புரிதலின் - விரும்பி அருள் செய்தலின். (பி - ம்.) 'வாழியெம் பெரும' தகவு - தகுதி; சிறப்பு. வேதபுருடன் முதலியோருக்கும் சொல்லு தற்கு அரிய நின் பெருமையை எம்மனோர் பாடுவது எம் ஆற்றலால் அன்று; நின் தகவினால் அமைந்தது அது; ஆதலின் நின் தகவு வாழ்க. நின் பெருமையை நினைத்தற்குக் கருவியாகிய மனமும் பாடுதற்குக் கருவி யாகிய நாவும் வாழி; "வாழியவன் சீர்பாடும் வாய்" (491.)

# நீதிநெறி விளக்கம்

## காப்பு

207. நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்

நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்

எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே

வழுத்தாத தெம்பிரான் மன்று. (க)

## நூல்

208. அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்

புறங்கடை நல்லிசையு நாட்டும் - உறுங்கவலொன்

---

207. இச்செய்யுள் இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற சிதம்பரச் செய்யுட் கோவையிலும் சேர்க்கப் பெற்றிருக்கின்றது ; 490.

இதன்பால் இளமை, செல்வம், யாக்கை யென்பவற்றின் நிலையாமை கூறப்படும்.

நீரிற் குமிழி நிலையாமைக்கு உவமை ; "படுமழை மொக்குளிற் பல்கா லுந் தோன்றிக், கெடுமிதோர் யாக்கை" (நாலடி. 27.) நீரில் எழுத்தாகும் யாக்கை : "நீரெழுத்துக் கொத்தவுடல்" (601.) நமரங்காள் - நம்மவர்களே ; அம் : சாரியை (507, 521,564.) எம்பிரானது மன்றை : மன்று - சிற்றம் பலம்.

எல்லோரும் எளிதில் அறியும் பொருட்டு, இளமை முதலியவற்றிற்கு நீரில் தோன்றுவனவாகிய குமிழி முதலிய ஓரினப் பொருள்களையே உவமை கூறியது அறியத்தக்கது ; இதனை மரபுவமையென்பர் மாறனலங்கார முடையார் (சூ. 105.)

208. இதுமுதல் எட்டுச் செய்யுட்களால் கல்வியின் இயல்பு கூறப்படும்.

இச்செய்யுளிற் கல்வியின் பயன் கூறப்படும்.

வீட்டின் சிறப்பை நோக்கி 'வீடும்' என அதனைத் தனியே உம்மை கொடுத்துப் பிரித்துக் கூறினர். புறங்கடை - கடைப்புறம் ; வாயிற்புறத்தில் ; இஃது இலக்கணப்போலி (271.) (பி - ம்.) 'நல்லிசையா' கவல் உற்றுழி

றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. (௨)

209. தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது. (௩)

210. கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் - சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமு முண்டு சிலர்க்கு. (௪)

---

யும் - கவலை வந்த விடத்தும்; கவல் - கவலை; முதனிலைத் தொழிற் பெயர் (மணி. பதிகம், 52.) கை கொடுக்கும் - துணை புரியும். கல்வியின் ஊங்கு - கல்வியைக்காட்டிலும் சிறப்பாக; ஊங்கு - மிகுதி. ஊங்குத் துணை இல்லை. உயிரை அணுவென்னும் மரபுபற்றிச் சிற்றுயிரென்றார்.

209. கல்வியின் உயர்வும் காமத்தின் இழிவும் கூறப்படும்.

கல்வி : எழுவாய். மடம் கொன்று - அறியாமையை ஒழித்து. அறிவு அகற்றும் - அறிவை விரிவு படுத்தும்; "அறிவகற்றும், ஆகலூ மூற்றக் கடை" (குறள், 372); "காடுகண் ணகற்றிய வுதியஞ் சேரல்" (அகநா. கரு: 5.) சின்னீர இன்பம்: சின்மை காலச்சிறுமையைக் குறித்தது. இன்பத்தின் - இன்பத்தைக் காட்டிலும். முற்றிழாய் : மகடூஉ முன்னிலை; நீதிநூல் செய்யும் ஆசிரியர் மகடூஉவை முன்னிலைப்படுத்திக் கூறுதல் மரபு (மகடூஉ - பெண்); நாலடியார் முதலியவற்றிற் பார்க்க. பீழை - துன்பம்: பீடையென்னும் வடமொழிச் சிதைவு; நாடிகா வென்றது நாழிகை யென்று வந்தாற்போல.

ஆதலின் காம இன்பத்தினும் கல்வியின்பமே கோடற்குரிய தென்றவாறு.

210. கல்வி, கவித்துவம், பாடங்கூறும் வன்மை, சொல்வன்மை என்பன ஒன்றைக் காட்டிலும் ஒன்று சிறப்புடையனவென்று கூறுகின்றார்.

கற்புடைப் பெண்டிரென்றார் எழுமையும் தொடர்ந்துவருதலின்; பெண்டிர் - மனைவி; கல்வியைப் பெண்டிராக்கியது அதற்குரிய வடசொல்லாகிய வித்யாவென்பது பெண்பாற் சொல்லாதல் பற்றி; "நாணென்னும் நல்லாள்" (குறள், 924) என்பதனாலும் அதனுரையாலும் இத்தகைய வழக்கை அறிக. ஈர்ங்கவி - ஈரமுடைய கவி; ஈரம் - இங்கே இன்பம். சொல்வளம் - தாம் கற்றறிந்தவற்றைப் பிறருக்குச் சொல்லும் சிறப்பு; என்றது பாடங் கூறுதலை. மல்லல் - வளப்பம். வெறுக்கை - செல்வம். மாண் அவை - மாட்சிமிக்க சபை; என்பது நல்லவை, நிறையவைகளை; அவற்றின் இலக்கணம், "ஆறுட் பகைசெற் றருங்கலை யோர்ந்து, பாரிற் கீர்த்தி படைத்

211. எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும் - உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னாகு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து. (௫)

212. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும் - நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. (௬)

---

தோர் வைகுதல், நல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை, சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ, வல்லார் மொழியினும் வல்லுந ராக்கிக், கேட்போ ருறையவை நிறையவை யாகும்" (இ - வி. 936) என்பதனால் விளங்கும். மண்ணுறுத்துஞ் செல்வம் - அழகுறச் செய்யும் சொல்வன்மையாகிய செல்வம். சொல்வள மென்றது அறிய விரும்பியவருக்கு உரைக்கும் வன்மை; பின்னர்க்கூறியது அறிஞர்கள் நிறைந்த அவையிற் பேசும் வன்மையை. செல்வமும்: உம்மை, உயர்வு சிறப்பு.

211. இதனாற் சொல்வன்மையின் சிறப்புக் கூறுகின்றார்.

கல்வி பலவகைப்படுதலின் எத்துணையவெனப் பன்மையாற் கூறினார். இடமறிந்து - நூல்களில் நுண்மையும் பொருளாழமும் உடைய இடங்களை அறிந்து. உய்த்துணர்வு - மதி நுட்பத்தால் ஆராய்ந்து அறிதல். இல் ஆகும் - கல்வியின் பயன் இல்லையாகும். கல்வியும் உய்த்துணர்வும் ஒருங்கு வேண்டு மென்கிறார்; "மதிநுட்ப நூலோ டுடையார்" (குறள், 636) என்றார் திருவள்ளுவரும். சொல் வன்மை - தாம் கற்றவற்றைப் பிறர் அறியும் வண்ணம் கூறும் திறமை. இன்றெனின் என் ஆகும் - இல்லையானால் அவ்வுய்த்துணரும் திறமையும் என்ன பயனை யுடையதாகும்? (பி - ம்.) 'என்னும்' பொன்மலர் நாற்றம் உடைத்து - அச்சொல்வன்மை நறுமணத்தைப் பெற்ற பொன்மலரைப்போன்ற தன்மையை உடையது; யாவற்றினும் சிறந்ததென்றபடி.

212. இன்னது இன்னாரிடத்தில் இருந்தும் பயனில்லையென்று கூறுகின்றார்.

மெய் விதிர்ப்பார் - உடல் நடுங்குவார். ஆகுலச் சொல் - பொருளற்றனவான ஆரவாரச் சொற்கள். நவை அஞ்சி - செய்யத் தக்கவற்றைச் செய்யாமையாகிய குற்றம் நேர்தலை அஞ்சி. ஈத்துண்ணார் - பிறருக்கு அளித்து எஞ்சியவற்றை உண்ணாதவர். ஈத்தென்றது உண்ணாரென்பதன் முதனிலையோடு முடிந்தது. இல் நலம் - இல் வாழ்க்கையின் நன்மை. பூத்தலிற் பூவாமை நன்று - உண்டாதலைக் காட்டிலும் இல்லாதிருத்தல் நன்று,

213. கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் – மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு. (எ)

214. நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி - கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால். (அ)

---

213. புலவர் பெருமை கூறப்படும்.

முகமென்றது நாவை. மலரவன் - பிரமன். வண் தமிழோர் - நூற்செல்வத்தைப் பிறர்க்கு உதவும் வண்மையையுடைய தமிழ்ப்புலவர். வெற்றுடம்பு - உயிர் நீப்பின் தனக்கென ஒரு பெருமையும் இல்லாத உடம்பு. இவர் செய்யும் உடம்பென்றது நூல்களை; "எழுவகைத் தாதுவி னுயிர்க்குடல் போற் பல, சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின், வல்லோ ரணிபெறச் செய்வது செய்யுள்" என்று நன்னூலார் புலவரது படைப்பை உடலோ டொப்பிடுதல் இங்கே நினைத்தற்குரியது. பிரமனைக்காட்டிலும் புலவர் தம் நெஞ்சிற்கு அணியராதலின் இவரெனச் சுட்டினர். மாயாவென்றது நிலை பெறுமென்னும் பொருளில் நின்றது. புகழ் கொண்டு நிலைபெறு மென்றவாறு.

புலவர்களைப் போலவே கலைமகளைத் தன்பாற் பெற்ற பிரமனது படைப்பு, புகழைப் பெறுமலே அழிந்து விடும்; புலவர்படைப்போ புகழைப் பெறுதலோடு அழியாமலும் நிற்குமென்றார்.

இது வேற்றுமையணி.

214. சொல்வன்மையில்லாரது கல்வி பயனின்றென்று கூறுகின்றார்.
நெடும்பகற் கற்ற - பல நாட்கள் கற்றனவாகி. அவையம் - அறிஞர் சபை. உதவாது - சொல்லுதற்குப் பயன்படாமல். உடைந்துளார் - பின்னடைந்தோர். உட்குவரும் - அச்சத்தைத் தரும். கல்வி யுடையாரது இயல்பைக் கல்வியின்மே லேற்றிக் கூறினர். கடும்பகல்-யாவரும் காணலாகும் பகலில்; 'பட்டப்பகலில்' என்னும் வழக்கறிக. ஏதிலான் - அயலான். இல் - இல்லாள். தீதென்று நீப்பரிது - அம்மனைவி உதவாளென்று அகற்றி விடுதலைப் போலக் கல்வி தீயதென்று நீத்தல் அரிது; ஆதலின் அவளைக் காட்டிலும் பொல்லாதென்றார். கற்ற கல்வி பிறவிதோறும் தொடருமாதலின் நீப்பரிதாயிற்று.

215. வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல் - கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல். (கூ)

216. எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம் – மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல். (கo)

217. இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா - என்சொலினும்

---

215. புதியவற்றைக் கற்றலினும் கற்றவற்றைப் பாதுகாத்தல் சிறந்த தென்பர்.

ஓம்பாது - சிந்தித்தல் முதலியவற்றாற் பாதுகாவாமல். பரிந்து - வருந்தி. கருந்தனம் - பெரும்பொருள். கைத்தலத்தனவாகிய கருந்தனத்தை; கருமை - பெருமை. உய்த்துச் சொரிந்திட்டு - மதியாமற் போகவிட்டுவிட்டு. அரிப்பரித்தல் - கடைவீதி முதலிய இடங்களில் உள்ள புழுதியை ஏதேனும் சிறு பொருள் கிடைப்பது கருதிப் பல நேரம் கொழித்தல்; இதனைச் செய்வார் அரிப்பரென்று வழங்கப்படுவர். எய்த்து - வருந்தி. "மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை" (முதுமொழிக். க : 3); "படியில் கல்வி விரும்பினேன் பாடம் போற்று மதுபோல" (பிரபு. மாயையுற்பத்தி. 49.)

216. இதனால் வறுமையாளர் கல்வி சிறப்படையா தென்கிறார்.

எனைத்துணையவேனும் - எவ்வளவு பெருக்கத்தை உடையனவாயினும். இலம்பாட்டார் - வறுமையை யுடையார். சீர்ப்பாடு - சிறப்புண்டாதல்; "வறுமையிற் கல்வி போலப், புலப்படா மருங்கு னல்லார்" (திருவிளை. ச : 58.) மனைத்தக்காள் - மனைவி; மாண்பு - நற்குண நற்செய்கை; "மனைத்தக்க மாண்புடைய ளாகி" (குறள், 51.) மணமகன் - அம்மனைவியின் கணவன். நல்லறம் பூண்ட - மேற்கொண்டனவாகிய நல்லறங்கள். புலப்படா போல் - வெளிப்படாமைபோல.

217. பொருளின்பால் உலகத்தாருக்குள்ள மதிப்பைக் கூறுகின்றார்.

தாழ்நடையன் - பணிந்த ஒழுக்கத்தை யுடையவன். வன்சொல்லின் அல்லது வாய் திறவா - வன் சொல்லைக் கூறுவதன்றிப் பிற சொற்களைக் கூற வாயைத் திறவா; ஞாலம் திறவா; ஞாலம் - உலகத்தில் உள்ள உயிர்கள்: ஆகுபெயர். என் சொலினும் - எத்தகைய கடுஞ்சொற்களைக் கூறினும். கைத்துடையான் - பொருளுடையவனது. காற்கீழ் ஒதுங்கும்: அடிமைத்

கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற. (கக)

218. இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப - பெரிதுந்தாம்
முற்பக னோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று. (கஉ)

219. கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம் - முற்ற

---

தொழில் செய்வர் என்றபடி. முன்னர்ப் பொருளில்லாதவனை இன்சொல்லன் தாழ்நடையனென்று கூறியவற்றிற்கு மறுதலையாக இங்கே கைத்துடையானுக்கு வன்சொல்லன் மீதூர்ந்த நடையினனுயினும் என்பவற்றை வருவித்துப் பொருளுரைக்க. ஞாலமே பித்துடைய : பிற பித்துடையவல்ல; பிற - பித்துடையனவாகக் கருதப்படும் பிற உயிர்கள்; "கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும், அவையல்ல நல்ல மரங்கள் - சவைநடுவே, நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய, மாட்டா தவனன் மரம்" என்றது இங்கே நினைவுக்கு வருகின்றது. இரண்டாவது பொருள் : பித்துடைய அல்ல - நல்ல அறிவுடையனவே; என்றது புகழ்வது போலப் பழித்தபடி. இப்பொருளுக்குப் பிறவென்பதை அசைநிலையாகக் கொள்க.

218. உலோபியராயினும் செல்வரை உலகம் பாராட்டு மென்பர்.

இவறன்மை - உலோபத்தை. உடையாரை - பொருளுடையவரை. குறையிரந்தும் - தாமே வலியச் சென்று இரந்தும். குற்றேவல் - சிறிய ஏவல்களை. அவர் வேண்டாமே தாமே சென்று ஏவல் புரிவர் ; நாலடி. 337. 'இஃது அறியாமை யல்லவா ?' என்று கேட்போருக்கு விடையிறுப்பார் போன்று அதற்கு ஒரு காரணம் கற்பிக்கின்றார் ஆசிரியர். முற்பகல் நோலாதார் - முற்பிறவிகளில் தவஞ்செய்யாதார் ; முற்பகல் - முன்னாள் : இங்கே முற்பிறவியைக் குறித்தது ; பகல் : ஆகுபெயர். முற்பிறப்பில் தவஞ்செய்யாதார், செல்வமின்றி இப்பிறப்பில் வறியராயினவர். நோற்றார் - இப்பிறப்பில் செல்வம் பெறுவதற்கேற்ற தவத்தை முற்பிறப்பிற் செய்தவர். "இலர்பலராகிய காரண நோற்பார், சிலர்பலர் நோலா தவர்" (குறள், 270.) கற்பு அன்றே - கல்வியறிவு அன்றோ ? தவம் புரிந்தாரைத் தவம் புரியார் வழிபடல் கல்வியறிவின் பயனன்றோ வென்றபடி. இங்ஙனம் இருப்பவும் இதனைக் கல்லாமையின் பயனென்று கூறுதல் பிழையென்றார்.

இஃது உலோபியரைப் புகழ்வதுபோலப் பழித்தபடி.

219. கல்வியழகே அழகென்கிறார்.

கல்வி நலன் - கல்வியாகிய அழகு. முழுமணிப்பூண் - முற்றும் மணிகளால் அமைக்கப்பட்ட ஆபரணம். "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டு

முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். (கங)

220. முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க - சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னல். (கச)

221. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க - தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று. (கரு)

222. கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும் - இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். (கசா)

---

முகும், மஞ்ச ளழகு மழகல்ல - நெஞ்சத்து, நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற், கல்வி யழகே யழகு" (நாலடி. 131.)

220. கல்விச் செருக்கு ஆகாதென்கிறார்.

களியற்க - செருக்கு அடைதலை ஒழிக. கொல் உலைக் கூடத்தினல் - கொல்லனது உலைக்களத்திலுள்ள சம்மட்டியால். (பி - ம்.) 'கல்லுத் தகரும்' பின் இரண்டடிகள் ஒட்டணி. பெரிய கல்வியுடையாரும் சிறிய கல்வியுடையாரால் தோல்வியுறுவரென்பது குறிப்பு; "சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க், கச்சாணி யன்னதோர் சொல்" (அறநெறிச். 43.)

221. செல்வருக்குத் திருப்தியும், கல்வியுடையாருக்கு மேன்மேலுங் கற்றல் வேண்டுமென்னும் ஆர்வமும் வேண்டுமென்று இதனாற் கூறுவர்.

தம்மின் மெலியாரை - தம்மைக் காட்டிலும் செல்வத்தில் தாழ்ந்தவர்களை. அம்மா: வியப்பிடைச்சொல். கருத்து அழிக - உள்ளம் உடைக. (பி - ம்.) 'கற்ற வெல்லாம்' எற்றே - எவ்வளவு தாழ்ந்தது. இவர்க்கு - இவர் கற்றவற்றிற்கு. நாம் கற்றதெல்லாம் எற்றேயென்று இயைக்க. என்று கருத்தழிக.

222. கற்றோரும் செல்வரும் வணக்க முடையராதல் வேண்டுமென்று கூறுவர்.

இல்லார் - கல்வியும் செல்வமும் இல்லாதார். தம் முன்னர் - கற்றோரும் செல்வருமாகிய தங்களுக்கு முன். நிற்பபோல - நிற்றலைப்போல. தாமும்; உம்மை எச்சப் பொருளது. வணங்குவதற்கு உபாயம் கூறியபடி. "அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்" (வெற்றிவேற்கை) என்பதனல் கற்ற

223. ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப - தூக்கின்
மெலியது மேன்மே லெழுச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு. (கஎ)

224. விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே - புலப்பகையை
வென்றனை நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின். (கஅ)

225. தன்னை வியப்பிப்பான் றற்புகழ்ந்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றாற் - றன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (கக)

---

ருக்கும், "எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளும், செல்வர்க்கே செல்வந் தகைத்து" (குறள், 125) என்பதனால் செல்வருக்கும் பணிவுடைமை வேண்டு மென்று பெரியோரும் பணித்தனர்.

223. ஆக்கம் - அறிவின் அமைதியில். சிறியார் - அறிவில்லாதவர். மீச்செலவு - மீதூர்ந்த நடையை. நனி - மிகவும். தாழ்ப - தாழ்வர்; பெரியார் தாழ்வார் (பிரபு. மாயை உற்பத்தி. 14.) தூக்கின் - தூக்கிப் பார்க்குமிடத்து. மெலியது - கனமில்லாத தட்டு. வலிது - கனமுள்ள தட்டு. துலைக்கு - துலையின்கண்.

224. இச்செய்யுளிலும் அடுத்த செய்யுளிலும் தற்புகழ்ச்சியால் விளையும் தீங்கு கூறப்படும்.

விலக்கிய ஓம்பி - அறநூல்களில் ஆகா வென்று விலக்கப்பட்டன தம்பால் நிகழாமற் காத்து. விலக்கிய ஓம்பி விதித்தன செய்தலே அறமாகும்; 'அறமாவது மனுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம் (குறள், உரைப்பாயிரம், பரிமேல்.) நலத்தகையார் - அறத்தின் வழி நிற்பார். தீதே-தீவினையேயாகும். புலப்பகை - புலன்களாகிய பகையை. வென்றனம் - வென்றோம்; இந்திரியங்களை அடக்கி வென்றோம். பிற: அசைநிலை. தம் பாடு - தம் பெருமைகளை. தம்மிற்கொளின் - தாமே உட்கொண்டு நினைத்திருப்பின். கொளின் தீதேயென இயைக்க.

தம் பெருமையைத் தாமே நினைத்தாலும் குற்றமென்றபடி.

225. வியப்பிப்பான் - பிறரைக் கொண்டு தன்னை வியக்கும்படி செய்பவன். தீச்சுடர் - விளக்கை. வளர்த்தற்று - வளர்த்தாற் போல்வது. எண்ணிய பயனைத் தாராதென்றபடி. நலம் - இன்பம்.

முன்பாட்டில் ஒருவர் தம் புகழைத் தாமே நினைத்தல் குற்றமென்றவர் இப்பாட்டில் அதனைத் தாம் கூறுதலும் குற்றமென்பதை உதாரணமுகத்தால் விளக்கினர்.

226. பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். (உ௦)

227. கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை - சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல். (உக)

228. பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார் திறப்படூஉம்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல். (உஉ)

---

226. பெருஞ்சுட்டு - பெருமதிப்பு. யாண்டும் - எவ்விடத்தும் எக்காலத்தும். (பி - ம்.) ' மறவாமை ' நோற்பது - நோற்றல்; உளங்கொண்டு அயர்வின்றிச் செய்யத் தருவதாதலாலும் வினையும் பயன் பெரிதாதலாலும் இச்செயலை நோற்றலென்றார். தூற்றி - பலர் அறியச் சொல்லி. புறங்காத்து - தாம் அறிந்திருந்தாலும் அவற்றை வெளியிடாமல் அடக்கி. தாழ்ச்சி - வணக்கத்தைப் புலப்படுத்தும் சொற்களை; "வணங்கிய வாயினர்" (குறள், 419.)

நோற்பது ஒன்று உண்டு; அது தாழ்ச்சி சொலல் என்க.

இது மக்களாகப் பிறந்தார் யாவருக்கும் கூறிய அறிவுரை.

227. தாம் நில்லார் - கற்பவை கற்ற பின் நிற்க அதற்குத் தக என்றபடி நில்லாதவர். வெற்றுரை - பயனற்ற சொல். என் - என்ன காரணம்? நாண் உறைப்ப - நாணம் மிகும்படி. நேர்ந்து - எதிர்ப்பட்டு. சூழ்ந்து - ஆராய்ந்து. ஆராய்தலாவது தன்னைக் கடிந்து கூறுவான் அங்கே இல்லாதிருத்தலை ஆராய்ந்தறிதல்.

வலியுடைமையாவது சூழ்ந்து சொலலென்க.

கற்றபடி நிற்றல் வேண்டுமென்பது கருத்து.

228. பிறர்க்குப் பயன்பட - தமக்கும் பிறர்க்கும் பயன்படுவதை எண்ணுமற் பிறர்க்கே பயன்படும்படி. கற்றவற்றை விற்பார். பயனைப் பின் இரண்டடிகளிற் கூறுவார். தீவினை அஞ்சா விறல் - தீவினையை அஞ்சாத வீரம்; விறலென்றது இகழ்ச்சிக் குறிப்பு. தென்புலத்தார் கோ - யமன். அவனை வேலை கொளலாவது அவன் பலவகையான தண்டனையைப் பல முறை செய்யும்படி செய்வித்தல். யமதண்டத்தை அடைவதே அவர் பெறும் பயனென்றபடி.

"கற்பார் பொருள்காணர் காசுபணங் காணிலுனே, விற்பா ரவர்பானீ மேவாதே" (தமிழ்விடு.184.) என்பதிலும் விற்றலின் இழிவு புலப்படுத்தப்படுகின்றது.

229. கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தைவா யங்காத்தல் - மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல். (உ௲)

230. போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொ ணகையினூர் வாய்ச்சேரா - தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில். (உச)

---

229. கற்பன ஊழ் - கற்றற்குரிய நல்லூழ். கல்விக் கழகம் - புலவர் நிறைந்த சபை. ஆங்கு: அசைநிலை. ஒற்கம் இன்று - நாவடக்கம் இல்லாமல். ஊத்தைவாய் - தூய்மையற்ற வாய்; பயனற்ற சொற்களைக் கூறும் வாயென்பது பொருள். அங்காத்தல் - திறத்தல். மற்று: அசைநிலை. வல் உரு - எம் வலிய உருவம். என்ப - என்று கூறுதல். அங்காத்தல், அஞ்சன்மின் என்று கூறுதலைப் போலும் என ஒரு சொல் வருவித்து முடிக்க. மா பறவை - மாவும் பறவையும்; மா-மான் முதலிய விலங்கு. புல்லுரு - தினைப் புனம் முதலிய இடங்களில் விளைந்த தானியக்கதிரைக் கவர்தற்கு வரும் விலங்கும் பறவையும் அஞ்சும் பொருட்டுப் புல்லால் அமைத்து வைக்கப்படும் உருவம்; "கொல்லா வம்புஞ் சமர்க்களத்திற் குனியா வில்லுங் கொண்டு நிற்கும், புல்லா டவனே" (அருணைக் கலம். 19.) அஞ்சுவபோல் - அஞ்சுதலைப்போல. தம் உருவத்தைக்கண்டு அஞ்சியிருப்பாரைத் தம் சொல்லால் தமது அறியாமையைத் தாமே வெளிப்படுத்தி அவ்வச்சத்தைப் போக்குவரென்றார்.

230. போக்கறு கல்வி - குற்றமற்ற கல்வி; தம்மிடத்தினின்றும் போதல் அற்ற கல்வி யெனலும் ஆம் (215.) புலமிக்கார் - அறிவுமிக்கவர். மீக்கொள் நகையினர் வாய் - மேற்பட்ட, உள்ளீடில்லாத நகையையுடையவரிடத்து; நகையினரென்றது கற்றவிற் கருத்தைச் செலுத்தாமல் நகைத்து வீண் பொழுது போக்குவாரை. தாக்கணங்கும் ஆண் அவாம் பெண்மை - தீண்டி வருத்தும் பெண்தெய்வமும் இன்பம் நுகர்தற்பொருட்டு ஆண் உருவத்தை எடுக்க விரும்பும் பெண் தோற்றத்தை. பேடு உடைத்தெனினும், பெண் நலம் கொளப்படுவது இல் - அப்பேட்டினிடத்தில் பிறராற் பெண்ணின்பம் கொள்ளப்படுதலென்பது இல்லையாகும். பேடு மிக்க அழகுடைய பெண்ணைப்போன்ற தோற்றம் உடையதாயினும் பெண்ணால் வரும் இன்பத்தைத் தரும் இயல்புடையதன்று என்றபடி.

அறிவுடையாருக்கே கல்விவன்மை உண்டாகும் என்பது கருத்து. கற்பிக்கப்படாதாருள் ஒருவனை அறிவில்லான், 'ஏழை' என்னும் பெயராற் கூறப்படுதல் காண்க.

231. கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றந் தமதே பிறிதன்று - முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன். (உரு)

232. வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குகப்பெய்தார் - மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு. (உசா)

233. குலமட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும் - அறவோர்க்

---

231. கற்றன - தாம் கற்ற நூற்பொருள்களை. செவிமாட்டி - செவியின் கண் வலியப் புகுத்தி. கையுறூஉம் குற்றம் - தாம் சிறுமை யடைதற்கு ஏதுவாகிய குற்றமானது. பிறிது அன்று - வேறொருவரது குற்றம் அன்று. 'கற்றுருடைய பெருமையை அறியாத குற்றம் அக்கல்லாதாருடையதன்றோ' என்பாருக்கு விடை பின் கூறுகின்றார். முற்று உணர்ந்தும் - எல்லாம் அறிந் திருந்தும். தாம் - கற்றார். அவர் - கல்லாதாருடைய. உணராதாராகிய தாம். தம் உணரா - கற்றாராகிய தம் பெருமையை உணராத. ஏதிலரை - அயலா ராகிய கல்லாதாரை; இது சுட்டுப் பெயரள்வாய் நின்றது. எவன் - என்ன பயன்கருதி.

232. இதுமுதல் 15 - பாட்டுக்களால் அரசியல்பு கூறப்படும்.

வேந்து அவை. மிகல் மக்கள் - கல்வி அறிவு ஒழுக்கங்களால் மிக்கவர்; மிகல் மக்கள் காவார். வேறு சிலரென்றது கல்வி முதலியன இல்லாதவரை. காத்து அது கொண்டு. உகப்பு - உயர்வை; "உகப்பே யுயர்தல்" (தொல். உரி.8.) சிலர் உகப்பெய்தார். (பி - ம்.) 'உவப்பெய்தார்' பூஞை - பூனை. கந்து கொல் - கட்டுத்தறியை முறிக்கின்ற.

அரண்மனைவாயிலில் நிற்கும் யானை போர்க்காலத்திற் போர் செய்தற் குப் பயன்படுதலும், அந்தப்புரத்திலுள்ள பூனை சோர்வறிந்து அங்குள்ள சிறந்த உணவுகளைமட்டும் உண்பதற்கன்றி வேறெதற்கும் சிறிதும் பயன் படாமையும் போல, பெரியோர் அரசனுக்கு அருகில் இராவிடினும் தக்க சமயத்திற் பயனளித்தலும் சிறியோர் இடைவிடாமற் காத்திருந்தும் உண்டி முதலிய பயனைத் தாம் அடைதலன்றி யாதோர் உயர்வும் அடையாததோடு அவமதிப்பை அடைதலும் இங்கே அறிதற்பாலன.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

233. இன்னாருக்கு இன்னார் தெய்வமென்பதைக் கூறுகின்றார்.

குலமகட்கு - கற்புடையவளுக்கு. மன்ற - நிச்சயமாக. புதல்வர்க்குத் தந்தையும் தாயும், தெய்வமெனப் பின்னும் கூட்டுக; "அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" (**கொன்றை வேந்தன்.**) அறவோர் - துறவாமல் விரதங்

கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை. (உஎ)

234. கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினும் - தண்ணளியால்
மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு. (உஅ)

235. குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொள லு மாண்பே - குடியோம்பிக்

---

காப்போர் (சிலப். கசு : 71, அரும்பத.) : பிரமசாரிகளெனினும் ஆம். அடிகள் - ஆசிரியர். ஏகாரங்கள் தேற்றப்பொருளன. இலைமுகப் பைம்பூண் : சீவக. 2107. இறை - அரசன். உலகபாலர் உருவாய் நின்று உலகங் காத்தலின் அரசனைத் தெய்வமென்றார் (குறள் கக-ஆம் அதி. அவதாரிகை.)

234. கண்ணிற் சொல்லுதல் - குறிப்பால் அறிபவர்க்குக் காரியங் களைக் கண்ணாற் குறிப்பித்தல். செவியின் நோக்குதல் - நாட்டில் அங்கங்கே நடப்பவற்றை ஒற்றர் மூலமாகக் கேட்டு அறிந்து கொள்ளுதல். "செவியிற் கண்டு கண்ணிற் கூறி, இருநிலம் புரக்கு மொருபெரு வேந்தன்" (476) என்பர் பின்னும். இறைமாட்சி - அரசுரிமையாகிய மேம்பாடு. புண்ணியத்தின் பாலதே ஆயினும் - முற்பிறப்பிற் செய்த அறத்தின் பயனாகக் கிடைத்ததாயினும்; "பாறர வந்த பழவிறற் றாயம்" (புறநா. எரு : 2.) மன்பதை - மக்கட்டொகுதி; பிறவுயிர்களையும் காத்தலுண்டாயினும் சிறப்புப்பற்றி மக்களை எடுத்துக் கூறினார். என்னும் - என்ன பயனைத் தரும்? இறைமாட்சி என்னும்? வயப்படை - வன்மையுள்ள ஆயுதம். ஆணல்லவர் - பேடிகள்; ஆணல்லவர்க்கு வயப்படை என் பயக்கும் என்க. படை நன்றாயிருந்ததாயினும் பேடியின் குற்றத்தால் அது பயனடையாதவாறு போல, நல்ல நாடு வாய்த்ததாயினும் ஆள்பவனுடைய குற்றத்தால் அவன் அரசாட்சி சிறப்படையாதென்பது கருத்து; "தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை, வாளாண்மை போலக் கெடும்", "பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத், தஞ்சு மவன்கற்ற நூல்" (குறள், 614, 727) எனப் பிறரும் ஒரு பொருளைப் பெற்றும் அது பயன்படாமையை விளக்குதற்கு இந்த உவமையைக் கூறுதல் காண்க.

235. குடி கொன்று - குடிகளை வருத்தி; கொல்லல் - வருத்துதல்; "கரும்புபோற், கொல்லப் பயன்படுங் கீழ்" (குறள், 1078.) இறை - வரியை. மடி கொன்று - மடியை அறுத்து. கொள்ளுமா - கொள்ளும் வழியால். கொள்வோற்கு - ஆறில் ஒரு பங்கைக் கொள்ளும் அரசனுக்கு; விளைவில் ஆறில் ஒரு பங்கை அரசன் கொள்ளவேண்டு மென்பது, "தென்புலத்தார் தெய்வம்" (குறள், 43) என்பதன் விசேட வுரையால் விளங்கும். அரசன்

கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியாம்
வெள்ளத்தின் மேலும் பல. (உகூ)

236. இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருன்
நின்று குறையிரப்ப நேர்படான் - சென்ளெருருவன்
ஆவன கூறி னெயிறலைப்பா னுறலைக்கும்
வேடலன் வேந்து மலன். (௩௦)

237. முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணு - இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம். (௩௧)

---

குடிகளிடம் வரி கொள்ளும் முறை, "காய்நெல் லறுத்து" (புறநா. 184), "வாய்ப்படுங் கேடுமின்றும்" (சீவக. 2907), "கற்றைவை களைந்து" (திருவிளை. நாடு. 28) "மாநிரப்புரு" (சீகாழிப் புராணம், பூத விமோசன. 7) என்னும் செய்யுட்களால் அறியப்படும். (பி - ம்.) 'கொள்வோர்க்கு' காண்டும் - கண்கூடாகக் காண்போம். வெள்ளம் - ஒரு பேரெண். மாநிதியம் வெள்ளத்தின் மேலும் பலவாதலைக் காண்டுமென்க. (பி -ம்.) 'நீணிதியம்'
அளவறிந்து இறை வாங்கவேண்டு மென்பது கருத்து.

236 - 7. இவ்விரண்டு பாட்டுக்களாலும் கொடுங்கோலரசன் இயல்பு கூறப்படும்.

236. கொளற்பால - கொள்ளும் அளவான வரிகளை. குடிகள் குறையிரப்ப. நேர்படான் - உடன்படான். ஒருவன் - அமைச்சர்களுள் அறிவுடையானொருவன்; ஒருவனென்றார், அரசனை எதிர்த்துச் சொல்லுதலின் அருமைபற்றி. எயிறலைத்தல் - பற்களைக் கடித்தல்; கோபித்தல். ஆறு அலைக்கும் - வழிப்போவாரை வருத்திப் பொருளைக் கொள்ளும். வேடு - வேடன். அவ்வரசன் வேடனுமல்லன்; வேந்தனும் அல்லன்.

ஆறலைக்கும் வேடனுக்குரிய இயல்புடையானாயினும் குடிப்பிறப்பு முதலியவற்றால் வேடனைக் கூறப்பெருன்; அவற்றால் வேந்தனாயினும் இயல்புகளால் வேந்தனைக் கூறப்பெருன். இங்ஙனம் கூறினும் ஆறலை கள்வரோடு ஒப்பானென்பதே ஆசிரியர் கருத்து.

237. முடிப்ப - முடித்தற்குரிய மலர் முதலியவற்றை. உண்ணு - உண்டு. இடித்து இடித்து: அடுக்கு இடைவிடாமை மேற்று; "பொய்யாமை பொய்யாமை யாற்றின்" (குறள், 296) என்பது போல. கட்டுரை - நன்மையைத் தரும் உறுதி மொழிகள். அமைச்சர்கள் கூறின். செவிக்கொள்ளாதனவும், கண் விழியாதனவுமாகிய அரசுகள் பிணம். செறல் பற்றி அஃறிணையாற் கூறினர். நெட்டுயிர்ப்போடுற்ற பிணம் என்றதனால், மற்றப் பிணங்களுக்கும் இத்தகைய கொடுங்கோலரசுகளுக்கும் உள்ள வேறுபாடு கூறப்பட்டது.

238. ஒற்றிற் றெரியாச் சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டுணையாத் தெரிதந்தும் - குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று. (௩௨)

239. ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதோரீஇக் கொள்கை முதுக்குறைவு நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு. (௩௩)

240. கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும் - மண்டெரி

---

238. செங்கோலரசன், குற்றத்தை அறியும் வழி கூறப்படும்.

ஒற்றின் - ஒற்றர்களால். தெரியா - தெரிந்து. அரசர்கள் ஒற்றர்களாற் செய்திகளை அறிதல் திருக்குறளிலுள்ள ஒற்றாடலென்னும் அதிகாரத்தால் விளங்கும். சிறைப்புறத்து ஓர்தும் - மறைவிடத்திலிருந்து அறிவோம்; சிறைப்புறத்தறிதல் பொற்கைப் பாண்டியன் வரலாற்றால் அறியப்படும். துணையாக வருவோர் யாருமின்றித் தோளே துணையாக. தெரிதந்தும்: உம்மை உயர்வு சிறப்பு. (பி - ம்.) 'துணையாத் திரிதந்தும்' இப்பாடத்திற்கு, துணையாகச் சென்று திரிதந்துமென ஒரு சொல் வருவிக்க.

கேளாமை செங்கோன்மையன்று.

239. அரசன் யாவர் கூற்றையும் ஆராயாமல் நம்புதல் கூடாதென்பர்.

ஏதிலார் - அயலார். இறைமகன் - அரசன். கோது ஓரீஇ - குற்றத்தை நீக்கி. கொள்கை - நல்லனவற்றை அறிந்து கொள்ளுதல். முதுக்குறைவு - பேரறிவு. நேர் நின்று - அஞ்சாமல் எதிரே நின்று. வெளிது - வெண்ணிறமுடையது. காக்கை வெளிதென்பாரென்றது, கண்கூடாகப் பலரறிந்த உண்மையை மறுத்துக் கூறுதற்கு எடுத்துக் காட்டியவாறு. தாய்க்கொலை - தாயைக் கொல்லுதல். சால்புடைத்து - ஏற்புடையது. அறமல்லாதவற்றை அறமென்று கூறுதற்கு எடுத்துக் காட்டியது இது. என்பாரும்: உம்மை, இழிவு சிறப்பு.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள், 423) என்பது ஈண்டு அறிதற்பாலது.

240. கேடு கண்கூடாப்பட்ட தெனினும்; கண்கூடா - பிரத்தியட்சமாக. கீழ்மக்கட்கு உணர்ச்சி உண்டோ; உணர்ச்சி - கேடு வருமென்றும், அதனை நீக்க உபாயந் தேட வேண்டு மென்றும் அறிதல். மற்று: அசைநிலை. மண்டு எரி - மிக்கு எரிகின்ற நெருப்பு. தான்: அசைநிலை. வாய்

தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து. (௩௪)

241. நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல் - தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. (௩௫)

242. பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினுற் ருழ்வார்க் - கணிய
திளையாண் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல். (௩௬)

---

மடுப்பினும் - தம்மை எரித்தாலும். மாசுணம் பெருமூச்செறிந்து பேராவாய்க் கண்டுயில்வ; மாசுணம் - பெரும்பாம்புகள்; பேரா - இருந்த இடத்தினின் றும் நகராதனவாய்.

இச் செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி.

241. அரசனுக்குக் கேடு பயப்பனவற்றைக் கூறுவார்.

நட்புப் பிரித்தல் - பழமையான நண்பரைப் பிரியும்படி செய்தல். பகை நட்டல் - நெடுங்காலம் பகையாயுள்ளாரை நட்பாக்கிக் கொள்ளுதல்; "முற்றன்னைக் காய்வானைக் கைவாங்கிக் கோடலும்.........சாவ வுறுவான் றொழில்" (திரிகடுகம், 4.) ஒற்று இகழ்தல் - கண்போன்ற ஒற்றர் கூறிய வற்றை இகழ்ந்துரைத்தல். பக்கத்தார் - அமைச்சர்; "உழையிருந்தான்" (குறள், 638) என்பதனுல் இங்ஙனம் கூறினர். நெடுமொழி கோறல் - நெடுங் காலத்திற்குப் பயன்படுவனவான செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து முத லியவற்றை அவமதித்தல்; "மெய்ம்மொழிமற் றென்மொழி பிழையா தாகும், பின்வழி நுமக்குப் பெரும்பயன் றருமே" (564) என்பர் பின். பிறிதாதல் - வேறுபடுதல். கெடுவது காட்டும் குறி - தான் பின்னே கெடு வதை முன்னே தெரிவிக்கும் அடையாளங்கள்.

242. பெரியாரைப் பிழையாமை இதிற் கூறப்படும்.

பணியப்படுவார் - தம்மால் வணங்கத்தக்க அந்தணர், சான்றோர், அருந் தவத்தோர், தாய், தந்தை, தமையன் முதலியோர் (பு. வெ. 221.) புறங்கடைய ராக - தலைவாயிற் புறத்தே இருப்ப. தணிவில் களிப்பினுல் - குறைதலில் லாத செல்வச் செருக்கால். தாழ்வார்க்கு - எதிர்செல்லுதலின்றித் தம்பால் வரும் வரையில் தங்கி யிருப்பார்க்கு. இளையாள் முயக்கு அணியதெனினும்; இளையாள் - திருமகள்; இளையாள் முயக்கென்றது, செல்வத்தோடு கூடி யிருத்தலை. மூத்தாளது போகங்கொளல் சேய்த்தன்று; விரைவில் வறியரா வாரென்பது கருத்து; மூத்தாள் - மூதேவி (குறள், 167.) சேய்த்தன்று - மிக அண்மைக் காலத்துள்ள தென்றபடி.

243. கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா - வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு. (௩௭)

244. வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா - ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. (௩௮)

---

243. ஈகையின் இலக்கணம் இதிற் கூறப்படும்.

கண் நோக்கு அரும்பா - செய்மைக்கண்ணே இரவலரைக் கண்ட போது இனிமையாகப் பார்த்தலே அரும்பாக. நகைமுகமே நாள் மலரா - நெருங்கியவழி மலர்ச்சியோடு கூடிய முகமே அன்று மலர்ந்த மலராக. இன்மொழியாகிய வாய்மை தீங்காயாக ; இன் : வேண்டா வழிச்சாரியை ; வாய்மை - உண்மை. தீங்காய் - இனிய காய். பலமா - பழமாக. நலம் கனிந்த - நற்குணங்கள் மிக்க. சலியாத - கொடுத்தலில் இளைத்தலில்லாத. பண்புடையார் சலியாத கற்பதரு அன்றே ; கற்பதரு - கற்பகமரம். தெய்வ லோகத்திலுள்ள கற்பகம் கற்பகம் அன்று ; வள்ளல்களே கற்பகதரு என்றபடி.

கண்ணோக்கும் நகைமுகமும் அகத்தின் உவப்பை வெளிப்படுத்துவன. மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றாலும் விரும்பிச் செய்வது ஈகை யென்று கொள்க.

இச்செய்யுள் உருவகவணி.

244. அரசனுடைய வருவாய் சிறிது குறைந்தாலும் அதனால் அரச னுக்குத் துன்பம் உண்டாகாது. ஆனால் அதுகொண்டு வேறு பலர் பிழைப்ப ரென்பது கூறப்படும்.

வாங்கும் கவளத்து - தான் உட்கொள்ளும் கவளத்துள். ஒரு சிறிது - மிகச் சிறிய பாகம். வாய் தப்பின் - வாயினின்றும் தவறி விழுமாயின். ஆங்கது ; ஒரு சொல் நீர்மையன ; ஆங்கு : அசை நிலையுமாம். ஒரு கோடி எறும்புகள் ஆரும் கிளையோடு அயின்று உய்யும் ; ஆரும் கிளை - நிறைந்த சுற்றம் : அயின்று - உண்டு.

" அத்தி முதலெறும்பீ றானவுயிர் " (தனிப்.) என்பவாதலின் அவ்விரண் டையும் இயைபுபட அமைத்துக் கூறியது அறியத்தக்கது.

இச்செய்யுள் அரசர்க்குக் குறிப்பாக நீதிகூறியபடி ; இது பிறிது மொழிதலென்றும், நுவலாநுவற்சியென்றும், ஒட்டணியென்றும் கூறப் படும்.

245. மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையி னேக்கழுத்த மிக்குடைய - மாகொல்
பகைமுகத்த வென்வேலான் பார்வையிற் றீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு. (கூகூ)

246. களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் - தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க ளாம். (சo)

247. தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினு மோம்புக - பின்னர்ச்

---

245. பொருளீதலைக் காட்டிலும் நன்மதிப்போடு கூடிய பார்வையே சிறந்ததென்பர்.

மாகம் சிறுக - ஆகாயப்பரப்பும் சிறிதாம்படி ; சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நிதிக்குவையைக் குவித்து. ஈகையின் - அதனை ஈதலைக் காட்டிலும். ஏக்கழுத்தம் - தலையெடுப்பு; "ஏக்கழுத்தம் போல வினிதன்றே" (சீவக. 496.) மிக்குடைய எனப் பன்மையாற் கூறினர் மதிப்பின் பன்மை பற்றி. மாகொல் வேல் - யானைகளைக் கொல்லும் வேல். வென்வேல் - வெற்றியைத் தரும் வேல்; வென் - வெற்றி. (பி - ம்.) 'வெள்வேல்' பார்வையின் றீட்டும் - பார்த்தலால் எழுதும். நகைமுகத்த - சிரிப்போடு கூடிய முகத்தையுடைய. தீட்டும் மதிப்பு என்க. நன்கு மதிப்பு ஈகையின் ஏக்கழுத்தம் மிக்குடைய என்க.

வென்வேலா னென்றமையின் அரசனென்பது கொள்ளப்படும். அவனது நன்கு மதிப்பினால் பலருடைய பாராட்டும் நல்லுதவியும் பெறுதலின் ஈகையினும் சிறந்ததென்பர்.

246. புகழுடம்பு அடைதற்கு வழி இதனாற் கூறப்படும்.

தம்மைக் களைகணுக அடைந்தார்க்கு ; களைகண் - பற்றுக்கோடு. உற்றுழி - ஒரு துன்பம் நேர்ந்தவிடத்து. மற்றோர் விளைவு உன்னி - உடம்பால் அடையும் காம நுகர்ச்சி போன்ற வேறோர் இழிந்த பயனைக் கருதி. வெற்றுடம்பு - பிறர்க்குப் பயன்படாத உடம்பை. ஊனுடம்பு தளர்நடையதென்று ; தளர் நடையது - அழியும் தன்மையுடையது. புகழுடம்பு - புகழாகிய உடம்பு. ஓம்புதற்கே யென்பதிலுள்ள ஏகாரத்தைப் புகழுடம்பென்பதனோடு கூட்டுக. புகழுடம்பு ஓம்புதற்கு உடன்பட்டார்கள் வெற்றுடம்பு தாங்கார். தான், தாம் : அசை நிலைகள். உடல் நீத்தேனும் பிறருக்கு உதவுவரென்றபடி. ததீசிமுனிவர், சிபி முதலியோர் வரலாற்றால் இந்த உண்மை விளங்கும்.

247. இதுமுதல் மூன்று செய்யுட்களால் நிலையாமை கூறப்படும்.

சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின். (சக)

248. கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்கடிந் தாரும் - கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி
தும்பை முடிச்சூ டினும். (சஉ)

---

ஆற்றல் - திறமை. மானம் உயிரினும் சிறந்ததென்பர். 'மானமாவது எக்காலத்தும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்' (குறள், மானம், அவதாரிகை.) தோற்று - இழந்து. ஓம்பினும் : உம்மைச் இழிவு சிறப்பு. (பி - ம்.) 'மின்னே' சிறுவரையாயினும் - சிறிதளவேனும். மன்ற - நிச்சயமாக. தமக்கு இறுவரை யில்லை யெனின் இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக என இயைக்க. ஆங்கு : அசைநிலை. இறுவரை - இறக்கும் காலம். இல்லை யெனின் : இறத்தல் நிச்சயமென்று தெரிவித்தபடி. இவ்வுடல் நிலையாதாதலின் இதன் அழிவுக்கு அஞ்சாது, மானத்தைக் காத்தல்வேண்டு மென்பது கருத்து.

"மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து" (குறள், 968), "மான வருங்கல நீக்கி யிரவென்னும், ஈன விளிவினல் வாழ்வேன்மன் - ஈனத்தால், ஊட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு, நீட்டித்து நிற்கு மெனின்" (நாலடி. 40), "மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியவை நாற்பது, 14) என்பன இதனோடு ஒப்பு நோக்கற்பாலன.

248. கலனழிந்த கற்புடைப் பெண்டிரென்றது கைம்பெண்டிரை ; கலன் - ஆபரணம் ; இங்கே மங்கல நாண். ஐந்து புலன் ஒருங்க - சுவை முதலிய ஐம்புலன்களும் ஒருவழிப்படும்படி. பொய்கடிந்தா ரென்றது துறவிகளை. (பி - ம்.) 'பொய்யொழிந்தோரும்' "சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றியது தான்வந்து முற்றுமெனலாற் - சகமீ திருந்தாலு மரணமுண் டென்பதைச் சதாநிஷ்டர் நினைவதில்லை" (தாயுமானவர்.) ஞாட்பின் - போரில். மொய்ம்பு - வன்மை. உடம்பின் நிலையாமையை எப்பொழுதும் உள்ளத்திற் கொண்டிருத்தல்பற்றி வீரர், "காஞ்சி சான்ற வயவர்" (பதிற். கூரு : 4, கூ0 : 39) எனப் பாராட்டுதல் காண்க. முரண் மறலி - இயல்பாகவே மாறுபாட்டை யுடைய யமன். தும்பை முடிச்சூடினும் - உயிரைக் கொள்ளும் பொருட்டுத் தானே சினத்தோடு வந்தாலும் ; போர் செய்வோர் தும்பையைச் சூடுதல் புறத்திணை யிலக்கணமென்பது இங்கே அறியத்தக்கது. மறலி தும்பை முடிச் சூடினும், பெண்டிரும் கடிந் தோரும் வீரரும் உயிர் விடுதற்கு அஞ்சார்.

இச்செய்யுள் புகழொப்புமைக் கூட்டவணி.

249. புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும் - விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு. (சகூ)

250. இகழி னிகழ்ந்தாங் கிறைமக னென்று
புகழினு மொக்கப் புகழ்ப - இகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை. (சச)

251. செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா கவுண்மதத்த

---

249. உடம்பின் தூயதன்மையும் அதனாற் பயன் கொண்டாரது மேன்மையும் கூறப்படும்.

புழு நெளிந்து - புழுக்கள் நெளியப்பெற்று. யோசனை நாறுமென்றல் ஒரு மரபு. கழிமுடை நாற்றத்த வேனும் - மிக்க புலால் நாற்றத்தை யுடையனவாயினும். விழலர் - வீணர். விளிவுன்னி - இறத்தலை நினைந்து. வெய்துயிர்ப்பர் - அச்சத்தால் பெருமூச்செறிவர். மெய்ப்பயன் கொண்டார் - உடம்பாலாகிய உண்மையான பயனைக் கொண்டவர்; சுமையென்றது உடம்பினை. பயன் கொண்டார் சுமை போடுதற்குச் சுளியார்; சுளியார் - வெறுக்க மாட்டார்; என்றது உவப்போடு உயிரை விடுவரென்றபடி.

"கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார், துரும்பெழுந்து வேங் காற் றுயராண் டுழவார், வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம், வருங்காற் பரிவ திலர்" (நாலடி. 35.)

250. அரசன் சென்ற வழியே குடிமக்கள் செல்வரென்பர்.

இறைமகன் இகழின் - அரசன் ஒன்றை இகழ்ந்து கூறினால். புகழ்ப என்பதற்கு, பின்னேயுள்ள மன்பதை என்பதை எழுவாயாக்குக. புகழ்ப- புகழ்வார்கள். மன்பதை மன்னன்சீர் வழிப்பட்டதே. மன்பதை - மக்கட் டொகுதி. புணை - தெப்பம்; மற்று: அசை நிலை. தெப்பம் நீர் செல்லும் வழியே செல்லுமாறு போல, குடிகளும் அரசன் சென்ற வழியே செல்வர்.

அரசன் செல்லும் வழியே குடிகள் செல்லுமாதலின் அதனை அறிந்து நல்வழியிலே அவன் செல்லுதல் வேண்டுமென்பது குறிப்பு.

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

251. அரசன் வெகுண்டபோதும் நீதி கூறுதல் மந்திரியின் கடமை யென்பது இதிற் கூறப்படும்.

செவி சுட - செவி பொறுதபடி. அறிவு மூட்டி - அறிவை உண்டாக்கி. வெகுளினும் - அரசன் கோபித்தாலும். வாய் வெரீஇ - சொல்லுதற்கு அஞ்சி. பேரா - அமைச்சர்கள் நீங்கமாட்டார். அறிவு மூட்டிப் பேரா,

கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு. (௪௫)

252. கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க - ஒவ்வொருகால்
எண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னான். (௪௬)

253. பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார் வெகுளின்மற்

---

கவிழ் மதத்த - சொரிகின்ற மதநீரையுடைய. பாகு கைம்மா வயத்ததோ; அன்றென்றபடி; பாகு - பாகன்; கைம்மா - யானை. எத்திறத்தும் - எல்லா வகையிலும். அமைச்சு அம்மாண்பினவே - அமைச்சர்களும் அந்தத் தன்மையை யுடையவர்களே. பாகு, அமைச்சு: உயர்திணைப்பொருட்கண் வந்த அஃறிணைச் சொற்கள்.

அரசனை யானையாகவும் அமைச்சனைப் பாகனாகவும் கூறும் மரபு, 'மதச்செருக்காற் பாகன் தோட்டியை நீவுமாறுபோலக் காமக்களிப்பால் தன் அமைச்சர் கூற்றைக் கடத்தல்நோக்கி, களிறனான் என்றார்' (சீவக. 200, ந) என்பதனால் விளங்கும்.

"அறிகொன் றறியா னெனினு முறுதி, உழையிருந்தான் கூறல் கடன்" (குறள், 638); "அரைசர் சீறுவ ரேனு மடியவர், உரைசெ யாதொழி யார்க ளுறுதியே" (கலிங்கத். 366); "தலைமகன் வெகுண்ட போதும், வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்" (கம்ப. அயோத்தி. மந்திரப். 9.)

252. மன்னரைச் சார்ந்தொழுகும் முறை கூறப்படும்.

வேந்தன் நமக்குக் கைவரும் - அரசன் நம் வழிப்படுவான். காதலித்த - தாம் விரும்பியவற்றை. செவ்வி தெரியாது - அரசன் தாம் கூறுவனவற்றை ஏற்றுக்கொள்ளும் சமயத்தை அறிந்து கொள்ளாமல். எண்மையனேனும் - காண்டற்கு எளியனாலும். அம்மா: வியப்பிடைச்சொல். பெரிது அரியன். கண் - கண்ணோட்டம்; ஆகு பெயர். உள் வெயர்ப்பினான் - உள்ளே அடக்கிய சினத்தை யுடையவனாவன்.

"கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார், துளக்கற்ற காட்சி யவர்" (குறள்,699.)

253. பழமை - பழைய நட்பை. கிழமை - பழைய நண்பர் உரிமை யாற் செய்வனவற்றை. "பழமை யெனப்படுவ தியாதெனின் யாதும், கிழமையைக் கீழ்ந்திடா நட்பு" (குறள், 801) என்பதையும் அதனுரையை யும் பார்க்க. "புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை, வரை வின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வெளவும், அரைசு"(கலி. அ.

காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு. (சஎ)

254. மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க - பன்னெடுநாட்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும். (சஅ)

255. உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறு முயல்ப - இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க நீதன்று லல்லனபோல்
ஆவனவு முண்டு சில. (சகூ)

256. முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா வூழ்த்திறத்த வென்னூர் - மயலாயும்

---

15-7.) வெகுளின்-கோபித்தால். இறைமாண்டாருக்குக் காதன்மையுண்டே? இறைமாண்டார் - அரசியலிலே மேம்பட்டார். காதன்மை -அன்பு. உண்டே யென்றது இல்லையென்றபடி. ஏதிலர் - அயலார். ஆர்வலர் - அன்பு செய் யப்பட்டவர். அவர்க்கு ஏதிலரும் ஆர்வலரும் இல்லை.

254. புறங்கடையை வறிதே காத்து; வறிதே - யாதொரு பயனும் இன்றி. எ நலம் காண்டும் என்று - எந்த நன்மையைக் கண்டோமென்று. எள்ளற்க - இகழாதொழிக. கைகொடுத்து - உதவி. வேத்தவையில் - அரச னுடைய சபையில். மிக்குச் செயும் - பிறரைக் காட்டிலும் மேம்பாட்டோடு இருக்கும்படி செய்யும். காத்தவை யெல்லாம் மிக்குச் செய்யும்.

255. இறக்கும் வரையிலும் முயற்சியுடையவனாயிருத்தல் வேண்டு மென்பது கூறப்படும்.

உறுதி பயப்ப - நன்மையைத் தருவனவாகத் தாம் மேற்கொண்ட முயற்சிகள். கடைபோகா வேனும் - முடிவு பெறுவிட்டாலும். இறுவரை காறும் - தாம் இறக்கும் காலம் வரையிலும். முயல்ப - முயல்வார்கள். இறும் உயிர்க்கும் - அழியும் உயிருக்கும். ஆயுள் மருந்து ஒழுக்கல்- ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்தை ஊற்றுதல். அல்லனபோல் ஆவனவும் சில உண்டு - முடிவு பெறுதனபோல் தோன்றி முடிவு பெறும் சில காரியங்களும் உண்டு. இடைவிடாமல் முயன்றால் ஆகாதனவும் கைகூடுமென்பது கருத்து.

256. முயற்சியின் சிறப்புக் கூறப்படும்.

முயலாது வைத்து - முயலாமலே யிருந்து; வைத்து : ஒரு சொன்னடை. முயற்று -முயற்சி ; " முயற்றின்மை, இன்மை புகுத்தி விடும் " (குறள், 616.) ஊழ்த்திறத்த உயலாகா - ஊழின் வழிப்பட்டனவாகிய நன்மைகள் தப்பமாட் டா ;'ஊழின் வலியால் வரும் நன்மைகள் எப்படியும் கிடைத்துவிடும். ஆத

ஊற்ற மிறுவிளக்க மூழுண்மை காண்டுமென்
றேற்றா ரெறிகான் முகத்து. (ருo)

257. உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே - உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி. (ருக)

258. கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து - மேலுந்தாம்

---

வின் முயற்சி வேண்டற் பாலதன்று' என்பாரை மறுத்தபடி. மயலாயும் - மயக்க மடைந்தாலும். ஊற்றம் இறும் விளக்கம் - வன்மை ஒழிந்த விளக்கை. ஊற்றம் - வலி; இங்கே எண்ணெய் திரி முதலியவற்றினுல் உண்டாம் வன்மை. (பி - ம்.) 'ஊற்றமி றாவிளக்கம்' ஊழ் உண்மை காண்டுமென்று - ஊழிருத்தலைச் சோதித்தறிவோ மென்று. எறிகால் முகத்து ஏற்றார் - அடிக்கின்ற காற்றுக்கு எதிரே ஏற்றமாட்டார். விளக்கத்தை ஏற்றார்.

ஊழை நினையாமலே முயலவேண்டுமென்பது கருத்து. வலியற்ற விளக்கு அவிந்து விடுவதுதானே யென்றெண்ணிக் காற்றடிக்கும் இடத்தில் ஏற்றமாட்டார்கள்; அது சிறிது நேரமாவது எரியுமென்று கருதி அவ்வளவிற் பயன் கொள்ளும்பொருட்டு அதைப் பாதுகாப்பார்கள். அதுபோல ஊழின் வலியே கருதி வாளா இராமல் தம்மால் இயன்ற முயற்சிசெய்து அம் முயற்சிக்கேற்ற பயனைப்பெற முயல்வரென்றபடி; "தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன், மெய்வருத்தக் கூலி தரும்" (குறள், 619.)

257. முயற்சியால் ஊழையும் வெல்லலாமென்பது கூறப்படும்.

உலையா முயற்சி - இடுக்கண்களுக்கு மனம் அழியாத முயற்சி. களைகணா - பற்றுக்கோடாக. ஊழின் வலி சிந்தும் - ஊழின் வன்மையையும் அழிக்கும். வன்மையும்: உம்மை உயர்வு சிறப்பு. உண்டே: ஏகாரம் தேற்றம். பால் முளை - ஊழின் முளையை. தின்று - அழித்து. மறலி - யமனது. உயிர் குடித்த - உயிரைப் போக்கிய. தின்று குடித்த என்றது ஒரு நயம். கான் முளையே - மார்க்கண்டேயரே. போலும்: அசைநிலை. கரி - சான்று.

258. வினைதொடங்கும் முன் ஆராயவேண்டுவன இவையென்பது இதிற் கூறப்படும்.

காலம் அறிந்து - தமக்கு நன்றும் காலத்தை அறிந்து. இடம் - தம் வெற்றிக்கேற்ற இடங்களை. மூலம்-காரணத்தை. விளைவறிந்து - பயனை அறிந்து.

சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். (ருஉ)

259. மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (ருங)

260. சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர் - நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது. (ருச)

---

சூழ்வனசூழ்ந்து - பின்னும் ஆராயவேண்டியவற்றை ஆராய்ந்து. துணைமை வலி - உதவியாயினாரது வன்மை; துணைமை: ஆகுபெயர். ஆள்வினை - முயற்சி. திருக்குறளில் காலமறிதல் முதலிய அதிகாரங்களில் விரிவாகக் கூறப்பட்ட நீதிகள் இங்கே ஒரு செய்யுளிற் சுருக்கிக் கூறப்பட்டமை அறியற்பாலது.

259. தாம் மேற்கொண்ட முயற்சியில் ஊக்கமுடையாரது இலக்கணம் கூறப்படும்.

மெய்வருத்தம் - உடம்பின் வருத்தத்தை. செவ்வியருமை - காலம் அரிதாயிருத்தல். அவமதிப்பும் - தம்மைப் பிறர் அவமதித்தலையும்; உம்மை உயர்வு சிறப்பு. கருமமே கண்ணாயினார் பாரார், நோக்கார், துஞ்சார், மேற்கொள்ளார், அருமையும் பாரார், அவமதிப்பும் கொள்ளாரென்க.

260. சிறுபகையை இகழ்ந்து அதனைக் களையாமல் இருத்தல் தீது என்பது கூறப்படும்.

ஓம்புதல் தேற்றார் - நீக்குதலை அறியாதவர்; தேற்றார்: தன் வினைக்கண் வந்தது, "நட்பாட றேற்றா தவர்" (குறள், 187) என்புழிப்போல. பிழைபாடு- குற்றம். நிறைந்த கயத்திலுள்ள தாழ்ந்த நீரில்; கயம் - குளம். நிழல் காண்பு - தன் நிழலைக் காணுதல்; காண்பு - காணுதல்; தொழிற்பெயர்; "மனங்கவல் பின்றி" (பொருந. 95) என்பதுபோல. வலியாற் சிறிய பகைவர் பெருவன்மை யுடையாருக்கும் தீங்கிழைப்பரென்பது உவமையால் விளங்கும்.

சிறிய பகையால் பெருந் தீங்கு விளைதல், "சிறியரென் றிகழ்ந்து நொய்வு செய்வன செய்யல்" (அரசியற். 32) என்று இராமன் கூற்றாகக் கம்பர் அமைத்த செய்யுளாலும் விளங்கும்.

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

"வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற், றீயெச்சம் போலத் தெறும்", "இளைதாக முண்மரங் கொல்க களையுநர், கைகொல்லுங் காழ்த்த விடத்து" (குறள், 674, 879) என்பன இதனோடு ஒப்புநோக்கற்பாலன.

261. புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப வனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை. (௫௫)

262. புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேருதல் வேண்டும் கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யார் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து. (௫௬)

---

261. புறப்பகையினும் உட்பகை மிக அஞ்சத்தக்கதென்பது கூறப்படும்.

புறப்பகை - புறத்தே பகைமையைப் புலப்படுத்துபவர். கோடி: பல என்னும் பொருளில் வந்தது. மிக்குறினும்: உம்மை உயர்வு சிறப்பு. முன்னேயறிந்து காக்கப்படுதலால் புறப்பகைக்கு அஞ்சாரென்றார். அகப்பகை - உள்ளே பகையை யுடையவர். காப்ப - தம்மைக் காத்துக் கொள்ளுவார்கள். "எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும், உட்பகை யுள்ள தாங் கேடு" (குறள், 889.) சொல் ஒன்றின் யாப்பார் - ஒரு சொல்லால் தம் வயப்படுத்தும் பெரியோர்; யாத்தல் - கட்டுதல். பரிந்து - வருந்தி. காமமாகிய பகையை. யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவென்க. புறப்பகைகளை அடக்கும் ஆண்மை யுடையார்க்கும் உட்பகையாய காமத்தை அடக்குதல் அருமை யென்றபடி.

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

262. உட்பகையாயுள்ளாரைத் தன்பானின்றும் விலக்குதல் வேண்டு மென்பது கூறப்படும்.

புறம் நட்டு - புறத்தே நட்புச் செய்து. அகம் வேர்ப்பார் - மனத்தில் வெறுப்பவரது. நச்சுப்பகைமை - நஞ்சு போன்ற பகைமையை. வெளியிட்டு - வெளிப்படையாகச் சொல்லி. வேருதல் வேண்டும் - உட்பகையுடையாரினின்றும் தம்மை வேருக்கிக் கொள்ளல் வேண்டும்; வேண்டும்: தேற்றவினை. (பி - ம்.) 'செய்யேல்' கருவியிட்டு - அறுத்தற்குரிய கருவியால் அறுத்து. புண்ணைக் கருவியிட்டு ஆற்றுவார்; பொதிந்து வைத்து மூடார்.

இதுவும் எடுத்துக்காட்டுவமையணி.

263. நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் - திட்பமா
நாளுலந்த தன்றே நடுவ னடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து. (டுஎ)

264. மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும் - எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர். (டுஅ)

265. இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே - அனல்கொளுந்தும்

---

263. நட்பிடை குய்யம் வைத்து - நட்பினிடத்தே வஞ்சனை செய்து; "நட்பிடைக் குய்யம் வைத்தான்" (சீவக. 253.) எய்யாவினை - பிறரால் அறியப்படாத தீய செயல்களை. வட்கார்திறத்தராய் - பகைவருடைய சார்பினராகி; வட்கார் - பகைவர் (புறநா. க00: 3, உரை.) திட்பமா - திண்ணமாக. நாள் உலந்தது - வாழ்நாள் முடிவுற்றது. உட்பகையா யிருந்து தம் தலைவர்க்குக் கேடு சூழ்வார், உயிரோடு கூடியிருப்பினும் இறந்தாரோடு ஒப்பரென்பது கருத்து; அவர் உயிர் வாழக் காண்கின்றோமே யென்று வினவுவார்க்கு 'நடுவன்.........மறந்து' என்பது விடை. அத்தகையாருடைய உயிரைக் கொள்ளாமை யமனுக்கு நடுவின்மை; நடுவின்மையால் மறந்து வாளா அவன் கிடப்பன். கிடப்பனென்றதனால் யமனை இகழ்ந்தபடி. (பி - ம்.) 'கிடத்தல்' நடுவன் - யமன்; வாளா - சும்மா. மற்று: அசைநிலை.

264. அறம் செய்தற்கு மனத்தூய்மை இன்றியமையாததென்பது கூறப்படும்.

கறுப்பு மனத்தவெனின் - குற்றங்கள் மனத்தின்கண் உள்ளனவென்றால்; மனத்திற் குற்றமாவது தீயனவற்றை நினைத்தல். "மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்து" (பெரிய. மெய்ப்பொருள்.) நல்ல செயினும்: உம்மை உயர்வு சிறப்பு. அனைத்து எவையும் - அவை யாவும். தீயவே: ஏகாரம் பிரிநிலை. எனைத்துணையும் - எவ்வளவிலும். மாசில் மனத்தினர் தீயவே செய்யினும் அவற்றை நல்லனவாக அறிஞர் காண்பவென இயைக்க; காண்ப - அறிவார்கள்.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன், ஆகுல நீர பிற" (குறள், 34.)

265. சொற்களை அவற்றின் பயன் நோக்கிக் கொள்ளவேண்டுமென்பது கூறப்படும்.

என் சொலினும் - எத்தகைய கடுஞ்சொற்களைக் கூறினாலும். இன்சொல்லே யென்றது அவை இறுதியில் நன்மையைத் தருதல் நோக்கி. என்றதனால் அவர் கூறும் இன்சொல் நன்மை பயத்தல் கூறவேண்டாத

வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும். (ருக)

266. பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து - மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல். (சுo)

267. நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய

---

தாயிற்று. இன்னார் - பகைவர். கனியும் மொழியும் - அவர் மனங்கனிந்து சொல்லும் சொற்களும். கடுவே - விஷத்தை ஒப்பனவேயாம். வெங்காரம்: ஒருவகை மருந்துச் சரக்கு. வெய்தெனினும் - வெப்பமுடையதானாலும். சிங்கி மெய்பொடிப்பக் குளிர்ந்தும் - விஷம் மெய்யில் புளகம் தோற்றும்படி குளிர்ந்ததாயினும். "மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர், பேசுற்ற வின்சொல் பிறிதென்க - ஈசற்கு, நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு, வில்லோன் மலரோ விருப்பு" (நன்னெறி.)

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

266. மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றின் தூய்மை கூறப்படும்.

குறளை - காணுத விடத்துப் பிறரை இகழ்ந்துரைத்தல். பயனில - தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் இல்லாதனவாகிய சொற்கள். பொய் முதலிய நான்கும் வாக்கின்கண் நிகழும் பாவங்கள். எய்தாமை - அடையாதபடி. சொல்லின் வழு - சொற் குற்றங்கள். புலமென்றது இங்கே பொறிகளை. அவற்றைக் காத்தலாவது மெய்யின்கண் நிகழும் கொலை, களவு, காமமென்னும் மூன்றும் நிகழாதபடி காத்துக் கொள்ளுதல். மனமாசு - மனத்தின்கண் தோன்றும் வெஃகல், வெகுளல், மயக்கமென்னும் குற்றங்கள் மூன்றும். அகற்றும் - விலக்கும்.

வழுக்காத்து, புலமைந்தும் காத்து, மாசகற்றும் நலமன்றே நல்லா றெனல்.

"கொலையே களவே காமத் தீவிழை, வுலையா உடம்பிற் றோன்றுவ மூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும். வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென், றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப், பத்து வகையாற் பயன்றெரி புலவர், இத்திறம் படரார்" (மணி. உச: 125-132.)

267. பெரியோர் வறுமையிலும் தம் இயல்பினின்றும் மாறுபடாரென்பது கூறப்படும்.

நல்லாறொழுக்கின்றலை நின்றார் - நல்ல நெறியின்கண் ஒழுகுதலில் நிலைபெற்றவர்; நல்லாறு முன்பாட்டிற் கூறப்பட்டது. ஒழுக்கு - ஒழுகுதல். நல்கூர்ந்தும் - வறியரானாலும். அல்லன - பாவச் செயல்களை. ஒருப்படார் -

செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். (௨௬௭)

268. குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவுந் தவம்விற்றூ
னோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்த றலை. (௨௬௮)

269. இடைதெரிந் தச்சுறுத்து வஞ்சித் தெளியார்
உடைமைகொண் டேமாப்பார் செல்வம் - மடநல்லார்

---

உடன்படமாட்டார். பல் பொறிய-பல வரிகளையுடைய. அறப் பசித்தும் - மிகப் பசித்ததாயினும். பைங்கண் புனத்த - பசிய இடத்தையுடைய புனங்களிலுள்ளனவான. பைங்கூழ் - பயிரை. புலியேறு பைங்கூழைத் தின்னுவாம்.

"புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத், தூனுடை யாளர்" (புறநா. ௧௧௦ 10-11), "உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும், குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றூர், இடுக்கண் டலைவந்தக் கண்ணு மரிமா, கொடிப்புற் கறிக்குமோ மற்று" (நாலடி, 141), "ஒற்கந்தா முற்ற விடத்து முயர்ந்தவர், நிற்பவே நின்ற நிலையின்மேல் - வற்பத்தால், தன்மே னலியும் பசிபெரி தாயினும், புன்மேயா தாகும் புலி" (பழமொழி, 119) என்பன இதனோடு ஒப்பு நோக்கற்பாலன.

268. பொருள் ஈட்டுதற்கண் விலக்கத்தக்கவை இவையென்பது கூறப்படும்.

குலம் - குலவொழுக்கம். வெறுக்கை - செல்வம். வாய்மை நலம் - வாய்மையாகிய நன்மையை. திரு - செல்வம். தவம் விற்று - தவத்தை அழித்து; ஊன் - உடம்பை; ஆகுபெயர். வாழ்வு - செல்வம். உரிமை - மனைவி; "உரிமைமுன் போக்கி யல்லா லொளியுடை மன்னர் போகார்" (சீவக. 272.) தான் - ஒருவன். ஓம்பிக் காத்தல்-தம்பால் வாராதபடி குறிக்கொண்டு காத்தல். தலை - மிகச் சிறந்தது.

வெறுக்கையையும் திருவையும் வாழ்வையும் உண்பதையும் ஓம்பிக் காத்தல் தலை. வறுமை நிலை அடையினும் குலம் முதலியவற்றைப் பாதுகாத்தல் வேண்டும்.

269. வஞ்சனையால் ஈட்டும் பொருள் முடிவில் அழியுமென்பது கூறப்படும்.

இடை - பிறர் சோர்வுற்ற சமயம்; இடை - சமயம்; "உடையோர் போல விடையின்று குறுகி" (புறநா. ருச.) அச்சுறுத்து - அஞ்சுவித்து. (பி - ம்.) 'அஞ்சுறுத்து' எளியார் உடைமை கொண்டு - வலியரல்லாரது

பொம்மன் முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும். (௬௯)

270. பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா. (௭௰)

271. தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி - எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள். (௭௧)

---

செல்வத்தைக் கொண்டு. ஏமாப்பார் - இன்புறுவாரது ; ஏமாத்தல் - இன்புறுதல் ; "காமர் நெஞ்ச மேமாந் துவப்ப" (புறநா. ௧௬௮ : 8.) பொம்மல் - பருத்தல். பருத்திடினும் - மேன்மேற் பெருகியதாயினும். செல்வம் பருத்திடினும் தேய்ந்து விடும். பருத்திடினும் :உம்மை எதிர்மறை. முதற்கண் பெருகுவது போற்றோன்றினும் பின் அழிந்துவிடுமென்றபடி. "அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும், பிற்பயக்கு நற்பா லவை" (குறள், 659.)

270. பேராசையின் குற்றம் கூறப்படும்.

பெற்ற - தாம்பெற்ற பொருள்களை. சிறுக - சிறியனவாக. பெறாத - தாம்பெறாத பொருள்களை. பெரிதாக உள்ளும். சிற்றுயிர் - சில வாழ்நாளையுடைய உயிர்கள். அரிது - இல்லை. அம்மா : வியப்பிடைச்சொல். முற்றும் - முழுதும். வாய் மடுத்து - உண்டு. விராய் - விறகு. மாயாதிரா : அழியும் என்றபடி.

தழல் அழிதல்போலப் பற்றுள்ளானொருவன் அதனோடு தானும் அழிவனென்றபடி. தான் பெற்றவற்றையே பெரியனவாகக் கருதிச் சிந்தை நிறைவைப் பெறாமல் பெற்றவை சிறியவாகவும் பெறாதன பெரியவாகவும் எண்ணி ஏங்குவானுக்கு என்றும் ஆக்கமில்லை யென்பது கருத்து.

271. பொருளீட்டும் முறை கூறப்படும்.

குடிமை - குடிப்பிறப்பு. ஒத்த கடப்பாட்டில் - நிலை குடிமை ஆதியவற்றோடு பொருந்திய கடமையில். தாள் ஊன்றி - முயற்சியை நாட்டி. எய்த்தும் - மனம் சோர்ந்தும். அறங்கடை - பாவம். அறங்கடையிற் செல்லாராய்ப் பிறன் பொருளும் வெஃகாரது புறங்கடையிலுள்ளதாகும் பொருள். "ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா, வூக்க முடையா னுழை" (குறள், 594) என்பது இதனோடு ஒருவாறு ஒப்புமையுடையது.

272. பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
குலமகளே யேனையோர் செல்வம் - கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவதில். (சுசு)

273. வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான். (சுஎ)

274. ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓஓ கொடிது கொடிதம்மா நாகொன்று

---

272. இது முதல் ஈகையின் சிறப்புக் கூறப்படும்.

தலையாயார் செல்வம் பொதுமகளே போல்வ; பலர்க்கும் பயன் படுதல் பற்றிப் பொதுமகளை உவமையாகக் கூறினர். ஏனையோர் - இடையாயார்; தலையாயாரென்றும் கடையாயாரென்றும் தனித்தனி வகுத்தமையின் ஏனையோரென்றது பாரிசேடத்தால் இடையாயாருக்கு ஆயிற்று. ஏனையோர் செல்வம் குலமகளே போல்வ எனப் பின்னும் போல்வ வென்பதைக் கூட்டுக; தமக்கு மட்டும் பயன்படுதல் பற்றி இடையாயார் செல்வத்திற்குக் குலமகளை உவமையாக்கினர். கலன் - இங்கே சிறப்புப்பற்றி மங்கலநாணைக் குறிக்கும். ஒருவருக்கும் பயன்படாமை பற்றிக் கடையாயார் செல்வத்திற்குக் கைம் பெண்டிர் நலம் உவமையாயிற்று.

273. செல்வம் படைத்தும் ஈயாதாரது இழிவு இதிற் கூறப்படும்.

வள்ளன்மை - வரையாது கொடுக்கும் தன்மை. செல்வத்தின் - செல்வத்தைக்காட்டிலும். மற்றையோனென்றது வறியவனை. நல்குரவே நனி நல்ல போலும்; நனி - மிகவும். கொன்னே - ஒரு பயனுமின்றி. அருள் - தொடர்பில்லாதார் மேலும் செல்லும் நேயம்; அன்பு - தொடர்புடையார்மேற் செல்லும் நேயம். கண்ணறையன் - கண் அற்றவன்; கண்ணோட்டமில்லாதவன்; காதறை, மூக்கறை போன்றது இது; அறை - அறுதல்.

பின்னிரண்டடிகள் நல்குரவு நல்லதென்பதற்குக் காரணம் கூறியபடி. வள்ளன்மையில்லாதான் அருளிலன் அன்பிலன் கண்ணறையனென்று இகழப்படுவான் என்பதை எதிர்மறை வாய்ப்பாட்டால் உணர்த்தினர்.

274. ஈதல் இல்லையானாலும் இன்சொல்லேனும் வேண்டு மென்பது கூறப்படும்.

அரிதெனினும்: உம்மை இழிவு சிறப்பு. இன்சொலினும் நல்கூர்தல் - இன்சொற் கூறுதலிலும் வறியவராதல்; இன்சொல்லைக் கூறாதிருத்தல்; உம்மை இழிவு சிறப்பு. ஓஓ கொடிது; ஓகாரம் சிறப்புப் பொருளது. (பி-ம்.) 'ஓகோ' கொடிது கொடிது; அடுக்கு; மிகுதிபற்றி வந்தது. நா கொன்று -

தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றுவா விவரென்செய் வார். (௬௮)

275. சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல - வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர். (௬௯)

276. சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழார் - அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக் லார். (௭௦)

---

நாவை வருத்தி. தீவினையாகிய கம்மியனால். வாய்ப்பூட்டு - வாயாற் பேச முடியாதபடி போடப்படும் ஒரு கருவி. ஆவா: இரக்கக் குறிப்பு: இடைச் சொல்; "ஆவா விருவ ரறியா வடிதில்லை யம்பலத்து, மூவா யிரவர் வணங்க நின்றோனை" (திருச்சிற்.72.) இன்சொற் கூறுதானைக் குற்றத்தினின்று நீக்குவார் போல ஒரு காரணம் கூறினர்; 'அவன்பாற் குற்றமில்லை, அவன் செய்த தீவினைதான் அதற்குக் காரணம்' என்றார்.

இச்செய்யுள் புகழ்வதுபோலப் பழித்தபடி.

275. சொல்வன்மை யுடையார் அதனைப் பயனின்றி விடுத்தல் கூடா தென்பது கூறப்படும்.

கொன்னே - அதனால் ஒரு பயனும் அடைதலின்றி. நல்வினை கோறலின் - நல்வினைகளை அழித்தலினின்றும். வேறு அல்ல - வேறுபாடுடையது அல்ல. நல்வினையை அழித்தலோடு ஒத்ததே யென்பது கருத்து. வல்லை - விரைவில். ஆக்கம் - செல்வம். கெடுவதுளதெனினும்: உம்மை உயர்வு சிறப்பு. வாக்கின் பயன் கொள்பவர், ஆக்கம் கெடுவதுளதெனினும் அஞ்சுப வோ? அஞ்சமாட்டாரென்பது கருத்து.

தம் சொல் வன்மையினால் சந்தி செய்வித்தல் முதலிய நல்வினைகளை யாற்றும் ஆற்றலுடையவர் தம் ஆக்கம் இழப்பினும் அவற்றைச் செய்வர்.

276. ஆங்கு: அசைநிலை. உறு பயன் - மிக்க பயனை. கொள்ளப் பெறும் - கொள்ளக்கூடும். தாழ்வரோ - முயற்சி செய்யத் தாமதிப்பரோ. (பி - ம்) 'தாழ்ப்பரோ' அறன் அல்ல - பாவச்செயல்கள். எண்மைய ஆயினும் - செய்தற்கு எளியன வாயினும். அரிது எனினும்-செய்தற்கு அரிதானாலும்; அரிது: சாதி ஒருமை. ஒண்மையின் தீர்ந்து ஒழுகலார் - அறச்செயல் களினின்றும் நீங்கி ஒழுகாத பெரியோர். ஒண்மையிற் றீர்ந்தொழுகலார் தாழ்வரோ என இயைக்க.

277. செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னும் - செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று. (எக)

278. அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டொல்லாதார் வாய்விட் டுலம்புப - வல்லார்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற் பார். (எஉ)

---

277. தம்மால் ஆகாதவற்றையும் செய்வதாகக் கூறுவாரது இழிவு கூறப்படும்.

செயக்கடவ அல்லனவும் - தம்மாற் செய்யக்கூடாதவற்றையும். மன் செய்தும் என்பார் - மிகவும் செய்து விடுவோ மென்பாருடைய. நயத்தகு - விரும்பத்தக்க. நாகரிகம் - கண்ணோட்டம்; "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்" (குறள், 580.) நாகரிகமென்றது இங்கே குறிப்பு மொழி, கண்ணோட்டமின்மையைக் குறித்தலால். செயிர்த்து உரைப்பின் - பிறரைக் கோபித்து உரைத்தால். நெஞ்சு நோம் - கோபித்து உரைக்கப்பட்டவருடைய மனம் வருந்தும். தலை துமிப்பான் தண்ணளி போன்று - அவர் வருத்தப்படா திருத்தற் பொருட்டு அவர் தலையை வெட்டு பவனுடைய கொடுஞ்செயலைப் போல; தண்ணளி: குறிப்பு மொழி. எஞ்சாது - குறையாமல். எடுத்துரைக்கற்பாற்று - பலரறிய எடுத்துச்சொல்லும் பான்மையை யுடையது. செய்து மன்னென்பார் நாகரிகம் எடுத்துரைக்கற் பாற்றென இயைக்க.

கண்ணோட்டங் கருதித் தம்மாற் செயக்கடவ அல்லாதவற்றைச் செய்வ தாக உறுதி கூறி இடர்ப்படுதல் பிழையென்பது கருத்து.

278. புல்லியர் ஆரவாரமும் நல்லோர் அறிமடமும் கூறப்படும்.

அல்லன செயினும் - தீய செயல்களைச் செய்தாலும். ஆகுலம் கூழாக் கொண்டு - ஆரவாரத்தையே பயனாகக் கொண்டு. ஒல்லாதார் - வன்மையில் லாதார். (பி-ம்.) 'ஒல்காதார்' உலம்புவ - முழங்குவர். வல்லார் - ஒரு நல் வினையைச் செய்து முடிக்கும் ஆற்றலுடையார். பிறர் பிறர் செய்வபோல் - பிறர் செய்வன போல. செய் தக்க செய்து - செய்யத்தக்க அறங்களைச் செய்து. அறிமடம் பூண்டு நிற்பார் - தாம் அறிந்திருந்தும் அறியாதார் போல இருப்பர்.

ஒல்லாதார் அல்லன செய்யினும் வாய்விட்டு உலம்புப; வல்லார் செய் யத்தக்க செய்து, அறிமடம் பூண்டு நிற்பார்.

279. பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான் பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்போற்
கைவிதிர்த் தஞ்சப் படும். (எ௩)

280. தெய்வ முளதென்பார் தீய செயப்புகிற்
றெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்த மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன். (எ௪)

281. தீய செயற்செய்வா ராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல - தீயன

---

279. பிறர்பழி கூறுவானது இழிவு கூறப்படும்-

பகையின்று - தனக்கு யாதொரு பகையும் இல்லாமலிருப்ப. நகை ஒன்றே - அதனால் தானடையும் மகிழ்ச்சி ஒன்றையே; நகைத்தல் ஒன்றையே எனலும் ஆம். பயமின்று - தான் கொள்ளும் பொருளாகிய பயனில்லையாகவும். மெய் விதிர்ப்புக் காண்பான் - வழிப்போவாரது உடல் துடித்தலைக் காணும்பொருட்டு. கொடிறு உடைத்துக் கொல்வான் போல் - கன்னத்தில் அடித்து வருத்தும் வேடன் அஞ்சப்படுவதுபோல்; "கொடிறுடைக்குங் கூன்கையர்" (குறள், 1077); "கடுங்கண் மறவர்தாம், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்" (கலி. ௪: 3-5.) கைவிதிர்த்தல் அச்சக்குறிப்பு; "வினையது விளைவு காண்மினென்றுகை விதிர்த்து நிற்பார்" (சீவக. 1108.) அஞ்சப்படும் - அஞ்சப்படுவான். பயனுக் கொள்வான் அஞ்சப்படுமென இயைக்க.

280. 'கடவுள் உண்டென்பாருக்கே மிக்க துன்பங்கள் வாழ்க்கையில் உண்டாகின்றன' என்று கூறுவாரை நோக்கி அதற்கொரு காரணம் எடுத்துரைப்பார்.

தீய - தீய செயல்களை. செயப்புகின் - செய்யத்தொடங்கினால்; புகின் என்பது அவர் தீய செயல்களைச் செய்யாமையே இயற்கை யென்பதை விளக்கிநின்றது. கண் இன்று - கண்ணோட்டமில்லாமல்; கண்-கண்ணோட்டம்; ஆகுபெயர்; இன்று - இன்றி. ஒறுக்கும் - தண்டிக்கும். இல்லை - யாதொரு தண்டனையும் இல்லை. இன்புதல்வர்க்கு அன்றே - தமக்குப் பல புதல்வரிருப்பினும் தம்பால் அன்புள்ள புதல்வருக்கு அல்லவா. பலகாலும் பயன் சொல்வார் - பல முறையும் பயன்படுவனவற்றைப் பெற்றோர் கூறுவர்; இதனை மறக்கருணை யென்பர்.

281. தீய செயல்களால் ஆக்க முண்டாயினும் அவை நல்லனவாகா என்பது கூறப்படும்.

நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல். (எரு)

282. நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர் - முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில. (எசு)

283. பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே யாயினு மாக - சிறுவரையும்

---

செயலைச் செய்வார். ஆக்கம் பெருகினும் - செல்வம் மேலும் மேலும் பெருகினாலும்; பெருகினும் என்றதனால் பெருகாமை குறிக்கப்பட்டது. வேறல்ல - நல்லன ஆகா என்றபடி. தீய செய்வாருக்கு ஆக்கம் பெருகினும் அதற்குக் காரணம் தீய செயல்கள் அல்ல, முற்பிறப்பிற் செய்த நல்வினையே யென்று அறிதல் வேண்டும் என்பது கருத்து; "அவ்விய நெஞ்சத்தா னாக்க முஞ் செவ்வியான், கேடு நினைக்கப் படும்" (குறள், 169) என்பதும் அதன் உரையும் இங்கே அறிதற்பாலன.

நா இன்புற நக்கி - நாவினால், நக்கப்படுவோர்க்கு இன்பமுண்டாகும்படி நக்கி; ஆமான் நக்குங்காற் பிறக்கும் இனிமையே இங்கே உவமை (சீவக. 189, ந.); "ஆமாபோ னக்கி" (நாலடி. 377.) கவயமா - காட்டுப்பசு. கவய மாப் போல் தீயன நல்லன ஆகாவாமெனa இயைக்க. (பி - ம்.) 'கவயமாப் போன்ம்'

282. சான்றோர் சில தீயவற்றைச் செய்யினும் தம்பெருமை குன்றா ரென்பது இதிற் கூறப்படும்.

செந்நாத் தழும்பிருக்க வென்றது நாத்தழும்பேறும்படி புகழ வென்ற படி; "நாத்தழும் பிருக்க வேத்துமி னீரே" (700); "பூத்தலை யறா அப் புனை கொடி முல்லை, நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்" (புறநா. உ00 : 9 - 10.) நாள்வாயும் - நாள்தோறும்; "நாள்வாயு நல்லறஞ் செய்வார்க்கு" (பழ மொழி, 6.) செந்நெறிச் செல்வாரின் - செம்மையான அறநெறியில் ஒழுகு பவரைக் காட்டிலும். கீழ் அல்லர் - தாழ்ந்தோரல்லர்; ஒப்பவரே யென்றபடி. ஊழ்வலி உன்னி-தாம் தீமை செய்தற்குக் காரணமான ஊழின் வன்மையை நினைத்து. பழி நாணி - உலகத்தார் கூறும் பழிச்சொல்லுக்கு வெட்க முற்று. உள் உடைவார் - மனம் வருந்துபவர். உள்ளுடைவார் சில தீய செயினும் செந்நெறிச் செல்வாரிற் கீழல்லரென இயைக்க.

283. இதுமுதல் 8 செய்யுட்களால் இன்பம் கூறப்படும்.

பிறர்மனை நயத்தலின் தீமை இதிற் கூறப்படும்.

பிறன்வரை நின்றாள் -பிறனது எல்லைக்கண் நின்றவள்; பிறன் மனைவி; "பிறன்வரையாள்" (குறள், 150) என்றார் திருவள்ளுவரும். கடைத்தலைச் சேறல் - அவளது இன்பத்தை விரும்பி அவள் வீட்டு வாயிலிடத்தே சென்று

நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய். (எஎ)

284. கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே - பெரிதுந்தம்
இன்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த னலம். (எஅ)

285. கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார் பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார். (எகூ)

---

நிற்றல். சிறுவரையும் - சிறிது பொழுதாயினும். நல் நலத்தது - நல்ல இன்பத்தைத் தருவது. நலம் அன்று - இன்பம் அன்று. அது மெய்ந்நடுங்க மனம் நடுங்க வருவதொரு நோயாகும்.

பிறர் மனை நயப்பவர் அறமல்லாததைச் செய்தவராவதோடு எப்போதும் அச்சத்தை அடைதலால் தாம் கருதிய இன்பமும் பெறுதவரென்பது கருத்து.

"புக்க விடத்தச்சம் போதரும் போதச்சம், துய்க்கு மிடத்தச்சந் தோன்றாமைக் காப்பச்சம், எக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ, உட்கான் பிறனில் புகல்", "காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும், மாணின்மை செய்யுமா லச்சமால் - நீணிரயத், துன்பம் பயக்குமாற் றுச்சாரி நீகண்ட, இன்ப மெனக்கெனைத்தாற் கூறு" (நாலடி. 83-4) என்பன இங்கே ஒப்பு நோக்கற்பாலன.

284. சிதையாமே - அழியாதபடி. இல் நலமும் - இல்வாழ்க்கையின் நன்மையும். குன்றாமே - குறையாதபடி. ஏர் - அழகையுடைய. கொம்பன்னாரது நலந் துய்த்தல் நலம்; துய்த்தல் - அனுபவித்தல். சிதையாமே, கெடாமே, தாழ்வுபடாமே, குன்றாமே என்னும் எதிர்மறையெச்சங்கள் அடுக்கித் துய்த்தல் என்னும் தொழிற்பெயரோடு முடிந்தன.

285. காமத்தின் தீமை இதிற் கூறப்படும்.

கொலை செய்தற்கு அஞ்சார். பொய் கூறுதற்கு நாணார். மானமும்: உம்மை உயர்வு சிறப்பு, மானம் உயிரினும் சிறந்ததாதலின். களவொன்றோ: களவு மட்டுமா செய்வாரென்றபடி; ஒன்றோ: எண்ணிடைச்சொல்; "அறனொன்றோ வான்ற வொழுக்கு" (குறள், 148.) பழிபாவம் என்னார்; "பகை பாவ மச்சம் பழியென நான்கும், இகவாவா மில்லிறப்பான் கண்" (குறள், 146.) பிறிதென் செய்யார். மற்று: அசைநிலை, காமங் கதுவப் பட்டார் - காமத்தாற் பற்றப்பட்டவர்; எழுவாய். காமங் கதுவப்பட்டார் அஞ்சார், நாணார், ஓம்பார், செய்வார், என்னார், என் செய்யார்.

286. திருவினு நல்லாண் மனைக்கிழத்தி யேனும்
பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பர் - நறுவிய
வாயின வேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர். (அ௦)

287. கற்புடுத் தன்பு முடித்து நாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோ ராக்கமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு. (அக)

288. ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - வாய்ந்த

---

286. மனைக்கிழத்தி திருவினும் நல்லாளேனும் - தம் மனைவி திருமகளைக் காட்டிலும் அழகில் மிக்கவளாயினும். பீடு அழிந்து - பெருமை கெட்டு. நறுவிய வாயினவேனும் - நல்ல சுவையுடைய இரைகள் வாயின்கண் உள்ளன வாயினும். கடு - கடுக்காய் போன்ற கைப்புச் சுவையுடையவற்றை; "வேம்புங் கடுவுந் தேம்பிழி யாக" (700); "வேம்புங் கடுவும் போல வெஞ்சொற், றுங்குதலின்றி" (தொல். செய். 112.) விலங்கின் - விலங்குகளைப்போல. சிலர், விலங்கின், பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பார். "வம்புலாங் கூந்தன் மனைவியைத் துறந்து பிறர்பொரு டாரமென் றிவற்றை, நம்பினர்" (பெரிய திரு. க. 6 : 4) என்பதையும் அதன் வியாக்கியானத்தையும் பார்க்க.

287. நன்மக்கட்பேற்றின் சிறப்புக் கூறப்படும்.

கற்புடுத்து - கற்பாகிய ஆடையை உடுத்து; "மணிபொன்னும் சாந்தமும் மாலையு மின்ன, அணியெல்லா மாடையின் பின்" (பழமொழி, 271) என்பராதலின் கற்பை முதலில் ஆடையாக்கிக் கூறினர். அன்பு முடித்து - அன்பாகிய மலரைச் சூடி. நாண் மெய்ப்பூசி - நாணமாகிய சந்தனத்தை மெய்யின் கண் பூசி. பூண்டாட்கு என்றமையால், நற்குண நற்செய்கைகளை அணிகளெனக் கொள்க. ஆக்கம் - செல்வம். கொண்டாற்கு - கணவனுக்கு. செய்தவம் வேறு இல்லன்றே.

288. எழில்-எழுச்சி; வளர்ந்தமைந்த பருவத்தும் வளர்ந்துமாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டும் அழகு (தொல். பொருளியல், 53,ந.) இசையில் வல்லவன். காந்தையர்-பிறமகளிருடைய; காந்தையரென்பது மகளிரென்னும் பொதுப்பொருளில் நின்றது. நோக்கம்-பார்வை. நயன் உடை இன் சொல்லான் - அன்புள்ள இன்சொற்களை யுடையவன்,

நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம். (அஉ)

289. கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர் - மற்றுத்தம்
கேள்வற்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார். (அங)

290. முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு நெடுநாணும் பேணார் - பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு. (அச)

291. பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார் - பண்ணொடு

---

கேள் - கணவன்; எழுவாய். கேள் எழில் மிக்கான், இளையான், இசைவல்லான், நோக்கத்தான், இன்சொல்லான் எனினும் என்க. மாதர்க்கு - மகளிர்க்கு. மனம் அயலார்மேல் ஆகும்.

289. இதுமுதல் இரண்டு பாட்டுக்களால் கற்பில்லாத குலமகளிரது இழிவு கூறப்படும்.

கற்பில் மகளின் - கற்பில்லாத குலமகளைக் காட்டிலும். நலத்தை விற்று. பொற்றொடி நல்லார் : வரைவின் மகளிர். அவர் நல்லராதற்குக் காரணம் பின்னிரண்டடிகளிற் கூறப்படும். கேள்வன் - கணவன். ஏதிலர் - அயலார். கிளைஞர் - சுற்றத்தார். கேடு - பழி பாவம் முதலியன.

290. குடிமை - குடிப்பிறப்பு; "பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா" (சீவக. 1597.) பான்மை - வருணத்தின் தன்மை. பால் - வருணம்; "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்" (புறநா. கஅங : 8.) நிறை - மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்துதல். நெடுநாண் - நெடுங் காலமாக உள்ள நாணம்; "நாணொ டுடன்பிறந்த நான்" (முத். 98.), "என்னொடும் வளர்ந்த, பொற்பார் திருநாண்" (திருச்சிற். 208)என்று கூறப்படுதல் காண்க. பேதைமைக்குப் பிறிதும் ஒரு பெற்றிமையுண்டோ. பெற்றிமை - தன்மை; என்றது, "நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும், பேணாமை பேதை தொழில்" (குறள், 833) என்பதை நினைந்து கூறியது.

கற்பில்லாத மகளிர் பிறப்பு, பெரும்பாவம் என்க.

291. இதுமுதல் 18-செய்யுட்களால் துறவறத்தின் இலக்கணம் கூறப்படும்.

பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார். (அரு)

292. துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம்
அயிற்சுவையி னுருவவென் றெண்ணி - அயிற்சுவையும்
பித்துணுக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணு மொய்ம்பி னவர். (அசு)

293. அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார் - புன்புலாற்

---

துறவறத்தார்க்கு ஆகாத சில செயல்கள் இச்செய்யுளிற் கூறப்படும்.

பெண்மை வியவார் - பெண் தன்மையை வியந்து பேசார். அவர் பெயர் களையும் எடுத்துச் சொல்லார். நெஞ்சுறைப்ப - நெஞ்சு அழுந்த. பண் - பாலைப் பண் முதலியன. மகளிர் பாடும் பண்ணையும் பாடலையும் செவிமடார்; செவி மடார் - கேளார். துறவிகள் இசையை விரும்பிக் கேளாரென்பது, "மடந்தை யர் மொழியுங் கானமுன் கேட்டு மன்னவன் மகண்முலை மணந்தான், கடந் திரி கலையின் கோடுபெற் றுயர்ந்த கருதருந் தவனெனல் கேட்டும், படர்ந்திள மறிமான் வேட்டுவன் பாடும் பண்செவி மடுத்தவன் வலைமேல், கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன்" (பாகவதம், கக : ஆசிரியரை யுரைத்த. 15) என்னும் செய்யுளால் விளங்கும். தாம் அஞ்சித் துறந்த காமத்தைப் பண் ணும் பாட்டும் மிகுவிக்குமாதலின் பண்ணொடு பாடல் செவிமடாரென்றார். "கிளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம, விளைபயன்" (சீவக. 2598) என்பதனாலும் இஃது அறியப்படும். வீடு இல் - வீடு இல்லாத; வீடு - விடுதல்; "வீடில் பட்டினம்" (சீவக. 38, ந.).

292. தவஞ்செய்வார்க்குரிய விரதங்களுள் உண்டி சுருக்கலொன் றென்பது இதிற் கூறப்படும்.

துயிற்சுவை - தூக்கத்தின் இன்பம். தூ நல்லார் தோட்சுவை யென்றது காம இன்பத்தை. அயிற் சுவையும் - உணவின் சுவையையும். பித்து உணுக்கொள்பபோல் - பித்துடையவர் சுவையறியாமல் உணவு கொள்ளுத லைப்போல. பிறராகிய சிலரைப்போல. மொத்துணு மொய்ம்பினவர் - புலன்களால் துன்பப்படாத வன்மையுடையவர்.

பேருண்டி, துயில், காமம் முதலிய தாமத உணர்ச்சிகளை உண்டாக்குவ தாதலின் துறவியர் அதனை விரும்பாரென்றபடி.

மொய்ம்பினவர் கொள்ப வென்க.

293. துறவொழுக்கம் பூண்டார் தம் உடலைப் பாதுகாப்பதிற் கருத்துக் கொள்ளா ரென்பர்.

உயிர்நிலை - உடம்பு; உயிர் நிற்றற் கிடனாதலின் இங்ஙனம் கூறினார் (குறள், 290.) என்பு இயக்கம் - எலும்பு வெளியே தோன்றி அசைதல்;

பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார். (அஎ)

294. சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடப - முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில். (அஅ)

295. எவ்வினைய ரேனு மிணைவிழைச் சொன்றிலரேற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம் - அவ்வினை
காத்த லிலரே லெனைத்துணைய ராயினும்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர். (அகூ)

296. பரபரப்பி னோடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப - ஒருவாற்றான்
நல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப
எவ்வாற்றா னுய்வா ரிவர். (கூ௦)

---

"என்பெழுந் தியங்கும் யாக்கையர்" (முருகு. 130.) புன்புலால் - புலாலுண்ணும் சாதியாரும் விரும்பாத புன்மையையுடைய ஊன்; "புலையனும் விரும் பாதவிப் புன்புலால் யாக்கை" (அரிச்சந்திர.) பொய்க்குடில் - உடம்பு. போதம் - ஞானம். அதனால் வேய்ந்த புக்கிலென்றது முத்தியை; "பரந்தாமப் புக்கில்" (638.) புக்கில் - எஞ்ஞான்றும் இருப்பதற்குரிய இல்லம் (குறள், 340.) குடிபுகுதுவார் ஓம்புவரோ? ஓம்பாரென்றபடி. "ஞானத்தால் வீடாக நாட்டு" (சிறுபஞ்ச. 36) என்பவாகலின் போதத்தால் தாம் வேய்ந்த புக்கிலென்று வீட்டைக் கூறினர்.

294. ஞானியர் உலக இன்பத்தை விரும்பாரென்பர்.

சின்னீரது - சிறிது காலமே நிற்கும் இயல்பினது (209.) முற்றும் - கால முழுதும். கும்பி - சேறு. கடலில் ஆடுவார் கும்பியில் வீழாரென்றது ஒரு நயம்.

295. தவவிரதம் பூண்டார் மகளிர் இன்பத்தை விழையாரென்பர்.

வினை - தவச்செயல். இணைவிழைச்சு - புணர்ச்சி.(பி-ம்.) 'ஒன்றில்லெனில்' தெவ்வும் - பகைஞரும். அவ்வினை - அந்த இணைவிழைச்சை. தூர்த்தரும் - காம நுகர்ச்சியில் மிதூர்ந்தவர்களும். அலர் தூர்ப்பார் - பழிமொழிகளைக் கூறுவார்.

296. பரபரப்பு - மிக்க விரைவு. பாழுக்கு இறைப்ப - பாழ் நிலத்திற்கு நீர் இறைப்பார்கள்; என்றது பயனற்ற செயல்களைச் செய்வார்கள் என்றபடி; "ஏழைத் தொழும்பனே னெத்தனையோ காலமெலாம், பாழுக் கிறைத்தேன்" (திருவா. தோணோக். 13.) ஒருவாற்றான் - ஒருவகையால். நல் ஆற்றின் ஊக்கின் - நல்வழியே செல்லும் வண்ணம் ஊக்கத்தை உண்டாக்கினால். பதறிக் குலைகுலைப - அவ்வழியிற் செல்லுதற்கு அஞ்சி நடுங்குவார்.

297. இளைய முதுதவ மாற்றுது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூழே - விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம். (கூக)

298. நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கும் - எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல் (கூஉ)

---

பயனற்ற செயல்களையே செய்து காலம் போக்கியும், பிறர் அறிவுறுத்திக் கூறியும் நற்செயல் செய்ய நடுங்கியும் வாழ்வாரை நினைந்து இரங்கியபடி.

297. இளையம் - நாம் இப்போது இளம்பருவத்தை யுடையேம். முது தவம் ஆற்றுதும் - முதிய பருவத்திலே தவத்தைச் செய்வோம். முது - முதுமை. நோற்று - விரதங்களை மேற்கொண்டு. என்று - என எண்ணி. உளைவின்று - மனத்திற் கவலையின்றி. கண்பாடும் - தூங்குதலும்; தவஞ் செய்யாது வாளாவிருத்தலைக் குறித்தபடி. ஊழே - விதியின் பயனே; இஃது அங்ஙனம் செய்யாரை நினைந்து இரங்கியபடி. விளிவு இன்று - இளமையிலேயே இறத்தல் இல்லாமல். வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் - தம் வாழ்நாளின் எல்லை நீண்டிருத்தலை அறிந்தாரேல்; அறிதல் அரிதென்றபடி; "சென்றநாளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலாம், நின்றநாள் யார்க்கு முணர்வரிது" (அறநெறிச்சாரம், 63.) காண்பரேல் கண்பாடும் ஊழென்க. தாழாமே - முதுமை வரும்வரையில் தாமதம் செய்யாமல். காண்பாரும் தவம் நோற்பார்.

"நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர். குழவி யிடத்தே துறந்தார்", "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது, கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்" (நாலடி, 11, 19) என்பவற்றின் கருத்துக்கள் இச்செய்யுளில் அமைந்துள்ளன.

298. புண்ணிய முடையார்க்கே தவஞ்செய்தல் கூடுமென்பார்.

நோனுமே - செய்வதைப் பொறுமல். அல்லன - பாவங்கள். அல்லவற்றில் - தீய வழியில். கொண்டுய்க்கும் - கொண்டு செலுத்தும். எல்லி - இரவில்; "எல்லியம் போது வழங்காமை முன்னினிதே" (இனியவை. 34.) வியல் நெறிச் செல்வாரை - அகன்ற வழியிற் செல்பவரை. செலவு பிழைத்து - செல்லும் வழியைத் தப்பச் செய்து; பிழைத்து - பிழைப்பித்து; "குடிபொன்றிக், குற்றமு மாங்கே தரும்" (குறள், 171) என்பதில் பொன்றுவித்தென்பது பொன்றியென வந்தாற் போன்றது இது. உய்ப்பபோல் - தவறான வழியில் செலுத்தல்போல.

ஆறலைத் துண்பார் செலவு பிழைத்துய்ப்பபோல், அல்லன நோனுமே அல்லவற்றிற் கொண்டுய்க்கு மென்க.

299. நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே - கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது. (௬௩)

300. வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தே மென்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு. (௬௪)

301. மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்குங் கழிமுடைப்
புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினும்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து. (௬௫)

---

"தவமுந் தவமுடையார்க் காகும்" (குறள், 262) என்பதன் பொருளைத் தழுவி வந்தது இது.

299. உள்ளத் துறவின் சிறப்புக் கூறப்படும்.

நெஞ்சு புறம்பா - நெஞ்சு தம் வயப்படாமல் அயலதாக இருப்ப. தவப் போர்வை - தவவேடமாகிய போர்வை; தம்மைப் பிறர் ஐயப்படா திருத்தற் பொருட்டுக் கொண்டதாதலின் அதனைத் தவப்போர்வை யென்றார்; அதனை, "வலியி னிலைமையான் வல்லுருவம்" (குறள், 273) எனத் திருவள்ளுவரும் கூறுதல் காண்க. கஞ்சுகம் - சட்டை. எப்புலமும் காவாமே - எந்தப் பொறி களின் தொழிலையும் பாதுகாவாமல். மெய்ப்புலம் - மெய்யாகிய இடத்தை. இப்புல மென்றது உடம்பை; இப்புலமும்: உம்மை இழிவு சிறப்பு. ஏனைய கஞ்சுகம், பனி மழை முதலியவற்றினின்றும் உடம்பையேனும் பாதுகாக் கும்; தவப்போர்வை அதனையும் காவாதென்பது கருத்து. "நெஞ்சிற் றுற வார் துறந்தார்போல் வஞ்சித்து, வாழ்வாரின் வன்கணா ரில்" (குறள், 276) என்பது இங்கே அறிதற்பாலது.

300. வஞ்சித்து - பிறருக்கு வஞ்சனை செய்து. மதியிலிகாள்: விளி. வஞ்சித்த - பிறரை வஞ்சித்த செயல்களை. எங்கும் உளனொருவன் - கடவுள். காணுங்கொல்: கொல், அசைநிலை. அங்கம் குலைவது அறிவு - அச்சத்தால் உடம்பு நடுங்குதல் அறிவுடைமையாகும். "காணா ரெனச்செய்யார் மாணா வினை" (பழமொழி, 102.)

301. மறைவழிப் பட்ட பழிமொழி - மறைவான இடத்தின்கண் உண் டான பழிச்சொல். பறையறைந்தாங்கு - பறையறைந்தாற்போல். (பி -ம்.) 'பரம்பும்' புன்புலால் கழிமுடை நாற்றம் - ஊனினது மிக்க நாற்றம், சென்று உதைக்கும்; சென்று தைக்கும் என்பதும் பொருந்தும்.

இஃது எடுத்துக் காட்டுவமையணி.

302. மெலியார் விழினு மொருவாற்ரு னுய்ப
வலியார்மற் ருென்ருனு முய்யார் - நிலைதப்பி
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமா லுய்யா பிற. (கூசு)

303. இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லாற் - பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே
ஊனோம்பி யூன்றின் பவர். (கூஎ)

304. எவரெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி - எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென. (கூஅ)

---

302. மெலியார் - அறிவின் மெலிந்தவர். உய்ப - தப்புவார். ஒன்ருனும் - ஒரு வழியினுலேனும். (பி - ம்.) 'நிலைதப்' நொய்ய - கனத்திற் குறைந்தவை. சழக்கென - விரைவில். பிற உய்யா ; பிற - கனமுள்ளவை.

வலியார் தம் நிலையினின்றும் பிறழின் மீட்டும் அந்நிலையை அடைதல் அரிதென்றபடி ; "இந்திரர் புகழுந் தொல்சீ ரில்லறம் புரிந்து ளோர்க்குத், தந்தம வொழுக்கந் தன்னிற் றகுமுறை தவறிற் றேனும், சிந்திடுந் தீர்வு முண்டாற் செய்தவர்க் கனைய சேரி, னுய்ந்திட லரிதால் வெற்பி னுச்சியிற் றவற லொப்ப" (கந்த.)

303. இசையாத போலினும் -பொருந்ாதனவற்றைப்போலத் தோற்றினும். மேலையார் - மேன்மக்கள். மற்றையோர்க்கு அல்லால் - கீழ் மக்கள் திறத்தன்றி. ஒரு செயலே, செய்வார் தகுதிபற்றி வேறுபடும். பசு -யாகப்பசு. தீ ஓம்பி - ஓமாக்கினியைப் பாதுகாத்து ; வேள்வி முடித்து என்றபடி. வான் வழக்கம் காண்பார் - மழை பெய்தலைக் காண்பவர். ஒப்பவே - ஒப்பார்களா? ஊன் ஓம்பி - தம் உடம்பைப் பாதுகாத்து. ஊனுண்டலின் இழிவைப்புலப் படுத்த ஊன் தின்பவரென்ருர், "சாவமுன் னுட்டக்கன் வேள்வித் தகர் தின்று" (திருவா. திருச்சதகம், 4) என்பது போல.

வேள்வி செய்வார் ஊனை உட்கொண்டாலும், அது செய்வார் தகுதி பற்றியும் கருத்துப் பற்றியும் வான் வழக்கங் காணும் பயன்பற்றியும் இழிவாகா தென்றபடி.

304. ஞானசிரியர் இயல்பு கூறப்படும்.

எவர் எவர் எத்திறத்தர் - தம் மாணக்கர்களுள் எவர் எவர் எந்த எந்த நிலையினரோ. (பி - ம்.) 'அவரவருக்கு' உப்பாலாய் - மேற்பட்டவராய். எம் முடையார் - ஆசிரியர். தம்முடையான் - பரம்பொருள். எப்பாலும் நிற்பது என- தான் எல்லாவற்றிற்கும் அப்பாலானுயினும் எவ்விடத்தும் கலந்து நிற்றலைப் போல. தம்முடையான் நிற்பதென நிற்பவென்க.

305. மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுைப் புலங்காப்பார் - மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாண வீள்கதவாச்
சேப்பார் நிறைத்தாழ் செறித்து. (௯௯)

306. கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பிஞள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல் - முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் ருேன்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில். (௧௦௦)

307. கற்ருங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்ருற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப் - பற்றுவதே

---

305. மெய்யுணர்ந்தார் - ஞானியர். பொய்ம்மேல் - நிலையாத பொருள்களின்மேல். புலம் - பொறிகளை. மெய் உணர்ச்சி - தத்துவ ஞானம். கை வருதல் கண்ணு - பெறுதலே கருத்தாக. புலம் காப்பார் - பொறிகளைத் தீய வழிகளிற் செல்லாதபடி தடுப்பார். மீட்டும் வந்த மெய்யுணர்ந்தாரென்பது சுட்டுப் பொருளது; எழுவாய். காப்பே - பொறிகளைக் காத்தலே. பழிக்கு நாணுதல் கதவாக, (பி - ம்.) 'பழிநாணம்' சேப்பார் - தங்குவர். நிறைத் தாழ் செறித்து - மனத்தை ஒரு வழியில் நிறுத்துதலாகிய தாழக்கோலைச் சேர்த்து. நிறைத்தாழ் செறித்துச் சேப்பா ரென்க. (பி - ம்.) 'சேர்ப்பார்', 'நிறைத்தாள்' நிறையின் சிறப்புப் பற்றிக் கதவுக்கு வலியாகிய தாழாக உருவகப் படுத்திஞர்; "காழொன் ருயர்திண் கதவு வலியுடைத்தோ, தாழொன் றிலதாயிற் ருன்" (நன்னெறி, 32.) நிறைத்தாழ் : பெருங். க. 33 : 150.

பின்னிரண்டடிகள் உருவகவணி.

306. மெய்யுணர்வால் வரும் இன்பச் சிறப்புக் கூறப்படும்.

துறைபோய - கல்வித்துறையில் முடிவுபோன. கற்பிஞள் - கற்புடைய மனைவி. முற்றத் துறந்தார்க்கு - அகப்பற்று புறப்பற்றுக்களை ஒருங்கே துறந்தார்க்கு. மெய்யுணர்வில் தோன்றுவதே-மெய்ஞ்ஞானத்தில் தோன்றும் இன்பமே. இறந்த எலாம் - அஃதொழிந்த மற்றைய எல்லா இன்பங்களும்.

307. வீடு பெற முயல்வார் தன்மை கூறப்படும்.

கற்ருங்கு - நூல்களிற் படித்தவாறே. அடக்கம் கல்வியின் பயஞகும்; "கற்றறிந்தார் கண்ட தடக்கம்" (பழமொழி, 243.) தீது ஒரீஇ - தீய செயல்களை விலக்கி. தீதொரீஇ நன்ருற்றி யென்றது, "விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்" (224) என்பதை வற்புறுத்தியபடி. பற்றுவதே - எல்லாரும் பற்றுவதாகிய பரம்பொருளை. பற்றுவதே பற்றுவதே யென்னும்

பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார். (கoக)

308. ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள். (கoஉ)

## நீ தி நெ றி வி ள க் க ம்

முற்றிற்று.

---

அடுக்கு, "பொய்யாமை பொய்யாமை யாற்றின்" (குறள், 297) என்றது போல் நின்றது. பணியற நின்று - எல்லாச் செயலும் அடங்கும்படி நின்று; "என்னுடைய, செயன்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (திருவா.) ஒன்று : பரம்பொருள்.

308. ஐயம் - அதுவோ இதுவோ என ஒன்றில் துணிவு பிறவாது நிற்கும் உணர்ச்சி. திரிபு - ஒன்றை மற்றொன்றாகத் துணிதல். அளந்து - காட்சி முதலிய பிரமாணங்களால் அளந்து. உத்திகளால் தெளிந்து; உத்தி - யுக்தி. மெய்யுணர்ச்சிக் கண்விழிப்ப - சத்தியஞானமாகிய கண் விழித்திருப்ப. தூங்குவார் - உலக நுகர்ச்சியை அறியாதிருப்பவர்; "விழித்துறங்கும் தொண்டர்" (76) என்றார் முன்னும். தீர்ந்த பொருள் - முடிந்த பொருளாகும்.

# திருவாரூர் நான்மணி மாலை

## காப்பு

(வெண்பா)

309. **நா**டுங் கமலேசர் நான்மணிமா லைக்குமிகப்
பாடுங் கவிதைநலம் பாலிக்கும்—விடொன்ற
முப்போ தகத்தின் முயல்வோர்க்கு முன்னிற்கும்
கைப்போ தகத்தின் கழல். (௧)

## நூல்

(நேரிசை வெண்பா)

310. நீரூர்ந்த முந்நீர் நிலவலய நீள்கொடிஞ்சித்
தேரூர்ந்த செல்வத் தியாகனே—ஆரூர

---

309. கமலேசர் - தியாகேசர்; கமலை - திருவாரூர். கவிதை - செய்யுள்; " மாசில் பனுவற் புலவர் புகழ்பல, நாவிற் புனைந்த நன்கவிதை " (பரி. ௬; 7-8); " வினையொழிய வேராச, காரியஞ் செய்யுங் கவிதையே " (தமிழ்விடு.) நலம் - சொல்லினிமை, பொருளினிமையாகிய அழகுகள். ஒன்ற - அடையும்பொருட்டு. முப்போது - மூன்று காலங்களிலும்; முற்றும்மை தொக்கது. அகத்தின் முயல்வோர்க்கு - தியானிப்பவர்க்கு. கைப்போதகம் - துதிக்கையையுடைய யானை; என்றது விநாயகக்கடவுளை.

கழல் பாலிக்கு மென்க.

310. தலைவி கூற்று; தோழி கூற்றுமாம்.

முந்நீர் நிலவலயம் - கடல் சூழ்ந்த பூமியாகிய வட்டம். நிலவலயமாகிய தேர், நீள் கொடிஞ்சித்தேரென்க; " ஆழித்தேர் வித்தகனை யான்கண்ட தாரூரே " (தே.) என இத்தலத்தின் தேர் சிறப்பிக்கப் பெறுமாதலின், முதலில் 'தேரூர்ந்த செல்வத் தியாகனே' என்றுள். தேரில் எழுந்தருளும்போது அடிக்கு ஓராயிரம் பொன் இறைக்கப்படுமாதலின் செல்வத்தியாக னென்றுள். வீதிவிடங்கர்: திருவாரூர்த் தியாகேசருடைய திருநாமம்; ஸப்த விடங்கர்களில் இவர் ஒருவர். திருக்காறாயிலில் ஆதிவிடங்கரென்றும், திருக்கோளிலியில் அவனிவிடங்கரென்றும், திருமறைக் காட்டிற் புவனி விடங்கரென்றும், திருவாய்மூரில் நீல விடங்கரென்றும், திருநள்ளாற்றில் நகரவிடங்கரென்றும், திருவாரூரில் வீதி விடங்கரென்றும், திருநாகைக்காரோணத்தில் அழகவிடங்கரென்றும் தியாகராச மூர்த்திகளுக்குத்

வீதிவிடங் காவடங்கா வேலைவிடம் போலுமதிப்
பாதிவிடங் காகடைக்கண் பார்த்து. (உ)

(கட்டளைக் கலித்துறை)

311. பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்குமெய்ப் பாதியுமத்
தார்பெற்ற வேணியுந் தந்தார் தியாகர் தடம்புயத்தின்
சீர்பெற்றி லேமென்று நாணால் வணங்கிச் சிலையெனவும்
பேர்பெற்ற தாற்பொன் மலைகுனித் தாரெம் பிரானென்பாரே.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

312. என்பாக நகுதலையோ டெழிலாக வணிந்தகம
லேச மற்றுன்
றன்பாக மிடப்பாகத் தலைவிகரு விழிதோய்ந்தும்
தலைவி பாகத்

---

திருநாமங்கள் உள்ளன. அடங்கா வேலை விடம் - தன் கொடுந்தன்மை அடங்காத சமுத்திரத்தில் எழுந்த நஞ்சை. மதிப்பாதி - அரைச்சந்திரன். சந்திரனுக்கு விடம் உவமை. மதிப்பாதியாகிய விடத்தினின்றும் பாதுகாப்பாயாக. கடைக்கண் பார்த்துக் காவென்க.

311. பார்பெற்ற வல்லி - உமாதேவியார். பாகீரதிக்கு - கங்கைக்கு. வல்லிக்கு மெய்ப்பாதியும், பாகீரதிக்கு வேணியும் தந்தார்; நிரனிறை; 155-ஆம் செய்யுள் பார்க்க. புயத்தின் சீர் - திருத்தோளின் அழகை. நாணால் வணங்கி - நாண்கயிற்றால் வளைந்து, நாணத்தால் தலைகுனிந்து. சிலை - வில், கல். பொன் மலை - மேரு. குனித்தார் - வளைத்தார்.

மேருமலை நாண்கயிற்றால் வளைந்து வில்லான செய்தியை, சிவபெருமான் திருத்தோளழகைத் தான் பெறாமையின் நாணத்தால் தலைவளைந்து பொன்னென்னும் நிலைமாறிக் கல்லென்னும் பெயரையும் பெற்றதென்று தோற்றும்படி உரைத்தார். இது சிலேடையோடு வந்த தற்குறிப்பேற்றவணி.

“வரைகுழைக்கு முலைகுழைப்பக் குழைதிரடோ ளழகின்முடி வணங்கியென்னக், கரைக்குழைக்கு மலைகுழைத்த கண்ணுதற்கு” (673) என்னும் இந்நூலாசிரியர் வாக்கும், “உன்மலை வார்முலை நல்லேர் கவர்ந்த துதவுதற்குப், பொன்மலை நாணெண் கழுத்தொடு தாளுறப் பூட்டிவெங்கை, மன்மலை மாதுமை பங்காளன் முன்னம் வளைத்ததன்றி, வின்மலை யாக்குத லென் மிளிர் வேற்கண் விளங்கிழையே” (வெங்கைக் கோவை, 12) என்பதும் இதனோடு ஒருவாறு ஒப்பு நோக்கற்பாலன.

312. அர்த்தநாரீசுவரத் திருவுருவத்தை நினைந்து ஆசிரியர் கூறியது இது.

தன்பாக நின்றிருநோக் கவைதோய்ந்துந் திருநிறம்வே
றுகை யாலப்
பொன்பாக மிதுவெனவு நின்பாக மிதுவெனவும்
புகலொ ணாதே. (சு)

(நேரிசை யாசிரியப்பா)

313. ஒண்கதிர் பரப்புஞ் செங்கதிர்க் கடவுள்
வெயில்கண் டறியா வீங்கிருட் பிழம்பிற்
புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பிற்
காவலர்ப் பயந்து பாதபத் தொதுங்கிய
ரு. இருவே றுருவிற் கருவிரன் மந்தி
பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
முன்னுறக் காண்டலு முளையெயி றிலங்க
மடித்தலத் திருத்தி வகிர்ந்துவள் ளுகிரால்
தொடுத்தபொற் சுளைபல வெடுத்துவாய் மடுப்பது
கo. மானிட மடங்க றாணிடைத் தோன்றி
ஆடகப் பெயரி னவுணன்மார் பிடந்து

---

என்பையும் ஆகத்தையும் நகுதலையையும் ஓட்டையும் அணிந்த; ஆக மென்றது முழு என்பாகிய கங்காளத்தை,; ஓடு - ஆமையோடு. தலைவி - உமாதேவியார். பொன் என்றதும் அத்தேவியாரையே. அம்பிகையின் கரிய திருவிழியின் நிறத்தால் சிவபெருமான் திருமேனி கரிய நிறத்தையும், சிவ பெருமானது திருவிழியின் செந்நிறத்தால் உமாதேவியாரின் திருமேனி செந்நிறத்தையும் அடைந்தமையின் மயக்கமுண்டாயிற்றென்றார். இருவரும் ஒருவரை யொருவர் நோக்கி இன்புறுவதைக் குறிப்பித்தவாறு.

313. (1 - 14) பலாப்பழத்தைக் கீண்டு சுளையை உண்ணும் மந்தி நரசிங்க மூர்த்தியைப்போலத் தோற்று மென்பர். செங்கதிர்க்கடவுள் - சூரியன்; கடவுளது வெயில். பிழம்பு - திரட்சி. பொதும்பு - மரச்செறிவு; "வெயி னுழை பறியாக் குயினுழை பொதும்பர்" (பெரும்பாண். 374, மணி. சு : 5); "வெயில்கண் போழாப் பயில்பூம் பொதும்பு" (பெருங். க. 33 : 27.) காவலர் - பலாப்பழத்தைக் காப்பவர்கள் (குறுந். கசஉ : 1-3, கஅரு : 1-2.) பாதபம் - மரம். இருவேறுரு - மனித இயல்பும் விலங்கின் இயல்பும் ஒருங்கு அமைந்த உருவம். மந்தி - பெண் குரங்கு. வருக்கை - பலாப்பழம். முளை எயிறு - நாணல் முளையைப்போன்ற கூரிய பல். வகிர்ந்து - பிளந்து. மானிட மடங்கல் - நரசிங்கம். ஆடகப் பெயரின் அவுணன் இரணியன்; ஆடகம் - பொன். (பி - ம்) 'நீடுபைங் குடரொடு நிணங்' பலாப்பழத்துக்கு இரணியு

நீடுபைங் குடரி னிணங்கவர்ந் துண்டென
இறும்பூது மயக்கு நறும்பணை மருதத்
தந்த ணுரு ரெந்தையெம் பெரும
கரு. சிங்கஞ் சுமந்த செழுமணித் தவிசிற்
கங்குலும் பகலுங் கலந்தினி திருந்தாங்
கிடம்வலம் பொலிந்த விறைவியு நீயும்
நடுவண் வைகு நாகிளங் குழவியை
ஒருவிரி னொருவி ருள்ளநெக் குருக
உ०. இருவிருந் தனித்தனி யேந்தினிர் தழீஇ
முச்சுடர் குளிர்ப்ப முறைமுறை நோக்கி
உச்சி மோந்துமப் பச்சிளங் குழவி
நாறுசெங் குமுதத் தேறலோ டொழுகும்
எழுதாக் கிளவியி னேழிசை பழுத்த
உரு. இழுமென் குரல மழலைத் தீஞ்சொற்
சுவையமு துண்ணுஞ் செவிகளுக் கையவென்
பொருளில் புன்மொழி போக்கி
அருள்பெற வமைந்ததோ ரற்புத முடைத்தே. (ரு)

(நேரிசை வெண்பா)

314. தேங்குபுக ழாரூர்த் தியாகர்க்கெண் டிக்குமொளி
வீங்கு பகற்போது வெண்படமாம்—தூங்கிருள்சூழ்

---

னும், அதனுள்ளிருக்கும் சக்கைக்குக் குடரும், சுளைக்கு நிணமும், குரங்குக்கு நரசிங்கமூர்த்தியும் உவமைகள். உண்டென - உண்டது போல. இறும்பூது - வியப்பு. பணை - வயல்.

(15 - 28) உமாதேவியாருக்கு இரவும் சிவபெருமானுக்குப் பகலும் உவமைகள். நாகிளங் குழவி யென்றது முருகக்கடவுளை. ஒருவிரின் - ஒருவரைக் காட்டிலும், இறைவன் திருவிழிகள் மூன்றும் முச்சுடராதலின் 'முச்சுடர் குளிர்ப்ப நோக்கி' என்றார். செங்குமுதத்தேறல் - வாய் நீர். எழுதாக் கிளவியின் - வேதத்தைப்போல. சிவபெருமானும் உமாதேவியாரும் முருகக்கடவுளைப் பாராட்டல்: 205, 450. போக்கி - செலுத்தி. அருள் பெறும்படி அமைந்த நிலை அற்புத முடைத்து என்க. இச்செய்யுளின் பிற்பகுதியின் சொல்லும் பொருளும் 601 - ஆம் செய்யுளிற் சுரிதகத்திலும் அமைந்துள்ளன.

314. சிவபெருமானுக்குத் திசைகளே ஆடையாதலின் அத்திசைகள் பகலில் வெண்ணிறமடைந்து வெள்ளாடையாகவும், இரவிற் கருநிறமடைந்து கரிய ஆடையாகவும், அந்திப்பொழுதில் செந்நிறமடைந்து செவ்வாடை

கங்குற் பொழுது கரும்படமாஞ் செம்படமாம்
பொங்குற்ற புன்மாலைப் போது. (சு)

(கட்டளைக் கலித்துறை)

315. போதொன் றியதண் பொழிற்கம லேசர்பொன் மார்பிலெந்தாய்
சூதொன்று கொங்கைச் சுவடென்ப ராற்றொல் களிற்றுரிவை
மீதொன் றுவகண்டு வெங்கோப மாமுகன் வெண்மருப்பால்
ஈதொன் றடுகளி றென்றெதிர் பாய்ந்த விணைச்சுவடே. (எ)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

316 இணங்குகம லாலயமா லிதயத்திற் பொலிந்ததியா
கேச ரம்பொற்
கணங்குழைமண் மகளிதய கமலத்தும் பொலிதலினக்
கமல மான

---

யாகவும் அமைகின்றன. வெண் படம் - வெள்ளாடை; படம் - ஆடை. புன் மாலை - செக்கர் நிறத்தையுடைய மாலை; புன்மை-சிவப்பு (பட். 90, ந.); புன்மாலை - ஒளியிழந்த மாலையெனலுமாம்.

315. சிவபெருமான்மேலுள்ள யானைத்தோலைக் கண்டு அப்பெருமானை ஒரு யானையென்றெண்ணி விநாயகர் பாய, அவருடைய கொம்பிரண்டும் பட்டதனால் உண்டான சுவடுகள் இரண்டையும் உமாதேவியாருடைய கொங்கையினால் உண்டான சுவடுகளென்பர். இது தற்குறிப்பேற்ற அணி.

கமலேசரது மார்பில். எம் தாய் - உமாதேவியாரது. சூது - சூதாடுதற்கு அமைந்த காய்; ஆகுபெயர். உரிவை - தோல். ஒன்றுவ - பொருந்துதலை. வெவ்விய கோபத்தையுடைய மா வென்றது யானையை; மா - விலங்கு; மாமுகன் - விநாயகக் கடவுள். இணைச் சுவடு - இரட்டைச் சுவடுகள். இச்செய்யுளிலமைந்த கருத்தை வேறொரு வகையாக இந்நூலாசிரியரே 547 - ஆம் செய்யுளில் அமைத்துள்ளார்.

316. தியாகேசர் திருமாலின் இதயத்தும் அவர் தேவியாராகிய மண்மகளின் இதயமாகிய திருவாரூரிலும் விளங்குதலின் அவ்விருவர் உள்ளமும் ஒத்த தன்மையனவாம்.

கமலம் ஆலயம் மால் - நீரை இருப்பிடமாகக் கொண்ட திருமால்; நீரென்றது கடலை. அம்பொற் கணங்குழை மண்மகள் - அழகிய பொன்னாலாகிய திரண்ட குழையென்னும் காதணியையுடைய பூதேவி, அழகிய பொன்னின் தொகுதியையும் தளிர்களையும் தன்பால் உடைய பூமிதேவி; குழை, இங்கே மரஞ் செடி கொடிகளுக்கு ஆகுபெயராய் நின்றதாகக் கொண்டு, தன் அகத்தே பொற்புதையல்களையும் புறத்தே தாவரங்களையும்

மணங்கமழ்பங் கயத்தடஞ்சூழ் கமலைகம லாலயப்பேர்
வாய்த்த தான்மற்
றணங்கனையா ரிதயமுந்தம் மருட்கொழுந ரிதயமுமொன்
றுகுந் தானே. (அ)

(நேரிசை யாசிரியப்பா)

317. தானமால் களிறு மாநிதிக் குவையும்
ஏனைய பிறவு மீகுந ரீக
நலம்பா டின்றி நாண்டுறந் தொரீஇ
இலம்பா டலைப்ப வேற்குந ரேற்க
ரு. புரவலர் புரத்தலு மிரவல ரிரத்தலும்
இருவே றியற்கையு மிவ்வுல குடைத்தே
அதாஅன்று
ஒருகா லத்தி லுருவமற் றொன்றே
இடப்பான் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பா லிரத்தன் மாநிலத் தின்றே

---

உடையவளென்று கொள்க. மண்மகளிதய கமலமென்றது திருவாரூரை (328); "மேதினிக், காதன் மங்கை யிதய கமலமா, மாதொர் பாகனு ராரூர் மலர்ந்ததால்" (பெரிய. திருமலைச். 33.) (பி - ம்.) 'கமலத்திற்' அக்கமலம் மான-அந்த இதய கமலத்தை ஒப்ப. கமலாலயமென்னும் பெயர் திருவாரூருக்கு வந்ததன் இயல்பான காரணம் திருமகள் இங்கே தங்கித் தவம்புரிந்ததாகும்; கமலா- திருமகள். இங்கே அதற்கு வேறொரு காரணம் கற்பித்தார். கற்புடை மகளிர் உள்ளக்கருத்தும் கணவர் உள்ளக்கருத்தும் ஒன்றாயிருத்தல் இயல்பாதலின் திருமாலும் பூமிதேவியும் தம் இதயத்தில் தியாகப் பெருமானை வைத்துள்ளா ரென்றார். தான், ஏ ; அசைநிலைகள்.

317. அர்த்த நாரீசுவர வடிவத்தைக் குறித்த செய்யுள் இது. உலகத்தில் ஈகையாளரும் இரவலரும் தனித்தனியே இருப்பர் ; இவ்வுருவத்தில் ஒருபால் ஈதலும் மற்றொருபால் இரத்தலும் அமைந்தமை வியப்பாகும்.

(1-6.) தானமால் களிறு - மதத்தையுடைய பெரிய யானை. கஜாந்த ஐசுவரியம் எனச் செல்வத்திற்கு யானையைத் தலைவரம்பாக்குதலின் அதனை முதலிற் கூறினர். நலம்பாடு - நன்மை உண்டாதல். ஒரீஇ - நீக்கி. இலம்பாடு அலைப்ப - வறுமை வருத்த. (பி - ம்.) 'இலம்பாடின்றி' ஏற்குநர் - இரப்போர். புரவலர் - ஈகையுடையோர். புரத்தல் - தம்பால் இரந்தாருக்கு ஈந்து பாதுகாத்தல். அதாஅன்று - அங்ஙனம் அல்லாமல்.

(7-9.) உருவம் ஒன்றே ஒரே காலத்தில் அறம் வளர்ப்பதும் இரத்தலும் இன்று. மற்று : அசைநிலை. இடப்பால் - அம்பிகையின் பாகம். வலப்

கo. விண்டொட நிவந்த வியன்றுகிற் கொடிகள்
மண்டலம் போழ்ந்து மதியக டுடைப்ப
வாணிலா வமுதம் வழங்கியக் கொடிகள்
வேனிலிற் பயின்ற வெப்பம தாற்றுபு
கொடியா ரெத்துணைக் கொடுமை செய்யினும்
கரு. மதியார் செய்திடு முதவியை யுணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்
கடிநகர் வைப்பினிற் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிதே. (க)

(நேரிசை வெண்பா)

318. பெருமான் றமிழ்க்கமலைப் பெம்மான்கைம் மானும்
கருமா னுரியதனுங் கச்சும்—ஒருமானும்
சங்கத் தடங்காதுந் தார்மார்புங் கண்டக்கால்
அங்கத் தடங்கா தவா. (கo)

---

பால் - சிவபெருமான் பாகம்; "இல்லை யென்ப திலையோர் மருங்கிலே - யெவ்வ றங்களு முண்டோர் மருங்கிலே" (689) என்பர் பின்.

(10-15.) மாடத்தில் கட்டிய கொடிகளின் செயல் கூறுவார். மண்டலம் - வட்டம். நிலா : எழுவாய். கொடியார் - துவசங்கள், கொடியவர்; மதியார் - சந்திரன், அறிவுடையோர்; சிலேடை. தன் வயிற்றைக் கீண்டு வருத்திய கொடிகளின் கொடுமையை உளங்கொள்ளாது அமுதம் பொழிந்து அக்கொடிகளின் வெப்பத்தை ஆற்றிய மதியின் செயல் அறிஞர் செயலைப் புலப்படுத்தியது; "இன்னுசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" (குறள், 987) என்பதை ஓர்க.

(16-8.) மணிமாடத்தையும் மதிலையும் உடைய கமலை. கண்டேம் - ஒரே உருவத்தில் ஒருபால் அறம் வளர்ப்ப மற்றொருபால் இரத்தலைக் கண்டேம். மற்று : அசைநிலை.

318. சிவபெருமானைத் தரிசித்த தலைவி கூறியது.

பெம்மானது கையிலுள்ள மானும். கருமான் உரி அதள் - யானையை உரித்த தோல். ஒரு மான் : உமாதேவியார். சங்கம் - குழை. தார் - மார்பிலணியும் மாலை. அவா அங்கத்தில் அடங்காது; அங்கம் - மனம்.

"கையடைந்த மழுமானுஞ் செழுமானு முழைமானுங் கயலு மானும், மையடைந்த விழிமானு முடனுக வருணேசர் வருகு வாரே" (அருணைக்கலம். 85) என்பதிலும் பலமான்கள் கூறப்படும்.

(கட்டளைக் கலித்துறை)

319. வாவியம் போருகஞ் சூழ்கம லேசர்புள் வாய்கிழித்த
தூவியம் போருகந் தோறுநின் றோர்துணைத் தாளடைந்த
ஆவியம் போருகந் தாயிரங் கூற்றுடன் றாலுமஞ்சேல்
நாவியம் போருக நன்னெஞ்ச மேயவர் நாமங்களே. (கக)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

320. நாம வேற்படைக் கடவுளைப் பயந்தருள்
நங்கைதென் கமலேசர்
வாம பாகத்தைக் கொளவலப் பாகநீர்
மங்கைகொண் டனள்போலாம்
தாம நீற்றொளி தன்னிறங் காட்டவெண்
டலைநிரை நுரைகாட்டக்
காமர் பூங்கொடி மடந்தையர் மதர்விழிக்
கயலுலா வரலாலே. (கஉ)

---

319. வாவியில் அம்போருகம் சூழ்ந்த; அம்போருகம் - தாமரை. புள் வாய் கிழித்த தூவி அம்போர் - பகாசுரனாகிய புள்ளின் வாயைக் கிழித்த திருமாலாகிய மென்சிறகையுடைய அம்பை உடையோர்; அம்பு விரைவாகச் செல்லுதற்பொருட்டு அதன் கோலில் சிறகு அமைக்கப்பட்டிருக்கும். உகந்தோறும் நின்றோர் - எல்லா யுகங்களிலும் அழிவில்லாமல் நிலைபெற்று நின்றவர். ஆவி: விளி. அம் போர் உகந்து ஆயிரம் கூற்று உடன்றாலும்; கூற்று-யமன். அஞ்சேல் - பயப்படாதே. நா இயம்பு - நாவே கூறுவாயாக. நன்னெஞ்சமே ஓருக; ஓருக - தியானம் செய்க. அவர் நாமங்களை நாவே இயம்பு, நெஞ்சமே ஓருக என்க.

320. நாம வேற்படை - அச்சத்தைத் தரும் வேலாயுதத்தையுடைய. கடவுள் - முருகவேள். நங்கை - உமாதேவியார். நீர்மங்கை - கங்கை. தாம நீற்றொளி - விளக்கத்தையுடைய விபூதியின் ஒளி. தன்னிறம் - கங்கையின் நிறத்தை; அது வெண்ணிற முடையது; "தம்மேனி வெண்பொடியாற்றண்ணளியா லாரூரர், செம்மேனி கங்கைத் திருநதியே" (346) என்பர் பின். வெண்டலை நிரை - தசையிழந்த தலைகளின் வரிசை; இதற்கு நுரை உவமை. கொடிபோன்ற மடந்தையர். விழியாகிய கயல். விழிக்கயல் உலாவரலாவது அம்மடந்தையர் எப்பொழுதும் சிவபிரானது திருமேனியையே உற்று நோக்குதல்; "காமிக்கு மடந்தையர்கட் கயலெல்லா முமையடைதல் கணக்கே யன்றோ" (194) என்றார் முன்னும். நீறும் வெண்டலையும் மகளிர்பார்வையும் இறைவன் பாகமாகிய வலப்பாலுக்கு உரியனவாதலின் அப்பாகத்தை முட்டும் கங்கை கொண்டாற் போன்றதென்றார்.

(நேரிசை யாசிரியப்பா)

321. வருமுலை சுமந்து வாங்கிய நுசுப்பிற்
புரிகுழன் மடந்தையர் பொன்னெடு மாடத்
தொண்கதிர் வயிரமுந் தண்கதிர் நீலமும்
சேயொளி பரப்புஞ் செம்மணிக் குழாமும்
ரு. மாயிரு டூரந்து மழகதி ரெறிப்பச்
சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவநீண் மறுகிற் செல்வது கடுப்ப
ஒள்ளொளி ததும்பு மொண்டமிழ்க் கமலைத்
தெள்ளமு துறைக்குந் திங்களங் கண்ணித்
க௦. தீநிறக் கடவுணின் கான்முறை வணங்குதும்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி னுளையன்
ஊற்றமில் யாக்கை யுவர்நீர்க் கேணிப்
புலத்தலை யுயிர்மீ னலைத்தனன் பிடிப்ப
ஐவளி பித்தென வமைத்துவைத் திருந்த

---

321. யமபயத்தினின்றும் உய்யக் கொள்ள வேண்டுமென்று வேண்டுகின்றார்.

(1-3.) திருவாரூரிலுள்ள மாடங்களிற் பதித்த வயிரம், நீலமணி, மாணிக்க மென்பவற்றாலுண்டான மூவகைச் சோதிகளும் ஒருங்கே வீதியிற் பரந்து திரிவேணி சங்கமத்தை ஒத்தனவென்பர்.

வருமுலை - தோன்றி வளரும் முலை. வாங்கிய நுசுப்பின் - உள்வாங்கிய இடையையுடைய. மடந்தையர் வாழும் மாடம். சேயொளி - செந்நிற ஒளி. மாயிருள் - பேரிருளை. துரந்து - ஓட்டி. (பி - ம்.) 'கதிரெறிப்பன' சுரநதி - கங்கை; இது வெண்ணிற முடையது. ஏனைய இரண்டு நதிகள், நீல நிற முடைய யமுனையும் செந்நிறமுடைய வாணியுமாம். கங்கை யமுனை வாணி மூன்றும் கூடிய இடத்தைத் திரிவேணி சங்கம மென்பர். திருவம் - செல்வம். கடுப்ப - ஒப்ப. ஒள்ளொளி - மிக்க ஒளி. கமலையில் உள்ள திரிவேணி சங்கமம்: 346.

(9 - 10.) உறைக்கும் - துளிக்கும். (பி - ம்.) 'தெள்ளமு திறைக்கும்' திங்களாகிய அழகிய கண்ணியை யணிந்த; "மாதர்ப் பிறைக்கண்ணி யானை" (தே.) தீயின் நிறத்தையுடைய கடவுள். காலை முறைப்படி வணங்குதும்.

(11 - 7.) யமனை வலைஞனாக உருவகம் செய்வர்.

கொடுந்தொழில் நுளையன் - உயிரை உடலினின்றும் பிரிக்குங் கொடிய செயலையுடைய வலைஞன்; "கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப" (மணி.) ஊற்றம் - வன்மை. யாக்கையாகிய உவர்நீரையுடைய கேணி; யாக்கை பிறருக்கு உதவாதாகலின் அதனை உவர் நீர்க்கேணி யாக்கினர்.

கரு. முத்துலைத் தூண்டி றூண்டி யத்தலை
வாழ்நாண் மிதப்பு நோக்கித் தாழா
தயிறலைத் தொடங்கி யெயிறலைத் திருத்தலிற்
றள்ளா முயற்சி தவறுபட் டொழிந்தென
வெள்குறீஇ மற்றவன் விம்மித னாக
உ௦. அருட்பெருங் கடலினவ் வாருயிர் மீனம்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடு முலாவி
எய்தரும் பெருமித மெய்த
ஐயநின் கடைக்க ணருளுதி யெனவே. (கஙு)

(நேரிசை வெண்பா)

322. என்பணிந்த தென்கமலை யீசனூர் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ முனிவோர்கள் - அன்பென்னும்

---

பலமென்னும் தலையையுடைய உயிராகிய மீன்; புலம் - பொறி; அறிவுமாம். பிடிப்ப - பிடிக்கும்பொருட்டு. ஐ - சிலேட்டுமம். வளி - வாயு. பித்து - பித்தம். இம்மூன்றும் உயிராகிய மீனைப் பிடிக்க உதவும் தூண்டிலிலுள்ள மூன்று முட்கள். உயிர் நீங்குதற்குக் காரணமாக வரும் நோய்க்கு இம் மூன்றன் நிலை மாற்றமே ஏதுவாதலின் இவற்றைத் தூண்டில் முள்ளென்றார் (531); "மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர், வளிமுதலா வெண்ணிய மூன்று" (குறள், 941.) அத்தலை - அவ்விடத்தில். வாழ்நாளாகிய மிதப்பு; மிதப்பு - நீரின்மேல் மிதக்கும் நெட்டித் தக்கை. 'தூண்டிற் காரனுக்கு மிதப்பிலே கண்' என்பது பழமொழியாதலின் மிதப்பு நோக்கியென்றார். அயிறலைத் தொடங்கி - உண்ணுதற்குத் தொடக்கம் செய்து. எயிறு அலைத்து இருத்தலின் - பல்லைக் கடித்துக்கொண்டு ஆயத்தனாக இருத்தலினால்.

(18-24) ஒழிந்தென - ஒழிந்ததென. (பி-ம்.) 'பட்டழிந்தென' வெள்குறீஇ - வெட்கமுற்று. விம்மிதன் - ஆச்சரிய மடைந்தவன்; 'எல்லா மீன்களும் போல இஃது இல்லையே!' என்று வியப்ப. அருட்பெருங்கடலின் - நின் அருளாகிய நன்னீரையுடைய பெரிய கடலில். கருக்குழி கழிய - கருப்பக்குழி ஒழிய; பிறவி நோய் நீங்கவென்றபடி. பரமானந்தமாகிய அலை. பெருமிதம் - வீரம். கடைக்கண் - கடைக்கட் பார்வை; ஆகுபெயர். பிறவிக்குழியினின்றும் நீங்கி நின் கருணைக்கடலிலுள்ள பேரின்ப அலையில் உலாவ அருள்வாயாக வென்றார்.

அருளுதியென வணங்குதும் (10) என்க.

322. தியாகப் பெருமானை வணங்கும் முனிவர்கள் தாம் நந்தியின் பிரம்படி பட்டதற்கு வருந்தாமல் மதுரையில் எம்பிரான் மண் சுமந்து அடி

புண்சுமந்தோ நந்தி புடைத்தென்னுர் புண்ணியனுர்
மண்சுமந்தா ரென்றுருகு வர். (கச)

(கட்டளைக் கலித்துறை)

323. வரந்தந் தருள வரதம்வைத் தாலென் வரதமிடக்
கரந்தந்த தாலிவர் கையதன் றேபலி காதலித்துச்
சிரந்தந்த செங்கைக் கமலேசர் நாமந் தியாகரென்ப
தரந்தந்த வாள்விழி யாடந்த தாங்கொ லறம்வளர்த்தே. (கரு)

---

பட்டதை நினைந்து வருந்துவர்; அவர் தலையன்பு இருந்தவாறு என்னே யென வியப்பார்.

என்பை அணிந்த. பூங்கோயில்: திருவாரூர்த் திருக்கோயில் (325); "தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரிற், பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே" (தே. திருநா.) நந்தி புடைத்துப் புண் சுமந்தோம் என்று கருதாராய். தாம் பட்ட பிரம்படி அவர்களுக்கு இறைவன் பட்ட பிரம்படியையும் அதற்குக் காரணமாகிய மண்சுமந்த அருள்விளையாட்டையும் நினைந்து உருகச் செய்தது. "வன்பட்ட கூடலில் வான்பட்ட வையை வரம்பிட்ட நின், பொன்பட்ட மேனியிற் புண்பட்ட போதிற் புவிநடையாம், துன்பட்ட வீரரந் தோவாத வூரர்தந் தூயநெஞ்சம் என்பட்ட தோவின்று கேட்டவென் னெஞ்ச மிடிபட்டதே" என்றார் ஒரு பெரியார். (பி - ம்.) 'உருகுவார்'

323. சிவபெருமான் பிச்சை யேற்பவராதலின் அவருக்குத் தியாகரென்னும் திருநாமம் ஏற்புடையதன்று. அறம் வளர்த்த அம்பிகையின் தொடர்புபற்றியே அவருக்கு அத்திருநாமம் வந்தது. அங்ஙனமாயின் பெருமான் ஈகையைக் குறிக்கும் வரத்தை யுடையவரல்லரே யெனின், அதனை யுடையதும் இடப்பாலிலுள்ள அம்பிகையின் கரமே யென்பர்.

வரதம் வைத்தால் என் - வரதம் வைத்தால் இவருக்கு என்ன பெருமை? இவர் கை அது அன்றே. பலி-பிச்சை. இவரது கை பலிக்காகக் கபாலத்தை யுடைய கைதான். அரந்தந்த வாள் - அரத்தால் அராவிக் கூர்மையாக்கிய வாள். கொல்: அசைநிலை.

"இறைவற்குத் தக்க விறுமாப் பெனுமொழி யின்றியொரு, மறுவற்ற தன்மனை யாட்கேற்ற தாமிறு மாப்பனெனக், குறைவற்ற நெற்கொண் டுலகேற் றுனைப்பலி கொள்ளுமரன், பெறவுற் றனையனை யேகுன்றை வாழும் பெரியம்மையே" (பெரிய. கலித்துறை, 1) என்னும் செய்யுள் இங்கே நினைத்தற்குரியது.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

324. வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர
மாலை யாகக்
கொள்ளுவது மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக்
கோத்துச் சாத்த
உள்ளுவது மொழிவதுமற் றொழியாயே லடிமுடிகள்
உணர்ந்தே மென்றே
கள்ளமொழி வான்புகிற்றென் கமலேச வவர்க்கவையே
கரியு மாமே. (கரு)

(நேரிசை யாசிரியப்பா)

325. கருந்தாது கடுத்த பெரும்பணை தாங்கும்
படர்மருப் பெருமைபைங் குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்தபா லருவி
கரைபொரு தலைப்பப் பெருகுபூந் தடத்து

---

324. தியாகேசர் பிரமதேவருடைய சிரங்களைத் திருமுடியிற் சிரமாலை யாகவும் திருமாலினுடைய தலைகளைத் திருவடியிற் கிண்கிணியாகவும் அணிதலை நீக்கவேண்டு மென்பதற்கு ஒரு காரணம் கற்பிக்கின்றார்.

கலைமடந்தை மகிழ்நர் - பிரமதேவர். பிரமரும் திருமாலும் அழிந்தழிந்து அவதரித்தலிற் பலரென்பது சைவர் கொள்கை. மலர்மடந்தை கொழுநர் - திருமால். கிண்கிணி - திருவடியில் அணிவது; திருவாரூர்த் தியாகேசர் கிண் கிணிக் காலழகராதலின் இதனையும் கூறினர்.

கொள்ளுவதும் உள்ளுவதும் ஒழிவது; ஒழிவது - ஒழியவேண்டுவதே; வியங்கோட் பொருளில் வந்தது, "கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற் றுக்களே" (திருச்சிற். 87) என்பதிற்போல. முன்பு அடியையும் முடியையும் உணராது மயங்கிய திருமாலும் பிரமதேவரும் இப்பொழுது அடியிலும் முடி யிலும் அணிகளாக அமைந்த தம் தலைகளால் அவற்றையுணர்ந்து, 'யாம் முன்னரே அடிமுடிகளை யுணர்ந்தோம்; அவை இத்தகையன' எனப் பொய் கூறப்புகின் அதை மறுக்க இயலாதென்றார். கள்ளம் மொழிவான் புகின் - பொய்ம்மொழி கூறப் புகுந்தால். அவை - திருமுடியிலுள்ள பிரமதேவர் தலைமாலையும் திருவடியிலுள்ள திருமாலின் தலைகளாலாகிய கிண்கிணியும். கரி - சாட்சி.

325. தம் வருத்தத்தை யுணர்ந்தும் தியாகேசர் அருள் செய்யாமைக்குக் காரணம் பிறவித்துயர் இத்தகையது என்று அப்பெருமான் அறியாமையே என்பர்.

(1 - 8.) அன்னத்திற்குக் கலைமகள் உவமை (10, 707.)

கருந்தாது - இரும்பு (501.) பணை - பருமை. மருப்பு - கொம்பு. எருமையின் கொம்புக்கு இரும்பு உவமை; "இரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை"

ரு. வெண்டோ டவிழ்த்த முண்டகத் தவிசிற்
பானீர் பிரித்துண் டுவெள் ளகினம்
நாற்பெருங் கடலு ணுண்பொரு டெரித்து
நாற்பயன் கொள்ளு நாமகட் பொருவும்
மென்பான் மருதத் தண்புனற் கமலைத்
க0. தென்பான் மேருவிற் றிகழ்பூங் கோயில்
மூவ ரகண்ட மூர்த்தியென் றேத்தும்
தேவ ரகண்ட தெய்வ நாயக
நின்னடித் தொழும்பி னிலைமையின் றேனுநின்
றன்னடித் தொழும்பர் சார்புபெற் றுய்தலிற்
கரு. சிறியவென் விழுமந் தீர்ப்பது கடனென
அறியா யல்லை யறிந்துவைத் திருந்தும்
திரா வஞ்சத் தீப்பிறப் பலைப்பச்
சோரா நின்றவென் றுயரொழித் தருள்கிலை

---

(அகநா.ருசு : 3.) குதட்ட - மெல்ல. (பி - ம்.) 'குதட்டி' மடியாகிய மடை. (பி - ம்.) 'மடுமடை' தடம் - தடாகம். வெண்டோடவிழ்த்த முண்டகத் தவிசில் - வெள்ளிய இதழை விரித்த வெண்டாமரையாகிய ஆசனத்தில். பாலை நீரினின்றும் பிரித்து உண்ணும் தூய வெண்மை நிறமுள்ள அன்னம்; பால் - எருமைப்பால். நாற்பயன் - அறம்பொருளின்பம்வீடு என்பன.

(9 - 12.) மென்பால் மருதம் - மென்பாலாகிய மருதம்; மருதமும் நெய்தலும் மென்பாலெனப்படும். தென்பால் உள்ள மேருவைப்போல விளங்கும் பூங்கோயில். (பி - ம்.) 'திகழுங் கோயில்' மூவர் ஏத்தும். அகண்டமூர்த்தி - எங்கும் நிறைந்த திருமேனியை யுடையவர். தேவரகண்டர் : தியாகேசர் திருநாமம்.

(13 - 8.) நின் அடித்தொழும்பின் நிலைமை இன்றேனும் - நின் திருவடித் தொண்டு செய்வதில் நிலைபெறுதல் என்பால் இல்லையாயினும். நின் திருவடித் தொண்டில்லையேனும் நின் அடித்தொண்டர் சார்பைப் பெற்று உய்ந்தேன்; ஆதலின் என் துன்பத்தைத் தீர்ப்பது நின் கடன். திருத்தொண்டர்பால் தொண்டு பூணுதல் சிவபெருமானுக்கு அடிமை பூண்பதிலும் சிறந்ததாதலின் அத்தகையோருக்கு இறைவன் அருள்செய்தல் ஒருதலை யென்பது ஆன்றோர் கருத்து; இதுபற்றியே, 'என் விழுமந் தீர்ப்பது கடன்' என்றார். "படமாடக் கோயில் பகவற்கொன் றீயின், நடமாடக் கோயி னம்பர்க்கங் காகா, நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயின், படமாடக் கோயிற் பகவற்கத காமே" (திருமந்திரம்), "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால், இன்ப நிலை தானேவந் தெய்தும் பராபரமே" (தாயுமானவர்) என்பவற்றை அறிக. அறிந்து வைத்திருந்தும் - முன்னரே அறிந்திருந்தும்; வைத்து : ஒரு சொன்னடை.

புறக்கணித் திருந்ததை யன்றே குறித்திடிற்
உ௦. கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந் துழலுமக் கடவுளர்க் கல்லதை
பிறவியின் றுயர்நினைக் கறிவரி தாகலின்
அருளா தொழிந்தனை போலும்
உரு. கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே. (கள)

(நேரிசை வெண்பா)

326. கண்ணனூர் பொய்ச்சூள் கடைப்பிடித்தோ தென்புலத்தார்
அண்ணலா ரஞ்சுவரென் றஞ்சியோ - விண்ணோர்
விருந்தாடு மாரூரா மென்மலர்த்தா ளுக்கா
திருந்தாடு கின்றவா வென். (கஅ)

---

(19 - 25.) ஐ, அன்று, ஏ : அசை நிலைகள். கோள்வாய் முனிவர் - விரதமாகிய கொள்கை வாய்ந்த முனிவரது. சாபமாகிய கடலிற் பிறந்த பாவத்தின் பயனைக் கொள்ளும் பொருட்டு. அக்கடவுளரென்றது பிரமன் முதலியோரை. முனிவர்களின் சாபத்தால் பிரமன் முதலியோர் பலவகைப் பிறவியெடுத்தனரென்பது புராண வரலாறு. அக்கடவுளரே பிறவியின் துன்பத்தை அறிவார்; நீ அதனை அறியாயென்றார். இவ்வாசிரியரே, "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்" என்று மற்றைத் தெய்வங்களைக் கூறுவர். 'இயல்பாகவே கருணையிற் பொலிந்த நீ எனக்கு அருளாதிருத்தற்குத் தக்க காரணம் ஒன்று இருத்தல் வேண்டும்; இதுவே அக்காரணம் போலும்' என்றார்.

326. தியாகேசர் இருந்து ஆடுதற்குச் சில காரணம் கற்பிக்கின்றார்.

இருந்தாடழக ரென்பது தியாகேசர் திருநாமம்; "அளவில்பல் லுயிருங் களியுற விருந்தா டழகர்வீற் றிருந்தரு ளாரூர்" (தியாகராச. நகரப். 8.) திருவடி தெரிய நின்றாடின் முன்னர்த் திருவடி காணாது அலமந்த திருமால் கண்டேனென்று கூறுவரென்பது கருதியோ, முன்னொருகால் யமன் திருவடியால் உதைபட்டவனாதலின் இப்போது தூக்கிய திருவடி கண்டு மீண்டும் உதைவிழுமென்று அஞ்சுவனென்பது கருதியோ நீ இருந்தாடுகின்றாயென்பர்.

கண்ணனூர் - திருமால். சூள் - உறுதிமொழி. கடைப்பிடித்தோ - உறுதியாக எண்ணியோ. தென்புலத்தார் அண்ணலார் - யமன். விண்ணோர் விருந்து ஆடும் - தேவர்கள் புதுமையை அனுபவிக்கும்; இது திருவாரூருக்கு அடை. ஆடுகின்றவா - ஆடுகின்றவாறு; ஈறு குறைந்தது.

(கட்டளைக் கலித்துறை)

327. என்னுயிர்க் கொக்கு மிளஞ்சேயொ
டேழுல கீன்றவன்னை
மன்னுயிர்க் கொக்குங் கமலைப்
பிரான்மணி கண்டங்கண்டு
மின்னுயிர்க் கும்புய லென்றுமென்
கொன்றைபைந் தாதுயிர்க்கப்
பொன்னுயிர்க் கொண்கன் பொலன்றுகி
லாமெங்கை பூந்துகிலே. (கக)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

328. பூமாதி னிதயகம லத்து வைகும்
பொலிவானு மரியணைமேற் புணரி யீன்ற
மாமாது வழிபடவீற் றிருத்த லானும்
மறைமுதலு நடுமுதலு முடிவி னின்ற

---

327. இவ்வாசிரியருக்கு வழிபடு கடவுள் முருகக்கடவுளாதலின் அவரை, 'என்னுயிர்க்கொக்கு மிளஞ்சேய்' என்றார். அன்னையது உயிருக்கு ஒக்கும் கமலைப்பிரான். மணி கண்டம் - நீல நிறம்பொருந்திய திருக்கழுத்து. திருக்கழுத்தை மின்னை வெளிப்படுத்தும் மேகமென்றெண்ணிக் கொன்றை மலர்ந்து தாதை உதிர்த்தது. உயிர்த்தல் - வெளிப்படுத்துதல். கொன்றை கார்காலத்தில் மலர்வதாதலின் மேகம்போன்ற கண்டத்தைக் கண்டு மலர்ந்தது; "கார்விரி கொன்றை" (அகநா.) பொன் - திருமகள்; அவளுடைய உயிர்க்கொண்கன் திருமால். பொலன்துகில் - பீதாம்பரம்; பொலன் - பொன். கொன்றையின் தாது பொன்னிறத்ததாதலின் எம்பிரானது ஆடையில் அது பரந்து அவ்வாடையைப் பீதாம்பரம் போலத் தோற்றச் செய்தது. இது திரிபதிசய அணி.

328. தியாகேசப் பெருமானே மும்மூர்த்தியும் ஆவாரென்பதற்குரிய காரணங்கள் சமற்காரமாகக் கூறப்படும்.

பூமாது - மண்மகள். அவள் இதய கமலம் திருவாரூர். ஒரு கமலத்தில் வைகுதலின் பிரமனை ஒத்தார். அரியணை - சிங்காதனம். புணரி - பாற்கடல். மா மாது - திருமகள். இத்தலத்தில் திருமகள் வழிபட்டுப் பேறுபெற்றாள். திருமகள் வழிபட வீற்றிருத்தல் திருமாலுக்கும் தியாகேசருக்கும் பொதுத் தன்மை. மறைமுதல் - பிரமதேவர். நடுமுதல்-மும்மூர்த்திகளில் நடுவில்வைத்து

தாமாத றெளிவிப்பார் போலு நீலத்
தரங்கநெடுங் கடன்ஞால மொருங்கு வாய்த்த
கோமாது மனங்குழையக் குழைந்த வாரூர்க்
குழகனூர் கிண்கிணிக்கா லழக னூரே. (உ௦)

(நேரிசை யாசிரியப்பா)

329. அழலவிர் சோதி முழுவெயி லெறிப்ப
இளநில வெறிக்குங் குளிர்மதிக் குழவியும்
வெஞ்சினம் பொதிந்த நஞ்சுமிழ் பகுவாய்
வெள்ளைமுள் ளெயிற்றுப் பிள்ளைவா ளரவும்
௫. தெண்டிரை கொழிக்குந் தீம்புனற் கங்கைத்
தண்டுறை மருங்கிற் றனிவிளை யாட
உடன்வைத் தாற்றிய படர்சடைக் கடவுள்
எறுழ்வலித் தறுகட் டெறுசினக் கேழல்
முளையெயி றிலங்க முருகுகொப் புளித்துத்
க௦. தளையவி ழிதழித் தண்டார் மார்ப
திருவிழி யிரண்டினு மிருசுடர் வழங்கலின்
இரவுநன் பகலு மொருபுடை கிடந்தெனக்
கடங்கலுழ் கரடத் தடங்களிற் றுரிவையும்

---

எண்ணப்படும் திருமால். ஒருங்கு வாய்த்த - ஒருங்கே கருப்பத்தில் வாய்த்த. கோ மாது - உமாதேவியார். குழகனூர் - இளமையையுடைவர். கிண்கிணிக் காலழகனூர் : தியாகேசர் திருநாமம்.

329. சிவபெருமானைத் தேவருள் ஒருவராக வைத்து எண்ணுதல் பிழை யென்பர்.

(1-7.) அழலவிர் சோதி - சிவபெருமானின் திருமேனிச்சோதி ; சடை யின் சோதியுமாம். ஆற்றிய - சுமந்த. ஒன்றையொன்று பகைக்கும் இயல்பையுடைய சந்திரனையும் பாம்பையும் உடன்வைத்தாயென்றது ஒரு நயம். மதிக்குழவி, பிள்ளை வாளரவென்றதற்கேற்ப விளையாடவென்றார்.

(8 - 10.) எறுழ்வலி - மிக்க வன்மை. கேழல் முளையெயிறு இலங்க - பன்றியின் மூக்கில்முளைபோன்ற கொம்பு விளங்க. முருகு - நறுமணம். தளையவிழ் இதழி - முறுக்கவிழ்ந்து மலர்ந்த கொன்றை. பன்றிக்கொம்பு பிறைபோன்றிருத்தலின் அதுகண்டு கொன்றை மலர்ந்தது.

(11-5) இருசுடர் - சந்திர சூரியர். கிடந்தென - கிடந்தாற்போல. கடம் கலுழ்- மதம் பரவும். களிற்றுரிவை - யானைத்தோல். மடங்கல் ஈர் உரி - சிங்கத்தின் பச்சைத்தோல். அலமர - அசைய. “ சிங்கத்துரி மூடுதிர் ” (தே.) என்பதனால் சிங்கத்தோலையும் இறைவன் போர்த்ததறிக. யானைத்

மடங்கலி ருரியு முடன்கிடந் தலமர
கரு. விண்பட நிவந்த திண்பு யாசல
நெட்டிலைக் கமுகி னெடுங்கயி றூர்த்துக்
கட்டுபொன் னூசல் கன்னிய ராடவப்
பைங்குலைக் கமுகு பழுக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு தோற்றம்
உ௦. கந்தரத் தழகு கவர்ந்தன விவையென
அந்தி லாங்கவ ரார்த்தன ரலைப்ப
ஒண்மிட றுடைந்தாங் குதிரஞ் சிந்தக்
கண்முத் துகுத்துக் கலுழ்வது கடுக்கும்
தண்டலை யுடுத்த வொண்டமிழ்க் கமலைப்
உரு. பொற்பதி புரக்கு மற்புதக் கூத்தநின்
சேவடிக் கொன்றிது செப்புவன் கேண்மதி
விலங்கினுண் மிக்கது விண்ணவர் தருவென
ஒருங்குவைத் தெண்ணுவ தோர்வழக் கன்மையின்
ஒத்த சாதியி னுயர்புமற் றிழிபும்
ங௦. வைத்தன ரல்லதை வகுத்தனர் யாரே
ஆருயிர்க் கமைத்த வோரெழு பிறப்பினுள்

---

தோலுக்கு இருளும் சிங்கத்தோலுக்குப் பகலும் உவமைகள்; "இரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு" (மதுரைக். 634.)

(16-24.) சோலை வருணனை. மகளிர் பாக்குமரத்தில் கட்டிய ஊசலில் ஆடும்போது நிகழ்வன கூறப்படும்.

கமுகமரத்தில் நீண்ட கயிற்றைப் பிணித்து. பழுக்காய்- பாக்குக்காயை. கமுகமரத்தில்முத்து உண்டாகு மாதலின் ஊசலை அசைத்தலினால் அதிலிருந்து நித்திலம் உக்கதென்றார். கந்தரத்தழகு - கழுத்தின் அழகை; மகளிர் கழுத்துக்குக் கமுகை உவமை கூறுதல் மரபு. அந்தில் ஆங்கு; அசைநிலைகள். அலைப்ப - வருத்த. பாக்குக்காய்க்கு இரத்தமும் முத்துக்குக் கண்ணீரும் ஒப்பு.

(25.) பொற்பதி - பொலிவு பெற்ற நகரம்.

(27 - 30.) ஒரே சாதிப் பொருள்களுள் உயர்வு தாழ்வு கூறுதல் மரபேயன்றி வெவ்வேறு சாதிப்பொருள்களை ஒருங்கு வைத்தெண்ணி உயர்வு தாழ்வு கூறுதல் மரபன்று.

விண்ணவர் தரு - கற்பகம். அது விலங்கினத்தைச் சார்ந்தது அன்மையின், 'விலங்கினுண் மிக்கது விண்ணவர் தரு' என்றல் பிழையாயிற்று. அல்லதை - அல்லது பிறவாறுக; ஐ: சாரியை.

(31 - 5.) தேவசாதி எழுவகைப்பிறப்பினுள் முதன்மையானது.

முற்படு தேவருண் முதல்வனென் றெடுத்துக்
கற்பனை கடந்த கடவுணிற் பழிச்சும்
தொன்மறைக் குலங்கள் முன்னிய தியாதெனப்
௩௫. பன்முறை தெரிப்பினும் பயன்கொள வரிதால்
தேவரி னொருவனென் றியாவரு மருளுற
நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாகு மாகலிற்
றேறினர் மறையெனச் செப்பினர் நன்கே. (உக)

(நேரிசை வெண்பா)

330. நல்லார் தொழுங்கமலை நாதனே நாதனெனக்
கல்லாதார் சொல்லுங் கடாவிற்கு - வெல்லும்
விடையே விடையாக மெய்யுணரா ரையுற்
றிடையே மயங்குமிது வென். (உஉ)

(கட்டளைக் கலித்துறை)

331. இதுவே பொருளென் றெவரெவர் கூறினு மேற்பதெது
அதுவே பொருளென் றறிந்துகொண் டேனப் பொருளெவர்க்கும்

---

கற்பனை கடந்த கடவுள் : 333, 540. பழிச்சும் மறைக்குலங்கள் - புகழும் வேதத்தொகுதிகள். (பி - ம்.) 'பழிச்சுதும்' இறைவனைத் தேவர்களுள் மேலானவனென்று வேதம் கூறுதலின் பொருள் அறிவரிது. எழுவகைப் பிறப்பினுள் ஒன்றாகிய தெய்வப்பிறப்பைக் கடந்த நின்னை அத் தெய்வப் பிறப்பில் வைத்தெண்ணுதல் தக்கதன்று.

(36 - 9.) நிகழாது - வெளிப்பட உணர்த்தாமல். தேறினர் - அறிவிற் றெளிந்தோர். மறை - உண்மையை மறைத்துக் கூறுவது.

இறைவனைத் தேவருள் ஒருவனாகக் கருதல் ஏற்புடையதன்றென்பதும் அவன் அவருக்கும் அரிய நிலையினனென்பதும் கருத்து.

330. கமலைநாதனே நாதன் - திருவாரூர்த் தியாகப் பெருமானா முதல்வன் ? நாதனே ; ஏ, வினா. கடா - வினா. திருமால் முதலியோருக்கு முதன்மை கற்பித்துச் சிவபிரானது முதன்மையில் ஐயுற்று வினவுவாரைக் கல்லாதா ரென்றார். வெல்லும் - வெற்றிபெறும். விடையே விடை ஆக - சிவபெருமானைத் தாங்கும் திருமாலாகிய இடபமே விடையாக நிற்பவும். சிவபெருமானுக்கு வாகனமாகித் தாங்கும்செயலால், திருமால் அப்பெருமானுக்கு அடங்கியவரென்பதும் அதனால் சிவபெருமானே முதல்வனென்பதும் போதருதலை நினைந்து, விடையே விடையாக வென்றார். விடை - இடபம், உத்தரம்.

331. இதுவே பொருள். இம்மூர்த்தியே பரம்பொருள். எவரெவர் - பல்வேறு சமயத்தார். ஏற்பது - அவற்றை ஏற்றுக்கொள்ளும் பொருள் ; "விரிவிலா வறிவி னோர்கள் வேறொரு சமயஞ் செய்தே, எரிவினாற் சொன்னா ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்" (தே. திருநா.), "அறுவகைச் சமயத்

பொதுவேயென் றூலும் பொருந்துமெல் லோர்க்கும் பொதுவினிற்கும்
மதுவேய் மலர்ப்பொழி லாரூரி னும்வைகும் வைகலுமே.(உரு)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

332. வைய முழுது முழுதுண்ணை
வல்லாற் களித்து நவநிதியும்
கையி லொருவற் களித்தெமக்கே
க்திவீ டளித்தோர் கன்னிகைக்கு
மெய்யி லொருகூ றளித்தனரால்
விமலர் கமலைத் தியாகரென்ப
தைய ரிவர்க்கே தகுமுகமன்
அன்று புகழு மன்றுமே. (உச)

(நேரிசை யாசிரியப்பா)

333. ஆமையோ டணிந்து தலையோ டேந்திக்
காமரு மடந்தையர் கடைதொறுங் கடைதொறும்

---

தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறும், குறியது வுடைத்தாய்...செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்", "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாக ணார்தாம் வருகுவர்" (**சிவஞானசித்தியார்**) என்பவை இங்கே நினைத்தற்குரியன. பொதுவே - பொதுப்பொருளே. பொதுவில் நிற்கும் - சபையில் நிற்கும்; பொதுவான இடத்தில் நிற்குமென் பது வேறு பொருள். ஆரூரினும் வைகும் - திருவாரூரிலும் எழுந்தருளியிருக் கும்; யாருடைய ஊரிலும் தங்குமென்பது வேறொரு பொருள்; "ஆரூரி லேயிருப் பீரினிப் போய்விடு மம்பலத்தே" (தனிப்.)

332. உழுதுண்ணவல்லான் - திருமால். வராகாவதாரத்தில் உழுது கிருஷ்ணவதாரத்தில் திருவயிற்றில் அடக்குதலின் இங்ஙனம் கூறினார்; உழவுத்தொழில் செய்து அதனாற் பெறும் விளைவுகொண்டு உண்பானென் பது வேறொரு பொருள்; அத்தகையோனுக்கே நிலம் பயன்படுமாதலின் வையமுழுதும் அளித்ததாகக் கூறினார். திருமாலுக்கு வையத்தை அளித்த லாவது அவர் மண்மகளை மனைவியாகப் பெறச்செய்தது. ஒருவற்கு - குபேரனுக்கு. நவநிதி - ஒன்பது வகையான நிதிகள். நிதி எடுத்து அளிக்கப் படும் பொருளாதலின் 'கையில் அளித்து' என்றார். கதி வீடு - நற்கதியாகிய மோட்சத்தை; கதித்த வீடென்பது ஒருபொருள். ஓர் கன்னிகை - உமா தேவியார். நிலம், நிதி, வீடு, உடம்பில் ஒருகூறு இவற்றைப் பிறருக்கு அளித்தமையின் இவரையே தியாகரென்று கூறுதல் தகும். முகமன் - உபசார வழக்கு. முகமனும் புகழுமன்றென்றது அவருக்கு இயல்பேயா மென்றதாம்.

333. இறைவன் இத்திறத்தனென்று அளவிடற்கரியனென்பர்.
(1 - 3.) தலையோடு - பிரமகபாலம். கடை - வாயில்.

பலிதேர்ந் துண்ணினு முண்ணு மொலிகழற்
பைந்துழாய் முகிலும் பழமறை விரிஞ்சனும்
ரு. இந்திரா தியரு மிறைஞ்சினர் நிற்ப
மற்றவர் பதங்கள் மாற்றியும் வழங்கியும்
பற்றலர்ச் செகுத்து முற்றவர்த் தாங்கியும்
பரசுநர் பரசப் பணிகுநர் பணிய
அரசுவீற் றிருப்பினு மிருக்கு முறைசெயும்
௧௦. யோக சாதனம் போகிகட் கின்மையிற்
செஞ்சடை விரித்து வெண்பொடி பூசி
எருக்கங் கண்ணியுஞ் சூடி விருப்புடை
இடப்பான் மடந்தை நொடிப்போழ்து தணப்பினும்
மடவூர் குறிப்புத் தோன்ற விடலரும்
௧ரு. காமமீ தூர வேமுற் றிரந்தவள்
தாமரைச் சீறடி தைவந் தம்ம
புலவியிற் புலந்துங் கலவியிற் களித்தும்
போகமார்ந் திருப்பினு மிருக்கும் யோகிகட்
கெய்தா வொண்பொருள் கைவந்து கிடைப்ப
௨௦. ஞான முத்திரை சாத்தி மோனமோ
டியோகுசெய் திருப்பினு மிருக்கு மீகெழு

---

(4 - 9.) பைந்துழாய் முகில் - திருமால். விரிஞ்சன் - பிரமதேவர். பதங்கள் - பதவிகள். பற்றலர்ச் செகுத்தும் - பகைவரை அழித்தும். உற்றவர்த் தாங்கியும் - தன்பால் வந்தடைந்தோரைப் பாதுகாத்தும். தியாகேசப் பெருமான் திருவாரூரில் அரசராக வீற்றிருந்து ஆட்சி புரிந்தனரதலின் அரசுவீற்றிருக்கு மென்றார்.

(10 - 14.) யோகசாதனம் - யோகம் செய்வாருக்குரிய வேடம் முதலியன. போகிகள் - மகளிர்போகத்தை யுடையோர். இறைவன் சடைவிரித்துத் திருநீறுபூசி எருக்கங்கண்ணியைச் சூடியிருத்தலுக்கு ஒரு காரணம் கற்பிக்கின்றார். அவை யோகசாதனமெனின், போகியாகிய இறைவனுக்கு யோக சாதனம் வேண்டுவனவன்றாதலின், அவை மடலூருங் குறிப்பைக் காட்டுவன வென்றார். மடலூர்வோர் சடைவிரித்தல் முதலியவற்றைச் செய்தல் மரபு. இடப்பால் மடந்தை - உமாதேவியார். தணப்பினும் - பிரிந்தாலும்.

(15 - 8.) ஏம் உற்று - மயக்கத்தை அடைந்து. தைவந்து - வருடி. புலவி - ஊடல். அம்ம : வியப்புக்குறிப்பு. போகமார்ந்து - இன்பத்தை நுகர்ந்து.

(19 - 21.) ஞானமுத்திரை - சின்முத்திரை. யோகு - யோகம். ஆசாரிய மூர்த்தியாகியதைக் குறித்தபடி.

தமனிய மாடத் தரமிய முற்றத்
தைங்கணைக் கிழவ னரசிய னடாத்தக்
கொங்கைமால் களிறுங் கொலைக்கண்வாட் படையும்
உரு சில்கா ழல்குல் வெல்கொடித் தேரும்
பல்வகை யுறுப்பும் படையுறுப் பாகப்
பவக்குறும் பெறியும் தவக்குறும் பெறிந்து
நுணங்கிய நுசுப்பி னணங்கனார் குழுமிக்
கைவகுத் திருந்து கழங்கெறிந் தாட
௩௰. மையுண் கண்கண் மறிந்தெழுந் தலமரல்
செம்முகத் தாமரைச் சிறையளிக் குலங்கள்
அம்மென் காந்தளி னளிக்குல மார்த்தெழக்
கலந்துடன் றழீஇக் காமுற விகர்க்கும்
பொலன்செய் வீதிப் பொன்மதிற் கமலை
௩ரு. அண்ணன் மாநகர்க் கண்ணுதற் கடவுள்
கற்பனை கழன்று நிற்றலின்
நிற்பதிந் நிலையெனு நியமமோ வின்றே. (உரு)

(நேரிசை வெண்பா)

334. இன்னீ ருலகத்துக் கின்னுயிர்யா மென்றுணர்த்தும்
நன்னீர் வயற்கமலை நாதனார் - பொன்னார்ந்த

---

(22 - 3.) தமனிய மாடம் - பொன் மாளிகை. அரமிய முற்றம் - நிலா முற்றம். ஐங்கணைக்கிழவன் - காமன். நடாத்த - நடத்தும்படி.

(24 - 8.) கொங்கை முதலியவற்றைக் களிறு முதலிய படைகளாக உருவகம் செய்கின்றார். சில்காழ் - சில வடங்கள். உறுப்பு - அங்கம். படையுறுப்பு - சேனையின் உறுப்புக்கள். பவக்குறும்பு - பிறவியாகிய பகை. தவக்குறும்பு - தவஞ்செய்வோராகிய பகைஞர்.

(29 - 33.) கைவகுத்து - பக்கம் பக்கமாகப் பிரித்துக்கொண்டு; படைவகுத்தென்பது வேறு பொருள். கழங்கு - ஒருவகை விளையாட்டுக் கருவி; கழற்சிக்காய். அலமரல் - சுழலுதல். அளிக்குலம் - வண்டினம். முகத்திலுள்ள கண்கள் கையிலிருந்தெழும் நீலமணிகளாலாகிய கழங்குகளைப் பார்த்து அவற்றோடே உலவுதல், ஒரு தாமரையிலுள்ள வண்டுகள் காந்தட் பூவிலிருந்து எழும் வண்டுகளோடு கலந்து பயிலுதலைப் போன்றது. முகத்துக்குத் தாமரையும், கைக்குக் காந்தளும், கண்ணுக்கும் கழங்குக்கும் வண்டுகளும் உவமைகள்.

(34 - 7.) கற்பனை கழன்று நிற்றல்: 328, 540. நியமம் - வரையறை.

334. இனிய நீர் சூழ்ந்த உலகம்; பயனால் இன்னீராயிற்று. சேவடிக்கு ஆளானார்-திருவடிக்கு ஆட்பட்டோர். தென்புலத்தார் கோ அடிக்கு - யமதண்

சேவடிக்கா ளானார் சிலரன்றே தென்புலத்தார்
கோவடிக்கா ளாகார் குலைந்து. (உசு)

(கட்டளைக் கலித்துறை)

335. குலைவைத்த செவ்விள நீர்குளிர் பூம்பொழிற் கொம்புக்கின்ப
முலைவைத்த தொக்குங் கமலேசர் வேணி முகிழ்நகைவெண்
டலைவைத்த வேனற் புனமொக்குங் கங்கையத் தண்புனத்தில்
நிலைவைத்த மாதரை யொக்குங் கவணுக்கு நீள்பிறையே. (உஎ)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

336. பிறையொழுக வொழுகுபுனற் கங்கை யாற்றின்
பேரணையிற் றொடுத்துவிட்ட பெரும்பாம் பென்னக்
கறையொழுகும் படவரவம் படரும் வேணிக்
கண்ணுதலார் கமலையிற்பைங் கமலை போல்வீர்
நறையொழுகு மலர்ப்பொழில்குத் தகையாத் தந்தீர்
நானிரண்டு மாவடுவு நாடிக் காணேன்
நிறையொழுகு மிளநீரு நிற்கக் காணேன்
நீர்செய்த காரியமென் னிகழ்த்து வேனே. (உஅ)

---

டணைக்கு (659,688.) தியாகேசருடைய அடியாருக்கு யமதண்டமில்லை யென்றபடி.

335. பொழிலாகிய மங்கைக்கு இளநீர், நகில்வைத்தாற் போன்றது (429.) கொம்பு - பெண். வேணி - சடை. சடையானது ஏனற்புனத்தையும் கங்கை அப்புனத்தைக் காக்கும் குறமகளையும் பிறை கவணையும் ஒக்கும். ஏனற்புனம் - தினைக்கொல்லை. வெண்டலை - சிவபிரான் சடையிற்சூடிய சிரமாலை, ஏனற்புனத்தில் சுண்ணம் பூசித் தலைபோற் செய்துவைத்ததோர் உருவம்.

336. இது புறங்காட்டலென்னும் துறை. தலைவன் கூற்று.

கறை - விடம். சடையிலுள்ள பாம்பு கங்கையாற்றுக்கு அணைபோடும் பொருட்டு அமைத்த பாம்பைப்போன்றது. வைக்கோற்புரியை அணையிலிடுவர்; அதனைப் பாம்பென்பர்; "கிட்டு வார்பரி நிறுத்து வாரர வுருட்டுவார்" (திருவிளை. சுக : 5.) கமலை - திருவாரூர், திருமகள். மலர்ப்பொழிலென்றது கூந்தலை. குத்தகை : வழக்கு. இரண்டு மாவடுவென்றது கண்களை. இளநீர் : நகில். புறங்காட்டியமையின் கண்ணையும் தனத்தையும் காணமல் கூந்தலை மட்டும் கண்டான். சோலையைக் குத்தகைக்கு விட்டு அதிலுள்ள மாவடுவையும் இளநீரையும் யான் பெறுமற் செய்தல் தக்கதன்றென்று ஒரு பொருள் தோற்றியது.

(நேரிசையாசிரியப்பா)

337. வேனிலா னுறுப்பின் மென்றசை யிறைச்சி
தீநாக் கறியத் திருக்கண் டிறந்தோய்
நான்மறை முனிவன் கான்முளை சிறப்ப
விடற்கரும் பாசமோ டுடற்பொறை நீங்க
௫. உயிருண் கூற்றுக்குத் திருவடி வைத்தோய்
கருங்கடல் வண்ணன் வெள்விடை யாகி
அடிக டாங்கிய வுதவிக் காங்கவன்
முழுவென்பு சுமந்த கழுமுட் படையோய்
தேவா சிரயன் றிருக்கா வணத்து
௧௦. மேவா நின்ற விண்ணவர் குழாங்கள்
உருத்திர கணங்களென் றேடினர் வணங்கி
அருக்கிய முதல வகனமர்ந் தளிப்ப
இத்தலத் துற்றவ ரினித்தலத் துறுரெனக்
கைத்தலத் தேந்திய கனன்மழு வுறமும்
௧௫ மழுவுடைக் கைய ராகி விழுமிதின்

---

337. (1-2.) காமசங்காரச் செய்தி கூறப்படும். வேனிலான் - காமன். இறைச்சியைத் தீயின் நாக்கு அறியும்படி ; எரியவென்றபடி.

(3-5.) கால சங்காரம். நான்மறை முனிவன் கான்முளை - மிருகண்டு மாமுனிவர் புதல்வனான மார்க்கண்டேயன் ; "மறலி யுயிர்குடித்த கான்முளை" (257) என்றார் முன். பாசம் - யமபாசம். உடற்பொறை - யமனது உடம்பு ; அது நீங்கலாவது அவன் இறத்தல். உயிருண் கூற்று : "செல்லா துயிருண்ணுங் கூற்று" (குறள், 326.)

(6-8.) கங்காள மூர்த்தி. கருங்கடல் வண்ணன் - திருமால். தன்னைத் தாங்கியதற்கு எதிராக அவன் முழுவென்பைத் தாங்கினானென்றார். முழு வென்பு - கங்காளம் ; "கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ" (திருவா.) கழுமுள் - சூலம். கழுமுட் படையோயென்றது, அனைத்தும் ஒரு பெயராய் நின்று சுமந்த வென்பதனோடு இயைந்தது.

(9-17.) திருவாரூரிலுள்ளார் யாவரும் சிவகணங்களாகத் தோற்றுவ ரென்பது கூறப்படும். இங்ஙனம் தோற்றுதலை நமிநந்தி யடிகள் புராணத் தால் உணரலாகும் ; இதுபற்றியே, "திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்" என்று ஆளுடைய நம்பிகளும் பணித்தனர்.

தேவாசிரயனென்னும் திருக்காவணம் ; இது திருவாரூர்த்திருக்கோயிலி லுள்ள ஆயிரக்கால் மண்டபம். தேவர்களால் ஆசிரயிக்கப்படுதலின் இப் பெயர் பெற்றது. என்று - எனத் திருவாரூரில் உள்ளவர்களை நினைந்து

மாந்தர் யாவருங் காந்தியிற் பொலியும்
வரமிகு கமலைத் திருநகர்ப் பொலிந்தோய்
எழுதாக் கிளவியின் மொழியெனப் படுதலின்
நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல்
உ௦. மன்பெரும் புலமைத் தன்றே யும்பரின்
நின்னோ ரன்னோ ரின்மையி னின்னிலை
கூறுய் நீயெனிற் றேறுந ரிலரால்
தன்னுடை யாற்றன் முன்னோர் முன்னர்த்
தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம
உரு. நிற்புகழ்ந் திசைத்தனை நீயே யாக
இருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தா
தியங்கர் மரபி னிதுவிது பொருளென
மயங்கக் கூறுதல் மாண்புடைத் தன்றே
அளவில் காட்சியை யையமின் றுணர்த்தலிற்
௩௦. றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்

---

அவர்கள் மழுவைக் கையிலுடையராகத் தோன்றுவர். ஓர் உண்மையை நிலைநிறுத்தற் பொருட்டு மழுவேந்துதல் உலக வழக்கம்; ஆதலின் அவர்கள் மழுவேந்தி யிருத்தல், "இத்தலத்திற் பிறந்தார் இனிப் பிறவியையே அடையார்" என்னும் உண்மையை நிலைநிறுத்துவதாகத் தோற்று மென்றார். தலத்து உறுர் - பூமியிற் பிறவார். காந்தி - பேரொளி.

(18-20) எழுதாக் கிளவி - வேதம். அது சிவபெருமான் திருவாக்கென் பதை முன்னும் (329) கூறினர். தன் புகழைத் தானே கூறுதல் தக்கதன் றென்பது கருதி, 'மன்பெரும் புலமைத் தன்றே' என்றார். புலமைத்து - அறிவுடைய செயல்.

(21 - 5.) (பி-ம்.) 'நின்னோ ரன்னர்' தேறுநர் - தெளிபவர். முன்னோர் - உணரார். தற்புகழ் கிளவி - தன்னைப் புகழ்ந்துரைக்கும் கூற்று. "தன்னு டையாற்ற லுணரா ரிடையினும், தன்னைப் புகழ்தலுந் தகும்" (பனம்பாரம்) என்பதை நினைந்து இங்ஙனம் கூறினர்.

(26-8.) இருள்தீர் காட்சிப் பொருள் துணிந்து உணர்த்தாது - மயக்கம் தீர்ந்த ஞானத்தால் அறியப்படும் உண்மைப்பொருளைத் தெளிவாக உணர்த் தாமல். வேதத்திற் கூறப்படும் உண்மை மயக்கத்தைத் தருவதென்னும் சிலர் கொள்கையை மேற்கொண்டு கூறியபடி.

(29-30.) தளரா நிலைமைத்து - ஐயமில்லாத நிலைமையையுடையது. என்ப - என்று அறிந்தோர் கூறுவர்; அசைநிலையுமாம். என்றலின் - என்று கூறுதலின்.

றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச்
சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென
மொழிகுவ தேய்ப்ப முதுக்குறை வின்மையிற்
பழமறை மயங்கிற் றென்று முழுவதும்
கடு. எய்யா திசைக்குதும் போலும்
ஐயநின் றன்மை யளப்பரி தெமக்கே. (உகூ)

(நேரிசை வெண்பா)

338. அள்ளற் கருஞ்சேற் றகன்பணைசூ ழாரூரர்
வெள்ளப் புனற்சடைமேல் வெண்டிங்கள் - புள்ளுருவாய்

---

(31-6.) வேதம் மயங்கக் கூறுவதன்றென்று கூறுவார் கூற்றைக் காரணம் கூறி வலியுறுத்துகின்றார்.

முதுக்குறைவு - முதிர்ந்த அறிவு. பழமறை மயங்கிற்று என்று - பழைய வேதம் மயங்கியதென்று. முழுவதும் எய்யாது - முற்றும் உணராமல். என்று இசைக்குதும்; என்று - என்று. எங்களுடைய மயக்கத்தை வேதத்தின்மேல் ஏற்றிக் கூறுகின்றோம்; முற்றும் உணர்ந்தால் இங்ஙனம் கூற மாட்டோம். இச்செய்யுளின் பிற்பகுதியின் கருத்து விளங்குதற்பொருட்டுப் பின்வருமாறு வினவிடைகளாக்குதல் பொருந்தும்.

வினு:—இறைவன் வாய்மொழியே வேதமென்பர்; அதன்கண் அவனது தன்மை கூறப்படும்;தன்னைத்தான் புகழ்தல் அறிவுடையோர் செயலாகுமோ?

விடை:—அவனது பெருமை பிறரால் அறிவரிதாதலின் அதனை அவனே கூறல்வேண்டும்; தன்னுடை யாற்றலுணராரிடையே தற்புகழ்தலும் தகுமாதலின் இது பொருந்தும்.

வினு:—வேதம் இறைவன் உரைத்தது எனின், அதன்கண் பரம்பொருளின் நிலையை மயங்க உரைத்தது என்?

விடை:—அது மயங்கக் கூறவில்லை; ஐயமில்லாமலே உணர்த்தியது.

வினு;—வேதம் மயங்கிற்றென்று பிறரும் கூறுகின்றனரே.

விடை.—திசைமயக்கத்தை யடைந்த ஒருவன் தனது மயக்கத்தைத் திசையின்மேல் வைத்துத் திசைமயங்கிற்றென்று கூறுதலைப்போலத் தம் மயக்கத்தை வேதத்தின்மேல் ஏற்றிக் கூறியதே ஆகும் அது.

வினு:—பின், அவர் மயங்கற்குக் காரணம் என்ன?

விடை:—அவர்கள் முற்றும் உணர்ந்து உண்மையை அறியவில்லை.

338. அள்ளற் கருஞ்சேறு - குழைவையுடைய கரிய சேறு. அகன் பணை - அகன்ற வயல்கள். புள் - அன்னம். புள்ளுருவாய் (திருமுடியை) நண்ணிலாதாரை-பிரமதேவரை. நகைத்தலாவது,' யான் கண்ட திருமுடியை

நண்ணிலா தாரை நகைக்கு நகையையன்றோ
தண்ணிலா வென்னுஞ் சகம். (௩௦)

(கட்டளைக் கலித்துறை)

339. தண்மல ரும்பொழிற் றென்கம லேசர்க்குச் சாத்துகின்ற
ஒண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலுமற் றோர்புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியுங் காண்பரி தான கழன்மலரே. (௩௧)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

340. மல்லல்வளங் கனிந்தபுகழ்க் கமலேசர் திருவுருவும்
வாம பாகத்
தல்லமர்பைங் குழலுமையா டிருவுருவு மிருவருக்கும்
அமுத மான

---

நீ காணும் ஆற்றல் பெற்றிலையே!' எனக் கூறிச் சிரித்தல். இது தற்குறிப் பேற்ற வணி.

339. தண் - தண்மை. ஒண்மலர் - ஒள்ளிய மலர். சொன்மலர் - தோத்திரமாகிய மலர். மற்று: அசைநிலை. ஓர் புலவன் - சுந்தரமூர்த்தி நாயனார். பண்மலர் சாத்தி - பண்ணிறைந்த திருப்பதிகங்களாகிய மலர்களை அணிந்து; "மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய வாரூரை, நன்னெடுங் காதன்மையா லூரன், பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார், பொன்னுடை விண்ணுலக நண்ணுவர் புண்ணியரே" என்று சுந்தரமூர்த்தி நாயனாரே கூறுதல் காண்க. "அற்சனை பாட்டே யாகு மாதலான் மண்மேனம்மைச், சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்" (பெரிய. தடுத்தாட். 70) என்னும் இறைவன் கட்டளைப்படி அவர் சொன்மலர் சாத்தினர். பணிகொண்டவா- ஏவல்கொண்டது என்ன வியப்பு! மால் கண் மலர் சாத்தியும் காண்டற்கு அரிதாகிய திருவடியை (548); "மண்வைத்த குக்கி வளைவைத்த செங்கைமால், கண்வைத்துங் காணுக் கழலினான்" (திருவிடை. உலா.) கண்மலர் - கண்ணாகிய மலர், கள்ளையுடைய மலர்; சிலேடை. கழன்மலரைப் பணிகொண்டவாவென்க. இது பரவையினிடம் தூதுபோகச் செய்ததைக் குறித்தவாறு. தூதுசென்றவை திருவடிகளே யாதலின் அவற்றைப் பணிகொண்டதாகக் கூறினர். இங்ஙனம் செய்தலின் சொன்மலரே சிறந்ததென்று காரணங் காட்டி நிறுவினார்.

340. மல்லல் வளம் - மிக்க வளம். அல் அமர் - இருளைப்போன்ற. அயில்வேல் - கூர்மையையுடைய வேல். குழவி - முருகக் கடவுள். அரு உருவாம் குணங்கள் மூன்றின் நல் உரு ஆதலின் - அருவத்தையே உருவாகப் பெற்ற குணங்கள் மூன்றின் நல்ல உருவம் ஆதலினால். (பி - ம்.) 'குணங்கண்

கொல்லயில்வேற் பசுங்குழவி திருவுருவு மருவுருவாம்
குணங்கண் மூன்றின்
நல்லுருவா தலினன்றே விவரகில காரணராய்
நவில்கின் றேரே. (௯௨)

(நேரிசை யாசிரியப்பா)

341. நவமணி குயின்ற நாஞ்சில்சூழ் கிடக்கும்
உவளகங் கண்ணுற் றுவாக்கட லிஃதெனப்
பருகுவா னமைந்த கருவிமா மழையும்
செங்கண்மால் களிறுஞ் சென்றன படிய
ரு. வெங்கண்வா ளுழவர் வேற்றுமை தெரியார்
வல்விலங் கிடுதலின் வல்விலங் கிதுவெனச்
செல்விலங் கிடவெதிர் சென்றனர் பற்றக்
காக பந்தரிற் கைந்நிமிர்த் தெழுந்து
பாகொடு மூலாவிப் படர்தரு தோற்றம்
௧௦. நெடுவேல் வழுதி நிகளம் பூட்டிக்
கொடுபோ தந்த கொண்டலை நிகர்க்கும்
சீர்கெழு கமலைத் திருநகர் புரக்கும்

---

மூன்று' சிவபெருமானது வெண்ணிறம் சத்துவ குணத்திற்கும், உமாதேவியாரது நீல நிறம் தாமத குணத்திற்கும், முருகக்கடவுளது செந்நிறம் ரஜோ குணத்திற்கும் உரியனவாதலின் இங்ஙனம் கூறினர். நவில்கின்றேர் - பயிலுகின்றேர். முக்குண முடைய மூர்த்திகளால் உலகத்தின் படைப்பு முதலியன நடைபெறுதலின் அம்முக்குணத்திற்கும் உருவம்போன்ற இவர்கள் அவற்றை நடாத்துவார் போன்றனர். தியாகேசர் சோமாஸ்கந்தமூர்த்தியாதலின் அம்பிகையையும் முருகக்கடவுளையும் உடன்கூறினர்.

341. (1-11.) அகழியின்கண் மேகத்திற்கும் யானைக்கும் வேறுபாடு தெரியாமல், யானைப்பாகர் செய்யும் செயல் கூறப்படும்.

நாஞ்சில் - மதில். உவளகம் - அகழ். உவாக்கடல் - நீர்நிறைந்த கடல். கருவி மா மழை - மின் முதலிய தொகுதிகளையுடைய கரிய மேகம். வாள் உழவர் - வீரர். யானைக்கும் மேகத்திற்கும் வேற்றுமை தெரியாமல் இரண்டுக்கும் விலங்கிட்டனர் (206.) வல் விலங்கு இது என செல் விலங்கிட - வலிய மிருகமாகிய யானை இது என்று அறிந்து மேகமானது நீங்க. காகபந்தர் - காகங்கள் ஒருங்கே படர்ந்து பரந்துவரும் பரப்பு. படர்தரு தோற்றம் - வானத்தில் மேகம் செல்லும் காட்சி. வழுதி - உக்கிரகுமார பாண்டியன். நிகளம் - விலங்கு. கொடு போதந்த - கொண்டு வந்த.

(12.) புரக்குமென்றது தியாகேசர் அரசராயிருந்தமைபற்றி.

கார்திரண் டன்ன கறைமிடற் றண்ணல்
மூவரென் றெண்ணநின் முதற்றொழில் பூண்டும்
கரு. ஏவலிற் செய்துமென் றெண்ணு ராகி
அடங்கா வகந்தைக் கறிவெலாம் வழங்கி
உடம்பு வேறு யுயிர்ப்பொறை சுமந்து
நாளு நாளு நேடினர் திரிந்தும்
காணு தொழிந்ததை நிற்க நாணு
உ०. தியாவரு மிறைஞ்ச விறுமாப் பெய்துபு
தேவரென் றிருக்குஞ் சிலர்பிறர் தவத்தினும்
மிகப்பெருந் தொண்டரொ டிகலிமற் றுன்னொடும்
பகைத்திறம் பூண்ட பதகனே யெனினும்
நின்றிருப் பாத நேர்வரக் கண்டு
உரு. பொன்றின னேனும் புகழ்பெற் றிருத்தலின்
இமையா முக்கணெந் தாய்க்கு
நமனூர் செய்த நற்றவம் பெரிதே. (௫௫)

---

(14-9.) மூவரென்றெண்ண- நின்னொடு சேர்த்து மும்மூர்த்திகளென்று எண்ணும்படி. நின் முதற்றொழிலென்றது, இறைவன்றொழிலாகிய சங்காரத்திற்கு முற்பட்ட சிருட்டியையும் திதியையும். அகந்தைக்கு அறிவெலாம் வழங்கி - அறிவின்றி அகங்காரத்தை யடைந்து. உடம்பு வேறாய் - அதனால் வேறு வேறு உடம்பை எடுத்து; அன்னமும் பன்றியுமாகிய உடம்புகளை யெடுத்து; "யாதவ குலத்துநெடு மாதவன் மருப்புடைய வேனமிரு கத்துருவமா, வேதமொழி பெற்றவய னேதிமமெ னப்பறவை வேடமு மெடுத்ததிலையோ, ஓதருணை வித்தகரை மூவரி லொருத்தரென வோதியிடு மற்பமதியீர், சீதமதி வைத்தமுடி பாதமல ரைச்சிறிது தேடுத னினைத்தபரமே" (அருணைக்கலம். 6.) உயிர்ப்பொறை சுமந்து - உடம்புகளைச் சுமந்து; பல பிறவியெடுத்து. நேடினர் - இறைவனைத் தேடினவர்களாய்.

(20-21.) யாவரும் தம்மை வணங்குதலினால் தாம் நின்னையொப்பவர்களென்று இறுமாப்பையடைந்து தேவராக இருக்கும் சிலர். சிலர் - பிரம விஷ்ணுக்களாகிய இருவர் (105.) "மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணுண்டு மண்மேற், றேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதர்வரே" (திருவா. திருச்சதகம்.)

(22-7.) யமன் தண்டனையாகவேனும் நின் திருவடியின் தொடர்புடையானதலின் அவன் செய்த தவம் பெரிதென்பார். தொண்டர் - மார்க்கண்டேயர். நமனைப் பதகனென்றும் பொன்றினனென்றும் கூறுங்கால் ஒருமையிற் கூறினவர், அவனது நற்றவத்தை வியக்குமிடத்து அவ்வியப்புணர்ச்சியால் நமனூரென்று பன்மையாற் கூறினர். "மேலு மறிந்தில னான்முகன்

(நேரிசை வெண்பா)

342. நற்கரும்பு முக்கட் கரும்பென்று நங்கைமீர்
விற்கரும்பன் கைக்கரும்போ வேம்பென்னும்—சொற்கரும்பின்
வாமக் கரும்பு மனைக்கரும்பா மாரூரர்
காமக் கரும்புங் கரும்பு. (ங௪)

(கட்டளைக் கலித்துறை)

343. கரும்புற்ற செந்நெல் வயற்கம லேசர்கண் டார்க்குமச்சம்
தரும்புற்றி னிற்குடி கொண்டிருந் தாரது தானுமன்றி
விரும்புற்று மாசுணப் பூணணிந் தார்வெவ் விடமுமுண்டார்
சுரும்புற்ற கார்வரைத் தோகைபங் கான துணிவுகொண்டே.()

---

மேற்சென்று கீழிடந்து, மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும், பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக், கால னறிந்தா னறி தற்கரியான் கழலடியே" (தே. திருநா.); "கொண்டசின மாதி குறையாதே தென்றிசைக்கோன், கண்ட விடத்துக் கழல்கட்டி" (திருவிடைமருதூருலா, 179) என்பன இங்கே நினைத்தற்குரியன.

342. செவிலித்தாய் கூற்று.

முதல் இரண்டடியும் தலைவிகூற்றைச் செவிலி கொண்டுகூறியது.

முக்கட் கரும்பே நல்ல கரும்பென்று கூறுவாள். இனிய பொருளாத லின் கரும்பென்றாள்; "கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதாம், அண் டத்தைப் போல வழங்கியதாம் - தொண்டர், உடலுருகத் தித்திக்கு மோங்கு புக ழொற்றிக், கடலருகே நிற்குங் கரும்பு" (பட்டினத்துப்பிள்ளையார் பாடல்.) விற்கரும்பன் கைக்கரும்போ வேம்பென்னும் - மன்மதனுடைய கையி லுள்ள வில்லாகிய கரும்பை வேம்பென்று கூறுவாள்; அதனை வெறுப்பா ளென்றபடி (203.) விற்கரும்பனென்றது இடுகுறிமாத்திரையாய் நின்றது. சொல்லாகிய கரும்பினையுடைய இடப்பாகத்திலுள்ள கரும்புபோல்வாளாகிய உமாதேவி. மனைக்கரும்பு - இல்லக் கிழத்தி. ஆரூரரது காமத்தின்பொருட்டு அரும்பிய கரும்பு போல்வாளாகிய தலைவி. (பி - ம்.) 'ஆரூரா'

343. கரும்பைப்போன்ற நெல்லையுடைய வயல்; உற்ற: உவம உருபு; "கரும்பல்ல நெல்லென்ன" (பெரிய.), "நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்" என்பவாதலின், கருப்புற்ற வயல், செந்நெல்வயலென்று கூட் டிப் பொருளுரைத்தலும் பொருந்தும். புற்றினிற் குடிகொண்டிருந்தார் : வன் மீகநாதராதலின் இங்ஙனம் கூறினர். மாசுணப்பூண் - பாம்பாகிய ஆபரணம். புற்றில் இருந்ததும் பாம்பை யணிந்ததும் விடமுண்டதும் ஒரு மயில் அருகி லிருக்கும் தைரியத்தினாலேயாம் என்றார். சுரும்புற்ற கார் - கூந்தல்; சுரும்பு-

(எழுசீர்ச்சந்த விருத்தம்)

344. கொண்டலை யலைத்தபல தண்டலை யுடுத்தழகு
கொண்டக மலைப்ப தியுளார்க்
கண்டபி னெனக்கிதழி தந்தன ரெனப்பசலை
கண்டுயிர் தளிர்த்த மடவாள்
அண்டர முதொத்தவமு தந்தனை யிருட்கடுவி
தன்பர ருண்மிச்சில் கொலெனு
உண்டிடு முளத்திலவ ருண்குவ ரென்மிச்சிலென
உண்டதை மறுத்து மிழுமே. (௩௬)

(நேரிசை யாசிரியப்பா)

345. உமிழ்தேன் பிலிற்று மொள்ளிணர்க் கூந்தல்
அமிழ்துகு மழலை யம்மென் றீஞ்சொற்
சில்லரித் தடங்கண் மெல்லிய லொருத்தி

---

வண்டு. வரைத்தோகை - மலைமகள். பங்கு ஆன - ஒரு பாதியாக இருக்கும். மயிலின் முன் பாம்பு அடங்குமென்பதை நினைந்து இங்ஙனம் கூறினர்; "ஒப்பிலா மயூர நேர்வார் ...கருதிமுன் பார்த்தும்" (திருவால. ௩௨ : 11.)

344. (சந்தக் குறிப்பு.) தந்தன தனத்தனன தந்தன தனத்தனன தந்தன தனத்த தனனு.

தோழி கூற்று; செவிலிகூற்றுமாம்.

தலைவி காமமயக்கத்தாற் செய்யும் செயல்கள் கூறப்படும்.

தியாகப்பெருமானைக் கண்ட பிறகு அவரது பிரிவால் உண்டான பசலையை, தனது மயக்கத்தால். அவரளித்த கொன்றை மலராக எண்ணி மகிழ்வாள். கொண்டலை - மேகத்தை. அலைத்த - ஊடுருவிச் சென்று வருத்திய. தண்டலை - சோலைகள். இதழி - கொன்றைப்பூ; இது பொன்னிறமுடையதாதலின் பசலைக்கு உவமையாயிற்று.

உணவை விடமெனக் கருதிப் பின் விடம் எம்பிரான் உண்டதாதலின் அதனை உண்ணத்தகுமென்று உண்டவள், 'என் நெஞ்சத்துள்ளே அவர் இருத்தலின் அவரும் இதனை உண்பர்; யான் உண்டது எச்சிற்படுதலின் அவர் உண்ணுதல் தகாது' என்று மீட்டும் உமிழ்ந்து விடுவாள். அண்டரமுது ஒத்த அமுதம் - தேவாமுதத்தை யொத்த உணவு. இருட்கடு - இருளைப் போன்ற நிறத்தையுடைய விடம். அன்பர் - தியாகேசர். "நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல், அஞ்சுதும் வேபாக் கறிந்து" (குறள், 1128) என்பது இங்கே ஒப்புநோக்கற்குரியது.

345. இதில் முதல் 20 அடிகளில் ஒரு தலைவிக்கும் தலைவனுக்குமிடையே நிகழும் ஊடல் நிகழ்ச்சியைக் கூறுகின்றார்.

(1-3.) பிலிற்றும் - துளிக்கும். மழலையாகிய சொல். ஒருத்தி: எழுவாய்.

வரிசிலைத் தடக்கைக் குரிசின்மற் றொருவன்
ரு. பொன்னெடு மார்பிற் பொலன்கல னிமைப்பத்
தன்னுருத் தோற்றந் தரிக்கலள் வெகுண்டு
மாலா யினனென வணங்கின னிரத்தலிற்
றோலா மொழியை வாழியை பெரிதெனப்
புலந்தன ளெழுதலுங் கலங்கினன் வெரீஇக்
க0. கண்மலர் சிவப்ப மெய்பசப் பெய்தலிற்
றானு மாலாந் தன்மையள் கொல்லெனத்
தேறினன் றாழ்ந்து சிலம்படி திருத்திப்
பஞ்சியிற் பொலிந்த குஞ்சிய னிரப்பக்
கூடின ளல்லள் கூடா ளல்லள்

---

(4-9.) தலைவி தலைவனது மார்பிலுள்ள ஆபரணத்தில் தன் உருவம் தோற்றக் கண்டு அதனை வேறொரு பெண்ணென்றெண்ணி ஊடினாள். அது கண்ட தலைவன் அவளை வணங்கி, நான் காமமயக்க முற்றேனென்னும் பொருள்பட "மாலாயினன்" என்றான். அதுகேட்ட தலைவி, அவன் தன் மார்பில், திருமாலைப்போல ஒரு பெண்ணை வைத்திருக்கின்றானென்று எண்ணி, "நீ கூறியது உண்மையே; நீ பொய்யே கூறாத இயல்பினை" என்று கூறிச் சினந்தாள்.

பொலன்கலன் - பொன்னாலாகிய ஆபரணம். தோற்றம் - தோற்றுதலை. தரிக்கலள் வெகுண்டு - பொறாளாகிச் சினந்து. மால் ஆயினன் என - நின்பால் மயக்கமுடையேனாயினேன் என்று கூற. (பி - ம்.) 'வணங்கினை யிரத்தலின்' இரத்தலின் - தலைவன் தலைவியை இரத்தலினால். தோலாமொழியை - தோல்வியுறாத மொழியை உடையை; உண்மையான மொழியை உடையாய். மாலாயினனென்பதற்குத் திருமாலாயினேனென்னும் பொருளை உட்கொண்டு இங்ஙனம் கூறினாள். வாழியை பெரிது : குறிப்புப்பொருளது ; "வானோர் பெருமிதம் வாழியே" (நக்க.) என்புழிப்போல. புலந்தனள் - புலவி கொண்டாளாகி.

(10-13.) கண்மலர் கோபத்தாற் சிவந்தது. மெய் தலைவனது பிரிவினாற் பசந்தது. கண்சிவப்பும் மெய்யின் பசப்பும் அவளும் திருமாலாயினளோ என்னும் ஐயத்தை உண்டாக்கின. சிலம்படி திருத்தி - அடி வருடி. பஞ்சியிற் பொலிந்த குஞ்சியன் - அவளடியில் வீழ்ந்து வணங்குதலின் அவ்வடியிற் பூசிய செம்பஞ்சுக்குழம்பு பட்டுப் பொலிவுபெற்ற மயிரையுடையவனாகி. இரப்ப - பின்னும் இரந்து நிற்ப.

கரு. கைம்மிகு சீற்றமுங் காதலு மலைப்ப
வெள்ளப் புணர்ச்சியின் வேட்கையுள் ளடக்கி
உள்ளப் புணர்ச்சிய ளுடின ணிற்பது
தாதவிழ் தெரியற் சாக்கியர் பெருமான்
காதலுட் கிடப்பக் கல்லெறிந் தற்றே
உ௦. இத்திற மகளி ரிளைஞரோ டாடும்
நித்தில மாட நீண்மறு குடுத்த
மைம்மா முகிறவழ் மணிமதிற் கமலைப்
பெம்மா னருமைப் பெருமா ளாயினும்
ஊனுண் வாழ்க்கைக் கானவர் குருசில்
உரு. செஞ்சிலை சுமந்த கருமுகி லேய்ப்ப
உண்டுமிழ் தீநீ ருவந்தன ராடியும்
விருப்படிக் கொண்ட மிச்சிலூன் மிசைந்தும்
செருப்படிக் கடிகள் செம்மாந் திருந்தும்

---

(14 - 7.) புணர்ச்சி - மெய்யுறு புணர்ச்சி. வெள்ளம்போன்ற வேட்கையை. உள்ளப் புணர்ச்சி - மனம் ஒத்து நிற்றல். சீற்றம் அலைத்தலின் மெய்யுறு புணர்ச்சியை ஒழிந்தாள்; காதல் அலைத்தலினால் உள்ளப் புணர்ச்சியை உடையளாயினள்.

(17 - 9.) சாக்கியர் பெருமான் - சாக்கிய நாயனார். காதல் உட்கிடப்ப - சிவபெருமானிடத்து மெய்யன்பு உள்ளத்துள்ளே இருப்ப. கல் எறிந்தற்று - புறத்தே அன்பிலர் போல் அவர் கல்லை எறிந்தாற் போன்றது. நிற்பது கல்லெறிந்தற்றென இயைக்க. உள்ளத்துள்ளே வேட்கையும் புறத்தே சினக் குறிப்பும் உடைமைக்கு இவ்வுவமை கூறினர்.

(21 - 3.) மைம்மா முகில் - கரிய பெரிய மேகங்கள். (பி - ம்.) 'தவழு மணிமதில்' அருமைப் பெருமாள்: தியாகேசர் திருநாமம்; "வீறுதியா கப்பெருமாள் வீதிவிடங் கப்பெருமாள், கூறுமரு மைப்பெருமாள்" (**திருவாரூர்க் கோவை**, காப்பு.)

(24 - 8.) கண்ணப்பருக்கு எளியரானமை கூறுவார். (பி-ம்.) 'ஊனுண் வாழ்க்கை' கானவர் குருசில் - கண்ணப்ப நாயனார். செஞ்சிலையாலும் கரிய நிறத்தாலும் நீரை உண்டு உமிழ்வதாலும் மேகம் அவருக்கு உவமையாயிற்று. சிலை - வில். விருப்பு அடிக்கொண்ட மிச்சில் ஊன் - அன்பை அடிப்படையாகக் கொண்ட மிச்சிலாகிய ஊன். அடிகள் - ஸ்வாமியான நீர். செம்மாந்து - இறுமாந்து.

தொல்புகழ் விசயன் வில்லடி பொறுத்தும்
௩௦. அருந்தமிழ் வழுதி பிரம்படிக் குவந்தும்
நள்ளிருள் யாமத்து நாவலர் பெருமான்
தள்ளாக் காத றணித்தற் கம்ம
பரவை வாய்தலிற் பதமலர் சேப்ப
ஒருகா லல்ல விருகா னடந்தும்
௩௫ எளியரி னெளிய ராயினர்
அளியர் போலு மன்பர்க டமக்கே. (௩௭)

(நேரிசை வெண்பா)

346. தம்மேனி வெண்பொடியாற் றண்ணளியா லாரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே—அம்மேனி
மானே யமுனையந்த வாணிநதி யுங்குமரன்
தானே குடைவேந் தனித்து. (௩௮)

(கட்டளைக் கலித்துறை)

347. தன்னெக்குஞ் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவிமற்
றென்னெக்கு மென்னி னெரியொக்குங் கொன்றை யெரியிலிட்ட

---

(29 - 36,) விசயன் - அருச்சுனன். நாவலர் பெருமான் - சுந்தர மூர்த்தி நாயனூர். காதல் - பரவைநாச்சியாரிடத்துக் கொண்ட காதல். சேப்ப - சிவப்ப. அளியர் - இரங்கும் இயல்பினர்.

அருமைப் பெருமாளாயினும் (23) அன்பர்களுக்கு எளியரென்க.

346. தியாகேசப் பெருமானும் உமாதேவியாரும் முருகவேளும் சேர்ந்துள்ள காட்சி திரிவேணி•சங்கமத்தைப் போன்றுள்ளதென்பர்.

வெண்பொடி - திருநீறு. தண் அளியால் - குளிர்ந்த திருவருளால். செம்மேனியாயினும் வெண்பொடியால் வெண்ணிற முடையதாகத் தோற்றியது. வெண்மையும் தண்மையும் கங்கைக்குரியன (320.) அம்மேனி மானே யமுனை - அழகிய திருமேனியையுடைய மானைப்போன்ற உமாதேவி யமுனையை ஒப்பாள்; நிறத்தால் நீலமாதலின் ஒப்புக் கூறினர். வாணிநதி குமரன் - செய்ய நிறமுடைய முருகவேளே அந்நிறமுள்ள வாணிநதியைப் போல்வான்; "செய்யன்" (முருகு.) தான், ஏ: அசைநிலைகள். இங்ஙனம் மூன்று நதியும் சேர்ந்த திரிவேணி சங்கமமாக இருத்தலின் தனித்துக் குடைவேம்; குடைவேம் - ஆடுவேம். மூவரையும் ஒருங்கே தியானிப்பேமென்பது கருத்து. திரிவேணி சங்கமம் : 321.

347. சடாடவி - சடைத்தொகுதியாகிய காடு. அது நெருப்பை ஒக்கும்; "எரிமரு ளவிர்சடை" (புறநா. ருசு : 1.) அச்சடையில் கண்ணியாக அணிந்த

பொன்ஒக்கும்வண்டுகரியொக்குங் கங்கையப்பொன்செய்விக்கும்
மின்ஒக்கும் பொன்செய் கிழக்கொல்ல ஒக்குமவ் வெண்பிறையே.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

348. வெண்ணிலவு கொழித்தெறிக்குஞ் செஞ்சடைமோ லியர்வீதி
விடங்க ராரூர்க்
கண்ணுதல்பொற் புயவரைசேர் தனவரைக ளிரண்டவற்றுட்
கனக மேரு
அண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை வணங்கிடுநம்
அன்னை பார
வண்ணமுலைத் தடவரையவ் வரைகுழையப் பொருவதல்லால்
வணங்கி டாதே. (௪௦)

(நேரிசையாசிரியப்பா)

349. வண்டுகூட் டுண்ண நுண்டுளி பிலிற்றித்
தண்டே னுறைக்குந் தடமலர்ப் பொதும்பரின்

---

கொன்றைமலர் தீயில் ஆபரணம் செய்யும்பொருட்டு வைத்த பொன்னை ஒக்கும். அக்கொன்றையைச் சுற்றிய வண்டுகள் நெருப்புக்கருகி லுள்ள கரியை ஒக்கும். அருகிலுள்ள கங்கை ஆபரணத்தைச் செய்வித்த தற்குப் பக்கத்தில் காத்திருக்கும் பெண்ணை ஒப்பாள். பொன்- பொன்னணி; ஆகுபெயர். மின் - பெண். பிறை வெண்ணிறத்தாலும் வளைந்திருத்த லாலும் நரையும் கூனும் உடைய கிழத்தட்டானை ஒத்தது; 335, 463.

348. சிவபெருமானுக்குரிய தனவரைகள் இரண்டு. அவற்றுள் ஒன்று அவருடைய தோளால் குழையும்; மற்றொன்று அவர் தோளைக் குழைவிக்கும்.

செஞ்சடை மோலியர் - சிவந்த சடையையே முடியாக உடையவர். புயமாகிய மலையிற் சேர்கின்ற. தனவரை - பொன்னாகிய மலை, ஸ்தன மாகிய மலை; சிலேடை. மேரு: எழுவாய். உடைந்து - தோற்று. வில்லா னமை பற்றிக் குழைந்து தலைவணங்கிடுமென்றார். அங்ஙனம் வளைந்த மைக்கு, அவர் புயவரைக்குத் தோற்று வணங்கியதாக வேறொரு காரணங் கற்பித்தார் (311.) அவ்வரை - அந்தத் தோளாகிய மலை. அம்பிகையின் தனத்தால் அவர் தோள் குழைந்தது; இது காஞ்சியில் நிகழ்ந்த நிகழ்ச்சி.

349. இதில், முதல் 22 அடிகளில் சோலையில் நிகழும் காட்சி யொன்றை வருணிப்பார்.

(1 - 2.) கூட்டுண்ண - கொள்ளையிட. உறைக்கும் - துளிக்கும். பொதும்பர் - மரச்செறிவு.

விழுக்குலை தெறிப்ப விட்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகிற்
ரு. செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தன்ன கிளைதொறும் பணைத்து
மறிந்துகீழ் விழுந்தந் நறுந்துணர்க் கொடிகள்
நாற்றிசைப் புறத்து நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினிற் படரவப்
க௦. பைங்குலைக் கமுகிற் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தற் களிமயி னடிப்ப
நெடுந்தாண் மந்திகள் குடங்கையிற் றூக்கி
முட்புறக் கனிக டாக்கக் கொட்புறும்
வானர மொன்று வருக்கைத் திங்கனி
கரு. தானெடுத் தேந்துபு தலைமேற் கொண்டு
மந்திக டொடர மருண்டுமற் றந்தப்
பைந்துணர்க் கொடியிற் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்
தணங்கனு ளொருத்தி யாடின னிற்பப்

---

(3 - 5.) தெறிப்ப - தெறிக்கும்படி. விட்புலத்தவர்க்கு - தேவர்க்கு. பழுக்காய் -- பாக்கு. செடிபடு - செடியைப்போலப் பரவி வளர்ந்த.

(6 - 9.) (பி - ம்.) 'தலைவிரித் தென்னக்' தலைவிரித்தாற் போன்ற கிளை. கிளையென்றது கமுகமட்டையை. பணைத்து - பருத்து. மறிந்து - மடங்கி; கீழே விழுந்து. (பி - ம்) 'கீழ்விழுந்தநறுங்' நான்றன மடிந்து - தொங்கினவாகி வளைந்து. தாறு இளங்கதலித்தண்டினில் - குலையையுடைய இளவாழைமரத்தில். வாழைமரத்தையே தண்டென்றார்; "தண்டித் தண்டிற் றுய்ச்செல் வாரும்" (பரி. க௦ : 100.)

(10 - 11.) சிறை - சிறகு. கண்செய் கூந்தல் - கண்களையுடைய தோகையைப் பெற்ற.

(12 - 7.) மந்திகள் - பெண்குரங்குகள். குடங்கை - உள்ளங்கை. முட்புறக்கனிகள் - பலாப்பழங்களை. கொட்புறும் - சுழன்று வரும். வருக்கைத் தீங்கனி - பலாப்பழத்தை. அந்தப்பைந்துணர்க்கொடியில்-கமுகமரத்திலிருந்து தாழ்ந்து வாழைமரத்தின்மேற் படர்ந்த முல்லைக்கொடியில்.

(18 - 22.) வடம் - கயிறு. கம்பம் - தூண். பணை - பறை. கழைக் கூத்தன் - மூங்கிலின்மேல் ஏறி ஆடும் கூத்தாடி.

கமுகமரத்திற்கு நீண்ட கம்பமும், வாழைமரத்திற்குச் சூழ அடிக்கப் பட்ட முளைகளும், இடையே படர்ந்த முல்லைக்கொடிக்கு, முளைக்கும் தூணுக் கும் கட்டப்பட்ட வடமும், கமுகின்மேல் ஆடும் மயிலுக்குக் கம்பத்தின்மேல்

உ௦. பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனி னடக்கும் வண்ண மதேய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனற் கமலைத்
திருநகர் புரக்குங் கருணையங் கடவுள்
உரு. அன்பெனு மந்தரத் தாசைநாண் பிணித்து
வண்டுழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த
அருட்பெருங் கடலிற் றோன்றி விருப்பொடும்
இந்திரன் வேண்ட வும்பர்நாட் டெய்தி
அந்தமி றிருவொடு மரசவற் குதவி
௩௦. ஒருகோ லோச்சி யிருநிலம் புரப்பான்
திசைதிசை யுருட்டுந் திகிரியன் சென்ற
முசுகுந்த னுக்கு முன்னின் றுங்குப்
பொன்னுல கிழிந்து புடவியிற் றோன்றி
மன்னுயிர்க் கின்னருள் வழங்குதும் யாமென
௩ரு. மேவர வழங்குமான் மன்ற
யாவரு நமர்கா ளிறைஞ்சுமின் னீரே. (சக)

---

நடிக்கும் பெண்ணும், பலாப் பழங்களைக் கையிலெடுத்துத் தாக்கும் மந்திக ளுக்குப் பறையடிப்போரும், தலையிற் பலாப்பழத்தைக் கொண்டு முல்லைக் கொடியின்மேல் நடந்து செல்லும் வானரத்திற்குக் குடத்தைத் தலையிற் கொண்டு வடத்தின் மேல் நடக்கும் கழைக்கூத்தனும் உவமைகள். இந்நூ லில் 657 - ஆம் செய்யுளிலும் இத்தகைய காட்சி யொன்று கூறப்படும்.

(23 - 4) பணை - வயல். கடவுள் : எழுவாய்.

(25 - 36) திருமாலினிடத்திலிருந்து தியாகேசர் இத்தலத்திற்கு எழுந் தருளிய வரலாறு கூறப்படும்.

அன்பாகிய மந்தரமலையில் ஆசையாகிய கயிற்றைக் கட்டித் திருமால் கடைந்து வருந்த அருளாகிய பெருங்கடலில் அமுதம்போலத் தோன்றினர். இந்திரன் வேண்டுகோளால் தியாகப்பெருமான் தெய்வலோகம் சென்றார். அங்கிருந்து அவனால் தரப்பெற்று முசுகுந்தனுக்கு அருள் புரியப் பூவுலகத் துக்கு எழுந்தருளினர்.

மதித்தனன் - கடைந்தனனாகி. உம்பர்நாடு - தேவலோகம். திகிரியன் - சக்கரவர்த்தியாய். மேவர - விரும்ப. கடவுள் (24) வழங்கும்: ஆல்: அசை.

இங்கே கூறப்பட்ட செய்தியை, "பெருங்கண்ணன், செய்யுங் கருத்து முடித்த திருவுருவாய், உய்யுஞ் சுரராசுக் கோரரசாய் - எய்தியவண், பண்டு பணிப்பப்[1] பணிந்து முசுகுந்தன், கொண்டு வரக்கமலை கோயிலா - ஒண்டொ டிக்கை, மானுமொரு செவ்வேளு மானுமழு வுந்தரித்த, தானுமொரு சிங்கா தனத்திருந்தோன்" (திருவாரூருலா) என்பதனாலும், **திருவாரூர்ப் புராணம், கந்தபுராணம்** முதலியவற்றாலும் அறியலாகும்.

203

# வைத்தீசுவரன் கோயில்

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

---

## விநாயகக் கடவுள் துதி

(ஆசிரிய விருத்தம்)

350. **பொ**ன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்துதவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தோர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்

---

குறிப்பு :—இந்நூலின் பெயர் முத்தையன் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்ச் சேனைபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் குமாரதேவர் பிள்ளைக்கவி எனவும் ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது.

350. (அடி, 1.) இமவான் பொருப்பு - இமயமலை. இமயமலை பொன் னிறமுடையதாதலின், 'பொன்பூத்த குடுமிப் பொலங்குவடு' என்றார்; "பொற்கோட் டிமயம்" (புறநா. உ : 24); "பனிமாலிமயப், பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங் காக்கையும் பொன்னிறமாய், இருக்குமென் றிவ்வா றுரைக்குமன் றோவிவ் விருநிலமே" (யா. கா.) வெள்ளிவேதண்டம் - கைலை மலை. களிறு : சிவபெருமான்.

(2.) அளி - வண்டு. பிடி : உமாதேவியார். குஞ்சரக்கன்று - விநாயகக் கடவுள்.

(1-2.) யானைக்குரிய இடம் மலைகள்; இமயமலையிற் பிறந்து கயிலையி லுள்ள களிற்றைப் புணர்ந்து ஒருபிடி பெற்ற குஞ்சரக்கன்று (198, 513.) மந்தர மலையிலுள்ள சித்திரசாலையில் எழுதப்பட்டிருந்த சிவப்பிரணவம் சத்

மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
விண்டுதண் டேன்றுளிக்கும்
கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குருசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
. கொழிதமிழ்க் கவிதழையவே. (க)

## க. காப்புப் பருவம்

### திருமால்

351. பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட்
புலோமசை வளர்த்தகும்பப்

---

திப் பிரணவமென்னும் மந்திரங்கள் முறையே ஆண்யானை பெண்யானை களின் வடிவமாகத் தோன்ற அவற்றைக் கண்டு சிவபெருமானும் உமாதேவி யாரும் அவ்வடிவங் கொண்டுசேர்ந்து, தேவர் முதலியோரது துன்பத்தைப் போக்குதற்பொருட்டு விநாயகக் கடவுளை ஈன்றனரென்னும் வரலாறு தோன்ற இங்ஙனம் கூறினர். இச்சரிதம் காஞ்சிப்புராணம், வலம்புரி விநாயகப் படலத்தால் அறியப்படும்.

(3.) கடவுள் வேழம் - தெய்வயானையம்மை. கடம் - குடம். படா - சாயாத. கோடு - யானைத்தந்தம்.

(4.) கொன் - பெருமை. கடப்பமரம் மாலையாகப் பூப்பதாலின், 'தெரி யற் கடம்பு' என்றார்; "துறுநீர்க் கடம்பின் றுணையார் கோதை" (சிறுபாண். 69); இது முதலுக்கு ஏற்ற அடை. கடம்பு - கடப்பமலர்; இது முருகக்கடவு ளுக்குரியது; ஆகுபெயர். பொரு சிலைக்கை : முருகக்கடவுளுக்கு வில்லும் உண்டு; "அவுணர் முதறடிந்ததனி வில்லியை" (353); "பொறிவரிச் சாப மும்"(பரி. ரு : 65); "ஒருகை தனது வலக்குறங்கி னணங்கைத் தழுவி யுகள முலை, மருவ வபய மொன்றுக வளர்தோல் வாள்சூ லங்குலிசம், பொருவேல் வாள்வில் கதைபுள்ளம் புயங்கோல் பத்துங் கரம்பத்தின், இருவு மாறு முகத் தேவ சேனு பதிசீ ரிழைப்போரும் " (தணிகைப். அகத்தியனருள்பெறு. 66.) கந்தபுரி : இத்தலத்தின் பெயர். கொழிதமிழ் : 196, 386 - 8.

(முடிபு.) தமிழ்க்கவி தழையக் குஞ்சரக் கன்றின் செஞ்சரணை யஞ்சலிப் பாம்.

351. (அடி, 1.) பொங்கர் - சோலை. புலோமசை - இந்திராணி. புலோ மசை வளர்த்த யானை : தெய்வயானை யம்மை (6.) கும்பம்போன்ற நகில்.

புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்தும்
கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தொறும்
கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் தனிபுரக்க
தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிகள்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற்
றெண்டிரை முகட்டுதித்த
பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொற்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே. (உ)

## வைத்தியநாதர்

### (சந்த விருத்தம்)

352. ஒருபு றத்துமர கதமி மைப்பவொளிர்
மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்தென

---

பொருப்பு - மலைபோன்ற தோள். தேவியாரை யானையென்றதற்கேற்பத் தோள்களைப் பொருப்பென்றார்.

(2.) குறச் சிறுமி - வள்ளி நாயகியார். குழகன் - இளமைப்பருவமுடையவன். கழகம் - கல்வி பயிலுமிடம். கொத்து முத்தமிழ் - முத்தமிழ் நூல்களின் தொகுதி; "முத்தமிழ்க் கொத்தியல் வல்ல, மற்றுள சங்கத் தவரும்" (திருவால. கரு :5.) கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி : 391 - 5, 436-8. முத்துக்குமாரன் : இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகக்கடவுளின் திருநாமம்.

(3.) தே மேவு - தெய்வங்கள் விரும்பிய. கடவுட்பொலங்கிரி - மேருமலை. திசைக்கரி - திக்குயானைகள். (பி - ம்.) 'திசைக்கிரிகள்' திகிரிகிரி - சக்கரவாளகிரி. குலகிரி - குலாசலங்கள். மத்து - மேருவாகிய மத்து (6.)

(4.) பங்கயச் செல்வி - திருமகள். குவடு - மலை. வளர் - துயிலும். பச்சைப் பசுங்கொண்டல் - திருமால் (3.) கொண்டலென்று திருமாலைக் கூறியதற்கேற்ப நகில்களைக் குவடென்றார்.

(முடிபு.) பசுங்கொண்டல் முத்துக்குமாரனைத் தனி புரக்க.

352. (சந்தக்குறிப்பு) தனன தத்ததன தனன தத்ததன தானன தத்தன தானனத் தாத்தன.

உலக ளக்கரிமிர் வடபொ ருப்பையொரு
தோளால்வ ளைத்தபி ஞகியைத் தீக்கனல்
உமிழு முக்குடுமி யயிறி ரித்துவரு
வாய்வாண்ம ழுப்படை வீரனைப் பார்த்தனொ
டுடலு மற்றொழிலி னறவி ளைத்துமெதிர்
ஓடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்
விரிக டற்புடவி முழுது ணச்சமையும்
ஓர்காளை கட்டுப்ர தாபனைக் கார்க்கடு
விடமெ டுத்தரிய திருமி டற்றிலிடு
காமாரி யைக்கவு மாரியைப் போற்றிரு
விழிமு னிற்கும்வடி வழகு டைக்கடவுண்
மாமோகி னிக்கும ணாளனைச் சூக்கும
வெளியி னிற்பரம நடந விற்றுதிறல்
வேளூர்வ யித்திய நாதனைப் போற்றுதும்
குரவு செச்சையொடு நறவு யிர்ப்பவிரி
தேனுறு வட்டெழு மார்பனைப் பேய்த்திரள்
குரவை யிட்டவுணர் தடிசு வைத்திடவொர்
கூர்வேல்வி டுத்தகு மாரனைப் பார்ப்பதி

---

(அடி, 1.) மரகதம் - அம்பிகைபாகத்தின் ஒளி. மாமேரு - சிவபெருமான். வடபொருப்பு - மேருமலை. பிஞகி-சிவபெருமான்; பிஞகம் அவருடைய வில். முக்குடுமி அயில் - சூலம். வாய்வாள் - வாய்த்த கூர்மையையுடைய; வாள் - கூர்மை. பார்த்தன் - அருச்சுனன். உடலும் - போர்செய்த. மல் - மற்போர். அற இளைத்தும் - மிக இளைத்தும். கிராதன் - வேடவடிவங் கொண்டவன்; இதன் விரிவு வி. பா. அருச்சுனன் தவநிலைச் சருக்கத்தால் அறியப்படும்.

(2.) உண்ணும் பொருட்டுச் சமைந்த. ஓர் காளையென்றது திருமாலாகிய விடையை. ப்ரதாபம் - வீரத்தாலுண்டாகிய புகழ். கார்க்கடுவிடம் - கரிய நிறமுள்ள கடுமையாகிய விடத்தை. காமாரி - காமனுக்குப் பகைவன். கவுமாரி - உமாதேவியார். மோகினி - திருமாலின் அவதாரமாகிய மோகினி. மணாளன் - மணவாளனென்பதன் மரூஉ. சூக்கும வெளி - சூக்கும ஆகாசம். வேளூர் : இத்தலத்தின் பெயர்.

(3.) குரவு - குராமலர். செச்சை - வெட்சிமலர். குரவை - குரவைக் கூத்து. தடி - மாமிசம். உரும் உக - இடியும் கெடும்படி. குளிறு - முழங்குகின்ற. காலாயுதம் - கோழிச்சேவல். உருக -உருகா நிற்ப.வெற்பவர்தம்மான் - வள்ளிநாயகியார். மற்பொரு தோளென்றது தழுவும் செயலைக் குறித்தபடி.

குமர னைச்சமரி லுருமு கக்குளிறு
  காலாயு தக்கொடி யாளனைக் கோட்டிய
குறுந கைக்குமன முருக வெற்பவர்த
  மானோடு மற்பொரு தோளனைத் தாக்கிய
திரண்ம ருப்பினமர் பொருத னிக்கடவுண்
  மால்யானை யைப்புணர் காளையைச் சாற்றிய
செழும றைப்பொருளி னுரைவி ரித்துமெனும்
  வேதாமு டித்தலை மோதுகைக் காய்ப்பொடு
திருவ டித்துணையென் முடிப தித்தவடு
  ஆறுத மெய்ப்புக ழாளியைப் பூட்டிய
சிறைவி டுத்தமரர் குறைமு டித்துதவு
  சேனுப திப்பெரு மாடனைக் காக்கவே. (ங)

## தெய்வயானையம்மை

(வேறு)

353. குழைய டர்ந்துவடி கணைது ரந்துசெறி
  குமிழ்ம றிந்தவிழி நவ்வியைக் கோட்டொடு
குவடெ றிந்தமுத கலசம் வென்றதட
  முலைசு மந்தமலை வல்லியைச் சேற்றுளிர்

---

(4.) மருப்பு: நகில். கடவுள்மால்யானை - தெய்வயானை யம்மை. காளை - பதினாறு பிராயமுடையவன் (தக்க. 5, உரை.) யானையைப்புணர் காளையென்றது ஒரு நயம். விரித்தும் - விரிப்போம். வேதா - பிரமதேவனது. கைக்காய்ப்பு - கையில் உள்ள வடு. திருவடித் துணை - இரண்டு திருவடிகளை. (பி - ம்.) 'திருவடித்துணையின்' என் தலையில் திருவடிகளை வைத்தமையால் உண்டான வடு; "தழுவுமையான் முன்னுந் தமிழிறையாற் பின்னும், தொழுமிறையான் மேலுஞ் சுவடு - கெழுமுவகீழ், இன்று லெனுங்குறைபோ மென்மனஞ்சேர் வாட்போக்கி, அன்று லமர்ந்தா யடி" (வாட்போக்கிக்கலம்பகம்) என்பது இங்கே நினைத்தற்குரியது. சிறை - சூரபன்மா அமைத்த சிறை. சேனுபதிப் பெருமாள்: 379 - 80, 450.

(முடிபு.) சேனுபதிப் பெருமாடனைக்காக்க, வைத்தியநாதனைப் போற்றுதும்.

353. (சந்தக்குறிப்பு.) தனன தந்ததன தனன தந்ததன தனன தந்த தன தய்யனத் தாத்தன.

(அடி, 1.) வடிகணை - வடிக்கப்பட்ட அம்பு. குமிழ்: மூக்கு; குழை......விழி; "குழைபொருது நீண்டு குமிழ்மேன் மறியா...கருநெடுங்கண்

குமுதம் விண்டசுவை யமுத முண்டினிய
  கொழுநர் கொஞ்சுசிறு கிள்ளையைத் தாட்டுணை
நறுகு தொண்டர்பிழை யறம றந்துபிறர்
  குணமி கழ்ந்ததக வில்லியைச் சேட்செலும்

எழுபெ ருப்புவன முழுதொ ருங்குதவும்
  இறைவி யென்றுமறை கையெடுத் தார்க்கவும்
இடைநு டங்குமட நடையி ளங்குமரி
  எனவி ருந்தகன கள்வியைப் பூத்தவென்
இதய புண்டரிக மலரி லெந்தையொடும்
  இனித மர்ந்தவொரு செல்வியைப் பாற்றொருகும்
இருவர் கண்கள்கது வரிய செஞ்சுடரின்
  இடம ருங்குடைய தையலைப் போற்றுதும்

முழுது ணர்ந்துமுணர் வரிய தொன்றையொரு
  மொழியின் விண்டசிறு பிள்ளையைச் சூர்ப்பெயர்
முதுப ழம்பகையை யறவெ றிந்தவுணர்
  முதற டிந்ததனி வில்லியைப் பாட்டளி
முரல விண்டதரு நிழலொ ழும்புகுடி
  புகவ ழங்குகொடை வள்ளலைப் போற்றடி
முடியு மின்றிவெறு வெளிக டந்துமறை
  முடிவி னின்றுநிறை செல்வனைக் காத்தொறும்

---

போலுங் கயல்" (தண்டி. சூ. 31, மேற்.) நவ்வி - மான்போன்றவளை. கோடு-யானைத் தந்தம். குவடு - மலை. சேற்றெளிர் குமுதம், "தூம்புடை நெடுங்கை வேழம்" (சீவக. 232) என்றது போன்றது; சேற்றெளிர்: குமுதமென்றதற்கு ஏற்ற அடை; குமுதம்: கீழ்த்தடு. பிறர் - தொண்டரல்லாதவரது. தகவில்லி - நடுநிலை பிறழ்ந்தவள்.

(2) பால் தொகும் - பக்கத்திலுள்ள. இருவர் - திருமாலும் பிரமதேவரும். செஞ்சுடர் - சிவபெருமான். தையல்: இத்தலத்து அம்பிகையின் திருநாமம்; பாலாம்பிகை யென்று வடமொழியில் வழங்கும்.

(3.) ஒன்றை - பிரணவப்பொருளை. விண்ட - சிவபெருமானுக்குச் சொன்ன. அவுணர் முதல் - அசுரர் குலத்தை. தரு நிழலில். தொழும்பு - அடியவரான தேவர்கள்; ஆகுபெயர். அடியும் முடியும் இன்றி. கா - சோலை...

மழலை வண்டுதட மலர்கு டைந்துபுது
மதுவ ருந்திநறு மல்லிகைச் சேக்கையின்
வடிப சுந்தமிழி னிசைப யின்றபெடை
யொடுது யின்றினிய செவ்வழிப் பாட்டினை
வருவி பஞ்சிபயி றருமத ங்கர்தெரு
மரமு ரன்றுநெடு வைகறைப் போய்ச்செழு
மலரி லஞ்சிதொறு முலவு கந்தபுரி
மருவு கந்தனையெ மையனைக் காக்கவே. (௪)

## கற்பக விநாயகக் கடவுள்

### (வேறு)

354. கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவோர்
படாமணி மத்தகத் தந்தியைத் தீர்த்தர்கள்
பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாதுபொ ருப்பினிற் றுன்றுபுத் தேட்கெதிர்
மனுலைய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய
சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே. (௫)

---

(4.) தமிழினிசை பயின்ற பெடை: "வண்டு தமிழ்ப்பாட்டிசைக்குந் தாமரையே" (கம்ப. பம்பைப். 29.) செவ்வழி - மாலைக்காலத்துக்குரிய பண். விபஞ்சி - வீணை. மதங்கர் - பாணர். இலஞ்சி - குளம்.

(முடிபு.) எம் ஐயனைக் காக்கத் தையலைப் போற்றுதும்.

354. (சந்தக்குறிப்பு.) தனதன தத்தனத் தந்தனத் தாத்தன.

(அடி, 1.) யானைப்போர்வையை அணிந்த சிவபெருமானுக்கு ஒப்ப. கை - துதிக்கை. கிம்புரி - யானைத் தந்தத்திற்கு இடும் பூண். கராசலம் - யானை. கஞ்சுகி - சட்டையை அணிந்த சிவபெருமான்; கஞ்சுகம் - சட்டை. (பி - ம்.) 'கஞ்சுகக் கேற்ப'

(2.) படாம் - முகபடாத்தை; முகபடாத்திற்கு யானைத்தோல் உவமை. கற்பகக் கன்று - கற்பக விநாயகர்; இத்தல விநாயகர்.

(3.) வடாது பொருப்பு - மேருமலை. புத்தேட்கு எதிர் - தேவர்களுக்கு எதிரே; புத்தேள்: சாதியொருமை. மெய்ப்பண்பினை - தமது உண்மை இயல்பினை; இச்சரிதத்தின் விரிவைக் கந்தபுராணம், திருவிளையாட்டுப் படலத்தாலுணர்க.

(4.) தலைச்சங்கம் இங்கே இருந்ததாகக் கூறப்படுவதுண்டு. சடாயு புரம்: இத்தலத்தின் திருநாமம்.

(முடிபு.) கந்தனைக் காக்கக் கற்பகக்கன்றினைப் போற்றுதும்.

## பிரம தேவர்

(ஆசிரிய விருத்தம்)

355. பைங்காற் கமுகு செம்பழுக்காய்ப்
பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல்
பனிமுத் துதுக்குஞ் சோணாட்டின்
பரிசு பாடி ஞிமிறிரைப்பக்

கொங்கார்த் திறைக்கு நறைக்காந்தள்
குறிஞ்சி மலரோ டணிந்தநறுங்
குஞ்சிப் பெருமாள் வேதபுரிக்
குமரப் பெருமா டனைக்காக்க

செங்காற் கருங்கட் பைந்தொடியார்
சிற்றாய்ப் பாடிப் பெருங்குடியில்
திம்பா ரிருடிக் கட்டுண்டு
திரியா வண்ணந் திருத்தாதைக்

கங்காப் படங்கப் பாறயிர்நெய்
அருந்தேன் கடலோ டிருந்துண்ண
அகிலம் படைத்துத் தனக்கேற
அன்னம் படைத்த பெருமாளே. (கூ)

---

355. (அடி, 1.) (பி - ம்.) 'பைங்காய்க் கமுகு' பழுக்காய் - செங்காய். பவளம்: உவமை. (பி - ம்.) 'ஞிமிறிரப்ப' உதிர்ப்பப் பாடி இரைப்ப. முத்தென்றது நெல்லை. முத்துப் பிறக்கும் இடங்களுள் நெல் ஒன்றாதலின் முத்தெனக் கொள்ளுதலும் பொருந்தும்.

(2-3.) வேதபுரி: இத்தலப் பெயர். பெருங்குடி. ஆய்ப்பாடியிலுள்ளார் ஐந்து லக்ஷமென்பராதலின் பெருங்குடி யென்றார்.

(3-4.) அங்காப்பு - உண்ணவேண்டி வாய்திறத்தல். பால் முதலிய ஒவ்வொன்றும் ஒரு கடலாக உள்ளது. ஏற - ஏறுதற்கு. அன்னம் - அன்னப் பறவை. திருமாலுக்கு அன்னமொழிந்த பால் முதலியவற்றை யெல்லாம் படைத்துத் தனக்கு மிகுதியாக உண்ணும் அன்னத்தைப் படைத்துக் கொண்ட வென்றது ஒரு நயம்.

(முடிபு.) அன்னம் படைத்த பெருமாள், குமரப் பெருமாடனைக்காக்க.

## தேவேந்திரன்

(வேறு)

356. காஞறு கற்பகக் காவுமூ வுலகுமக்
காவென விழற்றுமொற்றைக்
கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவுமுள
காணியுங் காணியாக
வாஞறு கோட்டிமய மலைவயி றுவாய்த்ததலை
மகளுக்கு மணமகற்கும்
மருமகளை யுரியதன் திருமக ளெனப்பெற்ற
மாமடிக ளைத்துதிப்பாம்
பாஞறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச்செந்
தேஞறு டன்கடவுள் வாஞறெனப்பெருகு
சித்தாமிர் தஞ்சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்க வென்றே. (எ)

## திருமகள்

357. மானிறக் கடவுடிரு மறுமார்பி னறவிரி
வனத்துழாய்க் காடுமூடி

---

356. (அடி, 1.) தெய்வயானையம்மையைத் தன் மகளாகப் பெற்றமையின், கற்பகக்கா முதலியன அலைவின்றி இந்திரனுக்கே உரியனவாயின. காணி - உரிமை (385.)

(2.) மருமகளென்றது தெய்வயானையம்மையை. மாமடிகள் : பெண்ணைக்கொடுத்த மாமனை மாமடிகளென்றல் மரபு (548); "மந்தணமிருந்துபுரி மாமடிதன் வேள்வி, சிந்தவிளை யாடுசிவ லோகன் " (தே.)

(3.) மடு - மடுக்களில். மடியாகிய மடை (325.)

(4.) சித்தாமிர்தம் : கோயிலுக்குள் அம்பிகையின் சந்நிதிக்கு முன்னுள்ள விசேட தீர்த்தம். பாலாறு சீர்த்திக்கும், தேஞறு பிரதாபத்திற்கும் உவமைகள் ; சீர்த்தி - மிகுபுகழ். புகழுக்கு வெண்ணிறமும் பிரதாபத்திற்குச் செந்நிறமும் கூறுதல் கவிமரபு. தினகரபுரி : இத்தலத்தின் பெயர்.

(முடிபு.) தேவதேவனைக் காக்கவென்று மாமடிகளைத் துதிப்பாம்.

357. (அடி, 5.) மால் - மேகம். திருவாகிய மறுவையுடைய மார்பு (பரி. ௧ : 36, ௪ : 59.) நற - தேன். மணிவிளக்கு - இரத்தின தீபத்தை.

மாயிருள் வழங்குதன் றிருமாளி கைக்கந்தண்
மணிவிளக் கிட்டுமுட்டாட்
கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவந் திறந்தளித்தும்
காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை யஞ்சலிப்பாம்
மீனிறப் புணரியை விழுங்குங் கடற்றானை
வெள்ளமொடு கள்ளமனமும்
மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங்குல்
விடியக் கடுங்குரல்விடும்
தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண்
சிறைமயிற் பரிநடாத்தும்
சேவகப் பெருமானை வேதபுரி வருமிளஞ்
சேயைப் புரக்கவென்றே. (அ)

## கலைமகள்

358. துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
சுதைநிறஞ் சிதைவுறாமே
தொன்மறை கனிந்தூறு மண்பனீ ரூறலிற்
றாத்துகி லனைப்புறாமே
நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் செனக்குடிபுகும்
ஞானப் பிராட்டியைச் சொற்கடற் றெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாம்

---

(அடி, 1 - 2.) கவுத்துவம் சூரியன் போன்று விளங்குகின்றதென்றபடி. மணிவிளக்கிட்டும், கதவந்திறந்தும் காதன்மை காட்டும்.

(3.) இருள - இருளா நிற்ப. அவுணக் கருங்கங்குல் - அசுரராகிய கரிய இருளையுடைய இரவு.

(4.) குடுமி - சூட்டு. சேவகம் - வீரம்.

(முடிபு.) சேயைப் புரக்கவென்று, கன்னிகையை அஞ்சலிப்பாம்.

358. (அடி, 1.) சுதை நிறம் - வெண்ணிறம். அண்பல் - பிரமதேவனுடைய மேல்வாய்ப்பல். (பி - ம்.) 'அன்பனீர்'

(1 - 2.) வெண்டாமரையிற் குடிபுகுந்தமையால் சுதைநிறம் சிதைதலும் துகில் நனைதலும் இல்லையாயின. பொகுட்டிற் குடிபுகும் என்க. ஞானப்பிராட்டியை - ஞானத்தை அளிப்பவளை. சொற்கடலிற் றோன்றிய அமுதை.

சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந்
திர்த்தந் திளைத்தாடிய
செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளிற்
றெள்ளமுத மயமாகலான்
உறைபட்ட சுதைநிலவொ டிளவெயிலு மளவளாய்
உண்ணச் சகோரம்வெஃகும்
ஓங்கெயிற் பருதிபுரி முருகனைச் சண்முகத்
தொருவனைக் காக்கவென்றே. (ௌ)

## சத்தமாதர்கள்

(சந்த விருத்தம்)

359. பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்விற் குனித்தவள்
எயிறுகொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம்வி டாமற் றரித்தவள்
இடுபலி கொளுமொர்க பாலக் கரத்தினள்
எனுமிவ ரெழுவர்க டாளைப் பழிச்சுதும்

---

(3.) செஞ்சுடர்க்கடவுள் - சூரியன். வெண்சுடர்க்கடவுளின் - சந்திரனைப்போல.

(4.) உறை - துளித்தல். அளவளாய் - கலந்து. சகோரம் என்னும் பறவை நிலவையுண்பது.

(3 - 4.) சித்தாமிர்தத்தில் நீராடிய விசேடத்தால் சூரியன் அமுதமயமாயினன். பருதிபுரி : சூரியன் இத்தலத்தில் வழிபட்டமையை இப்பெயர் வலியுறுத்துகின்றது.

(முடிபு.) சண்முகத் தொருவனைக் காக்கவென்று தெள்ளமுதை நாத் தழும்பத் துதிப்பாம்.

359. (சந்தக்குழிப்பு.) தனதன தனதன தானத் தனத்தன.

(அடி, 1.) தெரித்தவள் : அபிராமி ; இப்பெயர் பிராமியென்றும் வழங்கும். சிரித்தவள் : மாகேசுவரி. பணித்தவள் : கௌமாரி. பனிவரை - கிரௌஞ்சமலை. குனித்தவள் - நாராயணி.

(2.) பெயர்த்தவள் : வாராகி. குலிசம் - வச்சிராயுதம். தரித்தவள் : இந்திராணி. கரத்தினள் : காளி.

கயறிரி சரவண வாவிக் கரைக்குரை
கழலொடு பரிபுர மோலிட் டிடக்கட
களிறெருடு களிறெதிர் மோதத் திசைத்திசை
கடுநடை யுளதக ரேறச் சமர்த்தனை
முயறரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு
முழுமதி குறைமதி யாகத் துகிற்கொடி
முகிலொடு தடமதில் வேதப் பதித்தனி
முதல்வனை யறுமுக வேளைப் புரக்கவே. (௧௦)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

(வேறு)

360. முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு
சொர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையும்
முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்த
மக்குக் கொடுத்தானை மாதிரமொ ரெட்டையும்
இறைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல
சத்திக் கரத்தானை யூதியமெ னத்தனை
இருப்பினு நடப்பினு நினைப்பவ ரிருக்கவெமர்
சித்தத் திருப்பானை யாறிரு புயத்தனை
வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமலர்
பத்மப் பதத்தானை வேதபுரி யிற்சின
விடைக்கொடி வலத்தினு மடக்கொடி யிடத்துமுள
முக்கட் டிருத்தாதை யார்பணி குருக்களை

---

(3-4) தகர் ஏறு அச் சமர்த்தனை. முழுமதி துவசத்தால் குறைமதி யாயிற்று.

(முடிபு.) அறுமுகவேளைப் புரக்க, எழுவர்கள் தாளைப் பழிச்சுதும்.

360. (சந்தக் குழிப்பு.) தனத்தன தனத்தன தனத்தன தனத்தனன தத் தத் தனத்தான தானதன தத்தன.

(அடி, 1.) முறுக்கு - இதழ்களின் பிணிப்பு. சததளத்திருமலர் - நூற்றிதழ்த்தாமரை. முடித்தலையைத் திருவடியில் பதித்து. பிரமபதவி, இந்திர பதவி, திருமால் பதவிகளைத் தம்மை வழிபடும் அடியார்களுக்கு அளிப்பவ ரென்பது கருத்து (385,416.)

(2.) சத்தி - வேல். ஊதியம் என - இலாபமாக. தனையென்றது முருகக் கடவுளை. இருப்பினும் நடப்பினும் நினைப்பவர்: "நின்று மிருந்துங் கிடந்து நினைமின்கள்,என்றுஞ் சிவன்ற னடிநிழல்." 

மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையும்
ஒக்கப் படைத்தானை மூவிரு முகத்தனை
மருத்துவர் வசுக்கதி ருருத்திர ரெனப்பொலியு
முப்பத் துமுக்கோடி தேவர்கள் புரக்கவே. (கக)

## உ. செங்கீரைப்பருவம்

(ஆசிரிய விருத்தம்)

361. இருக்கோ லிடும்பரி புரக்கோல மூந்நுதலில்
இட்டபொட் டுஞ்சுட்டியும்
எரிமணிப் பட்டமுங் கட்டுபொன் னரைஞாணும்
இளஞாயி றுதயஞ்செயும்
உருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி
உச்சியும் வாளிமுத்தும்
ஒள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண்
டோடரிக் கண்களிக்கும்
மருக்கோல நீலக் குழற்றைய லாட்கரு
மருந்தா யிருந்ததெய்வ
மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமு னடந்துமற்றத்

---

(4.) மறைக்கிழவன் - பிரமதேவன். ஒக்க - ஒருங்கே. மருத்துவர் - அசுவினி தேவர் இருவர். வசு - அட்டவசுக்கள். கதிர் - துவாதசாதித்தர். உருத்திரர் - ஏகாதச ருத்திரர். புரக்க - பாதுகாத்திடுக.

(முடிபு.) கொடுத்தானை, கரத்தானை, இருப்பானை, புயத்தனை, பத்மப் பதத்தானை, குருக்களை, படைத்தானை, முகத்தனை, முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்க.

361. (அடி, 1.) இருக்கு - வேதம். ஒலிடும் - ஓலமிடும்; ஓல்: கடைக் குறை. பரிபுரம் - காலணி வகையுள் ஒன்று. கோலம் - அழகு.

(2.) உருக்கோலம் - திருவுருவத்தின் அழகு. திருமேனிக்கு இள ஞாயிறு உவமை; "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" (முருகு.) சூழியக்கொண்டை - ஒருவகைக்கொண்டை; இது சூழியெனவும் வழங்கும் (366.) முச்சி - உச்சிக்கொண்டை (366.) வாளி - மேற்காதிலுள்ள ஓரணி. குதம்பை - தக்கை; காதை வளர்த்தற்காக அணியப்படுவது.

(3-4.) மரு - நறுமணம். தையலாள்: இத்தலத்து அம்பிகையின் திரு நாமம். அருமருந்து: 365. குறமடந்தை - வள்ளிநாயகியார். வள்ளிநாயகி

திருக்கோல முடனொரு மணக்கோல மானவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (க)

362. கும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாக்
கொண்டவகி லாண்டங்களின்
குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யுந்தலைக்
கூடினுந் தான்றனக்கச்
சொம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனும்
சுருதிகரி யாவைத்துமச்
சுருதிக்கு மெரிசுடர்ப் பருதிக்கு மிரவிகுல
தோன்றற்கு மிளவலுக்கும்
சம்பாதி யொடுநற் சடாயுவுக் கும்பெருந்
தவமுனிவ ரெழுவருக்கும்
தண்ணளி சுரந்திட்ட திராத வினைதீர்த்த
தம்பிரான் றிருமேனியிற்

---

பின் தந்தை தினைப்புனத்தில் இரண்டாமுறை வந்தபோது முருகக்கடவுள் கிழவுருவங்கொண்டதும், பின்பு அவளை விநாயகர் திருவருளால் அடைந்து மணக்கோலமானதுமாகிய செய்திகள் **கந்தபுராணம்**, வள்ளியம்மை திருமணப்படலம், 94-ஆம் செய்யுள் முதலியவற்றால் அறியப்படும்.

362. (அடி, 1.) கும்பாதிகாரியமென - கும்பம் முதலிய பொருள்கள் குயவன் முதலியோரை நிமித்த காரணமாகக் கொண்டாற்போல. தமை நிமித்தமாக் கொண்ட - சிவம் சத்திகளாகிய தங்களை நிமித்த காரணமாகக் கொண்ட. குழுவுக்கு - தொகுதிக்கு. தாம் நிமித்த காரணமென்பதை அறிவித்தற்கு. இருவர்குறி - ஆண்பெண்ணென்னும் சின்னங்கள். கூடினும் - கூடினாலும்; அதனால் அமைதி பிறவாமல்.

(2.) சொம் - சொத்துக்கள்; "சொம்மனை வைத்தெப் படிநடப்பீர்" (634.) பாதியன்மைக்கு - சிவத்திற்கு உரியபாதியும் தனக்கே யுரியதென்பதைத் தெரிவித்தற்பொருட்டு. அனைத்தும் தன்மயமெனும் சுருதி - 'ஸர்வம் சக்தி மய'மென்னும் வேதவாக்கியத்தை (86.) கரி - சாட்சி. தோன்றல் - இராமன். இளவல் - இலக்குவன் (365.)

(3.) சம்பாதி முதலியோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றோர். சம்பாதி சடாயு வழிபட்டதை, "தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர், புள்ளானூர்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே" (தே.)

செம்பாதி யுங்கொண்ட தையனு யகிகுமர
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (உ)

363. கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக்
களிற்ருேடு முட்டவிட்டுக்
ககனவட் டத்திெனுடு பருதிவட் டத்தைவளை
திகிரிவட் டத்திலிட்டு

முக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்த்ரி கூடத் தொடுஞ்சாடி
மூரிக் கடாசலமவன்

மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட
மேகபட லத்துமொண்டு
மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து
விளையாட்டு வீரர்களொடும்

திக்கெட்டும் விளையாடு சேனு பதிக்கடவுள்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (ங)

---

என்பதனுல் அறிக. தீராதவினை தீர்த்த தம்பிரான்; 450; "வேளூரர், எந் தவினை தீர்த்தா ரிவர்" (தனிப்.) என ஒரு புலவர் நிந்தாத் துதியாகக் கூறியது இப்பெயரை நினைப்பிக்கின்றது. செம்பாதி - நேர் பாதி: குறைவும் கூடுத லும் இல்லாத பாதி.

363. முருகப் பெருமான் திருவிளையாடல்கள் இதிற் கூறப்படும்.

(அடி, 1.) பருதி வட்டம் - சூரிய மண்டலம். திகிரி வட்டம் - சக்கர வாளகிரி (34.)

(2.) கோதண்டம் - வில். வேதண்டம் - மேருமலை. மா தண்டமா - பெரிய தண்டாயுதமாகக்கொண்டு. அண்ட கூடம் - அண்டத்தின் உச்சியை. த்ரிகூடம் - திரிகூடமலை. மூரி - பெரிய. கடாசலம் - யானை; இது முனிவர் வேள்வியிற் பிறந்தது.

(3.) நேரிட்டிடப்பட்ட - ஒத்த. மேக படலத்து - மேகக்கூட்டத்தால். யானைத்தோல் மேகபடலத்துக்கு உவமை (வெங்கைக். 15.) வீரர் - நவவீரர் முதலியோர். மொண்டு பெய்து விளையாடு சேனுபதிக் கடவுளென்க.

364. மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதவி செந்நாத் தடந்தைய லாளொடும்
வயித்தியக் கடவுளார்க்கு

மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்தினொடு
வேதச் சிரங்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதொறும்

கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடஞ்சாரலும்
கனகாச லத்தும்வள ரிமயா சலத்துமுயர்
கந்தமா தனவெற்பெனத்

தெய்வதப் பிடியொடும் விளையாடு மழகளிறு
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (ச)

365. மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியா ரிளவலோடும்

---

364. (அடி, 1.) மறை முதலி - மறைக்கு முதல்வன்; முதலி: மூவர் முதலியென்றதுபோன்ற வழக்கு இது.

(2.) வேதச்சிரம் - உபநிடதம். கடுப்ப - ஒப்ப.

(1-2) திருமாலின் மார்பு முதலியவற்றைத் திருமகள் முதலியோர் தமக்கு இடமாகக் கொண்டாற்போல வேளூரை இடமாகக் கொண்டோ யென்பது கருத்து.

(3.) கைவகுத்து - பிரிவுசெய்து கொண்டு. குரவை யாட்டு - கை கோத்து ஆடுதலை. சாரலும் - சாரலிலும். கந்தமாதன வெற்பு - கயிலையைச் சார்ந்துள்ளதும் முருகக்கடவுளுக்குரியதுமான ஒருமலை (இலஞ்சியுலா, 129, தணிகையுலா, 93); தேவார வைப்புத்தலங்களுள் ஒன்றாகவும் உள்ளது; "கந்த மாதனங் கயிலைமலை கேதாரம்" (தே.) வெற்பென - வெற்பில் விளை யாடுவது போல.

(4.) மழகளிறு: அண்மை விளி.

(3-4) கந்தமாதன வெற்பில் விளையாடுவதுபோல, கயிலைச் சாரலிலும், கனகாசலத்திலும், இமயாசலத்திலும் விளையாடும் மழகளிறென இயைக்க.

365. முருகக்கடவுள் மிகப் பெரியவராயிருந்தும் வள்ளிநாயகியின் பால் ஈடுபட்டு ஒழுகியது இதிற் கூறப்படுகின்றது.

விதிமுறை வணங்கச் சடாயுபுரி யிற்கருணை
வெள்ளமென வீற்றிருக்கும்
ஆனே றுயர்த்திட்ட வையற்கு மம்மைக்கும்
அருமருந் தாகிநின்ற
ஆதிப் பிரானென்று மும்முதற் கடவுளும்
அடித்தொழும் பாற்றமற்றக்
கூனேறு மதிநுதற் றெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவடொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (ரு)

(வேறு)

366. செம்பொன டிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடுமொளி
திகழுரை வடமாடப்
பைம்பொ னசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்

---

(அடி, 1.) குண்டு - ஆழம். அகழியென்றது கடலை. வில்லியார் - இராமன். இளவல் - இலக்குவன். சடாயுபுரி: சடாயு வழிபட்டமையின் இத்தலத்திற்கு இப்பெயர் அமைந்தது. வீறு - வேறொருவர்க்கு இல்லாத பெருமை.

(2.) ஐயன்: சிவபெருமான். மும்முதற் கடவுள் - பிரமன் முதலிய மூவர். ஆதிப்பிரானென்று அடித் தொழும்பாற்றவென இயைக்க (390.)

(3.) மதி - பிறை. குறப்பெண் - வள்ளிநாயகி. பணிக்க என - கட்டளை யிடுகவென்று. தொண்டை - கொவ்வைக்கனி.

(4.) வாயூறி நின்றவன் - மிக்க விருப்பங்கொண்டு நின்றவன்; விளி. "வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப், பாதா குறமின் பதசே கரனே" (கந்தரனுபூதி) என்றார் அருணகிரிநாதரும்.

366. (அடி, 1.) அரைமணி - அரையில் அணியும் ஒருவகை ஆபரணம்; இஃது உடைமணியெனவும் வழங்கும் (திருச்சிற். 385.)

(2.) பண்டி - வயிறு.

பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காது மசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக்
கதிர்முத் தொடுமாட
அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (சு)

367. குழையொடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீசக்
குமுத விதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர
முழுவயி ரப்புய வலயமு முன்கை
முதாரியு மொளிகால
முத்த மரும்பி யெனக்குறு வேர்வு
முகத்தி லரும்பியிடப்
புழுதி யளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கியெழப்
புண்டரி கங்கண் மலர்ந்த விழிக்கடை
பொழியருள் கரைபுரள

---

(3.) குழை காது - வடிந்த காது. சூழி - சூழியக்கொண்டை (361.) முச்சி - உச்சிக் கொண்டை.

(4.) பவழத்திருமேனி; "பவழத் தன்ன மேனி" (குறுந். கடவுள்.) வயித்திய நாதமென்று வேறுதல் முண்மையின், வேறுபாடு அறிதற்கு இதை ஆதிவயித்தியநாதபுரி யென்றார்.

367. (அடி, 1.) குழை வேறு குண்டலம் வேறு. அமுதூறிய - அமுதூற (368.)

(2.) புயவலயம் - வாகுவலயம்; வயிரம் அதற்கு அடை. முதாரி - முன்கைக் கங்கணம். அரும்பியிட - தோன்ற.

(3.) புண்டரிகங்கள் மலர்ந்த - செந்தாமரை போல் மலர்ந்த; 'புண்டரீகமென்பது செந்தாமரைக்கும் பெயர்; புண்டரீகாட்சனென்ப' (தக்க. 22, உரை) என்பதையும் அதன் விசேடக் குறிப்பையும் பார்க்க.

அழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (எ)

368. விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன்
மென்குரல் கம்மாமே

கரைவுறு மஞ்சன நுண்டுளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல்
கருவடி வுண்ணுமே

உருவ மணிச்சிறு தொட்டி லுதைந்துநி
னொண்பத நோவாமே
ஒருதா ளுந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்

தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (அ)

---

(4.) இளங்கனி: "முக்கட் கனிகனி யுஞ்சுவையே" (376); "கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி" (தே.); "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியே" (திருவிசைப்பா); "காயறியாச் செழுங்கனியே" (திருக்குற்றாலப். ௧௩: 36) இளங்கனி யென்றார் என்றும் இளையராதல் பற்றி; "என்று மிளையாய்" (முருகு. இறுதி வெண்பா.)

368. (அடி, 1.) விரலின் சுவையுண்டு; விரல் - பெருவிரல் (37.) கம்மாமே - கம்மிக்கொள்ளாமல்.

(2.) அஞ்சனம் - மை. கலுழிப்புனல் - மையைக் கரைத்துவரும் கலங்கற் கண்ணீர்.

(3 - 4.) ஒருதாளுந்தி......ஆடுக: செங்கீரை யாடுதலின் இலக்கணம்; "இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தா ளிருத்தியொரு தாண் மேனிமிர்த், திந்த்ரதிரு விற்கிடை தொடுத்தவெண் டரளநிரை யேய்ப்பநுதல் வேர்பொடிப்பத், திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை செங்கீரை யாடியருளே" (அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செங்கீரைப், 1.)

(சந்த விருத்தம்)

369. கும்பம தக்களி யானையி ரண்டே யொன்றேமைக்
கொண்டல்வி ழிக்கயன் மீனுமி ரண்டே கொண்டேகிச்

சம்பர னைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்
சண்டைகொ ளற்கென நேர்வரு பெண்பா லன்பாயே

அம்பவ ளக்கொடி யேவளர் கொம்பே யென்றேநீ
அன்றுபு னத்துயிர் சோர்வது கண்டே முன்போதும்

கம்பம தத்தர்ச கோதர செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (கூ)

370. திங்கணு தற்றிரு மாதொடு நின்றே மன்றாடும்
செங்கண்வி டைக்கொடி யோனருள் கன்றே யொன்றேயாய்

எங்களு ளத்தமு தூறுக ரும்பே யன்பாளர்க்
கின்பம ளிக்குமெய்ஞ் ஞானம ருந்தே யெந்தாயின்

---

369. (சந்தக்குறிப்பு.) தந்தன தத்தன தானன தந்தா தந்தான.
தன்னை வெல்லுதற்கு மன்மதன் ஆண்வடிவத்தை விட்டுப் பெண்வடிவங் கொண்டு வந்ததாக வள்ளிநாயகியை நோக்கி முருகக்கடவுள் கூறியது இது.

(அடி, 1-2.) யானை இரண்டு: நகில்கள். கொண்டல்: கூந்தல். ஏகிப் பொருசேவகன் கொண்டு வந்தானென இயைக்க. சம்பரன்: ஓர் அசுரன்: இவனைக் கொன்றதனால் மன்மதனுக்குச் சம்பராரி யென்று ஒரு பெயர் உண்டாயிற்று. என - என்று நினைக்க. பெண்பால் - வள்ளிநாயகியினிடத்தே. "வெறுப்பினால், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல்...... நல்கூர்ந்தார் செல்வ மகள்" (கலி. டுசு : 8 - 12); "பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம், ஆண்மையிற் றிரிந்துத னருந்தொழி றிரியாது.........பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென" (சிலப். டு : 219-23) என்பவற்றைத் தழுவி வந்தது இது.

(3.) புனத்து - தினைப்புனத்தில்.

(4.) மதத்தர் - விநாயகர்.

370. (அடி, 1.) கன்றே - குழந்தையே.

(2-3.) எந்தாயின்.........வண்டே: உமாதேவியாருக்குச் சிவபெருமான் உபதேசித்தபொழுது முருகக்கடவுள் அத்தேவியாருடைய கூந்தலில் வண்டின் வடிவாக இருந்து வேத முதலியவற்றை அறிந்தனரென்று சைவ

கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டோ வண்டூதும்
கொந்தள கக்குற மான்வளர் குன்றே யென்றோதும்
கங்கைமக கட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (கo)

## ௬. தாலப்பருவம்

(ஆசிரிய விருத்தம்)

371. பில்கும் பசுந்தே னசும்பிருந்த
பின்று ழள்கத் தரமகளிர்
பேதைக் குறும்பு விளையாடும்
பேரா யத்துச் சிறுமருங்குற்
கொல்கும் கொடிபோய் நுடங்கியிட
ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்
துயர்சூ ளிகையின் மரகதத்தின்
ஒளிகால் வீசத் தெளிவிசும்பிற்
பல்குஞ் சுரபி தரங்கநெடும்
பாகீ ரதியின் கரைக்கிளைத்த
பசும்புல் லெனச்செந் நாவளைக்கும்
பைம்பொற் றலங்கள் பலகோடி
மல்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (க)

---

நூல்கள் கூறும்; "முன்பொருநாள், நின்னுருவங் கோடலா னன்றே நெடு வேலான், முன்னிய வேத முழுதறிந்தான்" (கச்சியானந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, 363-4.) குறமான் - வள்ளிநாயகி. மான்வளர்குன்றென்றது ஒரு நயம்.

(4.) ஒருவகைச் சம்பந்தம்பற்றிக் கங்கையை முருகக்கடவுளுக்குத்தா யென்றும் அதனால் இவருக்குப் போந்த பெயர் காங்கேயனென்றும் கூறுவர்.

371. (அடி, 1-2.) பில்கும் - துளிக்கும். பேதைக்குறும்பு - பேதைப் பருவத்து விளையாட்டு. மருங்குற்கு ஒல்கும் கொடி - மென்மையிலும் துவட்சியிலும் இடைக்குத் தோற்று அசையும் பூங்கொடி. சூளிகை - மாளி கையின் உச்சியறை; சூடிகாவென்னும் வடமொழித்திரிபு.

(3.) சுரபி - காமதேனு. பாகீரதியின் - ஆகாயகங்கையின். மரகதத் தின் ஒளியைப் புல்லென்று எண்ணிக் காமதேனு தன் நாவை நீட்டியது. இது திரிபதிசயவணி.

372. தொடுக்குந் தொடைவெண் டுகிற்கொடிகள்
தொடுநீர்ப் பரவை முகம்புழுங்கத்
தோன்றும் பருதி மணித்திண்டேர்
தூண்டுங் கவின வாம்பரியை
முடுக்குஞ் சுடர்ப்பொற் றலத்திழைத்த
முழுநீ லத்தி னொழுகொளியின்
முழுகுங் கடவுண் மால்யானை
முகிலிற் றோன்ற வகலிடதின்
றடுக்குங் களிறென் றரமகளிர்
ஐயுற் றிடத்தன் வெளிறுமுடம்
பளறு படிந்த தெனக்கங்கை
யாற்றுப் பசும்பொ னசும்புபுனல்
மடுக்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (உ)

373. திற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத்
திரண்மா மணிகள் வெயில்விரிக்குஞ்
செம்பொற் றலத்துப் பேரமர்க்கட்
சிறியார் நறிய வகிற்புகையிட்
டாற்றுங் குழற்காட் டினைப்புயலென்
றாட மயில்கண் டம்பவளத்

---

372. (அடி, 1.) தொடை - மாலை. தொடு நீர்ப்பரவை - சகரரால் தோண்டப்பட்ட கடல் (374.) புழுங்க - வெம்மையையடைய. கவினம் - கடிவாளம்.

(1-2.) துகிற்கொடிகள் பரியை முடுக்கும் (49.) கடவுள் மால்யானை - ஐராவதம். அது நீலமணியின் சோதியினால் கருமையாகத் தோற்றியது. அகலிடம் - பூமி.

(2-3) தெய்வமகளிர் தன்னைப் பூமியிலுள்ள கரியயானையென்று ஐயுறுவதை யறிந்து அந்த வெள்ளையானை தன்மேல் கரிய சேறுபடிந்ததாக எண்ணிக் கங்கையில் மூழ்கியது.

373. (அடி, 1.) தீற்றும் - பூசப்படும். சுதை - சுண்ணம்புக்குழம்பு. சிறியார் - இளைய மகளிர்.

(2.) மயில் ஆட என மாறி இயைக்க; கூந்தலை மேகமென்றெண்ணி மயில் ஆடியது. புன்னகையை நிலவெனக் கருதிச் சகோரம் அருந்தியது.

தரும்பு நகையைச் சகோரப்புள்
அருந்த விரிந்த முழுநகைவிண்
டூற்று நிலவுக் கிந்துசிலை
ஒளிர்மா ளிகையுஞ் சூளிகையும்
உருகிப் பெருகுங் கலுழிவெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவு
மாற்றுங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (ரு)

374. கிளைக்குஞ் சகரர் தொட்டபெருங்
கிடங்கென் றிடங்கர் மாவியங்கும்
கீழ்நீ ரழுவக் குண்டகழிக்
கெழுமு புனற்றெண் டிரைமேய்ந்து
திளைக்குங் கமஞ்சூ னெடும்புயலைச்
சிறுகட் பெருங்கைப் பகடென்றோர்
செங்கட் களிறு பிளிறநிமிர்
திகிரி கிரியென் றிவர்ந்துடலம்
இளைக்கும் படிவிண் டொடநிவந்த
எழிற்பொற் புரிசை விண்டுபதத்
தேறு மேனி பொற்றருவுக்
கிடுவே லியுமா யேழுலகும்

---

(2-3.) முழுநகை விண்டு ஊற்றும் நிலவுக்கு; விண்டு - வெளிப்பட்டு. முழுநகையில் உண்டாகிய நிலவினால் சந்திரகாந்தக்கல் உருகியது. உவரோடு புலவை மாற்றும் (அடி, 4.)

374. (அடி, 1.) பெருங்கிடங்கென்றது கீழ்கடலை. இடங்கர்மா -முதலையாகிய விலங்கு; முதலையை மாவென்பது ஒருசாரார் கொள்கையாதலின் (இறை. சூ. 1, உரை) இடங்கர்மா என்றார். கீழ்நீர் - ஊற்றுநீரையுடைய. அழுவம் - பரப்பு. மேய்ந்து - உண்டு என்னும் பொருளது; "களிற்றீட்டம் போற், கலங்கு தெண்டிரை மேய்ந்து" (சீவக. 32.)

(2.) கம சூல்; கம - நிறைவு. புயலைப் பகடென்று கருதி; பகடு - யானை. களிறு பிளிற - ஓர் ஆண்யானை முழங்க. திகிரிகிரியென்று - சக்கரவாளமலை என்று மதிலை நினைந்து. இவர்ந்து - மதிலின்மீது ஏறி.

(3.) மேகம் இளைக்கும்படி. விண்டுபதம் - ஆகாயம். பொற்றரு - கற்பக மரம்; "கால்கிளர் விசும்பிற் கற்பகா டவிக்கு, வேலியிட் டன்ன வியன் மணிப் புரிசையும்" (567; 24-5.)

வளைக்குங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (௪)

375. சோலைப் புறமுப் புடைக்கனிகள்
தூக்கு முடத்தெங் கிமையவர்தம்
தோன்ற றிருவோ லக்கத்துத்
தோகை மயிலி னடங்குயிற்றும்

ஏலக் கருங்கொந் தளவளகத்
திளமா தருக்கு முதிர்வேனில்
இளைப்பாற் றுதற்குத் தாற்செருடுஞ்செவ்
விளநீர் கொடுப்ப வீற்றுளைந்த

காலப் புயலின் முகந்துடைக்கும்
கமுகு பழுக்காய்ப் பவழமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்

மாலைப் பழனப் பருதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (௫)

---

(3-4.) புரிசை வளைக்கும்; புரிசை - மதில்.

375. (அடி, 1.) முப்புடைக் கனிகள் - தென்னம் பழம். "தென்னம் பழம் வீழ் சோனுடா" (425); "காய்மாண்ட தெங்கின் பழம்வீழ" (சீவக. 31.) முடத்தெங்கு: எழுவாய். இமையவர்தம் தோன்றல் - இந்திரன். திரு வோலக்கத்து - அத்தாணி மண்டபத்தில். மயிலின் - மயிலைப்போல.

(2.) ஏலம் - மயிர்ச்சாந்து. கொந்தள அளகம் - கொத்தாகிய முன் னுச்சி மயிர். இளமாதருக்கு - இளைய அரம்பையருக்கு. தாறு - காய்க்குலை. இளைப்பாற்றுதற்குக் கொடுப்ப. ஈற்று உளைந்த - ஈனுதலால் வருந்திய.

(3.) கதிர்முத்தென்றது பாளையிலுள்ள பூ வரும்புகளை. பாளையாகிய கவரியை. மாலை - வரிசை.

(1-4.) தெங்கு இளநீர் கொடுப்பக் கமுகு அரம்பையருக்குக் கவரி புடையிரட்டும் பழனமென்க. கமுகு கவரி வீசுதல்: 58.

(வேறு)

376. மாலி மயத்து மடப்பிடி பெற்று
வளர்த்த விளங்களிறே
மழவிடை யேதிரு மாமடி கட்கென
வைத்த கவுத்துவமே

மூல மெனக்குல நான்மறை யோலிடு
முழுமுத லேமுவா
முக்கட் கனிகனி யுஞ்சுவை யேதனி
முத்திக் கொருவித்தே

காலை யிளங்கதி ருக்கெதிர் முதிரும்
கதிர்செம் பவளமுடன்
கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கொல்
கமுகுகொ லெனவளரும்

சாலி வயற்றமிழ் வேளூ ரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (சு)

377. கருமுகி லுக்கரி தாமடி வாரம்
கண்டிரு பறவைகடம்

---

376. (அடி, 1.) மாமடிகளென்றது திருமாலை; 356 - ஆம் செய்யுட் குறிப்பைப் பார்க்க. திருமாலுக்குக் கவுத்துவம் விருப்பமுடையதாதலின் இவரைக் கவுத்துவ மென்றார்.

(2.) ஓலிடும் - ஓலமிடும். முக்கட் கனி - சிவபெருமான்.

(3.) கதிர்முத்து; 355, பார்க்க. பெரியோரைக் கண்டால் காணிக்கைப் பொருளையிட்டு வணங்குதல் மரபென்பது இங்கே அறியற்பாலது. நெற்பயிருக்குக் கரும்பும் கமுகும் உவமைகள்; கன்னல் - கரும்பு.

(4.) சாலி - நெற்பயிர். சங்கத் தமிழின் றலைமைப் புலவா: தலைச்சங்கத்தில் முருகக் கடவுள் இருந்து தமிழாராய்ந்தமையின் இங்ஙனங் கூறினார்; "அவருள் தலைச்சங்க மிருந்தார்.........குன்றெறிந்த முருகவேளும்......என இத் தொடக்கத்தார்......என்ப" (இறை. 1, உரை.)

377. (அடி, 1-2.) சிவபெருமானைப் பொன்மலையாக உருவகம் செய்கின்றார். கருமுகிலுக்கு - திருமாலுக்கு. அடிவாரம் - திருவடி, மலையின்

கண்களி பொங்கவோர் பறவை முடித்தலை
காணு துட்குவரப்
பொருபுன லருவித் தலையின் மிசைத்தவழ்
புதுமதி நிலவொழுகப்
புள்ளு ரிற்பொலி வெள்ளி மலைக்கட்
பொன்மலை யைக்குவவு
குருமணி வயிரப் புயமெனு மெட்டுக்
குவடுஞ் சுவடுபடக்
குத்திப் பொருமிரு கோடு படைத்ததோர்
கூந்தற் பிடிபெற்றுத்
தருமொரு தொந்தித் தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (எ)

378. உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட
ஒளிவிடு முழுமணியே
உயர்மறை நூல்கலை முடிவின் முடிந்திடும்
ஒழுகொளி மரகதமே

---

அடிவாரம். மேகத்தினால் காணப்படாத அடிவாரமென்றது ஒரு நயம். இருபறவை - சம்பாதியும் சடாயுவும். ஓர்பறவை - பிரமதேவராகிய அன்னப் பறவை. உட்குவர - அஞ்ச. அருவி - கங்கை. வெள்ளிமலைக்கட் பொன்மலை - கைலைமலையினிடத்து எழுந்தருளியுள்ள பொன்மலையைப் போன்ற சிவபெருமான். குவவு - திரட்சி.

(3.) பிடி - அம்பிகை.

(4.) தந்தி - யானை.

பொன்மலை யென்று உருவகஞ் செய்ததற் கேற்ப, அதன் அடிவாரம் மேகத்தால் அறிதற்கரியதெனவும், அன்புள்ள இரண்டு பறவைகளால் அறிந்து மகிழ்தற்குரியதெனவும், ஒரு பறவையினால் காணுதற்கரிய முடியை உடையதெனவும், அருவியும் நிலவும் சிகரத்தில் உடையதெனவும், எட்டுக் குவடுகளைக் கொண்டதெனவும், அவை ஓர் யானையின் கொம்பாற் குத்தப்படுவன வெனவும் கூறினர். அம் மலையைக் குத்தும் பெண்யானை யாற் பெறப்பட்ட யானைக்கு இளையோ யென்று முடித்தனர்.

378. (அடி, 1.) இருள் - அஞ்ஞானம். கலை - ஆறு சாஸ்திரங்களும் வேறு பல கலைகளும். கலைமுடிவில் முடிந்திடும் - ஆடையின் தலைப்பில் முடியப்படுமென்பது வேறு பொருள்.

விண்ணொடு மண்ணை விழுங்கி யருட்கதிர்
விரியு மிளஞ்சுடரே
மெய்ப்புலன் மேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே
புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே
புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை
புத்தமு தக்கடலே
தண்ணொளி பொங்கிய கருணா நிதியே
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (அ)

(சந்த விருத்தம்)

379. தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதும்
சீலாம லைக்கொடி பாலா கீலா மேலாகும்
தேவாதி பற்கொரு தேவா வோவா தேகூவும்
காலாயு தக்கொடி வீறு வேறு வேறேறும்
காபாலி பெற்றகு மாரா வீரா பேராளா
சேலார்வ யற்குரு கூரா தாலோ தாலேலோ
சேறுப திப்பெரு மாளே தாலோ தாலேலோ. (கூ)

---

(2.) மெய்ப்புலன்......வீடு: (293); மெய்ப்புலன் - சத்திய ஞானம்.

(3.) புண்ணியம் நாறும் - முப்பத்திரண்டு தர்மங்களைச் செய்த. பெண் கனி - உமாதேவியார். அம்பிகை அறம் வளர்த்ததைத் தருமசம்வர்த்தனி என்னும் திருநாமத்தாலும், "இல்லாளே முப்பத் திரண்டறமுஞ் செய் திருப்ப" (618) என இந்நூலாசிரியர் கூறுவதனாலும் உணரலாகும்.

379. (சந்தக்குழிப்பு.) தானா தனத்தன தானா தானா தானனா.

(அடி, 1.) மூவா மாவாம் அச்சூர் - அழியாத மாமரமாகிய அந்தச் சூர பன்மன். நூலா நூல் - வேதம்; வேதம் சுயம்புவென்றபடி; நூற்றல் - நூல் செய்தல்; "நொய்தி னொய்யசொன் னூற்கலுற்றேன்" (கம்ப. பாயிரம்.)

(2.) கீலா - எல்லாவற்றிற்கும் மூலமாக உள்ளவனே; கீலம் - முளை. தேவாதிபற்கு ஒரு தேவன் - சிவகுரு; தேவாதிபன் - இந்திரனுமாம்.

(3.) காலாயுதக்கொடி - கோழிக்கொடி. வீறு - வேறொருவருக்கில்லாத சிறப்பு. வேறு ஏறு - பிறரால் ஏறப்படாத இடபம்.

380. ஊனுயு யிர்க்குயி ரானாய் தாலோ தாலேலோ
ஓதாது ணர்த்திடு போதா தாலோ தாலேலோ
ஆனவ ருட்கனு பானு தாலோ தாலேலோ
ஆயாத சொற்சொலு பாயா தாலோ தாலேலோ
நானெய னக்கரி தானாய் தாலோ தாலேலோ
நாதாதி கட்கனு பூதா தாலோ தாலேலோ
தேனார்பொ ழிற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனாப திப்பெரு மாளே தாலோ தாலேலோ. (௧௦)

## ௪. சப்பாணிப் பருவம்

381. முடங்குந் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு
முளரிப் பிராட்டிவைத்து
முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை யெனமழலை
முதிருமென் குதலைகற்பத்
தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்ககிற்
றூமமொடு தாமமிட்டுச்
சுடிகைநுதல் வெயர்வுந் துடைத்தொழுகு கத்தூரி
தூரியங் கொண்டு தீட்டிக்
குடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கழகு
கூரவஞ் சனமெழுதிமென்
கொங்கைத் தடத்துப் பசுங்களப மப்பியவள்
குற்றேவன் முற்றுமாற்றித்

---

380. (அடி, 1.) ஓதாது உணர்த்திடு போதன் - மௌன தேசிகன்.

(2) அனுபானு - துணையாக உள்ளவனே. ஆயாத - ஆராய்ச்சி செய்தற்கியலாத.

(3.) அரிது - அரிய பொருள். அனுபூதன் - காரணன்.

381. முருகக்கடவுள் வள்ளிநாயகியாரைப் பலவகையாக உவப்பிக்கும் செய்தி கூறப்படும்.

(அடி, 1-2.) முடங்கும் திரை - மடங்கும் அலை. முளரிப்பிராட்டி - திருமகள். முத்தாடுதல் . முத்தமிட்டுப் பாராட்டுதல். வள்ளிநாயகி திருமாலுக்கு மகளாதலின் திருமகள் முத்தாடுவதாகக் கூறினர். முத்தாடு குறப்பாவை, தொடங்கும் குறப்பாவை என்க. தூரியம் - எழுதுகோல்; இது தூரிகை யெனவும் வழங்கும்.

(3.) குடங்கை - உள்ளங்கை. குடங்கைக்கடங்கா நெடுங்கண் ; 405. கூர - மிகும்படி. (பி - ம்.) 'கொங்கைத் தடத்தும்'

தடங்குங் கும்பப்புயங் கொட்டிநட மிட்டவன்
 சப்பாணி கொட்டியருளே
தையனு யகிமருவு தெய்வநா யகன்மதலை
 சப்பாணி கொட்டியருளே. (௧)

382. மழைக்கொந் தளக்கலப மயிலிளஞ் சாயனெடு
 மதரரிக் கெண்டையுண்கண்
மான்கன்றை யமருலகு வாழப் பிறந்திடு
 மடப்பிடியை வானவில்லைக்

குழைக்குந் தடக்கைத் திருத்தாதை நீரோடு
 கொடுப்பக் குடங்கையேற்றுக்
கொழுமலர் மணங்கமழ் மணப்பந்தர் நிற்பவக்
 கொம்புமின் கொடியினெல்கி

இழைக்கும் பசும்பொற் றசும்பென வசும்புபொன்
 னிளமுலை முகங்கோட்டிநின்
றெய்யாமை நோக்கும் படைக்கட் கடைக்கணேக்
 கின்னமுத மூற்றவின்பம்

தழைக்கும் பெருங்காதல் வெள்ளந் திளைத்தவன்
 சப்பாணி கொட்டியருளே
தையனு யகிமருவு தெய்வநா யகன்மதலை
 சப்பாணி கொட்டியருளே. (உ)

---

(4.) புயங் கொட்டியது களிப்பின் மிகுதியால்.

382. தெய்வயானை யம்மையாரை மணந்தருளிய செய்தி கூறப்படும்.

(அடி, 1.) மழைக் கொந்தளம் - மேகம் போன்ற கூந்தல். கொந் தளத்தையும் சாயலையும் கண்ணையும் உடைய மான்கன்று; தெய்வயானை யம்மையார். வானவில் - இந்திரவில்.

(2.) குழைக்கும் - வளைக்கும். திருத்தாதை - இந்திரன். அக்கொம்பு - தெய்வயானையம்மையார்.

(3.) பசும்பொற்றசும்பு - பசும்பொன்னாலாகிய குடம். கோட்டி - வளைத்து. நாணத்தால் முகங் கோட்டினாள். எய்யாமை நோக்கும் - பிறரறி யாதவாறு பார்க்கும்.

முருகக்கடவுள் தெய்வயானையை மணந்தபோது மணப்பந்தரில் அத் தேவியார் அக்கடவுளைக் கடைக்கண்ணால் பிறர் அறியாவாறு பார்த்தனர்; இங்ஙனம் பார்த்தல் மகளிர் இயல்பு; "ஐயனை யகத்துவடி வேயல புறத் தும், கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்" (கம்ப. கோலங்காண், 37.)

383. உண்ணிலா வுவகைத் தடங்கடல் படிந்திட்ட
உம்பருஞ் செங்களம்பட்
டொண்பருதி யுடல்கிழித் தோடுங் கடற்றானை
ஒளிறுவா ளவுணர்குழுவும்

தெண்ணிலா மதிநுதற் றெய்வப் பிணாக்கள்வாய்த்
தேனமுது மமுதவாரித்
தெள்ளமுது முடனிருந் துண்ணப் பணித்திட்ட
செங்கைவேல் பைம்புனத்துப்

பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற்
பாவைவிழி வேலொடொப்புப்
பார்க்குந் தொறுந்தலை கவிழ்த்துநின் றவடிருப்
பவளத்து முத்தரும்பும்

தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தையனு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (௩)

---

383. (1-2.) முருகக் கடவுள் அசுரர்களோடு போரிடுகையில் இறந்த அசுரர்கள் சூரியமண்டலத்தை ஊடுருவிச் சென்று வீரசுவர்க்கம் புகுந்து தேவராகித் தேவர் நுகர்பவற்றைத் தாமும் நுகர்வரென்னும் செய்தி இதிற் கூறப்படும்.

உவகைத் தடங்கடல் படிந்திட்ட உம்பரும் - தம் பகைவராகிய அசுரர்கள் போரில் அழிவது கண்டு இன்பக் கடலில் திளைத்த தேவர்களும். செங்களத்திலே பட்டு; இரத்தத்தாற் சிவந்ததாதலின் செங்கள மென்றார்; "செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த,......கழறொடிச் சேஎய்" (குறுந். க: 1-3.) போரில் இறந்தோர் சூரியமண்டல மார்க்கமாக வீரசுவர்க்கம் புகுவர்; 387; "கதிருடல் வழிபோய்க் கல்லுழை நின்றோர்" (கல்லாடம்); "ஏவிய திகிரி வீரரைத் துறக்க மேறவிட் டிடுமிர வியைப்போல்" (வி. பா. இராசசூயச்.) தெய்வப் பிணாக்கள் - தெய்வ மகளிர்.

(2-3.) செங்கை வேலை. விழிவேலொடொப்புப் பார்க்கும்.

(3-4.) எயினர் பொற் பாவை - வள்ளி. முத்து அரும்பும் தண்ணிலா - புன்முறுவல். அதனை நிலவாக உருவகித்ததற் கேற்ப அதனை விரும்பி நின்ற முருகவேளை நிலாவை உண்ண விரும்பும் சகோரமாக உருவகம் செய்தார்; "குறுமுறுவ னெடுநில வருந்துஞ் சகோரமாய்" (102) என்றார் முன்னும்,

384. மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின்
மயிலிளஞ் சாயலுநிலா
மணிவட மறப்புடைத் திறுமாந்த கனதன
வனப்புங் குறித்துநோக்கி

இடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொல்
எனத்திரு வுளங்குழைந்தாங்
கேந்திளங் கொங்கையை யிணைப்புயத் தேந்திநின்
றெல்லா வுறுப்புநிற்கக்

குடமுலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கியை
குணங்கிடைத் ததுகொலென்றக்
கோதைநெடு நாணெய்த வவயவங் கட்குள
குணுகுணந் தனிதெரிக்கும்

தடமலர்க் கைத்தலஞ் சேந்தொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தையலு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (ச)

385. விண்ணென் கடற்புவன முடவுப் படத்தேந்து
வேந்துபொலி பாந்தள்வைப்பும்
விரிநீர் வரைப்புமெழில் விஞ்சைய ரிருப்புமுகை
விண்டுநறை விரிமுண்டகக்

---

384. (அடி, 1.) சாயல் - மென்மை. இடுகு - சுருங்கிய. இடையாகிய பாவி; பாவியென்றது இரக்கத்தைக் குறிக்க வந்தது. திருவுருவின் மென்மையை முழுதும் நோக்கி அவ்வுருவில் நகில் மாத்திரம் இடைக்குக் கேடு விளைப்பதை நினைந்து அவற்றை ஏந்தினர்.

(3-4.) குடிப்பிறப்புக்கு இயை குணம் - கொலை செய்யும் இயல்பு; குறவர் தறுகண்மையோடு மான் முதலியவற்றைக் கொலை புரியும் இயல்புடையார்; இங்கே நகில் இடையை அழிக்கும் வண்ணம் இருத்தலின் இது கூறினர். தனி தெரிக்கும் - தனித்தனியே சுட்டிக்காட்டித் தெரிவிக்கும்.

385. முருகக்கடவுள் தம்மைப் பணியும் அடியார்களுக்கு நாகலோக ஆட்சி முதலிய சிறந்த பதவிகளை அருளுதலும் தாம் குறிஞ்சி நிலத்துக்கு உரிமை பூண்டிருத்தலும் கூறப்படும்.

கண்ணன் றிருப்பதமு நான்முகக் கடவுள்பூங்
　　கஞ்சமுங் குலிசப்பிரான்
　கற்பகக் காவுநின் றெண்டர்க டொழும்புக்கொர்
　　காணியா வைத்துமற்றத்
திண்ணென் றடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
　　சிறாரு மூரூர்தொறும்
　செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்
　　சிதனக் காணிபெற்றத்
தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன்
　　சப்பாணி கொட்டியருளே
　தையனு யகிமருவு தெய்வநா யகன்மதலை
　　சப்பாணி கொட்டியருளே. (௫)

(வேறு)

386. கடலைச் சுவற வடித்து மிடித்துக்
　　கனவரை துகள்கண்டும்
　கடிதிற் றிரிய வகுப்பதை யொப்பக்
　　காரவு ணக்கடலின்
உடலிற் பெருகிய குருதிக் கடல்பிண
　　வோங்கலோ டோங்கவமைத்
　தொட்டிய வொட்டல ரிற்பிற கிட்டவர்
　　ஒழியப் பிறரையெலாம்

---

(அடி, 1-2.) விண் என் - விண் என்னும் ஒலியைச் செய்கின்ற. முடவுப் படம் - முடங்குதலையுடைய படம்; "முடவுப் படப்பாய்ச் சுருட்டு" (3.) வேந்து - ஆதிசேடன். பாந்தள் வைப்பு - நாகலோகம்; இது போகத் தாற் சிறப்புப்பெற்றது. விரிநீர் வரைப்பு - பூவுலகம். விஞ்சையர் இருப்பு - வித்தியாதரருலகம். கண்ணன் திருப்பதம் -திருமால் பதவி. கஞ்சமென்றது பிரமலோகத்தைக் குறித்து நின்றது; "தனி விரிஞ்சன் முளரி சென்று புகுதுமே" (நக்க. 240) என்பதையும், 'முளரி யென்பதனைப் பிரமலோக மெனினும் அமையும்' என்னும் அதன் உரையையும் காண்க. குலிசப்பிரான் - இந்திரன். தொழும்புக்கு ஓர் காணியா - செய்த தொண்டுக்கு உரிமையாக.

(3-4) சீதனக் காணி - ஸ்திரீதனமாகிய காணி; மாமனாராற் கொடுக்கப்படுவது. முருகக் கடவுள் குறிஞ்சிக் கடவுளாதலின், 'குறிஞ்சித்தலந் தலையளிப்பவன்' என்றார்.

386. (அடி, 1-2.) கனவரை - கிரவுஞ்சமலை. திரிய - மீட்டும் (206.) பிண ஓங்கல் - பிணமாகிய மலை. ஒட்டிய ஒட்டலர் -வஞ்சினம் கூறி எதிர்த்த பகைவர். பிறகிட்டவர் - புறங்காட்டி ஓடியவர்.

தடவுத் தாழியின் மத்தெறி தயிரிற்
றத்துதி ரப்புனலிற்
றசைசுடர் நிணமொடு மூளை குழம்பச்
சமர்விளை யாடல்செயும்
குடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்குும ரேசன்
கொட்டுக சப்பாணி. (கூ)

387. சமரிற் பட்டவர் வெட்டிய பூதத்
தலைவர்க ணிற்பமுதற்
றாமரை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழி றலைநின்றுங்
கமரிற் குரிய மடக்கொடி யாரை
அலைத்தனர் பற்றியெயிற்
றவுண ரெனத்தமை யுணரார் கணவர்கள்
ஆர்ப்பில் வெடித்தபெருங்
கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு
களமெதிர் கண்டினியக்
காரவு ணக்கடல் சூரொடு மாளக்
கடிதிற் றடிதியடற்
குமரக் கடவு ளெனப்பணி வேலவ
கொட்டுக சப்பாணி

---

(3.) தடவுத்தாழி - பெரிய மண் பானை. தயிரிற் குழம்ப.

387. போர்க்களத்தில் இறந்துபட்ட அசுரர்கள் தேவராய் வீர சுவர்க்கத்தை யடைந்து, 'அசுரர் கூட்டத்தை அழிப்பாயாக' என்று தாமே முருகக் கடவுளை வேண்டுவரென்பது கூறப்படும்.

(அடி, 1-2.) சமரிற் பட்டவர் - போரில் இறந்தவர்கள். பூதத்தலைவர்கள்-தம்மைக் கொன்ற பூதகணத் தலைவர்கள்; இவர்கள் முருகக்கடவுளின் படையைச் சார்ந்தவர்கள். தாமரை நாயகன் - சூரியன். வீர சுவர்க்கம் அடைபவர் சூரியமண்டலத்தைக் கீண்டு செல்லும் செய்தி 383-ஆம் செய்யுளிலும் கூறப்பட்டது. அமரிற்கு உரிய மடக்கொடியார் - போரில் இறந்தோர் பெறுவதற்குரிய வீரசுவர்க்கத்திலுள்ள தெய்வ மகளிர். கணவர்கள் ஆர்ப்பில் - பூதகணத்தினர் செய்த ஆரவாரத்தினால்.

(3-4) கமர் - வெடிப்பு. களம் - போர்க்களம். தடிதி - கொல்வாயாக. குமரக்கடவுள் : விளி.

கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. (எ)

388. அற்ற வுடற்குறை யிற்ற முடித்தலை
அங்கைத் தலம்வைத்திட்
டாடு பறந்தலை யோடுதி ரப்புனல்
ஆறு கடத்துகெனும்
சிற்றல கைக்கொரு பேரல கைப்பெண்
தேரழி யக்கழியும்
திகிரிப் பரிசில் விடப்படு சுழியிற்
றெருமரல் மட்பகைஞன்
பற்றிய திரிகை திரித்து விடத்திரி
பரிசென வுஞ்சுழலும்
பம்பர மெனவும் வரும்படி யவுணர்
படக்கள வேள்விசெயாக்
கொற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. (அ)

(சந்தவிருத்தம்)

389. வளரிள வனமுலை மலைமக ளுக்கொர் தவப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணை கொழித்த பெருக்காறே

---

388. (அடி, 1.) உடற்குறை: எழுவாய். இற்ற - வெட்டப்பெற்ற. தன் தலையையே கையில் வைத்து உடற்குறை ஆடியது.

(2.) அலகை - பேய். தேர்ச் சக்கரத்தையே பரிசிலாக விட்டது. தெருமரல் - சுழலுதல். மட்பகைஞன் - குயவன்.

(3.) திரிகை - சக்கரம். திரி பரிசெனவும் - சுழலும் தன்மையைப் போலவும். அவுணர்பட - அசுரர்கள் இறந்துபட. களவேள்வி செய்தல் - பகைவரை வென்று போர்க்களத்தைத் தனதாக்கிக் கொண்டு வேட்டல்; இது வாகைத்திணைத்துறைகளுள் ஒன்று (438); புறநானூறு, உ௬-ஆம் செய்யுளைப் பார்க்க.

(4.) கொற்ற மகள் - வீரத்திரு.

389. (சந்தக் குறிப்பு.) தனதன தனதன தனதன தத்த தனத்தானா.

(அடி, 1.) மலைமகள் - உமாதேவியார். பேறு - பயன். மறிதிரை - மடங்கி வருகின்ற அலை.

அளியுமி னமுதெழு வெளியினில் வைத்த சுவைத்தேனே
அறமுது தவமொடு வளர வளர்த்திடு நற்றயே
களிமயில் கடவிவி னடைய முடுக்கிய புத்தேளே
கலைமறை யெனுமுரல் வரியளி மொய்த்த மலர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (௯)

390. கனியொடு சுவையமு தொழுகிய சொற்பயி றத்தாய்வேள்
கணையொடு பிணையென வுலவு கடைக்கண் மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய வெழிலி தழைத்த குழற்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே
எனவொரு குறமக ளடிமுடி வைத்தனை முத்தேவாம்
இறைவரு முறைமுறை பணிய விருக்கு முதற்றேவே
சினவிடை யவரருண் மழவிடை கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (௧௦)

## ரு. முத்தப்பருவம்

391. குருகு நாறு செந்தளிர்க்கைக்
கொடிநுண் ணுசுப்பிற் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறலூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்ததுழாய்ச்

---

(2.) அளியும் - முற்றிய. வெளி - சிதாகாசம். அறம் தவமொடு வளர.

(3.) கடவி - செலுத்தி. அடைய - முற்ற. வேதமாகிய வண்டுகள்.

(4.) மதவலி - மதவலியென்னும் திருநாமத்தை யுடையாய்; "சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி" (முருகு. 275, ந.)

390. (அடி. 1-3) இவ்வடிகளில் முருகக் கடவுள் வள்ளிநாயகியைப் பாராட்டுதல் கூறப்படுகின்றது.

(1.) தத்தாய் - கிளியே; தத்தை - கிளி. கணை - அம்பு. பிணை - பெண் மான். இரண்டும் கண்ணுக்கு உவமை.

(2.) நனை - தேன். மலர்பொதுளிய குழலென்க. எழிலி தழைத்த - மேகம்போலவே தழைத்த; எழிலி - மேகம். கலபம் = கலாபம் - மயிலின் தோகை. மயிற்பேடு - பெண் மயில்.

(3.) வைத்தனை : முற்று; வைத்து என எச்சமாக்கிப் பொருள் கூறுதலும் உண்டு. இறைவர் - பிரமன் முதலியோர் (365.)

(4.) மழவிடை - இளைய காளையை ஒப்பாய்.

391. (அடி, 1.) குருகு - வளையல். நாறும் - தோன்றும். நுசுப்பு - இடை. பூங்கொம்பும் - உமாதேவியாரும். தாமரை நாறும் தலை - பிரமதேவர் தலை.

சருகு நாறு முடைத்தலையின்
தாம நாறு திரடிண்டோட்
டாதை யாருங் கண்டுகண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்
தருகு நாறு திருமேனி
அந்தீங் குதலை மழலைகனிந்
தமுத மூறு பசுந்தேறல்
அசும்பு நாறத் தெய்வமண
முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (க)

392. நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டிற் றடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாண் முகத்து மார்பகத்தும்
குறுமெ னடைய சிறுபசுங்காற்
குருதி ததும்ப வுதைந்துசில
குறும்பு செயத்தா ணேமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவனம்
நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது

---

(2.) துழாய்ச்சருகு நாறு தலை - திருமாலின் தலை; "கருதயன்மால், தருதலையாக வம்மான்" (திருக்குடந்தைத் திரிபந்தாதி.) குரவு - குராமலர்.

(1-2) கொம்பும் தாதையாரும் களிப்ப.

(3.) மேனி அசும்பு நாற என்க; அசும்பு - துளி.

(4.) மும்மைத் தமிழ் - முத்தமிழ்; மும்மை - மூன்று; "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" (குறள், 23, பரி. மேற்.)

392. (அடி, 1.) நளினத் தொட்டில் - சரவணப் பொய்கையிலுள்ள தாமரைப் பூவாகிய தொட்டில்; "பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" (பரி. ரு: 49); "சரவணப் பூந்தொட்டி லேறி" (கந்தரலங்காரம், 5.) கைத்தாயர் - கார்த்திகைப் பெண்கள்.

(1-2) முகத்தும் மார்பகத்தும் உதைந்து. குறும்பு - விளையாட்டு, ஓச்ச - அடித்தற்கு ஓங்க.

நெக்குப் பசுந்தே னசும்பூற
 நெடுவெண் ணிலவு விரிந்தகூறு
முறுவ லரும்புஞ் செங்கனிவாய்
 முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
 முருகா முத்தந் தருகவே. (உ)

393. பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
 புணரி பெருகி யலையெறியப்
பொங்கி யெழுந்த பெருங்காதற்
 புளகம் போர்ப்பப் போதுசெயும்
விழியு மனமுங் குளிர்தூங்க
 விரிநீர்ச் சடிலத் தொருவனிரு
வீணைக் குதவுந் திருச்செவிகள்
 விருந்தாட் டயர விரைகொழித்து
வழியுங் கொழுந்தேன் பிழிந்திட்டு
 மதுர வமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
 வடித்துத் தெளித்த வார்த்தையொன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
 முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
 முருகா முத்தந் தருகவே. (௩)

394. கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
 கல்விச் செல்வர் கேள்விநலம்

---

(2-4.) ஓச்சக் குறுமுறுவல் அரும்பும் என்க.

393. (அடி, 1-2.) புணரி - கடல். புளகம் - உரோமம் சிலிர்த்தல். போதுசெயும் விழியும் - இராப்போதையும் பகற்பொழுதையும் செய்யும் சந்திர சூரியராகிய விழிகளும் (548.) விரிநீர் - கங்கை. ஒருவன் - சிவபெருமான். வீணைக்கு - வீணையின் இசைக்கு; வீணைக் குதவும் திருச் செவிகள்: 4-ஆம் செய்யுளின் குறிப்பைப் பார்க்க.

(2-4.) செவிகள் விருந்தாட்டயர வார்த்தை ஒன்று மொழியும் என்க.

394. (அடி, 1.) கலைப்பால் - கலையின் பகுதிகள். நிறைந்த செல்வர். மறை கேட்கப்படுவதாதலின் கேள்விநலங் கனியக் கனிய அமுதூறுவதென்றார்.

கனியக் கனிய வமுதூறும்
கடவுண் மறையு முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டே னறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழு நாறத் தடங்கரைகொல்
அலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராவென்
அம்மை யமுது சூற்கொண்ட
முலைப்பா லூறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (ச)

395. புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையு மின்னகையும்
புளகம் பொதிந்த விளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கட்
கயலுங் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணுன் முகந்துண் டின்னமுதின்

---

(1-2.) முருகக்கடவுள் முதற் சங்கத்திருந்து தமிழாராய்ந்தவரென்பது கருதி இது கூறினர் (376.) பாவலர் தமிழும், மறையும் தமிழும் நாற.

(3.) தெண்கடல் வைப்பு - பூமி.

(3-4.) முதிரா முலை.

395. (அடி, 1.) கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின் (அடி, 2) கொந்தள முதலியன வென்று கூட்டி யுரைக்க. கொந்தளம் - கூந்தல்; இது குந்தளமெனவும் வழங்கும்.

(2.) பெண்ணமுது - வள்ளிநாயகியார்.

(1-2.) பன்னிரண்டு திருவிழிகளுக் கேற்பக் கூந்தல், இரண்டு குழைகள், நகை, இரண்டு நகில்கள், இரண்டு புருவங்கள், இரண்டு கண்கள், மென்மை, அழகென்னும் பன்னிரண்டும் கூறப்பட்டன.

இயலுஞ் சுவைநல் லவியொடுநீத்
 தேக்கற் றிருந்தத் தாக்கணங்கின்
இழுமென் குதலை கனிந்தூறும்
 இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்

முயலுங் குமுதக் கனிவாயால்
 முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
 முருகா முத்தந் தருகவே. (ரு

(வேறு)

396. கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
 கொடியிடைக் கடைசியர்குழாம்
குரவையிடு துழனியிற் கொண்டறிரை யத்தாவு
 குழவுப் பகட்டுவாளை

சேடுபடு புத்தே ணிலத்துப் புனிற்றிளஞ்
 சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
 தீம்பால் சினைக்கற்பகத்

தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந்
 தேரியொடு கானிரம்ப
இழுதுபடு கழனியுந் தெய்வமண நாறவேன்
 றின்சுவை முதிர்ந்துவிளையும்

காடுபடு செந்நெல்பைங் கன்னனிகர் புள்ளூர
 கனிவாயின் முத்த மருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
 கனிவாயின் முத்தமருளே. (சு)

---

(3.) அவி - தேவருணவு. ஏக்கற்று - ஆசையால் தாழ்ந்தது. ஏமாப்பான் - இன்பமடையும்பொருட்டு.

396. (அடி, 1.) கோடு - யானைக்கொம்பு. குரவை - குரவைப்பாட்டு; இது குலவையென வழங்கும். துழனி - ஆரவாரம். திரைய - சுருள.

(2.) சேதா - காமதேனு. சேங்கன்று - காளைக்கன்று. தட என்றது தடவு என நின்றது; தட - பெருமை.

(3.) கால் - வாய்க்கால். இழுதுபடு - சேருகின்ற. கழனி - வயல்.

(4.) கன்னல் - கரும்பு.

397. துளிதூங்கு மழைமுகிற் படலங் கிழிக்கும்
துகிற்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பிற் றவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை யறுகான்மடுத்
தளிதூங்கு தேனிரு லிதுதம்மின் வம்மினென்
றழிநறு வார்ந்துநிற்கும்
அந்நலார் கைகூப்ப வாடவர் பிழிந்தூற்று
மளவிலப ராதமிதெனு
ஒளிதூங்கு முகமதிக் கொப்பென்கி லேன்விடுதிர்
உயிரொன்று மெனவிடலுமவ்
வுடுபதிக் கடவுணற வுண்டமற் றவரினும்
உய்ந்தோ மொழிந்தோமெனுக்
களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (எ)

398. பூமரு வுயிர்க்குங் கருங்கொந் தளத்துவிரி
பூந்துகட் படலமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமுங் காலமழை
பொழிமுகிற் படலஞ்செயத்

---

397. கள்ளைக் குடித்த மகளிர் மயக்கத்தாற் சந்திரனைத் தேனிரு லென்று கருதி விரும்ப, ஆடவர் அச்சந்திரனைப் பிடித்துப் பிழியத்தொடங் குகையில், சந்திரன் தனக்குரிய தண்டனைபோலும் இது வெனக்கருதி, "நான் மகளிர் முகத்திற்கு ஒப்பென்று சொல்லவில்லையே" என்று சொல்லி விடுபட்டுச் சென்று மகிழ்வானென்ற கற்பனை இதிற் கூறப்படும்.

(அடி, 1.) துகிற்கொடி - துவசம். தோரணமுகப்பு- வாயில் மாடம். அறு கால் - வண்டு. மதியின் களங்கத்தை வண்டென்று கொள்க.

(2.) அளி - அளிதல்; முதிர்தல். சந்திரனுக்குத் தேனிருல் உவமை; "வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிருலென வேணி யிழைத் திருக்கும்" (கலி. ௩௯.)

(3.) உடுபதிக்கடவுள் - சந்திரன். அவரினும் - அவரிடத்தினின்றும். உய்ந்தோமொழிந்தோம் - பிழைத்தோம்; ஒரு சொன்னீர்மையன.

398. (அடி, 1.) மரு - நறுமணம். பூந்துகட்படலம் - மகரந்தப்பொடி யின் பரப்பு. புகை கூந்தலுக்கு ஊட்டியது. முகிற்படலஞ்செய - மேகபட லத்தின் தோற்றத்தை உண்டாக்க.

தாமரை முகச்சோதி யெழவெழுஞ் சிறுமுறுவல்
தண்ணிலவு செயவெயில்செயத்
தழன்மணிக் கலனக னிதம்பமொடு வெம்முலை
தடங்கடலு மலையுஞ்செயத்

தேமரு குழற்கோதை மயிலனிர் கோசிகச்
செம்மலென் வேறுபுவனம்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சொல்
செஞ்சொற் பசுங்கிளிசொலக்

காமரு மனங்குழையு மாதர்பயில் வேளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (அ)

(சந்த விருத்தம்)

399. மதியு நதியு மரவும் விரவு
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமு மகமு மலர
மழலை யொழுகு சொற்சொலும்

புதல்வ விமய முதல்வி யருள்செய்
புனித வமரர் கொற்றவன்
புதல்வி தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய

---

(2.) தழல் மணிக்கலன் வெயில்செய.

(3.) கோசிகச் செம்மல் - விசுவாமித்திரர். மகளிரிடத்தே உள்ள மகரந் தப்பொடி முதலியவை புதிதாகப் படைத்த உலகமொன்றிலுள்ள மேகம் முதலிய பொருள்களைப்போலத் தோற்றினமையின் விசுவாமித்திரரை அம் மகளிருக்கு உவமித்தனர். என - என்று பொய்பாராட்டி. தணந்தவர் - பிரிந் தவர்.

(3-4.) பிரிவதற்கு முன் கணவர் தனிமையிற் கூறிய பாராட்டுச் சொற் களை அங்கிருந்து கிளி கற்று அவர் பிரிவாற்றுமையால் வருந்துங் காலத்துச் சொல்ல அவற்றைக் கேட்டு மகளிர் வருந்தினர். இத்தகைய நிகழ்ச்சியை "உள்ள மொன்று" (நைடதம், நகரப். 35) என்னும் செய்யுளால் உணரலா கும்.

399. (சந்தக்குழிப்பு.) தனன தனன தனன தனன தனன தனன தத்தன.

கதிரு மதியு மொளிர வொளிரும்
ஒளிய வளிய கற்பகக்
கனியி னினிய வுருவ பருவ
மழையி னுதவு கைத்தல

முதிரு மறிவி லறிஞ ருணரு
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (௯)

400. வடிவி னழகு மெழுத வரிய
புயமு நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின்
மணியு மணிகொள் கச்சையும்

கடவு மயிலு மயிலு மொழுகு
கருணை வதன பற்பமும்
கமல விழியும் விழியு மனமும்
எழுதி யெழுதி நித்தலும்

அடிக ளெனவு னடிகள் பணியும்
அடிய ரலது மற்றும்வே
றமரர் குழுவு மகில மறையும்
அரியு மயனு முற்றுநின்

முடியு மடியு முணர வரிய
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (௧0)

---

(3.) ஒளிய - ஒளியை யுடையாய். அளிய - அளிதலையுடைய. கற்பகக் கனியினில் இனிய உருவ : 397 -ஆம் செய்யுளின் குறிப்பைப் பார்க்க.

(4.) அறிஞர் அறிவில் உணருமென்க.

400. (அடி, 1.) செச்சை - வெட்சிமலர். மருமம் - மார்பு. குரவு - குராமலர். அரையின்மணி - உடைமணி.

(2.) கடவும் - செலுத்தும். மயிலும் அயிலும்; அயில் - வேல். விழியிலும் மனத்திலும் எழுதி எழுதி.

(3.) அடிகள் - ஸ்வாமி.

(3-4.) அடியரலது ஏனையோரால் அறிதற்கரிய முதல்வ.

## ௯. வருகைப் பருவம்

401. செம்பொற் கருங்கழ லரிக்குரற் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையி லரைமணி கிணின்கிணி னெனப்பொலந்
திண்டோளின் வளைகலிப்ப
அம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமும்
ஆரமுந் திருவில்விச
அணிமகர குண்டலம் பருதிமண் டலமென்ன
அலர்கதிர்க் கற்றைசுற்றப்
பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும்
பனிமுறுவ னிலவரும்பக்
கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (க)

402. மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகில்
மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி யெம்பிரான்
மார்பினிற் குரவையாடி

---

401. (அடி, 1.) அரிக்குரல் - தவளையின் குரலைப்போன்ற குரல். கலிப்ப - முழங்க.

(2.) பகடு - பெருமை. சன்னவீரம் - வீரசங்கிலி (நக்க. 341.) திருவில்- இந்திரவில்லின் ஒளி.

(3.) பட்டம் - நெற்றிப்பட்டம்.

(4.) முருகக் கடவுளுக்கு விருப்புடையதாதலின் குரவு கமழ்தரு கந்தபுரி யென்றார்; குரா - ஒரு மரம்.

(முடிபு.) கலின்கலினென என்பது முதலிய எச்சங்கள் வருகவென்பத னோடு முடிந்தன.

402. முருகக்கடவுள் சிவபெருமான் திருமேனியின்மீது இவர்ந்து அங்குள்ள பொருள்களோடு சிறுவிளையாடல்கள் செய்வது கூறப்படும்.

(அடி, 1.) மழவு - இளமை. வாய்த்தேறல் : 14. தேறல் - தேன்; குரவை - ஒருவகைக் கூத்து.

முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனல்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை யெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக் கறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (உ)

403. இருளற விமைக்குநின் றிருவுருவி னலர்சோதி
இளஞாயி றெனமுகையவிழ்ந்
தேடுவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநில
வெறிப்பவலர் குமுதவனமும்
கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ
களிறென வுழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்பெருங்
கலவியங் கடலின்மூழ்கும்

---

(2.) முழவு முதிர் - முழவினைப்போன்ற ஓசை முதிர்கின்ற; முழவு - மத்தளம். துடி - உடுக்கை; இறைவன் திருக்கரத்திலுள்ளது. குழவிப்பருவத்திற்கேற்பச் சிறுபறை கூறப்பட்டது. கனல் - திருக்கரத்திலுள்ள அக்கினியை. மோலிநீர் பெய்து - கங்கைநீரைப் பெய்து. மடுத்து - செறித்து. அறுகம்புல் சிரத்திலுள்ளது.

(3.) புழுதியாட்டயர்தல்: 2. துளையமாடுதல் - துளைந்து விளையாடுதல்; வழக்கு. விழிகள் சேப்ப: "நீர்நி டாடிற் கண்ணுஞ் சிவக்கும்" (குறுந். 355.)

(4.) சிறு குறும்பு - சிறுவிளையாட்டு.

403. முருகக்கடவுள் நவவீரர்களோடு சரவணப்பொய்கையில் விளையாடுதல் கூறப்படும்.

(அடி, 1.) சரவணப் பொய்கையிலுள்ள தாமரைமலர் முருகக்கடவுளது திருமேனிச் சோதியைக்கண்டு மலர்ந்தது. முருகக்கடவுளது திருமேனியின் ஒளிக்கு ஞாயிறு உவமை (361.) நகையில் உண்டாகிய நிலவைப் போன்ற ஒளியினால் குமுதம் மலர்ந்தது.

(1-2.) காட்டையும் வனத்தையும் உழக்கி; உழக்கி - கலக்கி.

வெருளின்மட நோக்கினீ ரரமகளி ருடனாடும்
விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையந் துறையினின்
வீரர்க ளெனுங்கோளரிக்

குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (௩)

404. கட்டுண்ட படர்சடைக் காட்டெம்பி ரான்வைத்த
கலைமதியொ டையநீயக்
கவுரிதிரு முடியினித் திலமிட் டிழைத்திட்ட
கதிரிளம் பிறையிணைப்பத்

தெட்டுண்ட போன்முழுத் திங்களென் றேக்கறுஞ்
செழுமணிச் சூட்டுமோட்டுச்
செம்பாம்பு பைவிரித் தாடுதலு மோடிநின்
சிறுநறுங் குஞ்சிக்கிடும்

---

(3.) நீரரமளிர் - நீர்நிலைகளில் உறையும் தெய்வமகளிர். வீரர்கள் - வீரவாகு முதலிய ஒன்பது வீரர்கள்.

(3-4.) கோளரிக் குருளைகள் - சிங்கக்குட்டிகள்.

404. முருகக் கடவுள் சிவபெருமான் திருமுடியிலுள்ள பிறையோடு அம்பிகையின் திருமுடியிலுள்ள முத்தாலாகிய பிறையென்னும் ஆபரணத்தை இணைத்தபோது அவற்றை முழுமதியென்று எண்ணிச் சடையிலுள்ள பாம்பு அதனைப் பிடித்தற்கு வருகையில் அப் பாம்பைத் தம் திருமுடியில் புனைவதற்குரிய காந்தளென்று நினைந்து முருகக்கடவுள் அதனருகே செல்ல, அப் பாம்பு ஓடியது. அப்போது சிவபெருமான் திருமுடியிலிருக்கும் பிரமதேவருடைய நகுதலை தம்மைக் கண்டு சிரிப்பதாக எண்ணி, "நீ முன்னரே குட்டுண்டதை மறந்தனையோ?" என்று கூறி முருகக்கடவுள் சினந்தனர்.

(அடி, 1.) பிறை - பிறையென்னும் ஆபரணம் (529); "செந்திருவுந் திங்களும் பூவுந் தலைசிறப்ப" (நன்டி. 31, மேற்.)

(2.) தெட்டுண்டபோல் - ஏமாற்றப் பட்டதுபோல். ஏக்கறும் - இது பெற்றிலேமேயென்று வருந்தும்.

மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றணையவம்
மாசுணம் வெருண்டோடலும்
மணிமுடியி னகுதலையை மற்றெமை நகைத்தியால்
மலரவன் றலைநீமுனம்
குட்டுண்ட தறியாய்கொ லெனவித ழதுக்கும்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (ச)

405. அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்
கடங்காமை யாலெம்பிரான்
அலர்விழிகள் பொத்தலு மிருட்படல மூடவு
ளஞ்சிநின் றேங்கவேங்கிச்
செங்கைத் தலங்கொண் டெடுத்தணைப் பாட்கும்
திருத்தாதை யார்க்குமுத்தம்
திருமுகமொ ராறுங் கொடுப்பக் கதுப்பிற்
றெறித்துமுத் தந்தருகெனும்
கங்கைக்கு நல்கா தெழுந்தலறி யோடலும்
கண்ணீர் துடைத்தெடுத்துக்
கான்மலரு நீவித்தன் மார்புற வணைக்குமக்
கவுமாரி யருண்மாரியிற்

(3.) மட்டு - நறுமணம். நகுதலை - சிவபெருமான் திருச்சடையில் அணிந்திருப்பது.

(4.) இதழ் அதுக்கும் - உதட்டைக் கடிக்கும்; இது சினக்குறிப்பு.

405. முருகக் கடவுள் உமாதேவியாருடைய திருவிழிகளைப் பொத்த முடியாமையின் சிவபிரான் திருவிழிகளைக் கைகொண்டு மூடவும் இருள் எங்கும் மூடியது; அது கண்டு முருகக்கடவுள் ஏங்கி நிற்ப அவரை அம்பிகை எடுத்தணைக்க முருகவேள் சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் முத்தங் கொடுத்தனர்; கங்காதேவி தனக்கும் முத்தங் கொடுக்க வேண்டுமென்று விரும்பவும் அத்தேவிக்குக் கொடாமல் அழுது ஓட அம்பிகை அவரை எடுத்துச் சீராட்டினளென்ற செய்தி இதிற் கூறப்படும்.

(அடி, 1.) அம்மையது கண் கைக்கடங்காது அகன்றதாதலின் புதைத்தற்கு அடங்காததாயிற்று. இருட்படலம் - இருட்பரப்பு.

(2.) சிவபிரானுடைய முகமைந்து, உமாதேவியாருடைய முகம் ஒன்று ஆக ஆறிலும் ஆறுமுகத்தாலும் முத்தம் கொடுத்தனர். கதுப்பில் தெறித்து - கன்னத்தில் விரலால் சுண்டி.

(3-4.) அருள்மாரியைப் போலக் கொட்டு பாலருவி.

கொங்கைக் குடங்கொட்டு பாலருவி யாடும்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. (௫)

(வேறு)

406. பைந்தண் கமல வட்டவணைப்
பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்

கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவுங் கன்னலைப்பூங்
கமுக மெனவுங் கடைக்கூடாத்

தந்தங் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத் தவர்போற் றலைமயங்கும்

அந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (௬)

---

406. (அடி, 1.) கமல வட்ட அணை - தாமரைமலராகிய வட்டமெத்தை (34.) குழலுக்கு ஊட்டுகின்ற.

(1-2.) முடை நறவின் கந்தம் - மாமிசம் கள் இவற்றின் நாற்றம். கன்னல் - கரும்பு. செந்நெல்லைக் கரும்பெனவும், கரும்பைக் கமுகெனவும் எண்ணியது புகை மூடியிருத்தலின் (376.) கடைக்கூடா - முடிவுபெறாத.

(3.) சமயத்தவர் - சமயவாதிகள்.

(4.) அருளானந்தக்கடல் - சிவபெருமான் (411.)

407. வள்ளைக் குழையிற் றாவடிபோம்
மடமா னேக்கிற் கடைசியர்கண்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை

பள்ளத் திருடுங் கழுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகி ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்றுய்க்கும்

உள்ளக் கருத்தாற் பிறிதொன்றை
உண்மைப் பொருளென் றுள்ளவுந்தம்
உணர்விற் றெய்வங் கடைக்கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்

அள்ளற் பழனப் புள்ளூருக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (எ)

---

407. (அடி, 1.) வள்ளைக்குழை - வள்ளைக் கொடியைப்போன்ற காது. தாவடி போதல் - தாவிச் செல்லுதல்; "தாவடி வந்திப் படியென தாவி தளர் வித்ததே" (புகலூரந்தாதி); "தாவடி யோட்டு மயிலிலும்" (கந்தரலங்காரம்.) வெடிபோம் - துள்ளிச் செல்கின்ற.

(2.) அழுவம் நீர்ப்பரப்பு - கடற்பரப்பு. பாகிரதி - ஆகாய கங்கை. பரிசு - இயல்பு; எழுவாய்.

(3.) பிறிது ஒன்றை - உண்மைப் பொருளல்லாத ஒன்றை. உணர்வில் - அறிவில். உறுதி - வீடு.

(1-3) கடைசியரது கூந்தலில் ஒலிக்கும் வண்டின் ஒலிக்கு அஞ்சிய வாளைமீன் ஆகாயத்தைக் கடலென மயங்கி அதனிடத்தே தாவ, அது தான் நினையாமலே ஆகாய கங்கையில் வீழ்ந்து மகிழ்ந்தது; இந் நிகழ்ச்சி பிறி தொரு தெய்வத்தை மெய்யாக்கொண்டு அன்பு செய்வார்களுக்கும் இறை வன் நல்லருள் செய்ய உறுதிப் பயன் கிடைத்தது போன்றது.

(4.) அள்ளல் - சேறு.

408. நஞ்சிற் றோய்த்துக் கொலைதிற்றும்
நயன வேலுங் கரும்புருவ
நாமச் சிலையு மகலல்குல்
நகுபொற் றேரு மிகல்கடந்து

வஞ்சிக் கொடிநுண் ணிடைசாய்த்து
மதர்த்துக் களித்த மால்களிறும்
மற்றும் படைகள் பற்பலவும்
வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த

கஞ்சத் தவிசிற் றிருவன்னர்
கடலந் தானைக் கைநிமிரக்
காமன் படைவீ டெனப்பொலியும்
காட்சி யானு மப்பெயரிட்

டஞ்சொற் றமிழோர் புகழ்வேளூர்க்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (அ)

(சந்தவிருத்தம்)

409. உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே

408. காமன்படையாகிய மகளிர் நிரம்பியிருத்தலின் காமனுக்கு உரிய படைவீடென்னும் பொருளும் வேளூர் என்பதற்கு அமையுமென்பது இதிற் கூறப்படும்.

(அடி, 1.) மகளிர் உறுப்புக்களிற் சிலவற்றைப் படைக்கலங்களாகவும் சிலவற்றைத் தேர் முதலிய படைகளாகவும் உருவகம் செய்கின்றார்; 120. நாமம் - அச்சம்.

(2.) களிறு : நகில்.

(3.) கை - படையின் பக்கம்; படைவகுப்புமாம். அப்பெயரென்றது வேளூரென்பதைச் சுட்டியது.

409. (சந்தக் குறிப்பு.) தனன தனன தனன தனன தன்ன தனன தனதன.

(அடி, 1.) உணர்வு - அறிவு. உதயம் - சூரியோதயம்.

அலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே
அறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.(௯)

410. இழுமெ னருவி சொரியு மிமய முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவ னிருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக வருகவே
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.(௧0)

## எ. அம்புலிப் பருவம்

(ஆசிரிய விருத்தம்)

411. மண்டலம் போற்றுருவ மமுதமய மாய்முழு
மதிக்கடவு ளெனவருதலால்
வானாறு தலைமடுக் கப்பொங்கு மானந்த
மாக்கட லிடைத்தோன்றலால்

---

(2.) நிறை - மனத்தைப் பொறிவழியே செல்லாமல் நிறுத்துதல். கழுவு துகளர் - துகளைக் கழுவியவர்; குற்றம் நீங்கினவர்கள்.

410. (அடி, 2) ஒருவன் - உருத்திரன். இருவர் - பிரம விஷ்ணுக்கள். உபய சரணன் - இரண்டு திருவடிகளையுடையவன்.

(3.) விளரி - ஒரு பண். குரவன் - குராமாலையை அணிந்தவன்.

411. இது சந்திரனுக்கும் முருகக் கடவுளுக்கும் சிலேடை. அம்புலியைச் சாம பேத தான தண்டவகைகளால் அழைப்பாராகி இதன்கண்ணும் அடுத்த செய்யுளிலும் சாமத்தை மேற்கொண்டு கூறுவர். சாமமென்பது இங்கே ஒப்பென்னும் பொருள்படும்.

(அடி, 1) மண்டலம் - பூமி, சூரியமண்டலம் முதலியவை. அமுதம் - அமிர்தம், அழிவில்லாமை. முழுமதிக் கடவுள் - நிறைந்த சந்திரனாகிய கடவுள், பூர்ண ஞானமுடைய தெய்வம். வானாறு - பெரிய நதிகள், ஆகாய

தண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத்
தாமரை முகிழ்த்திடுதலாற்
சகலபுவ னத்திலு முயிர்ப்பயிர் தழைப்பநற்
றண்ணளி சுரந்திடுதலால்
துண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ்
சோதிகட் பொறியாதலால்
தோன்றலிவ னின்னையொத் துளனு னினக்குமொரு
துணையிவன் போலில்லைகாண்
அண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (௪)

412. சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினுய்
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச்
சோதிவேலையுமுகந்தாய்

---

கங்கை. தலைமடுக்க - சேர, சிரத்திலே சேர்த்த. பொங்கு மானந்த மாக்கடல்- மேலெழும் முழங்குகின்ற சங்குகளையுடைய பெரிய கடல், பொங்கிய ஆனந்தமாகிய பெரிய கடல்போன்ற சிவபெருமான் (406.) ஆல் - முழக்கம்; நந்த - சங்குகளையுடைய.

(2) கொடிச்சி வாய்க்குமுதம் விள்ள - கொடியின்கண் உள்ள குமுத மலர் மலர; கொடிச்சி - கொடி; கொறுக்கை, கொறுக்கைச்சி யென நின்றது போன்றது; குறமகளாகிய வள்ளிநாயகியாரது திருவாய் மலரும்படி யென்பது இரண்டாவது பொருள். கரத்தாமரை முகிழ்த்திடுதலால் - ஒளியையுடைய தாமரைமலர் குவிதலால்; கரம் - ஒளி; திருக்கரமாகிய தாமரை அஞ்சலி செய்வதாலென்பது இரண்டாவது பொருள். உயிர்ப் பயிர் - உயிரையுடைய பயிர்கள், ஆன்மாக்களாகிய பயிர்கள். சந்திரனல் பயிர்கள் தழைத்தலின் அவனைச் சசியாதிபதியென்பர்.

(3) சோதி - சிவபெருமான். கட்பொறி - கண்ணுகிய இந்திரியம், கண்ணிலுண்டாகிய தீப்பொறிகள்.

(4) அண்டரண்டம் - தேவருலகம்.

412. (அடி, 1.) சொல் தரு பெரும் புலவர் - புகழைப் பெற்ற பெரிய தேவர், சொல்லைத் தருகின்ற பெரிய புலவர்கள். கலையமுதுகொள விருந் தோகைமேல் கொண்டருளல் - கிரணமாகிய அமுதத்தை விருந்தாகக் கொள்ள மகிழ்ச்சியைக் கொள்ளல், சாத்திரங்களாகிய அமுதத்தைக் கொள்ளக் கரிய மயிலின்மேல் எழுந்தருளி யிருத்தல்; "அமர ருண்டி"

குற்றமில் குணத்தைக் குறித்தவிர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய்
கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக்
குடங்கொடிய தாகவைத்தாய்

உற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதண் டேனொழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்
உன்செய்கை யெம்பிரான் றன்செய்கை போலுமால்
உனையுமிவ னெவ்வாதிரான்

அற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (உ)

413. கங்கைமுடி யடிகட்கொர் கண்ணு யிருத்தியக்
கண்ணினுண் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
கலைமுழுது நிறையநின்றான்

---

(பரிபாடல், கக: 35) என்று சந்திரன் கூறப்படுதல் காண்க. மலைபோல அலைமோதுமச் சோதிவேலையும் உகந்தாய் - மலையைப் போலப் பெரிய அலைகளை மோதும் அந்த ஒளியையுடைய கடலையும் விரும்பினாய்; முருகக் கடவுளுக்கு, மலையையும் அதனைப் போலக் கடலையும் ஊடுருவிய ஒளியையுடைய வேற்படையை விரும்பிய செயலைக் கொள்க.

(2) இரவலர் முகங் கோடாது - இரவிலே மலரும் மலர்கள் வாடாமல், யாசகர்களுடைய முகம் கோணாமல். கோகன நாயகன் - சூரியன். குக்குடம் - கோழி. கொடியதாக - கொடுமையையுடையதாக; பகைப்பொருளாக வென்றபடி. துவசமாக வென்பது முருகக் கடவுளுக் கேற்பக் கொள்ளும் பொருள்.

(3) குமுதம் விண்டு தண்டேன் ஒழுக - குமுதமலர் மலர அதிலிருந்து தண்ணிய தேன் ஒழுக, 'வாயிலிருந்து நீர் ஊற. நிலா நகை - நிலாவாகிய ஒளி, நிலாவைப் போன்ற நகை.

(4) அல் - இருட்டு; இங்கே கருமை.

413. இதுமுதல் இரண்டு பாடல்களிற் பேதம் கூறப்படும்.

(அடி, 1) அடிகள் - சிவபெருமான். கலைகள் - கிரணங்கள். கலைமுழுதும் - சாத்திரங்கள் முழுவதும்.

எங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவர்
  எவர்க்குமிர விணையொழித்தான்
இருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவன்
  எவ்வுயிரும் வாழச்செய்தான்

பொங்கமுத மமுதா சனர்க்குதவி னுயிவன்
  புத்திமுத் தியுமளித்தான்
புவனம் படைத்தவிவ னின்னின்மிக் காளெனப்
  புகல்வதோர் பொருளன்றுகாண்

அங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுடன்
  அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
  அம்புலீ யாடவாவே. (ரு)

414. பாயிருட் போதத் திருட்டன்றி யகவிருட்
  படலங் கிழிப்பதுணராய்
பனிவிசும் பிற்பொலிவ தொன்றலாற் புவனப்
  பரப்பெலாம் பொலிவதோராய்

சேயிதழ்க் குமுதந் திறப்பதல் லாதுளத்
  திருமலர் திறக்கவறியாய்
சிறைவிரி சகோரப்பு ளன்றியெவ் வுயிரும்
  திளைத்தின்ப மாரச்செயாய்

---

(2.) இரவோன் - இராத்திரிக்குரியவன்; யாசகஞ் செய்பவனென்பது வேறு பொருள். அங்குரிக்கும் - முளைக்கும். சந்திரன் ஓரறிவுயிர்கள் வாழச் செய்தலும் முருகக்கடவுள் எல்லா வுயிர்களும் வாழச் செய்தலும் இங்கே வேற்றுமை.

(3.) அமுதாசனர் = அமுத அசனர். அமுதத்தை உணவாக வுடைய தேவர்கள்; முன்னரே அமுதத்தை உண்டவர்களுக்கு நீ அமுதமுதவினை யென்பதுபட நின்றது. புத்தி முத்தி - போகமும் மோக்ஷமும்.

(4.) ஓலிட்டு - ஓலமிட்டு; முழங்கி.

414. (அடி, 1.) இருட் போதத்து - இராப்போதில். அகவிருட்படலம்- அகவிருளாகிய அஞ்ஞானத்தின் பரப்பு.

(2.) உளத்திருமலர் - இதயமாகிய தாமரை. சகோரப்புள் நிலவை யுண்ணுதல்: 102, 383.

நீயிவற் கொப்பன்மை செப்புவதெ னிப்பரிசில்
நின்பெருந் தவமென்சொல்கேன்
நெடியவன் முதற்றேவர் குறுகிநிற் பவுமுனை
நினைத்தழைத் தருளினன்காண்
ஆயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (ச)

415. தருமன்னு பொன்னுலகு மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தொகும்
சன்னிதி யடைந்தவர்கள் பையுணோய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிராக்
கருமன்னு மூழிப் பெரும்பிணியு மாற்றிடுதல்
கண்டனை யிருத்தியானின்
கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேயெலம்பிரான்
திருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்து நிற்கவற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையொன் றேயமையுமால்

---

(1-2.) சந்திரன்பால் இல்லாதனவாகக் கூறப்பட்ட இயல்புகளும் செயல்களும் முருகக்கடவுள்பால் உள்ளவை.

(3.) குறுகி - தன்னை அடைந்து. நெடியவன் குறுகி நிற்பவென்றது முரண்.

415. இது முதல் இரண்டு செய்யுட்களில் தானம் கூறப்படும்.

(அடி, 1.) தரு - கற்பக விருட்சம். பொன்னுலகு - தேவலோகம். பையுள் நோய் - துன்பத்தைத் தரும் நோய்.

(2.) கரு மன்னும் ஊழிப் பெரும் பிணி - கருப்பையில் தங்குவதாகிய நெடுங்காலமாக வரும் பிறவி நோய். கயரோகம் - நாளுக்குநாள் குறைதலாகிய நோய். முயற்கறை - முயலாகிய களங்கம்.

(3.) வெண் சாந்து - விபூதி; இது திருக்கோயிலிலுள்ள விபூதிக் குண்டத்திலிருந்து எடுப்பது. மற்றைத் திருச்சாந்தென்றது அங்க சந்தானத் தீர்த்தத்தினின்றெடுக்கும் மண்; இம்மண்ணை உண்டோர் நோய் நீங்கிச் சுகமுறுதல் கண்கூடு. சித்தாமிர்தம்: ஆலயத்துள்ளது; தீர்த்தங்களுள் தலைமை பெற்றது.

அருவென்ன வுருவென்ன வன்றென்ன நின்றவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (ரு)

416. ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழியவெவ ரெவர்கட்கும்
ஊன்கண் ணுளக்கண்ணதாம்

விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென்றுணர்தியாற்

பொழியாத புயறங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்ற

அழியாத வீடுந் தரக்கடவ னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (சு)

417. நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கியார்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு வென்புநெரியக்

---

416. (அடி, 1.) ஊன்கண் - புறக்கண்.

(2.) மெய்கண்ட தெய்வம் - உண்மையாகக் கண்ணிற் கண்ட கடவுள்; "கண்கண்ட தெய்வம்" (710) என்பதுபோல நின்றது.

(3.) பொழியாத புயல்: திருமால். அவர் தங்கு புவனம் வைகுண்டம். திசைமுகப் புத்தேள் புவனம் - பிரமலோகம்.

417. இது முதல் தண்டம் கூறப்படும்.

(அடி, 1-2.) வைத்தீசுவரன் கோயிலில் பிசாசினாற் பிடிக்கப்பட்டார் வழிபட்டு அதினின்றும் நீங்கி அருள்பெறுஞ் செய்தியை நினைந்து இது கூறினர்.

கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணுயலை

மட்டுடைந் தூறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மற்றிவன் முனிந்தாலுனக்

கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மையனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (எ)

418. குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்
குடித்திட விடுத்துநின்றுன்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப்புடைத்தான்

---

கரும் பேய்கள்: எழுவாய். மயிராகிய வரிசையாயுள்ள தூண்கள். பழு வென்பு - விலா வெலும்பு. கொடிறு உடைத்து அடி - கன்னத்தில் அறை. கணநாதர் பூதமொன்றினை விடுத்துக் கடுக. பேய்கள் வாய்திறந்து அலறு காட்சி.

(3.) கமலன் - பிரமதேவர்.

(4.) திக்கு - புகலிடம்; "திக்குவே றில்லை நீயே" (இராம நாடகம்.)

418. இதன்கண் முருகக்கடவுள் இயற்றிய நிக்கிரகச் செயல்கள் கூறப்படும்.

(அடி, 1.) குடுமி - உச்சி. வேற்படை குன்றை யூடுருவிச் சென்ற அப்பொழுதே அதன்கண் மறைந்து நின்ற சூரனையும் ஊடுருவியதென்பது ஒரு சாரார் கொள்கை; அதற்கேற்ப இங்கே பொருள் கொள்ளுதலும் பொருந்தும்; "ஒரு தோகை மிசையேறி யுழல்சூரு மலைமார்பு முடனூடறப், பொரு தோகை சுரராச புரமேற விடுகாளை புகழ்பாடுவாம்" (தக்க. 5) என்பதையும் அதன் உரை முதலியவற்றையும் பார்க்க. குண்டிகைக் கள்வன் -பிரமதேவர்; குண்டிகை - அவர் கையிலுள்ள நீர்க்கரகம்.

இன்றைக் குழந்தையென் றெண்ணுது குலிசன்முதல்
எண்மரும் பிறருமொருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை யதுகிடக்க

முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்டநாள்
முழுமதிக் கடவுளை யவமதிப் புண்டது
மொழிந்திடக் கடவதன்றால்

அன்றைக் கணக்கின் றும் வந்திருக் கின்றதினி
அம்புலி யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலி யாடவாவே. (அ)

419. தள்ளும் பவக்கட லுழக்குமெனை முத்தித்
தடங்கரை விடுப்பவனுனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடிற்
றண்ணளி சுரந்துகருணை

வெள்ளங் கொழிக்குங் கடைக்கண் சிவப்பவிவன்
வெகுளாது விடினுமழுது
விழிசிவப் பக்காணி னிரவிபகை சாய்த்தவிள
வீரன் பொறுப்பானலன்

கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிறார்திரைக்
காவிரித் தண்டுறைதொறும்
கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறியக்
கலைமதிக் கலசவமுதை

---

(2.) குலிசன் - இந்திரன். எண்மர் - திக்குப் பாலகர் எட்டுப்பேர் (பரி. ரு :. 51-6.)

(3.) தக்கயாகத்தில் வீரபத்திரக் கடவுள் சந்திரனைத் தேய்த்தருளினர்.

(4.) கணக்கு - நியாயம் ; "கலிப்பாவென் றோதல் கணக்கோ" (தமிழ்விடு. 81.)

419. (அடி, 1) பவக்கடல் - பிறவியாகிய கடல்.

(2.) இரவி பகை - பானுகோபன். அவனைச் சாய்த்த இளவீரனென்றது வீரவாகு தேவரை.

அள்ளூந் தடம்பணைச் சோணாட னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (கூ)

420. தன்னொத்த தெய்வச் சிறாருமிள வீரரும்
தாணிழற் கீழ்நிற்பவிச்
சகதண்ட மண்டல மடுக்கழியு நாளமரர்
தமையழக் காண்பவனிவன்
நின்னைப் பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி
நீள்கழற் றூளுதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தனன்
நினக்கிதில் வியப்பில்லைகாண்
பின்னற் றிரைச்சுர நதித்தண் டுறைத்தேவர்
பேதைக் குழாங்களென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் டுறைச்சிறைவிரித்
தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (கo)

---

420. (அடி, 1.) தெய்வச்சிறார் - விநாயகர் முதலியோர். இளவீரர் - நவவீரர்கள். சகதண்டமண்டலம் - பூமியும் அண்டகோளங்களும். அடுக்கழியும் நாள் - தம் நிலையழியும் சர்வ சங்கார காலத்தில். அமரர்தாமும் அக்காலத்து அழிவராதலின் அவர் அழுதனர்.

(2.) பொருட்படுத்து - ஒரு பொருளாகக் கருதி.

(3-4) ஆகாய கங்கையில் தெய்வமகளிர் விளையாடுவதைப் போலக் காவிரி நதியில் அன்னங்கள் ஆடின.

சுரநதி - ஆகாய கங்கை. தேவர் பேதைக் குழாங்கள் - தெய்வமகளிர் கூட்டங்கள்.

## அ. சிற்றிற் பருவம்

421. குறுமென் னடையு நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாட்டடங்கண்
குளிர முகந்துண் டொளிர்சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை

முறுகு நறைத்தேன் கனிபவள
முத்துண் டுச்சி மோந்துகொண்டுன்
முகமுந் துடைத்து விளையாட
முன்றிற் புறத்துப் பொன்றதும்பி

இறுகும் புளகக் கும்பமுலை
எம்பி ராட்டி விடுத்ததுமற்
றிளையார் மறுக மறுகுதொறும்
இடுக்கண் செயற்கோ வெந்தாய்நின்

சிறுகிண் கிணிச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (க)

422. கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக்
குரவு நாறு நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே யென்று குறையிரந்து

தொழுவா னவர்த முடிசூட்டும்
சோதி முடியிற் றுகளெழுநின்

---

421. இச்செய்யுளின் முற்பகுதியில் உமாதேவியார் முருகக்கடவுளுக்கு அணியணிந்து விளையாட விட்ட செய்தி கூறப்படும்.

(அடி, 2.) முறுகு நறைத் தேன் - முதிர்ந்த மணமுள்ள தேன். பவள முத்துண்டு - திருவாயின் முத்தங் கொண்டு.

(3.) எம்பிராட்டி - உமாதேவியார். மறுக - வருந்த. மறுகு தொறும் - வீதிதோறும். இடுக்கண் செயற்கோ விடுத்தது?

422. (அடி, 1.) குஞ்சி - முருகக் கடவுளது தலைமயிர். குஞ்சியை யுடைய மகன். கோமான் - சிவபெருமான்.

(2.) முடி சூட்டும் சோதி முடி - தலையின்கண் அணியும் சோதியை யுடைய கிரீடம். வண்டல்துறை-மகளிர் விளையாடும் இடம். முருகக் கடவுள்

துணைத்தாள் வண்டற் றுறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்
கழுவா மணியு நிலவுவிரி
கதிர்நித் திலமு முமையம்மை
கண்ணி லுறுத்த வடிகேளின்
காலி லுறுத்தல் கடனன்றாற்
செழுநான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

423. வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா னடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே
கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவையக்
குருகு பெயர்க்குன் றமுமன்றாற்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தாற்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னேடுங் கலந்தூட்டிச்

---

திருவடியில் வண்டற் புழுதி படின், அப்புழுதி அவ்வடியின்கண் வீழ்ந்து வணங்கும் தேவர்கள் திருமுடியிற் படும்.

(3) மணியும் நித்திலமுட் மகளிர் சிற்றிலில் உள்ளவை. அடிகேள் - சுவாமி. முருகக்கடவுள் திருவடியில் மணியும் நித்திலமும் உறுத்துவதை உமாதேவியார் காணப்பொறாரென்பது கருத்து. 'கண்ணிலுறுத்தல்' என்பது காணப் பொறாமையைக் குறிக்கும் வழக்கு.

423. (அடி, 1.) வழிக்குப் புறம்பாயென்றது 'நீ நடப்பதற்கு இடையூறு செய்வதன்று' என்னும் குறிப்புடையது. வண்டன்மனை - சிற்றில். அசுரேசன் - சூரபன்மன். வான் கூட்டுண்பான் - தேவலோகத்தைக் கொள்ளையடித்தற் பொருட்டு. நகர் - வீரமகேந்திரம்.

(2.) முற்றில் - சிறுசுளகு. குருகுபெயர்க் குன்றம் - கிரவுஞ்சகிரி.

(3-4) காவிரியின் சிறப்புக் கூறப்படும். சுழிக்குண்டகழி - சுழியையுடைய ஆழமாகிய கடல். வாய்மடுப்பு - உண்ண. வளைத்தெண்டிரைக்

செழிக்குந் தடங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே (௯)
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

424. மூரிக் களிறே மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழியுனது
முகத்தி னழகெம் வடிக்கண்ணால்
மொண்டுண் டனமியா மெனவுமிகப்

பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயத்தைக் கண்ணேறு
பட்டே மெனவு மடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்றால்

வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பு மிருட்பிழம்பை
விழுங்கிக் கக்குஞ் சுடர்ப்பருதித்

தேருக் கெழில்செய் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௧0)

---

கரத்தால் - சங்குகளை வீசும் அலையாகிய கையினால்; வளை - கைவளையென்பது மற்றொரு பொருள். சுரபி - காமதேனு. "சோழ வளநாடு சோறுடைத்து" என்று கூறுதலின் அச்சோற்று வளத்தை இங்கே புலப்படுத்தினர். காவிரி என்னும் பெண் தன் வளைக்கரத்தால் பாலுஞ்சோறுங் கலந்து கடல் உண்ணும்படி ஊட்டுமென்றது நயம்.

424. (அடி, 1.) மூரி - வன்மை. வடிக்கண் - மாவடுவின் வகிர் போன்ற கண்; கூர்மையான கண்ணெனலுமாம். முகத்தழகைக் கண்ணால் மொண்டு உண்ணுதல்: "இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணின் முகத்தழகு பருக நோக்கி" (கம்ப. மிதிலைக். 157.) (பி - ம்) 'யாமென்றும்'

(2) பாரித்து - பருத்து. கண்ணேறுபட்டேம் - திருஷ்டி தோஷம் உண்டாகச் செய்தோம். அடிகள் - ஸ்வாமீ; இங்கே ஒருமையின்கண் வந்தது.

(3.) தாறு இளம் பாளை. வேழக்கரும்பு - இரசதாளிக் கரும்பு.

(3-4.) தேருக்குக் கமுகும் கரும்பும் கட்டி அலங்காரம் செய்யும் மரபு கருதி இங்ஙனம் கூறினர்.

425. பொன்னங் கொடிபோ னுடங்குமிடைப்
புத்தேண் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையுஞ் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞானம்

மெய்ந்நின் றவருள் விழிப்பாவை
விளையாட் டயர வழியாத
வீடுங் கொடுத்தா யெம்மனையும்
விடுத்துச் சென்றுன் மிகையுண்டோ

பின்னுந் திரைத்திம் புனற்கங்கைப்
பேராற் றூற்று நறைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுதைத்த

தென்னம் பழம்வீழ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ரு)

426. கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவும்
கமழ்தேன் றெளிவு முண்டுசுவை
கண்டா யென்றே மதுவல்லால்

---

425. (அடி, 1.) புத்தேள் மகளிர் - தேவசாதிப் பெண்கள். சூளிகை - உச்சியறை. சூரபன்மனை வென்று தேவரைச் சிறைமீட்டு அவர் வாழ்வை உதவியமையை நினைத்து இங்ஙனம் கூறினர்.

(1-2.) பொதுஞான மெய்ந்நின்றவர் - பொதுஞானத்திலும் மெய்ஞ்ஞானத்திலும் முறையே நின்றவர்கள்; மெய் - மெய்ஞ்ஞானம். பொதுஞான நின்றவர் மெய்ந்நின்றவரென்று கூட்டிப் பொதுஞானத்தினின்றும் நீங்கினவர்களாகி மெய்ஞ்ஞானத்தின்கண் நின்றவர்களென்பதும் ஒன்று. உள்விழிப்பாவை - உண்முக விழியாகிய மெய்ஞ்ஞானக் கண்ணினுள் இலகும் பாவை. அது விளையாட்டயருதலாவது சிவானந்தத்தை நுகர்தல். வீடு - முத்தி; இல்லமென்பது மற்றொருபொருள். எம் மனை - யாம் சமைக்கும் சிற்றில்.

(3.) கங்கைப் பேராற்றின்கண் ஊற்றும் தேனையும் கிளைகளையும் உடைய கற்பகம். வாளைப் பகடு - ஆண்வாளை. உதைத்த - உதைத்ததனால் உதிர்ந்த.

426. (அடி, 1.) கானக் குறப்பெண் - வள்ளிநாயகியார். புனம் - தினைக் கொல்லை,

மீனத் தடங்க ணவண்மிச்சில்
மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ

கூனற் பிறையின் கோடுரிஞ்சும்
கொடிமா டத்து வெயில்விரிக்கும்
குருமா மணியாற் சுரநதியிற்
கொழுந்தா மரைகண் முறுக்குடைந்து

தேனக் கலருஞ் சேரனுடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கூ)

427. பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா னுர்க்கு முலகேழும்
பெற்ற தாய்க்கு நீயருமைப்
பிள்ளை யெனினும் பேராய

வெள்ள மமைத்த சிறுசோறு
வேண்டி னிடுகே மலதெளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ

கள்ள விழிச்சூ ரரமகளிர்
காமன் கொடியேற் றெனவியப்பக்
கற்ப தருவிற் படர்ந்தேறு
காமர் கொடிச்செங் கயல்பாயும்

---

(2.) நசை - விருப்பம். குமுதத்து அமுது - வாய்நீர்.

(3.) கோடு - முனை. சுரநதி - ஆகாய கங்கை. மணியின் ஒளியை வெயி லென்று கருதித் தாமரை மலர்ந்தது.

427. (அடி, 1.) பிள்ளைமதி - பிறையை. தாய் : உமாதேவியார்.

(1-2.) ஆய வெள்ளம் - விளையாட்டு மகளிர் கூட்டம். விதி - நியாயம்.

(3.) காமன் கொடியேற்று - மன்மதன் திருவிழாவிற்குரிய துவசாரோகணம். காமர்கொடி -காமவல்லியில். கற்பக மரத்திற் படர்ந்தேறிய காமவல்லியின்கண் கயல்மீன் பாயுங்காலத்தில் காமனுக்குரிய துவசத் தம்பத்தில் மீனக்கொடியை யேற்றியது போலத் தோற்றியுது.

தெள்ளு புனற்கா விரிநாடா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எ)

428. மடல்வா யவிழ்ந்த குழற்பேதை
 ஒருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலையோர் கணத்தின்கண்
 மட்டித் தாடு மைந்தனருள்

விடலாய் தமியேஞ் சிற்றின்முற்றும்
 விளையாட் டாக வொருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
 வித்து முளையும் வேறன்றே

கடமா மருப்புஞ் சுடர்மணியும்
 கதிர்நித் திலமு மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறும்
 கரைத்து விடுத்தக் கடற்குட்டம்

திடராச் செயுங்கா விரிநாடா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (அ)

---

428. (அடி, 1.) பேதை யென்றது பெண்ணென்னும் செம்பொருளு டையதேனும் பகிரண்ட மணற்சிற்றிலென்ற உருவகத்திற்கியையப் பருவத் தையும் குறித்து நின்றது. பேதை - உமாதேவியார். பகிரண்டம் - வெளியே யுள்ள அண்டகோளம். மட்டித்து - தேய்த்து (34.) மைந்தன் - வன்மையை யுடைய சிவபெருமான்; இளைஞனென்பது வேறு பொருள்.

(2.) வீட்டா நிற்ப - அழிக்க. வித்தும் முளையும் வேறன்றே: "செந் நெல்லா லாய செழுமுளை மற்றுமச், செந்நெல்லே யாகி விளைதலால் - அந் நெல், வயனிறையக் காய்க்கும் வளவய லூர, மகனறிவு தந்தை யறிவு" (நாலடி. 367.)

(3.) கடமா - யானை. கடற்குட்டம் - பள்ளமான கடல்; "கடற்குட்டம் போழ்வர் கலவர்" (நான்மணிக். 18.)

(4.) திடர் - மேடு.

429 வாமாண் கலைப்பே ரகலல்குல்
மடமா னுேக்கி னரமகளிர்
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு
வந்த விடுக்கண் மாற்றினையால்
கோமா னினக்கப் பெருந்தேவர்
குலமே யன்றி யடியேமும்
குற்றே வலுக்கா மகம்படிமைக்
குடியாக் கொண்டாற் குறையுண்டோ
காய்மாண் குலைச்செவ் விளநீரைக்
கடவுட் சாதி மடநல்லார்
கதிர்ப்பூண் முலையென் றேக்கறப்பைங்
கமுகு நகைவாண் முத்தரும்பும்
தேமாம் பொழிற்றீம் புனனுடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௬)

430. கருவீற் றிருந்த பெருங்கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்கும்
கடவு ணீயே பகிரண்டம்
கண்டா யெனின்வண் டலைகிடப்ப
மருவீற் றிருந்த குழன்மகளிர்
வண்டற் றுறைக்கு மணற்சிற்றில்

---

429. (அடி, 1.) புத்தேட்கு - தேவர்களுக்கு; சாதியொருமை; இந்திரனுக்கு எனலும் ஆம்.

(2.) அகம்படிமைக்குடி - அணுக்கத் தொண்டுபுரியும் அடியர்; அகம்படிமைத் தொண்டுக்குப் பெண்பாலாரும் உரியர்.

(3.) காய் மாண் குலைச் செவ்விளநீர்: "காய்மாண்ட தெங்கின் பழம்" (சீவக.) கடவுட்சாதி - தேவ சாதியினர்; எழுவாய். ஏக்கற - ஏமாந்து நிற்ப. அது கண்டு கமுகு நகைப்பதுபோல முத்தரும்பியது. கமுகில் முத்துப் பிறப்பதாகக் கூறுதல் மரபு. இளநீரை நகிலென்று கருதுதல்: 335.

(4.) தேமா - ஒருவகை மாமரம்.

430. (அடி, 1.) கரு - முதிர்வு. கருணையைக் கடைக்கண் பொழிய (24-8.) கண்டாய் - சிருட்டித்தாய்.

(2.) மரு - நறுமணம். வண்டல்துறை - விளையாட்டிடம். வகுக்கும் தொழிற்கு - சிருட்டிக்கும் தொழிற்கு. மாறு - விரோதம்.

மனைகோ லுவது மற்றடிகேள்
வருக்குந் தொழிற்கு மாறன்றே

குருவீற் றிருந்த மணிமாடக்
கொடிமா நகரந் தொறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்
கோடி யுருவங் கொண்டுசெழுந்

திருவீற் றிருந்த சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௧௦)

## ௯. சிறுபறைப் பருவம்

431. ஊற்றும் பசுந்தே னுவட்டநெட் டிதழ்விரியும்
ஒண்காந்தண் முச்சியுச்சி
ஒருவனீ மும்முதற் கடவுளு மிளைப்பாற
உலகெலாந் தலையளித்துப்

போற்றுந் திறத்தினப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கடாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுசிலாக் கற்றையிட்டுத்

---

(1-2.) நீ உன் தகுதிக்கேற்ப அண்டங்களை ஆக்குகின்றாய்; யாமும் எம் தகுதிக்கேற்பச் சிற்றிலை ஆக்குகின்றோம். இது நின் தொழிற்கு மாறான தன்றாதலின், நினக்கு இதன்பால் வெறுப்பு உண்டாவது நியாயமன்றென்ற படி.

(3.) குரு - நிறம். கொடிமா நகரம்: "கொடிமா நகரும்" (தக்க. 206.) தாமரையாகிய கோயிலில்.

(4.) திருவீற்றிருந்த - திருமகள் வருத்தமின்றியிருந்த.

431. (அடி, 1.) உவட்ட - பெருக்கெடுப்ப. காந்தள் - முருகக் கடவுளுக்குரிய அடையாளப் பூ. தலையளித்து - பாதுகாத்து.

(2.) போற்றும் திறத்தின் - போற்றும் வன்மையைப் போல. பழமறைக் கிழவன் - பிரமதேவர். அண்டங்களை, புதுக்குவ கடுப்ப - புதுக்கு தலைப்போல. வெளி முகட்டுக்கு - வானமாகிய மேற்பரப்பிற்கு.

தூற்றும் பெயர்க்கரு முகிற்படாந் தையும்வெண்
டுகிற்படா மாக்கிவீக்கித்
தொடுகடற் புவனப் பெருந்தட்டொ டண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை
தீற்றுஞ் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பனுழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (௯)

432. விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை
வெள்ளஞ் சுருங்கவீங்கி
வேதண்ட மெட்டிநெறு மூதண்ட கூடத்தும்
விளையாடி யுலகமேழும்
வளைக்குங் கருங்கடல் பெரும்புறக் கடலோடும்
வாய்மடுத் தெதிரெடுப்ப
வருபுனற் காவேரி வளநாட னாடொறு
மதிக்கடவு ளேறியேறி
இளைக்கும் பளிக்கறை முயற்கறை யறக்காலும்
இளநிலா வெள்ளமூழ்கி
எறிதிரைப் பாகீ ரதிப்புனல் குடைந்திடும்
இடைக்கொடி நகிற்கொடியெனத்

---

(3.) கருமுகிற் படாத்தையும் - மேகமாகிய கரிய மேற்கட்டியையும். வீக்கி - கட்டி.

(3-4) வெள்ளை தீற்றும் - வெண்ணிறத்தைப் பூசும். சுதை - சுண்ணம்பு.

வேளூரிலுள்ள மாடங்களின் வெள்ளிய ஒளி எங்கும் பரவி உலக முழுவதையும் வெள்ளையடித்துப் புதுக்கியதுபோலச் செய்தது.

432. (அடி, 1-2.) காவிரி நதியின் வெள்ளப் பெருமை கூறப்படும். கடைவெள்ளம் - யுகாந்த காலத்து வெள்ளம். வேதண்டம் - மலை. மூதண்ட கூடம் - பழையதாகிய அண்ட கூடம்.

(3-4.) ஈண்டுள்ள பளிங்கு அறையின் வெள்ளிய ஒளியாகிய வெள்ளத்தில் மூழ்கிநிற்கும் துகிற்கொடி ஆகாய கங்கையில் மூழ்கும் மகளிரைப் போன்றது.

முயற்கறை அற - சந்திரன் முயலாகிய தன் களங்கம் மறையும்படி. பளிக்கறை காலும் நிலா வெள்ளம். இடைக்கொடி நகிற்கொடி - இடையாகிய

திளைக்குந் துகிற்கொடி முகிற்கொடிசெய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பமைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கி யருளே. (உ)

433. இருளுந் தரங்கக் கருங்கடன் முகட்டெழும்
இளம்பிறை முயற்குழந்தைக்
கேறவிடு மோடமென வான்மீன் றடந்திரை
எடுத்தெறியு நெடுமீனெனத்

தரளம் பதித்திட்ட மணிமுறுவ லவரோடு
தருநீழற் செல்வருய்க்கும்
தமனிய விமானமும் வெயிற்கதிர்ப் போர்வையான்
தனியாழி திசையுருட்ட

உருளுங் கொடித்தேரும் வீற்றுவீற் றெழில்புனை
தோட்டுப்பொற் றெப்பமென்ன
உலகேழு மலையெட்டு மொழுகுகதிர் விழுதுவிடும்
ஒண்ணிலாப் புணரிகோப்பத்

திரளும் பளிக்குமா டங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பமைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (ங)

---

கொடியையும் நகிலையும் உடைய கொடிபோன்ற பெண். துகிற்கொடிக்கு நகிற்கொடி உவமை. துகிற்கொடி மேகமண்டலத்தை யளாவி அம் முகிலைக் கோத்து நின்று முகிற்கொடியாயிற்று. துகிற்கொடி: எழுவாய்.

433. வேளூரிலுள்ள பளிக்கு மாடங்களின் ஒளி, மிக்க வெள்ளம் போலப் பரவி நிற்ப, அதன்கண் சந்திரன் முதலியன தோற்றுமாற்றை வருணிக்கின்றார்.

(அடி, 1.) பிறை ஓடமாகத் தோற்றியது, வான்மீன் - நட்சத்திரங்கள். அவை மீன்களைப் போன்றன.

(2.) தருநிழற் செல்வர் - கற்பக நிழலில் வாழும் தேவர். உய்க்கும் - செலுத்தும். தமனிய விமானம் - பொன் விமானங்கள். வெயிற்கதிர்ப் போர்வையான் - சூரியன். தனியாழி - ஒற்றைச் சக்கரம்.

(3) வீறு வீறு - தனித்தனியே. நிலாப்புணரி - நிலாவெள்ளம்; என்றது வெள்ளொளியின் மிகுதியை.

(2-3.) தேவர்கள் செலுத்தும் விமானங்களும் சூரியனது தேரும் பொற்றெப்பங்களாகத் தோற்றின.

434. மொய்ம்பிற் பெரும்புவன மொக்கச் சுமக்கின்ற
மோட்டாமை முதுகுளுக்க
முடவுப் படங்கிழிந் தரவரசி னுயிர
முடித்தலையு மூளைபொங்கக்
கம்பக் கடாயானை யெட்டும் பிடர்த்தலை
கழுத்தொடு முரிந்துகவிழக்
கதிர்மணிச் சூட்டுநெட் டரவெட்டும் வடவைக்
கடுங்கனற் கண்பிதுங்க
அம்பொற் றடம்புரிசை யெழுபெருந் தட்டுருவி
அண்டகூ டத்தளவலால்
அவரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென
அடுக்கேழு நிலையேழுமாம்
செம்பொற் றிருக்கோ புரங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (ச)

435. தரிக்குஞ் சுடர்ப்பருதி முழுமதிக் கடவுளொடு
தடமதில் கடந்தநகர்

---

434. இச்செய்யுளில் கோபுரத்தின் பெருமையும் உயர்ச்சியும் கூறப்படும்.

(அடி, 1.) மொய்ம்பின் - வன்மையினல். மோட்டாமை - பெரிய ஆமை; ஆதி கூர்மம்; ஆதிசேடனுக்குக் கீழே இருந்து உலகைச் சுமப்பது. உளுக்க - பாரந்தாங்காமல் அசைப்ப. முடவுப்படம் - வளைந்த படம். அரவரசு - ஆதிசேடன்.

(2.) கடாயானை - மதயானைகள். யானை எட்டும் பூமியைச் சுமப்பன. முரிந்து - வளைந்து. அரவெட்டு - அட்டமா நாகங்கள்; இவையும் பூமியைச் சுமப்பன. இவை கண்ணால் விடங்கக்கும் திட்டிவிடச் சாதிப்பாம்புகளாதலின், 'வடவைக் கடுங்கனற்கண்' என்றார்.

(3.) புரிசை - மதில். எழுபெருந் தட்டு - ஏழுலகமாகிய தட்டுக்கள். மதில் ஏழுலகத்தையும் கடந்து மேலே சென்றமையின் நகருக்குள் புகுவதற்கு வழி இலதாயிற்று.

(3-4.) தலைக்கடை - வாயில்; ஏழுலகத்தாரும் சென்று வருவதற்கு ஏழு நிலைகள் அமைந்த கோபுரம்.

435. சூரியனும் சந்திரனும் நகருக்குள் புக இயலாதவாறு மதில்கள் உயர்ந்துள்ளனவாதலினாலும், மாணிக்கம் இழைத்த மாடங்களும் முத்திழைத்த மாடங்களும் வெயிலையும் நிலவையும் ஒருங்கே வீசுதலாலும் இரவும்

சாரவரி தாற்புவன கோடிகட் கொளிசெயச்
சதுமுகன் கற்பந்தொறும்
விரிக்கின்ற விருசுடரு மொருவழித் தொக்கென
வியன்கதிர்ப் படலமூடி
வீங்கிருள் விழுங்குசெம் மணிமாட நிரையுமொளி
விளைபசுங் கதிர்வெண்புரி
புரிக்குஞ் செழுந்தரள மாடமும் வெயிலினொடு
பொழிநிலாப் போர்ப்பமுற்றும்
போதுதெரி யாமையிற் குமுதமொடு சதவிதழ்ப்
போதுமே யிருபோதையும்
தெரிக்குந் தடம்பணை யுடுத்ததமிழ் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (ரு)

(வேறு)

436. மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை
மடமயி லினமகவ
மால்கட லோலிடு மொலியென விரக
மடந்தையர் மனநெகிழப்

---

பகலும் தெரியாமல் அவ்வூரினர் மயங்குவர்; ஆயினும், பகலில் மலரும் தாமரையும் இரவில் மலரும் குமுதமும் தாம் மலர்தலால் பொழுதைப் புலப் படுத்தின.

(அடி, 1.) பருதி - சூரியன். அரிதால் - அரிது ஆதலால்.

(2.) இருசுடரும் - சந்திரனும் சூரியனும். செம்மணி மாடம் நிரை - மாணிக்கங்கள் இழைத்த மாடங்களின் வரிசை. கதிர்வெண்புரி - வெண்கிரணங்களாகிய புரியை; புரி - கயிறு.

(3.) தரளமாடம் - முத்துக்களால் ஆகிய மாடம். சதவிதழ்ப்போது - தாமரை. இருபோதையும் - இரவும் பகலுமாகிய இரண்டு பொழுதுகளையும்.

(3-4.) குமுதம் தான் மலர்வதனுல் இராக்காலத்தையும், தாமரை தான் மலர்வதனுல் பகற்காலத்தையும் புலப்படுத்தின. தடம்பணை-பரந்த வயல்கள்.

436. முருகக்கடவுள் சிறுபறை முழக்க அதன் ஒலியினுல் நிகழும் நிகழ்ச்சிகள் கூறப்படும்.

(அடி, 1.) பிளிறும் - முழங்கும். சிறுபறை யொலியை மேக முழக்க மென எண்ணி மயில்கள் மகிழ்ந்து அகவின. விரகமடந்தையர் - தலைவரைப் பிரிந்த பிரிவுத் துன்பத்தையுடைய மகளிர்; விரகம் - பிரிவு.

பழமறை யார்ப்பென வாகுதி வேட்டெழு
பண்ணவ ருண்மகிழப்
பரநா தத்தொலி யெனவனு பூதி
பலித்தவர் நெக்குருக
அழலவிர் சோதியெ மைய னடஞ்செய
ஆயிர மங்கையினோர்
அண்ண றுவைத்திடு குடமுழ வொடுசுடர்
ஆழி யவன்கொட்டு
முழவென வமரரு முனிவரு மார்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (சு)

437. பெருவெளி முகடு திறந்திட் டண்டப்
பித்திகை வெடியாமே
பேரண் டத்துள வேதண் டங்கள்
பிதிர்ந்துதி ராகாமே
குருமணி சிதறிய வென்ன வுடுத்திரள்
கொட்டுண் டுதிராமே
குவடு படுந்திசை செவிடு படச்சிலர்
குடர்கள் குழம்பாமே
திருவிர லொடுநக கண்களி னுஞ்செங்
குருதி ததும்பாமே

---

(2.) ஆகுதி - யாகத்தில் தேவருக்கு அளிக்கப்படும் உணவு. வேட்டு - விரும்பி. பண்ணவர் - தேவர். அநுபூதி பலித்தவர் - ஞான அநுபவம் முற்றினவர்கள்.

(3.) எம் ஐயன் - சிவபெருமான். ஆயிரம் அங்கையின் ஓர் அண்ணல் - வாணாசுரன். துவைத்திடு - முழக்கும். சுடராழியவன் - திருமால்.

437. இன்னபடி சிறுபறை முழக்கவேண்டுமென்று வேண்டுகின்றார்.

(அடி, 1.) அண்டப்பித்திகை - அண்டச்சுவர். வெடியாமே - பேரொலியால் பிளவுபடாமல். பிதிர்ந்து - தூளாகி.

(2.) குருமணி சிதறிய என்ன - நிறமுள்ள மாணிக்கங்கள் சிதறிப் போயினவென்று சொல்லும்படி. கொட்டுண்டு - கொட்டிப்போய். சிலர் - மலையில் வாழ்வோர்.

(3.) விரலால் அடிக்கும்போது அடி வலிதாயின் நகக்கண்ணில் இரத்தம் குழம்புதல் இயல்பு.

சேயொளி நின்று துளும்பிட நின்சிறு
செங்கை வருந்தாமே
முருகலர் தாரவ னொருமுறை மெல்ல
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (எ)

438. வம்மி னெனப்புல வோரை யழைத்திடு
வண்கொடை முரசமென
வடகலை தென்கலை யொடுபயி லுங்கவி
வாணர்க ளோடிவர
அம்மென் மடப்பிடி பொன்னுல கின்றவ
ணங்கை மணம்புணரும்
அணிகிளர் மணமுர செனவெ மையனொ
டம்மை மனங்குளிரத்
தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயும்
திறன்முர செனவிமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறு
மும்முர சமுமதிர் காவிரி நாடன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (அ)

---

(4.) முருகு - நறுமணம்.

438. வேளூரில், தியாகமுரசு, மணமுரசு, வெற்றிமுரசென்னும் மும்முரசும் அதிர்தலைக் கூறுகின்றார்.

(அடி, 1.) கொடைமுரசம் - தியாகமுரசம். என : எண்ணிடைச்சொல்.

(2.) பொன்னுலகின்ற அணங்கு - தெய்வயானை. (பி - ம்.) 'அணிகிளர் மணிமுர செ‌ன்ன' எம் ஐயன் - சிவபெருமான். அம்மை - உமாதேவியார்.

(3.) தெவ் முனை சாய - பகைவர் போர்க்களத்தில் தோல்வியுற. செங்கள வேள்வி செயும் - இரத்தத்தாற் சிவந்த களத்தில் பகைவரைவென்று அவ்வெற்றியைக் கொண்டாடிக் களவேள்வி செய்யும்.

(முடிபு.) கொடைமுரசம் முதலியனவென மும்முரசமும் அதிர் காவிரி நாடன் என்க; முதலியனவெனச் சிறுபறை முழக்குக வென்பதும் பொருந்தும்.

(சந்த விருத்தம்)

439. பெருகுசுவைத்தெளி நறவொழுகக்கனி கனியமுதே
பிடிநடைகற்றிட வடிகள்பெயர்த்திடு மடவனமே
கருவரைநெக்குட னுருகமிழற்றுமொ ரிளியரசே
கருணைசெயத்தகு மளியனிடத்தெனு மொழிபுகலா
அருளில்புனத்தவர் மகளிருபொற்பதம் வருடல்செயா
அவண்முனெடுத்துநின் முடியின்முடித்திடு கரமலராற்
பருவயிரப்புய சயிலன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. (கூ)

440. இழுமென்மொழித்தெளி தமிழின்வடித்திடு நவரசமே
இதயவிருட்டற வுணர்விலுதித்திடு சுடரொளியே
கழுவுமணிக்கல னடுவிலிழைத்திடு குலமணியே
கனிதருமுக்கனி யொடுவடிகட்டிய சுவையமுதே
ஒழுகுநறைச்செழு மலர்விரியக்கமழ் புதுமணமே
உருகுமுளத்தருள் பெருகியுவட்டெழு சலநிதியே
பழமறைகட்கொரு முதல்வன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. (கo)

---

439. (சந்தக்குறிப்பு.) தனனதனத்தன தனனதனத்தன தனதனன.

(அடி, 1-3.) முருகக்கடவுள் வள்ளிநாயகியாரைப் பாராட்டுதல் கூறப் படும்.

(1.) அடிகள் பெயர்த்திடும் - மெல்ல நடக்கின்ற.

(2.) கருவரை நெக்கு உடன் உருக - கரிய மலை நெகிழ்ந்து ஒருங்கே உருகும்படி; மழலைச்சொல் இசைபோன்றிருத்தலின் அதற்குக் கல் உருகி யது. மிழற்றும்-இனிய சொற்களைப் பேசும். அளியனிடத்துக் கருணை செயத் தகும்; தகும்: தேற்றவினை.

(3.) அருளில் புனத்தவர் மகள் - இரக்கமில்லாத குறவருக்கு மகளா கிய வள்ளி நாயகியினது. எடுத்து - அப்பதத்தை எடுத்து.

440. (அடி, 1.) நவரசம் - நகைச்சுவை முதலிய ஒன்பது சுவைகள். இதய இருட்டு - அஞ்ஞானம். உணர்வில் - ஞானத்தில்.

(1.) கழுவு மணிக்கலன் - சாணையிட்ட இரத்தினங்களாலாகிய ஆபர ணம். நடுவில் இழைத்திடு குலமணி - நடுநாயகமணி.

(3.) சலநிதி - சமுத்திரம்.

## கo. சிறுதேர்ப் பருவம்

441 போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம்
புனலோட வோடிநிமிரும்
புணரிப் பெருந்தானை யவுணப் படைத்தலைவர்
பூதப் படைத்தலைவர்முன்

தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக் கெதிர்செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்
தாலிக்கு வேலிகொலெனப்

பீரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி
பெருகக் கடைக்கணிற்கும்
பெய்வளை யவர்க்கோத வவர்விழிக டொறுமிளம்
பேதையர்கள் கண்டொறுமெனத்

---

441. போரில் தலைமயிர் அவிழ்ந்தாரையும், கண் இமைத்தாரையும், பின்னே அடியிட்டாரையும், வாள் சோர்ந்தாரையும் கொல்லுதல் அறமன்றாத லின் (தொல். புறத். சூ.10, ந.) அத்தகைய அவுணர்களை முருகக்கடவுள் பிழைத்துப் போகவிட்டமை இதிற் கூறப்படும்.

(அடி, 1.) போரையும் படைக்கலத்தையும் துறந்து. செம்புனல் - இரத் தம். தானை - அசுரசேனையிலுள்ளார்; எழுவாய். அவுணப் படைத்தலைவர் - தேவர்களுக்கு எதிராக வந்து பொருத அசுரசேனைத் தலைவர்களுடைய.

(2.) குஞ்சி முதலியன அவுணப்படைத்தலைவர்களுக்கு உரியன. எதிர் செலாத தாளுக்கு - பின்வாங்கிய காலுக்கு. நாமம் நும் தாலிக்கு - அச்சத் திற்கு இடமாகிய நும்முடைய தாலிக்கு. வேலி - பாதுகாப்பு; முருகக்கடவுள் வேலி. கொல் : அசைநிலை.

குஞ்சி முதலியன அவற்றை யுடையாரைக் குறித்து நின்றன. தம் கண வருடைய உயிர்க்கு இறுதி நேருமோவென்று அஞ்சிய மகளிராதலின் அவர் கள் தாலி அச்சத்திற் கிடமாயிற்று.

(3.) பீர் - பசலை. கொங்கைக்கண்-நகிலினிடத்தே. கடைக்கண் நிற்கும்- தம் கணவர் வரவை எதிர்நோக்கி வாயிற்கண் நிற்கும். பெய்வளைய வர்க்கு - அவுணப் படைத்தலைவர்களுடைய மனைவியருக்கு.

விளையாட்டுப் பேதைமகளிர் கண்ணைவிட்டகலாத இளமையோடு நின் றது போல அவுணர் மனைவியர் கண்ணைவிட்டகலாதவன்; என்றது, தம் கணவரைப் பாதுகாத்த அருள்பற்றி அவன் திருவுருவை எண்ணியிருப்ப ரென்றவாறு.

தேரோடு மொருபெருஞ் சிலையோடு நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (க)

442. கம்பக் களிற்றுக் கடற்றானை வீரர்கட்
கடையிற் கடைக்கனலெழக்
கண்டொட் டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ளமூழ்கித்

தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனற்சிகை யெனப்பதைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சிணுங்குங் குறட்பேய்க்கொர்
சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்

தம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்
டாடும் பறந்தலைநிலத்
தானைப் பிணக்குன்று மவுணப் பிணக்காடும்
அளறுபட் டொழியநின்றோர்

---

(4.) சிலையோடு நின்றவன் : 350.

(1-4.) துறந்து ஓடித் தானை எனு ஓத, அவர் விழிகடொறும் நின்றவன்.

442. போர்க்களத்தில் தசை முதலியவற்றை உண்ண வந்த பேய்களின் செயல்கள் காணப்படும். வீரரது கண்ணைத் தோண்டியுண்ணும் பேய் ஒன்று அவ்வீரரது செம்மயிரை நெருப்பென்று அஞ்ச, அதன்கண் மற்றொரு பேய் தசையைச் சுடமுயலுதல் இச்செய்யுளின் முற்பகுதியில் கூறப்படும்.

(அடி, 1.) வீரர் - அசுர வீரர். கடைக்கனல் - யுகாந்த காலத்து அக்கினி. கண்தொட்டுண்ணும் பேய்; "கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை (முருகு.) தொட்டு - தோண்டி. மருட்பேய் - மயக்கத்தையுடைய பேய்; பேய் மூழ்கி.

(2.) அசுரர்களாதலின் செம்மயிர் கூறப்பட்டது. கனற்சிகை - நெருப்புக் கொழுந்து. என - என்று எண்ணி. சூட்டிறைச்சி - சுட்ட தசை. சிணுங்கும் - முணுமுணுத்து அழும். குறட்பேய்க்கு - குட்டையாகிய இளைய பேய்க்கு. சூர்ப்பேய் - அச்சத்தைத் தரும் பெரிய பேய்.

(2-3) தான் - குறட்பேய். கவந்தம் - தலையற்ற உடலம். தொந்தமிட்டு ஆடுதல் - உடன் இணைந்து ஆடுதல். பறந்தலை - போர்க்களம். சூட்டிறைச்சி வேண்டுமென்ற இளம்பேய்க்கு அதனைத் தரும்பொருட்டுப் பெரிய பேய்

செம்பொற் றடந்தே ருருட்டிவரு சேவகன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (உ)

443. வண்டேறு செந்நிறப் பங்கித் தலைக்கமல
வனமூடு குருதியாற்று
மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி
மகரமீ னெனவிணைந்து
கொண்டேகு சிறுகுடர்ப் பெருவலை யெடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சினமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப வலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி யவுணருயிரை
உண்டேகு வதுமொருவன் விடவோ விடுங்கரிக்
குதவவரு திகிரியேய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட விந்த்ரஞாலத்
திண்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதே ருருட்டியருளே

---

தசையை அம்பிலே கோத்துத் தலைமயிரைத் தீக்கொழுந்தென்று எண்ணி அதன்கண் காட்டியது. அளறு - சேறு.

443. இரத்த வெள்ளத்தில் மூழ்கிச் செல்லும் யானையொன்றை ஒரு பேய் குடராகிய வலையை வீசி இழுத்தற்குத் தொடங்க, அப்பொழுது ஒரு நரி அதனை இழுக்கவே அப்பேய் அலறியது.

(அடி, 1.) பங்கி - ஆண் தலைமயிர். பங்கித் தலையாகிய கமலவனம்; தலைமயிர் செந்நிறமுள்ளதாதலின் கமலவனமாக உருவகித்தார். மகரமீன் - ஒருவகை மீன்.

(2.) குடராகிய பெருவலை. குறுநரி யானையை ஈர்ப்ப; "காலாழ்களரி னரியடுங் கண்ணஞ்சா, வேலாண் முகத்த களிறு" (குறள், 500.) அலறியது குறட்பேய். வீரர் : முருகக்கடவுளது படையிலுள்ள வீரர்.

(3.) ஒருவன் - திருமால். கரிக்கு - கசேந்திரனுக்கு. ஏய்த்தற்கு இடமாகிய பறந்தலையில். மறம் - வீரச்செயல். சூர் - சூரபன்மன்.

(3-4) இந்திர ஞாலத்திண்டேர் : "மண்டனக்கா யிரகோடி யண்டங்களுளவாகு மற்றவற்றுள், அண்டமோ ராயிரத்தெட் டுகநூற்றெட் டாள்கவென வருளா னல்கி, எண்டொகைபெற் றிடுகின்ற வவ்வண்டப் பரப்பெங்கு மேகும் வண்ணம், திண்டிறல்பெற் றிடுகின்ற விந்திரஞா லமதென்

திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (௯)

444. பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தி னுக்கப்ப றக்கப்
பறந்தலைச் செந்தலையறும்
வெங்கட் டயித்திய ருடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்டூர்ப்ப தெனவுடுவுகப்
பொங்கற் கடற்குட்ட மட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி யார்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்
செங்கட் பசுந்தோகை வாம்பரி யுகைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (௪)

---

னுக் தேரு நல்கி" (கந்த. வரம்பெறு. 21); இந்திரஞாலம் - இந்திர ஜாலம்; முருகக்கடவுள் சூரபன்மனுக்குரிய இந்திரஞாலத் தேரை நிற்கப் பணித்தமை, "தொல்லையில் வரம்பெறு சூரன் றன்புடை, செல்லலை யாக்கவன் முடிகை திண்ணமால், மல்லலந் திருவுடை மாயத்தேரை நீ, நில்லிவ ணென்றன னிகரி லாணையான்", "...பாண்டிலந் தேரது பணியி னின்றதே" (கந்த. சூரபன்மன்வதைப். 348-9) என்பவற்றால் உணர லாகும்.

444. முருகக்கடவுளின் வாகனமாகிய மயிலின் செயல் கூறப்படும்.

(அடி, 1) பைங்கண் சிறை கால் - பசிய கண்களையுடைய சிறகினால் உண்டாகிய காற்று. கண்ணென்றது பீலிக் கண்களை; "ஓடா நின்ற களி மயிலே......ஆயிரங்கண் ணுடையாய்க் கொளிக்கு மாறுண்டோ" (கம்ப. பம்பைப். 27.) கடைக்கால் - யுகாந்தகாலக் காற்று. கிரிகள் பறக்க.

(2) தயித்தியர் உடற்குறை தலைக்குறை - அசுரர்களுடைய தலையற்ற உடலும், உடலிலிருந்து அற்ற தலையும். அவை உடலிலிருந்து பிரிந்து சென்ற உயிரைத் தேடிச் செல்வனபோல மேலே செல்ல. மாசெல் என - பெரிய இடியைப்போல.

(3) கடற்குட்டம்: நான்மணிக். 18. வடவாமுகம் - வடவைத்தீ; மயிலின் கண்ணிலிருந்து தோன்றுவது.

(4) தோகை வாம்பரி - மயிலாகிய தாவும் குதிரையை,

445. நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன்றுவான்
நிமிருங் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொலெனக்
கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா
மெய்வைத்த காதன்மை யரமகளிர் பேராய
வெள்ளந் திளைத்தாடியோர்
மென்னடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்க ளுடனுலாவும்
தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (ரு)

446. பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கடாவும்
பழனங்க ளோவத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரோடும்

---

445. இச்செய்யுளில் முருகக்கடவுள் தெய்வயானையம்மையை மணந்த சிறப்புக் கூறப்படும்.

(அடி, 1 - 2) நெற்பயிரின் தன்மை. ஐராவதம் தன்பிடியின் பசியைத் தீர்ப்பதற்காக இவ்வூர் வயலிற் றோன்றிய நெற்கதிரைக் கரும்பென்று நினைத்து வளைத்தது.

நெய் வைத்தவென்றது கூந்தலென்னும் பொதுமைபற்றிக் கூறியது. நாற்கோட்டு நிகளத் தடங்குன்று - ஐராவதம்; நிகளம் - கால்தளை. பாகுபடு கன்னல், நெட்டிலைக் கன்னலென்க; பாகு - வெல்லப்பாகு. ஈண்டுள்ள நெற்கதிர் வானுலகளவும் வளர்தலின் அதன்பால் ஐராவதம் கைவைத்தது.

அக்கதிர் வளைந்து குதிரைமுகத்தைப் போன்ற தோற்றத்தை உண்டாக்கியது; "கதிர்ச் சாலி, சூடுறுப் புண்ட வெனக்கழுத் தறுப்புண்ட துரகம்" (கம்ப. கரன்வதைப்.149.)

446. சோணாடு மன்மதனுக்குரிய படைவீடு முதலியவற்றை உடையதாயினும் மருதத்திணைக்குரிய இந்திரனால் ஆளப்படுவதென்பது கூறப்படும்.

(அடி, 1) காமன் கொடிப்படை - காமனது கொடியையுடைய படையாகிய மகளிர். பழனங்கள் - வயல்கள். காமனுக்குரிய அம்பாகிய தாமரை முதலியன வளர்தலின், அவை அத்திரசாலையாயின. கால்தேர் - தென்றற் காற்றாகிய தேர்.

கொற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோறுடை சேணுடு
குங்குமங் கொட்டுதிண் டோட்
பொற்றடங் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலையல்குன் மாக்கடலு மேந்தியோர்
புனத்தின்கண் மிகநுடங்கும்
சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (கூ)

447. கோல்பாய் பசும்புண் ணசும்புகும் பத்தடங்
குன்றுகவுண் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்
பால்பாய் பெருக்கா றுவட்டெழுத றன்றுணைப்
பாவைய ரொடுங்குறுகுமப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தொறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து

---

(2.) கங்குலாகிய கடாயானை; சோலை, வெயில் நுழைதற் கியலாத படி செறிந்து இருளுடையதா யிருத்தலின் அதனைக் கங்குற் கடாயானை கட்டுங் கூடமென்றார். மருதக் கோமகன் - மருதநிலக் கடவுளாகிய இந்திரன்; மருதத்திணையாகிய தெய்வமெனினும் ஆம். சேணுடு தோள்.

(3) கொங்கைப் பொருப்பும் கூந்தற்காடும்: 702. புனம் - தினைக் கொல்லை.

(4) கொடி - வள்ளி நாயகி.

திண்டோளாகிய தடங்குன்றிற் (3) கொடிபடர நின்றவன் (4) என்க. குன்றிற் கொடி படரவென்றது ஒரு நயம்.

447. (அடி, 1-2) யானையின் மதநீரும் தேனும் பாலும் கலந்து ஓடும் பெருக்குக்குக் கங்கை, யமுனை, சரசுவதியாகிய திரிவேணி சங்கமம் உவமை.

கும்பத் தடங்குன்று - யானை. நெட்டருவியென்றது மதநீர்ப் பெருக்கை. இது கரிய நிறமுடையதாதலின் கரிய நீரையுடைய யமுனையைப் போன்றது; "கருங்கட மூன்றுகு நால்வாய்க் கரி" (திருச்சிற்) தேனருவி செந்நிறமுடைமையின் சோணைநதியை ஒத்தது. மேதிப்பால் - எருமையின்பால். உவட்டெழுதல் - பெருகுதல். பால் ஆறு கங்கையை ஒத்தது. தன் துணைப் பாவையர் - யமுனையும் சோணையும்; தன்னென்றது கங்காநதியை. (பி - ம்) 'தொறுந்திக்குப்'

வேல்பாய் நெடுங்கட் கடற்றானை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தென வெடுத்தெறியும்
வெண்டிரை கிழித்துவெடிபோம்
சேல்பாய் தடம்பணை யுடுத்தகா விரிநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (எ)

448. மீத்தந்த மாகத்து மேகத்தி னோடுமுடு
மீனிரியல் போகவுகளும்
வெடிவாளை மதியக டுடைத்தூற் றுதெள்ளமுத
வெள்ளருவி யாற்பசுந்தண்
காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி யாயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்
பூத்தந்த கற்பகக் காட்டினை யுழக்கிவிரி
பொற்றா தெழுப்பிமற்றப்
பூந்துகட் படலத்தி னற்றெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செயும்
தேத்தந்த தண்பணையு டுத்ததிம் புனனாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (அ)

---

(3.) நெடுங்கட் கடற்றானை - நெடிய கண்ணையுடைய மகளிராலாகிய கடல்போன்ற படை. ஒருவன் - காமன். வெடிபோம் - துள்ளும். சேல்மீன் மன்மதனது கயற்கொடிக்கு உவமை.

448. வாளைமீனின் செயல் கூறப்படும்.

(அடி, 1.) மீத்தந்த மாகத்து - மேலேயுள்ள வானத்தில் இருக்கும். இரியல்போக - கெட்டு நீங்க. வாளை ; எழுவாய்.

(1-2) மதியிலிருந்து வீழும் அமுததாரையால் காவிரிநீர் வெண்ணிறம் பெற்றுக் கங்கைபோலாயிற்று. காத்தந்த சண்பகப்பூ வேரி மாரிசெய் - சோலையிலுள்ள தரப்பெற்ற சண்பகப்பூவின் தேன் மழைபோலச் சொரியப் பெற்ற. ஆயிரமுகக் கங்கை : கங்கைக்கு ஆயிரமுகம் இருப்பதாகக் கூறுதல் மரபு; 'கங்கை, துறைகொளாயிர முகமுஞ் சுழல" (கல்லாடம்);" ஆயிர முகத்துநதி பாலனும்" (வேளைக்காரன் வகுப்பு.)

449. கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலாற்
காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த

ஒள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
உதைந்தாட வாடுந்தொறும்
ஒண்கமு கொடுந்துணர்ப் பைங்கற் பகக்காடும்
ஒக்கவசை யத்தலையசைத்

தள்ளிலை யலங்கல்வே லெம்பிரா னைப்பாடி
ஆடுகின் றுரெனத்தாம்
அலர்மாரி பொழிவபோ லங்கற் பகத்தெய்வம்
அம்பொன்மலர் மாரிதூர்க்கும்

தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (௯)

450. வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவ னிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் துந்திரு
மடித்தலத் தினிலிருத்திப்

---

449. உயர்ந்த கமுகிலே படர்ந்த பூங்கொடிகள் அயலிலுள்ள கற்பக மரத்திலும் படர்ந்திருத்தலின், மகளிர் அக்கமுகில் ஊசலைப் பிணித்து ஆடும் பொழுது அக்கமுகு அசையவே அதனால் கற்பகமும் அசைந்து மலரை உகுத்தல் அம்மகளிர் முருகக்கடவுளைப் பாடியாடுவதற்கு மகிழ்ந்து மலர் மாரி பெய்வதுபோன்று இருந்தது.

(அடி, 1.) காமன் பெருஞ்செல்வம் அன்னவர்கள் - மகளிர். யாத்த - கட்டிய.

(2.) துணர் - பூங்கொத்து.

(3.) அள் இலை - செறிந்த இலை.

450. (அடி, 1.) மணிமுறுவல் - முத்தைப்போன்ற நகை. முத்துண்டும் - முத்தமிட்டும்.

பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரோடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்

தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையனு யகியும்வைத்துச்

சீராட்டி விளையாடு சேனு பதிக்கடவுள்
சிறுதேரு ருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (கo)

---

(2.) கண்மணிப்பாவை - கண்மணியினுள் தோன்றும் பாவை.

(3.) தீராத வினைதீர்த்த தம்பிரான் - புள்ளிருக்கு வேளூர் வைத்திய நாதக் கடவுள் (362.) தையனுயகி - ஸ்ரீ பாலாம்பிகை.

(4.) சேனுபதிக் கடவுள் - தேவசேனுபதியாகிய கடவுளே.

# சிதம்பர மும்மணிக்கோவை



## காப்பு

451. செம்மணிக்கோ வைக்கதிர்சூழ் தில்லைச்சிற் றம்பலவன்
மும்மணிக்கோ வைக்குவந்து முன்னிற்கும் - எம்மணிக்கோ
அஞ்சக் கரக்கற்ப கத்தா ரிறைஞ்சுமஞ்சு
கஞ்சக் கரக்கற் பகம். (க)

(நேரிசையாசிரியப்பா)

452. பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்
ஏனைப் புவனமு மெண்ணீங் குயிரும்

---

451. செம்மணிக் கோவைக் கதிர் சூழ் - செம்மையாகிய மாணிக்க மாலைகளின் ஒளி சூழ்கின்ற; இது தில்லைச் சிற்றம்பலத்திற்கு அடை. மும்மணிக்கோவை - மூன்று வேறு மணிகள் மிடைந்த கோவையைப்போல மூன்று வேறு செய்யுட்களால் அந்தாதித்தொடையமையப் பாடப்படும் பிரபந்தம்; "முத்தின ருத்தியர் மும்மணிக் காசினர்", "முத்த வள்ளியொடு மும்மணி சுடர", "மும்மணிக் காசும் பன்மணித் தாலியும்" (பெருங். க. 34 : 121, 203 ; ரு. 9 : 49) என்பவற்றில் மும்மணியமைந்த ஓராபரணம் கூறப்படுதல் காண்க. அம் மும்மணியாவன : புருடராகம், வைடூரியம், கோமேதகமென்பன ; "மும்மணியா வனசொன்ன புருட ராகம், உறுவயிடூ ரியங்கோமே தகமே யென்றுங் கோதுவர்" (திருவாஙி. உசு : 22.) மும்மணிக் கோவைக்கு - மும்மணிக் கோவையைப் பாடுவதற்கு. எம் மணிக்கோ - நீல மணி நிறமுடைய எம்முடைய திருமால்; கவுத்துவ மணியையுடைய எம் திருமாலெனலுமாம். அஞ்சம் கரன் - அன்னக் கொடியைக் கையிலேயுடைய பிரமதேவர் ; அஞ்சம்=அன்னம். கற்பகத்தான்-இந்திரன். மணிக்கோ, அஞ்சக்கரன், கற்பகத்தானாகிய இவர்கள் இறைஞ்சுமென்க ; அஞ்சக்கரக் கற்பகத்தாரென்றது கபிலபரணரென்பதுபோல நின்றது. அஞ்சு கஞ்சக் கரக் கற்பகம் - தாமரை மலரைப்போன்ற ஐந்து திருக்கரங்களையுடைய கற்பக விநாயகர். கற்பகம் முன்னிற்குமென்க.

452. இதில் முதற் பன்னிரண்டடிகளில் நடராசமூர்த்தி ஐவகைத் தொழில்களையும் நிகழ்த்துமாறு கூறப்படும்.

(அடி, 1-4.) புத்தேள் வைப்பு - தேவலோகம். வளாகம் - பரப்பு. (பி-ம்.) ஏனைய புவனமும்' எண் நீங்கு உயிரும் - எண்ணற்ற உயிர்த்தொகுதிக

தானே வகுத்ததுன் றமருகக் கரமே
டு தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் னமைத்தபொற் கரமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே
நட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
௧0 றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழி லைந்துநின் மெய்த்தொழி லாகப்
பாலுண் குழவி பசுங்குடர் பொறுதென

---

ளும். தானே - பிறருதவியின்றித் தானாகவே. வகுத்தது - சிருட்டி செய்தது. தமருகக்கரம் - உடுக்கையைத் தாங்கிய திருக்கரம். உயிரென்றது இங்கே ஆகுபெயரால் அதற்கிடமாகிய உடம்பைக் குறித்தது, படைக்கப்படுவது உடம்பேயாதலின்; "உயிர்முன் புடைப்ப" (சிலப். கரு : 86) என்பதனை யும் அதற்கு அரும்பதவுரைகாரர், 'உயிரென்றது ஆகுபெயரான் உடம்பை' என்றெழுதிய உரையையும் காண்க.

(5-6.) அமைத்த பொற்கரம் - அபயத்திருக்கை. (பி - ம்.) 'அமைத்த கைத் தலமே'

(7-8) அடங்கலும் - முற்றும். மாற்றுவது - சங்காரம் செய்வது. அழல் வைத்ததோர் கரம் - அக்கினியை ஏந்திய திருக்கரம். (பி - ம்.) 'அழலமைத்த தோர் கரமே'

(9-10.) இவ்வடிகளில் திரோபவம் (மறைப்பு) கூறப்படும். ஊட்டுவது - நுகரச்செய்வது.

(11-2.) குஞ்சித பதம் - வளைந்த திருவடி; என்றது தூக்கிய பாதத்தை. அத்திருவடி அநுக்கிரகத் தொழில் புரிவது.

(1-13.) நடராசப்பெருமான் தம் திருநடனக் கோலத்தில் ஐந்தொழில் நடத்தும் குறிப்புடையவரென்பது இவ்வடிகளிற் கூறப்பட்டது; "தோற் றந் துடியதனிற் றோன்றுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமாய், ஊன்று மலர்ப்பதத்தே வுற்ற திரோதமுத்தி, நான்ற மலர்ப் பதத்தே நாடு" (உண்மை விளக்கம்)

(14-21.) குழந்தையின் குடர் மருந்தைச் சீரணிக்கும் சக்தியற்ற தென்று தான் உண்டு அதன் பயனைப் பாலின்வழியே அக் குழந்தை பெறும்படி செய்யும் தாயைப்போல, அம்பிகை நடராசமூர்த்தியின் திருநட னத்தைத் தான் தரிசித்து அதன் பயனை உயிர்கள் நுகரவைப்பவள்,

கடு நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட வையரித் தடங்கட்
டிருமாண் சாயற் றிருந்திழை காணச்
உ० சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்தநின் னமுதவாக் களித்த
நல்லற நூல்களிற் சொல்லறம் பலசில
இல்லறந் துறவற மெனச்சிறந் தனவே
அந்நிலை யிரண்டினுண் முன்னது கிளப்பிற்
உரு கற்றநூற் றுறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ
டன்பு மருளுந் தாங்கி யின்சொலின்
விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியு மாற்றி யிவ்வகை
ங० நல்லற நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவா னறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே

---

பசுங்குடர் - இளங்குடல். நோயுண் மருந்து - நோயை அழிக்கும் மருந்தை. அருள் சூற்கொண்ட கண் : 24-8. சாயல் - மென்மை. திருந்திழை - சிவகாமவல்லி. அற்புதக் கூத்த - ஞானநடனம் புரிவோய்.

குழந்தையின் பொருட்டுத் தாய் மருந்து உட்கொள்ளல்: "நீற்றினை யணிந்ததுவெ னின்னிறைவ னென்றே, சாற்றினை புயிர்க்கிடர் தணிப்பதெனவெண்ணுய், தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறு மங்நோய், மாற்றும்வகை யன்னையருந்திய மருந்தாம்" (திருவாதவூரர். புத்தரை வாதில் வென்ற. 76); "இளங்குழவிப் பிணிக்கின்ற தாய்மருந்து நுகர்வதுபோ லிருளின் மாண்ட, களங்குலவு மலமுயிர்கட் கொழியவரு ணடங்காணுங் கடன்மீக் கொண்டு, வளங்குலவு தனதுபெருங் கற்பமொரு கணவரிறை மாண்புந் தோன்ற, விளங்குமிர ணியமன்றி னின்றருளு மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்" (திருவானைக்காப். கடவுள். 7); 'புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற் போலத் தொழுதெழுவார் வினைக்குத் தான் நீறணிந்தா னென்பாரு முளர்' (திருச்சிற். 118, பேர்.)

(22.) சில - இரண்டு (105.)

(24-33.) இல்லறத்தின் இலக்கணம்.

முன்னது - இல்லறம். அன்பு தொடர்புடையாரிடத்துச் செல்வது. அருள் யாவர்மாட்டுஞ் செல்வது. இவ்விரண்டும் இல்லறத்தாருக்குரிய இலக்

மற்றையது கிளப்பின் மனையற நிரப்பி
௩௫ முற்றுணர் கேள்வியின் முதுக்குறை வெய்திப்
பொருளு மின்பமு மொரீஇ யருளொடு
பொறையு மாற்றலு நிறைபே ரொழுக்கமும்
வாய்மையுந் தவமுந் தூய்மையுந் தழீஇ
ஓரறி வுயிர்க்கு முறுதுய ரோம்பிக்
௪௰ காலோய் நடைய ளுகித் தோலுடுத்
தென்பெழு மியாக்கையன் றுன்புறத் துளங்காது
வரையுங் கானு மெய்திச் சருகொடு
கானீ ரருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீ ரழுவத் தழுங்கி வேனிலில்

---

கணங்களென்பது, "அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து" (குறுந். உக: 1) என்பதனாலும் அதன் உரை முதலியவற்றாலும் விளங்கும். ஐவகை வேள்வி: பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானிடம் என்னும் ஐந்துவகை வேள்விகள். வரையாநாளில் - "உச்சியம் போழ்தோ டிடையாம மீரந்தி, மிக்க விருதேவர் நாளோ டுவாத்திதிநாள், அட்டமியு மேனைப் பிறந்தநா ளிவ்வனைத்தும், ஒட்டாருடனுறைவின் கண்" (ஆசாரக்கோவை, 43) என்று விலக்கப்பட்ட நாட்கள் அல்லாத நாட்களில். முன்னது (24) பெற்றித்து (33) என்க. அன்று, ஏ : அசை நிலைகள்.

(34-46.) துறவறத்தின் இலக்கணம் கூறப்படும்.

(34.) மற்றையது - துறவறம். "ஒழுக்கத்து நீத்தார்" (குறள், 21) என்பவாதலின் 'மனையற நிரப்பி' என்றார்.

(35.) முதுக்குறைவு - பேரறிவு.

(37.) ஆற்றல் - புலனைந்தின்வழிச் செல்லாத மனவலி.

(39.) ஓரறிவுயிர் - மரஞ்செடிகொடிகள்.

(40.) தோலுடுத்து: "தோலுடீஇ" (பு. வெ. 168); "தோலு டுடுத்தல்" (தொல். புறத். 20, ந. மேற்.)

(41.) என்பெழுமியாக்கை: "என்பியக்கங் கண்டும் புறந்தரார்"(293); "என்பெழுந் தியங்கும் யாக்கையர்" (முருகு. 130.)

(42-3.) கான் - காடு. ஊரடையாமை தவத்தினர் இயல்பாதலின், 'வரையுங் கானு மெய்தி' என்றார்; 'கடலுங் காடும் மலையும் முதலியவற்றில் நிற்றலும்' (தொல். புறத். 20, ந.) கால் நீர் அருந்தி - காற்றையும் நீரையும் உண்டு,

சரு ஐவகை யழலின் மெய்வருந்த வருந்தி
இவ்வகை யொழுகு மியல்பிற் றன்றே, அதனால்
இந்நிலை யிரண்டு மெம்மனோர்க் கியலா
நன்னிலை யாகலி னந்நிலை நிற்றற்
குரனு மாற்றலு மின்றி வெருவந்
ருo தெளிதினிற் றமியனே னரியது பெறுதற்
குளதோ நெறியொன் றுணர்த்துமி னீரென
முத்தலந் தலங்களுண் முத்தித் தலமா
இத்தல முடைத்தென விசைத்தனர் சிலரே
அறிஞராங் குரைத்த உறுதிக் கட்டுரை
ருரு உலகியல் வழக்கும் புலனெறி வழக்குமென்
றிருவகை வழக்கினு நிலைபெற் றன்றே, அவற்றுள்

---

(43-6.) பனிக்காலத்தில் நீர்ப்பரப்பிலிருந்து குளிரைப் பொறுத்தலும் வேனிலில் அழலில் நின்று வெப்பத்தைப் பொறுத்தலும் தவமுடையோர் செயல்கள். ஐவகையழல் - பஞ்சாக்கினி.

(42-6.) இவ்வடிகளிற் கூறப்பட்ட தவத்திற்குரிய செயல்களிற் சில சில பின்வருவனவற்றிலுங் காணப்படும்; "காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்காலுகர்ந்து நெடுங்காலமைந்து, தீயோடு நின்று தவஞ்செய்யவேண்டா" (**திவ். பெரியதிரு.**); 'அவற்றுள் தவஞ்செய்வார்க்கு உரியன: ஊணசையின்மை, நீர் நசையின்மை, வெப்பம் பொறுத்தல், தட்பம் பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரையறுத்தல், இடையிட்டு மொழிதல், வாய்வாளாமை என எட்டும்; இவற்றிற்கு, உணவினும் நீரினும் சென்ற மனத்தைத் தடுத்தலும் ஐந்தீநாப்பணும் நீர்நிலையினும் நிற்றலும்......பொருளென்றுணர்க' (**தொல்.** புறத். 20, **ந.**); "மாறுது சருகுதின்று சருகு பட்டீர் வாயுநுகர்ந்தேவாயுமௌன மானீர், ஆறுத தீயினிற்பிர் தீய ரேனும் மருந்தவமே தவம்" (**அழகர்கலம். 14.**)

(49 ) உரன் - மனவலி; அறிவுமாம். ஆற்றல் - உடல்வன்மை.

(51.) என - என்று அறிஞரைக் கேட்க.

(52-3.) தலங்களுள் முத்தித்தலமாக முத்தலங்களை இத்தலம் உடைத்தென்க. முத்தலமென்றது பின்னே கூறும் ஆரூர், காசி, தில்லை யென்பவற்றை; "காசியி லிறந்துங் கமலையிற் பிறந்தும், தேசமர் தில்லையுட் டிருநடங் கண்டும்" (**அருணைக்கலம்.** க.) இத்தலம் - இந்தப் பூமி.

(55.) உலகியல் வழக்கும் புலனெறி வழக்கும்: **தொல்.** அகத். 53; இவை உலகவழக்கு, செய்யுள்வழக்கெனவும் கூறப்படும்.

(56.) நிலைபெற்றன்று - நிலைபெற்றது.

ஆரூர்ப் பிறந்த னேர்படி னல்லது
செயற்கையி னெய்து மியற்கைய தன்றே, அதாஅன்று
காசியி லிறந்த ஞேக்கித் தேசம்விட்
௬௦ டறந்தலைத் தந்த வரும்பொரு டாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
கழிபெருங் கான நீங்கி வழியிடைத்
தீப்பசிக் கிரங்கி நோய்ப்பனிக் கொதுங்கிப்
பல்பிணிக் குடைந்து செல்லுங் காலத்
௬௫ திடைச்சுரத் திறவா தின்னுயிர் தாங்கிக்
கிடைத்தன னாயி னடுத்தநல் லொழுக்கமோ
டுடல்விடு காறுமத் தடநகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ வரிதே, அதனாற்
சிற்றுயிர்க் கிரங்கும் பெரும்பற்றப் புலியூர்
௭௦ உற்றநின் றிருக்கூத் தொருகா னோக்கிப்
பரகதி பெறுவான் றிருமுன் பெய்தப்
பெற்றன னளியனேன் பற்றில னாயினும்
அன்பிலை கொடியையென் றருளா யல்லை
நின்பதம் வழங்குதி நிமலவென் றனக்கே
௭௫ மருந்துண் வேட்கையன் மனமகிழ்ந் துண்ணினும்
அருந்துழி யொருவ னருவருப் புறீஇத்
தன்முகஞ் சுளித்துத் தலைநடுக் குற்றுக்
கண்ணீர் வீழ்த்துக் கலுழ்ந்தனன் மாந்தினும்
வாய்ப்புகு மாயினம் மருந்திரு வருக்கும்
௮௦ தீப்பிணி மாற்றுத றிண்ணமே யன்றி

---

(57-8.) ஆரூரிற் பிறத்தலின் அருமையை உணர்த்துகின்றார். நேர்படினல்லது - நல்லூழினால் இயல்பாகவே அமைந்தாலன்றி.

(59-68.) காசியில் இறத்தலின் அருமையைக் கூறுகின்றார். அறந்தலைத் தந்த - அறம் தந்த : தலை: அசைநிலை. நோய்ப்பனிக்கு - துன்பத்தைத்தரும் குளிருக்கு. கிடைத்தனன் ஆயின் - ஒருவன் அணுகினனாயின். அத்தடநகர் - காசியில். வைகி முடிவது - தங்கி இறத்தல். கடைபோக - முற்றுவண்ணம்.

(69-72.) தில்லையில் தரிசனம் செய்த மாத்திரத்தில் முத்தி யென்பது பண்டை நூற்றுணிபு.

(70-71.) ஒருகால் நோக்கியமாத்திரத்தே பரகதியடைதல் கூடு மென்னுங் கருத்தைப் பின்னுங் கூறுவர் (480.)

(73.) அன்பிலை கொடியை: தொல். கற்பு. 17.

(75-80.) வேட்கையனாகி உண்ணினும். இருவருக்கும் - விருப்போடு உண்டவனுக்கும் அருவருப்போடு உண்டவனுக்கும். திண்ணம் - உறுதி.

நொதுமலும் பகையும் போக்கி யொருபொருள்
விழுத்தகு கேண்மையோர்க் குதவல்
வழக்குமன் றைய மன்றுடை யோர்க்கே. (உ)

(நேரிசைவெண்பா)

453. மன்றம் பொகுட்டா மதிலிதழா மாடங்கள்
துன்றும் புயல்கள் சுரும்பராப் - பொன்றங்கும்
நற்புண்ட ரீகமே யொக்கு நடராசன்
பொற்புண்ட ரீக புரம். (ங)

(கட்டளைக்கலித்துறை)

454. புரமொன் றிரண்டும் புகையழ லுண்ணப் புவனமுண்ணும்
சரமொன் றகிலஞ் சலிக்கவெய் தோய்சலி யாநடஞ்செய்
வரமொன் றிரண்டு மலர்த்தாளு மூன்றிற்றன் மாமகுடம்
பரமொன்று மென்றுகொல் லோகொண்டவாவப் பதஞ்சலியே.

---

(அடி, 81-3) நொதுமல் - அயல். வழக்கு - ஆன்றோர் மரபு. மன்றுடையோரென்றது அறங்கூறவையமுடையோரென்றும் நடனசபையை உடையோரென்றும் இருபொருள்பட நின்றது.

(அடி, 69-83.) 'அடியேன் நின் திருக்கூத்தை ஒருகால் கும்பிட்ட மாத்திரத்தால் பரகதி பெறும் உரிமையுடையேனானேன். அறிந்தும் அறியாமலும் உண்பவர் இருவருக்கும் மருந்து பயனைத்தருவதுபோல, கூத்தின் தரிசனம் அடியேன் குறைபுடையேனாயினும் எனக்கு நன்மையைத் தருதல் வேண்டும். அன்றியும் மன்றுடையோனாகிய நீ ஒருபாற் கோடலின்றி அருளுதல் நின் கடன்' என்பது இவ்வடிகளின் கருத்து.

453. சிதம்பரத்திற்குத் தாமரை உவமிக்கப்படும்.

மன்றம் - பொன்னம்பலம். பொகுட்டு - உட்கொட்டை. மாடங்களில் பொருந்தும் மேகங்கள் வண்டாக (549.) பொன் -திருமகள். புண்டரீகபுரம்: சிதம்பரத்தின் திருநாமங்களுள் ஒன்று. பொன்னம்பலத்தைத் தாமரையோடு உவமிப்பர் (495.)

454. புரம் ஒன்று இரண்டும் - மூன்றுபுரங்களையும்; ஒன்றும் இரண்டுமென்று உம்மையை முன்னுங் கூட்டுக. புவனமுண்ணும் சரம் - திருமால். சலிக்க - நடுங்க. இரண்டு மலர்த்தாளும் ஊன்றின் - நிற்கும் திருக்கோலத்தோடு இரண்டு திருவடிகளையும் சிவபெருமான் ஊன்றினால். பதஞ்சலி முனிவர் ஆதிசேடனாதலின், இரண்டுதாளும் ஊன்றுதலினால் பாரம் பூமியில் உறைத்துப் பூமியைச் சுமக்கும் தமக்குத் துன்பஞ் செய்யுமென்று கருதியோ ஒரு காலைமட்டும் ஊன்றும் நடன தரிசனத்தை அம் முனிவர் விரும்பினார்? பரம் - பாரம். கொண்டவா - கொண்டவாறு. பதஞ்சலி வரமொன்று கொண்டவாறு பரம் ஒன்றும் என்றோ?

(நேரிசையாசிரியப்பா)

455. சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்
பலநா ளோதிக் கலைமுற்று நிரம்பி
அளவையி னளந்துகொண் டுத்தியிற் றெளிந்து
செம்பொரு ளிதுவெனத் தேறி யம்பலத்
௫ தாரா வன்பினோ டகனமர்ந் திறைஞ்சிப்
பேரா வியற்கை பெற்றனர் யானே
சரியையிற் சரியாது கிரியையிற் றளரா
தியோகத் துணங்கா தொண்பொரு டூக்காது
வறிதே நின்றிரு மன்ற நோக்கிப்
௧௦ பிறவா நன்னெறி பெற்றன னன்றே

---

455. (அடி, 1.) சலியாது - தளராமல். தவப்பெருந் தொண்டர் - தவத்தையுடைய பெரிய தொண்டர்கள்.

(3-5.) அளவை - பிரமாணம்; உத்தி - யுக்தி; "ஐயந் திரிபின் றளந் துத்தி யிற்றெளிந்து, மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்" (308) என்றார் முன்னும். 'அளவைகளாவன: பொறிகளாற் காணுங் காட்சியும், குறிகளா னுய்த்துணரும் அனுமானமும், கருத்தாமொழியாகிய ஆகமமு மென மூன்று. ஒப்புப்பற்றியுணரும் உவமையும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தியும்,' உண்மைக்கு மாறாய இன்மையு மென இவற்றைக் கூட்டி ஆறென்பாருமுளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்றென்றலே கருத்து. பொருந்துமாறுவது இது கூடும் இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது; இதனை வட நூலார் யுக்தியென்ப' (குறள், 242) என்று பரிமேலழகர் எழுதிய உரைப் பகுதி இங்கே பயன்படும். செம்பொருள் - உண்மைப்பொருள் (458.) அம்ப லத்து - திருச்சிற்றம்பலத்தின்கண். இறைஞ்சி - நின்னை வணங்கி.

(6.) பேரா இயற்கை - முத்தி (573; குறள், 370.)

தவப்பெருந் தொண்டர் (1) பெற்றனர் (6.)

(7-8.) சரியாது - நடவாமல். ஒண்பொருள் தூக்காது - ஞான நூல் களை ஆராய்ந்தறியாமல்; என்றது ஞானநெறியில் நில்லாமையைக் குறித்த படி.

(9.) வறிதே - யாதொரு கருத்தும் இன்றி. மன்றம் நோக்கியென்றது நடராசப்பெருமான் திருவடியைத் தரிசித்து என்றபடி.

(1-10.) தவத்தையுடைய தொண்டர்கள் ஓதுதல் முதலிய பல பெரு முயற்சிகளைச் செய்து வீடுபெற்றனர்; அடியேனோ அம்பலதரிசன மாத் திரத்தில் பிறவா நெறி பெற்றேன்.

முட்புறம் பொதிந்த நெட்டிலைக் கைதை
சுரிமுகப் பணிலமொடு சூலுளைந் துமிழ்ந்த
தரளம் வெண்மடற் றுங்குவ தம்ம
கருங்கழிக் கரையில் வெண்பொடி பூசி
கரு இருந்தவ முஞற்றியு மியாம்பெறற் கரிய
செஞ்சடைக் கிடந்த வெண்மதிக் கடவுள்
வருகவென் றழைத்துப் பெருநயப் பெய்திக்
கண்ணீர் வாரக் கலந்துடன் றழீஇ
உண்ணென வெண்சோ றேந்தித் தண்ணென
உ௦ உடுக்கணத் தொடுமவ் வுடுபதிக் கடவுளை
மடற்றலைத் தாங்கி வைகுவது கடுக்கும்
நெய்தலொடு தழீஇய மருத வேலித்
தெய்வப் புலியூர் வைதிகக் கூத்த
பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையும்
உரு மன்னுமா லிமய வரைப்புறஞ் சேர்ந்துழி
இருநிறப் பறவைக்கு மொருநிற னல்லதை
நிறம்வேறு தெரிப்ப துண்டோ விறைவநின்

---

(அடி, 11-21.) தாழையின் வருணனை.

(11.) கைதை - தாழை.

(12-3.) சுரிமுகப்பணிலம் - சுழிந்த முகத்தையுடைய சங்கு. சூல் உளைந்து உமிழ்ந்த - அச் சங்கு கருப்பம் முதிர்ந்து ஈன்ற. சங்கையும் முத்தையும் ஒருங்கே தாங்குதல்.

(14-6.) வெண்பொடி - தாழம்பூவிலுள்ள தாது; திருநீறென்பது வேறு பொருள். யாம் பெறுதற்கரிய செஞ்சடையென்றது தாழை மலரின் உட்கோள்; என்றது சிவபிரான் அம்மலரை அணியாமையைக் குறித்தது. வெண்மதிக் கடவுள் : விளி.

(17-8.) நயப்பு - விருப்பம். கண்ணீர் வார - தேனாகிய நீர் ஒழுக; கண்ணிலிருந்து அன்பினால் நீர்பெருகவென்பது வேறொரு பொருள்; கண்ணீர் : சிலேடை.

(19.) வெண்சோறென்றது தாழம்பூவிலுள்ள ஒருவகைப் பொருளை; வழக்கு; வெள்ளி அன்னமென்பது வேறு பொருள்; "கூன் கைதை, சோறு கால்வன" (திருவிளை. நாட்டுப். 41.)

(19-20.) (பி - ம்.) 'தண்ணெ, னுடுக்கணத்தொடும்'

உடுக்கணம் - நட்சத்திரக் கூட்டம். உடுபதிக் கடவுளை - சந்திரனாகிய தெய்வத்தை.

(12-21.) சங்குக்குச் சந்திரனும் முத்துக்களுக்கு நட்சத்திரங்களும் உவமைகள்.

(24-7.) மேருவைச் சேர்ந்த பொன்னிறமுள்ள புறவும் கருநிறக் காக்கையும் பொன்னிறத்தையே அடையும்; "மாயநன் மாமணி கண்டன் வளர்

இன்னருள் பழுத்த சந்நிதி சேர்ந்துழி
இருவேம் பெற்றது மொருபே றாகலின்
௩௦ வேற்றுமை யுளதோ வில்லை
ஆற்றல்சால் சிறப்பி னனையரோ டெனக்கே. (ரு)

(நேரிசைவெண்பா)

456 ஓட்டுவிக்கக் கூட்டினைவிட் டோடும் பொறியரவைத்
தாட்டுவிக்குஞ் சித்தர்நீ ரானக்காற் - கூட்டமிட்டு
மன்றாடு மும்மையொரு மாசுணநின் றாட்டுவிக்க
நின்றாடு கின்றதென்கொ லீர். (சு)

(கட்டளைக்கலித்துறை)

457. நீருண்ட புண்டரி கத்துணைத் தாணிழற் கீழ்ப்பொலியும்
சீருண் டடித்தொண்டு செய்யா வெனக்குஞ்சிற் றம்பலத்தெம்
காருண்ட கண்டனைக் கண்டன னாலக் கடலமுதம்
ஆருண் டனர்மற் றவரெவ ரேனு மமரர்களே. (எ)

---

சடை யாற்கடிமை, யாயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லு டைத்தே, காய்சின வானை வளருங் கனக மலையருகே, போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே" (பொன்வண்ணத். 100); "மாலி மயப், பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங் காக்கையும் பொன்னிறமா, யிருக்கும்" (யா. கா. அவையடக்கம்.)

(அடி, 29-31.) இருவேம் - தவப்பெருந்தொண்டரும் அடியேனும். தவப் பெருந் தொண்டர் பன்னாள் முயன்று தவஞ் செய்தமைக்கும், யான் சிறிதும் முயலாது தரிசனமாத்திரம் செய்தமைக்கும் பயனில் வாசியில்லை யென்ற வாறு.

456. ஓட்டுவிக்க - மனத்தைப் பல வழிகளில் ஓடச்செய்ய. கூடு - தேகம். பொறியரவு -இந்திரியங்களாகிய பாம்புகள் (சீவக. 375), புள்ளிகளை யுடைய பாம்பு; சிலேடை. மன்றில் ஆடும் ஒரு மாசுணமென்றது பதஞ்ச லியை. அவர்பொருட்டுச் சிவபெருமான் நடனம் புரிந்தருளினரென்பது தல வரலாறாதலின், 'ஒருமாசுண நின்றாட்டுவிக்க' என்றார் (471); "பதஞ்சலிக் கருளிய பரம நாடக" (திருவா.) பொறியரவு: 469. ஐந்துபாம்புகளை ஆட்டு விக்கவல்ல சித்தராகிய நீர் ஒரு பாம்பு நின்று ஆட்டுவிக்க ஆடுவது என்ன வியப்பென்றபடி. பாம்பாட்டிச் சித்தரெனச் சித்தர்களில் ஒருவகையார் உண்டு.

457. நீருண்டவென்றது புண்டரிகத்துக்கு அடை. புண்டரிகம் - இங்கே, செந்தாமரை; தக்க. 22, உரையைப்பார்க்க. தாணிழற்கீழ்ப் பொலி யும் சீராவது வீடுபெறுதல், திருத்தாளே வீடாதலின் (முருகு. 62-3, ந.) எனக் கும் சீருண்டு; உம்மை இழிவுசிறப்பு. அக்கடலமுதம்: அகரம் பண்டறி சுட்டு; உலகறிசுட்டுமாம். அமுதத்தை ஆருண்டாலும் அவர்கள் இறவாமை நீங்கி அமரராதல்போல இறைவன் தரிசனத்தை யார் பெறினும் அவர் வீடு பெறுவரென்றவாறு.

(நேரிசையாசிரியப்பா)

458. அமரர் கோமக னரும்பெறல் வாழ்க்கையும்
இருநிதிக் கிழவ னொருபெரு வெறுக்கையும்
ஐங்கணைக் கிழவன் றஞ்சா நலனும்
ஒருவழிக் கிடைப்பினும் வெருவந்து கலங்கிக்
௫ கைத்தூண் வாழ்க்கை யுத்தம யோகிகட்
கெத்திறம் வைகினு மிடையூ றின்றே, யானே
வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐயுண் மதுரமு மல்லன பிறவும்
நாச்சுவை யறிய நல்கின மேற்சென்
௧௦ றதுவது வாக வழுந்திப் புதிதுண்டு
கழிபெருங் காம மூழ்கி முழுவதும்
பாவமும் பழியு மேவுவ தல்லது
செம்பொரு டெரிந்து சிற்றறி வொரீஇ
ஐம்புல னடக்கி யறந்தலை நின்று
௧௫ தீநெறி விலக்கி நன்னெறிப் படர்தற்
குரனில் காட்சி யிழுதைய னுதலிற்
பூவாது பழுக்குஞ் சூலடிப் பனசம்
பார்கிழித் தோடிப் பணியுல களந்த

---

458. (அடி, 1 - 6.) உத்தமயோகியர் இலக்கணம்.

அமரர் கோமகன் - இந்திரன். இருநிதிக் கிழவன் - குபேரன்; இருநிதி - சங்கநிதி, பதுமநிதி. ஐங்கணைக் கிழவன் - மன்மதன். நலன் - அழகு. ஒருவழி - ஒருங்கே. வெருவந்து - அஞ்சி. கைத்தூண் வாழ்க்கை - கையிற் பெற்ற உணவை உண்டுவாழும் வாழ்க்கை; கரபாத்திர மென்பர்; "நோன்பியர், கையூணிருக்கை" (நற். ௨௨ : 6-7); "பலர்தங், கைத்தூண் வாழ்க்கை" (மணி. கஅ : 15-6.) வாழ்க்கையையுடைய உத்தம யோகிகள்.

(7-10) வளியுண் புளிப்பு - வாதத்தொடர்புடைய புளிச்சுவை. பித்துண் கைப்பு - பித்தத் தொடர்புடைய கைப்புச் சுவை. ஐயுண் மதுரம் - கபத்தொடர்புடைய இனிப்புச்சுவை; உண்ணுதல் - பொருந்துதல்; 'வாதம் எழும்பிடிற் புளிப்பு நாவிலேறும்'; பித்தம் எழும்பிடிற் கசப்பு நாவிலேறும்; சிலேத்துமம் எழும்பிடில் இனிப்பு நாவிலேறும்' (வைத்திய சார சங்கிரகம், ப. சரு.)

(13) செம்பொருள் - மெய்ஞ்ஞானம். சிற்றறிவு - பசுஞானம்.

(16) உரனில் காட்சி இழுதையன் - வன்மையில்லாத அறிவையுடைய கீழ்மகன்.

(17) சூல் - கருப்பம்; இப் பலா வேரிற் காய்த்துப் பழுப்பது; 56, குறிப்பைப் பார்க்க. பனசம் - பலாமரம்.

(18) பணியுலகு - நாகலோகம்.

வேர்தொறும் வேர்தொறும் வெவ்வேறு பழுத்து
௨௦ முட்புறக் கனிக ளுக்குவ தொட்பமொடு
பதஞ்சலி முனிவனைப் பார்கொளத் தந்த
பிலங்கொளக் கொடுக்கும் பலங்கள்பல நிகர்க்கும்
மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண
வரமொன் றிங்கெனக் கருளல் வேண்டும், அதுவே
௨௫ பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த வொருதுணி யல்லது
பிறிதொன் றுஇடையா தாக வறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடக்கைக்
கிடம்பிறி தில்லை யாக கடும்பசிக்
௩௦ குப்பின் றட்ட புற்கையூ ணல்லது
மற்றோ ருண்டி வாய்விட் டரற்றினும்
ஈகுந ரில்லை யாகநா ளுளும்
ஒழுக்க நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக வித்திறம்
௩௫ உடனீங் களவு முதவிக் கடவுணின்
பெரும்பத மன்றியான் பிறிதொன்
றிரந்தனன் வேண்டினு மீந்திடா ததுவே. (அ)

---

(அடி, 19) வேரிற் பழுக்கும் பலாமரத்தை வேர்ப்பலாவென்று கூறுவர்.

(22.) பிலம் - பாதாளலோகம். பலங்கள் - பழங்கள்.

(17-22) நாகலோகத்தளவும் சென்ற பலாமரத்தின் வேர்கள் பழங்களைத் தாங்குதல், நடராசப் பெருமானது தாண்டவத்துக்குக் காரணராகிய பதஞ்சலிமுனிவரை இவ்வுலகிற்குத் தந்தது கருதி நாகலோகத்திற்கு அவற்றை அப்பலாமரம் வழங்குவது போன்றது.

(25-7). கருந்துணி - அழுக்கடைந்து கரிதாகிய துணி. இசைத்த - தைத்து மூட்டிய. ஒரு துணியென்றது இங்கே கந்தையை; "மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின், ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாக" (சீவக. 2929.) வறுமனை - பாழ்வீடு.

(28-30.) கடைப்புறத் திண்ணை - வாயிற்புறத்துத் திண்ணை. கிடக்கைக்கு - படுப்பதற்கு; "உறங்கப்புறந் திண்ணையுண்டு" (பட்டினத்துப்.) உப்பின்றட்ட புற்கையூண் - உப்பில்லாமற் காய்ச்சிய புல்லரிசிக் கூழ்; "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே" (பழம்பாடல்.)

(35.) உடனீங்களவும் - இறக்கும் வரையிலும். பதமே முத்தியாதலின் அதனை இரந்தார் (638.)

(முடிபு.) ஈந்திடாததுவாகிய (37) வரம் ஒன்று அருளல் வேண்டும் (24.)

(நேரிசைவெண்பா)

459. வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம் - கோதண்டம்
ஒற்றைமா மேரு வுமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம். (கூ)

(கட்டளைக்கலித்துறை)

460. பற்றம் பலமிதித் துத்துதித் தேசெவ்வி பார்த்துப்புல்லர்
வெற்றம் பலந்தொறு மெய்யிளைத் தேறுவர் வீணர்கெட்டேன்
குற்றம் பலபொறுத் தென்னையு மாண்டுகொண் டோன்புலியூர்ச்
சிற்றம் பலங்கண்டு பேரம் பலத்தைச்செய் யாதவரே. (கo)

(நேரிசையாசிரியப்பா)

461. செய்தவ வேட மெய்யிற் றாங்கிக்
கைதவ வொழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுண் மன்றிற் றிருநடங் கும்பிட்

---

459. இறைவனுடைய திருவுருவத்தின் பெருமை கூறப்படும்.

வேதண்டம் - மலைகள். விண் - ஆகாசம். விண்ணே திருமேனி: 81,83,87,89, மோலி - திருமுடி. கோதண்டம் - வில். உமாபதியார் - இங்ஙனம் பெரிய திருவுருவையுடைய சிவபெருமான். சிற்றம்பலம் என்றது இங்கே சிறிய சபையென்னும் பொருளையுடையதாய், மலைகள் முதலியவற்றைப் புயங்கள் முதலியனவாகவுடைய பெரிய திருவுருவத்தினராகிய சிவபிரான் ஆடுதற்குப் போதியதாகாதே யென்பதுபட நின்றது.

பேரம்பலமென்று ஒன்றுண்மையின் இது சிற்றம்பலமாயிற்று; "தப்ர சபை" என்று வடமொழியில் வழங்கும் வழக்கும் அறிக; "சிற்றம் பலமுந்திருப்பெரும்பே ரம்பலமும்" (இராசராச சோழனுலா, 30.)

460. பல் தம்பலம் - பல்லால் மென்று துப்பிய தாம்பூல எச்சில். செவ்வி - இன்முகத்தோடு இருக்கும் சமயம். வெறு அம்பலம் - பயனற்ற சபை. கெட்டேன் : இரக்கக் குறிப்பு. என்னையும் : உம்மை இழிவு சிறப்பு; ஆட்கொள்ளுதற்கு எள்ளத்தனையும் தகுதியில்லேனாகிய என்னையுமென்னும்பொருட்டு. பேர் அம்பலத்தை - பெரிய அழகிய பயனாகிய வீட்டை. செய்யாதவர் - பெறாதவர். செய்யாதவர் ஏறுவர், அவர் வீணர் என்க.

461. (1-5) கைதவவொழுக்கம் - வஞ்சனையையுடைய தீயநடை. பொதிந்தும் புறந்தோன்றாதவாறு மறைத்தும். வடதிசைக் குன்றம் -

௫ டுய்வது கிடைத்தனன் யானே யுய்தற்
கொருபெருந் தவமு முஞற்றில னுஞற்று
தெளிதினிற் பெற்ற தென்னெனக் கிளப்பிற்
கூடா வொழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின் றொண்டரொடு பயிறலிற்
௰ பூண்டவவ் வேடங் காண்டொறுங் காண்டொறும்
நின்னிலை யென்னிடத் துன்னி யுன்னிப்
பன்னு ணோக்கின ராகலி னன்னவர்
பாவனை முற்றியப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலு மாகலின்
௰௫ எவ்விடத் தவருனை யெண்ணினர் நீயுமற்
றவ்விடத் துளையெனற் கையம்வே றின்றே, அதனால்
இருபெருஞ் சுடரு மொருபெரும் புருடனும்

---

மேருமலை. மன்று - சிற்றம்பலம். அது பொன்னால் வேய்ந்ததாதலின், மேருவை உவமை கூறினார். திருவாயிலுக்கு மேருவின் வாய்ப்பிளப்பு உவமை. கிடைத்தனன் - அடைந்தேன்.

(அடி, 6) உஞற்றிலன் - செய்திலேன்.

(8-16) இவ்வடிகளில் தாம் தவம் செய்யாதிருந்தும் திருவருட்கு இலக்காயினமைக்குக் காரணம் கூறுகின்றார்.

(8) வேடம் - தொண்டர் வேடம். (பி - ம்.) 'ஒழுக்கமாயினும்'

(12) நோக்கினவர் தொண்டர்.

(13) பாவகப் பயனின் - பாவனை செய்ததன் பயனால்.

(14) மேவரப் பெற்றனன் - உய்வதற்கேற்ற தகுதி அடையப் பெற்றேன்.

(1-16) அடியேன் புறத்தே தொண்டர்வேடந் தாங்கி அகத்தே தீயொழுக்கமுடையவனாக இருந்தும் நின்தொண்டர்களோடு பழகினமையின் அவர்கள் என் புறவேடத்தை மெய்யென நம்பி என்னைத் தக்கவனாகப் பாவித்தனர். என்பால் தேவரீர் எழுந்தருளி இருப்பதாக அவர் பாவித்த பாவனை உண்மையிலேயே நான் உய்யும் நெறியைப் பெறச்செய்தது; "வெள்ள வேணிப் பெருந்தகைக்கு யாஞ்செய் யடிமை மெய்யாகக், கள்ள வேடம் புனைந்திருந்த கள்வ ரெல்லாங் களங்கமறும், உள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள், வள்ளலாகும் வசவேசன் மலர்த்தா டலையால் வணங்குவாம்" (பிரபு. துதி. 6) என்னும் அருமைச்செய்யுள் இங்கே ஞாபகத்திற்கு வருகின்றது.

(17) ஒரு பெரும்புருடன் - இயமானன்.

ஐவகைப் பூதமோ டெண்வகை யுறுப்பின்
மாபெருங் காயந் தாங்கி யோய்வின்
உ० றருண்முந் துறுத்த வைந்தொழி னடிக்கும்
பரமா னந்தக் கூத்த கருணையொடு
நிலையில் பொருளு நிலையியற் பொருளும்
உலையா மரபி னுளங்கொளப் படுத்திப்
புல்லறி வகற்றி நல்லறிவு கொளீஇ
உரு எம்ம னோரையு மிடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே. (கக)

(நேரிசை வெண்பா)

462. தக்கனார் வேள்வி தகர்த்துச் சமர்முடித்த
நக்கனார் தில்லை நடராசர் - ஒக்கற்

---

(அடி, 17 - 9.) சூரியசந்திரர், இயமானன், பஞ்சபூதமென்னும் எட்டும் இறைவன் திருவுருவம். காயம் - திருமேனி; "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகி" (தே. திருநா.)

(20 - 21.) அருள் முந்துறுத்த - அருளை முன்னே செலுத்திய; ஆன்மாக்களின்பாலுள்ள பேரருளால் ஐந்தொழில்களையும் நடத்துகின்றா ரென்றபடி. ஐந்தொழில் நடிக்கும் கூத்த - ஐந்தொழிலும் இயலும்படி நடனம் செய்யும் நடராசப் பெருமானே; இதன் விரிவை 452-ஆம் செய்யுளிற் காணலாம்.

(22.) நிலையில் பொருள் - சரம். நிலையியற்பொருள் - அசரம்.

(24.) புல்லறிவு - பாசஞானம், பசுஞானம். நல்லறிவு - பதிஞானம். கொளீஇ - கொளச்செய்து.

(25.) இடித்து வரை நிறுத்தி - இடித்துரைத்து நன்னெறியிலே நிற்கச் செய்து (தொல். கற்பு. 14.)

(27 - 8.) தொண்டரோடு கூடுதலைப் பெற்றவருக்கு எல்லாப் பேறுகளும் கிடைக்கு மென்றவாறு; "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டு விட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" (தாயுமானவர் பாடல்.)

462. சமர் - போர். நக்கனார் - திகம்பரர். ஒக்கல் - சுற்றத்தானாகிய. படப் பாயலான் - படத்தையுடைய பாம்பாகிய படுக்கையையுடைய திருமால். பைந்தொடி - உமாதேவியார். தம் திருவடியைக் காணாமல்

படப்பாய லான்காணப் பைந்தொடிதா ளென்றோ
இடப்பாதந் தூக்கியவா வின்று. (கஉ)

(கட்டளைக்கலித்துறை)

463. இனமொக்குந் தொண்டரொ டென்னையு மாட்கொண்ட
வீசர்தில்லைக்
கனமொக்குங் கண்டத்தெங் கண்ணுத லார்சடைக்
காடுகஞ்ச
வனமொக்கு மற்றவ் வனத்தே குடிகொண்டு
வாழும்வெள்ளை
அனமொக்குங் கங்கை யருகேவெண் சங்கொக்கு
மம்புலியே. (கங)

(நேரிசையாசிரியப்பா)

464. புலிக்கான் முனிவற்குப் பொற்கழல் காட்டிக்
கலிக்கா னிவந்த கட்டில் வாங்கி
மாயோன் மணிப்படப் பாயலு மெடுத்து
வறும்பாழ் வீட்டில் வைத்துக் கொண்டிருந்

---

இருக்கும் திருமாலுக்கு இப்பொழுது வலப்பாதத்தைக் காட்டாமல் இடத் தாளாகிய குஞ்சித பாதத்தைக் காட்டத் துணிந்தது அது தம் வாமபாகத் தினராகிய உமாதேவியாருக்குரியதாதலின், அதை அவன் கண்டமையாற் குறைவின்றென்று கருதியோ? தூக்கியவா - தூக்கியவாறு.

463. தம்முள் தகுதியால் இனம் ஒத்த தொண்டர்களோடு, சிறிதும் தகுதியில்லாத என்னையும் ஆட்கொண்ட. கனம் - மேகம். சடைக்காடு - சடைத்தொகுதி; அது செந்நிறமுடையதாதலின் செந்தாமரைவனமொத்தது (347.) கஞ்சம் - தாமரை. கங்கை வெண்ணிறமுடையதாதலின் அதற்கு வெள்ளை யன்னத்தை உவமை கூறினர்.

464. (1 - 5.) புலிக்கால் முனிவன் - வியாக்கிரபாதர். கலிக்கால் நிவந்த கட்டில் வாங்கி - துன்பத்தினிடத்தே ஓங்கிய பந்தத்தாலாகிய உடம்பை நீக்கி; பிறவிப்பிணியைப் போக்கி யென்றவாறு. உடலை இல்லாகக் கூறுதல் ஆன்றோர் மரபு. ஓசையையுடைய காற்றாற் பொங்கிய பாற்கடலாகிய கட்டிலை வியாக்கிரபாதருடைய புத்திரராகிய உபமன்யு முனிவருக்காக வருவித்தென்று பொருள் கூறுவாருமுளர். மாயோன் மணிப்படப் பாயல் - திருமாலின் படுக்கையாகிய ஆதிசேடன்; என்றது அவனது அவதாரமாகிய பதஞ்சலி முனிவரை. வறும்பாழ் வீட்டில் - சூனியமாகிய சிதாகாசத்தில். இருவருக்கும் அருள் செய்தமையைக் கூறியபடி.

ரு துறங்காது விழுத்த வொருதனிக் கள்வ
காற்றேர்க் குடம்பைக் காமப்புட் படுக்கத்
தீப்பொறி வைத்த திருநுதற் கண்ண
ஆதி நான்மறை வேதியற் பயந்த
தாதை யாகிய மாதவ ரொருவரும்
கo இருங்கா ளத்தி யிறைவர்முன் னுண்ண
அருஞ்சா பத்தா லமுதமூ றுக்கும்
நற்றவ வேடக் கொற்றவ ரொருவரும்
ஒருபிழை செய்யா தருள்வழி நிற்பவவ்
விருவர்கண் பறித்த தரும மூர்த்தி

---

ஒருவருக்குப் பொன்னுலாகிய கழலென்னும் ஆபரணத்தைக் காட்டி அவரது கட்டிலைவாங்கி, மற்றொருவரது படுக்கையையுமெடுத்து இரண்டையும் ஒரு பாழ்வீட்டில் ஒளித்துவைத்துக்கொண்ட கள்வவென வேறொரு பொருள் தோற்றியது.

(அடி, 6 - 7.) கால் தேர் குடம்பை காமன் புள் - தென்றற்காற்றாகிய தேரைக் கூடாகவுடைய காமனாகிய பறவையை. தீப்பொறி - நெருப்புப் பொறி; தீமையையுடைய யந்திரமென்பது வேறுபொருள்.

(8 - 14.) வேதியன் - பிரமதேவர். மாதவர் - திருமால். ஒரு பிராமணனைப்பெற்ற தவத்தினராகிய ஒருவரென்பது மற்றொருபொருள். சாபத்தால் அமுதம் ஊறுக்குமென்றது முற்பிறப்பில் அருச்சுனனாக இருந்தபோது இறைவன் இட்ட கட்டளையை நினைந்து கூறியபடி; தன்னிகர் சங்கரன் றான ளித்தெமை, இன்னல்செய் வேடனென் றிகழ்ந்து கூறினை, அன்னதால் வேட்டுவ வரச னாகியே", "தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ, குன்றவி லன்புருக் கொண்டு நம்மய, நன்றிகொ ளிலிங்கபூ சனைநற் பத்தியல், ஒன்றையு முணர்ந்திடா துவந்து செய்தரோ", "கோலமே முதலிய விலங்கு கொன்றுநீ, சாலவே தசையமு தருத்திச் சாருநாள், ஏலவே முத்தியு மீதும்" (சீகாளத்திப். சிலந்திமுதலிய முற்கதை. 65 - 7) எனவரும் செய்யுட்களால் இது விளங்கும். சாபத்தால் - வில்லினால், சபித்தலால்; சிலேடை. அமுதம் ஊறுக்கும் - ஊனை நினக்கு உணவாகச் செய்யும். நல் தவவேடக் கொற்றவர் - நல்ல தவத்தையுடைய வேடர்களுக்குத்தலைவராகிய கண்ணப்ப நாயனார்; நல்ல தவ வேடத்தையுடைய அரசரென்பது மற்றொரு பொருள். வேடரென்பது இங்ஙனமே, "இவ்வேடர், கொத்துக்கெலாமோர் கொடும்பழியைச் செய்தீரே" (கந்த. வள்ளியம்மை. 108) எனச் சிலேடையில் அமைக்கப் பட்டுள்ளது. தவம் நிறைந்தவரொருவரது கண்ணையும், தவவேடத்தினராகிய அரசரொருவரது கண்ணையும் அவ்விருவரும் பிழையின்றி நிற்பவும் பறித்தாயென ஒருபொருள் தோற்றியது.

கரு முட்டையிற் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன வாகக்
கண்ணகன் ஞாலத் தெண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
உ0 நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங்
கெண்ணான் கறமு மியற்றுதி நீயென
வள்ளன்மை செலுத்து மொண்ணிதிச் செல்வ
அளியன் மாற்றமொன் றிகழாது கேண்மதி
எழுவகைச் சனனத் தெம்ம னோரும்
உரு உழிதரு பிறப்பிற் குட்குவந் தம்ம
முழுவது மொரீஇ முத்திபெற் றுய்வான்
நின்னடிக் கமலம் போற்றுப விங்கிலத்
தொருபது வகைத்தாம் யோனிதோ றுழன்றும்
வெருவரும் பிறப்பின் வேட்கைய ராகிநின்
ந0 சந்நிதி புக்குமத் தாமரைக் கண்ணன்
துஞ்சினன் றுயிலொரீஇ யெழாஅன்
அஞ்சினன் போலுநின் றுடல்காண் பதற்கே. (கச)

---

(அடி, 15 - 22.) முட்டையிற் பிறப்பன அண்டசமென்றும், கருவிற் பிறப்பன சராயுசமென்றும், வித்திற் பிறப்பன உற்பிசமென்றும், வேர்வையிற் பிறப்பன சுவேதசமென்றும் கூறப்படும்; **கந்தர் கலிவெண்பா**, கரு - ஆம் கண்ணியின் குறிப்புரையைப் பார்க்க. பெருமனைக்கிழத்தி - உமாதேவியார். இருநாழி நெல்லை அளித்தது காஞ்சீபுரத்தில்; "இல்லாளே முப்பத்திரண்டறமுஞ் செய்திருப்ப" (618) என்பர். பல பிள்ளைகளைப் பெற்ற தாய்க்கு இரண்டுநாழி நெல்லைக் கொடுத்து முப்பத்திரண்டறமும் வளர்க்கச் செய்தாய்.

கள்வ (5), தருமமூர்த்தி (14), செல்வ (22) என்பன நிந்தாஸ்துதி.

(23.) அளியன் - இரங்கத்தக்கவனாகிய அடியேன். மாற்றம் - விண்ணப்பம்.

(24 - 7.) எழுவகைச் சனனம் - முன்னர்க்கூறிய, நிற்பன முதலிய எழுவகைப் பிறப்புக்கள்; தேவகதி முதலிய ஏழெனினும் ஆம். உழிதரு - சுழலும். உட்குவந்து - அஞ்சி. முழுவதும் ஒரீஇ - பற்றுக்கள் யாவையும் நீங்கி.

(28 - 32.) ஒருபதுவகையென்றது திருமால் எடுத்த பத்து அவதாரங்களை நினைந்து கூறியபடி. தில்லையில் கோவிந்தராசப் பெருமாள் பள்ளிகொண்ட திருக்கோலத்தோடு இருத்தலை இங்கே கருதினர். தாமரைக் கண்ணனென்றது தரிசனம்செய்தற்கு ஏற்ற கருவியாற் குறைவிலனென்ற கருத்தி

(நேரிசைவெண்பா)

465. ஆட்டுகின்றே ரின்றிமன்று ளாடுமா னந்தத்தேன்
காட்டுகின்ற முக்கட் கரும்பொன்று - வேட்டதனை
உற்றுநெடு நாளாக வுண்ணுமோர் மால்யானை
பெற்றதொரு கூந்தற் பிடி. (கரு)

(கட்டளைக்கலித்துறை)

466 பிடிப்ப துமக்கெனை வேண்டின்வெங் கூற்றெனும் பேர்முடிய
முடிப்பது மத்த முடியார்க்கு வேண்டுமுக் கட்பரனுர்
அடிப்பது மத்தொன் றெடுத்துத்தென் பான்முக மாகநின்று
நடிப்பது மத்தன்மை யாநம னுரிது நாடுமினே. (கசு)

---

னது. துஞ்சினன் - அதனைப் பயன்படுத்தாமல் துயின்றான். அணிமையி லிருந்தும் பிறப்பறுக்க முயன்றிலனென்பது கருத்து.

465. ஆட்டுகின்றோரின்றி: "நட்டுவ னுரை யறிகிலன்" (பழமலை யந்தாதி.) முக்கட் கரும்பு: "கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதாம்... ............ஒற்றிக், கடலருகே நிற்குங் கரும்பு" (பட்டினத்தார் பாடல்.) ஆனந்தத் தேன் காட்டுகின்ற முக்கட்கரும்பு: "ஆனந்தத் தேன்சொரியும், குனிப்புடையான்" (திருவா. திருக்கோத்தும்பி.) கரும்பினுச்சியிலே தேன் கூடு இருத்தல் இயல்பாதலின் தேன்காட்டுங் கரும்பாக உருவகஞ் செய்தார்; "கரும்பின், அணிமடற் றொடுத்த, நிறையுறு தீந்தேன்" (பெருங். க. 48: 146 - 7); "தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தேன்" (சீவக. 712.) கரும் பொன்று ஆடும். அதனை வேட்டு. மால்யானை - விநாயகக் கடவுளை. பிடி: உமாதேவியார். உண்ணும் - நுகரும்.

ஒரு கரும்பு ஆலையில் ஆட்டுவாரின்றி ஆடுகின்றது; ஓரானையைப் பெற்ற பிடியொன்று நெடுநாளாக அதனை உண்ணுகின்றதென்றவாறு.

466. உமக்கு என்னைப் பிடிப்பது வேண்டின், மத்தமுடியாருக்குக் கூற்றெனும் பேர் முடிய உம்மை முடிப்பது வேண்டுமென்க. வேண்டும்: தேற்ற வினை. என்னை நீர் பிடித்தால் உம்மைச் சிவபெருமான் சங்காரஞ் செய்வரென்றபடி. மத்தம் - ஊமத்த மலர். அடிப்பதுமத்து ஒன்று எடுத்து - திருவடியாகிய தாமரைகளில் ஒன்றைத் தூக்கி. அத்தன்மையாம் - நும்மைச் சஞ்சரிக்கும் குறிப்பைக் கொண்டதாகும். யமன் தென்றிசைத் தலைவ னாதலின், சிவபிரான் அத்திசையை நோக்கித் திருவடியைத் தூக்கி ஆடுதல் தம் திருவடியால் அவனை உதைத்து அடக்கும் குறிக்கோளுடையதென்றார். நமனை யுதைத்த திருவடியும் இடத்திருவடியேயென்பது இங்கே அறிதற் குரியது; "மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்த னுயிர்வாங்கப், பதைத்தா னென்னு வுன்னி வெகுண்டான் பதிமூன்றும், சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி, உதைத்தான் கூற்றன் விண்மூகில் போன்மண் ணுற

(நேரிசையாசிரியப்பா)

467. மின்வீழ்ந் தன்ன விரிசடைக் காட்டிற்
பன்மாண் டுத்திப் பஃறலைப் பாந்தட்
சிறுமூச்சிற் பிறந்த பெருங்காற் றடிப்ப
விரிதிரை சுருட்டும் பொருபுனற் கங்கை
ரு படம்விரித் தாடுமச் சுடிகைவா ளரவின்
அழற்கண் கான்றவவ் வாரழல் கொளுந்தச்
சுழித்துள் வாங்கிச் சுருங்கச் சுருங்காது
திருநுதற் கண்ணிற் றீக்கொழுந் தோட
உருகுமின் னமுத மூவட் டெழுந் தோடியக்
கo கங்கை யாற்றின் கடுநிரப் பொழிக்கும்
திங்களங் கண்ணித் தில்லை வாண
அன்பருக் கெளியை யாகலி னைய
நின்பெருந் தன்மை நீயே யிரங்கி
உண்ணின் றுணர்த்த வுணரி னல்லதை

---

வீழ்ந்தான் " (கந்த. மார்க்கண். 253.) நமனுர்: விளி; பன்மை இகழ்ச்சிக் குறிப்பு. நாடுமின் - இதனைத் தேர்ந்து என்பால் வாராதொழிக.

(பி - ம்.) 'அத்தன்மை தானம ருரிது'

467. (அடி, 1-11.) சிவபிரான் சடையிலுள்ள பாம்பு மூச்சுவிட அக் காற்றினல் அலையெறியும் கங்கை, அப் பாம்பின் கண்ணிலிருந்து உண்டாகிய தீயால் வற்ற, நெற்றிக்கண்ணிலிருந்து படர்ந்த தீக்கொழுந்தால் சந்திரனிடத்துள்ள அமுதம் உருகி அக் கங்கையின் குறைவைப் போக்கிய தென்ற செய்தி இவ்வடிகளிற் கூறப்படும்.

(2.) துத்தி - படப்பொறி.

(3-4) காற்று அடித்ததனல் திரை சுருட்டியது.

(5.) சுடிகை - உச்சியிலுள்ள மாணிக்கம். வாள் - ஒளி.

(9.) அமுதம், சந்திரனிடத்துள்ளது. உவட்டு - பெருக்கு.

(10.) கடுநிரப்பு: மிக்க வறுமை; என்றது நீர்வற்றிய குறைவை.

(11.) திங்களைக் கண்ணியாகக் கூறுதல் மரபு; கண்ணி, தலையிலணிவது; "பெருகியபுனல் விரவியபிறைக் கண்ணியர்", "கூனற்றிங்கட் குறுங்கண்ணி" (தே. திருஞா.)

(12.) அன்பருக் கெளியை; "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்."

(14.) அல்லதை: ஐ சாரியை. (பி - ம்) 'உணர்த்தி னுணரின்'

கரு நுண்ணூ லெண்ணி நுணங்க நாடிப்
பழுதின் றெண்ணிப் பகர்து மியாமெனின்
முழுது மியாரே முதுக்குறைந் தோரே
நால்வகைப் பொருளு நவையறக் கிளந்த
வேத புருடனு மியாதுநின் னிலையெனத்
உ௦ தேறலன் பலவாக் கூறின னென்ப, அதாஅன்று
முன்னைநான் மறையு முறைப்பட நிறீஇய
மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனும்
கையிழந் தனனது பொய்மொழிந் தன்றே, அதனால்
தெளிவில் கேள்வியிற் சின்னூ லோதி
உரு அளவா நின்னிலை யளத்தும் போலும்
அறிவு மாயுளுங் குறையக் குறையாத
பையுளோ டெண்ணில படைத்துப்
பொய்யுடல் சுமக்கும் புன்மை யோமே. (கஎ)

---

(அடி, 15.) நுணங்க நாடி - நுட்பமாக ஆராய்ந்து.

(17.) முதுக்குறைந்தோர் - அறிந்தோர்.

(18.) நால்வகைப் பொருள் - அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்கள்.

(19-20.) வேதத்துட் பொருள் இன்னதென்று ஒருதலையாக அறியும் வண்ணம் இல்லையென்பதை, "தொன்மறைக் குலங்கண் முன்னிய தியாதெனப், பன்முறை தெரிப்பினும் பயன்கொள வரிதால்" (329) என முன்னும் கூறினர்.

(22.) வாதராயணன் - வியாச முனிவர்.

(21-3) வியாசமுனிவர் ஒருகாலத்தில் காசியில் திருமாலே முதல்வ ரென்று கூறித் தம் கையைத் தூக்க அதனைத் தூக்கியபடியே நிற்கும்படி நந்தி தேவர் பணித்தனரென்பது வரலாறு (494, 548); கையை வெட்டிய தாகக் கூறுவதுமுண்டு; "ஐயிரு புராணநூ லமலற் கோதியும் செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையால், மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய, கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்" (கந்த. கடவுள். 19); இவ் வரலாற் றின் விரிவைக் காஞ்சிப்புராணம், சார்ந்தாசயப் படலத்தால் அறியலாகும்.

(26-7.) 'சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்' என்றபடி.

(24-8.) பன்னூலோதியும் அறியப்படா நின்னிலையைச் சிற்றறிவும் சில் வாழ்நாளும் உடைய யாம் சின்னூலோதி அளக்க முயலுதல் பேதைமை யென்றவாறு.

(நேரிசைவெண்பா)

468. புனையேந் தருவுதவு பொன்னரி மாலை
வனையேம் பசுந்துழாய் மாலை - பனிதோய்
முடிக்கமலஞ் சூடினேன் மொய்குழலோ டாடும்
அடிக்கமலஞ் சூடினே மால். (கஅ)

(கட்டளைக்கலித்துறை)

469. சூடுங் கலைமதி யைத்தொட ராதுபைந் தோகைக்கஞ்சா
தோடும் பொறியர வொன்றுகெட் டேன்மறை யோலமிட்டுத்
தேடும் பிரான்றிருக் கூத்தினுக் கேமையல் செய்யுமென்றும்
ஆடுந் தொழில்வல்ல தாகையி னலவ் வருமைகண்டே. (கசு)

(நேரிசையாசிரியப்பா)

470. கட்புலங் கதுவாது கதிர்மணி குயிற்றி
விட்புலஞ் சென்ற மேனிலை மாடத்து

---

468. இறைவனுக்கு ஆட்படுதலையன்றி இந்திரபதவி முதலியவற்றை வேண்டேமென்பர்.

தரு - கற்பகம். பொன் அரிமாலை - பொன்மலரால் ஆகிய மாலை. அதனைப் புனைதலாவது இந்திரபதவியைப் பெறுதல். துழாய் மாலை வனைத லென்றது திருமால் பதவியைப் பெறுதலைக் குறித்தபடி. முடியின்கண் கங்காநதியைத் தரித்தவன்; கமலம் - நீர். மொய்குழல் - உமாதேவியார். ஓடு: வேறு வினை ஓடு. அடிக்கமலம் - திருவடியாகிய தாமரையை. ஒரு கமலமலரைச் சூடினமையின், பொன்னரிமாலையையும் துழாயையும் சூடோமென்றது ஒரு நயம்; "காந்தன் பதமலர்கள் காமுற்றார் காமுறார், பாந்தண் முடிச்சூடும் பூ" (492); "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" திருவா. திருச்சதகம்.)

469. பதஞ்சலி முனிவர் இயல்பு கூறப்படும். சூடும் - நடராசப் பெருமான் திருமுடியிலே அணிந்த மதியை உண்ணுதலும் மயிலுக்கு அஞ்சுதலும் பாம்பின் இயல்புகள். "சீறுமர வைப்பொருத சித்ரமயில்" (கந்தர்கலி.) என்றலின் அரவு அஞ்சுவது இயல்பாயிற்று. தோகை: உமாதேவியார். பொறி - புள்ளி. அரவு - பதஞ்சலி முனிவர். அரவொன்று மையல் செய்யும். ஆடுதல் பாம்புக்கு இயல்பாதலை 'ஆடரவு' என்னும் தொடர்மொழி யால் அறியலாகும்.

பொறியென்பதை அறிவாக்கி என் அறிவு சிவபிரான் திரு நடனத்திலே செல்லுகின்றதென்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும்.

470. (அடி, 1-12.) தில்லைத்தலத்திலுள்ள மாதர்க்கு இளங்குமரர் தோயியில் எழுதியது, அவர்கள் மேன்மாடத்தில் தேவமகளிரோடு அம்மனை

வல்லியி னுடங்கு மயிலிளஞ் சாயற்
சில்லரித் தடங்கட் டிருந்திழை மகளிர்
௫ அளவில் பேரழ காற்றியும் வாளா
இளமுலைத் தொய்யி லெழுதிய தோற்றம்
தருநிழற் செய்த வரமிய முற்றத்
தமரர் மாதரோ டம்மனை யாடுழி
இமையா நாட்ட மிருவர்க்கு மொத்தலின்
௧௦ நற்குறி தெரிதற்கு நாகிளங் குமரர்
விற்குறி யெழுதி விடுத்தது கடுக்கும்
வலனுயர் சிறப்பிற் புலியூர்க் கிழவரின்
பொன்னடிக் கொன்றிது பன்னுவன் கேண்மதி
என்றுநீ யுளைமற் றன்றே யானுளேன்

---

யாட, அவ்விருதிறத்தார்க்குமுள்ள வேறுபாடு தெரியாமையால் தம்மவரென் பது தெரியவேண்டிப்போலு மென்பது கூறப்படும்.

(அடி, 1.) கட்புலம் கதுவாது - கண்ணாகிய பொறியினாற் பற்றப்படா மல்.

(3.) வல்லியின் - பூங்கொடியைப் போல.

(5.) அழகு ஆற்றியும் - அழகினைத் தாங்கியும். வாளா - ஒரு பயனு மில்லாதபடி.

(6.) தொய்யில்-சந்தனக்குழம்பால் கரும்புங் கொடியும் போல நகிலில் எழுதுங் கோலம்.

(7.) தரு - கற்பக மரம். அரமிய முற்றம் - நிலாமுற்றம்.

(8.) அமரர் மாதர் - தெய்வ மகளிர்.

(8-9.) அம்மனையிலே நோக்கம் ஒன்றியமையின் மண்மகளிருக்கு இமையா நாட்டங்கள் அமைந்தன; "பமரம்யாழ் மிழற்ற நறவுகொப் புளிக்கும் பனிமலர்க் குழலியர் பளிக்குப் - பானிலா முன்றிற் றூநிலா முத்தின் பந்தரிற் கண்ணிமை யாடா, தமரர்நா டியரோ டம்மனை யாட" (196) என்றார் முன்னும்.

(10.) நாகிளங் குமரர் - அம் மகளிருடைய காதலர்களாகிய மிக இளைய குமரர்.

(11.) விற்குறி - மன்மதனுடைய கரும்பு வில்லாகிய அடையாளம். தெய்வமகளிருக்கின்றி மானிடமகளிருக்கே தொய்யிலெழுதுதலுண்மையின் அடையாளமாயிற்று; "வண்டே யிழையே வல்லி பூவே" (தொல். களவு. 5) என்பது காண்க.

தோற்றம் (6) கடுக்கும் (11) என்க.

(12.) புலியூர்க் கிழவ: 476.

(14.) 573; "என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ" (தாயு மானவர் பாடல்.)

கரு அன்றுதொட் டின்றுகா றலமரு பிறப்பிற்கு
வெருவர லுற்றில னன்றே யொருதுயர்
உற்றுழி யுற்றுழி யுணர்வதை யல்லதை
முற்று நோக்க முதுக்குறை வின்மையின்
முந்நீர் நீந்திப் போந்தவன் பின்னர்ச்
உ௦ சின்னீர்க் கழிநீத் தஞ்சா னின்னும்
எத்துணைச் சனன மெய்தினு மெய்துக
அத்தமற் றதனுக் கஞ்சல னியானே
இமையாது விழித்த வமரரிற் சிலரென்
பரிபாக மின்மை நோக்கார் கோலத்
உரு திருநடங் கும்பிட் டொருவனுய்ந் திலனுற்
சுருதியு முண்மை சொல்லா கொல்லென

---

(அடி, 15.) அலமரு - சுழலும்.

(15-8.) அவ்வப்போது உளதாகும் துன்பத்திற்கு அவ்வப்போது வருந்துதலையன்றி முன் நிகழ்ந்த பிறப்புக்களை நினைந்து வருந்துதற்குரிய அறிவு என்பாலில்லையென்றபடி.

(19-22.) பெருங்கடலைநீந்திக் கடந்த வன்மையையுடைய ஒருவன் ஒரு சிறிய உப்பங்கழியைக் கடக்க அஞ்சான்; அதுபோல, இதுகாறும் அளவற்ற பிறப்புக்களை யெடுத்து உழன்ற அடியேன் இனிவரும் சில பிறப்புக்கு அஞ்சேனென்றவாறு.

(19.) முந்நீர் - கடல்.

(20.) கழி நீத்து - கழியில் நீந்துதல்.

(23.) இமையாது விழித்த அமரரென்பது அவர் இயல்பைக் கூறியதன்றி, என் செயல்களைக் கூர்ந்து நோக்கும் கருவியுடையாரென்பதும் போதர நின்றது.

(24.) பரிபாகம் - நின் அருளைப் பெறுதற்கேற்ற பக்குவம்.

(24-5.) (பி - ம்.) 'நோக்காரியார்கொ, றிருநடம்'

(22-8.) அடியேன் நின் திருநடனக்கோலத்தைத் தரிசித்தும் நின் அருள் பெறுதன்மேலும் பிறவியைப் பெறுவேனேல், அதுகுறித்து அஞ்சேன்; ஆனால், தேவர்கள், 'ஒருமுறை திருநடன தரிசனம் செய்தமாத்திரத்தில் முக்தியுண்டென்று வேதம் கூறுவது உண்மை யன்றோ? இவன் அது பெறவில்லையே' என்று ஐயுற்று அஞ்சுவர்; அவர் அஞ்சுவதைக் கருதியேனும் அருள் செய்வாயாக.

வறிதே யஞ்சுவ ரஞ்சாது
சிறியேற் கருளுதி செல்கதிச் செலவே. (உ०)

(நேரிசைவெண்பா)

471. சென்றவரைத் தாமாக்குந் தில்லைச்சிற் றம்பலத்து
மன்றவரைத் தாமாக்க வல்லவர்யார் - என்றுமிவர்
ஆடப் பதஞ்சலியா ராக்கினு ரென்பிறவி
சாடப் பதஞ்சலியார் தாம். (உக)

(கட்டளைக்கலித்துறை)

472 தாமக் குழலினல் லார்விழி மீன்பொரச் சற்றுமினிக்
காமக் கருங்குழி யிற்சுழ லேங்கலந் தாடப்பெற்றேம்
நாமப் புனற்கங்கைப் பேராறு பாயநஞ் சங்களத்தும்
வாமத் தமுதமும் வைத்தாடு மானந்த மாக்கடலே. (உஉ)

---

(அடி, 27-8.) வறிதே - காரணமின்றி. அஞ்சாது - தேவர் அஞ்சாதபடி. செல்கதிச் செல - நற்கதியின்கட் செல்லுதற்கு; செல்கதி: கதியென்னும் மாத்திரையாய் நின்றது.

471. தாமாக்குதல் - சீவபோதம் நீங்கிச் சிவபோத மடையச் செய்தல். சிற்றம்பலமென முன்னர்க் கூறினமையின், மன்றவரென்பது நடராசரென்னுந் துணையாய் நின்றது. இவரென்றது நடராசப் பெருமானை; நெஞ்சிற்கு அணியராயினமையின் இவரென்றார். ஆடப் பதம் சலியார் ஆக்கினர் - ஆடுவதில் திருவடிச் சலிப்பில்லாதவராக ஆக்கினர்; என்றும் திருநடனம் செய்யும்படி செய்தார். சாடு அப் பதஞ்சலியார். தாம்; அசைநிலை. பதஞ்சலியார் ஆக்கினர். பதஞ்சலிமுனிவர்பொருட்டு இறைவன் நடனம் புரிந்தருளியமையின் இங்ஙனம் கூறினர்.

தம்பாலே வந்தவரைத் தம்மைப்போல் ஆக்குவிக்கும் நடராசப் பெருமானைப் பதஞ்சலியார் தம்மைப் போலப் பதஞ்சலியாதாராக்கினரென்பது இதிலுள்ள நயம்.

472. விழியாகிய மீன். நாமம் - புகழ். களம் - கழுத்து. வாமத்து - இடப்பாகத்தில். ஆனந்தமாக்கடல் - சிவபெருமான்.

ஒரு பெருநதி கலக்கும் பெரிய கடலில் ஆடப்பெற்றமையின் ஒரு சிறிய குழியின்கண்ணே சுழலேமென்றபடி.

நஞ்சமும் அமுதமும் பாற்கடலிற் பிறந்ததை நினைந்து, கடலாக இறைவனைக் கூறியவர் அவ் விரண்டையும் உடன்கூறினர்.

(நேரிசையாசிரியப்பா)

473. கடங்கலுழ் கலுழிக் களிநல் யானை
மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்
கிருநில மகழ்ந்து மெண்ணில்பல் காலம்
ஒருவன் காணு தொளித்திருந் தோயை
௫ வனசப் புத்தேண் மணிநாப் பந்திக்
கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்
பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்
ஐந்திணை யுறுப்பி னற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப் பனுவற்குப்
௧0 பொருளெனச் சுட்டிய வொருபெருஞ் செல்வ

---

473. (அடி, 1-7.) திருவாதவூரர் பெருமை.

(1.) கடம் கலுழ் கலுழி - மதம் கலங்கி ஒழுகுகின்ற வெள்ளம்.

(2.) மடங்கலந் துப்பு - சிங்கத்தைப் போன்ற வலி; அம்: சாரியை. மானம் - பெருமை.

(1-2) யானையையும் துப்பையும் உடைய பாண்டியன்.

(4.) ஒருவன் - திருமால்.

(5-6.) வனசப்புத்தேள் - பிரமதேவர். அவருடைய அழகிய நாவாகிய பந்தியிலுள்ள; பந்தி - குதிரை கட்டும் இடம். கவனம் - குதிரையின் கதி. புரவியென்றது வேதக் குதிரையை. காட்டிக்கொடுத்து என்றது, சோம சுந்தரக்கடவுள் நரிகளைப் பரிகளாக்கித் தாம் வேதப்பரியின்மீது எழுந்தருளி வந்து பாண்டியனிடம் அவற்றை ஒப்பித்த திருவிளையாட்டை நினைந்தது.

வழுதிக்குக் (2) காட்டிக் கொடுத்து (6) என்க.

(7.) பைந்தமிழென்றது திருவாசகத்தை. செந்நாப் புலவன் - மாணிக்க வாசகர்.

(8-10.) திருக்கோவையாரின் பெருமை கூறப்படும்.

ஐந்திணை யுறுப்பின்-குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணைகளாகிய உறுப்பினையுடைய; கோவையை ஐந்திணைக்கோவை யென்று வழங்கும் மரபு இங்கே நினைத்தற்குரியது. திருக்கோவையார் நாற் பொருளையும் பயக்குமென்பதனை, 'இன்பத்தை நுதலியதென்றாராயினும், இன்பம் தலைக்கீடாக அறம் பொருள் இன்பம் வீடென நான்கு பொருளையும் நுதலிற்று' (திருச்சிற். 1) என்னும் பேராசிரியர் உரை தெரிவிக்கும். காமஞ் சான்ற ஞானப் பனுவல் - காமச்சுவை மிக்க ஞான நூல்; என்றது திருக் கோவையாரை. இங்கே இவர் இதனை மாத்திரம் கூறினும், திருவா சகம் திருக்கோவையாரென்னும் இரண்டுக்கும் பொருள் யாதென்று

திருத்தொண்டத் தொகைக்கு முதற்பொரு ளாகி
அருமறை கிளந்தநின் றிருவாக்கிற் பிறந்த
அறுபதிற் றுகிய வைம்பதிற்று முனிவருள்
ஒருவனென் றிசைத்த விருபிறப் பாள
கரு வரைசெய் தன்ன புரசை மால்களிற்
றரைசிளங் குமரர் திருவுலாப் போதத்
தவளமா டங்க ளிளநிலாப் பரப்பிச்
செங்கண்யா னைக்கு வெண்சுதை தீற்ற
முதிரா விளமுலை முற்றிழை மடந்தையர்
உ௦ கதிர்செய் மேனிக்குக் கண்மலர் சாத்தக்

---

கேட்டாருக்கு மாணிக்கவாசகர், நடராசப்பெருமானைச் சுட்டிக்காட்டின ரென்பது புராண வரலாறு (திருவாதவூரர் புராணம், திருவடிபெற்ற. 20-28; திருப்பெருந்துறைப். தில்லையை யடைந்த. 63-71.)

(அடி, 11-4.) சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத்தொகை பாடுதற் குச் சிவபெருமான் முதலெடுத்துக்கொடுத்த வரலாறு இங்கே குறிக்கப்படுகின் றது; "தொல்லைமால் வரைபயந்த தூயாடன் றிருப்பாகன், அல்லநீர்ந் துல குய்ய மறையளித்த திருவாக்கால், தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடி யேனென், றெல்லையில்வண் புகழாரை யெடுத்திசைப்பா மொழியென்றார்", "இன்றிவர் பெருமை யெம்மா லியம்பலா மெல்லைத் தாமோ, தென்றமிழ்ப் பயனா யுள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட, அன்றுவன் றொண்டர் தம்மை யருளிய வாரூ ரண்ணல், முன்றிரு வாக்காற் கோத்த முதற்பொரு ளானா ரென்றால்" (பெரிய. தடுத்தாட்கொண்ட. 199, தில்லைவாழ். 9.)

(13-4.) அறுபதிற்றுகிய ஐம்பதிற்று முனிவர் - தில்லை மூவாயிரவர்; இவருள் தில்லை நடராசப் பெருமானும் ஒருவர்; "செம்மைமெய்ப்பெரி யோர் போலத் தேடரி தென்று மைந்தன், மெய்ம்மையிற் றுயர நோக்கி விம லன்விண் ணவருங் கேட்ட, எம்மையொப் பவர்கள் யாரும் யாமவர்க்கொ ப்பே மென்றே, அம்மையப் பனுமா வானு னவர்களி லொருவ னென்றான்", "என்றருள் செய்த வாய்மை யாவருங் கேட்டுத் தில்லை, மன்றினின் றாடு கின்ற மறையவன் மறையோர் தம்மில், ஒன்றென லாகு மேன்மை யுடைய ரென் றுளந்து ளங்கிச், சென்றடி பணிந்தான் மைந்தன் றேவர்பூமாரி பெய்தார்" (கோயிற்புராணம், இரணியவன்மச். 128 - 9.) (பி - ம்.) 'அறுபதிற் றுக்கிய'

(15.) வரைசெய்தன்ன களிறு, புரசை மால் களிறு என்க; புரசை - யானைக் கழுத்திலிடும் கயிறு.

(18.) யானைக்கு வெண்ணிறந் தீற்றுதல் வழக்கமென்று தெரிகிறது (கம்ப. வரைக்காட்சிப். 19.) சுதை - வெண்ணிறச் சாந்து.

(20.) மேனி - அரசிளங்குமரருடைய மேனி.

கடவுட் களிற்றிற் கவின்கொளப் பொலிந்த
உடலக் கண்ண ரொருவ ரல்லர்
இருநிலத் தநேகரென் றெடுத்துக் காட்டும்
திருவநீண் மறுகிற் றில்லை வாண
உரு வேய்ச்சொற் றொக்க வாய்ச்சொற் போல
விரிச்சியிற் கொண்ட வுரைத்திற நோக்கி
வினைமேற் செல்லுநர் பலரே யனையர்க்
கவ்வினை முடிவதூஉங் காண்டு மதாஅன்று
பல்லியும் பிறவும் பயன்றாக் காது
௩௦ சொல்லிய பொருளுந் துணிபொரு ளுடைத்தெனக்
கொண்டோர் கொளினுங் குறைபா டின்றே, அதனால்
யாவர் கூற்றுநின் னேவலி னல்லதை
நிகழா நிகழ்ச்சி யுணராது போலும்

---

(அடி, 21.) கடவுட் களிறு - ஐராவதம்.

(22.) உடலக் கண்ணர் - இந்திரர்.

(15-24.) அரசகுமரர்கள் யானைகளின்மேலேறி வீதியின்வழியே பவனி வருகையில், அங்குள்ள மாடங்களின் வெள்ளொளியின் மிகுதியால் யானைகள் வெள்ளையானைகளாகத் தோற்ற, மகளிர் கண்கள் அக் குமரர்கள் உடல்களிற் பதிதலின் அவர்கள் மேனியெல்லாம் பல கண்களையுடைய பல இந்திரர்களாகத் தோற்றினார்கள்.

(22-3.) (பி - ம்.) 'அல்லா விருநிலத்'

(24.) திருவம் - செல்வம்; அம்: சாரியை.

(25.) வேய்ச்சொல் தொக்க வாய்ச்சொல் போல - மூன்று ஒற்றர் மூலம் அறியப்பட்டுப் பொருளால் ஒத்த உண்மைச் சொற்களைப் போல; வேய் - ஒற்று; "ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர், சொற்றொக்க தேறப் படும்" (குறள், 589) என்பதனையும் அதன் உரையையும் பார்க்க.

(26.) விரிச்சி - நற்சொல்.

(25-6.) வேயும் விரிச்சியும் வினைமேற் செல்வார் மேற்கொள்வன; இவற்றை முறையே புறப்பொருள் வெண்பாமாலை, 6, 4-ஆம் சூத்திரங்களாலும், அவற்றிற்கு இலக்கியமாகவுள்ள வெண்பாக்களாலும் அறியலாம்.

(29-30.) பல்லியின் சொல்லை நிமித்தமாகக் கொள்வது பெருவழக்கா தலின் அதனை யெடுத்துக் கூறினார்; "பல்லியும் பாங்கொத் திசைத்தன" (கலி. கக: 21); செல்லுநர்க், குறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்............ துணிவாய்ப் பல்லி" (அகநா. கருக: 12-5.) பிற - காக்கை முதலியன.

குழந்தை யன்பிற் பெரும்புகழ் நவிற்றிநின்
நடு ஆணையி னின்ற வென்னை
நாணிலை கொல்லென நகுவதென் மனனே. (உங)

(நேரிசைவெண்பா)

474. மன்றுடையான் செஞ்சடைமேல் வாளரவுக் குள்ளஞ்சி
என்றுமதி தேய்ந்தே யிருக்குமால் - நின்றுதவம்
செய்யுமுனி வோர்காமத் தீப்பிணிக்கஞ் சித்தமது
பொய்யுடலை வாட்டுமா போல். (உச)

---

(அடி, 34.) குழந்தையன்பின் - இன்னது கூறவேண்டுமென்று அறியாமல் வெறும் அன்புமாத்திரமே தூண்ட அதனால்; "குழந்தை யன்பினோடு சென்னிதலைக் கொள்ளும், அறிவுதலை கூடாச் சின்மொழி" (கல்லாடம்.)

(25 - 36.) என்மனம், 'நீ நாணமின்றி நின் குறைபாடுடைய சொற்களால் இறைவன் புகழைப் பாடினை' என்று நகுகின்றது. விரிச்சி, பல்லியின் சொல் முதலிய பொருளற்ற சொற்களும் வினைமேற்கொண்டாருக்குப் பொருளுடையனவாதலால் உலகில் நிகழும் சொற்கள் யாவும் நின் ஏவலால் நிகழ்வனவென்பதை என் மனம் அறியாது போலும். நான் முதிராத அன்பு தூண்ட நின் புகழ் பாடினேனென்றார்.

அன்பு மிகுதியாற் குழந்தைகூறும் சொற்கள் உலகோர் வழங்கும் சொற்களைப் போலத் திருந்தியன அல்லவாயினும், அம் மழலைச் சொற்கள் பெற்றோருக்கு இன்பந்தருவது போல என் சொற்களும் இறைவனுக்கு இன்பந் தருமென்பது குறிப்பு. "செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால், அப் பொருட் குறை யாவருங் கொள்வரால்" (பெரிய.) என்பது ஈண்டு அறிதற்குரியது.

474. சிவபெருமான் திருமுடிக்கண் இருக்கும் சந்திரன் வளராதிருத்தற்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறுகின்றார்.

உள் அஞ்சி - மனமஞ்சி. இறைவன் திருமுடியில் உள்ள பிறை என்றும் ஒரே நிலையில் இருப்பது; "இன்றுமையாண் மாசிலா வாண்முகங் கண் டேக்கற்றோ, அன்றி விடவரவை யஞ்சியோ—கொன்றை, உளராவா ரேடு மொளிர்சடையீர் சென்னி, வளராவா றென்னோ மதி" (தண்டி. 21, மேற்.) அரவு முழுமதியையே உண்ணும். தவஞ்செய்வோர், "துயிற் சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம், அயிற்சுவையி னருவவென் றெண்ணி" (292) இருப்பவராதலின் விரதமிருந்து உடலை வாட்டுவர்,

(கட்டளைக்கலித்துறை)

475. வாடிய நுண்ணிடை வஞ்சியன் னீர்தில்லை மன்றினுணின்
றாடிய கூத்த னலர்விழி மூன்றி லரும்பகலும்
நீடிய கங்குலுங் கண்ணிரண் டாலுற நெற்றிக்கண்ணாற்
கூடிய தீப்பொழு தாகுங்கொன் மாலைக் கொடும்பொழுதே.

(நேரிசையாசிரியப்பா)

476. கொடியு முரசுங் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பொருஅன் றானே கொண்டு
பொதுநீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியிற் கண்டு கண்ணிற் கூறி
ரு இருநிலம் புரக்கு மொருபெரு வேந்தன்
மிக்கோ னொருவன் வெறுக்கை நோக்குழித்

---

475. தலைவி மாலைப்பொழுதுகண்டிரங்கல்.

வஞ்சியன்னீரென்றது தோழியரை; வஞ்சி - வஞ்சிக்கொடியை. வலக்கண்ணாற் பகலும் இடக்கண்ணால் இரவும் உண்டாயின (548.) நெற்றிக்கண் அக்கினியாதலின் தீப்பொழுது உண்டாயிற்று; தீப்பொழுது - விரகத் தீயை எழுப்பும் பொழுது, தீய பொழுது. பகலையும் இரவையும் இரண்டு கண்கள் செய்ய, அவ்விரண்டு பொழுதுகளுக்கும் இடையேயுள்ள மாலைப்பொழுதை அவ்விரண்டு கண்களுக்கும் இடையேயுள்ள நெற்றிக்கண் உண்டாக்கியதென்றது ஒருநயம்.

476. அவாவின்மையை வேண்டுகின்றார்.

(அடி, 1-13.) அரச பதவியிலுள்ளோரும் சிந்தை நிறைவின்றி அவாவினாற் கவலையுற்றுத் துன்புறுதல் கூறப்படும்.

(1.) கொற்றம் - அரசுரிமை.

(2.) பிறர்கொளப் பொருஅன்: "போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறு அன்" (புறநா. அ: 2.) (பி-ம்.) 'பெருஅன்'

(1-3) "பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு" (கலி. சுஅ); "தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி, வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்" (புறநா. கஅக: 1-2.) பொது நீங்கு திகிரி -ஏக சக்கராதிபத்தியம்; "வலநேமி தனிகோலு குலதீபன்" (தக்க. 2.)

(4.) செவியிற் கண்டு - ஒற்றர் மூலமாகக் கேட்டறிந்து. கண்ணிற் கூறி - குறிப்பால் அறிபவர்களுக்கு, செய்யவேண்டியவற்றைப் பார்வையாற் புலப்படுத்தி; "கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி" (234) என்றார் முன்னும்.

(6.) மிக்கோன் - செல்வத்தால் மிக்கவன். வெறுக்கை - செல்வம்.

தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற
இழப்புறு விழும மெய்தி யழுக்கறுத்து
மற்றது பெறுதற் குற்றன தெரீஇ
க௦ அயிற்சுவை பெறுஅன் றுயிற்சுவை யுறுஅன்
மாணிழை மகளிர் தோணலங் கொளாஅன்
சிறுகாற்று வழங்காப் பெருமூச் செறிந்து
கவலையுற் றழிவதூஉங் காண்டும் விறகெடுத்
தூர்தொறுஞ் சுமந்து விற்றுக் கூலிகொண்டு
கரு புற்கையு மடகு மாந்தி மக்களொடு
மனையும் பிறவு நோக்கி யயன்மனை
முயற்சியின் மகனை யிழித்தன னெள்ளி
எனக்கிணை யிலையென வினையன்மற் றொருவன்
மனக்களிப் புறீஇ மகிழ்வதூஉங் காண்டும், அதனால்
உ௦ செல்வ மென்பது சிந்தையி னிறைவே

---

(அடி, 8.) இழப்புறு விழுமம் - ஒருபொருளை இழத்தலைப் போன்ற துன்பம்; உறு : உவமவுருபு. அழுக்கறுத்து - பொறாமையுற்று.

(9.) மற்று : அசைநிலை. அது - அம் மிகுதியான பொருளை. உற்றன தெரீஇ - உரியவாக உற்ற உபாயங்களை ஆராய்ந்து.

(10.) அயிற்சுவை, துயிற்சுவை : 292.

(12.) சிறுகாற்று வழங்கா - முதலில் சிறு மூச்சு விட்டு. (பி - ம்.) 'சிறுகாற்று வழங்கப்'

(5-13.) "பெற்ற சிறுகப் பெறுத பெரிதுள்ளும், சிற்றுயிர்க் காக்க மரிதம்மா" (270) என்று முன்னர்க் கூறியது காண்க; "ஆசைக்கொ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி யாளினுங் கடன்மீதிலே - ஆணைசெல வேநினை வரளகேச னிகராக வம்பொன்மிக வைத்தபேரும், நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்" (தாயுமானவர்.)

(13.) (பி - ம்.) 'காண்டு மதாஅன்று'

(13-9.) வறியவனாயினும் சிந்தைநிறைவுடையோன் இன்பம் பெறுதல் கூறப்படும்.

(15.) புற்கை - புல்லரிசிக்கூழ். அடகு - இலை.

(16.) மனை - மனைவி. அயல் மனை - அடுத்த வீட்டிலுள்ள.

(17.) முயற்சி இல் மகனை - முயற்சியில்லாத மனிதனை.

(20.) சிந்தையின் நிறைவு - திருப்தி.

அல்கா நல்குர வவாவெனப் படுமே
ஐயுணர் வடக்கிய மெய்யுணர் வல்லதை
உவாக்கடல் சிறுக வுலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற் கரும்புணை யின்றே, அதனால்
௨௫ இருபிறப் பியைந்த வொருபிறப் பெய்தும்
நான்மறை முனிவர் மூவா யிரவரும்
ஆகுதி வழங்கும் யாக சாலையிற்
றூஉ நறும்புகை வானுற வெழுவ
தெழுநாப் படைத்த முத்திக் கடவுள்
௩௦ கடலமிழ் துமிழ்ந்தாங் கவியமிழ் துண்ண
வரும்பெருந் தேவரை வானவர் கோனொடும்
விருந்தெதிர் கொள்கென விடுத்தது கடுக்கும்

---

(அடி, 21.) அல்கா நல்குரவு - குறையாத வறுமை. அவாவின்மை, "வேண்டாமை யன்ன விழுச்செல்வம்" (குறள், 363) எனச்செல்வமாகப் பாராட்டப்படுதலின், அவாவே வறுமையாகும்; "நல்குர வென்னு நசை" (குறள், 1043.)

(22.) ஐயுணர்வு அடக்கிய - செல்லப்படுகின்ற புலன்களின் வேறுபாட்டால் ஐந்தாகிய அறிவை ஒடுக்கிய. மெய்யுணர்வு - உண்மை ஞானம்; "ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே, மெய்யுணர் வில்லா தவர்க்கு" (குறள், 354) என்பதில் இவ்விரண்டும் வந்தன.

(23.) உவாக்கடல் - பௌர்ணமியிற் பொங்கும் கடல்.

(24) அவாவாகிய கடலை. புணை - தெப்பம்.

(25-33.) தில்லையில் அந்தணர் மூவாயிரவர் புரியும் வேள்விச் சிறப்புக் கூறப்படும்.

அவர்கள் செய்யும் யாகத்தில் எழும் புகையானது அக்கினிதேவன் அவியுண்ணவரும் தேவர்களை எதிர்கொள்ள விடுத்தது போல விளங்குமென்பர்.

(25-6.) இருபிறப்பு - உபநயனத்திற்கு முன் ஒரு பிறப்பும் அதன் பின்னராகிய ஒரு பிறப்பும் (473 : 14); "இருபிறப் பாளர்" (முருகு. 182); "ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்" (புறநா. ௩௬௭ : 12.)

(28.) எழுவது - எழுதலை.

(29.) அக்கினிக்கு எழுநா உண்டென்பர்; 'அக்கினி தேவனுக்கு நாக்கு ஏழென்பது வேதம்' (தக்க. 475, உரை.) முத்தீ - ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருக பத்தியம்.

(30.) கடல் அமிழ்து உமிழ்ந்து - தாம் முன்பு உண்ட பாற்கடல் அமுதத்தை உமிழ்ந்துவிட்டு. ஆங்கு : அசைநிலை. அவி - யாகத்தில் தவர் பெறும் உணவு.

வலனுயர் சிறப்பிற் புலியூர்க் கிழவனின்
அருள்பெற் றுய்தற் குரிய னியானெனிற்
௩௫ பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடலழுந்த
அல்லல் செய்யு மவாவெனப் படுமவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வ மளித்தரு ளெனக்கே. (உசு)

(நேரிசைவெண்பா)

477. என்செய்தீர் தில்லைவனத் தீசரே புன்முறுவல்
முன்செய் தெயிலை முடியாமற் - கொன்செய்த
பொற்புயங்க நாணேற்றிப் பொன்மலையைத் தேவரீர்
மற்புயங்க ளேவ வளைத்து. (உஎ)

(கட்டளைக்கலித்துறை)

478. வள்ளக் கலச முலையெம் பிராட்டி வரிநயனக்
கள்ளச் சுரும்பர் களிக்கின்ற வாசடைக் காட்டிற்கங்கை
வெள்ளத்தை மேலிட்டு வெண்டா தணிந்து விராட்புருடன்
உள்ளக் கமலத்தி னூறுபைந் தேறலை யுண்டுகொண்டே. (உஅ)

---

(அடி, 35-6.) பவக்கடல் - பிறவியாகிய கடல்; இவ்விரண்டடிகளின் கருத்து, "அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும், தவாஅப் பிறப் பீனும் வித்து" என்னுங் குறளைப் பின்பற்றியது.

(அடி, 36-7.) அவாவெனப்படு மவ் வறுமை: 21-ஆம் அடியைப் பார்க்க.

(37.) "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" (நாலடி. 251); "அறிவுடையா ரெல்லா முடையார்" (குறள், 430) என்பராதலின் அறிவினைச் செல்வமாகக் கூறினார்.

477. எயிலை - திரிபுரங்களை. முடியாமல் - அழிக்காமல். பொற் புயங்கம் - பொலிவுபெற்ற பாம்பை. நாணேற்றி வில்லை வளைத்துப் பின்பு அம்பு எய்யாமல் நகைத்துப் புரமெரித்த நீர் வில்லை வளையாமலே அதனைச் செய்திருக்கலாமே என்பது கருத்து. தேவர்களின் செருக்கைக் கண்டு சிவபெருமான் வில்லை வளைத்தும் அம்பெய்யாமல் சிரிப்பினால் எரித்தாரென்பது வரலாறு; "சொல்லுக் கினிய கழுக்குன்ற ரேயுமைச் சொல்லவென்றால், அல்லற் பிழைப்புப் பிழைத்துவிட் டீர்முப்பு ராதியர்மேல், வில்லைக் குனித் தெய்ய மாட்டாம னீரந்த வேளைதனிற், பல்லைத் திறந்துவிட் டீரிது வோநும் படைத்தொழிலே" (தனிப்.) என்னும் செய்யுள் இங்கே நினைவுக்கு வருகின்றது.

478. வள்ளக்கலசமுலை: 664. நயனமாகிய கள்ளச் சுரும்பர்; சுரும்பர் - வண்டு. களிக்கின்றவா - மகிழ்வது என்ன வியப்பு? மேல் இட்டு- மேலே தாங்கி. வெண்தாது - திருநீறு. விராட்புருடன் உள்ளக் கமலம் - சிற்றம்

(நேரிசையாசிரியப்பா)

479. கொண்டல்கண் படுக்குந் தண்டலை வளைஇத்
தடம்பணை யுடுத்த மருத வைப்பின்
இடம்புரி சுரிமுக வலம்புரி யீன்ற
தெண்ணீர் நித்திலம் வெண்ணில வெறிப்ப
௫ ஊற்றெழு தீம்புனல் பாற்கட லாக
விரிதிரைச் சுருட்டே யரவணை யாகப்
பாசடைக் குழாங்கள் பசுங்கதிர் விரிக்கும்
தேசுகொண் மேனித் திருநிற னாகப்
பொற்றுது பொதிந்த சேயிதழ்க் கமலம்
௧௦ மலர்விழி முதல பலவுறுப் பாக

---

பலம்; "அவ்வண்ட வடிவி னோர்க்குக், கொண்டவுளப் புண்டரிகம் புலியூ ரென் றருமறைகள் கூற லாலே, எண்டருபுண் டரிகவக மெனப்படுமப் பதி" (சிதம்பரபுராணம், சிதம்பரமான்மியச். 63.) தேறலென்றது ஸ்ரீ நடராச மூர்த்தியை; "கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றம்" (விக்கிரமசோழ னுலா.)

ஒரு காட்டில் ஒரு நதியின் வெள்ளத்தின்மேல் தாதுடையதாகி மலர்ந்த கமலத்தில் ஊறிய தேறலென்று வேறொரு பொருள் தோற்றியது. ௸: 495.

479. (அடி, 1-24.) தடாகத்திற்குத் திருமால் ஒப்பு.

(1.) தண்டலை - சோலை.

(2.) தடம்பணை - பரந்த வயல்கள்.

(3.) இடம்புரி: இடத்தை விரும்பிய. சுரிமுகம் - சுழித்த முகம்.

(4-5.) நித்திலத்தின் ஒளியால் நீர் வெண்ணிறம் பெற்றுப் பாற்கடல் போலத் தோற்றியது.

(7-8.) பாசடைக் குழாங்கள் - பசிய தாமரையிலையின் தொகுதி; அவை திருமாலின் திருமேனிநிறத்துக்கு உவமை; "செக்கமலத் தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத் திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே" (திருவாய்மொழி, ௯. 7: 3.)

(10.) மலர்விழிமுதல உறுப்பாவன: திருமுகம், திருவிழி, திருவாய், திருக்கரம், திருவுந்தி, திருவடியென்பன.

(7-10.) "அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை அடியுங்கையுங் கண்ணும் வாயும்" (பரி. ௧௩: 50-51); "மாயக் கூத்தா வாமனா வினையேன் கண்ணா கண்கைகால், தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதாச், சாயல் சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே" (திருவாய்மொழி, அ. 5: 1); திருவரங்கக்கலம். 73, திருவேங்கடமாலை, 8, பார்க்க.

அங்கணோர் வனசத் தரசுவீற் றிருக்கும்
செங்கா லன்னந் திருமக ளாகப்
பைந்துழாய் முகுந்தன் பள்ளிகொண் டன்ன
அந்தண் பூந்தட மளப்பில சூழ்ந்து
கரு பல்வளம் பயின்ற தில்லையம் பதியிற்
பொன்னின் மன்றிற் பூங்கழன் மிழற்ற
நன்னடம் புரியு ஞானக் கூத்த
ஒருபெரும் புலவனோ டூட றீரப்
பரவை வாய்தலிற் பாயிரு ணடுநாள்
உ௦ ஏதமென் றுன்னு திருகா லொருகாற்
றூதிற் சென்றநின் றுணையடிக் கமலத்
தீதொன் றியம்புவல் கேண்மதி பெரும
அலையா மரபி னணவக் கொடியெனும்
பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ
உரு ஏகலன் றணந்தாங் கென்னையு முணராது
மோகமொ டழுந்தி முயங்குறு மமையத்
தங்கவட் குரிய தங்கைய ரிருவருட்
குடிலை யென்னு மடவர லொருத்தி
எய்தரும் புதல்விய ரைவரைப் பெற்றனள்

---

(அடி, 18.) ஒரு பெரும் புலவன் - சுந்தர மூர்த்தி நாயனார். (பி - ம்.) 'தீர்ப்பப்'

(19) பரவை - பரவை நாச்சியார்.

(20) இருகால் - இரண்டுமுறை. ஒருகால் - ஒரு காலத்தில்; "நள்ளி ருள் யாமத்து நாவலர் பெருமான், தள்ளாக் காத றணித்தற் கம்ம, பரவை வாய்தலிற் பதமலர் சேப்ப, ஒருகா லல்ல விருகா னடந்தும்", "பரவை தன் மனைவயிற் பாவல னேவலின், இருமுறை திரிதலின்" (345,519); "இருகாலுஞ் சந்துபோனல்" (தனிப்.)

(23-4) ஆணவத்தைச் சேரிப்பரத்தையாக உருவகம் செய்தார்; சேரிப் பரத்தை பொதுமகளாதலின், 'பலர்புகழ் சேரிப் பரத்தை' என்றார்.

(25) தணந்து ஏகலன் - பிரிந்து போகேனாகி.

(28) குடிலை - சுத்தமாயை.

(29) ஐவரென்றது சுத்தமாயையிற்றோன்றிய சிவதத்துவமாகிய சுத்த வித்தை, ஈசுவரன், சாதாக்கியம், சத்தி, சிவமென்னும் ஐந்தனையும்.(பி - ம்.) 'இருவரைப் பெற்றனள்'

௩௰ மோகினி யென்பவண் மூவரைப் பயந்தனள்
ஆகிய புதல்விய ரங்கவர் மூவருட்
கலையெனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானு மூவரைத் தந்தன ளவருள்
மானெனப் பட்ட மடவர லொருத்தி
௩௫ எண்மூன் றுதிறத்தரை யீன்றன ளித்திறம்
நண்ணிய மடந்தைய ரையெழு வரையும்
கிளப்பருங் காமங் கிழத்திய ராக
அளப்பில் கால மணைந்தனன் முயங்குழி
முறைபிறழ்ந் திவரொடு முயங்குத லொழிகென
௪௰ அறிஞராங் குணர்த்த வஞ்சின னொரீஇ
நின்னிடைப் புகுந்தனன் மன்னோ வென்னிடை
ஞான வல்லியை நன்மணம் புணர்த்தி
ஆறு ஞேயத் தரும்பொருள் வழங்கி
இறவா வீட்டினி லிருத்திக்
௪௫ குறையாச் செல்வரொடு கூட்டுதி மகிழ்ந்தே. (உ௬)

---

(அடி, 30) மோகினி - அசுத்தமாயை. மூவரென்றது காலம், நியதி, கலையென்பவற்றை.

(32-3) கலை தந்த மூவரென்றது வித்தை, அராகம், மான் என்பவற்றை.

(34) மான் - மூலப்பிரகிருதி.

(35) எண் மூன்று திறத்தர் - ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக் கரணம் நான்கு ஆகிய இருபத்து நான்கு.

(36) ஐயெழுவர் - மேலே கூறிய குடிலை வழிவந்த ஐவரும் மோகினி வழிவந்த மூவரும் கலை வழிவந்த மூவரும் மான்வழிவந்த இருபத்து நால்வரும்.

(37) காமக்கிழத்தியர் - 'கடனறியும் வாழ்க்கை யுடையரர்கிக் காமக் கிழமை பூண்டு இல்லற நிகழ்த்தும் பரத்தையர்' (தொல். கற்பு. 10, ந.)

(39) முறைபிறழ்தலாவது மகண்முதலிய முறையுடையாரோடு கலத்தல்.

(42) ஞானவல்லி - ஞானமாகிய பெண்.

(43) ஞேயத்து அரும்பொருள் - அறியப்படுவதாகிய அரிய பொருளை.

(44) இறவா வீடு - முத்தி.

(45) குறையாச் செல்வர் - முத்திச் செல்வத்தை யுடையோர்.

(நேரிசைவெண்பா)

480. கூடுங் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென
நாடு மவிநயத்தை நண்ணிற்றால் - ஓடியகட்
காதனார் காணவொரு கால்கட்டிக் கையமைத்து
நாதனார் செய்யு நடம். (௩௦)

(கட்டளைக்கலித்துறை)

481. நடிக்கச் சிவந்தது மன்றெம் பிராட்டி நறுந்தளிர்க்கை
பிடிக்கச் சிவந்தது மன்றுகொ லாமெம் பிரானென்றும்பர்
முடிக்கச் சிவந்தன போலுங்கெட் டேன்புர மூன்றுமன்று
பொடிக்கச் சிவந்த நகைத்தில்லை யான்மலர்ப் பூங்கழலே.(௩௧)

---

480. ஒருகாற் கும்பிட்டாற் போதும்; கதி கூடுமென மாற்றுக. ஒருகால் - ஒரு திருவடி, ஒருமுறை; சிலேடை. அவிநயம் - அங்கங்களால் தோற்றுவிக்கும் குறிப்பு. கண்காதனார் - கண்ணையே காதாக வுடைய பாம் பாகிய பதஞ்சலி முனிவர் (527.) ஒரு கால் காட்டி - இடத்திருவடியாகிய குஞ்சித பதத்தைக் காட்டி. அமைத்த திருக்கரம் ஒரு திருவடியைச் சுட்டுவது போலவும், அபயத் திருக்கரம் போதுமென்ற குறிப்பைக் காட்டுவது போல வும் அமைந்தன.

481. நடராசப் பெருமான் திருவடிச்சிவப்புக்கு ஒரு காரணங் கற்பிக் கின்றார்.

சிவந்ததும் அன்று - சிவந்த செயலும் அன்று. உம்பர் - தேவர். முடிக்க - திருவடிகளை வணங்கி அவற்றைத் தலையில் அணியும் பூவாகக் கொள்ளு வதனால். கெட்டேன் : இரக்கக்குறிப்பு. பொடிக்க - பொடியாக்கும்பொருட்டு. சிவந்த - கோபித்த. நகை - சிரிப்பு. வெண்ணகையைச் சிவந்தநகையென்று கூறியது ஒரு நயம். கழல் - திருவடிகள். கழல் சிவந்தனபோலும் என்க.

ஒரு திருவடியே ஊன்றி யிருத்தலின் அது மாத்திரம் சிவந்திருக்க வேண்டுமாதலின் இரண்டு திருவடிகளும் சிவத்தற்கு அது காரணமன்றென் றும், எம்பிராட்டியின் தளிரைப்போன்ற கைகள் சிவக்கும்படி செய்யாவா தலின் அவை பிடித்தது காரணமன்றென்றும் கொள்க.

# சிதம்பரச் செய்யுட்கோவை

## வெண்பாவிகற்பம்

482. பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.

*இது சீர்முழுதும் எதுகையொன்றத்தொடுத்தமையால் தலையாகெதுகை. பூங்கொன்றைக்கண்ணியான் எனவும், பொன்மன்றிறைஞ்சிடுக எனவும் வெண்சீர் வெண்டளையும் இயற்சீர்வெண்டளையும் விரவிவருதலின், இஃது ஒழுகிசைச் செப்பலோசைத்து. இதனானே, வெண்பா இரண்டடிச் சிறுமையுடைத்தென்பதூஉங் கொள்க. இதனுள், கண்ணியவர் என்னும் ஒரு மொழியைக் கண்ணியெனவும் அவரெனவும் வகையுளி செய்து சீர்கொள்ளப்படுதலின், இது மலரென்னும் வாய்பாட்டான் முடிந்த ஒரு விகற்பக் குறள்வெண்பா. (க)

483. அறனன் று மாதவ னென்ப துலகெந்தை
தாள்காணு னாணுக் கொள.

இஃது இருவிகற்பக் குறள்வெண்பா. மோனை முதலியதொடையும் தொடைவிகற்பமும் போலாது தொடுத்தமையால், இது செந்தொடை. (உ)

484. கண் ணுதல் காட்சி கிடைத்த விழிக்கில்லை
வெல்கூற் றின் றேற்றங் கொளல்.

இதுவுமது. அனுவெழுத்தால் இணைமோனையமைத்து, ஏனைத்தொடையும் தொடைவிகற்பமும் போலாது தொடுத்தமையால், இது மருட்செந்தொடை. (ங)

---

*இச்செய்யுளிலக்கணக் குறிப்புக்கள் நூலாசிரியராலே எழுதி அமைக்கப்பெற்றவை.

482. கொன்றைப் பூவாகிய கண்ணியை உடையான். ஒன்றைக் கண்ணியவர் - வீடு பேற்றைக் கருதியவர்; ஒன்று - முத்தி; "உடன் முதலா, மருவிய மூன்றுங்கொண் டொன்றீ வதற்கு வருத்தமென்னே" (**அம்பலவாண தேசிகர் கலம்பகம்.**)

483. திருமால் சிவபெருமானுடைய திருவடியைக் காணுதிருப்ப, அவரை மாதவனென்று கூறுதல் நியாயமன்று.

மாதவன் - திருமகள் கணவனென்னும் பொருளையுடைய வடமொழித் தொடரைத் தமிழ்த்தொடர் மொழியாக வைத்துப் பெரிய தவத்தையுடையோனென்னும் பொருள் கொண்டு கூறினர். உலகு - உலகத்திலுள்ள சான்றோர். தாள்காணுன் - திருமால். நாணுக் கொள - தனக்கு உரியதல்லாத பெருமையை ஏற்றிக் கூறுதல் பற்றி நாணத்தை யடைய. உலகு மாதவன் என்பது அறனன்றென்க.

484. விழியென்றது இதனையுடையாரைக் கருதியது. வெல் கூற்று -

485. திருமுடியிற் கண்ணியு மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு - பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்திற் கங்கணமும் பாம்பு.

இது குறளிரண்டாய் இடையே தனிச்சொற் பெற்று ஒரு விகற்பமாய் நடத்தலின் ஒரு விகற்பத்து இருகுறணேரிசைவெண்பா. அடி தோறும் ஈற்றுச் சீர் ஒரு சொல்லே வரத் தொடுத்தமையால் அடியியைபு. இது காசென்னும் வாய்பாட்டுக் குற்றியலுகர இயற்சீரான் முடிந்தது. (ச)

486. கறையரவுக் கஞ்சுரு தஞ்சுறூஉந் திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு - பிறைமுடியோன்
கைம்மா னடமுவந்த காற்புலிக்கஞ் சாதஞ்சும்
அம்மான் விழிமானைக் கண்டு.

இதுவும் அவ்வாறே இருவிகற்பத்தால் நடந்தமையான், இருவிகற்பத்து இருகுறணேரிசைவெண்பா. அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால் அடியெதுகை. இதனுள், முதற்றொடை இரண்டாமெழுத்துமாத்திரையே ஒன்றத் தொடுத்தமையால் இடையாகெதுகையுமாம். (டு)

---

பிறரை வெல்லுங் கூற்று ; அவனையும் இவர் வெல்வரென்றபடி. கொளல் இல்லையென்க.

485. கண்ணி - அடையாள மாலை. மாலை - திருமுடியிற் சுற்றப்பட்ட மாலை. ஆரம் - மார்பிலுள்ள முத்து மாலை. கச்சை - இடையிற் கட்டிய கச்சு; "கச்சை யாவதோர் பாம்பினர்" (தே. திருஞா. திருநெல்வாயில்); "கச்சைசேரரவர் போலும்" (தே. திருநா.) புயம் - திருக்கை. கங்கணம் - காப்பு.

486. கறை - விடம். திங்கள் - இங்கே பிறை. திங்கள் உமாதேவியாரின் நெற்றியைக் கண்டு அஞ்சுதல்: "இன்றுமையாண் மாசிலா வாண்முகங் கண்டேக்கற்றே,...வளராவா றென்னோ மதி" (தண்டி. மேற்.) நடம் உவந்த - நடராசப்பெருமான் திருநடனத்தைத் தரிசித்து மகிழ்ந்த. காற்புலி - காலாற் புலியாகிய வியாக்கிரபாதர் ; "காற்புலித்தோன் மயிர்முகிழ்ப்ப" (திருப்பெருந்துறைப். கடவுள். 6.) அம்மான் : மான் - உமாதேவியாரது. விழியாகியமானை. கைம்மான் அஞ்சும். கையிலுள்ள மான் தன் பகையாகிய ஒரு புலிக்கு அஞ்சாமல் இனமாகிய மற்றொரு மானுக்கு அஞ்சுமென்றது நயம்.

487. வணங்கு சிறுமருங்குற் பேரமர்க்கண் மாதர்
அணங்கு புரிவ தறமாற் - பிணங்கி
நிணங்காலு மூத்தலைவே னீள்சடையெங் கோமாற்
கிணங்காது போலு மிரவு.

இது குறளிரண்டாய் முதற்குறள் ஈற்றின்கண் ஓராசிடையிட்டுத் தனிச்சொற்பெற்று ஒரு விகற்பமாய் நடத்தலான் ஒரு விகற்பத்து ஓரா சிடை நேரிசைவெண்பா. இதனுள் முதலடி நடுவிருசீரும் முரணத் தொடுத்த மையால் இடைப்புணர் முரண். இது பிறப்பென்னும் வாய்பாட்டு முற்றுகர இயற்சீரான் முடிந்தது. (சு)

488. வரத்திற் பிறப்பொன் றருள்கெனினும் வள்ளல்
கரத்திற் கபாலத்தைக் காணாப் - புரத்தை
இரும்புண்ட ரீகபுரத் தெய்தினார்க் கீயான்
அரும்புண்ட ரீகத் தயன்.

இதுவும் அவ்வாறே இருவிகற்பமாய் நடத்தலான் இருவிகற்பத்து ஓரா சிடை நேரிசைவெண்பா. இதனுள் முதலடி முதற்சீரும் ஈற்றுச்சீரும் முத லெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉமோனை. (எ)

---

487. வணங்கு - வளைந்த. மாதரணங்கு - விருப்பத்தையுடைய உமா தேவியார். (பி - ம்.) 'மாதர்க் கணங்கு' பிணங்கி - மாறுபட்டு. மூத்தலை வேல் - சூலப்படை. இணங்காது - பொருந்தாது. போலும்: அசைநிலை. இரவு - யாசித்தல். தன் மனையாள் அறங்களைப் புரியாநிற்ப, இரத்தல் இறை வனுக்குப் பொருத்தமுடைய செயலன்றென்றவாறு; 618-ஆம் செய்யுளிலும் இக்கருத்து அமைந்துள்ளது.

488. பிறப்பு ஒன்று வரத்தின் அருள்கெனினும்; வரம் - வேண்டு கோள். "இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே", "மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே" (தே. திருநா.) என்று வேண்டுவாரும் உள ராதலை நினைந்து, 'பிறப்பொன் றருள்கெனினும்' என்றார். வள்ளல் - சிவ பெருமான்; முத்திச் செல்வத்தை வழங்குதலின், வள்ளலென்றார். கபாலம்- பிரமனது தலையோடு. காணா - கண்டு. (பி - ம்.) 'காணாஉ' புரத்தை - உடம்பை. இரும்புண்டரீகபுரத்து - பெரிய சிதம்பரத்தின்கண்; விராட்புரு டனது இருதயகமலமாதலின் இத்தலத்துக்குப் புண்டரீகபுரமென்னும் திரு நாமம் அமைந்தது. புண்டரீகத்து அயன் - வெண்டாமரை மலர் மேல் உள்ள பிரமதேவர். இறைவன் கரத்திற் கபாலத்தைக் கண்டு, அடியாருக்குப் பிறப் பை யளித்தால் இறைவன் தண்டிப்பானென்னும் அச்சத்தால் பிரமன் உடம் பை ஈயானென்க. அயன் புரத்தை ஈயானென்க.

489. கூற்றங் குமைத்த குரைகழற்கால் கும்பிட்டுத்
தோற்றந் துடைத்தேந் துடைத்தேமாற் - சீற்றஞ்செய்
ஏற்றினன் றில்லை யிடத்தினு னென்னினியாம்
போற்றினு னல்கும் பொருள்.

இது முதற்குறளீற்றின்கண் இரண்டாசிடையிட்டு ஒரு விகற்பமாய் நடத்தலால் ஒரு விகற்பத்து ஈராசிடை நேரிசைவெண்பா. (அ)

490. நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

இதுவும் அவ்வாறே இருவிகற்பமாய் நடத்தலால் இருவிகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா. (கூ)

491. வாழி திருமன்றங் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்.

இது நான்கடியாய்த் தனிச்சொல் இன்றி ஒருவிகற்பமாய் நடத்தலின் ஒரு விகற்பத்து இன்னிசைவெண்பா. இஃது அடிதோறும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் அடிமோனை. இதனுள் அடிதோறும் ஈற்றுச்சீர் முரணத் தொடுத்தமையாற் கடைமுரணுமாம். (கO)

---

489. குமைத்த - அடக்கிய. கும்பிட்டென்றது தரிசனத்தைக் குறிப் பித்தபடி. தோற்றம் - பிறவி. துடைத்தல் - முற்றும் இல்லையாக்குதல். ஏற்றினன் - இடபவாகனத்தையுடையார். போற்றினுல் நல்கும் பொருள் இனி என்? பிறவி தீர்தலாகிய பேற்றினும் பிற பேறில்லை யென்றபடி.

490. நமரங்காள் : "இருளியல் பெய்தாத தென்னே நமரங்காள்" (வளையாபதி.) இச்செய்யுள் நீதிநெறிவிளக்கத்தின் காப்புச்செய்யுளாகவும் (207) அமைந்துள்ளது.

எம்பிரானது மன்றை வழுத்தாதது என் என்க.

491. கண்களென்றது கண்டார் கண்கள் அனைத்தையும்; கண்ட பெருமை யுடைமையின் மலர்க்கண்களென்று சிறப்பித்தார்; தம் கண்களை யும் உளப்படுத்திக் கூறியவாறு. வார் செவிகள் - நீண்ட காதுகள். முடிச் சென்னி - முடியையுடைய தலை; முடி - மயிர்முடி. வாழி......வாய் : "வாழி யென் மனனு மணிநா வும்மே" (206.)

492. பூந்தண் பசுந்துழாய்ப் போது நறுவிரி
தேந்தண் டிரடிண்டோட் டேவற்குந் தேவிக்குங்
காந்தன் பதமலர்கள் காமுற்றார் காமுறார்
பாந்தண் முடிச்சூடும் பூ.

இதுவுமது. இதனுள் மூன்றாமடி இரண்டாஞ் சீரொழிந்து ஏனை மூச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் மேற்கதுவாய் மோனை. இதனுள்ளே போ என நெட்டெழுத்துத் தனியே நின்றும், து எனக் குற்றெழுத்துத் தனியே நின்றும், பூந் என நெட்டெழுத்து ஒற்றடுத்து நின்றும், தண் எனக் குற்றெழுத்து ஒற்றடுத்து நின்றும் நேரசை நான்கும் வந்தன. விரி எனக் குறில் இணைந்தும், நறு எனக் குறினெடில் இணைந்தும், பசுந் எனக் குறில் இணைந்து ஒற்றடுத்தும், துழாய் எனக் குறினெடில் இணைந்தும் ஒற்றடுத்தும் நிரையசை நான்கும் வந்தன. ஓரசைச்சீர் இரண்டனுள், பூ என நேரசைச்சீரும் வந்தவாறு காண்க. இது நாளென்னும் வாய்பாட்டான் முடிந்தது. (கக)

493. புனலமுவம் புக்குடைந்தோர் தாளூன்றி நின்று
வனசங்காள் செய்தவநீர் வாழியரோ வாழி
பொருவிடையோன் றெய்வப் புலியூரை யொப்பாள்
திருமுகத்துக் கொப்பச் செயின்.

---

492. துழாய்ப்போதில் நறு விரிகின்ற தோள்; நறு - தேன். தேவன்- திருமால். தேவி - உமாதேவியார். காந்தன் - கணவன். சிவபெருமானுக்குத் திருமால் சத்தியென்பது சைவர் கொள்கை; "அரியலாற் றேவி யில்லை யையனை யாற னார்க்கே" (தே. திருநா.); "நெடுமாயர் போலவே, தரைக்குளினி யாரியாவர்...மேவி யிடத்திலுறை தேவி யாவரே" (அருணைக்கலம். 42.) பாந்தள் முடிச்சூடும் பூ - பூமி. அதனைக் காமுறாரென்றது மீண்டும் இப் பூமியினிடத்தே பிறத்தலை விரும்பாரென்னும் பொருளினது. ஒரு வகை மலர்களை விரும்பியவர் ஒருவர் சூடிய பூவை விரும்பாரென்றது ஒரு நயம்.

493. இது தலைவன் தலைவியின் நலம் பாராட்டியது.

புனலமுவம் - நீர்ப்பரப்பு. உடைந்து - மலர்ந்து; தோல்வியுற்றென்பது வேறு பொருள்; தோற்றோர் நீரில் புகுதல் இயல்பு; பெருங். ௧. 24 : 54-6; சிறுபஞ்ச. 41. ஓர் தாள் ஊன்றி - ஒரு தண்டை ஊன்றி; ஒற்றைக் காலை ஊன்றியென்பது வேறுபொருள். வனசங்காள் - தாமரை மலர்களே. நீர் செய்தவ மென்க. ஒப்பச் செயின் - ஒக்கும்படி அத்தவத்தைச் செய்வீராயின். செயினென்பது செய்தலினருமையை விளக்கியபடி.

நீரில் இருத்தலும் மலர்தலும் ஒரு தண்டிற் பூத்தலுமாகிய தாமரையின் இயல்புகளை, நீர்நிலை நிற்றலும் உடல் மெலிதலும் ஒற்றைக்காலில் நிற்றலுமாகிய தவஞ்செய்வார் முயற்சிகளாகப் பொருள் தோற்றும்படி சொற்களை

இது பலவிகற்பத்து இன்னிசைவெண்பா. *தமிழ்வழக்கால் இரு விகற்பமும் பல விகற்பமெனப்பட்டது. இதன் முதலடி முதற்சீரிரண்டும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் இணைமோனை. இது முதற்றொடை ஓரெதுகைத்தாயும், ஏனைத்தொடை வேறோரெதுகைத்தாயும் வந்தமையால் இரண்டடியெதுகையென்க. இதனுள்ளே தாளூன்றி எனத் தேமாங்காயும், வசனங்காள் எனப் புளிமாங்காயும், புனலமூவம் எனக் கருவிளங்காயும், புக்குடைந்தோர் எனக் கூவிளங்காயுமாக வெண்சீர் நான்கும், செயின் என நிரையசைச்சீரும் வந்தன. (கஉ)

494. ஆதி முதலுணர்ந்தியா மன்புசெயப் பெற்றவா
ஓஒ பெரிது மரிதே யெளிதேயோ
வேதந் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணிந்தான்
பேதுற்றும் வெஃகேம் பிற.

இதுவுமது. இதனுள் இரண்டாமடி ஈற்றுச்சீர் இரண்டும் முரணத் தொடுத்தமையால் கடையிணைமுரண். இதனுள்ளே ஆ என நெட்டெழுத்தும், தி எனக் குற்றெழுத்தும், ஆ என உயிரெழுத்தும், ஓஒ என அளபெடையெழுத்தும், வெஃகேம் என ஆய்தவெழுத்தும், உணர்ந்தியாம் எனக் குற்றியலிகரமும், அன்பு எனக் குற்றியலுகரமும், துறை என ஐகாரக்குறுக்கமும், வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்துக்களும், மெய்யும் உயிர்மெய்யுமாகிய அசைக்கு உறுப்பாமெழுத்துப் பதின்மூன்றுங் காண்க. முதலுணர்ந்தியாமெனக், கனிச்சீர் வெள்ளையின் விரவி வரலாகாமையிற் குற்றியலிகரம் அலகு பெறுதெனத் தள்ளிக் கருவிளங்காய் எனச் சீர்கொள்க. ஐகாரம் கை எனக் குறுகாதவழி நெட்டெழுத்தின் இயல்பிற்றாயும், துறை எனக் குறுகியவழிக்குற்றெழுத்தின் இயல்பிற்றாயும்நின்றவாறு காண்க.(கங)

---

அமைத்தது ஒரு நயம். "தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமருவு, புண்டரிக நின்வதனம் போன்றதால்" (தண்டி. 87, மேற்.); "சங்கந் துறந்தன்ன மில்லாம லேயொரு தாளினின்று, பொங்கம் புனலிற் றவம்புரித் தாலும்" (**வெங்கைக். 63**)

*"ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல், இரண்டல் லவைபல வென்றிசி னோரே" (யா. கா. 25, மேற்.)

494. மும்மூர்த்திகளையும் மும்முதலென்பராதலின் அவருள் முதல்வராகிய சிவபெருமானை ஆதிமுதலென்றார் (545.) பெற்றவா-பெற்றவாறு. ஓஒ : வியப்பின்கட் குறிப்பு. வேதந் துறை செய்தான் - வியாச முனிவர். மெய் துணியான் - உண்மையைத் தெளியாராகி. கை துணிந்தான் - கை தடியப் பட்டார் ; 467- ஆம் செய்யுள் 21-3-ஆம் அடிகளையும் அவற்றின் குறிப்பு முதலியவற்றையும் காண்க. பேதுற்றும் - மயக்கத்தை யடைந்தும். பிற வெஃகேம்-பிற தெய்வங்களை விரும்பேம். வேதம் தெரிந்து துறைசெய் தானும் அறியாத மெய்ம்மையை யாமுணர்ந்தது என்ன வியப்பு! என்றவாறு.

495. பொன்மன்றம் பொற்றா மரையொக்கு மம்மன்றிற்
செம்ம றிருமேனி தேனொக்கு மத்தேனை
உண்டு களிக்குங் களிவண்டை யொக்குமே
எம்பெரு மாட்டி விழி.

இதுவும் பலவிகற்பத்து இன்னிசைவெண்பா. இதன் முதலடியிரண்டும் மூன்றுமெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால், மூன்றுமெழுத்தொன்றெதுகை. (கச)

496. ஆடகச் செம்பொ னணிமன் றிடங்கொண்ட
பாடகச் சீறடியாள் பாகத்தான் - சூடகக்கைக்
கங்கையாள் கேள்வன் கழறொழூஉங் கைகூப்பி
நின்றிறைஞ்சச் சென்றிறைஞ்சுங் கூற்று.

இதுவும் இரண்டாமடியின் இறுதி தனிச்சொற்பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா. இதன் மூன்றுமடி முதற்சீரும் மூன்றுஞ்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் பொழிப்புமோனை. இதனுட் செம்பொ எனத் தேமாவும், அணிமன் எனப் புளிமாவும், கழறொழூஉக் எனக் கருவிளமும், ஆடகச் எனக்கூவிளமுமாகஆசிரியவுரிச்சீர் நான்கும் வந்தன.()

497. காதன் மகளிர் கலக்கக் கலக்குண்டு
பேதுற்றார் நெஞ்சும் பிழைத்தகன்றார் நன்னெஞ்சும்
போதம் படரும் புலியூரே - தாதுண்டு
வண்டுறங்கு நீள்சடையோன் வைப்பு.

இது மூன்றுமடியின் இறுதி தனிச்சொற் பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. இதன்முதலடி இரண்டாமெழுத்துத் தகர அகரமும், இரண்டாமடி இரண்டாமெழுத்துத் தகர உகரமுமாக வந்தமையால் வருக்க வெதுகை. (கரு)

---

495. செம்மல் - சிவபெருமான்; அவர் திருமேனி செந்நிற முடையதாதலின் நிறத்தாலும் தேனையொத்தது; 478-ஆம் செய்யுளைக் காண்க; "உமையாட் கென்றுந் தேனவன்காண்" (தே. திருநா. வலிவலம்.)

496. ஆடகமென்பது பொன்னில் ஒருவகை. பாடகம் - மகளிர் காலில் அணியும் ஒருவகை யாபரணம். சூடகம் - காப்பு. இறைஞ்சினாரைக் கூற்று இறைஞ்சும்.

சிதம்பர தரிசனம் செய்தாருக்கு யமபயமில்லை யென்றபடி.

497. பேதுற்றார் - மயக்கமடைந்தோர். பிழைத்து அகன்றோர் - மகளிர் மயக்கினின்றும் தப்பி நீங்கினோர்; இவர்கள் தூய சிந்தையினராதலின் இவர் நெஞ்சை நன்னெஞ்சு என்றார். பேதுற்றார் நெஞ்சு போது அம்பு அடரும் - மயங்கினோரது நெஞ்சம் காமனது மலர்ப்பாணத்தால் துன்புறுத்தப்படும். நன்

498. காம ருயிர்செகுக்குங் கண்ணென்றே-காமருசீர்
மாதர் நலனழிக்குங் கண்ணென்றே - மாதருக்
கின்னு விரவொழிக்குங் கண்ணென்றே - இந்நிலத்தில்
தன்னே ரிலாதான் றனக்கு.

இஃது அடிதோறும் ஒரூஉத்தொடையமைய முதல் மூன்றடிகளினும் தனிச்சொற்பெற்றுப் பலவிகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. முதன் மூன்றுமடி ஈற்றயற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாய் மோனை. (கஎ)

499. செக்கர்ச் சடையிற் பசுங்குழவி வெண்டிங்காள்
முக்க ணொருவற்கு நின்னோ டிருசுடரும்
ஒக்க விழித்தலா லுய்ந்தே மொருநீயே
அக்க ணொருமூன்று மாயின்மற் றுய்வுண்டே
மைக்கண் மடவா ருயிர்க்கு.

இஃது ஒருவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடைவெண்பா. இதன் முதலடி இரண்டாஞ்சீரொழிந்து ஏனை முச்சீரும் முரணத்தொடுத்தமையால் மேற்கது வாய் முரண். இரண்டாமடி ஈற்றயற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் முரணத் தொடுத்தமையாற் கீழ்க்கதுவாய் முரண். இது பிறப்பென்னும் வாய்பாட்டுக் குற்றுகர இயற்சீரான் முடிந்தது. (கஅ)

---

னெஞ்சு போதம் படரும் - நல்ல நெஞ்சத்தில் சிவஞானம் பரவுகின்ற. இது சிலேடை. வண்டு தாதை உண்ணுதல், "தாதுண் பறவை பேதுற லஞ்சி" (அகநா. ச) என்பதனாலும் பெறப்படும். வைப்பு - எழுந்தருளியுள்ள இடம்.

468. காமர் - மன்மதனது ; பன்மை இகழ்ச்சிக் குறிப்பு (திருச்சிற். 164.) அவன் உயிரைச் செகுத்தது நெற்றிக்கண். மாதர் நலன் - காதலரைப் பிரிந்த மகளிரது அழகை. அதனை அழிக்குங் கண்ணாவது இடத்திருக் கண்ணாகிய சந்திரன். இன்னு இரவு: "இன்னு விரவி னின்றுணை யாகிய" (குறுந். உசுசு : 2.) இரவொழிக்கும் கண்ணென்றது வலத்திருக்கண்ணாகிய சூரியனை. தன்னேரிலாதான்: "தன்னை நேரொப் பிலாத தலைவனை" (தே. திருநா. திருப்புகலூர்.)

499. தலைவி காமமிக்க கழிபடர்கிளவியால் நிலவை நோக்கிக் கூறு தல்; இதனைச் சந்திரோபாலம்பனமென்பர்.

'சிவபெருமான் நின்னோடு சூரியனையும் அக்கினியையும் இரண்டு கண் களாக உடைமையின் உய்ந்தேம்; நீயே அம் முக்கண்களாகவும் இருப்பின் எமக்கு உய்வே இல்லை' என்று சந்திரனை நோக்கிக் கூறுகின்றாள். முன் னர்ப் பாட்டிற் கூறியவாறு மாதருக்குப் பகையாகிய காமனையும் இரவை யும் போக்குவனவாதலின் முறையே அக்கினியும் சூரியனும் மகளிரால் வெறுக்கப்படாதனவாயின. செக்கர்-சிவப்பு. உண்டே; இல்லையென்றபடி.

500\. பொன்புரிந்த செஞ்சடைக்கு வெள்ளிப் புரிபுரிக்கும்
வெண்டிங்கட் கண்ணியான் வெல்கொடியு மானேறே
அங்கவன்ற னூர்தியுமற் றவ்வேறே யவ்வேற்றின்
கண்டத்திற் கட்டுங் கதிர்மணிக்கிங் கென்கொலோ
பைந்தொடியார் செய்த பகை.

இது பலவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடை வெண்பா. இதன் முதலடி முதற்சீரும் மூன்றாஞ்சீரும் முரணத் தொடுத்தமையால் பொழிப்புமுரண். நான்காமடி இறுதிச்சீரொழிந்து ஏனை முச்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழைமோனை. இஃது அடிதோறும் இரண்டாமெழுத்து மெல்லினம் வரத் தொடுத்தமையால் இனவெதுகை. (கக)

501\. கருந்தாது கொல்லுங் கருங்கைத்திண் கொல்லர்
வருந்தா தியன்ற தொரு வல்விலங்கு பூண்டு
திருந்தாதார் முன்றிற்றொறுஞ் சென்று சிலர் தூங்க
இருந்தேங் களிதூங்கி யாமேமற் றம்ம
அருந்தா தலர்தில்லை யம்பலத்திற் றூங்கும்
பெருந்தேன் முகந்துண்ணப் பெற்று.

இஃது ஒருவிகற்பத்து ஆறடிப் பஃறொடை வெண்பா. (உ0)

---

500\. பொன்புரிந்த - பொன் விரும்பிய. வெள்ளிப்புரி - வெள்ளி இழை. புரிக்கும் - இழைக்கும். புரிபுரிக்கும்: 435. ஊர்தி - வாகனம். கண்டம் - கழுத்து. கொடியும்......அவ்வாறே: "ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்வே றென்ப" (புறநா. க: 3-4.) விடைமணியோசை இரவிலே தனித்த மகளிர்க்குத் துன்பத்தைச் செய்யுமென்பதைக் குறுந்தொகை, கக0-ஆம் செய்யுளின் உரை முதலியவற்றால் அறியலாகும். எம்மால் விரும்பப்பெறும் சிவபெருமானுக்குக் கொடியாகவும் ஊர்தியாகவுமுள்ள ஆனேற்றின் மணி எமக்கு இன்பந் தராமல் துன்பத்தைத் தருதல் முரண்பாடுடையதென்றாள்.

501\. கருந்தாது கொல்லும் - இரும்பைத் தொழிற்படுத்தும்; 'மரங்கொ றச்சர்' என்பதுபோல நின்றது. கருங்கை - வலிய கை. வல்விலங்கு - வலிய கால்தளை. திருந்தாதார் - பகைவர். தூங்க - தம் செயலொடுங்கி நிற்ப. அருந் தாது அலர் - அரிய பொன் விளங்குகின்ற. தூங்கும் பெருந்தேன் - தங்கியுள்ள பெரிய தேனடையை; என்றது நடராசப் பெருமானை. தூங்கும் பெருந்தேன்: "பெருந்தேன் கண்படு வரை", "பிரசந் தூங்கு மலை" (குறுந். உஎக; 5, ககஉ; 8.)

502. வின்மதனை வென்ற தலர்விழியே யொன்னார்தம்
பொன்னெயி னீமடுத்த தின்னகையே பூமிசையோன்
தார்முடி கொய்தது கூருகிரே யாருயிருண்
கூற்றுயி ருண்ட தடித்தலமே யேற்றான்
பரசும் பினாகமுஞ் சூலமு மென்னே
கரமலர் சேப்பக் கொளல்.

இது பலவிகற்பத்து ஆறடிப் பஃறொடைவெண்பா. இதன் முதலடி யீற்றயற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாயெதுகை. இரண்டாமடி முதற்சீரும் மூன்றாஞ்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் பொழிப்பெதுகை. மூன்றாமடி முதலயற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் மேற்கதுவாயெதுகை. நான்காமடி முதற்சீரும் ஈற்றுச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉவெதுகை. (உக)

---

நடராசப்பெருமானைப் போற்றாத சிலர் பகைவர்க்கு அடிமையாகித் தளை பூண்டு நிற்ப, அப்பெருமானைத் தரிசித்து யாம் பெருமகிழ்ச்சியை அடைந்தோமென்றபடி.

502 வில்லையுடைய மன்மதனை. ஒன்னார் - திரிபுரத்தில் இருந்த அசுரர். பொன் எயில் - பொலிவு பெற்ற புரங்கள். இரும்பு, வெள்ளி, தங்கமென்பவற்றை முறையே கரும்பொன், வெண்பொன், செம்பொனென்பராதலின் அம்மூன்றாலாய மதில்களைப் பொன்னெயிலென்று ரென்றலும் பொருந்தும். பூமிசையோன் - பிரமதேவர். ஏற்றான் - இடப வாகனத்தை யுடையவர். பினாகம் - சிவபிரானது வில். சேப்ப - சிவப்ப; வீணே தங்கும் படி எனலும் ஆம். கொளல் என்னே.

சிவபெருமான் செய்த பராக்கிரமச் செயல்கள் பலவும் அவர் பாலுள்ள ஆயுதங்களின் உதவியின்றியே நிகழ்ந்தனவாக, அவ்வாயுதங்களை ஒரு பயனுமின்றித் தம் திருக்கரங்கள் சிவக்கும்படி கொண்டிருத்தல் என்ன பயன் கருதி யென்பது கருத்து.

"காலிற் றுலங்கு நகத்தாலுங் கையிற் பொலிகூர் நகத்தாலும், சீலத் தரக்க னுரங்கொண்டீர் திசைமா முகனைச் சிரங்கொண்டீர், மேலைப் புரத்தை நகைத்தெரித்தீர் வில்வேள் புரத்தைப் பகைத்தெரித்தீர், சூலப் படையேன் மழுப்படையேன் சுமந்தீ ரருணை யமர்ந்தீரே" (அருணைக்கலம். 22), "கடகரி நரம டங்கல் காலன்வெண் மதிய ரக்கன், அடுமுய லகன்பதைப்ப வடர்த் தனை பதத்தாற் கஞ்சன், நடுமுடி கரத்திற் கொண்டாய் நகைத்துமுப் புரமெரித்தாய், படைகள்கைக் கொண்ட தென்கொல் பகருதி வெங்கை யோனே" (வெங்கைக்கலம். 35) என்பவற்றிலும் இச்செய்யுளிற் கண்ட கருத்து அமைந்துள்ளது.

503. வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனேயவ் வூனி லுயிரே யுயிர்த்துணையே
ஆனேறு மேறே யரசே யருட்கடலே
தேனே யமுதே யளியோங்கள் செல்வமே
யானே புலனு நலனு மிலனன்றே
ஆனாலு மென்போன்மற் ருர்பெற்ரு ரம்பலத்துள்
மாநாட கங்காணும் வாழ்வு.

இஃது ஒருவிகற்பத்து ஏழடிப்பஃறொடைவெண்பா. இதன் முதலடி நாற்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் முற்றியைபு. இரண்டாமடி முதலயற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாயியைபு. மூன்ருமடி முதற்சீரொழிந்து ஏனை முச்சீரும் இறுதி யெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழையியைபு. நான்காமடி யீற்றயற் சீரொழிந்து ஏனை முச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் மேற் கதுவாயியைபு. ஐந்தாமடி முதற்சீரும் இறுதிச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் ஒரூஉவியைபு. இது காசென்னும் வாய்பாட்டு முற்றுகர இயற்சீரான் முடிந்தது. (உஉ)

504. வண்டுஞ் சுரும்பு ஞிமிறுங் குடைந்தார்ப்பத்
தண்டே னிறைக்கு மிதழி நறுங்கண்ணி
எண்டோண் முக்கண்ணு னிமயம் புனைமன்றில்

---

503. மறிபுனல் - மேலுங் கீழுமாக அலைகள் மடங்கும் நீர். ஊன் - உடல். ஆன் ஏறும் ஏறே - இடபவாகனத்தில் எழுந்தருளும் சிங்கம் போன்றவனே. அளியோங்கள் - இரங்கற்குரியேமாகிய எங்களது; யாங்களென்றது அடியார்களையும் உள்ளிட்டு. புலன் - அறிவு. நலன் - நற்குண நற்செய்கை. மா நாடகம் - பரமானந்த தாண்டவம் (525); "தில்லையுண், மாந டஞ்செய் வரதர்" (பெரிய.) நாடக மென்றது இங்கே கதை தழுவி வருவதைக் குறியாமல் கூத்தென்னுமளவில் நின்றது, "இரத முடைய நடமாட் டுடையவர்" (திருச்சிற். 57)என்பதிலுள்ள நடமென்பதுபோல.

வாழ்வு பெற்ருர் ஆரென்க.

504. வண்டு, சுரும்பு, ஞிமிறென்பன வண்டின்சாதிகள். குடைந்து - கிண்டி. இறைக்கும் - பில்கவிடும். இதழி - கொன்றை. எண்டோண் முக்கண்ணன்: "எண்டோண் முக்கட், கருமிடற் றெருவ" (525); "இன்றேரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே" (திருவா.) இமயம் புனை மன்று - இமயத்தை ஒத்த அம்பலம்; இமயமென்றது இங்கே

அண்டர்கள் கண்களிப்பத் தொண்ட ரகங்குளிர்ப்ப
நின்றாடு மாடற் குருகா திருத்திரால்
வன்றிண் மறலி புடைத்துக் கொடிறுடைக்கும்
அன்று முருகீர்சொல் லாம்.

இது பலவிகற்பத்து ஏழடிப் பஃறொடை வெண்பா. இதன் இரண்டா மடி இறுதிச் சீரிரண்டும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் இணை யியைபு. மூன்றுமடி முதற்சீரும் இரண்டாஞ்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் இணையெதுகை. நான்காமடி இறுதிச்சீரொழிந்து ஏனைமுச்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் கூழை யெதுகை. அதுவே இரண்டாஞ்சீரும் இறுதிச்சீரும் இறுதியெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் பொழிப்பியைபு. ஐந்தாமடி முதற்சீரும் இறுதிச்சீரும் முரணத் தொடுத்தமையால் ஒரூஉமுரண். (உ௩)

505. கங்கைக்குக் கண்மலர் சாத்தக் கருங்குவளை
செங்குவளை பூத்தாள் செயலென்னே - எங்கோமான்
பங்குற்றுந் தீரா பசப்பு.

இது மூன்றடியாய் இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று ஒரு விகற்பத்தால் வந்தமையால் ஒருவிகற்ப நேரிசைச் சிந்தியல்வெண்பா. (உ௪)

---

மேருவை; "எழில்பெறு மிமயத் தியல்புடை யம்பொற், பொலிதரு புலி யூர்ப் பொதுவினி னடநவில்" (திருவா. கீர்த்தித்.) அண்டர்கள் - தேவர்கள். மறலி - யமன். புடைத்து - தண்டித்து. கொடிறு உடைக்கும் - கன்னத்தில் அடிக்கும் (279 ; குறள், 1077.) அன்றும் : உம்மை உயர்வு சிறப்பு.

இச்செய்யுள் யமபயத்தை நினைவுறுத்தி நடராசப்பெருமானது தரிச னத்தை வற்புறுத்தியது (521.)

505. கண் மலர் சாத்த - பார்க்க. கருங்குவளை செங்குவளை பூத்தாள் - ஊடலால் விழிசிவந்த உமாதேவியார். கோமானது பங்கில் உற்றும் பசப்புத் தீர்ந்திலது. பசப்பு - பசலை ; இது கணவரைப் பிரியும் காலத்தில் மகளிருக்கு உண்டாகும் பொன் நிறம். கண், நெற்றி முதலிய இடங்களிற் பசலை உண் டாதலின், அவ்வகைபற்றித் தீராவெனப் பன்மையாற கூறினர். உமா தேவியார் சிவபெருமானோடு சேர்ந்திருந்தும் பசலை தீரவில்லை யென்ற பொருள் தோற்றி, அத்தேவியாரது ஊடல் மிகுதியைப் புலப்படுத்தியது பசுமை நிறமென்பது இயல்பான பொருள்.

506 கம்பக் கரடக் களிற்றின் கபாயணிந்த
அம்பொற் புயத்தாற் கமைந்ததால் - அம்பை
முலையானைக் கோடணிந்த மார்பு.

இதுவும் அவ்வாறே இருவிகற்பத்தான் வந்தமையால் இருவிகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா. இதன் முதலடிநாற்சீரும் முதலெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் முற்றுமோனை. (உரு)

507. போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றங் குமைக்க வருமுன் னமரங்காள்
ஏற்றுவந்தான் பொற்று ளிணை.

இது தனிச்சொல் இன்றி மூன்றடியாய் ஒருவிகற்பத்தான்வந்த ஒரு விகற்பத்து இன்னிசைச் சிந்தியல்வெண்பா. இதன் முதலடிநாற்சீரும் ஒரு சொல்லே வரத் தொடுத்தமையால் இரட்டைத்தொடை. (உசு)

508. உம்பர் பெருமாற் கொளிர்சடிலம் பொன்பூத்த
தன்பொற் புயம்வேட்டேந் தார்முலையும் பொன்பூத்த
பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து.

இஃது இரண்டு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல்வெண்பா. இதன் முதலடியின் இறுதியெழுத்து இரண்டாமடிக்கு முதலாகவும், அவ்வடியின் இறுதிச்சீர் மூன்றாமடிக்கு முதலாகவும் தொடுத்தமையால் அந்தாதித் தொடை. (உஎ)

---

506. கம்பம் - கட்டுத்தறி; சாதியடை "புற்றுடரவா" (தே. சுந்தர.) என்பது போல. களிற்றின் கபாய் - யானைத்தோலாகிய பெருஞ்சட்டை. கபாய்: "கடகளி றுத்வு கபாய்மிசைப் போர்த்தவள்" (12.) அம்பை - அம்பிகை. யானைத்தோலோடு யானைக்கொம்பின் அடையாளம் பொருத்த மாக அமைந்தது. கோடு - கொம்பின் சுவடு; ஆகுபெயர்.

507. கூற்றம் குமைக்க வருமுன் - யமன் உம்மை அடர்க்க வருதற்கு முன்னர்; "கோவாய் முடுகி யடுதிறற் கூற்றுங் குமைப்பதன்முன்" (தே. திருநா.) நமரங்காள்: 207, 490, 521. ஏற்று வந்தான் - இடப வாகனத் தின்மேல் எழுந்தருளி வந்தவன். பொற்றுளிணையைப் போற்றுமின். அத் தாள் 'கூற்றங் குமைத்த குரைகழற்கால்' ஆதலின் யமபயம் இன்றி உங்களைப் பாதுகாக்குமென்பது குறிப்பு.

508. உம்பர் பெருமாற்குப் பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து ஒளிர் சடிலம் பொன்பூத்த, தன்பொற்புயம் வேட்டேம் தார் முலையும், பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து பொன்பூத்த என்று கூட்டிப் பொருள் செய்க.

பொன்பூத்த கொன்றை-பொன்னின் நிறங் கொண்டு மலர்ந்த கொன்றை மலர்; "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள். 1.)

509. கருமிடற்றன் செஞ்சடையன் வெண்ணீற்றனென்னும்
மழுவலத்தன் மானிடத்தனென்னும் - முழுவலத்த
மன்றுடையான் ஞர்வேட்ட மான்.

இது பலவிகற்பத்து இன்னிசைச் சிந்தியல்வெண்பா. இதன் முதற் றொடை இரண்டாமெழுத்தின்மேல் நின்ற உயிரொன்றத் தொடுத்தமையால் உயிரெதுகை. இதன் முதலடி இறுதிச் சீரொழிந்து ஏனைமூச் சீரும் முரணத் தொடுத்தமையால் கூழைமுரண். (உஅ)

## வெண்பா வினம்

510. செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றே.

இது விழுமியபொருளும் ஒழுகிய ஓசையும் உடைத்தாய் அடியிரண் டாய்த் தம்மில் ஒத்துவந்தமையால் குறள்வெண்செந்துறை. (உகூ)

511. கம்பைமாநதி யின்கரைச்சிறு கன்னிபார முலைத்தழும்பணி
உம்பர்கோன்விடை யொன்றுலகேழு முண்டதுவே.

இஃது அடியிரண்டாய்ச் சீர்வரையறையின்றி ஈற்றடி குறைந்து வந்தமையால் குறள்வெண்டாழிசை. (௩0)

---

சூழ்ந்து - சுற்றப்பட்டு, எண்ணி; சிலேடை. சடிலம் - சடை. பொன் பூத்த- பொன்னிறத்தையடைந்தன, பசலை நிறத்தைப் பெற்றன. இறைவன் திருத் தாரை வேட்டு நின்று விரகதாபத்தாற் பசலையுற்ற தலைவி கூறியது இது.

(பி - ம்.) 'தம்பொற் புயம்'

509. மழுவலத்தன் -மழுப்படையை வலத் திருக்கரத்திலே ஏந்தியவர். முழுவலத்த - பூரணமான வெற்றியையுடைய; இது மன்றுடையானுக்கு அடை. மான் - தலைவி.

இது செவிலி கூற்று; தோழி கூற்றுமாம்.

510. மணிமன்றம் - அழகிய சிற்றம்பலம். அம் பொன் மேரு - நட ராசப் பெருமான்; பொன்னிறமுடையாராகலின் மேருவென்றார்; "பொன்னார் மேனியனே" (தே. சுந்தர.); "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கும்" (பொன்வண்ணந். 1.) அடி முடி இன்று - ஆதியும் அந்தமும் இல்லை; இன்றென்பதைத் தனித்தனியே அடியோடும் முடியோடும் கூட்டிப் பொருள் செய்க, ஒருமையாதலின்.

511. கம்பைமா நதி - காஞ்சீபுரத்திலுள்ள கம்பாநதி. சிறு கன்னி - காமாட்சி அம்மை. காஞ்சீபுரத்தில் காமாட்சியம்மை தழுவ இறைவன்

512. முன்புல கீன்ற முகிண்முலைக் கன்னியோ
டின்புறும் யோகி யெழுபுவிக் கரசே.

இஃது ஒழுகியவோசையும் விழுமிய பொருளு மின்றிக் குறள்வெண் செந்துறையோடு மாறுபட்டுவந்த குறள்வெண்டாழிசை. (கக)

513. பின்றாழ் நறுங்கூந்தற் பிடிதழீஇ மால்யானைக்
கன்றீனு முக்கட் களிறு.

இது குறள்வெண்பா செப்பலோசையிற் சிதைந்துவந்த குறள்வெண் டாழிசை. இவையிரண்டும் குறள்வெண்பாவினம். (கஉ)

514. கனக மார் கவின்செய் மன்றில்
அனகநாடகற்கெம் மன்னை
மனைவிதாய் தங்கை மகள்.

இது மூன்றடியாய் வெண்பாவேபோல் முடிந்தமையால் வெள்ளொத் தாழிசை. இதனுள் ஆர் என நேரசைச் சீர்நின்று மேலே கவின் என நிரை யசைவர மாஞ்சீர்போல இயற்சீர் வெண்டளையாயினவாறு காண்க. (கங)

---

குழைந்த வரலாறு இங்கே குறிக்கப் பெற்றது. உம்பர்கோன் - சிவபெரு மான். அவர் விடை யென்றது திருமாலை. உலகேழு முண்டது திருமாலின் செயல்.

தம்முடைய விடை உலகேழும் உண்ணும் ஆற்றலுடையதாயிருப்பவும் தாம் சிறுகன்னி யொருத்தி நகிலால் தழும்பு பெற்ற மென்மையுடையராயினு ரென இதில் ஒரு குறிப்புத் தோற்றியது.

512. முகிழ் முலை யென்றது முகிண் முலையென வந்தது; முகிழ் - தாமரை யரும்புபோன்ற. கன்னியாக இருந்தே உலகை யீன்றதும் யோகி கன்னியோ டின்புறுதலும் அரசராயிருத்தலும் வியப்பை உண்டுபண்ணும் செயல்கள். "பரமனே பரம யோகி" (தே.) என்று சிவபெருமானை யோகி யெனக் கூறுதல் காண்க.

513. பின் தாழ் நறுங்கூந்தல் - பின்னே தாழ்ந்த இயற்கைமணத்தை யுடைய கூந்தல். கூந்தற்பிடி: 465. யானைக்கன்றென்றது விநாயகக் கடவுளை. முக்கட்களிறு - சிவபெருமான். இச் செய்யுளோடு 11,350,377 -ஆம் செய்யுட்பகுதிகள் ஒப்பு நோக்கற் குரியன.

514. எம் அன்னை-உமாதேவியார்; சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவந் தோன்றுதலின் தாயென்றார் (திருச்சிற். 112, பேர்.); "எம்பெரு மானி மவான் மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன் றமையன்" (திருவா. திருப்பொற் சுண்ணம், 13); "தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ண றன் னொருபா, லவளத்த னாமக னாந்தில்லையான்" (திருச்சிற். 112); "சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்" (சிவஞான சித்தியார்.)

515. அம்பேருண் கண்ணூர்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே யிறந்து விடல்.
வாணேருண் கண்ணூர்க் கழிந்த மடநெஞ்சே
நீணாகம் பூண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே யிறந்து விடல்.
கோளாருண் கண்ணூர்க் கழிந்த மடநெஞ்சே
ஆளாக வாண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா விறந்து விடல்.

இது சிந்தியல்வெண்பா ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்த வெள்ளொத்தாழிசை. இதில் ஆளாக வாண்டானென முதலிருசீரும் முரணத் தொடுத்தமையால் இணைமுரண். (சுச)

516. பரசிருக்குந் தமிழ்மூவர் பாட்டிருக்குந் திருமன்றிற் பரசொன் றேந்தி
அரசிருக்கும் பெருமானூர்க் காட்செய்யா ரென்செய்வார்
முரசிருக்கும் படைநமனூர் முன்னூகு மந்நாளே.

இது முதலடி அறுசீராய் ஏனையடி நாற்சீராய் வந்த மூன்றடி வெண்டுறை. (சுரு)

---

515. அம்பு ஏர் - அம்பையொத்த. உண்கண்ணூர்க்கு - மையுண்ட கண்களை உடைய மகளிர்பொருட்டு. அழிந்த - அழிவுற்ற. கொம்பு ஏறு உடையான் - கொம்பையுடைய இடபவாகனத்தை உடையவன். வம்பே வீணே; யாதொருபயனுமின்றி. இறந்துவிடல் என் என்க. கோள் கொலைத் தன்மை. ஆளாக - என்னை அடிமையாகக் கொண்டு.

கழலிறைஞ்சாவிடின் யாதொரு பயனுமின்றி இறந்துவிடல் துணிபாதலின் இங்ஙனம் கூறினர். யாமென்றது ஏனையோரையும் உளப்படுத்தி.

516. பரசிருக்குந் தமிழ் - தேவாரம்; பரசு - பராவுதல். மூவர் - திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனூர். அரசிருக்கும் பெருமான் - நடராசப்பெருமான். நமனூர் முன்னூகும் - யமனுக்கு முன்னே நிற்கும். சிவபெருமானுக்கு ஆட்படாதார் யமபயத்தினின்றும் எங்ஙனம் நீங்குவரென்றபடி. நமனூர்; பன்மை இகழ்ச்சிக்குறிப்பு (466.)

517. படர்தரும்வெவ் வினைத்தொடர்பாற் பவத்தொடர்பப்
பவத்தொடர்பாற் படரா நிற்கும்
விடலரும்வெவ் வினைத்தொடர்பவ் வினைத்தொடர்புக்
கொழிபுண்டே வினையேற் கம்மா
இடர்பெரிது முடையேன்மற்றென்செய்கேனென்செய்கேன்
அடலரவ மரைக்கசைத்த வடிகேளோ வடிகேளோ.

இது முதலடியிரண்டும் அறுசீராய் ஏனையடி நாற்சீராய் வந்த நான்கடி வெண்டுறை. (கசு)

518. கூற்றிருக்கு மடலாழிக் குரிசின்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்குந் தில்லைவனத் தசும்பிருக்கும்
பசும்பொன்மன்றத் தொருதா ளூன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனா டுந்திறங் காண்மினோ காண்மினோ.

இது முதலடியிரண்டும் அறுசீராய் ஓரோசைத்தாய் ஏனையடி நாற்சீராய்வேறோரோசைத்தாய் வந்தமையால் ஏழடி வேற்றொலி வெண்டுறை.(கஎ)

---

517. பவத்தொடர்பு - பிறவியின் சம்பந்தம். வினையும் பிறவியும் ஒன்றுக் கொன்று காரணகாரியமாகத் தொடர்ந்து நிற்கும். ஒழிபு உண்டே; இல்லையென்றபடி; 'காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடலென்றார்' (குறள், 10, பரிமேல்.) என்பது இங்கே நினைத்தற் குரியது. அடல் அரவம் - கொல்லுதலைச் செய்யும் பாம்பினை. அரைக்கு அசைத்த - இடையிலே கச்சாகக் கட்டிய; அரைக்கு: உருபுமயக்கம். அடிகேள்: விளி.

518. கூற்றின் தன்மை தங்கியிருக்கும் வலியையுடைய சக்கரப் படையை ஏந்திய குரிசில்; திருமால். அசும்பு இருக்கும் பசும்பொன் மன்றம் - தன்னில் தோன்றிய ஒளி துளிப்பது போன்ற தோற்றத்தோடு இருக்கும் பசிய பொன்னாலாகிய சிற்றம்பலம். கொண்டல் ஓடும் குழல் - மேகம் ஓடுதற்குக் காரணமான கூந்தல். கோதை: சிவகாமி யம்மை.

519. உருவல னருவல னொருவன்மற் றிருவருக்
கரியவ னெனவுணர்ந் தறைகுந ரறைகமற்
பரவைதன் மனைவயிற் பாவல னேவலின்
இருமுறை திரிதலி னெளியனென் றெளியனும்
பரவுவன் மன்றம் பணிந்து.

இதுவும் ஈற்றடி ஒருசீர் குறைந்து வந்தமையால்ஓரொலி வெண்டுறை. இதன் முதலடி நாற்சீரும் முரணத் தொடுத்தமையால் முற்றுமுரண். அதுவே நாற்சீரும் இரண்டாமெழுத்து ஒன்றத் தொடுத்தமையால் முற்றெதுகையுமாம். (கஅ)

520. அங்கட் கமலத் தலர்கமல மேயீரு நீரேபோலும்
வெங்கட் சுடிகை விடவரவின் மேயீரு நீரேபோலும்
திங்கட் சடையீருந் தில்லைவனத் துள்ளீரு நீரேபோலும்.

இஃது அடிதோறும் தனிச்சொற் பெற்று மூன்றடியால் வந்தமையால் மூன்றடி வெளிவிருத்தம். (கக)

521. வெஞ்சம னஞ்ச வேலொ டெதிர்ந்தா னமரங்காள்
அஞ்ச லெனுஞ்சொல் லார்சொல வல்லார் நமரங்காள்
மஞ்சிவ ரிஞ்சி மன்ற மிறைஞ்சீர் நமரங்காள்
நஞ்ச மயின்றார் நல்குவர் மாதோ நமரங்காள்.

இது நான்கடியாய் அடிதோறும் தனிச்சொற் பெற்று வந்தமையால் நான்கடி வெளிவிருத்தம். (௨0)

---

519. இருவருக்கு - பிரமதேவருக்கும் திருமாலுக்கும். பாவலன் - சுந்தரமூர்த்தி நாயனார். அகங்கரித்தாருக்கு அரியராகி அடியாருக்கு எளியராக இருப்பா ரென்றபடி; "காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற வெளியன் கண்டாய்" (தே. திருநா.) இருமுறை தூது சென்றது : 479.

520. சிவபெருமானே மும்மூர்த்திகளாகவும் உள்ளாரென்பது கூறப்படும்.

அம் கண் கமலத்து அலர் கமலம் மேயீரும் - அழகிய இடத்தையுடைய நீரில் மலர்கின்ற தாமரைமலரில் விரும்பியுறைகின்ற பிரமதேவரும். மேயீர் : முன்னிலை. சுடிகை - உச்சி. அரவு - ஆதிசேடன்.

521. சமன் - யமன். அஞ்ச - நாம் அஞ்சும்படி. வேல் - இங்கே, யமனது சூலம். எதிர்ந்தான் - வந்தான்; துணிவுபற்றி இறந்த காலத்தாற்கூறினார். அஞ்சல் - யமனுக்குப் பயப்படுதலை யொழிக. மஞ்சு இவர் இஞ்சி - மேகங்கள் ஏறித் தவழ்கின்ற திருமதிலையுடைய; நஞ்சம் அயின்றா ரென்றது தேவர் அஞ்சும்படி வந்த ஆலகாலவிடத்தையுண்டு அவரை மரணபயத்தினின்றும் நீக்கியருளியவராதலின், நம்மையும் மரணபயத்தினின்றும் நீக்குவரென்னும் குறிப்பையுடையது. நல்குவர் - தண்ணளி செய்வர்.

சிற்றம்பலதரிசனம் யமபயத்தை நீக்குமென்றபடி.

## ஆசிரியப்பா விகற்பம்

522. பொற்றுது பொதிந்த சிற்சபை பொலியப்
பச்சிளங் கொடியொடு படரும்
செக்கர் வார்சடைக் கற்பக தருவே.

இஃது ஈற்றயலடி முச்சீராய் ஏனையவடி நாற்சீராய் வந்தமையால் நேரிசை ஆசிரியம். இஃது அடிதோறும் முதற்சீர் முரணத் தொடுத்தமையால் அடிமுரண். இதனுள், பொதிந்த சிற்சபை என நேரொன்றாசிரியத்தளையும் சிற்சபை பொலிய என நிரையொன்றாசிரியத்தளையும் வந்தவாறு காண்க. இதனானே ஆசிரியம் மூன்றடிச் சிறுமையுடைத்தென்பதூஉம் அறிக. (௫க)

523. பூஉந் தண்ண் புனமயி லகவ
மாஅங் குயில்கள் சாஅய்ந் தொளிப்பக்
கோஒ டரங்கண் முசுவொடும் வெரீஇக்
காஅ றழீஇக் கவிழ்ந்ந் தொடுங்கச்
சூஉன் முதிர்ந்து காஅல் வீஇழ்
வாஅன் றூஅழ் மழைப்பெய றலைஇத்
தேஎன் றூஅழ் பூஉங் காஅ
வளங்ங் கனிந்த மணிமன் றுள்
விளங்ங் கொளியை யுளங்கொள றவமே.

இதுவுமது. இஃது அடிதோறும் முதற்கண்ணே அளபெடுத்தமையால் அடியளபெடை. இதனுள் இணையளபெடை முதலாகிய விகற்பம் ஏழும் முறையானே வந்தவாறு காண்க. ஏனைத் தொடை ஏழும், விகற்பம் இரு பத்தெட்டும் முன்னர்க் காட்டப்பட்டன. (௫௨)

---

522. பொற்றுது - பொன்னுகிய உலோகம். பச்சிளங்கொடி - சிவ காமவல்லி யம்மை. செக்கர் - செந்நிறம். கற்பகதருவிற் காமவல்லி படர்த லின் இங்கே சிவகாமவல்லியை அவ்வல்லியாக உருவகித்தனர். (பி - ம்.) 'கற்பகத்தரு' கற்பகதருவென்று உருவகம் செய்ததற்கேற்ப, வேறொன்னும் பொருளும் தோற்றச் சடையைக் கூறினர்; சடை - வேர்.

523. மயில் முல்லைநிலக் கருப்பொருளாதலின் புனமயிலென்றார்; புனம் - முல்லைநிலம். மாஅங்குயில்கள் - மாமரத்தில் வாழும் குயில்கள். சாய்ந்து - மெலிந்து. கோடரங்கள் - குரங்குகள். முசு - ஒருவகைக் குரங்கு. கால் தழீஇ - குளிரால் இரண்டுகாலையும் கைகளாற் கட்டிக்கொண்டு; இந்த நிலையைக் குன்றுக்கலென்றும் முள்காந்திருத்தலென்றும் கூறுவர்; "மந்தி கூர" (நெடுநல். 9.) கால் - மழைக்கால். தலைஇ - பெய்து.

மழைபெய்யுங் காலத்து மயில் களிப்பினுல் அகவ, குயில் மெலிய, குரங்குகள் ஒடுங்கின.

524. தண்ணென் கடுக்கை கண்ணீர் கலுழ்தர
வெண்மதிக் கண்ணி சூடும்
கண்ணுதற் கடவுள்
புண்ணியப் பொதுவி லாடும் பூங்கழ லிறைஞ்சுதும்
விண்மிசைப் போகிய வீடுபெறற் பொருட்டே.

இது முதலடியும் ஈற்றடியும் அளவடியாய்க் குறளடியும் சிந்தடியும் இடையிட்டுத் தொடுத்தமையால் இணைக்குறளாசிரியம். இவ்வகவலுள் புண்ணியப் பொதுவி லாடும் பூங்கழ லிறைஞ்சுதும் என நெடிலடியும் அருகிவந்த வாறு காண்க. குறளடிமுதல் நான்கும் இதனுள்ளே வந்தன; ஏனைக் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்துட் காண்க. (சக)

525. மாயிரு விசும்பிற் றூநிலாப் பரப்பிப்
பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்
மின்செய் கொண்மூ வெள்ளிவீழ் வீழ்ப்பப்
பொன்செய்மலர்ப் பூங்கொன்றையும்
ரு புலியூர் மன்றி னொலிகழன் மிழற்றப்
பரம நாடக மிருவரைக் காட்டும்
எரிநிறத் தைம்முகத் தெண்டோண் முக்கட்
கருமிடற் றொருவனின் செஞ்சடைப் பொலிதலின்

---

524. கடுக்கை - கொன்றை. கள் நீர் - தேனாகிய நீர். வெண்மதியாகிய பிறிதொரு கண்ணியைச் சூடுதலினால் கொன்றை கண்ணீர் சொரிந்து வருந்தவென்று வேறொரு பொருள் தோற்றியது. "கண்ணி கார்நறுங் கொன்றை" (புறநா. க) என்பதனாலும் கொன்றையைக் கண்ணியாகச் சூடுதல் பெறப்படும். மதிக்கண்ணி: 525. பொது - அம்பலம். விண்மிசைப் போகிய வீடு - சுவர்க்க பதவிக்கு மேலேயுள்ள முத்தி; "வானோர்க் குயர்ந்த வுலகம்" (குறள், 346) என்பர் திருவள்ளுவர்.

525. (அடி, 1 - 4.) பாயிருள் சீக்கும் - பரவிய இருளைப் போக்கும். கொண்மூ வெள்ளி வீழ் வீழ்ப்ப - மேகம் வெள்ளிவிழுதை வீழ்த்துவது போல மழைபெய்ய; "வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள், ...வள்ளியோரின் வழங்கின மேகமே" (கம்ப. ஆற்றுப். 4); "வெள்ளிவீழ் வீழ்வன கடுப்ப" (நைடத. அன்னத்தைத்.) பொன் செய் மலர் - பொன்போன்ற மலரையுடைய; செய்: உவமவுருபு. கொன்றை கார்காலத்தில் மலர்வது: "கார்நறுங்கொன்றை" (புறநா. க: 1.)

(6 - 7.) பரமநாடகம் - பரமானந்த தாண்டவம்; "பதஞ்சலிக் கருளிய பரம நாடக" (திருவா.) இருவர் - பதஞ்சலி, வியாக்கிரபாதர். எண்டோள் முக்கண்; 504.

நோயு மருந்து மொருவழிக் கிடைத்தென
௧௦ ஆருயிர் தரித்தன ளன்றே யதாஅன்று
தெள்ளமு தன்னவ ருள்ளுயிர் குடிக்குமித்
திங்க ளொன்றே திருமுடிக் கணியின்
கங்கை யாளு முயிர்வா ழாளே.

இது முற்றும் நேரடியாய் வந்தமையின் நிலைமண்டில ஆசிரியம். இதனுள், பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும் என இயற்றளை வெள்ளடியும், பொன்செய்மலர்ப் பூங்கொன்றையும் என வஞ்சியடியும் மயங்கிவந்தவாறு காண்க. எரிநிறத் தைம்முகத் தெண்டோள் முக்கண் என முதற்சீரொழிந்து ஏனைமுச்சீரும் முரணத் தொடுத்தமையால் கடைக்கூழைமுரண். (௫௪)

526. தீர்த்த மென்பது சிவகங் கையே
ஏத்த ருந்தல மெழிற்புலி யூரே
மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே.

இதுமுதலிடை கடையடிகளை மாறி மாறி உரைப்பினும் பொருள் திரியாமையின் அடிமறிமண்டில ஆசிரியம். (௫௫)

---

(அடி, 9 - 10.) (பி - ம்.) ‘ ஓர்வழிக் ’ கிடைத்தென - கிடைத்தவென. பனிமதியாகிய கண்ணி மகளிருக்கு நோய் செய்வது; கொன்றை அந்நோயை நீக்குவது. உயிர்தரித்தவள் கங்கை.

(11-3.) அமுதன்னவர் - மகளிர். கங்கையாளும்: உம்மை உயர்வு சிறப்பு. இங்கே கூறிய கருத்தை, “ காசிப் பிரான்பிறை யோடு முடிக், கொள்ளைச் சிறைவண்டு கூட்டுணுங் கொன்றையுங் கூடவைத்தார், வள்ளக் கலச முலைக்கங்கை யாளுயிர் வாழ்வதற்கே ” (664) என்று பின்னும் அமைப்பர்.

இது தோழிகூற்று.

526. என்பது - என்று சிறப்பித்துக் கூறப்படுவது. இதனை ஏனைய இரண்டனோடும் கூட்டுக. சிவகங்கை : சிதம்பரத்திலுள்ள தீர்த்தம். புலியூர் - பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரம். தீர்த்தங்களிற் சிவகங்கையும் தலங்களிற் சிதம்பரமும் மூர்த்திகளில் நடராசப்பெருமானும் சிறந்திருத்தலைக் கூறியபடி. ஏகாரங்கள் பிரிநிலைப்பொருளில் வந்தன. மூர்த்தி தலதீர்த்தங்களை இங்ஙனங் கூறுதல் மரபு (திருவிளை. மாயப்பசுவை. 29 - 31.)

## ஆசிரியப்பாவினம்

527. சத்தமு மாகியச் சத்தத் தாற்பெறும்
அத்தமு மாகலி னனந்தன் கண்களே
உத்தம னைந்தெழுத் துருவங் காண்பன.

இது மூன்றடியாய்த் தம்மில் ஒத்துவந்தமையால் ஆசிரியத்தாழிசை.()

528. க. சிற்றம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
கற்றைச் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
மற்றப் புனன்மங்கை வாணுதலை யொக்குமால்.
உ. பேரம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
வார்செஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்.
ங. பொன்னம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
மின்னுஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
அந்நங்கை செங்கைக் கணிவளையு மொக்குமால்.

இஃது ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை. (சஎ)

---

527. பஞ்சாட்சரத்தின் ஒலியுருவமும் பொருளும் நடராசப்பெருமானுதலின், ஒலியைக் கேட்பதற்கும் அவ்வொலிப்பொருளாகிய மூர்த்தியைத் தரிசிப்பதற்கும் ஒருங்கே ஆற்றல் பெற்றவை பதஞ்சலி முனிவர் கண்களே.

சத்தம் - ஒலி ; இங்கே பஞ்சாட்சர ஒலி. அத்தம்=அர்த்தம் - பொருள். அனந்தன் - ஆதிசேடன் ; இங்கே அவனது அவதாரமாகிய பதஞ்சலி முனிவர். பாம்புருவாகிய பதஞ்சலியாருக்குக் கண்களே காதுகளாகவும் பயன்படுதலின் அக்கண்களே பஞ்சாட்சரத்தின் ஒலியுருவத்தையும் வடிவத்தையும் அறிந்தன. பாம்புக்குக் கட்செவியென்னும் பெயருண்மை இங்கே அறிதற்பாலது. இவ்வாசிரியரே, " ஓடியகட் காதனுர் " (480) என்றுர் முன். உத்தமனது ஐந்தெழுத்தாகிய உருவம். நடராசப்பெருமான் திருவுருவம் பஞ்சாட்சர வடிவமாயமைந்ததென்பது, " ஆடும் படிகேணல் லம்பலத்தானையனே, நாடுந் திருவடியிலேநகரம் - கூடும், மகர முதரம் வளர்ந்தோள் சிகரம், பகருமுகம் வாமுடியப் பார் " , " சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம், ஆர்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக், கங்கி நகர மடிக்கீழ் முயலகனுர், தங்கு மகரமது தான் " (உண்மைவிளக்கம்) என்னும் செய்யுட்களால் விளங்கும்.

528. க. திங்கள் - பிறை. புனல் மங்கை - கங்கை.

உ. நித்திலக் கச்சு - முத்தாலாகிய கச்சு (181, 537.)

ங. பிறைக்கு வளை உவமை : " வளையுடைத் தனைய தாகிப் பலர் தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, இன்னம் பிறந்தன்று பிறையே " (குறுந். கூ0எ : 1 - 3) ; " புலவியி லுடைந்த சங்கம் புரிசடைத்

529. நாகம் பொதிசடைமே ணுண்மதியும் வாண்மதிபோ
னங்கை கங்குல்
மேகஞ்செய் கூந்தன் மிலேச்சுந் தலைக்கலனும்
விளங்குந் தோற்றம்
ஆகம் பகுந்தளித்த வந்நாளி லம்பலத்தான்
மாகம் பதியு மதியும் பகுந்தளித்த
வண்ணம் போலும்.

இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்துவந்த ஆசிரியத்துறை. (சஅ)

530. மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள் கண்களிப்ப
மன்று ளாடும்
நாயகன் கண்டங் கறுத்தன்றே பொன்னுலகை
நல்கிற் றம்மா
நாயகன் கண்டங் கருதேலந் நாட்டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளுங் கொங்கைகளுஞ்
சிவக்கும் போலும்.

இஃது அவ்வாறே இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை. (சக)

---

திங்கட் கீற்றின், மலைவற விணைக்கு மேல்வை" (கூர்ம. கடவுள். 2); "ஊடலி னுடைந்த சங்க மொளிர்சடைப் பிறைவெண் கீற்றின், மாடுறப் பொருத்தும் போழ்து" (திருச்செந்தூர்த்தலபுராணம், கடவுள். 2)

க - ரு. சந்திரன் கங்கையின் நெற்றியையும், முத்துக் கச்சையும், வளையையும் ஒத்தது. சிற்றம்பலம், பேரம்பலம், பொன்னம்பலமென்பன சிதம்பரத்திலுள்ள வெவ்வேறு அம்பலங்களாயினும் சிவபெருமான் நடம்புரிதல் பற்றி ஒருங்கே கூறப்பட்டன.

529. சடைமேல் - சிவபெருமானது சடையின்மேல். நங்கை - உமாதேவியார். கங்குலையும் மேகத்தையும் போன்ற கூந்தல். தலைக்கலன் - பிறையென்னும் தலையணி (401.) மாகம் - வானம்.

சிவபிரான் திருமுடியிற் பிறையும் அம்பிகையின் திருமுடியிற் பிறையென்னும் தலைக்கலனும் விளங்குதல், இறைவர் அம்பிகைக்குத் தம் திருமேனியிற் பாதியளித்த காலத்தில் தாம் அணிந்த சந்திரனையும் பகிர்ந்தளித்தார்போலுமென்று நினைக்கச் செய்தது. சிவபெருமான் பாதிமதியை அணிந்தா ரென்று கூறும் மரபு பற்றி இங்ஙனம் கற்பித்தார்; "பாதி மதிநதி போது மணிசடை நாதன்" (திருப்புகழ்); 'சந்த்ரார்த்த சூடாய ஸதாசிவாய' (தியாகேசர் ஸ்துதி.)

530. சிவபெருமான் ஆலகால விடத்தை உண்டமையால்தான் தேவர்கள் உயிருடன் வாழ்வாராயினரென்பது கூறப்படும்.

நாயகன் - சிவபெருமான். பொன்னுலகை - தேவலோகத்தை. பொன்னுலகை நல்கிற்றென்றது தேவர்களுக்கு உயிர் அளித்ததைக் கூறியவாறு.

531. உண்டாங் கெனினு மிலதென் றறிஞர்கள்
பொய்யெனப் புகலவு மெய்யெனப் பெயர்பெற்
றுன்னுமுன மின்னுமென வுளதாய்
மாய்வது நிலையில் யாக்கை
கண்டாங் கிகழுங் கிழமுதி ரமையத்
தைவளி பித்தென மெய்தரும் வித்திற்
கடலிற் றிரையென வுடலிற் றிரையொடு
கலியா நின்றன நலிவுசெய் நோய்கள்

---

கருதேல் - ஆலகால விடத்தை உண்டு கறுப்பு நிறத்தை அடையாதிருப்பின். அமரர் சேயிழை மாதருக்கு - தெய்வமகளிருக்கு. செங்கைகளும் கொங்கைகளும் சிவக்குமென்றது, அம்மகளிர் தம் கணவர் இறந்துபட அதனால் மார்பில் அடித்துக்கொள்வரென்பதைப் புலப்படுத்தியது; "முலைபொலி யாக முருப்ப நூறி, மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல், ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர", "ஊழி னுருப்ப வெருக்கிய மகளிர்" (புறநா. உரு: 10, உகஎ: 10) என்பவற்றிற் கணவர் இறந்துபடின், மகளிர் மார்பில் அறைந்து கொள்ளும் வழக்கம் புலப்படுத்தப்பட்டிருத்தல் காண்க.

531. (அடி, 1.) உண்டு எனினும். ஆங்கு: அசைநிலை. மெய் - உடல்; உண்மையற்றதாயினும் உடலுக்கு உண்மையென்னும் பொருளுடைய மெய்யென்னும் பெயர் வந்தது; "மெய்யாத மெய்" (122), "மெய்யினைப் பொய்யென்றான்" (ஒழிவிலொடுக்கம்), "மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே, ஏலவந் தருள்வ தன்றி" (சோணசைல. 11) என்பவை இங்கே ஒப்பு நோக்கற்குரியன. மின்னுமென - மின்னலாகுமென்று கூறும்படி; "மின்னி னிலையில, மன்னுயிர் யாக்கைகள்" (திருவாய்மொழி.)

(அடி, 2.) கண்டாங்கு இகழும் கிழம் முதிர் அமையத்து - கண்டமாத்திரத்தே யாவரும் இகழ்ச்சி செய்யும் மூப்பு மிக்க பருவத்தில்; "மூப்புமேல் வாராமை முன்னே யறவினையை, ஊக்கி யதன்கண் முயலாதான் - ஊக்கிப், புறத்திரு போகென்னு மின்னாச்சொ லில்லுள், தொழுத்தையாற் கூறப்படும்" (நாலடி. 326); "பெண்டிர் பொருவொரு நடலை நமக்கென்று வந்தன பேசிட" (கோயினான். 39.) கிழம் - மூப்பு; "கிழமுதி ரிளநலங் கிடைப்ப" (கந்த. கடவுள். 17); "சிறுகிழங்கைக் கொண்டுபெருங் கிழங்கைக் கொண்டீர்" (அழகர்கலம். 14.) ஐ வளி பித்து - கபம் வாதம் பித்தம் (458.) இவை காரணமாக நோய்கள் பிறத்தலின் இவற்றை வித்தென்றார்; "மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர், வளிமுதலா வெண்ணிய மூன்று" (குறள், 941.) கடலின் திரையென - கடலில் உண்டாகும் அலைகளைப்போல. உடலில் திரை - உடலில் உண்டாகும் தோற்சுருக்கம். கலியா நின்றன - மிகுகின்றன,

புண்டாங் கயின்முக் குடுமிப் படையொடு
மெயிறலைத் தழல்விழித் துயிருணக் கனல்சேர்
புகையாமென நிழலாமெனத் திரியா நின்றது
கொலைசெய் கூற்றம்
விண்டாங் ககலுபு மெய்ப்பொரு டுணிவோர்
மின்பொலி பொன்புனை மன்றிலெம் முயிராம்
விமலன் குஞ்சித கமலங் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசை யுலகே.

இது முதலடியும் மூன்றாமடியும்பதினொன்கு சீராய்ஏனை இரண்டடியும் பதினாறுசீராய் வந்தமையின் இடையிடை குறைந்துவந்தஆசிரியத்துறை.(ரு0

532. திங்கட் சடைக்கற்றைப் புத்தே டிருமார்பிற்
பைங்கட் டலைகள் பலவு நகுவ போலுமால்
பைங்கட் டலைகள் நகுவகண்
டங்கட் கமலத் தயனு மாலு மழுவரால்.

இது முதலடியும் மூன்றாமடியும் நாற்சீராய், ஏனை இரண்டடியும் ஐஞ்சீராய் இடைமடக்காய் வருதலின் இடையிடை குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை. (ருக)

---

(அடி, 3.) புண் - குத்திய உடலிலுள்ள புண்களை. அயில் முக்குடுமிப் படை -கூர்மையையுடைய திரிசூலம் ; " திரிசூல மும் விழத் தாக்கி யுன்னைத், திண்டாட வெட்டி விழவிடுவேன்......அந்தகா " (கந்தரலங்காரம்) என்பதனால் கூற்றுவனுக்குச் சூலப்படையுண்மை தெளிவாகும். எயிறு அலைத்து - பற்களைக்கடித்து. அழல் விழித்து-நெருப்புப்பொறி உண்டாம்படி விழித்து. கனல் சேர் புகையும் நிழலும், கூற்றுவன் நம்மைத் தொடர்ந்து நிற்றலைக் குறிக்கவந்த உவமைகள் ; " வெஞ்சம னஞ்ச வேலொ டெதிர்ந்தா னமரங்காள் " (521) என்று முன்னர்க் கூறியது காண்க.

(4.) விண்டு - பிறபொருளைத் துறந்து. மெய்ப்பொருள் துணிவோர் - அறிவுடையார் ; ஞானியர் ; "மெய்ப்பொருள் காண்ப தறிவு" ஆதலின். குஞ்சிதகமலம் - வளைந்த திருவடி. விண்மிசை யுலகு - சுவர்க்க பதவிக்கு மேலுள்ள உலகாகிய வீடு ; "விண்மிசைப் போதிய வீடு" (524)என்றார் முன்னும்.

அறிவுடையோர் இறைவன் குஞ்சிதபதத்தைக் கும்பிடுதலையே வீட்டின்பத்தினுஞ் சிறந்ததாகக் கொள்வரென்பது கருத்து ; "கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" (பெரிய. திருக்கூட்டச். 8); " ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது வாகநினை பக்தசன வாரக்காரனும்" (வேளைக்காரன்வகுப்பு.)

532. சடைக்கற்றையை யுடைய புத்தேள் : சிவபெருமான். தலைகள் - பிரமதேவர் திருமால் தலைகள் ; கற்பந்தோறும் வெவ்வேறு உளராதலின் பல தலைகள் உள்ளன. அயனும் மாலும் அழுகைக்குக் காரணம், அத்தலைகள் அவர்களது நிலையாமையை அறிவுறுத்தி அவர்கள் தலைகளுக்கும் அங்ஙிலை வருமென்பதைக் குறித்து நிற்றல்.

533. கனம ளித்தபைங் காவில்வெண் டரளமும்
பவளமுங் கமுகினப்
புனம ளித்தபூங் கொன்றைபொன் சொரிதரப்
புண்ணிய மலர்தில்லை
வனம ளித்ததே யெனினுமோ ரானந்த
மாக்கடற் றிளைத்தாடும்
அனம ளித்தவேழ் பொழிற்குமோர் பலமென்ப
தம்பொனம் பலந்தானே.*

இஃது அறுசீர்க்கழிநெடிலடியால் வந்த ஆசிரியவிருத்தம். (௫௨)

534. கோமுனி வருக்குமரி தாய்முதும றைப்பனுவல்
கூறிய பரப்பிரமமாம்
ஓமெனு மெழுத்தின்வடி வாய்நட நவிற்றுபுலி
யூரன்மகு டச்சடிலமேல்
மாமதி யிணைத்தனது கோடென வெடுப்பமத
மாமுகன் முகக்கை தொடரத்
தூமதி பணிப்பகை யெனுவர நதிப்புகவொர்
தோணியென விட்டகலுமே.

இஃது எழுசீர்க்கழிநெடிலடியால் வந்த ஆசிரியவிருத்தம். (௫௩)

---

533. கனம் - மேகம். தரளமென்றது கமுகின் பாளையை; பவளமென்றது அதன் பழத்தை; "எண்ணார் முத்த மீன்று மரகதம் போற்காய்த்துக், கண்ணார் கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி" (தே. திருஞா.) புனம் - முல்லை நிலம்; கொன்றை அந்நிலத்திற்குரியதாதலின், 'புனமளித்த பூங் கொன்றை' என்றார். கொன்றை பொன்னைப் போன்ற மலரைச் சொரிய. ஓர் ஆனந்தமாக்கடல் - சிவபெருமான். அனம் - உமாதேவியார். ஏழ் பொழிற்கும் - ஏழுலகங்களுக்கும், ஏழு சோலைகளுக்கும். ஓர் பலம் - ஒரு பயன், ஒருபழம். அம் பொன் அம்பலம் - அழகிய பொன்னம்பலம்; அழகிய பொன்னாலாகிய பழமென்று வேறொரு பொருள் தோற்றியது.

ஒருவனத்தில் உள்ள பழம் ஒன்று ஏழு சோலைகளுக்கும் உரியதாயிற்று என்னும் பொருள் தோற்றுவது இச் செய்யுளிலுள்ள நயம்.

534. கோமுனிவருக்கும் - தலைமைபெற்ற முனிவர்களுக்கும், மறைப் பனுவல் - வேதமாகிய நூல். நடராசப் பெருமானது திருக்கோலம் ஓமென்னும் எழுத்தைப்போல அமைந்தது. மகுடமாகிய சடிலம்; சடிலம் - சடை. கோடு - கொம்பு. எடுப்ப - எடுக்கும்பொருட்டு. மதமாமுகன் - விநாயகர். முகக்கை - தும்பிக்கை. (பி - ம்.) 'முகக்கை தொடவத்' விநாயகர் சிவபெருமான் திருமுடிப் பிறையைத் தம் கொம்பென்றெண்ணுதல்;

535. அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வா மாடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் றீநீர்
மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கு மொருத்திக்கு முருவொன் றுலவ்
வுருவையிஃதொருத்தனென்கோ வொருத்தி யென்கோ
இருவருக்கு முரித்தாகவொருவ ரென்றோர்
இயற்சொலில தெனின்யான்மற் றென்சொல் கேனே.

இஃது எண்சீர்க் கழிநெடிலடியால் வந்த ஆசிரியவிருத்தம். (ருச)

---

"தழைசெறி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையிற் சூடும், குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப், புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கும், மழைமதக் களிற்றின் செய்ய மல ரடி சென்னி வைப்பாம்" (நைடத. கடவுள்.) பணிப்பகை எறு - அத்துதிக்கையை நாகமாகிய பகையென்று கருதி; யானைத் துதிக்கைக்குப் பாம்பை உவமை கூறுதல் மரபு: "வேழத்துப், பாம்பு பதைப் பன்ன பருஉக்கை" (முல்லைப். 69 - 70); "யானைதன், வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை, குன்றுபுகு பாம்பிற் றோன்றும்" (அகநா. கககக : 11-8); "பாந்த ளன்ன பரேரெறுழ்த் தடக்கையின்" (பெருங். க. 58 : 8); "அனந்த னன்னகை யானை" (சீவக. 2521.) வரநதிப் புக - கங்கைநதியின் கண்ணே அப்பிறை செல்ல, ஓர் தோணியென விட்டு அகலும் - அப்பிறையை விநாயகர் ஒரு தோணியென்று நினைத்து அதனைப் பற்றுவதை யொழிந்து நீங்குவர். பிறைக் குத் தோணி உவமை : 59, 433 ; "வியன் கங்கைபொங்கி, வருநீர் மடுவுண் மலைச்சிறு தோணி வடிவின்வெள்ளைக், குருநீர் மதிபொதியுஞ் சடை வானக் கொழுமணியே" (திருவா. நீத்தல். 26.)

535. அருவருக்கும் - வெறுக்கும் (452.) அடங்க - முற்றும். அருக்கன் - சூரியன். வளி - வாயு. யமானன் - இயமானன். எண்வகை உறுப்பின் வடிவு - அட்டமூர்த்தம். அவற்றைக் கொண்ட ஒருவன் சிவபெருமான். ஒருத்திக்கும் - உமாதேவியாருக்கும். இருவருக்கும் உருவொன் றென்பதை, "ஒன்றே யுடம்பங் கிரண்டே யிடும்பங்கு" (110) என முன்னும், "செவ் வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச் சென்னியற்கும், ஒவ்வாத் திருவுரு வொன்றே யுளது" (554) என்று பின்னும் கூறுதல் காண்க. இருவருக்கும் உரித்தாக - இறைவனுக்கும் உமாதேவியாருக்கும் ஒருங்கே உரியதாக. பாற்பொதுமையின் அமைந்த ஒருவரென்னும் சொல்லைக் குறித்துள்ள "ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப், பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப" (நன்னூல், 289) என்ற சூத்திரம் இங்கே நினைத்தற்குரியது.

536. வளங்கு லாவரு மணங்க ளூர்விழி
மயங்கி லேமுலை முயக்கி லேவிழு மாந்தர்காள்
களங்கு லாமுட லிறந்து போயிடு
காடு சேர்முனம் வீடு சேர்வகை கேண்மினோ
துளங்கு நீள்கழ றழங்க வாடல்செய்
சோதி யானணி பூதி யானுமை பாதியான்
விளங்கு சேவடி யுளங்கொ ளீர்யமன்
விடுத்த பாசமு மடுத்த பாசமும் விலக்குமே.

இது ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியால் வந்த ஆசிரியவிருத்தம். (ருஙு)

537. கைத்தலத்த ழுற்க ணிச்சி வைத்திடப்பு றத்தொ ருத்தி
கட்கடைப்ப டைக்கி ளைத்த திறலோராம்
முத்தலைப்ப டைக்க ரத்தெ மத்தர்சிற்ச பைக்கு ணிற்கும்
முக்கணக்க ருக்கொ ருத்தர் மொழியாரோ
நித்திலத்தி னைப்ப தித்த கச்சறுத்த டிக்க னத்து
நிற்குமற்பு தத்த னத்தி னிடையேவேள்
அத்திரத்தி னைத்தொ டுத்து விட்டுநெட்ட யிற்க ணித்தி
லக்கணுற்றி டச்செய் விக்கு மதுதானே.

இது பதின்சீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரியவிருத்தம். (ருசு)

---

536. முயக்கு - தழுவுதல். களம் - கள்ளம்; பொய்மை; களங்கு உலாம் என்று பிரித்துக் களங்கென்பதற்குக் களங்கம் (குற்றம்) என்ப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. இறந்துபோய் இடுகாடு சேர்முனம். தழங்க - ஒலிப்ப. அணி பூதியான் - திருநீற்றை அணிந்தவர். அடுத்த பாசம் - நம்பால் அநாதியாகப் பொருந்திய பாசம்.

537. கைத்தலத்தில் அழலையும் கணிச்சியையும் வைத்து; கணிச்சி - மழு. கட்கடைப்படைக்கு இளைத்த - கடைக்கண்ணாகிய படைக்கலத்திற்கு வலியிழந்த. தாம் சிறந்த படைக்கலத்தை யுடையராக இருந்தும் ஒரு பெண்பாலின் கட்படைக்கு இளைத்தாரென்றது ஒருநயம். முத்தலைப்படை - திரிசூலம். எம் அத்தர். முக்கண் நக்கர்; நக்கர் - திகம்பரர். நித்திலத்தினைப் பதித்த கச்சு - முத்தாலாகிய கச்சு (528.) வேள் - காமன். நெடு அயில் கண்ணீர்த்துளிகளாகிய முத்துக்களையுடைய கண்ணாக அமையச் செய்விக்கும்; அழும்படி செய்விக்குமென்றபடி. செய்விக்கும் அதுதான் நக்கருக்கு ஒருத்தர் மொழியாரோ; அது - அத்துன்பத்தை.

இச் செய்யுள் தலைவி இரங்கல்.

## கலிப்பா விகற்பம்

—தரவு—

538. கொன்செய்த கலையல்குற் கொலைசெய்த மதர்வேற்கண்
மின்செய்த சிறுமருங்குற் பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மணிமன்றி னடஞ்செய்த புகழோய்கேள்.

— தாழிசை —

க. முருகுயிர்க்கு நறுந்தெரியன் மொய்குழலின் மையுண்கட்
பொருகயற்குன் றிருமேனி புதுவெள்ளப் புணரியே.

உ. தேன்மறிக்கும் வெறித்தொங்க லறற்கூந்தற் றிருந்திழைகண்
மான்மறிக்குன் றிருமேனி மலர்முல்லைப் புறவமே.

---

538. (தரவு.) பெருந்தேவி - சிவகாமவல்லியம்மையார்.

(தாழிசை.) க. முருகு - நறுமணம். தெரியல் - மாலை. மொய்குழல் - உமாதேவியாருடைய. மையுண்கட் பொருகயற்கு - மையணிந்த கண்ணாகிய மாறுபடும் கயற்கு; உமாதேவியார் என்றும் மங்கலமுடையராதலின் அவர் திருவிழிகளில் அதற்கு அறிகுறியாக என்றும் மை விளங்கும்; "மைஞ் ஞின்ற வொண்கண் மலைமகள்" (தே. திருநா.) புதுவெள்ளப் புணரி - புது நீர் வெள்ளத்தையுடைய கடல். ஆடவர்களது மேனிச்சாயற்கு நீரை உவமை கூறுதல் மரபாதலின், இங்கே இறைவன் திருமேனியைப் புதுவெள்ளப் புணரியாக உருவகம் செய்தார்; "வானி நீரினுந் தீந்தண் சாயலன்" (பதிற். அசு: 12 - 3); "நீரினுஞ் சாய லுடையன்", "வேனிற் புனலன்ன நுந்தை" (கலி. சஉ: 20, அசு: 38); "நீரினு மினிய சாயற், பாரி" (புறநா. க0ரு: 7 - 8.)

அம்பிகையின் திருக்கண்கள் நடராசப் பெருமானது திருமேனியழகிலே ஈடுபட்டுத் திளைக்குமென்பது கருத்து. பின் இரண்டு தாழிசைகளின் கருத்தும் இதுவே.

உ. கண் மான் மறிக்கு - கண்ணாகிய மான் கன்றுக்கு; மான்மறியென்றது அதன் கண்ணைக் குறித்தவாறு. மலர்முல்லைப் புறவம் - மலர்ந்த முல்லைப் பூக்களையுடைய முல்லை நிலம். மான் முல்லைநிலக் கருப்பொருளாதலின் அதற்கேற்பப் புறவத்தைக் கூறினார். சிறந்த ஆடவர்மேனி முல்லைமலரின் மணத்தையுடையதாக இருக்குமாதலின் இறைவன் நறுமேனியை முல்லைப் புறவமாக உருவகம் செய்தார்; "மணந்தனன் மன்னெடுந் தோளே, இன்று முல்லை முகைநா றும்மே" (குறுந். கக௩: 5-6); "பந்தினை யிளையவர் பயி லிட மயிலூர், கந்தனை யனையவர் கலைதெரி கழகம், சந்தன வனமல சண்பக வனமாம், நந்தன வனமல நறைவிரி புறவம்" (கம்ப. நாட்டுப். 48.)

ங. பிறையளிக்குஞ் சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்க்கட்
சிறையளிக்குன் றிருமேனி தேனளிக்கும் பொதும்பரே.

அதனால்

— சுரிதகம் —

மதுவிரி கோதை மடவரற் கம்ம
புதுவிருந் துண்ண வுண்ண
அதிசயம் விளைக்குநின் னற்புதக் கூத்தே.

இது, தரவொன்றும் தாழிசை மூன்றும் தனிச்சொல்லும் சுரிதகமு மாய் வருதலின் நேரிசை யொத்தாழிசைக்கலிப்பா. இதனுட்பிறையளிக் குஞ்சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்க்கண் என இரண்டாஞ் சீரும் ஈற்றுச்சீரும் முரணத் தொடுத்துப் பின்முரண் வந்தவாறு காண்க. இதனானே, தரவு மூன்றடிச்சிறுமை யுடைத்தெனவும், தாழிசை இரண்டடிச் சிறுமை யுடைத்தெனவும் உணர்க. (ருஎ)

— தரவு —

539. பேதைமீர் பேதைமீர்
பூமன்னு திசைமுகனும் புயல்வண்ணப் பண்ணவனும்
காமன்னு புரந்தரனுங் கடவுளரும் புடைநெருங்க
இருகோட்டுக் கிடைந்தவிடு கிடையவர்பல் லாண்டிசைப்ப
ஒருகோட்டு மழகளிறு மிளங்கோவு முடன்போத
அம்பொன்மணி மதிற்றில்லை நடராச னணிமறுகில்
செம்பொன்மணிப் பொலந்திண்டேர்த்திருவுலாப் போதுங்கால்,

---

ங. பிறையளிக்கும்; அளிக்கும்: உவமவுருபு. கண்ணுகிய சிறையை யுடைய அளிக்கு: அளி - வண்டு. பொதும்பர் - சோலை; 495 - ஆம் செய் யுளைப் பார்க்க.

அதனாலென்பது தனிச்சொல்.

(சுரிதகம்.) அற்புதக்கூத்து - ஞான நடனம்.

539. (தரவு.) பேதைமீர் பேதைமீர் என்னும் அடுக்கு, பன்மைபற்றி வந்தது. புயல்வண்ணப் பண்ணவன் - திருமால். கா - கற்பகதரு. இருகோட் டுக்கு இடைந்த இடுகு இடையவர் - நகில்களாகிய இரண்டு மலைச்சிகரங்க ளுக்கு மெலிந்து சிறுகிய இடையையுடைய மகளிர்; கோடு - யானைக்கொம் புமாம். மழகளிறு - விநாயகர். இளங்கோ - முருகக்கடவுள்.

— தாழிசை —

க. பாரித்த பேரண்டஞ் சிறுபண்டி கொளப்பெய்து
வாரித்தண் புனற்றுஞ்சு மாலுக்கு மால்செய்வீர்
வேரித்தண் குழலார்கை வளைகொள்ள விழைந்தேயோ
பூரித்து வீங்குவதும் புயமென்பார் சிலமாதர்.

உ. சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய்
நன்மாலைக் குழலியர்பா னள்ளிருளிற் செலவல்லீர்
பன்மாத ருயிர்கொள்ளல் பழியன்றே பகைகொள்ளும்
வின்மார னுயிர்கொண்ட விழிக்கென்பார் சிலமாதர்.

ந. அங்கமலன் முடைத்தலையே பலிக்கலனு வையமிடும்
மங்கையர்க ணலங்கவர்வான் பலிக்குழலு மாதவத்திர்
தங்கலர்தங் கியமும்மைப் புரமன்றே தலையன்பின்
நங்கையர்தம் புரமுமது நகைக்கென்பார் சிலமாதர்.

---

(தாழிசை.) க. பாரித்த - பரவிய. சிறு பண்டி - சிறிய வயிறு. மால் - காமமயக்கம். வேரி - தேன். பூரித்து - பருத்து. இறைவன் திருத்தோட் பெருமை மகளிருக்கு மயலுறுத்தி அவரை இளைக்கச்செய்தலின் வளைநழு வும்; ஆதலின், வளைகொள்ளும்பொருட்டுத் தோள் பருத்தனவென்று கூறினர்.

உ. "சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்" (பெரிய. தடுத்தாட். 70) என்பதனால் சுந்தரமூர்த்தி நாயனாரைச் சிவபெருமானே பாடப்பணித்தனரென்று தெரிதலின், இங்கே அச்சிறப்புப் பற்றித் தேவாரம் பாடிய வேறு இருவர் இருப்பவும் அவரையே, 'சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்' என்று சிறப்பித்தார். துணைவர் - தோழர்; "ஏழிசையா யிசைப் பயனா யின்னுயிரா யென்னுடைய, தோழனுமாய்" (தே.) என்று சுந்தர மூர்த்தி நாயனாரே கூறுதல் காண்க. நன்மாலைக் குழலியர் - பரவை நாச்சி யார். ஒரு பெண்ணுக்கு நன்மை செய்த தேவரீரது கண் பல மாதருக்குத் துன்பம் உண்டாக்குதல் முரண்பாடன்றோ என்றவாறு.

ந. அம் கமலன் - பிரமதேவர். முடை - புலால் நாற்றம். பலிக்கலன் - பிச்சை யேற்கும் பாத்திரம். ஐயம் - பிச்சை. மங்கையர்கள் - தாருகாவ னத்து முனிவருடைய மனைவியர். தங்கலர் - பகைவர். தலையன்பின் - சிறந்த அன்பையுடைய (105.) நங்கையர்தம் புரம் - மகளிர் உடம்புகள். தும் நகையினால் மகளிர் வெம்மையுறுகின்றனரென்பது கருத்து.

—ஈரடி அம்போதரங்கம்—

அருங்கலை கவர்ந்துநீ ரளிக்கப் பெற்றநும்
இருங்கலை யினிதெமக் கென்பரோர் சிலர்.

நன்னிறங் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிற மினிதெனப் புகல்வ ரோர் சிலர்

— நாற்சீர் ஓரடி அம்போதரங்கம் —

தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்.
ஏரினை நோக்கியே யெழுவர் சிற்சிலர்.
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்.
மாரினை நோக்கியே மருள்வர் சிற்சிலர்.

— முச்சீரோரடி அம்போதரங்கம் —

நலனழிந்து நிற்பார் சிலர்.
நாண்டுறந்து நிற்பார் சிலர்.
கலனழிந்து நிற்பார் சிலர்.
கண்கலுழ்ந்து நிற்பார் சிலர்.

---

புரமென்பதைத் திரிபுரம், உடலென்னும் இருபொருளில் வைத்து அமைத்த பின்வரும் செய்யுட்பகுதிகள் இங்கே ஒப்புநோக்கற்குரியன : "வெண்ணி லாமுகிழ்க் குங்குறு மூரலால் வீணி லேயெம் புரத்தெரி யிட்டீர், கண்ணி னுலுமிக் காமனைக் காய்ந்திடிற் கடவு ணீரென் றிறைஞ்சுதுங் காணுமே" (615); "மேலைப் புரத்தை நகைத்தெரித்தீர் வில்வேள் புரத்தைப் பகைத்தெரித்தீர்" (அருணைக்கலம். 22.)

(அம்போதரங்கம்.) கலை - ஆடை. நும் இருங்கலையென்பது திகம்பரத்தை; "திகம்பரரா நும்மைத் தெரிந்தடைந்த யாமும், திகம்பரரே யாகிச்சிறந் தோம்" (திருவிடைமருதூருலா, 319.) நன்னிறமென்றது மாமையை. பொன் னிறமென்றது பசலை நிறத்தை. இறைவன் பொன்னிறமுடையவனாதலின், 'நும் பொன்னிறம்' என்றார்; 510-ஆம் செய்யுளையும் அதன் குறிப்புரை யையும் பார்க்க. இவை இரண்டும் நாற்சீரடி அம்போதரங்கம்; பேரெண்.

ஏர் - அழகு. மார் - மார்பு; "கடுக்கைத் தொடைமார் கழியான்" (திருவானைக்காவுலா); "மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே" (திருப்புகழ்); "மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே" (படிக்காசுப்புலவர்பாடல்)

நாற்சீர் ஓரடி அம்போதரங்கம் நான்கும் அளவெண் ; முச்சீரோரடி அம்போதரங்கம் நான்கும் இடையெண்.

—இருசீர் ஓரடி அம்போதரங்கம்—

பாடு வார்சிலர். ஆடு வார்சிலர்.
பரவு வார்சிலர். விரவு வார்சிலர்.
வாடு வார்சிலர். ஓடு வார்சிலர்.
மகிழு வார்சிலர். புகழு வார்சிலர்.

ஆங்கொருசார்

—சுரிதகம்—

முதிரா விளமுலை மழலையந் தீஞ்சொல்
மங்கை மற்றிவ ணங்குலக் கொழுந்து
கணங்குழை யவரொடும் வணங்கின ணிற்பச்
சோர்ந்தது மேகலை நெகிழ்ந்தன தோள்வளை
சாந்தமுங் கரிந்தது தரளமுந் தீந்தன
இவ்வா றுயின ளிவளே செவ்விதின்
ஆம்பற் பூவின் முல்லையு முகைத்தில
இளையோள் சாலவு மம்ம
முதியோள் போலுங் காம நோய்க்கே.

இது தாழிசைக்கும் தனிச்சொற்கும் இடையே நால்வகை அம்போதரங்கமும் பெற்று வருதலின் அம்போதரங்கம் ஒத்தாழிசைக் கலிப்பா. இதன் முதற்கண் பேதைமீர் பேதைமீர் என அடி கூறுய் வந்தவாறு காண்க. (௫அ)

---

இருசீர் ஓரடி அம்போதரங்கம் எட்டும் சிற்றெண்.

ஆங்கொருசாரென்பது தனிச்சொல்.

(சுரிதகம்.) மங்கையென்றது இங்கே பருவங் குறியாது பெண்ணென்னுந் துணையாய் நின்றது. சாந்தம் - சந்தனம். ஆம்பற் பூவின் முல்லையும் முகைத்தில - செவ்வாம்பல் மலரைப்போன்ற வாயில் முல்லையரும்பைப் போன்ற பற்களும் தோற்றவில்லை. பேதைப் பருவத்தினளாகிய இவள் மங்கைப் பருவத்தினளைப் போல காமமயக்கம் கொண்டது வியப்பு என்றவாறு. " முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே, மலைய னொள்வேற் கண்ணி, முலையும் வாரா முதுக்குறைந் தனளே " (பழம்பாடல்.)

இச் செய்யுள் செவிலிக்காய் கூற்று.

—தரவு—

540. தொல்லுலகம் படுசுடிகைச் சுடர்மணி விளக்கேந்தும்
பல்பொறிய படவரவு மடுபுலியும் பணிசெய்ய
அந்தரதுந் துபிமுழங்க வமரர்மலர் மழைசிந்த
இந்திர னு மலரவனுங் கரியவனு மேத்தெடுப்பச்
சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவிதுணைக் கண்களிப்ப
ஆடகத் திருமன்றத் தனவரத நடஞ்செய்வோய்.

—தாழிசை—

க. முன்மலையுங் கொலைமடங்க லீருரியு மும்மதத்த
வன்மலையுங் கடமலையின் முடையுடலின் வன்றோலும்
பொன்மலையின் வெண்முகிலுங் கருமுகிலும் போர்த்தென்ன
வின்மலையும் புயமலையின் புறமலைய விசித்தனையே.

உ. கடநாக மெட்டும்விடங் காலுநாக மோரெட்டும்
தடநாக மவையெட்டுந் தரித்துளபூந் துகிலொன்றும்
உடனாக வடல்புரியுங் கொடுவரியி னுடுப்பொன்றும்
அடனாக வரவல்குற் கணிகலையா வசைத்தனையே.

---

540. (தரவு.) படு - பொருந்தும். சுடிகை - உச்சி. ஆதிசேடன் உலகத்தைத் தாங்குதலின் அவன் உச்சியை, 'தொல்லுலகம் படுசுடிகை' என்றார். சுடிகைச் சுடர் மணி - தலையிலுள்ள ஒளி வீசும் மணி. மணியாகிய விளக்கை ஏந்தும். படவரவு - ஆதிசேடன்; இங்கே அவனது அவதாரமாகிய பதஞ்சலி முனிவரை. ஆதிசேடன் மணி விளக்கேந்துதல்: "ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கை" (மார்க்கண்டேயனார் காஞ்சி.) அடுபுலி - வியாக்கிரபாதர். கரியவன் - திருமால். சூடகம் - கைவளை. துணைவி - சிவகாமவல்லி. அனவரதம் - எப்பொழுதும்.

(தாழிசை.) க. மலையும் - எதிர்த்த. மடங்கல் ஈருரி - சிங்கத்தின் தோல்; மடங்கல் - சிங்கம்; ஈர்உரி - ஈர்ந்த உரி; "சிங்கத்துரி மூடுதிர் தேவர்கணந் தொழுநிற்றீர்" (தே. சுந்தர.) கடமலை - யானை. பொன்மலை சிவபெருமானுக்கும், வெண்முகில் சிங்கத்தோலுக்கும், கருமுகில் யானைத்தோலுக்கும் உவமைகள். வில் மலையும் - வில்லை அணிந்த; வில் - ஒளியுமாம். புறம் அலைய. விசித்தனை - கட்டினை.

உ. கடநாகம் - யானை. தடநாகம் - பரந்த மலைகள். பூந்துகிலென்றது திகம்பரத்தை. எட்டுத்திக்குகளிலும் அட்ட திக்கயங்களும் அட்டமாநாகங்களும் அட்ட குலாசலங்களும் உளவென்று கூறுவர். கொடுவரியின் - புலியினது. உடுப்பு - உடை. நாகவரவல்குற்கு - நாகப்பாம்பைப்போன்ற பின் தட்டிற்கு; ஆடவர்க்கு அல்குல் கூறுதல்: "பைவாய்ப் பொறியர வல்குலெந்தாயென்று பாடுதுமே" (554); "மார்பு மல்குலு மனத்தொடு பரிவை" (பரி. கக : 54.)

௩. வருநீலப் புயன்மலர மலரிதழிக் கண்ணியையும்
அருநீல முயற்களங்க மகன்றமதிக் கண்ணியையும்
கருநீலக் கண்ணியுமை செங்கைவரு கங்கையெனும்
திருநீலக் கண்ணியையுஞ் செஞ்சடைமேற் செறித்தனையே.

—அராகம்—

க. கறைவிட முகவெரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றொடுமிடல் பெறுபக டொடுமடல்
எறுழ்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை.

உ. உலகமொ டுயிர்களு முலைதர வலம்வரும்
மலர்மகள் கொழுநனு மகபதி முதலிய
புலவரு மடிகளொர் புகலென முறையிட
அலைகடல் விடமுன மமுதுசெய் தருளினை.

௩. விசையிலெ மிறைவியும் வெருவர விரசத
அசலம தசைதர வடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிர னிறுவினை.

---

௩. நீல நிறம் பொருந்திய மேகம் வெளிப்பட மலர்கின்ற கொன்றையாகிய கண்ணியையும், அரிய கருப்புநிறம் பொருந்திய முயலாகிய கறை நீங்கிய பிறையாகிய கண்ணியையும், கரிய நீலக்கண்களை யுடைய உமாதேவியாரது செவ்விய திருக்கரத்திலே தோற்றிய கங்கை யென்னும் அழகிய நீலநிறம் பொருந்திய கண்களையுடையவளையும் செந்நிறமுள்ள சடையின் மேல் அணிந்தருளினை. கங்கை உமாதேவியாரது திருக்கரத்திலே தோற்றிய செய்தி, "சங்கரன் விழிகண் மூடுந் தனுதுகை திறக்கு மெல்லை, அங்குலியவையிரைந்து மச்சத்தால் வியர்ப்புத் தோன்ற, மங்கையத் தகைமை காணூஉ மற்றவை விதிர்ப்பப் போந்து, கங்கையோர் பத்தா யாண்டுங் கடல்களிற் செறிந்தவன்றே" (கந்த. ததீசியுத்தரப். 369) என்பதனால் விளங்கும்.

(அராகம்.) க. பகடு - எருமைக்கடா. மறலி - யமன். உ. உலைதர - அழிய. புலவரும் - தேவர்களும். ௩. விசையில் - இராவணன் கைலைமலையைத் தூக்கிய வேகத்தினால். இரசத அசலம் - கைலாயமலை. தசமுக நிசிசரன் - இராவணன். நெறுநெறுநெறுவென: "நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்" (தே. திருநா. திருப்பூவணம்.) மணிவிரல் - பெருவிரல்.

ச. இலவிதழ் மதிநுத லிரதியொ டிரதம
துலைவற நடவிடு மொருவனும் வெருவர
அலைகட னெடுமுர சதிர்தர வெதிர்தரு
சிலைமத னனையடல் செயுநுதல் விழியினை.

—ஈரடி அம்போதரங்கம்—

அருவமு முருவமு மாகி நின்றுமவ்
வருவமு முருவமு மகன்று நின்றனை.
சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையுந் துறந்து நின்றனை.

—ஓரடி அம்போதரங்கம்—

அந்நலம் விழைந்தவர்க் கறமு மாயினை.
பொன்னலம் விழைந்தவர் பொருளு மாயினை
இன்னலம் விழைந்தவர்க் கின்பு மாயினை.
மெய்ந்நலம் விழைந்தவர் வீடு மாயினை.

—முச்சீரோரடி அம்போதரங்கம்—

முத்தொழிலின் வினைமுத னீ. மூவர்க்கு முழுமுத னீ.
எத்தொழிலு மிறந்தோய் நீ. இறவாத தொழிலினை நீ.
இருவிசும்பின் மேயோய் நீ. எழின்மலரின் மிசையோய் நீ.
அரவணையிற் றுயின்றோய் நீ. ஆலின்கீ ழமர்ந்தோய் நீ.

---

ச. நடவிடும் - செலுத்தும். ஒருவன் - வசந்தன். கடலாகிய நெடிய முரசு.

நாற்சீரடி அம்போதரங்கம் இரண்டும் **பேரெண்.**

(நாற்சீரோரடி அம்போதரங்கம்.) அந்நலம் - அறத்தின் நன்மை; செய்யுளாதலின் சுட்டு முன்வந்தது. இல் நலம் - இல்வாழ்க்கையின் நன்மை; மெய்ந்நலம் - உண்மையான இன்பத்தை (549.) இவை நான்கும் **அளவெண்.**

**(முச்சீரோரடி அம்போதரங்கம்.)** முத்தொழிலின் வினைமுதல் - ஆக்கல், அளித்தல், அழித்தலென்னும் மூன்று தொழில்களையும் செய்யும் கருத்தா (520.) மலரின் மிசையோய் - பிரமாவாகி யிருப்பாய். அரவணையில் துயின்றோய் - திருமாலாகி இருப்பாய். ஆலின்கீ ழமர்ந்த திருவுருவம் தட்சிணாமூர்த்தியின் திருவுருவம். இம்முச்சீரோரடி அம்போதரங்கம் எட்டும் **இடையெண்.**

—இருசீரோரடி அம்போதரங்கம்—

பெரியை நீ. சிறியை நீ. பெண்ணு நீ. ஆணு நீ.
அரியை நீ. எளியை நீ. அறமு நீ. மறமு நீ.
விண்ணு நீ. மண்ணு நீ. வித்து நீ. விளைவு நீ.
பண்ணு நீ. பயனு நீ. பகையு நீ. உறவு நீ.

எனவாங்கு

—சுரிதகம்—

கற்பனை கடந்தநின் பொற்கழ லிறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுண் மீமிசைத் தவழ்தரத்
தண்முகிற் குலங்க டாழ்வுறப் படிதலிற்
செங்கா லன்னமும் வெண்மருப் பேனமும்
கீழ்மே றுருவ வாரழற் பிழம்பாய்
நின்றநின் றன்மையை யுணர்த்தும்
பொன்றிகழ் புலியூர் மன்றுகிழ வோனே.

இது தாழிசைக்கும் அம்போதரங்கத்திற்கும் இடையே அராக வுறுப்புப் பெற்றுக் கலியுறுப்பு ஆறும் குறைவின்றி வந்தமையால் **வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.** இவ்வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும் சிறுமை பெருமையின்றி ஆறடித்தரவே வந்தவாறு காண்க. (௫௯)

541. சேல்செய்த மதர்வேற்கட் சிலைசெய்த சுடிகைநுதல்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யும்
தருணவிளம் பிறைக்கண்ணித் தாழ்சடையெம் பெருமானின்
கருணைபொழி திருநோக்கிற் கனியாத கன்னெஞ்சம்
வாமஞ்சான் மணிக்கொங்கைக் கொசிந்தொல்கு மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கிற் கரைந்துருகா நிற்குமால்
அவ்வண்ண மாறிநிற்ப தகமென்று லகமகம்விட்
டெவ்வண்ண மாறிநிற்ப தின்று.

இது கலித்தளை தட்டுத் துள்ளலோசைத்தாய் வெண்பாவேபோல் முடிந்தமையால் **வெண்கலிப்பா.** (௬0)

---

(**இருசீரோரடி அம்போதரங்கம்.**) பண் - இராகம். பயன் - இசையினாற் பெறும் பயன்; "ஏழிசையா யிசைப்பயனாய்" (தே. சுந்தர. திருவாரூர்.)

இருசீரோரடி அம்போதரங்கம் பதினாறும் **சிற்றெண்.** எனவாங்கு என்பது **தனிச்சொல்.**

(**சுரிதகம்.**) கற்பனை கடந்த கழல்: 333. தருவ - தேட. பொன்னம்பலத்திற்கு அழற்பிழம்பும், சந்திரனுக்கு அன்னமும், மேகத்திற்கு ஏனமும் உவமைகள்.

541. சுடிகை - சுட்டி. தருண இளம் பிறை - மிக இளைய பிறை; தருணம் - இளமை. கனியாத - உருகாத. வாமம் - அழகு. அகம் - மனம். அகம் விட்டு - பாவத்தையொழிந்து.

542. அற்புத மணிமன் றி லடிகணின் னடியுன்னூர்
மைக்கடல் விடமென்னும் வடவைத்தீ யெழவஞ்சி
நொஎன வடிவீழ்ந்தார்க் குதவிலர் நாணூர்கொல்
கைத்தல வபயத்தர் வரதத்தர் கைசெய்யாச்
சித்திர மன்ன சிலர்.

இது பிறதளை விரவி வந்த வெண்கலிப்பா. இதனுள் நொ எனக் குற்றெழுத்து விட்டிசைத்தவழித் தனியே நின்று முதற்கண் நேரிசையாயிற்று. அவ்விட்டிசை வல்லோற்றோடு ஒத்து எதுகையாய் நடத்தலின் இது விட்டிசைவல்லொற்றெதுகை. (சுக)

543. தொடலைக் குறுந்தொடித் தோகாய்நம் பாவை
படலைச் சிறுமுச்சி யுச்சிப் பசுங்கிள்ளை
பேதைக் குழாத்தொடு நென்னற் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட் டயருங்கால்
ரு. அஞ்சனக் கண்ணாளுந் தாமு மணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனூர் வெள்விடைமேற் சேறலும்
உண்ணெக் குருக வெதிர்ப்பட் டுடையானைக்
கண்ணிற் பிணித்து மனத்திற் கொடுபுக்

---

542. அடிகள் நின் - தேவரீருடைய. அடி உன்னூர் - திருவடிகளை நினையாராய். நொ என - துன்பமென்று முறையிட்டு; "நொ அலைய னின்னாட்டை நீ" (யா. கா. மேற்.) கைசெய்யா - கையால் இயற்றப்படாத.

சிவபெருமானை யொழிந்த தேவர்கள் தமக்கு வந்த துன்பத்தையே நீக்கிக் கொள்ள அறியாராய், தம்பால் துன்பம் நீங்கும்பொருட்டு வருவோர்க்கும் உதவி செய்திலர். அங்ஙனம் இருப்பதனால் அவர், தம்பாற் சரணடைந்தோரைப் பாதுகாக்கும் குறிப்புடைய அபயவரதங்களை உடையவராயிருத்தல் பயனின்று; சித்திரத்திற்குச் செயலில்லை யாதல்போல அவர்களுடைய அபயவரதத் திருக்கோலத்திற்கும் பயனில்லை யென்றவாறு.

543. சிவபெருமான் திருவுலாவைத் தரிசித்து மால்கொண்ட தலைவி யொருத்தியின் நிலையைத் தோழி கூறியது இது.

(அடி, 1-2.) தொடலைக் குறுந்தொடி - மாலை போலத் தொடர்ந்த சிறு வளையினையுடையாள் (குறள், 1135.) படலை - தழை விரவித் தொடுத்த மாலை.

(3.) பேதைக் குழாம் - பேதைமகளிர் கூட்டம். நென்னற் பொழுது - நேற்றைப்பொழுது.

(4) வீதிக்கே - வீதியில்; உருபு மயக்கம்.

(5.) அஞ்சனக் கண்ணாள் - உமாதேவியார்.

இறைவளை சிந்த வணிதுகில் சோரப்
௧௦ பிறரறியா வண்ணம் புணர்ந்தும் புணராள் போல்
மையுண்கண் ணீர்சோரச் சோர்தலும் வார்குழலார்
கைகோத் தெடுத்துக் கடிமனை கொண்டுய்ப்பப்
பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலும்
செந்தீப் பிழம்பிற் கிடத்திச் செருச்செய்வ
௧௫ தந்தோ கொடிதுகொடி தென்செய்தி ரன்னைமீர்
பொன்னஞ் சிலையே சிலையாப் புரமெய்தான்
தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ தம்மினென
மின்றந்த நுண்ணிடையா யெங்கோன் விரைத்தொங்கல்
தன்றந்தை தாளெறிந்தாற் கன்றித் தரானென்றேற்
௨௦ கன்றே பகைநோக் களித்தாண்மற் றம்ம
சிறியாள் பெரும்பித் தறிந்திருந்துஞ் செவ்வி
அறியா துரைத்தே னது.

இது செப்பலோசைத்தாய் ஒரு பொருணுதலி அவ்வாறு வந்தமையால் கலிவெண்பா. (௬௨)

544. அடிகொண்ட குனிப்பன்றே யரிபிரமர் முதலானோர்
முடிகொண்ட தலைவணக்கின் குனிப்பெல்லா முறைமுறைபோய்
கடிகொண்ட பொழிற்றில்லை நடராசன் கழற்காலிற்
குடிகொண்ட படிபோலும் மிடத்தாளிற் குஞ்சிதமே.

இது கவித்தளை தட்டுத் தனிச்சொல்லும் சுரிதகமும் பெறாது தனியே வந்த தரவு கொச்சகம். (௬௩)

---

(அடி, 9.) இறை - முன்கைச்சந்து.

(10.) பிறரறியாவண்ணம் புணர்ந்தென்றது உள்ளப்புணர்ச்சியைக் குறித்தபடி.

(13.) குளிரி - ஒருவகை நீர்ப்பூடு, நீலோற்பலமுமாம்; பூந்தடுக்கென் பாரு முளர்.

(16.) பொன்னஞ்சிலை - மேருமலை. சிலையா - வில்லாக.

(17.) கடுக்கை - கொன்றைமாலை. என - என்று தலைவி கூற.

(19.) தன் தந்தை தாளெறிந்தான் - சண்டீசர்; சிவபெருமான் அணிந்த கொன்றை முதலிய நிர்மாலியங்கள் அவருக்குரியன (118, 640.)

(அடி, 21.) செவ்வி - சமயம்.

544. குனிப்பு - வளைவு. கடி - நறுமணம். இடத்தாளிற் குஞ்சிதம் அடிகொண்ட குனிப்பன்று; குடிகொண்ட படிபோலுமென்க.

—தரவு—

545. மல்லாண்ட திரடிண்டோட் டுழாய்முதலு மணிநாவிற்
சொல்லாண்ட மறைமுதலும் பலராங்குத் தொலைவெய்த
பல்லாண்டு செலச் செல்லா விளையோரும் பனிப்பெய்த
அல்லாண்ட நள்ளிருளி லழலாடுந் தொழிலினையே.

அதனால்

—சுரிதகம்—

பல்பே ரூழி செல்லினு மடிகட்
கொல்லையுஞ் செல்லா தாகு மாகலின்
அளவில் கால மலக்கணுற் றுழலுமென்
தளர்வு நோக்காய் போலு நோக்கின்
கருணைசெய் தருளா யல்லை
அருணலம் பழுத்த வாடல்வல் லோயே.

இது தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த தரவுகொச்சகம். (கூசு)

—தரவு—

546. க. குழைதூங்கு கழைமென்றோட் கோமாரி கொலைக்கண்கள்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேயெய்தா நாணெய்த
உழைதூங்கு குயிலேங்க வுருமுத்தி யுகநக்கு
மழைதூங்கு பொழிற்றில்லை மணிமன்று ணடஞ்செய்வோய்.

545. துழாய் முதல் - திருமால். (பி - ம்.) 'நடுமுதலு மணிநாவிற்' மறைமுதல் - பிரமதேவர் (494.) இளையோர் - சனகாதி முனிவர். பனிப் பெய்த - நடுங்க அழலில் ஆடும். நள்ளிரவில் ஆடுதல் : 34 ; "நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே" (திருவா. சிவபுராணம்.) அதனால் என்பது தனிச்சொல். ஒல்லையும் - சிறிது பொழுதும்.

546. க. கழை - மூங்கில். கோமாரி - கௌமாரி; காளி. இறைவனோடு நடனஞ்செய்ய இயலாமையின் நாணினள். இழை - ஆபரணம். கண்களை நகிற்கண்ணே வைத்தல் நாணக் குறிப்பு ; "சிலைமுகங் கோட்டுமச் சில்லரித் தடங்கண், முலைமுகங் கோட்டினள்" (547) என்று பின்வருதலைக் காண்க. குயில் ஏங்க - மழையைக் கண்டு குயில் வருந்த. உருமுத்தி - இடி. (பி - ம்.) 'குயினேங்க' மழை - மேகம்.

உ. மீனேற்றின் றுவசத்தான் றனிதுஞ்ச விழித்தோய்நின்
ஆனேற்றின் றுவசமோ வடலேற்றி னூர்தியோ
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே.

எனவாங்கு

—சுரிதகம்—

பைந்துழாய் மவுலிப் பண்ணவ னுவப்ப
அந்தணர் பழிச்சவு மறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்
அனைய தன்றே யான்றோர் கடனே.
இது தரவிணைக் கொச்சகம். (சுரு)

—தரவு—

547. மறைதங்கு திருமன்றி னடங்கண்டு மகிழ்பூத்துக்
கறைதங்கு படவரவ மிமையாது கண்விழுப்பக்
குறைதங்கு கலைநிறையிற் கோளிழைக்குங் கொல்லென்று
நிறைதங்கு தலையுவவு நிரம்பாது நிரப்பெய்தும்
பிறைதங்கு சடைக்கற்றைப் பெரும்பற்றப் புலியூரோய்.

---

உ. மீனேற்றின் துவசத்தான் - மன்மதன். ஆனேற்றின் துவசம்; இன்: வேண்டாவழிச் சாரியை. கான் - காடு. பைங்கூழின் கவளமா - பசும் பயிராகிய உணவாக. தருமதேவதையாகிய இடபம் துவசமாகவும் திருமால் வாகனமாகவும் இருத்தலை நினைந்து இங்ஙனம்கூறினர். எனவாங்கு என்பது தனிச்சொல்.

பைந்துழாய் மவுலிப் பண்ணவன் - திருமால். உலகை உண்டவராத லின் அவர் உவந்தார். பழிச்ச - வாழ்த்த. அறத்தின் புங்கவன் - கொடி யாக உள்ள தருமதேவதை. முனியான் முனிவன்போலும் - சினங்கொள் ளாதவனாயினும் சிறிதே சினங்கொள்வன்போலும்; போலுமென்றது ஐயத் தைக் குறித்தது. அனையது - அங்ஙனம் முனிதல். ஆன்றோர் கடன் அன்று; ஆதலின், முனியானென்க.

கொடியும் ஊர்தியுமாக உள்ளார் இருவரையும் புகழாமல் ஊர்தியை மாத்திரம் புகழ்தலின் அறக்கடவுள் முனிதற்குக் காரணமுளதாயிற்று. அங் ஙனம் முனிதல் ஆன்றோர் கடனன்றாதலின் அதனை யொழிந்தனனென்பது கருத்து.

547. (தரவு.) படவரவமென்றது பதஞ்சலியை. தலையுவவு நிரம்பாது - பூர்ணிமைக்குரிய முழு உருவத்தையும் பெறாமல். நிரப்பு - கலைகுறைதலாகிய வறுமை.

எனவாங்கு

— தாழிசை —

க. வெள்ளெருக்குங் கரும்பாம்பும் பொன்மத்து மிலேச்சியெம
துள்ளிருக்கும் பெருமானின் றிருமார்பி னுறவழுத்தும்
கள்ளிருக்குங் குழலுமையாண் முலேச்சுவட்டைக்கடுவொடுங்கும்
முள்ளெயிற்ற கறையரவ முழையென்று நுழையுமால்.

அதாஅன்று

உ. சிலேக்கோடு பொருமருப்பிற் புகர்முகனின் றிருமார்பில்
முலேக்கோடு பொருசுவட்டைக் கண்டுநின் முழவுத்தோள்
மலேக்கோடி விளையாடும் பருவத்து மற்றுத்தன்
கொலேக்கோடு பட்டவெனக் குலேந்துமனங் கலங்குமால்.

அதாஅன்று

ங. விடமார்ந்த சுடரிலேவேல் விடலேநின் மணிமார்பில்
வடமார்ந்த முலேச்சுவட்டைக் கண்டுதன் மருப்பெந்தை
தடமார்பம் விடர்செய்யச் சமர்செய்தான் கொல்லென்று
கடமார்வெங் கவுட்சிறுகட் கயாசுரனே வியக்குமால்.

அதனல்

— சுரிதகம் —

சிலேமுகங் கோட்டுமச் சில்லரித் தடங்கண்
முலேமுகங் கோட்டின ணகுமால்
மலேமுகங் கோட்டுநின் மற்புய மறைந்தே.

இது தரவு ஒன்றும் தாழிசை மூன்றும் இடையிடை தனிச்சொல் லும் பெற்றுச் சுரிதகத்தால் இறுதலின், **நிஃருழிசைக் கொச்சகம்.** (கசு)

---

எனவாங்கு என்றது **தனிச்சொல்.**

(**தாழிசை.**) க. பொன்மத்து - ஒருவகை ஊமத்தமலர். கடு - விடம். முழை : 674.

அதாஅன்று என்பது **தனிச்சொல்.**

உ. புகர்முகன் - விநாயகக் கடவுள். முழவுபோன்ற தோளாகிய மலே.

அதாஅன்று என்பது **தனிச்சொல்.**

ங. வேல்விடலே - முருகக் கடவுள். தன்னென்றது கயாசுரனே. விடர் - பள்ளம். கயாசுரனேடு இறைவன் போர்புரிந்த செய்தி **கந்தபுராணம்**, தக்ஷ யுத்தரப் படலம், 128-146-ஆம் செய்யுட்களால் அறியப்படும்.

அதனல் என்பது **தனிச்சொல்.**

(**சுரிதகம்.**) சிலே : புருவம். தடங்கண் - உமாதேவியார்,

— தரவு —

548. ஒருநோக்கம் பகல்செய்ய வொருநோக்க மிருள்செய்ய
இருநோக்கிற் றொழில்செய்துந் துயில்செய்து மிளைத்துயிர்கள்
கருநோக்கா வகைகருணைக் கண்ணோக்கஞ் செயுஞானத்
திருநோக்க வருணோக்க மிருநோக்குஞ் செயச்செய்து
மருநோக்கும் பொழிற்றில்லை மணிமன்று ணடஞ்செய்வோய்.

— தாழிசை —

க. கடிக்கமலப் பார்வைவைத்துங் கண்ணனார் காணாநின்
அடிக்கமல முடிக்கமல மறியாதே மறிதுமே.

உ. முத்தொழிலின் முதற்றொழிலோன் முடியிழந்தான் றனையிகழ்ந்த
அத்தொழிலிற் கெனிற்றமியே மறிதொழிற்கும் வல்லமே.

௩. இருக்கோல மிட்டுமின்னு முணராதா லெந்தைநின்
திருக்கோல மியாமுணர்ந்து சிந்திக்கக் கடவமே.

ச. நான்மறைக்குந் துறைகண்டார் தோளிழந்தார் நாவிழந்திங்
கூன்மறைக்க மறைப்புண்டே முய்த்துணர்வு பெரியமே.

---

548. (தரவு.) ஒரு நோக்கம் பகல் செய்ய - வலத்திருக்கண்ணாகிய சூரியன் பகலை உண்டாக்க; திவாகரனென்னும் பெயர் சூரியனுக்குளதாதலைக் காண்க. ஒரு நோக்கம் இருள் செய்ய - இடத்திருக்கண்ணாகிய சந்திரன் இருளை உண்டாக்க (475); "பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும், இரவுச் செய்யும் வெண்டிங்களும்" (மதுரைக். 7-8.) ஞானத்திரு - ஞானமகள் (பி - ம்.) 'செய்ஞ்ஞானத் திருநோக்க வருநோக்கம்'

(தாழிசை.) க. பார்வை வைத்தும் - கண்ணைவைத்தும். மலம் முடிக்க அறியாதே மென்க. இத்தாழிசையோடு, 339-ஆம் செய்யுள் ஒப்பு நோக்கற்பாலது. அறிதுமே; ஏகாரம்: எதிர்மறைப் பொருளது; பின் வரும் ஏகாரங்களுக்கு இங்ஙனமே பொருள் கொள்க.

உ. முதற்றொழிலோன் - பிரமதேவன். தனை - நின்னை. இகழ்ந்த அத் தொழிலின்பொருட்டு முடியை இழந்தான். (பி - ம்) 'தலையிழந்த'

௩. இருக்கு ஓலம் இட்டும் - வேதம் முறையிட்டு முழங்கியும்.

ச. துறைகண்டார் - வியாசமுனிவர். தோள் - இங்கே கை. தோளிழந்த வரலாற்றை 467, 494-ஆம் செய்யுட்களிலும் குறித்தனர். நா இழந்து-தாம் கூறிய கூற்றின் பயனை இழந்து; நாவென்றது ஆகுபெயர்; "வாயிழுந் தருந்தவன் மறைந்தான்" (அரிச்சந்திர.) என்பது போன்றது. ஊன்-தேகாபிமானம்.

ரு. தாமடிகண் மறந்துமறித் தலைகொண்டார் கலைவல்ல
மாமடிகள் யாமடிகண் மறவாமை யுடையமே.

சு. பலகலையுங் குலமறையும் பயின்றுணர்ந்தும் பயன்கொள்ளா
துலகலையுஞ் சிலகலையு முணராதே முணர்துமே.

அதனால்

—சுரிதகம்—

அம்மநின் றன்மை யெம்மனோ ருணர்தற்
கரிதே யெளிதே யாதல்
பெரிதே கருணை சிறியே மாட்டே.

இது பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா. (கூஎ)

—தரவு—

549. க. சூன்முகத்த சுரிமுகங்க ணிரைத்தார்ப்பத் தொடுகடல்வாய்
வான்முகத்த மழைக்குலங்கண் மறிபுனல்வாய் மடுத்தென்னக்
கான்முகத்த மதுகரத்தின் குலமீண்டிக் கடிமலர்வாய்த்
தேன்முகக்கும் பொழிற்றில்லைத்திருச்சிற்றம் பலத்துறைவோய்.

உ. புற்புதமுந் தொலைவெய்த நிலையெய்தாப் புலையுடம்பின்
இற்புதவு திறந்திறவா வின்பவீ டெய்தவொரு
நற்புதவு திறந்தன்ன நறும்பொதுவி னங்கையுடன்
அற்புதவு மானந்த நடம்பயிலு மறவோய்கேள்.

---

ரு. அடிகளைத் தாம் மறந்து. மறித்தலை - ஆட்டின் தலை. மாமடிகள் - மாமனார்; என்றது தக்கனை (356, 376.)

சு. உலகு பயன் கொள்ளாது; உலகு - உயர்ந்தோர்.

அதனால் என்றது தனிச்சொல்.

(சுரிதகம்.) அம்ம: வியப்பிடைச் சொல். அரிதே: ஏகாரம் தேற்றம். அங்ஙனம் அரிய நின்தன்மை எங்கள்பால் எளியதாவதற்குக் காரணம் நின் பெருங்கருணையே யாகும்.

549. (தரவு.) க. சுரிமுகங்கள் - சங்குகள். நிரைத்து - வரிசையாக இருந்து. மழைக்குலங்கள் - மேகக்கூட்டங்கள். கான்முகத்த மதுகரத்தின் குலம் - காட்டிலேயுள்ள வண்டின் கூட்டம். கடி - நறுமணம், வண்டின் கூட்டத்திற்கு மேகம் உவமை; பொழிலுக்குக் கடல் உவமை; "கடல் போற்றோன்றல காடிறந் தோரே" (அகநா. க: 19.)

உ. புற்புதமும் தொலைவு எய்த - நிலையாமையில் நீர்க்குமிழியும் உவமை யாகாமல் தோல்வியுற. புலை - இழிவு. உடம்பின் நிலையாமைக்கு நீர்க்குமி ழியை உவமை கூறுதல் மரபு; "படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்

—தாழிசை—

க. எவ்விடத்தி லெப்பொருளு மொருங்குண்ண விருக்குநீ
வெவ்விடத்தை யெடுத்தமுது செய்ததுமோர் வியப்பாமே.

உ. எண்பயிலா வுலகடங்க வொருநொடியி லெரித்திடுநீ
விண்பயிலு மெயின்மூன் றுமெரித்ததுமோர் வீறுமே.

ந. பெருவெள்ளப் பகிரண்டந் தரித்திடுநீ பெயர்த்துமலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததுமோர் புகழாமே.

ச. மாயையினு லனைத்துலகு மயக்குநீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதோர் சிறப்பாமே.

ரு. மேதக்க புவனங்க டொலைத்திடுநீ வெகுண்டாய்போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததுமோர் வன்மையே.

சு. ஒருருவாய் நிறைந்தநீ யிருவர்க்கன் றுணர்வரிய
பேருருவொன் றுடையையாய் நின்றதுமோர் பெருமையே.

— அராகம் —

க. அறுவினி லறிபவ ரறிவதை யலதொரு
குறியினி லறிவுறு குறியினை யலை.

---

றிக், கெடுமிதோர் யாக்கை" (நாலடி. 27); "மாரி மொக்குளின் மாய்ந்து" (சீவக. 409.) உடம்பின் இல் புதவு திறந்து - உடம்பாகிய வீட்டின் வாயிலைத் திறந்து கொண்டு; "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட், டுச்சிலி ருந்த வுயிர்க்கு" (குறள், 340.) (பி - ம்.) 'இற்புதவு துறந்து' இன்ப வீடு-முத்தி. புதவு - வாயில். பொதுவில் - அம்பலத்தில். அற்பு உதவும் - அன்பை அளிக்கும். நடன தரிசனம் செய்தவர் உளமுருகி அன்பு பூண்பராதலின், 'அற்புதவு மானந்த நடம்' என்றார்; 504-ஆம் செய்யுளைப் பார்க்க. அறவோய் - தரும மூர்த்தி; "அறவன் கழல்சேர்ந் தன்போ டின்ப மடைவாரே" (தே. திருஞா. அரிசிற்கரைப்புத்தூர்.)

(தாழிசை.) க. வியப்பு ஆமே - வியப்பு ஆகுமா? ஆகாதென்றபடி.

உ. உலகடங்க எரித்தலாவது சர்வ சங்காரம் செய்தல். எயில் மூன்று - திரிபுரங்கள்.

ந. பெருவெள்ளத்தையுடைய பகிரண்டத்தை. இறைவன் அண்டங்களை மாலையாக அணிந்தானென்பர்; "தாராக வண்டந் தொடுத்தணிந்தார்" (தக்க, 772.)

ச. முனிவர் சேயிழையார் - தாருகாவனத்து முனிவருடைய மனைவிமார்.

(அராகம்.) க. ஒரு குறியினில் - ஓர் அடையாளத்தால்; ஒரு பெயரா லெனலுமாம். குறியினை அலை - உருவத்தை உடையாயல்லை.

உ. உளவயி னுளவள வுணர்வதை யலதுரை
அளவையி னளவிடு மளவினை யலை.

௩. அருவெனி னுருவமு முளையுரு வெனினரு
வுருவமு முளையவை யுபயமுமலை.

௪. இலதெனி னுளதுள தெனினில திலதுள
தலதெனி னினதுரு வறிபவரெவர்.

— தாழிசை —

க. எத்தொழிலுங் கரணங்க ளிறந்தநினக் கிலையைந்து
மெய்த்தொழில்செய் வதுமடிகேள் விளையாட்டு நிமித்தமே.

உ. சீராட்டு நினக்கிலைச் சீராட்டுஞ் சிறுமருங்குற்
பேராட்டி விளையாட்டுன் பெயர்த்தாகி நடந்ததே.

௩. மெய்த்துயர முயிர்க்கெய்தும் விளையாட்டு முலகீன்ற
அத்திருவுக் கிலையதுவு மவர்பொருட்டே யாமன்றே.

௪. இன்னருளே மன்னுயிர்கட் கெத்தொழிலு மீன்றெடுத்த
அன்னைமுனி வதுந்தனயர்க் கருள்புரிதற் கேயன்றே.

ரு. எவ்வுருவு நின்னுருவு மவளுருவு மென்றன்றே
அவ்வுருவும் பெண்ணுருவு மாணுருவு மாயவே.

சு. நின்னலா தவளில்லை யவளலா னீயில்லை
என்னினீ யேயவனு மவளுமா யிருத்தியால்.

---

உ. உளவயின் - உள்ள விடத்தே; உள்ளத்தின்கண்ணே யெனவுமாம். உரையளவையின் - சொல்லளவினால்.

௩. அருவுருவமும் - அரூபமாகிய வடிவமும்; அவை உபயமும் - உருவமும் அருவமுமாகிய அவ்விரண்டும்.

(தாழிசை.) க. கரணங்கள் - மனம், வாக்கு, காயமென்பன. ஐந்து மெய்த்தொழில் - சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகமென்பன.

உ. சீர் ஆட்டு - சிறப்பை யுடைய நடனம். பேராட்டி - சிவகாமவல்லி.

௩. மெய்த்துயரம் - உடம்பினாலாகிய துயரம்; என்றது பிறவிப்பிணியை. எய்தும் - அடைதற்குக் காரணமாகிய. விளையாட்டு - சிருட்டி முதலியன. பொருட்டே - ஆன்மாக்கள் உய்தற்பொருட்டே.

௪. எத்தொழிலும் இன்னருளே என இயைக்க.

அதனால்

— இருசீரோரடி அம்போதரங்கம் —

தந்தை நீ. தாயு நீ. தமரு நீ. பிறரு நீ.
சிந்தை நீ. உணர்வு நீ. சிவ னீ. யாவு நீ.

எனவாங்கு

— சுரிதகம் —

நெஞ்சகங் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரண மஞ்சலித் திறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே.

இது **மயங்கிசைக் கொச்சகம்.** (௬அ)

கலியினம்

550. செல்லார் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்தெங்கள்
பொல்லா மணியைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்.

முத்தேவர் தேவை முகிலூர்தி முன்னுன
புத்தேளிர் போலப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்.

ஆங்கற் பகக்கன் றளித்தருளுந் தில்லைவனப்
பூங்கற் பகத்தைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்.

இஃது இரண்டடியாய் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி ஈற்றடி மிக்கு வந்த கலித்தாழிசை. (௬௯)

---

அதனால் என்பது **தனிச்சொல்.**

தமர் - உறவினர்.

எனவாங்கு என்பது **தனிச்சொல்.**

(**சுரிதகம்.**) மும்மலம் - ஆணவம், மாயை. கன்மம். மலக்குரம்பையில் - அழுக்கு நிறைந்த குடிசையாகிய உடம்பில். செம்மாந்து - தருக்குற்று. மெய்ம்மையிற் பொலிந்த வீடு - என்றும் அழியாது மெய்த்தன்மையோடு விளங்கும் முத்தி. பிறவிநோய் தீர்ந்து வீடு பெறும்பொருட்டு இறைஞ்சுவோ மென்றார்.

550. பொல்லாமணி - துளையிடாத மாணிக்கம் போன்றவர். முகிலூர்தி - இந்திரன். புத்தேளிர் போல - புத்தேளிர் புகழ்வதுபோல. கற்பகக்கன்று - கற்பக விநாயகர் (451.) தில்லை வனத்திலுள்ள கற்பக மென்றது நடராசப் பெருமானை (522.)

551. இருகூற் றுருவத் திருந்தண் பொழிற்றில்லை
ஒருகூற்றின் கூத்தை யுணராய் மடநெஞ்சே
ஒருகூற்றின் கூத்தை யுணரா யெனின்மற்றப்
பொருகூற்றந் தோற்றப் புலம்பேல் வாழி மடநெஞ்சே.

இஃது இடைமடக்காய் ஈற்றடி மிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை. ()

552. காளி யாடக் கனலுமிழ் கண்ணுதல்
மீளி யாடுதல் பாருமே
மீளி யாடல் வியந்தவ டோற்றெனக்
கூளி பாடுக் குனிப்பதும் பாருமே பாருமே.

இஃது இரண்டாமடி குறைந்து இடைமடக்காய் ஈற்றடி மிக்கு வந்த நான்கடிக் கலித்தாழிசை. (எக)

553. பானற் கருங்கட் பசுந்தோகை யோகப் பயன்றுய்ப்பவத்
தேனக் கலர்கொன்றை சாரூப் பியந்தந்த செயலோர்கிலார்
ஊனக்க ணிதுபீளை யொழுகும் புறக்கண் ணுளக்கண்ணதாம்
ஞானக்க ணேயாத னல்கும் பிரான்றில்லை நடராசரே.

இது நெடிலடி நான்காய் வந்தமையால் கலித்துறை. (எஉ)

---

551. இரு கூற்று உருவத்து - ஆணும் பெண்ணுமாகிய இரண்டு பகுதிகளாகிய திருவுருவத்தை யுடைய. கால காலனதலின் ஒரு கூற்றென்று இறைவனைக் கூறினர்; "கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" (புறநா. ருசு : 11) என்பதையும், 'மணிமிடற்றோனைக் கூற்றமென்றது, அழித்தற்றொழிலை யுடைமையான்' என்ற அதன் விசேடவுரையையும் பார்க்க. பொரு கூற்றமென்றது யமனை.

552. கனல் உமிழும் கண்ணை நுதலிலே யுடைய மீளி - நடராசப் பெருமான். அவள் தோற்றென - அக்காளி தோற்றாளாக. கூளி - பேய்கள் (திருச்சிற். 150) குனிப்பது - ஆடுவது.

553. பானல் - குவளை மலர். பசுந்தோகை - தலைவி. யோகப் பயனுவது சாரூபம் பெறுதல். (பி - ம்.) 'தோகையேமெய்ப் பயன்றுய்ப்ப' கொன்றை மாலையைத் தலைவி பெற விரும்பி அதனையே நினைந்து, யோகியர் சாரூபம் பெற்றதுபோல அக் கொன்றையின் உருவத்தை யடைந்தாள். கொன்றையின் உருவ மென்றது பொன்னிறமாகிய பசலைநிறத்தை. சாரூப்பியம் - சாரூபத்தின் தன்மை. "வியந்துசொலி னன்னதும்பொன் னிறமே யெங்கண் மின்னிறமும் பொன்னிறமே" (அருணைக்கலம். 14.) ஊனக்கண்ணும் புறக்கண்ணுமாகிய இஃது உள்ளக்கண்ணாகிய ஞானக்கண்ணாகவே ஆதலை அளிக்கும். ஞானக் கண்ணால் தம் திருக்கோலத்தைத் தரிசித்து மெய்ஞ்ஞானியர் பெறும் பயனை ஊனக் கண்ணால் தரிசித்தாரும் இத்தலத்திற் பெறுதலின் அவ்வூனக்கண்ணே ஞானக்கண் போல் உதவு மென்க.

554. செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச் சென்
ஓவ்வாத் திருவுரு வொன்றே யுளதவ் வுருவினைமற்[னியற்கும்
றெவ்வாச் சியமென் றெடுத்திசைப் பேமின் னருட்புலியூர்ப்
பைவாய்ப் பொறியர வல்குலெந் தாயென்று பாடுதுமே.

இது நேரசை முதலாகிய கட்டளைக் கலித்துறை. இதன் முதலடி முரணடுக்கி வந்தமையால் வழிமுரண். (எங)

555. கரும்புஞ் சுரும்பு மரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள்
இரும்புங் கரைந்துரு கச்செய்யு மாலிறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருண் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக் கும்மகி லாண்டத் தொகுதியையே.

இது நிரையசை முதலாகிய கட்டளைக் கலித்துறை. இதன் முதலடி வழியெதுகை. (எச)

---

இது தலைவிநிலை கண்டு செவிலி கூறியது.

554. பைந்தோகை - உமாதேவியார். திருவுருவொன்று : 110, 535. வாச்சியம் - பொருள். (பி - ம்) 'எவ்வாச் சியத்தி னெடுத்திசைப்பேம்' பை வாய்ப் பொறியரவல்குலெந்தாய் : சிலேடை ; அரவுபோன்ற அல்குலை யுடைய எம் தாயே எனவும், அரவை யணிந்த அல்குலையுடைய எம் தந்தையே எனவும் இருபொருள் கொள்க. அல்குல் - பின்தட்டு ; ஆடவர்க்கும் கூறப்படும் (540.)

555. கரும்பு காமனுக்கு வில் ; சுரும்பு நாண் ; அரும்பு அம்பு ; "சுரும்பு நாண் கருப்புவி லருப்புக்கணை தூவ" (மணி. கஅ : 105.) இரும்பு - இரும்பு போன்ற மனம். மென்மையாகிய கருவிகளை யுடைய காமன் இரும்பு போன்ற நெஞ்சத்தையும் உருக்குதல் இறைவன் அருளினா லமைந்த தென்ற படி ; 187 - ஆம் செய்யுளைப் பார்க்க ; "யானை யிரதம் பரியா ளிவை யில்லை, தானு மநங்கன் றனுக்கரும்பு - தேனார், மலரைந்தால் வென்று வடுப் படுத்தான் மாரன், உலகங்கண் மூன்று மொருங்கு" (தண்டி. 77, மேற்.) இறும்பூது - வியப்பு. ஒரு துரும்பும் இறைவன் திருவருளுண்டாயின் படைத்தல் முதலிய செயல்களைச் செய்யுமென்றவாறு. இறைவன் ஓர் இயக்க வுருவினனாகி ஒரு துரும்பை நாட்டி அதனை அசைக்கும்படி தேவர்களுக்குக் கூற, அவர்கள் அங்ஙனம் செய்ய இயலாமல் தம் தருக்கழிந்த செய்தி இங்கே நினைவுக்கு வருகின்றது.

556. கூகா வென்று குரைப்பதல் லாற்சமன்
வாவா வென்னின் வரேமென வல்லிரே
தேவே சன்பயி றில்லையி னெல்லையிற்
சேர்வீ ரேல்து செய்யவும் வல்லிரே.

இஃது அளவடி நான்காய் வந்தமையாற் கலிவிருத்தம்.

இஃது அடிதோறும் இரண்டாமெழுத்து நெட்டெழுத்து வரத் தொடுத்தமையால் நெடிலெதுகை. முதலெழுத்து நெட்டெழுத்தே வரத் தொடுத்தமையால் நெடின்மோனையுமாம். மூன்றுமடியும் நான்காமடியும் முதலெழுத்து அனுவெழுத்தாய் வந்தமையின் அனுமோனை. (எரு)

## வஞ்சிப்பா

557. வையமீன்ற மறைக்கிழவனும்
கொய்துழாய்மவுலிக் குணக்கொண்டலும்
தருவார்நீழற் றூர்வேந்தனும்
வரன்முறைதாழ்ந்து வாழ்த்திசைப்ப
மைதீருணர்வின் மழமுனிவனும்
பையரவரசும் பணிந்திறைஞ்ச
இமயம்பயந்த விளங்கொடியொடும்
தமனியப்பொதுவிற் றூண்டவம்புரி
தில்லைவாணநின் றிருவடிக்கீழ்ச்
சொல்லுவதொன் றிது சொலக்கேண்மதி
கமலலோசனன் கண்படுக்கும்
அமளியைநின்மருங் காதரித்தனை

---

556. கூகாவென்று குரைப்பதல்லால் - யமன் வந்த காலத்தில் அஞ்சிக் கூகாவென்று கதறுவதல்லாமல்; "கூகா வெனவென் கிளைகூடியழ" (கந்தரநுபூதி.) வரேமென வல்லிரே - வாரோமெனக் கூறும் வன்மை உடையீரா வீரோ? அது செய்யவும் - வாரோமெனக் கூறுதற்கும். வல்லிரே; ஏ தேற்றம்.

557. மறைக்கிழவன் - பிரமதேவர். குணக்கொண்டல் - குணத்திற் சிறந்த மேகம்போன்ற திருமால்; "உயர்வற வுயர்நல முடையவன்" (திருவாய்மொழி.) தரு - கற்பகம். வேந்தன் - இந்திரன். மைதீர் உணர்வின் - குற்றம் தீர்ந்த மெய்ஞ்ஞானத்தையுடைய. மழமுனிவன் - உபமன்னியு முனிவராகிய குழந்தையை யுடைய வியாக்கிரபாதர்; மழவை யுடைய முனிவனென்க. பையரவரசு - பதஞ்சலி முனிவர். கமலலோசனன்-திருமால். அமளியை - படுக்கையாகிய ஆதிசேடனை; என்றது அவனது அவதாரமாகிய

செங்கேழ்நறு நுதற் றிருமகளோடும்
அங்கவ னுறைதரு மாழிச் சேக்கையைப்
புலிக்கான்முனிவரன் புதல்வனுக்கு
நலத்தகுகருணையி னயந்தளித்தனை, அவன்

அதனால்

பாயலு மமளியு மின்றி மன்றநின்
வாயிலி னெடுநாள் வைகின னணையொடும்
அத்திரு மனையவற் களித்திநின்
மெய்த்தொழி லன்றே வீடு நல்குவதே.

இது குறளடி வஞ்சிப்பா. இதன் அடிதோறும் முதற்கண்ணே பொதுச் சீர் பதினாறும் வந்தன. தார்வேந்தனும் எனவும், குணக் கொண்டலும் எனவும், மறைக்கிழவனும் எனவும், தாண்டவம்புரி எனவும் வஞ்சிச்சீர் நான்கும் வந்தன. இதனுள்ளே அங்கவ னுறைதரு மாழிச் சேக்கையை என ஆசிரியவடி அருகி வந்தது. அவன் என வஞ்சியீற்றின்கண் அசை கூனாய் வந்தது. (எசு)

558. கடித்தாமரைக் கண்ணன்விழிக் கமலந்தர
அடித்தாமரைச் சுடர்ப்பரிதி யளித்தருளினை

அதனால்

புதுமலர்ப் பொழிற் றில்லை வாண
உதவியின் வரைத்தோ வடிகள்கைம் மாறே.

இது சிந்தடி வஞ்சிப்பா. (எஎ)

---

பதஞ்சலி முனிவரை. செங்கேழ் - செந்நிறத்தையுடைய. அவன் - திருமால். ஆழிச்சேக்கையை - திருப்பாற்கடலாகிய உறைவிடத்தை. புதல்வன் - உபமன்னியு முனிவர். உபமன்னியுவுக்குப் பாற்கடலீந்தது: 464, 563; "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கட லீந்தபிரான்" (திருப்பல்லாண்டு.) பாயலும் அமளியும் இன்றி - படுக்கையும் கட்டிலும் இல்லாமல் (464.) நின் வாயிலின் வைகினனென்றது தில்லைத் திருக்கோயிலின் முன்றிலில் கோவிந்தராசப் பெருமாள் எழுந்தருளி யிருப்பதை நினைந்தது. அத் திரு மனை - அந்த அழகிய இருப்பிடமாகிய பாற்கடலை. வீடு - முத்தி, இல்லம்.

558. தாமரைக் கண்ணன் - திருமால். அடித்தாமரையின்கண் விழிக் கமலம் தர. சுடர்ப்பரிதி - ஒளி வீசும் சக்கராயுதத்தை; தாமரைக்கு இயைபுடையதாதலின் சுடர் வீசும் சூரியனையென வேறொரு பொருளும் தோற்றியது. - உதவியின் வரைத்தோ; "உதவி வரைத்தன் றுதவி யுதவி, செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள், 105.)

## வஞ்சியினம்

559. க. பிணியென்று பெயராமே
துணிநின்று தவஞ்செய்வீர்
அணிமன்ற லுமைபாகன்
மணிமன்று பணியீரே.

உ. என்னென்று பெயராமே
கன்னின்று தவஞ்செய்வீர்
நன்மன்ற லுமைபாகன்
பொன்மன்று பணியீரே.

ந. அரிதென்று பெயராமே
வரைநின்று தவஞ்செய்வீர்
உருமன்ற லுமைபாகன்
திருமன்று பணியீரே.

இது குறளடி நான்காய் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்தமையால் வஞ்சித் தாழிசை. (எஅ)

560. பொன்செய் மன்றில்வாழ்
கொன்செய் கோலத்தான்
மின்செய் தாடொழார்
என்செய் கிற்பரே.

இது குறளடி நான்காய் வந்தமையால் வஞ்சித்துறை. (எசு)

561. ஒன்றி னம்பர லோகமே
ஒன்றி னம்பர லோகமே
சென்று மேவருந் தில்லையே
சென்று மேவருந் தில்லையே.

இது சிந்தடி நான்காய் வந்தமையால் வஞ்சிவிருத்தம். (அ0)

---

559. க. பிணியென்று பெயராமே - நோய்க்கு இடமாகுமென்று அஞ்சி நீங்காமல். துணி - பிளந்த பாறை. 'துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு தவஞ்செய்பவர்களே. இவ்வளவு துயரின்றி எளிதிலே பயன் பெறும்வழி இஃதாகும்' என்று கூறியபடி.

உ. கல் - மலை.

560. கொன் - பெருமை.

561. மேவருந் தில்லை சென்றும் - யாவரும் மேவுதற்கு அரிய தில்லைத் தலத்தின்கண் சென்றோம்; (ஆதலின்) பரலோகமே ஒன்றினம் - எல்லாவற்

## மருட்பா

562. அரசியல் கோடா தரனடியார்ப் பேணும்
முரசிய ருனைவேன் மன்னர்—பரசோன்
கழலிணை பொதுவில்காப் பாக
வழிவழி சிறந்து வாழியர் பெரிதே.

இது முன்னர் வெண்பாவும் பின்னர் அகவலும் புறநிலைவாழ்த்தாய் வருதலின் புறநிலை வாழ்த்து மருட்பா. வெள்ளடியும் ஆசிரியவடியும் சமமாகலின் இது சமநிலை. (அக)

563. பருந்தளிக்கு முத்தலைவேற் பண்ணவற்கே யன்றி
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்கும்—திருந்த
வலனுயர் சிறப்பின் மன்ற வாணனக்
குலமுனி புதல்வனுக் கீந்த
அலைகட லாகுமிவ் வாயிழை நோக்கே.

இதுவும் அவ்வாறே கைக்கிளைப்பொருள்மேல் வருதலின் கைக்கிளை மருட்பா. வெள்ளடி குறைந்து ஆசிரியவடி மிகுதலின் இது வியனிலை. (அஉ)

---

றிற்கும் மேலான உலகமாகிய முத்தியினிடத்தே பொருந்தினேமாயினேம்; இனம் பரலோகம் ஒன்று - இன்னும் வேறு உலகம் ஒன்றின்கண், சென்றுமே வருந்து இல்லை - சென்று வருந்துதல் எம்பால் இல்லை.

தில்லையின்கண் சென்ற மாத்திரத்திலே முத்திபெறுதல் துணிவாதலின் இங்ஙனம் கூறினார்.

இச்செய்யுளுக்குப் பிறவாறு பொருள் கூறுவாரும் உளர்.

562. அரசரை, வழிபடு தெய்வம் காப்ப வாழ்கவென வாழ்த்தியது.

முரசு இயல் தானை - முரசையும் செல்லுகின்ற படையையும் உடைய. பரசோன் - மழுப்படையையுடைய சிவபெருமான். பொது இல் காப்பு - சிறப்பான பாதுகாப்பு; தனித்துணையுமாம்.

563. தலைவியின் குறிப்புணர்ந்து கூறியது. முத்தலைவேல் - திரிசூலம். பண்ணவற்கே யன்றி விண்ணோர் பிறர்க்கும் விருந்தளிக்கும்; விருந்தளிக்கும்: முற்று. ஆலமும் அமுதமும் ஒருங்கே ஈயு மென்றவாறு. தலைவியின் மருட் பார்வையை ஆலமென்றும் அருட்பார்வையை அமுதமென்றும் உருவகம் செய்தல் மரபு. குலமுனி புதல்வன் - உபமன்யு முனிவர். அலைகடல் - பாற்கடல். கண்களுக்குப் பாற்கடல் உவமை: 148, 669.

564. வம்மி னமரங்காண் மன்றுடையான் வார்கழல்கண்
டுய்ம்மி னுறுதி பிறிதில்லை—மெய்ம்மொழிமற்
றென்மொழி பிழையா தாகும்
பின்வழி நுமக்குப் பெரும்பயன் றருமே.

இது வாயுறை வாழ்த்து மருட்பா. (௮௬)

565. வாழ்த்துமின் றில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு—வீழ்த்த
புறநெறி யாற்றா தறநெறி போற்றி
நெறிநின் றொழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கட னிதுவே.

இது செவியறிவுறூஉ மருட்பா. (௮௭)

---

564. நமரங்காள் ; 207, குறிப்பு. உய்ம்மின் - பிழையுங்கள்.

565. தலைவற்குச் சென்னி தாழ்த்துமின். வாழ்த்துமினென வாக்காலும், நினைமினென மனத்தாலும், சென்னிதாழ்த்துமின் எனக் காயத்தாலும் செய்யும் தொண்டுகளைக் கூறியது முக்கரணத்தாலும் வழிபடல்வேண்டுமென்று புலப்படுத்தியபடி. புறநெறி ஆற்றாது - அறத்தாறல்லாத நெறியினின்று செயல்புரியாமல். துறை அறி மாந்தர் - தாம் ஒழுகும்வழி இஃதென அறிந்த அறிஞர்.

# பண்டார மும்மணிக்கோவை

(நேரிசை வெண்பா)

566. எண்டிசைக்குஞ் சூளா மணிமாசி லாமணிசீர்
கொண்டிசைக்கு மும்மணிக் கோவைக்குக்—கண்டிகைபொற்
பைந்நாகத் தானனத்தான் பாற்கடலான் போற்றவருள்
கைந்நாகத் தானனத்தான் காப்பு. (க)

(நேரிசை யாசிரியப்பா)

567. பூமலி சததளப் பொன்னந் தாதுகு
காமர்பீ டிகையிற் கருணையொடு பொலிந்து
வீற்றுவீற் றமைந்த விரிதலைப் புவனம்
பாற்பட வகுத்த பழமறைக் கிழவனும்
ரு. மதுக்குட முடைந்தாங் கிதழ்க்கடை திறந்து
பிரசமூற் றிருந்து முருகுகொப் புளிப்ப
வண்டுமு துழக்குந் தண்டுழா யலங்கற்
புரவுபூண் டகிலம் பொதுக்கடிந் தளிக்கும்
கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணனும்

---

566. சூளாமணி - முடிமணி. இசைக்கும் - கட்டும், கூறும். கண்டிகை பொற் பைந்நாகத்தான் - உருத்திராட்ச மாலையையும் பொலிவு பெற்ற படத்தையுடைய நாகத்தையும் அணிந்த சிவபெருமான்; கண்டிகை - கழுத் தணியுமாம். (பி - ம்.) 'கண்டிகைப்பொற்' அனத்தான் - பிரமதேவர். பாற் கடலான் - திருமால். இம்மூவரும் போற்ற வென்க. சிவபெருமான் திரிபுர தகனம் செய்ததற்கு முன் விநாயக பூசை செய்த வரலாற்றை நினைந்து அவ ரும் போற்றியதாக அமைத்தார். அனத்தானும் பாற்கடலானும் போற்ற நாகத்தான் அருளிய என்று கூட்டிப் பொருளுரைத்தலும் பொருந்தும். கைந் நாகத்து ஆனனத்தான் - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுள்.

567. (அடி, 1-16.) சிவபெருமானே ஆசிரிய மூர்த்தியாக வந்தன ரென்பது கூறப்படும்.

(1-4.) சததளம் - நூறு இதழ்களையுடைய. பீடிகை - ஆசனம். வீற்று வீற்று அமைந்த - வேறு வேறாகப் பொருந்திய. பழமறைக் கிழவன் - பிர மதேவர்.

(5-9.) தேன் நிறைந்த குடம் உடைந்தாற்போல. இதழ்க்கடை - இதழா கிய வாயில். பிரசம் - தேன். முருகு - நறுமணம். புரவு - காக்கும் தொழில்.

௧௦ அஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட் டன்னமும்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற் றேனமும்
ஆகுபு தனித்தனி யலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட் டம்ம
எம்மனோர் போல வினிதெழுந் தருளிக்
௧௫ கைம்மா றற்ற கணக்கில்பே ரின்ப
மோனவாழ் வளிக்கு ஞான தேசிகன்
விரிகதிர் பரப்பு மரகதத் தகட்டிற்
சுடர்செய் செம்மணி யிடையிடை பதித்தெனப்
பாசடைப் பரப்பிற் பதும ராசிகள்
௨௦ சேயிதழ் விரிக்குஞ் செழுமல ரோடையும்
அண்டகோ ளகையு மெண்டிசா முகமும்
கோட்டுடைத் தடக்கை நீட்டியளந் தென்னச்
சேட்பட நிவந்த செண்பகா டவியும்
கால்கிளர் விசும்பிற் கற்பகா டவிக்கு
௨௫ வேலியிட் டன்ன வியன்மணிப் புரிசையும்
மருங்குசூழ் கிடந்த வண்டமிழ்க் கமலைப்
பெரும்பதி புரக்கும் பேரருட் குரிசில்

---

பொதுக்கடிந்து அளிக்கும் - தனியுரிமை கொண்டு பாதுகாக்கும். கமலக் கண்ணன் - திருமால்.

(அடி, 10-13.) சுதை நிறம் - வெண்ணிறத்தையுடைய. செஞ்சூடு - சிவந்த உச்சிக் கொண்டையையுடைய. ஏனம் - பன்றி. அலமர - சுழலா நிற்ப. நிவந்த - உயர்ந்து நின்ற. பரஞ்சுடர் - சிவமாகிய மேலான ஒளி.

(14-6.) எம்மனோர்போல எழுந்தருளி - மானிடராகிய எம்மைப் போலத் தானும் ஒரு மானிடத்திருவுருவங் கொண்டருளி (: 68) ; "ஈறிலாத நீ யெளியை யாகிவந் தொளிசெய் மானிட மாக நோக்கியும்" (திருவா. திருச் சதகம், 91.) கைம்மாறற்ற............தேசிகன் : "அந்தமொன்றில்லா வானந் தம் பெற்றேன்.........யானில னிதற்கொர்கைம் மாறே" (திருவா. கோயிற் றிருப்பதிகம், 10.)

(17-27.) திருவாரூரின் சிறப்பு.

பதுமராசிகள் - தாமரை மலர்த் தொகுதிகள். தாமரை யிலைக்கு மரகதத் தகடும், அதன் மலருக்கு மாணிக்கமும் உவமைகள். அண்ட கோளகை - அண்டமாகிய உருண்டை. கோட்டுடைத் தடக்கை நீட்டி அளந்தென்ன - கொம்புகளாகிய தன்னுடைய பரந்த கைகளை நீட்டி யளந்தாற்போல. விசும்பு - தேவலோகம். புரிசை - மதில். கமலை - திருவாரூர். குருமைத் திருஞான சம்பந்த தேசிகருடைய குருமூர்த்தி திருவாரூர் ஞானப்பிரகாச தேசிகர். பின்வந்த தேசிகரையும் முன்புள்ள ஆசிரியர்களாகவே நினைந்து

நான்மறை நவின்ற நற்பொரு ளிவையென
மோனவா சகத்தான் முப்பொரு ணவிற்றுபு
௩௰ நன்னலம் புரிபு ஞானப் பிரகாசன்
இன்னருள் பழுத்த செந்நெறிச் செல்வன்
திருக்கிளர் ஞானத் திருந்திழைக் கணியாம்
அருட்பெருஞ் சைவத் தருங்கல னுப்பண்
ஆசற விளங்கு மாசி லாமணி
௩௫ அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்
துள்ளதன் படிவ முணர்த்துவ கடுப்ப
மாநிலத் தமர்ந்த ஞானசம் பந்தன்
பொன்னடிக் கமலஞ் சென்னிவைத் திறைஞ்சுதும்
௪௰ இருகால் சுமந்த வொருபெருஞ் சேவகத்
தைம்புலக் களிறுந் தம்புலத் திழுப்ப
ஊனிடைப் பிறவிக் கானகத் துழலா
தேனைய முத்திநா டெய்தவோர்
ஞான வாரண நல்குதி யெனவே. (உ)

---

வழிபடுதல் மரபாதலின் இங்கே மாசிலாமணி தேசிகரை ஞானப்பிரகாச தேசிகராகவே கூறினர்.

(அடி, 28-31.) முப்பொருள் - திரிபதார்த்தம்; பதிபசுபாசம். ஞானப்பிர காசன் - கமலை ஞானப் பிரகாசர்.

(32-4.) ஞானத் திருந்திழைக்கு - ஞானமாகிய பெண்ணுக்கு. அவளுக்கு ஆபரணமாகிய சைவத்தின் நடுவில் விளங்கும் நாயக மணியாகிய மாசிலா மணி.

(33-9.) தருமபுரத்திற் கோயில் கொண்டெழுந்தருளி யிருப்பவரும் கமலை ஞானப்பிரகாச தேசிகருக்கு மாணக்கருமான ஆசிரியர் திருஞானசம் பந்த தேசிகரென்னும் திருநாமமுடையவராதலின் அவ்வியைபுபற்றித் திரு ஞானசம்பந்த மூர்த்தியே தம் பிள்ளைத்திருக்கோலத்தை நீத்து முதிய கோலத் தில் வந்தாற் போன்றவரென்பர். அமண்மாசு - சமண சமயமாகிய குற்றம். கவுணியர் பெருந்தகை - திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர்.

(40-44.) இருகால் சுமந்த - இரண்டு கால்களாற் சுமக்கப்பெற்ற. சேவகம் - யானை துயிலுமிடம்; புலன்களைக் களிறென்றதற்கேற்ப உடலை இங்ஙனம் உருவகம் செய்தார். ஐம்புலக்களிறு - ஐம்பொறிகளாகிய யானை கள்; "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்" (குறள், 24); "ஐம்புல வேழத்தின் வெந்தொழில் வீய" (ஞானமிர்தம்.) தம் புலத்து இழுப்ப - தமக்குரிய இடத்தின் கண்ணே இழுக்க.

(நேரிசை வெண்பா)

568. என்வடிவ நின்வடிவாக் கொண்டா யெளியேற்குன்
றன்வடிவ நல்கத் தருங்கண்டாய்—மன்வடிவால்
வெம்பந்த நீக்கும் விமலநீ மெய்ஞ்ஞான
சம்பந்த னென்பதனுற் றுன். (௩)

(கட்டளைக் கலித்துறை)

569. தானின் றெனைத்தனக் குள்ளே யொளிக்குமென் றன்மைநிற்க
யானின்ற போதெனக் குள்ளே யொளித்திடு மிப்பரிசே
வானின்ற சின்மய மாமாசி லாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணே னிதற்கொத்த நன்மணியே. (௪)

(நேரிசை யாசிரியப்பா)

570. மணிவடஞ் சுமந்த புணர்முலைக் கொதுங்கி
ஈயா மாக்க டீமொழி கவர்ந்த

---

பிறவியாகிய கானகத்தில், முத்தியாகிய நாட்டை அடைய. ஞானவாரணம் - ஞானமாகிய யானை. காட்டிற்கு இழுத்துச்செல்லும் ஐந்து யானைகளினின்றும் என்னை விடுவித்து நாட்டிற்குச் செலுத்தும் யானை ஒன்றை அளிப்பாயாக வென்றார். இது முற்றுருவகம்.

568. என் வடிவம் நின்வடிவாக் கொண்டாய் - என்னுடைய வடிவாகிய மானிட உருவத்தை நின்வடிவாகக் கொண்டாய்; "எம்மனோர் போல வினிதெழுந் தருளி" (567) என்று முன்னர்க் கூறியதுங் காண்க. உன்றன் வடிவம் - ஞானவடிவம். பந்தம் - பாசத்தளை. மெய்ஞ்ஞான சம்பந்தன் - உண்மையான ஞான சம்பந்தம் செய்பவன். சம்பந்தமாவது கொள்ளுதலுங் கொடுத்தலு மாதலின், இங்ஙனம் கூறினர்; "சம்பந் தப்பெயர் தரித்தமை யாலெமைச், சம்பந்தஞ்செயத் தருந்தகு நினக்கே" (573.)

569. சிவபோதம் முனைத்து நிற்கையில் சீவபோதம் ஒழிதலையும், சீவபோதம் முனைத்து நிற்கையில் சிவபோதம் மறைதலையும் கூறுவர்.

தான் நின்று - சிவபோதம் நிலைபெற்று. எனைத் தனக்குள்ளே ஒளிக்கும் - ஆன்ம போதத்தைத் தனக்குள்ளே அடக்கித் தான் வியாபகமாக நிற்கும். என் தன்மை நிற்க - சீவபோதம் நிலைபெற. யான் நின்றபோது - ஆணவத்தால் ஆன்மபோதம் தலையெடுத்த காலத்தில். எனக்குள்ளே ஒலித்திடும் - என்னுள் மறைந்து நிற்கும். சின்மயம் - ஞானஉருவம். ஒருமணி தன் ஒளியில் எல்லாவற்றையும் அடக்கி நிற்றலே இயல்பு; இந்தமணி ஒருகால் அடக்கியும் ஒருகால் அடங்கியும் இருத்தல் வியப்பென்றார்; 578, 683-ஆம் செய்யுட்களைப் பார்க்க.

570. (அடி, 1 - 11.) தருமபுரத்தின் சிறப்பு.

ஒதுங்கி - இளைத்து. ஈயா மாக்கள் தீமொழி யென்றது இல்லையென்பதை. இல்லையாகிய இடை. பட்டம் - நீர்நிலை; "தண்பட்ட மேவும் வயல்"

சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கரைகொன் றிரங்குந் திரைசெய்நீர்ப் பட்டத்து
ரு மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சீராட் டயரு நீராட் டயர்ந்து
புலவியிற் றீர்ந்து கலவியிற் றிளைக்கும்
நீரர மகளிர் பேரெழில் காட்ட
கo மருதம்வீற் றிருந்து பெருவளஞ் சுரக்கும்
தருமையம் பதிவாழ் சற்குரு ராய
ஒள்ளொளி பரப்பும் வெள்ளிவே தண்டத்
தொருபாற் பொலிந்த மரகதங் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் கடவுண்மா மணிக்கு
கரு விளங்கெழின் மிடற்றோர் களங்கமுண் டென்பவக்
காசுலா மலினங் கரந்தகா ரணத்தால்
மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோ டமர்ந்த ஞானசம் பந்த
ஈண்டுனைத் தமியனேன் வேண்டுவ தியாதெனின்
உo அந்நிய மென்று மநந்நிய மென்றும்
இந்நிலை யிரண்டு மெய்திற் றென்றும்
பல்வே றுரைக்குநர் சொல்வழிப் படாது
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்
திறவா நிலைமைபெற் றின்பமார்ந் திருக்கும்
உரு பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே

---

**(தஞ்சைவாணன்.)** சேப்ப - சிவப்ப. நீரர மகளிர் - நீரில் வாழும் தெய்வ மகளிர். நீராடியதால் உண்டான வேறுபாடுகள் கலவியினால் உண்டாவன வற்றை ஒத்தன. சற்குருராய : 570.

(அடி, 12-5.) சிவபெருமானை ஒருமணியாக உருவகம் செய்வார்.

வெள்ளி வேதண்டம் - கயிலைமலை. மரகதமென்றது உமாதேவியாரை. கடவுண்மாமணி - சிவபெருமான்.

(16-8.) காசு - குற்றம். மலினம் - களங்கம். மாசு இலா மணி - களங்கமில்லாத மணி.

(19-25.) சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றி நன்னெறி யடைதலை வேண்டுகின்றார்.

அந்நியம் - பேதம். அநந்நியம் - அபேதம். இந்நிலை யிரண்டும் எய்திற் றென்றது பேதாபேதத்தை. பல்வேறு உரைக்குநர் - பலவேறு வகையாகக் கூறும் சமயவாதிகள். திவ்வியம் - தெய்வத்தன்மை. இறவா நிலைமை - நீங்காத நிலைமை. புரிவதுவே தமியனேன் வேண்டுவது.

அங்கது புரிதற் கரிதெனி னிங்கொரு
சனனமியான் வேண்டுவ தினிதரு ளெனக்கெ, அதுவே
ஐந்தரு நிழற்கீ ழரசுவீற் றிருக்கும்
இந்திர னாகிவாழ்ந் திருப்பதோ வன்றே
௩௰ மலரோ னாகி மன்னுயிர்த் தொகுதி
பலர்புகழ்ந் திசைப்பப் படைப்பதோ வன்றே
அடலரா வணையி லறிதுயி லமர்ந்த
கடவுளா யுலகங் காப்பதோ வன்றே, அவைதாம்
ஆரா வின்பமென் றரும்பெயர் பெறினும்
௩௫ வாரா வல்வினை வருவிக் கும்மே
அன்னவை யொழியமற் றென்னைகொல் பிறவெனின்
விழுத்தகு கல்வியு மொழுக்கமு மிலராய்ப்
பழிப்புள ராயினு மாக வழுத்துநின்
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
௪௰ திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகல மாந்தியிப் பவக்கட லுழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையு மயரா தவதரிப் பதுவே. (௫)

(நேரிசை வெண்பா)

571. அவமாசி லாமனத்தார்க் காருயிரா ஞானேற்
பவமாசி லாமணிச்சம் பந்தா - தவமார்
ததியருளத் தானேநின் சந்நிதிப்பட் டேற்குக்
கதியருளத் தானே கடன். (௬)

---

(அடி, 28-35.) இந்திரபதவி முதலியவற்றில் விருப்பின்மையை உணர்த்துகின்றார்.

ஐந்தரு - ஐந்துவகைக் கற்பக விருட்சங்கள். அவைதாம் - இந்திரன், பிரமன், திருமால் என்பார் பதவிகள்; "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" (திருவா.) ஆரா இன்பம் - தெவிட்டாத இன்பம்.

(37-43.) அடியார் பெருமை புலப்படுத்தப்படும்.

பரிகலம் - பரிகலசேடம்; எச்சில்; உண்கலத்தைக் குறிக்கும் இச்சொல் இங்கே ஆகுபெயராய் நின்றது. ஞமலி - நாய். அயராது - மறவாமல். அவதரிப்பது - பிறப்பது.

அவதரிப்பதுவே(43) ஆகிய ஒரு சனனம் வேண்டுவது அருள் (27) என்க.

571. ஞானேற்பவ - ஞானத்தை உண்டாக்குவோய். ததியர் = ததீயர் - அடியார்; இச் சொல் வைணவர்களிற் பெருவழக்கு. கதியை அருளத்தான் கடன்.

(கட்டளைக்கலித்துறை)

572. கடல்பெற்ற தோர்மணி சிந்தித்த நல்குங் கருத்துக்கெட்டா
மிடல்பெற்ற பேரின்ப நல்கிய வாவருள் வேலைபெற்றென்
உடல்பெற்ற கண்மணிக் குண்மணி யாகியொண் கூடல்வைகும்
அடல்பெற்ற ஞானச் சுடர்மாசி லாமணி யானதொன்றே. (எ)

(நிலைமண்டில வாசிரியப்பா)

573. ஒன்றே தன்மை யுனக்குமற் றெமக்கும்
அன்றென மொழியினு மாமெனப் படுமே
அங்ஙனங் கூறிய தெங்ஙனம் பிறவெனின்
எஞ்ஞான் றுளையுள மஞ்ஞான் றியாமே
௫ அழியா நிலைமையை யனையம் யாமே
வியாபக னினக்குள தியாமுமஃ துளமே
அறிவெனப் பெயரிய பெயரினை யப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
இச்சா ஞானக் கிரியையென் றிசைக்கும்
௧௦ சத்திக ளுளையுள தத்திற மெமக்கே
இந்நிலை முழுவதூஉ மெமக்குமுண் டாகலின்
அந்நிய மலநினக் கநிய மியாமே
தருமையுங் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநக ராக வரசுவீற் றிருக்கும்
௧௫ மாசி லாமணித் தேசிக ராய
சம்பந் தப்பெயர் தரித்தமை யாலெமைச்
சம்பந் தஞ்செயத் தகுந்தகு நினக்கே
கருவிகட் கிறைமை காட்டுபு நிற்றலிற்

---

572. கடல் பெற்றதோர் மணி - சிந்தாமணி. நல்கியவா - வழங்கிய வாறு என்ன வியப்பு! அருள்வேலை பெற்று - அருட்கடலைத் தான்பெற்று. கூடல் - மதுரை. சிந்தாமணி கடலாற் பெறப்பட்டுச் சிந்தித்தவற்றைத் தரும்; மாசிலாமணி ஒரு கடலையே தான் பெற்றுச் சிந்தைக்கு எட்டாத இன்பத்தைத் தருமென்று இரண்டுக்கும் வேற்றுமை கூறியவாறு.

573. (அடி, 1-11.) சிவத்துக்கும் சீவனுக்கும் உள்ள ஒப்புமைகள் கூறப்படும்.

(4.) "என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ" (தாயுமானவர்.)

(13.) கமலை - திருவாரூர்.

(18.) கருவிகட்கு இறைமை - தத்துவங்களுக்குத்தலைமை.

புருட நாமம் புனைந்தன மாயினும்
௨௦ அத்தநிற் குறிப்பிற் சத்திகள் யாமே
புருடனைச் சத்தியிற் புணர்த்தனை யன்னதற்
கொருகாட் டென்ப புருடோத் தமனே
உன்னுட னெம்மையு மொப்பெனப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில
௨௫ முழுவது மொவ்வா தொழியினு மொழிக
உயர்ந்தோன் றலைவ னுத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினு மிழிவெனப் படாதே
ஆதலின் யாமுனைக் காதலித் தனமாற்
காதலி னெமையருட் கைப்பிடித் தருளி
௩௦ ஒருவரு முணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்
துயர்நா தாந்தத் திருமல ரமளியிற்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
௩௫ ஞானவா ரமுத பானம தார்ந்து
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து

---

(அடி, 19.) புருடனென்னும் நாமம் ஆன்மாவுக்குரியது. (பி - ம்.) 'புருட நாமமும்'

(19-20.) புருடனென்னும் பெயரை நாங்கள் உடையேமாயினும், நின்னை நோக்கியவிடத்து நாங்கள் சக்திகளே.

(21-2.) புருடனைச் சத்தியைப்போலத் தொடர்பு படுத்தினை. காட்டு - உதாரணம். புருடோத்தமன் - திருமால்.

(23.) (பி - ம்.) 'ஒப்பனைப்படுத்து'

(26 - 7.) இவ்வடிகளிலுள்ள செய்தி, "ஒன்றே வேறே யென்றிரு பால் வயின், ஒன்றி யுயர்ந்த பால தாணையின், ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப, மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே" (தொல். களவு. 2) என்னும் சூத்திரத்தை நினைந்து கூறியது.

(33.) புளகம் - மயிர்க்கூச்செறிதல்.

(30 - 37.) இவ்வடிகளில் பேரின்பவுணர்ச்சியைச் சிற்றின்பம் போலத் தோற்றும் வண்ணம் சொற்றொடரமைத்தனர்.

பேரா வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா வின்ப மளித்தரு ளெமக்கே. (அ)

(நேரிசைவெண்பா)

574. எம்மா ருயிரா மெழின்மாசி லாமணியை
அம்மா பெறுதற் கரிதன்றே—சும்மா
இருந்தாரே பெற்றார்மற் றெவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றார் மணி. (கூ)

(கட்டளைக்கலித்துறை)

575. மணிகொண் டவர்தம் பொருளாவ தன்றியம்
மாமணியாம்
அணிகொண் டவரைக்கொண் டாள்வதுண் டேயருட்
கூடல்வைகும்
கணிகொண்ட கொன்றைத் தொடைமாசி லாமணி
கண்டவுடன்
பணிகொண்டு தொண்டுங்கொண் டாளுங்கொள்
வோமென்று பார்க்குமுன்னே. (கo)

---

(அடி, 38.) பேராவியற்கை - என்றுமொன்றும் ஒரு நிலையாம் இயல்பு; என்றது வீட்டினை; 'களிப்புக் கவற்சிகளும் பிறப்புப்பிணி மூப்பிறப்புக்களும் முதலாயினவின்றி உயிர் நிரதிசய இன்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் பேராவியற்கை யென்றும்' (குறள், 370, பரிமேல்.) என்பது இங்கே அறிதற்குரியது.

(39.) ஆராவின்பம் - தெவிட்டாத ஆனந்தம் (576 : 39.)

574. சும்மா இருந்தார் - செயல் மாண்டு இருந்தவர்; "சும்மா விரு சொல் லறவென் றலுமே, அம்மா பொருளொன் றுமறிந் திலனே" (கந்தரநுபூதி) மற்ற மணிகள் செய்தற்கரிய செயல்களைச் செய்து பெறுவது; இது செயலேயில்லார் பெறுவதென்று வேற்றுமை உணர்த்தினர்; "செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசிலர், எய்தற் கரியதனை யெய்தினர்கள் - ஐயோநாம், செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச், செய்யாமை செய்யாத வாறு" (திருக்களிற்றுப்படியார், 61) என்பதை ஓர்க.

575. உலகிலுள்ள மணிகளுக்கும் மாசிலாமணிக்கும் வேற்றுமை கூறியவாறு.

மாமணியாம் அணி. உண்டே; ஏ வினா. கண்ணியாகக் கொண்ட கொன்றை. கொள்வோமென்றெண்ணிப் பார்க்குமுன்னே இம்மணி ஆட்கொள்ளுமென்க.

(நிலைமண்டில வாசிரியப்பா)

576. முற்படு மாயை முதற்கரை நாட்டிற்
பற்பல புவனப் பகுதி பற்றி
ஈரிரு கண்ணூற் றெழுதரம் வகுத்த
ஆறே ழிரட்டி நூறு யிரத்த
௫ செயற்படு செய்களி னுயிர்ப்பயி ரேற்றி
ஊழெனப் பட்ட தாழ்புனற் படுகரிற்
றெய்விக முதலாச் செப்புமும் மதகும்
ஒவ்வொரு மதகா யுடனுடன் றிறந்து
தாக மென்னுந் தனிப்பெருங் காலிற்
௧௦ போக மென்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயுமைம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துட னகித மெனுமிரண் டூற்றிற்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத் தோட
௧௫ வார்புன லதனை மந்திர முதலா
ஓரா று வகைப்படு மேரிக ணிரப்பி
விளைவன விளைய விளைந்தன வறுத்தாங்

---

576. இச் செய்யுளின் முற்பகுதியில் ஞானசிரியரை உழவனாக உருவகம் செய்கின்றார்.

(அடி, 1.) முற்படு மாயை - சுத்தமாயை. முதற்கரை நாட்டில் - முதலாகச் சொல்லப்பட்ட நாடுகளில்; என்றது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயையென்னும் மூன்றன் புவனங்களையும். (பி - ம்.) 'முற்படு வையம்'

(3.) ஈரிரு கண்ணூறு - அண்டச முதலிய நால்வகைத் தோற்றமாகிய கண்ணூறு; கண்ணூறென்பது வயல்களுக்குப்பாயும் பெரிய வாய்க்கால்; "ஆறுபுனல் பாய்வனகண் ணூறுபணை தோறும்" (திருக்குற். நாட்டுச். 38.) எழுதரம் வகுத்த - எழுவகைப் பிறப்பாகிய வரிசையாக வகுக்கப் பெற்ற; தரமென்பது வயல்களின் தகுதிக்கேற்பப் பிரிக்கும் ஒருவகைப் பிரிவு; வழக்கு.

(4 - 5.) எண்பத்து நான்கு லட்சம் யோனிபேதங்களாகிய வயல்களில். செய் - வயல்.

(6.) படுகர் - நீர்நிலை.

(7 - 12.) தெய்விகம் முதலிய மூன்றாவன ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், ஆதியாத்மிக மென்பன. தாகம் - ஆசை. கால் - வாய்க்கால். போகம் - இன்பதுன்ப அநுபவம்.

(13 - 9.) இதம் - விருப்பு. அகிதம் - வெறுப்பு. மந்திரம் முதலாகிய ஆறு ஏரிகளாவன ஆறு அத்துவாக்கள். விளைவன - ஆகாமியம். விளைந்தன - பிராரத்தம்.

கொருகளஞ் செய்யு முழவ னுகி
மாநிலம் புரக்கு மாசி லாமணி
உ० ஞானசம் பந்த ஞான தேசிக
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயங்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவய னுப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
உரு வேத மென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவ மதனிற் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
௩० விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
அவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
௩ரு தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னுயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கியத்
தீம்புன லமுத மார்ந்தன னதனுல்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே. (கக)

(நேரிசை வெண்பா)

577. விண்புரக்குஞ் சிந்தா மணியென்கோ மெய்ச்சுடரால்
மண்புரக்குஞ் சூளா மணியென்கோ—பண்பார்

---

(அடி, 23.) குடிலை - சுத்தமாயை.

(25.) பாதவம் - மரம்.

(27-31.) வைதிக சைவத்தின் பிரிவுகளைச் சார்ந்தார் தத்தம் பக்குவத்திற்கேற்றவாறு பயனைப் பெற்றனரென்பது கருத்து.

(32-5.) சைவ சித்தாந்தத்தின் உண்மையை அறிவித்தபடி.

(32.) வேதாந்தம் - உபநிடதம்.

(39.) வேம்பெனக் கொண்டனனென்றது வெறுத்தேனென்றபடி.
(154.) விண்ணவரமுது - தேவாமிர்தம்.

577. விண் - சுவர்க்கத்தை. என்கோ - என்பேனே. மெய்ச்சுடரால் - ஞான ஒளியால் - சூளாமணி - முடிமணி.

திருமா முனிவர் சிகாமணியென் கோசிர்
தருமாசி லாமணியைத் தான். (௧௨)

(கட்டளைக்கலித்துறை)

578. தானவ ளுகிய தன்மைபெற் ருனடி தாழப்பெற்ருல்
தானவ ளுகிய தன்மைபெற் றுய்வனத் தன்மையின்றித்
தானவ ளுகிய தன்மைபெற் றேற்கரு டாழ்சடிலத்
தானவ ளுகம் பெருமாசி லாமணிச் சம்பந்தனே. (௧௩)

(நேரிசை யாசிரியப்பா)

579. பந்தனை தவிராச் சிந்தனை நிகர்ப்பப்
பாயிருள் பரந்த மாயிரும் பொழிலிற்
கொளற்குரி மாந்தர்க் களித்தல் செய்யா
தரும்பூண் சுமந்த வறிவி லாளரிற்
௫ சுரும்பூண் வெறுத்த துதைமலர் வேங்கை
தன்மருங் குறீஇப் பொன்மலர் பிலிற்ற
இலையறப் பூத்த சுதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புல னேக்கார் கட்புலன் கடுப்ப

---

578. தான் அவனுகிய தன்மை பெற்ருன் - சிவோகம் பாவனை செய்தவன். அடி - நின் திருவடியை. தான் - அச் சிவஞானி. அவனுகிய தன்மை பெற்று - சிவமாம் இயல்பு பெற்று. உய்வன் - என்றும் மாருது அந்நிலையிலிருப்பான்; "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட, அத்தனெனக் கருளியவாறு" (திருவா.) அத்தன்மையின்றி - சிவோகம் பாவனை யில்லாமல். தான் : அசைநிலை. அவனுகிய - வீணுகிய. தன்மை - நானே முதலென்றல். அருள் - அருள் புரிவாயாக. சடிலத்தானவன் நாகம் பெரு - சடையிலுள்ள சந்திரனையும் ஆபரணமாகிய நாகத்தையும் பெருத; தானவன் - சந்திரன்; "உயர்விஞலெமன்வா னவன்கா ணுரைப்பா ருனக்குமொரு தானவப்பேர்" (சேக்கிழார் பிள்ளைத்தமிழ், அம்புலிப். 3.) இறைவனே தன் திருவுருவத்தை மறைத்து மானிடச் சட்டை சாத்தி ஆசிரியராக எழுந்தருளினு னென்று தெரிவித்தபடி.

579. (அடி, 1-17.) மதுரையின் வளம் கூறப்படும்.

(1) பந்தனை - பற்று. சிந்தனை - மனம்.

(5-6.) சுரும்பூண் வெறுத்த - வண்டுகள் தேனை உண்ணுதலை வெறுத்த; வேங்கை மலரில் வண்டு வீழாதென்பர். தன்னென்றது பின்வரும் புன்னையை. பிலிற்ற - உதிர்ப்ப.

(7-10.) சுதைமலர் - வெண்ணிறமுடைய மலர். மெய்ப்புலன் நோக்கார் கட்புலன் கடுப்ப - உண்மையான பொருள்களைப் பாராத குருடர்களது

இமையா வறுங்கண் ணிமைத்தபைங் கூந்தற்
௧௦ பசுந்தார் மஞ்ஞை யசைந்தமர் தோற்றம்
பொற்றுணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண் டுண்ணு நறுமலர் தூற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்
கவளங் கொள்ளாத் தவளமால் களிற்றிற்
௧௫ கண்பல படைத்த கார்முகில் வண்ணத்
திந்திரன் பொலியு மெழினலங் காட்டும்
தண்பணை யுடுத்த தமிழ்ப்பெருங் கூடல்
வண்பதி புரக்கு மாசி லாமணி
தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
௨௦ தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட னுய வடிவுகொண் டருளாது
மானிட னுய வடிவுகொண் டருளி
எற்பணி பூணு தெற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர

---

கண்ணைப்போல ; புலன் - பொறிநுகர்ச்சிக்கு விஷயமான பொருள். இமையா வறுங்கண் - இமைத்தல் இல்லாத பார்வையற்ற வறிய மயிலிக்கண். கூந்தலென்றது தோகையை. தார் - கழுத்திலுள்ள கீற்று.

(அடி. 11-6.) துணர் - பூங்கொத்து. பொதுளிய - செறிந்த. பொறி வண்டு - புள்ளிகளையுடைய வண்டு. கோடு - கொம்பு. தவளமால்களிறு - ஐராவதம். (பி - ம்.) 'மாகளிற்றிற்'

(5 - 16.) வேங்கைமலருக்குக் கற்பகமலரும், வெண்மலர்கள் செறிந்த புன்னைக்கு ஐராவதமும், மயிலுக்கு இந்திரனும் உவமைகள்.

(17.) தண்பணை - மருதநிலம். கூடல் - மதுரை.

(19 - 25.) சிவபெருமானே தம் உருவங் கரந்து மானிடச் சட்டை சாத்தி ஞானாசிரியராக வந்தாரென்பர்.

தலைப்படு கலைமதி - சிரத்திலே பொருந்திய கலைகளை உடைய பிறை, சிறப்பையுடைய சாத்திர அறிவு. மானிடனுய வடிவு - மானை இடப்பக்கத் திலே உடையவனாகிய திருக்கோலம், மனிதனாகிய உருவம். எற்புஅணி பூணாது - என்பாகிய ஆபரணத்தை அணியாமல். எற்பணி பூண்டு - என்னைத் தொண்டு கொண்டு. பாரிடம் - பூதம், பூமி.

உரு ஆரு ரமர்ந்த ஞானசம் பந்த
நிற்புகழ்ந் திறைஞ்சுங் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பற் றிருப்ப ரென்ப
பொருட்டுணி புணர்ந்த புலமை யோரே
இகபர மிரண்டினு மெதிர்நிறை கொளினும்
௩௰ தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்
முன்னவர் மொழிந்ததற் கன்னிய மாகலின்
விருப்பு வெறுப்புள வாய
கருத்தின ராகவுங் கண்டனம் யாமே. (௧௪)

---

(அடி, 26-33.) ஞான தேசிகரிடத்துக்கொண்ட பேரன்பினால் அவருடைய அடியார்கள் வெறுத்தற்குரிய இவ்வுலக வாழ்விலே விருப்புடையராகி யிருப்பாரென்று கூறுவர்.

கற்பின் மாக்கள் - கல்வியையுடையார். விருப்பு வெறுப்பு அற்று இருப்பர் என்ப - விருப்பும் வெறுப்பும் அற்று இருப்பார்கள் என்று கூறுவர். புலமையோர் என்ப.

இகபரம் இரண்டினும் எதிர்நிறை கொளினும் - அவ்விருப்பு வெறுப்புக்களை இகம் பரம் என்பவற்றின் எதிரே நிறுத்தலைக் கொள்ளினும்; எதிர் நிரனிறையாக அமைத்துப் பொருள் கொள்ளினுமென்றபடி; கொள்ளுமாறு: இகத்தில் வெறுப்பற்றிருப்பர், பரத்தில் விருப்பற்றிருப்பரென்பது. இம்மை வாழ்வையே இன்ப வாழ்வாகக்கொண்டு முத்தி யுலகத்தில் விருப்பமற்றிருப்ப ரென்றவாறு. தொகுதியுள் - பலவகைத் தொகைகளுக்குள். வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும் - வேற்றுமைத் தொகையாக வைத்து அதற்கேற்பப் பொருள் கொண்டாலும்; என்றது, விருப்பினிடத்தே வெறுப்பு அற்றிருப்பரென்று விரித்து விரும்பத்தக்க உலக வாழ்வு முதலியவற்றில் அடியார்க்கு இருக்க வேண்டிய வெறுப்பு நீங்கி இருப்பரென்று பொருள் கொள்ளுதல்; உலக வாழ்வை விரும்புவரென்பது கருத்து. இவ்விருவகைப் பொருள்களும் முன்னவர் விருப்பும் வெறுப்பும் அற்றிருப்பரென்னும் பொருள்படக் கூறியமைக்குப் புறம்பானவையாகும். அன்னியம் - புறம்பு. விருப்பு வெறுப்பு உளவாய கருத்தினராகவும் கண்டனம் - இம்மை வாழ்விலே விருப்பும் மறுமை வாழ்விலே வெறுப்பும் உளவாய கருத்தினராகவும் கண்டோம். "தெய்வப் பொன்னித் திருநதிசூழ் சிறப்பு மிருநான் கொருகோடி - சித்தர் வாழுந் திருவரசு மதன்கீ ழொருமா சிலாமணியும், மைவைத் தனைய விருட்டறையிற் குருட்டா மானு மான்மாக்கள் - மலநோ யகற்றிக் கதியளிப்பான் வந்தங் கவர்புன் றலைமீது, கைவைத் தருளி முறையோபொற் கழலுஞ் சூட்டுங் கோமுத்திக் - கருணைக் கடல்பஞ் சாக்கரத்தே சிகன்சீ ரடியார் கலந்திருக்கும், சைவத் திருவோ லக்கமுமக் குண்டேற் கைலை தனையொருகாற் - சார்ந்து மீள்வேன் மற்றங்குத் தரியே னங்குத் தரியேனே" (தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் பாடல்) என்னும் செய்யுளில் இக்கருத்து ஒருவகையாக அமைந்திருத்தல் காண்க.

(நேரிசை வெண்பா)

580. கண்ணிற் கணியாங் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற் கணியாப் பகர்வரால்—எண்ணுங்காற்
பன்னூலிற் கோக்கப் படுமணியன் றிம்மணிமற்
றிந்நூலிற் கோக்குமணி யென்று (கரு)

(கட்டளைக்கலித்துறை)

581. என்வச மாகவில் லாதநெஞ் சாமிரும் பைக்குழைத்துத்
தன்வச மாக்கொண் டிழுக்கின்ற தாற்றொண்டர் தம்மையருள்
மன்வச மாகச் செயுமாசி லாமணி மாமணிக்குப்
பொன்வச மாகச்செய் காந்தமென் றேசொல்லப் போந்ததுவே()

(நேரிசை யாசிரியப்பா)

582. போந்தையங் கண்ணி வேந்துவிற் பொறித்த
மன்பெருங் கிரியின் மென்கரும் பெழுதித்
தேசுலாம் பசும்பொற் சிகரமந் தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச் சிறுக்கிக்
௫ கடாம்பொழி கரடக் களிநல் லியானை
படாம்புனைந் தென்னப் பைந்துகில் போர்த்துப்

---

580. பண்ணிற்குஅணி - இசைப்பாட்டிற்கு அலங்காரமாக இருப்பவன்; பண்: ஆகுபெயர். பன் நூல் - பஞ்சினாலாகிய நூல்; பன் - பஞ்சு. இந்நூலில் - இந்தச் செய்யுள் நூலில். என்று பகர்வரால். ஏனைமணி பஞ்சினாலாகிய நூலிற் கோக்கப்படும்; இது செய்யுணூலிற்கோக்கப்படுமென்று இரண்டு மணிக்கும் வாசி கூறியவாறு.

581. நெஞ்சாம் இரும்பை; "இருப்புதரு மனத்தேனை" (திருவா.) குழைத்து - குழையச்செய்து. பொன் - இங்கே இரும்பு. இந்தமணியை இரும்பை இழுக்கும் காந்தமென்றே சொல்லவேண்டுமென்றபடி. மாமணிக்குத் தன்மை போந்ததுவென ஒருசொல் வருவித்துரைக்க.

582. (அடி, 1 - 21) திருவாரூரின் சிறப்பைக் கூறுகின்றார்.

(1) போந்தையங் கண்ணி வேந்து - பனங்குருத்தாலாகிய மாலையை அணிந்த சேரன். வில்லைப் பொறித்த.

(2) கிரி - இமயமலை.

(1 - 2.) சேரன் இமயத்தில் விற்பொறியைப் பொறித்தமை, "அமைவரலருவி யிமையம்விற் பொறித்து" (பதிற். 2-ஆம் பத்துப்பதிகம்) என்பதனால் விளங்கும். கரும்பென்றது மன்மதனுடைய வில்லின் வடிவத்தை.

பிதிர்சுணங் கலர்ந்த கதிர்முலை மடந்தையர்
விட்புலத் தவர்க்குங் கட்புலன் கதுவாச்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பிற்
௧௦ சுவல்கைத் தாங்குபு மதியணந்து பார்க்கச்
சேணிகந் தோங்கும் யாணர்செய் குன்றத்
தாடகத் தியன்ற சூடகக் கரத்தால்
மாடகத் திவவியாழ் மருமமீ தணைத்து
மூவகை நிலையத் தேழுசுர நிறீஇக்
௧௫ கொவ்வைவாய் திறந்து குயிலெனை மிழற்றுபு
மென்னரம் புகிரான் விரன்முறை தடவிக்
கின்னரம் வியக்குங் கீதம் பாட
நகைநில வெறிக்கு முகமதி காணூஉச்
சந்திர காந்தத்திற் சமைத்தசெய் குன்றம்
௨௦ மைந்தர்போன் றுருகி மழைக்கணீர் சொரியப்
பல்வளஞ் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை

---

(அடி, 1-7.) மடந்தையரது கொங்கைகளின் மீது வில் எழுதியதற்குச் சேரன் இமயத்தில் விற்பொறித்ததும், அவற்றைக் கச்சால் இறுக்கியதற்கு மந்தர மலையை வாசுகித் தாம்பாற் பிணித்ததும், அவற்றின்மேல் ஆடை போர்த்ததற்கு யானையின் முகத்தின்மேல் படாம் புனைந்ததும் உவமைகள்.

எழுதி இறுக்கிப் போர்த்து அலர்ந்த முலை மடந்தையரென்க.

(7-17.) இவ்வடிகளில் அம்மடந்தையர் மாளிகைமீதிருந்து யாழ் வாசித்தல் கூறப்படும்.

(8.) விட்புலத்தவர்க்கும் - தேவர்க்கும்; உம்மை சிறப்பு.

(9.) சூளிகை - மாடங்களின்மேல் உள்ள அறை.

(10.) சுவல் - பிடர். அணந்து - அண்ணாந்து; பிடரைக் கையாற்றாங்கி மேனோக்குதல்: "தாணரு முழவுத் தோண்மடித் தும்பர் சுவல்பிடித்தணந்து பார்த் துணங்கும், தோரண மாடக் கூடல்" (150.)

(11.) சேண் இகந்து - விண்ணுலகத்தைக் கடந்து. யாணர் - அழகு. செய்குன்றம் - கட்டுமலை.

(12.) ஆடகத்து இயன்ற சூடகம் - பொன் வளை.

(13.) மாடகம் - முறுக்காணி. யாழை மருமமீது அணைத்து என்க; மருமம் - மார்பு.

(14.) மூவகை நிலையம் - வலிவு, மெலிவு, சமம் என்பன.

(16.) நரம்பைத் தடவி.

(17.) கின்னரம் - ஒருவகைப்பறவை; பதினெண்கணத்துள் ஒன்றாகிய கின்னரச்சாதியுமாம். கீதம் - இசைப்பாட்டு.

நல்வளம் பதிவாழ் ஞானசம் பந்த
பாசமா மிருட்கோர் படர்மணி விளக்கெனும்
மாசி லாமணித் தேசிக ராய
௨௫ சாற்றுவன் கேண்மதி மாற்றமொன் றுளதே
மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார
மொழிதடு மாற முழுவலன் பலைப்பச்
சத்திநி பாதத் தன்மைவந் தடைந்தோர்க்
கப்பொருள் புரிதற் கதுபொழு தாகலின்
௩௦ மெய்ப்பொரு ளுணர்த்துதல் வியப்பெனப் படாதே
சொற்றமிழ் விரகன் றுணைக்கண் சாத்த
முற்றுணர் கேள்வியர் பற்பல ராயினும்
கைசொலக் கேட்குங் கட்செவி மூங்கைக்
குய்வகை புணர்த்த தொருவியப் பாகலின்
௩௫ அன்னது கடுப்பநின் சந்நிதி விசேடத்
தின்னருள் பெறுதவர் யாவரு மிலரென
வியப்புள தாக நயப்பதொன் றுளதே
அனையதீங் கென்னென வினவுதி யாலெனிற்
கதலித் தண்டிற் பொதிதழற் கொளீஇப்
௪௦ பற்று திருப்பினும் பைப்பைய மூட்டுபு
மற்றொரு சூழ்ச்சியிற் பற்றுவித் தாலென

---

(அடி, 23.) இருட்கு - இருளை அழித்தற்கு. மணி விளக்கு - இரத்தின தீபம்.

(26 - 30.) சத்திநிபாதத்தை அடைந்தவர்க்கு உண்மைப்பொருளை உப தேசித்தல் வியப்பு அன்று; செய்யவேண்டுவதே.

(31 - 5.) இவ்வடிகளில் திருவாதவூரர் சிதம்பரத்தில் ஈழத்தரசனுடைய மூங்கைப்பெண்ணைப் பேசவைத்த செயல் கூறப்படுகின்றது.

(31.) தமிழ் விரகன் - திருவாதவூரர்; இத்திருநாமம் திருஞான சம்பந் தர்க்கே பெரும்பாலும் வழங்குகின்றது.

(33.) கட்செவி - கண்ணையே காதாக உடைய. மூங்கை - ஊமைப் பெண். ஊமைகள் கையாற் சொல்லக் கண்ணாற்கேட்டல்: "கையி னாற்சொ லக் கண்களிற் கேட்டிடும், மொய்கொள் சிந்தையின் மூங்கையு மாயினேம்" (சீவக. 997.)

(35.) கடுப்ப - ஒப்ப.

(39.) கதலித்தண்டு - வாழைத்தண்டு.

(40.) பைப்பைய - மெல்ல மெல்ல.

(41.) சூழ்ச்சியின் - ஆலோசனையினால்.

ஒருசிறி தெனினும் பருவமின் றெயினும்
பவவிரு டுரந்தருள் பதியத்
தவமில் பேதையேன் றனக்கருள் வதுவே. (௧எ)

(நேரிசை வெண்பா)

583. தன்னேரி லாஞான சம்பந்தன் றாளடைந்தார்க்
கென்னே யிருள்வெளியா மென்பரால்—அன்னோன்
அருளாத போதுவெளி யாயிருந்த வெல்லாம்
இருளா யிருந்த வெனக்கு. (௧அ)

(கட்டளைக்கலித்துறை)

584. என்செய லாலொன்று யான்செய்வ தில்லை யெனக்கவமே
புன்செய லாம்வினைப் போகமுண் டாவதென் போதமில்லேன்
தன்செய லாயவெல் லாமாசி லாமணிச் சம்பந்தநின்
நன்செய லாயினு மென்செயலாச்செய்யு நானென்பதே. (௧௯)

(நேரிசை யாசிரியப்பா)

585. நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ
நூன்முறை பயின்ற நுண்மைசா லறிஞ
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்குங் காவியப் புலவ
௫ செவிதொறுஞ் செவிதொறுந் தெள்ளமு தூட்டுபு
கவிஞர்வயி னிரப்புங் கல்விப் பிரசங்க
வெள்ளிடைத் தோன்று துள்ளத் துணர்த்தவும்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவும்
சாயா மும்மலச் சகலரே முய்ய

---

(அடி, 38-44) அணியது அருள்வதுவே என்க.

583. இருள் - அஞ்ஞானம். வெளி - ஞானம். அவன் திருவருளால் இருளாயின வெல்லாம் வெளியாயின என்பது கருத்து; இருள் - உலகம்; வெளி - முத்தி; "மெய்யைப்பொய் யென்றான் வெளியைநல்ல வீடென்றான்" என்றார் ஒரு பெரியார்.

584. அடியேன் செயலெல்லாம் நின்செயலாயிருப்ப வினைப்போகத்தை அடியேன் அனுபவித்தற்குக் காரணம் அடியேனுக்குள்ள அகங்காரமே.

585. (5) கேட்பவர் செவிகள் தோறும்.

(6) வயின் - வயிறு, இடம்; சிலேடை.

(7) வெள்ளிடை - வெளியிடத்தே. உள்ளத்து உணர்த்துதல்: விஞ்ஞானகலர் திறத்தில்.

(8) திருக்கண் சாத்துதல், பிரளயாகலர் திறத்தில்,

க௦ எம்முருக் கொண்டு மெம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடு மகழ்ந்து
சிற்பர முணர்த்துஞ் சற்குரு ராய
பளிங்கினிற் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட் டயர்தரக்
கரு கொங்குவார் குழலுங் குவளைவாள் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந் தொளிர்தலிற்
சைவலம் படர்ந்து தடங்கய லுகளும்
செய்யபூங் கமலச் செழுமல ரோடையென்
றுடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
உ௦ வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர்மற்
றம்மெ லோதி யரம்பைய ராதலின்
நீர்நிலை நிற்றிரா னீரவர் தங்களுள்
யார்கொல் யார்கொ லிசைமி னிசைமினென்
றிரும்பூ தெய்தி யிரந்தன ரிசைப்ப
உரு மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்தாங்
கையுற வகற்று மணிமதிட் கமலை
நன்னகர் புரக்கு ஞான தேசிக
ஆசிலா வண்புக ழணிநிலா வெறிக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த

---

(அடி, 10.) எம் முருக்கொண்டென்றது சகலர்க்கு அருள் செய்யும் முறையை.

(7-10.) மூவகை யான்மாக்களுக்கும் இங்கே கூறியபடி அநுக்கிரகம் செய்வதன் விரிவு கந்தர் கலிவெண்பா, 30 - 33 - ஆம் கண்ணிகளாலும் அவற்றின் குறிப்புரையாலும் விளங்கும்.

(13 - 26.) திருவாரூர்ச்சிறப்புக் கூறப்படும்.

(13 - 18.) நிலாமுற்றம் நீர் நிறைந்த ஓடையாக உருவகிக்கப்படும்.

(13.) குயின்ற - செய்யப்பட்ட.

(15 - 24.) மகளிர் விளையாடும் பளிங்குமாடத்தை நீர்நிலையென்றும், அவருடைய கூந்தலைச் சைவலமென்றும், கண்களைக் கயல்களென்றும், முகத்தைத் தாமரைமலரென்றும் நினைந்த இளைஞர் அவரைத் தெய்வமகளி ரென்று ஐயுற்றுப் பின், நீரரமகளிரென்று துணிந்து நீவிர் அவருள் யாரெ ன்று கேட்ப, அம்மகளிர் குறுநகையால், ஐயத்தை நீக்குதற்கு இடமான காலையென்க ; அந்நகை தம் பேதைமை நிலைக்களனாக மகளிரிடத்துத் தோன் றியதை உணர்ந்து இளைஞர் ஐயம் நீங்கினர்,

௩௦ என்பொருட் டாயினு மென்பொருட் டன்றிது
நின்பொருட் டொருபொரு ணிகழ்த்துவன் கேண்மோ
வறிஞ ரோம்பிய செறுவொன் றேய்ப்பப்
பருவ நோக்காப் பவந்தொறும் பவந்தொறும்
இருவினைப் போகமு மெற்கொண் டார்த்துபு
௩௫ மற்றென் னுருக்கொடு முற்றனை யாலினித்
தாகமின் றுகலிற் பாகமின் றெனக்கென
அருளா தொழியினும் பரிபவ நினக்கே
சேய்முகம் பாராள் சினந்தன ளேகினும்
போயெடுத் தாற்றுமத் தாய்மீட் டன்றே
௪௦ ஆதலி னெனைப்போ லடிக்கடி தோன்றலை
ஈதியா வின்னரு ளின்னண மெனக்கே
சமையந் தீர்ந்த தனிப்பொரு ளொரித்தற்
கமையந் தேர்கலை யருளுதி யாயினும்
எண்ணீ ராண்டைக் கிலக்க மிட் டிருந்த
௪௫ அண்ணலங் குமரற் காருயிர் தோற்ற
கடாவிடை யூர்திபாற் கண்டும்
அடாதென மொழிகுந ரார்கொன்மற் றுனையே. (௨௦)

---

(அடி, 32.) செறு - வயல். வறிஞரோம்பிய செறு: "வையக முழுவதும் வறிஞ ரோம்புமோர், செய்யெனக் காத்து" (கம்ப. அரசியற். 12); "மிடிய ரொருசெய் யாளனச்செய் விளையக் காக்குஞ் செயல்போல" (பிரபு. மாயை யுற்பத்தி. 49.)

(33.) பருவம் நோக்கா - என்னுடைய புக்குவத்தை நோக்கி.

(35.) உருக்கொடும்: உம்மை இறந்தது தழுவியது.

(36.) தாகமின்று - அடியேனுக்கு விருப்பமில்லை. பாகம் - பக்குவம்.

(37.) பரிபவம் - அவமானம்.

(38.) சேய் - பிள்ளை.

(39.) ஆற்றும் - ஆற்றுவாள்.

(41.) இன்னருள் ஈதி. இன்னணம் - இப்பொழுதே; இச்சொல் இப்பொருளிற் பயில வழங்கவில்லை; இன்னவண்ணமென்பதன் விகாரமெனினும் ஆம்.

(46.) கடாவிடை - எருமைக்கடாவாகிய விடை; விடை, எருமையின் ஆணுக்கும் வரும். (பி - ம்.) 'ஊர்தியாற்'

(47) அடாது - பொருந்தாது.

(42 - 7) விதியை விலக்கி அடியார்க்கு அருள் செய்தலை மார்க்கண்டேயருக்காக உதைக்கப்பெற்ற யமனிடத்தே கண்டும்.

(நேரிசை வெண்பா)

586. ஆரூரே யூர்பே ரருண்மாசி லாமணியென்
றோரூர்பே ரில்லாற் குறைத்தேற்குப்—பாரேறப்
பொய்யென்றான் மெய்யென்றான் பொய்யான பொய்யுடலை
மெய்யென்றான் பொய்யென்றான் மீண்டு. (உக)

(கட்டளைக் கலித்துறை)

587. மீளா மணிமந் திரமருந் தாற்சென்ம வெவ்விடநோய்
வாளா மணியொன் றினன்மீண்ட வாவம் மணிபிறர்கொண்
டாளா மணியெமை யாட்கொள்சிந் தாமணி யைந்தவித்தோர்
சூளா மணிமெய்ச் சுடர்மாசி லாமணி சூழ்ந்திடினே. (உஉ)

(நேரிசை யாசிரியப்பா)

588. சூழ்போய் நிவந்த வாழ்கட லுலகத்
தின்னருட் டிறத்தா லிடைமரு தமர்ந்த
பொன்னவிர் கடுக்கைப் புரிசடைப் புங்கவன்
அமையாக் காத லிமையவல் லிக்கு
ரு வழிபடன் முறைமை விழுமிதி னுணர்த்தத்
தானே தன்னைப் பூசனை புரிந்தெனை

---

586. ஆரூரே ஊர். ஓரூர் பேர் இல்லான்: "ஊரும் பேரு முருவு மில்லான், ஆயினுந் திருவா வடுதுறை யூரணைந், தம்பல வாண னெனும் பெய ராதரித், தறிவே யுருவா யமர்ந்தகுரு ராயன்" (இ. கொ. பாயிரம்.) (பி - ம்.) 'உரைத்தேற்கும்'

ஏற - மிகுதியாக. உலகத்தைப் பொய்யென்றான்; தான் அங்ஙனம் கூறியது மெய்யென்றான். இதற்குப் பிறவாறு கூறுவாருமுளர். மெய் யென்பது எதிர்மறை இலக்கணையால் உடலுக்குப் பெயராக வழங்குகின் றது.

587. மணி மந்திர மருந்தால் மீளாச் சென்மநோய். நோயை நீக்குவ தற்கு மணிமந்திர ஔஷதங்களாகிய மூன்றும் பரிகாரமாகக் கூறப்படும். அவை இந்நோய்க்கு உதவா என்றார். இம்மூன்றனுலும் தீர்த்தற்கரிய நோ யொன்று ஒருமணியால் மட்டும் நீங்கியது. மீண்டவா - தீர்ந்தது என்ன வியப்பு. பிறர் கொண்டு ஆளா மணி - ஏனைய மணிகள்போல் பிறரால் விலைக்குக் கொள்ளப்பெற்று அவரால் பயன் படுத்தற்குரியதல்லாத மணி; ஆளுதல் - பயன்படுத்தல்; வழக்கு. ஐந்து அவித்தோர் - ஐம்பொறிகளையும் அடக்கினோர். சூழ்ந்திடினே மெய்ச்சுடர் மாசிலாமணி யாகுமென்க.

588. (அடி, 1-6.) திருவிடை மருதூரில் இறைவன் தன்னைத்தான் பூசித்தானென்பது புராணவரலாறு. இமையவல்லிக்கு உணர்த்த - திரு விடை மருதூரில் தவம்புரிந்த உமாதேவியாருக்கு அறிவித்தற்பொருட்டு. புரிந்தென - புரிந்ததுபோல.

அருத்தியோ டெம்மைநம் முருத்திர கணங்கள்
தெரித்துமற் றிவ்வா றருச்சனை புரிதிரென்
றங்கயற் கண்ணி பங்கில்வீற் றிருந்த
௧௦ செக்கர் வார்சடைச் சொக்கநா யகனை
ஈரெண் டிறத்துப சாரமும் வாய்ப்பப்
பூசனை புரியுந் தேசிக ராய
மழைக்குலந் தழைப்பத் தழைத்ததீம் பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுட் கிடந்த
௧௫ முட்புறக் கனிகள் விட்புறக் காண்டலும்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று
கீண்டுபொற் சுளைபல தோண்டுவ தம்ம
முற்பக லொருவர் பொற்குட நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழா மனைத்தும்
௨௦ வஞ்சகம் பழகு மஞ்சனக் கள்வர்
கண்டுகண் டெடுக்குங் காட்சித் தன்ன
தண்டலை வளைஇத் தடமதி லுடுத்த
தேசுலாங் கமலைத் திருநகர் புரக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த
௨௫ வாக்கு மனனும் யாக்கையு மொன்றாச்
சொற்றரு கரண மற்றிவை மூன்றும்
நின்புகழ் நவிற்றியு நினைத்துநின் றுணைத்தாள்
அன்புட னிறைஞ்சியு மின்பமுற் றனவால்

---

(அடி, 7-12.) அருத்தி - அன்பு. உருத்திரகணங்கள் - அடியவர் கூட்டம் (337); "உருத்திரப் பல்கணத்தார்க், கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்" (தே. திருஞா. திருமயிலை.) சொக்கநாயகன் : தருமபுர மடத்தில் வழிபடப்பெறும் சிவலிங்கப் பெருமான். ஈரெண் திறத்து உபசாரம் - ஆவாகனம் முதலிய பதினாறு வகை உபசாரங்கள்.

(13-22.) திருவாரூர்ச் சோலைவளம் கூறப்படும்.

முட்புறக் கனிகள் - பலாப்பழங்கள். (பி - ம்.) 'கனிகள் பெட்புறக் காண்டலும்', 'விட்புறக் கமழ்தலும்' விட்புற - வெடிக்க; விட்பு - விள்ளுதல். அஞ்சனம் - புதையலைத் தோற்றச் செய்யும் மை. பலாப்பழத்திற்குப் பொற்குடமும் குரங்குக்குக் கள்வரும் உவமை.

(25-8.) நவிற்றல் முதலியவற்றை முறையே வாக்கு முதலியவற்றின் செயல்களாகக் கொள்க ; நிரனிறை.

அவகர ணங்களே யல்லமற் றம்ம
௩௦ சிவகர ணங்களாய்த் திரிந்தன வன்றே, அதனாற்
றிரிகர ணங்களென் றுரைசெயு மப்பெயர்
ஒருபொருட் கிளவியெல் லோர்க்கும்
இருபொருட் கிளவியா யிருந்ததின் றெனக்கே. (உ௩)

(நேரிசை வெண்பா)

589. எற்கமலஞ் செய்யு மெழின்மாசி லாமணிதன்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
ஊரிற் குறுகினே னோர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின். (உ௪)

(கட்டளைக் கலித்துறை)

590. பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்கறுத்தோர்
சின்னம் படைத்த முனிமாசி லாமணிச் சித்தரியாம்
இன்னம் படைத்தவ ரேது பெறுரமு திங்கெமக்கென்
றன்னம் படைத்தவர் பெற்றார் புவன மடங்கலுமே. (உ௫)

---

(அடி, 29.) அவகரணங்கள் - வீண் செயலைச் செய்யும் கரணங்கள்.

(31-3.) திரிகரணங்களென்பது மூன்று கரணங்களென்னும் ஒரே பொருளைத் தருவதாகிப் பிறர் திறத்தே வழங்குகின்றது; என்பால் அச் சொல், பழைய இயல்பு மாறித் திரிந்தவையாதலின் திரிந்த கரணங்களென்று மற்றொரு பொருளும் பெற்று இருபொருட் கிளவியாகி நின்றது.

589. அமலம் - மலமற்ற தன்மையை. ஊரிற் குறுகினேன் - ஊரை யடைந்தேன். என்பேரென்றது சீவனென்பதை. அஃது ஒரு மாத்திரை குறைந்ததாவது சிவன் என்பது; சிவமானே னென்றபடி; மலமறுத்துச் சிவமாக்கி யருளினாரென்று கொள்க; "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட, அத்தன்" (திருவா. அச்சோ.) இதில்' மாத்திரைச் சுருக்க மென்னும் அணி அமைந்துள்ளது.

590. இச்செய்யுள் கலம்பகங்களில் வரும் சித்து என்னும் உறுப்பைப் போன்றது; ஒரு சித்தர் இருபொருள்படக் கூறும் கூற்றாக அமைந்தது.

பின்னம் - வேறுபாடு. பிணக்கு அறுத்து ஓர் சின்னம் படைத்த; சின்னம் - வெற்றிக்குரிய அடையாளம்; காகளமுமாம். மாசிலாமணியின் அருள்பெற்ற சித்தர். எமக்கு அமுது என்று இங்கு அன்னம் படைத்தவர் புவன மடங்கலும் பெற்றார் - எமக்குரிய அமுதமாமென்று கூறி இங்கே சோற்றை இட்டோர் அதன் பயனாக உலக முழுவதும் பெற்றார்; அன்னப் பறவையை வாகனமாகப்பெற்ற பிரமதேவர் உலகமுழுதும் சிருட்டி செய்தா ரென்பது இயல்பான பொருள். இன்னம் படைத்தவர் - இன்னும் அன்னம் படைத்தவர். ஏது பெறார் - என்ன பயனைப் பெறமாட்டார்?

(நேரிசை யாசிரியப்பா)

591. அடங்கா வைம்புல னடங்கினர்க் கம்ம
ஒடுங்கா வைம்புல னுளத்தினு முளவே, அவைதாம்
செவிப்புல னறியா வகத்தொலி யொன்றே
மெய்ப்புல னறியாத் தட்பமற் றொன்றே
௫ கட்புல னறியாக் கதிரொளி யொன்றே
நாச்சுவை யறியா நறுஞ்சுவை யொன்றே
மூக்குயிர்த் தறியா முருகுமற் றொன்றே
பேரா வின்பமிப் பெற்றியிற் றிளைக்கும்
ஆரா வின்பமொன் றூர்ந்தனம் யாமே, அதுவே
௰ கரையெறிந் தார்க்கும் பொருபுனற் படுகரிற்
பணிலமீன் றளித்த மணிநிலாப் போர்ப்பத்
தருணவெள் ளெகினந் தன்னகத் தடங்க
அருண முண்டக மகவிதழ் முகிழ்ப்பது
தெண்டிரை யுடுத்த தீம்புனன் மடந்தை
௧௫ வெண்டுகிற் படாஅம் விரித்தனள் போர்த்து
வள்ளவாய்க் கமல மலர்க்கையால் வளைத்துப்
பிள்ளைவெள் ளெகினம் பிடிப்பது கடுக்கும்
காசுலாம் பசும்பொற் கடிமதிற் கமலை
மாசி லாமணி ஞானசம் பந்தனென்
௨௰ றருந்தவர் துதிப்பவோர் பெரும்பெயர் நிறீஇப்

---

591. (அடி, 1-9) சிவயோகாநுபவத்தின்கண் நுகரும் உண்முக நுகர்ச்சிகளை இவ்வடிகளிற் கூறுகின்றார். அடங்கா ஐம்புலனென்றது புறத்தே நுகரும் நுகர்ச்சிகளை. உளத்தினு முளவே யென்பதை விரிக்கின்றார். ஐம்புலன் - ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்கள். மெய்ப்புலன் - மெய்யாகிய இடம். தட்பம் - குளிர்ச்சி. முருகு - நறுமணம்.

(10 - 18) திருவாரூர்த் தடாகச் சிறப்புக் கூறப்படும்.

படுகர் - நீர்நிலை. பணிலம் - சங்கு. மணி - முத்து ; எழுவாய். தருணம் - இளமை. எகினம் - அன்னப்பறவை. அருண முண்டகம் - செந்தாமரை. முகிழ்ப்பது - குவிதல். புனல் மடந்தை - நீராகிய மகள். முத்தின் ஒளிக்கு அம்மகளின் துகிலும் தாமரைக்கு அவள் கையும் உவமை. முத்தின் ஒளியை நிலவெனக் கருதித் தாமரை குவிந்தது ; இது திரிபதிசயவணி.

பரமா னந்தப் பரவையுட் டோன்றிய
இன்பவா ரமுதமவ் வமுதம்
அன்பருக் கெளிதெளி தரிதுவிண் ணவர்க்கே. (உசு)

(நேரிசை வெண்பா)

592. விண்மணியாய்க் காண்போர் விழிக்குட் பொலிந்ததுணைக்
கண்மணியாய் நின்றெவையுங் காட்டுமால்—ஒண்மணிச்சூட்
டம்மா சுணந்த னணிமுடிமேற் கொண்டிருந்த
இம்மாசி லாமணிமற் றின்று. (உஎ)

(கட்டளைக் கலித்துறை)

593. இன்றோர் வியப்புள தான்மாசி லாமணி யென்றிருப்ப
தொன்றோர் மணிகண் டவர்பல ராலதற் கோர்மருங்காய்
நின்றோர் பலபல பேதங்க ளாச்சொல்வர் நீக்கமறச்
சென்றோர்மற் றிம்மணி செம்மணி யேயென்று செப்புவரே.()

---

(அடி, 21.) பரமானந்தப்பரவை - பேரின்பமாகிய கடல்.

யாம் இன்பம் ஆர்ந்தனம்; அதுவே, என்று துதிப்ப நிறீஇத் தோன்றிய அமுதம்; அவ்வமுதம் அன்பருக்கெளிது; விண்ணவர்க்கு அரிதென்க.

592. விண்மணி - சூரியன். துணைக்கண்மணி - இரண்டு கண்களினு முள்ள மணிகள். மணியாகிய சூட்டையுடைய அம் மாசுணம்; சூட்டு - உச்சி; மாசுணம் - பாம்பு. மாசுணத்தைத் தன் அணிமுடியின்மேற் கொண்டிருந்த. (பி - ம்.) 'மாசுணந் தள்ளி யம்முடிமேற்' பாம்பு தன் முடிமேல் மணியைக் கொள்வது இயல்பு; இம்மணி ஆசிரியமூர்த்தியாக எழுந்தருள்வதற்கு முன்பு பாம்பைத் தன்முடிமேற் கொண்டிருந்த தென்றவாறு.

593. மாசிலாமணி யென்னும் ஒரு மணியைக் கண்டோர் பலர்; நீங்கி நின்று ஒவ்வொரு பாலிருந்து பார்த்தோர் தத்தமக்குத் தோற்றியபடி அதனை வெவ்வேறாகக் கூறுவர்; அதனை நெருங்கிச்சென்று கண்டோர் அது செந்நிறத்தையுடைய மாணிக்கமே யாமென்பர். இந்த ஞான தேசிகரைக் கண்டோர் தத்தம் அறிவு நிலைக்கேற்பப் பலபடியாகக் கூறுவர், இவரை அணுகினோர் இவர் சிவபெருமானின் வேறல்லரென்று உணர்வா ரென்பது கருத்து. வியப்பு யாதெனின் என்பதை வருவிக்க. மாசிலாமணி யென்று ஒன்று உண்டு; அவ்வொரு மணியைக் கண்டவர். செம்மணி - மாணிக்கம், சிவபெருமான்; "சிவனெனு நாமந் தனக்கே யுடைய செம் மேனி யெம்மான்" (தே.)

(நேரிசை யாசிரியப்பா)

594. ஏழுயர் மும்மதச் சூழிமால் யானை
தடம்புனல் குடைந்து படிந்தெழுந் துழக்கத்
தெண்டிரை சுருட்டுங் குண்டகழ் வாவியிற்
பங்கயத் தவிசிற் பசும்பொற் றுதளைந்
௫ தங்கம் வேறுபட் டரசனம் பொலிதலும்
ஆவலிற் படர்ந்த சேவல்கண் டயிர்த்துநம்
பேடையன் றிதுமல ரோடையு மன்றே
படரும்வெண் டாமரை படர்ந்ததை யன்றிது
கடவுள ரமுதங் கடைந்தபாற் கடலே
க0 காந்துவெங் கனற்கட் களிறுமன் றிதுகடற்
சாய்ந்தெழு மந்தரத் தடங்கிரி யதுவே
போகுவா லுறுப்பும் புழைக்கையுந் தைவரு
பாகரோ வாசுகி பற்றும்வா னவரே
பொங்கிவெண் ணிலவு பொழிந்தவெண் டரளமன்
கரு றிங்கிது வங்கதி லெழுந்தவா ரமுதே
கொடிவிடு பாசடைக் குழாமன் றிங்கிதக்
கடலிடைத் தோன்றிய கற்பகா டவியே

---

594. (அடி, 1 - 26.) இவ்வடிகளில் திருவாரூரிலுள்ள தடாகத்திற்குப் பாற்கடல் உவமையாகக் கூறப்படும்.

(1 - 2.) ஏழு உயர் யானை - ஏழுமுழம் உயர்ந்த யானை ; சீவக. 775, ந.

(5 - 6.) அரசனமென்றது இங்கே பேடையை. சேவல் - ஆணன்னம். அயிர்த்து - ஐயமுற்று.

(7.) (பி - ம்.) 'ஓடையன்றே'

(8 - 9.) வெண்டாமரையின் மிகுதி அத்தடாகத்தைப் பாற்கடலாகத் தோற்றச் செய்தது.

(10 - 11.) யானைக்கு மந்தரமலை உவமை.

(12 - 3.) போகு வால் - நீண்ட வால். துதிக்கைக்கு வாசுகியின் தலைப் பக்கமும், வாலுக்கு அதன் வாற்பக்கமும், பாகருக்குத் தேவரும் உவமைகள். அசுரரும் கடைந்தாராயினும் சிறப்பு நோக்கி வானவரென்றார் ; அசுரரும் வானத்தில் வாழ்தலின் வானவரென்பது அவரையும் உள்ளிட்டதாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

(14 - 5.) முத்தின் தொகுதிக்கு அமுதம் உவமை.

(16 - 7.) கொடி - தாமரைக் கொடி முதலியவை. பாசடைக்குழாம் - பசிய இலையின் தொகுதி ; அதற்குக் கற்பகாடவி உவமை.

சேயிதழ் விரிக்குஞ் செந்தா மரையிதன்
றுயதன் வடிவமா யமர்ந்தமா நிதியே *
௨௦ சங்கமன் றிதுவதன் றனிப்பெயர் நிதியே
செங்கிடை யன்றிது சிந்தா மணியே
ஆதலி னமதுபேட் டன்னமு மன்றிதப்
போதிலங் குதித்த பொலங்கொம் பன்றே
என்றுள மருளவோ ரெழினலம் பயக்கும்
௨௫ மன்றலம் பணைசூழ் மருத வேலிப்
பொன்மதிற் கமலை நன்னகர் புரக்கும்
தேசிக ராய சிற்பர முதல்வ
மாசி லாமணி ஞானசம் பந்த
எனையாட் கொள்ளவந் தெய்தினை யாகலின்
௩௦ முனியா தொன்றிது மொழிகுவன் கேண்மதி
கற்றன ராயினுங் கல்லா ராயினும்
அற்றனம் யாமென வடைந்தனர் தமையெனிற்
காலம் பாரார் கருத்தினை யளவார்
சீல நோக்கார் தீக்குணங் கொள்ளார்
௩௫ பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே
நன்னெறிப் படரா நலமிலி யாயினும்
செந்நெறிப் படர்ந்தநின் சீர்புனைந் தேத்தலிற்
சத்திநி பாதநின் சந்நிதிப் பட்ட
௪௦ இத்திறத் தெளிதினி லெய்திய தெனக்கே, அதனாற்

(அடி, 18 - 9.) தாமரைக்குப் பதுமநிதி உவமை.

(20 - 21.) சங்குக்குச் சங்கநிதியும், செங்கிடைக்குச் சிந்தாமணியும் உவமைகள்; செங்கிடை - செந்நெட்டி.

(23.) பொலங்கொம்பு - திருமகள்.

(25.) பணை - வயல்.

(26.) கமலை - திருவாரூர்.

(31 - 6.) இவ்வடிகளில் கொடைமடம்பட்ட வள்ளல்களின் இயல்பு கூறப்படும்; ஸ்ரீ. பா. கிருட்டினன்றூது. 235.

(37.) நலம் - நற்குணம். சத்திநிபாதம் - அருட்சத்தி பதிதல்.

சரியையிற் றாழ்க்கலை கிரியையிற் பணிக்கலை
யோகத் துய்க்கலை பாகமு நோக்கலை
நாளையின் றெனவொரு வேளையு நவிற்றலை
ஈண்டெனக் கருளுதி யிறைவ
சடு பூண்டுகொண் டிருப்பனின் பொன்னடித் துணையே. (உ௬)

(நேரிசை வெண்பா)

595. பொன்னேயல் லாமற் பொருளோ டுடலுயிர்விற்
றென்னே மணியொன் றெவர்கொள்வார்—கொன்னே
குருமாசி லாமணியைக் கொள்வோர்கொள் ளாமுன்
தருவார்மற் றிம்மூன் றுந் தான். (௩௦)

(கட்டளைக்கலித்துறை)

596. தருமணிக் கோவைத் தருண்ஞான சம்பந்தன் றண்கமலைக்
குருமணிக் கோவை நிகர்மாசி லாமணி கோத்திடலால்
ஒருமணிக் கோவையிம் மும்மணிக் கோவையொண் சங்குகஞ்சம்
பொருமணிக் கோவைப் பொருளாக்கொள் ளாரிது பூண்டவரே. (௩௧)

---

(அடி, 41-5) தாழ்க்கலை - தங்கச்செய்யாயாய்; தாமதிக்கச்செய்யா யாய்; முற்றெச்சம். பாகம் - பரிபக்குவம். சரியை முதலியன செய் யென்று பணித்து நீட்டியாமல் இப்பொழுதே அருள்புரிவாயாக.

595. உலகத்திலுள்ள மணியைப் பொன்மாத்திரம் கொடுத்துக் கொள் வார்; இந்த மாசிலாமணியைக் கொள்பவரோ உடல்பொருளாவியெனும் மூன்றையும் ஈவாரென்க. ஞானாசிரியருக்கு இம் மூன்றையும் அர்ப்பணம் செய்யும் மரபை நினைந்து இங்ஙனம் கூறினர்.

என்னே - என்ன வியப்பு.

596. தரு மணி கோ வைத்தருள் - தன்பாற் புக்கார்பால் பேரின்பத் தைத் தரும் அழகிய திருக்கண்ணை வைத்துச் சக்ஷு தீக்ஷையைச் செய்தருள் கின்ற. (பி-ம்.) 'தருஞான சம்பந்தன்' தண் கமலையிலேயுள்ள குருவாகிய மணிக்கோவை ஒக்கும் மாசிலாமணியை வைத்துக் கோக்கப் பெறுதலால்; மணிக்கோ - நாயகமணி. இந்த மும்மணிக் கோவையாகிய பிரபந்தம் அந் நாயக மணியாகிய ஒன்றைக் கோக்கப் பெறுதலால் ஒருமணிக்கோவை யும் ஆயிற்று. இக்கோவையைக் கற்போர் தேவர்களுக்கே யுரிய சங்கநிதி முதலியவற்றையும் பொருளாகக் கொள்ளார். சங்கு - சங்கநிதியை. கஞ்சம் - பதுமநிதியை. பொருமணி - தன்னைத் தானே ஒத்த சிந்தாமணியை. கோ வை - காமதேனுவை. பொருமணிக்கோவையெனத் திரிபு நோக்கி வல்லி னம் மிக்கது.

597. தடுத்த பிறவித் தளையாம் விலங்கு தனைமுறித்து
விடுத்த கருணைக் கடன்மாசி லாமணி மெய்ப்புகழாற்
றொடுத்த தமிழ்மும் மணிக்கோவை நித்தந் துதிக்கவல்லார்
எடுத்த சனனத்தி லெய்தாத பேரின்ப மெய்துவரே. (௯௨)

598. உள்ளத் தருணின் றுணர்த்தவென் னாவி லுறைந்தவெள்ளை
வள்ளக் கமலத் தவண்மாசி லாமணி வண்புகழில்
எள்ளத் தனையள வோர்தொடை யாக்கி யிசைத்தனளாற்
கள்ளப் புலன்கொண் டுரைத்தே னலனிக் கவிமுற்றுமே. (௯௩)

599. விரிக்குஞ் சரியையிப் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்கின்று சாற்றிய தேமற்றென் றண்டமிழைத்
தெரிக்கின்ற போதருள் செய்தது வேசிவ யோகமுண்மை
பரிக்கின்ற ஞானமொன் றேமாசி லாமணி பாலித்ததே. (௯௪)

பின்னே வரும் இரண்டு செய்யுட்கள் பழைய பதிப்புக்களிற் காணப்படுகின்றன :—

(நேரிசை யாசிரியப்பா)

தமிழ்மணங் கமழுங் கமலையம் பதிவாழ்
ஞானசம் பந்தனை வணங்கின்
ஈனசம் பந்த மில்லைவீ டெளிதே.

(வஞ்சித்துறை)

மாசி லாமணித்
தேசி காவெனப்
பேசு வோர்கண்முப்
பாச மோடுமே.

---

597. எடுத்த சனனத்தில் - இம்மையிலே யென்றபடி.
(பி - ம்.) 'அடுத்த சனனத் தடைவர்தப் பாரரு ளானந்தமே.'

598. வெள்ளை வள்ளக் கமலத்தவள் - கலைமகள்.

599. ஞானாசிரியருக்குச் சாத்துதற்கு இப்பாமாலையை இயற்றியது சரியை யாகும். அவர் தரிக்கும்படி இதனைச் சாற்றியது கிரியை யாகும். (பி - ம்.) 'தண்டமிழ்நீ' இதனை அவர் ஏற்றுக்கொண்டபோது திருவருள் புரிந்ததே சிவயோகமாகும். அடியேனுக்கு அவர் வழங்கியது ஞானம்.
(பி - ம்.) 'சாத்தியதே'

# காசிக் கலம்பகம்

## காப்பு

(நேரிசை வெண்பா)

600. **பா**சத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே - மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தெ னுளத்து. (க)

(மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா)

— தரவு —

601. க நீர்கொண்ட கடலாடை நிலமகளுக் கணியான
கார்கொண்ட பொழிற்காசிக் கடிநகரங் குளிர்தூங்க
இடமருங்கிற் சிறுமருங்குற் பெருந்தடங்க ணின்னமிர்தும்
சடைமருங்கி னெடுந்திரைக்கப்பெண்ணமிர்துந் தலைசிறப்பக்
கண்கதுவு கடவுண்மணி தெரிந்தமரர் கம்மியன்செய் [ய்.
விண்கதுவு பொலங்குடுமி விமானத்தின் மிசைப்பொலிந்தோ

உ. நிற்பனவுந் தவழ்வனவு நடப்பனவு மாய்நிலத்துக்
கற்பமள விலகண்டு முறுகளைகண் காணுமே
பழங்கணுறு முயிர்கடுயர்க் கடனீத்துப் பரங்கருணை

---

600. நேசத்தளை - அன்பாகிய தளை; "தள்ளரிய வன்பென்னுந் தொடர் பூட்டி" (திருவிளை. கடவுள்.) விநாயகரை யானை யென்றதற்கு ஏற்ப யானையின் இயல்புகளாகிய தளையறுத்தலும் கடல் கலக்கலும் மீட்டும் தளைப் படுதலும் கூறினர். வரை - இமயமலை. கன்னிப்பிடி - உமாதேவியார். ஓர் ஆனை - விநாயகக் கடவுள்.

601. (தரவு.) க. பெருந்தடங்கண் - விசாலாட்சியம்மை; "கயலார் தடங்கண்ணாள் காந்தன்" (605.) (பி - ம்.) 'இன்னமிர்தம்' திரைக்கைப் பெண்ணமிர்து - கங்கை. (பி - ம்.) 'பெண்ணமிர்தம்' அமரர் கம்மியன் - தேவத்தச்சனாகிய விசுவகர்மா. (பி - ம்) 'மிசைப்பொலிவோய்'

உ. நிற்பன - அசரம். தவழ்வனவும் நடப்பனவும் - சரம். களைகண் - துன்பத்தை நீக்கும் துணை. பழங்கண் - துன்பம். பழமறையின் முதலெ ழுத்து - பிரணவமந்திரம். வரையாது - இன்னார்க்குரியது, இன்னார்க்குரிய தன்று என்று கொள்ளாமல்.

வழங்குபர் மானந்த மார்க்கடலிற் றிளைத்தாட
உரையாத பழமறையின் முதலெழுத்தி னெண்பொருளை
வரையாது கொடுத்திடுநின் வள்ளன்மை வாழ்த்துதுமே.

— தாழிசை —

க. நீரெழுத்துக் கொத்தவுட னீத்தார்க்கு நீநவில்வ
தோரெழுத்தே முழுதுமவ ரெவ்வண்ண முணர்வதுவே.

உ. என்பணிவ துடுப்பதுதோ லெம்பிரான் றமர்களவர்
முன்பணியும் பேறுடையார் திசைமுகனு முகுந்தனுமே.

ந. செடிகொண்முடைப் புழுக்கூடே சிற்றடியோ மிடுதிறைமற்
றடிகளடி யார்க்களிப்ப தானந்தப் பெருவாழ்வே.

ச. பற்பகனேற் றருந்தவரும் பெறற்கரிய பரந்தாமம்
எற்புடல்விற் றளியேமுங் கொளப்பெறுவ திறும்பூதே.

ரு. நிணம்புணர்வெண் டலைக்கலன்கொ ணேரிழைமுத் திதிருவை
மணம்புணர்வார்க் கையனருண் மணவாளக் கோலமே.

---

(தாழிசை.) க. நீரெழுத்து - நீரில் எழுதப்படும் எழுத்து ; "நீரி லெழுத் தாகும் யாக்கை" (207) என்று முன்னும் கூறினர். ஓரெழுத்து - பிரணவம்.

உ. எம்பிரான் தமர்கள் அணிவது என்பு ; உடுப்பது தோல் ; ஆயினும் அவர் முன் பணியும் பேறுடையார் திசைமுகனும் முகுந்தனுமே.

க-உ. இத்தலத்தில் இறந்தோர் பிரணவோபதேசம் பெற்றுச் சிவசாரூ பத்தை யடைவரென்பது புராண வரலாறு. இக்கருத்தையே இந்நூலிற் பல விடங்களிற் பல படியாக எடுத்தாளுவர்.

ந. செடி - நாற்றம். முடை - புலால் நாற்றம். புழுக்கூடென்றது உடலை. திறை - காணிக்கை. அடிகள் - தேவரீர்.

ச. பரந்தாமம் - முத்தி (656.) எற்புடல் - எலும்பாலாகிய உடல். இறும்பூது - வியப்பு.

ரு. சாரூபம் பெற்றோர் தலைமாலை பெறுதலின் இது கூறினர். மண வாளக்கோலமுடையார் மணமுடைய மலர் மாலை பெறுதல் வழக்காக இருப்ப, முத்தித்திருவை மணந்த இவர் தலைமாலை பெறுதல் ஏற்புடையதோ வென்றார். முத்தித்திருவை மணம்புணர்வார் : "கடியிருக்கு நறைக்குழன் முத் தித்திருவை முயங்கிடவுங் கடவேன் கொல்லோ" (638.)

சு. முடைத்தலையிற் பலிகொள்வான் மூவுலகு மவரவர்தங்
கடைத்தலையிற் றிரிவதுகொல் யாம்பெறுநின் காணியே.

— அராகம் —

க. உளதென விலதென வொருவரொ ரளவையின்
அளவினி லளவிட லரியதொ ருருவினை.

உ. இதுவென லருமையி னெழுதரு மொழிகளும்
அதுவல வெனுமெனி னெவருனை யறிபவர்.

ந. அவனவ ளதுவெனு மவைகளி னுளனலன்
எவனவ னிவனெனெ வெதிர்தரு தகைமையை.

ச. அறிபவ ரறிவினு ளறிவுகொ டறிவுறு
நெறியல தொருவரு மறிவரு நிலைமையை.

— நாற்சீரோரடி அம்போதரங்கம் —

ஆணொடு பெண்ணுரு வமைந்து நின்றனை.
பூண்முலை கலந்துமைம் புலனும் வென்றனை.
எண்வகை யுறுப்பினோ ருருவெ டுத்தனை.
தொன்மறைப் பனுவலின் றொடைதொ டுத்தனை.

— முச்சீரோரடி அம்போதரங்கம் —

வடவரை குழைய வளைத்தனை.
மலைமகண் முலைக டிளைத்தனை.
விடமமிர் *தமர விளைத்தனை.
விசயனொ டமர்செய் திளைத்தனை.
வரிசிலை மதனை யெரித்தனை.
மதகரி யுரிவை தரித்தனை.
அருமறை தெரிய விரித்தனை.
அலகில்பல் கலைக டெரித்தனை.

---

சு. சாரூபம் பெறுவோர் பிச்சை கொள்ளுதலைக் கூறுவர். பலிகொள்வான் - பிச்சை ஏற்றற்பொருட்டு. அவரவர்தம் - உலகிலுள்ளாராகிய அவரவருடைய. கடைத்தலையில் - வாயிலில். காணி - உரிமை.

(அராகம்.) க. அளவை - பிரமாணம்.

(நாற்சீரோரடி அம்போதரங்கம்) பூண்முலை - உமாதேவியார். எண்வகை உறுப்பு - பிருதிவி முதலிய அட்ட மூர்த்தம்.

(முச்சீரோரடி அம்போதரங்கம்.) வடவரை - மேருமலை. அமிர்து அமர - அமிர்தத்தை ஒப்ப. விசயன் - அருச்சுனன். உரிவை - தோல்.

— இருசீரோரடி அம்போதரங்கம் —

அழல்வி ழித்தனை. பவமொ ழித்தனை.
ஆற ணிந்தனை. மாற ணிந்தனை.
மழுவ லத்தினை. முழுந லத்தினை.
மாந டத்தினை. மானி டத்தினை.
அலகி றந்தனை தலைசி றந்தனை.
அருள்சு ரந்தனை. இருடு ரந்தனை.
உலக ளித்தனை. தமிழ்தெ ளித்தனை.
ஒன் று மாயினை. பலவு மாயினை.

— தாழிசை —

க. அலகில்பல புவனங்க ளடங்கலுமுண் டொழிப்பாய்க்குக்
கொலைவிடமுண் டனையென்று கூறுவதோர் வீறுமே.

உ. பயின்மூன்று புவனமுங்கட் பொறுக்கிரையாப் பாலிப்பாய்க்
கெயின்மூன்று மெரிமடுத்தா யென்பதுமோ ரிசையாமே.

ங. அடியவரே முக்குறும்பு மறவெறிந்தா ரெனினடிகள்
விடுகணை விற் காமனைநீ வென்றதுமோர் வியப்பாமே.

ச. இக்கூற்றின் றிருநாமத் தொருகூற்றுக் கிலக்கென்றால்
அக்கூற்றங் குமைத்தனையென் றிசைப்பதுமோ ரற்புதமே.

---

(இருசீரோரடி அம்போதரங்கம்) பவம் - பிறப்பு. மால் தணிந்தனை. மா நடத்தினை - பரமானந்த தாண்டவத்தை உடையாய். (பி - ம்.) 'மான டத்தினை' மான் இடத்தினை - மானை இடத்திருக்கரத்திலே உடையாய்; மான் உமாதேவியுமாம். அலகு - அளவு. இருள் துரந்தனை - அஞ்ஞானத்தை ஓட்டினை. ஒன்றும் ஆயினை - பொருந்தும் தாயினது தன்மையை உடையாய்.

(தாழிசை.) க. அடங்கலும் - முற்றும். உண்டொழித்தலாவது - சங்காரஞ் செய்தல். வீறு - வேறொருவர்க்கில்லாத சிறப்பு.

உ. கட்பொறிக்கு - கண்ணாகிய இந்திரியத்திற்கு. எயில் மூன்றும் - திரிபுரங்களையும்.

ங. முக்குறும்பு - காமம் வெகுளி மயக்க மென்பன.

ச. இக்கு ஊற்றின் திருநாமத்து ஒரு கூற்றுக்கு இலக்கு - கருப்பஞ் சாற்றினது ஊற்றைப்போல் இனிமையைத் தரும் நின் திருநாமத்தின் ஒரு பகுதியினால் அழிக்கப்படும் இலக்கு. கூற்றம் - யமன்; "அருநாம மெனச் சொலுநின் னுயிரநா மத்துளொரு, திருநாமங் கூற்றடுநின் றிருவடிதாக் குதன்மிகையே" (வாட்போக்கிக் கலம்பகம், 1.)

எனவாங்கு

— சுரிதகம் —

உலகுசூற் கொண்ட தலைவியு நீயும்
மலைபக வெறிந்த மழவிளங் குழவியை
அமுதமூற் றிருக்குங் குமுதவாய்த் தேறல்
வண்டுகி னனைப்ப மடித்தலத் திருத்திக்
கண்களிற் பருகியக் காமரு குழவி
எழுதாக் கிளவி யின்சுவை பழுத்த
மழலைநா றமிர்தம் வாய்மடுத் துண்ணச்
செஞ்செவி நிறைத்தது மஞ்செவிக் கடிகளென்
புன்மொழிக் கடுக்கொளப் புகட்டினன்
இன்னருள் விழைகுவா யிறும்பூ துடைத்தே. (உ)

(நேரிசை வெண்பா)

602. உடையா ளகிலேசர்க் கோங்குமுலைக் கோட்டின்
அடையாள மிட்டுவையா ளாறு - கடையிலவர்
செவ்வண்ணம் பெற்றார் திரளொடுநிற் கின்றாரை
எவ்வண்ணங் கண்டிறைஞ்சு வேம். (ந)

---

எனவாங்கு : தனிச்சொல்.

(சுரிதகம்.) குழவி - முருகக்கடவுள். செஞ்செவி - பொன்னணிந்த செவி. அஞ்செவி சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. கடு - விடம்; கடுக்காயு மாம் (700.) இன்னருளால் இதனை விழைகுவாய்; இச்செயல் வியப்புடையது.

(முடிபு.) எனவாங்கு என் புன்மொழிக்கடுக் கொளப் புகட்டினன் ; விழைகுவாய் : அங்ஙனம் விழைதல் இறும்பூதுடைத்து.

602. உடையாள் - உமாதேவியார். அகிலேசர் - விசுவநாதர். கடையில்- உடல் நீங்கிய காலத்தில். அவர் செவ்வண்ணம் பெற்றார் திரளொடு - அப் பெருமானது திருவுருவத்தைப் பெற்றவர்களது கூட்டத்தோடு. நிற்கின்றாரை - நிற்கும் சிவபெருமானை. அடியார் சாரூபம் பெற்ற காலத்தில் நகிற்ற ழும்பை மாத்திரம் பெருமையின் அத் தழும்பு இறைவனை அறிந்து கொள்ளு வதற்கு அடையாளமாயிற் றென்றபடி.

## தூது

(கட்டளைக் கலித்துறை)

603. இறைவளைக் காகம் பகுந்தளித் தாரகி லேசர்கொன்றை
நறைவளைக் கும்முடி யாரடிக் கேகங்கை நன்னதியின்
துறைவளைக் குங்குரு கீருரு கீரென்று தூமொழிகைக்
குறைவளைக் கும்முங்கள் பேரிட்ட தாற்சென்று கூறிடுமே.

## புயவகுப்பு

(சந்த விருத்தம்)

604. இடமற மிடைதரு கடவுளர் மடவியர்
எறிதரு கவரியி ழுற்கட் டுயின்றன
இனவளை கொடுமத னிடுசய விருதென
இறையவ ளெழுதுசு வட்டுக் கிசைந்தன
இருவரு நிகரென வரிசிலை விசயனொ
டெதிர்பொரு சமரிலி ளைப்புற் றிருந்தன
இணையடி பரவிய மலடிமு னுதவிய
இடியலி னுணவொரு கொட்டைப் பரிந்தன

---

603. தோழி குருகைத் தூது விடுகின்றாள்.

இறைவளைக்கு - உமாதேவியாருக்கு. (பி - ம்.) 'பரிந்தளித்தார்' குருகீர் - குருகுகளே. உருகீரென்று சென்று கூறிடும். தூமொழி - தலைவி. கைக்குறைவளைக்கும் - கையில் அணிந்த அரத்தாற் குறைக்கப்பட்ட வளைக்கும். உங்கள் பேரிட்டதால் - உங்கள்மேலுள்ள அன்பினால் கையிலேஉள்ள வளைக்கும் உங்கள் பெயராகிய குருகு என்பதை இட்ட காரணத்தால்; குருகு - கைவளைக்கும்பெயர்; "குருகை விடுத்தா ளெனக்குருகே கூறாய்" (692.) ஒருவர்பால் அன்புடையார் அவர் பெயரைத் தம்மொடு சார்ந்த பொருளுக்குப் பெயராக வைத்தல் உலகவழக்கு.

604. (சந்தக் குறிப்பு.) தனதன தனதன தனதன தனதன தனதன தனதன தத்தத் தனந்தன.

(அடி., 1.) மிடைதரு - நெருங்கிய. சயவிருது - வெற்றிச்சின்னம். இறையவள் - உமாதேவியார். இனவளை கொடு எழுது சுவடு. விசயன் - அருச்சுனன். மலடி - மதுரையிலிருந்த செம்மனச் செல்வியென்னும் பிட்டு வாணிச்சி. இடியலின் உணவு - மாவாற்சமைத்த பிட்டாகிய உணவின் பொருட்டு. கொட்டு - மண்வெட்டி; "கொட்டினைக் கழலப் பார்ப்பர்" (திருவிளை. மண்சுமந்த. 37.)

படவர வுமிழ்தரு மணிவெயில் விடவளர்
பருதியொ டெழுமுத யத்திற் பொலிந்தன
பருகுமி னமிர்தென வுருகிரு கவிஞர்கள்
பனுவலின் மதுரவி சைக்குக் குழைந்தன
படரொளி விடுசுடர் வலயம தெனவொரு
பருவரை நெடுவிலெ டுத்துச் சுமந்தன
பரர்புர மெரியொடு புகையெழ மலர்மகள்
பணைமுலை தழுவுச ரத்தைத் துரந்தன
மடலவிழ் தடமல ரிதழியி னிழிதரு
மதுமழை யருவிகு ளித்துக் கிளர்ந்தன
வழிதர வுதிரமு நிணமொடு குடர்களும்
வருநர கரியின்ம தத்தைத் தடிந்தன
மதகரி யுரியதள் குலகிரி முதுகினின்
மழைமுகி றவழ்வதெ னப்பொற் பமைந்தன
மலிபுகழ் நிலவொடு மடுதிறல் வெயிலெழ
மதிகதிர் வலம்வரு வெற்பொத் துநின்றன
குடவளை துறைதொறு முடுநிரை யெனவிரி
குளிர்நில வெழவுமிழ் முத்தைத் தடங்கரை
குலவிய படர்சிறை மடவன மொடுசில
குருகுகள் சினையொட ணைத்துத் துயின்றிடு

---

(அடி, 2.) மணிக்குப் பருதி உவமை. உதயத்தின் - உதயகிரியைப் போல. இரு கவிஞர்கள் - கம்பளரும் அசுவதரரும்; தும்புரு நாரதரெனலும் ஆம். பனுவல் - இங்கே, இசைப்பாட்டு. சுடர் வலயம் - ஒளியையுடைய தோள்வளை. பருவரை நெடுவில் - பருத்த மேருமலையாகிய நெடிய வில். பரர்புரம் - பகைஞர்களது திரிபுரம். மலர்மகள் பணைமுலை தழுவு சரம் - திருமாலாகிய அம்பு. துரந்தன - எய்தன.

(3.) இதழி - கொன்றை. நிணமொடு குடர்களும் வழிதர வரு நரகரி; நரகரி - நரசிங்கம்; அதனைத் தடிந்தது சரபாவதாரங்கொண்டு. மதகரியுரி அதள் - மதகரியை உரித்த தோல். யானைத்தோலுக்கு மேகமும் தோளுக்கு மலையும் உவமைகள். மலிந்த புகழாகிய நிலவோடு பகைவரை அட்ட பிரதாபமாகிய வெயில் எழ: (பி - ம்.) 'மலியுமிழ் நிலவொடு' ஈதலும் அடுதலும் திருக்கரங்கள் புரிதலின் அவ்விரண்டாலும் முறையே உண்டாகும் புகழும் பிரதாபமும் புயங்களைச் சூழ்ந்தன. மதிகதிர் வலம் வருவெற்பு - மேருமலை.

(4.) குடவளை - குடம் போன்ற சங்கு; வளைந்த சங்கெனினும் ஆம். உடு நிரை - நட்சத்திர வரிசை; முத்துக்களுக்கு உவமை. குடவளை உமிழ் முத்தை. சினையொடு - முட்டைகளோடு. முத்தை அன்னமும் குருகுகளும்

குரைபுனல் வரநதி சுரர்தரு முருகவிழ்
கொழுமலர் சிதறவி முத்தத் துவிண்டொடு
குலகிரி யுதவிய வளரிள வனமுலை
கொழுநர்த மழகிய கொற்றப் புயங்களே. (ரு)

(நேரிசை வெண்பா)

605. புயலார் பொழிற்காசிப் பூங்கோயின் மேய
கயலார் தடங்கணாள் காந்தன்—செயலாவி
உய்யத் துதியா ருதிப்பார் துதிப்பாரேல்
வையத் துதியார் மறுத்து. (சு)

(கட்டளைக் கலித்துறை)

606. மறைக்கோலங் கொண்ட வகிலேச ரேயின்று மாதர்முன்னே
பிறைக்கோலங் கொண்டு புறப்பட்ட வாமுன் பிறைமுடித்த
இறைக்கோல மோல மெனத்தேவ ரோல மிடவிருண்ட
கறைக்கோலங் கொண்டுநுங் கண்டத் தொளித்த கனல்விடமே.

---

தம் முட்டையென்று கருதி அணைத்தன. வரநதி - கங்கை. சுரர்தருவின் மலர். சிதறு அவிமுத்தத்து; அவிமுத்தம் - காசி; விடவேண்டிய காலத்தும் விடாமை யென்னும் பொருளினதென்பர்; முன்னொருகால் விசுவநாதர் திவோதானனென்பவன் பொருட்டுக் காசியை அகலும்படி நேர்ந்தகாலத்தும் சூக்கும வடிவமாக விடாது வீற்றிருந்தனராதலின் இத்தலம் இப்பெயர் பெற்றது. வனமுலை - விசாலாட்சியம்மை.

605. தடங்கணாள் - விசாலாட்சியம்மை. காந்தன் - கணவர். அவர் செயலைத் தம் ஆவி உய்யும்படி துதியாதவர்கள் மீட்டும் பிறவி யெடுப்பார்; துதித்தாராயின் உலகத்தில் மீட்டும் பிறவார்.

606. தலைவி கூற்று.

அகிலேசரே, தேவரீர் முன்பு அமுதுசெய்தருளிய விடம் இப்பொழுது பிறைவடிவங் கொண்டு தோன்றியது என்ன வியப்பு!

மறைக்கோலம் கொண்ட - வேதத்தையே உருவாகக்கொண்ட. பிறைக் கோலம் - பிறையினது வடிவத்தை. புறப்பட்டவா - தோற்றியது என்ன ஆச் சரியம்! இறைக்கு - இறையாகிய தேவரீருக்கு; இப்படர்க்கைப்பெயர் இங்கே முன்னிலைக்கண் வந்தது. ஓலம்: முறையீட்டுச்சொல். கறை- கறுப்பு. முன் நும் கண்டத்தில் ஒளித்த. கறைக்கோலங் கொண்டு என்றதனால் இப் போது வெண்ணிறங்கொண்டு புறப்பட்டது வியப்பாயிற்று; "வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ" (கம்ப. மிதிலைக்காட்சி. 146.) பிறைக்கு விடம் உவமை: 310.

இதனால் உண்டாகும் துன்பத்தைப் போக்கியருள வேண்டுமென்பது இசையெச்சம்.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

607. விடுத்த வாளிக்கும் விரகிலாக்
கருப்புவில் வீணன்மீ ளவும்வாளாத்
தொடுத்த வாளிக்கு மேபகை
மூண்டதித் தூயநன் மொழிக்கென்னும்
அடுத்த நான்மறை முனிவரர்
நால்வர்க்கு மம்மறைப் பொருள்கூற
எடுத்த கோலமா யானந்த
வனத்துமெம் மிதயத்து மிருந்தோனே. (அ)

(கட்டளைக் கலித்துறை)

608. இருப்பா ரவிமுத்தத் தெங்கேகண் மூடுவ ரென்றும்வெள்ளிப்
பொருப்பாள ரோடித் திரிவதெல் லாமிப் புவனங்களை

---

607. தோழி கூற்று.

முதலில் மன்மதன் விடுத்த வாளிக்கும்; வாளி - அம்பு. விரகு - நுண்ணறிவு : உபாயமுமாம். வீணன் - மன்மதன். வாளா - சும்மா. முதலில் விடுத்த பாணங்களே தலைவியைக் கொல்லப் போதியனவாதலின், அதனை அறியாமல் மீண்டும் அம்பு தொடுத்தமை பற்றி மன்மதனைத் தோழி வீணனென்றாள். பாணந்தொடுத்தல் பயனற்றதாதலின் வாளாவென்றாள். மன்மதன் எய்த ஒரே இனத்தைச்சேர்ந்த அம்புகளுள் முன்பு எய்தவற்றிற்கும், பின்பு எய்தவற்றிற்கும் பகைமை யுண்டாகச்செய்தே இவள் திறத்தில் அவை என்ன துன்பத்தைச் செய்யும். நால்வர் - சனகராதியோர். நால்வர்க்கு மறைப்பொருள் கூறியது : "நண்ணியொர் வடத்தினிழ லுல்வர்முனி வர்க்கன், றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவர்" (தே. திருஞா. திருவையாறு.) உயர்ந்த ஆனந்த வனத்திலும் இழிந்த அடியேங்கள் இதயத்தும் ஒப்ப இருந்தோனே; "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும், உறைவான்" (திருச்சிற். 20, பேர்.) என்பதையும் அதனுரையையும் பார்க்க; ஆனந்தவனம் - காசி.

608. அவிமுத்தத்து இருப்பார். வெள்ளிப் பொருப்பாளர் - கைலையங்கிரியில் உறைபவரான அகிலேசர். உருப்பாதி - அம்பிகையின் பாகம் (644.) ஓர்பாதி - மற்றொரு பாதியாகிய தம்முடைய பாகம். துடைத்து - அழித்து. ஆருயிர்களின்மேல் விருப்பை வைத்து ; அழிப்பதும் அநுக்கிரகச் செயலாதலின் இங்ஙனம் கூறினர் ; "இன்னருளே மன்னுயிர்கட் கெத்தொழிலு மீன்றெடுத்த, அன்னைமுனி வதுந்தனயர்க் கருள்புரிதற் கேயன்றே" (549.) ஓடித் திரிவதெல்லாம் வேலைகண்டே ; கண்டு - செய்து ;

உருப்பாதி யிற்படைத் தோர்பாதி யிற்றுடைத் தூழிதொறும்
விருப்பா ருயிர்களின் மேல்வைத்துத் தாஞ்செயும் வேலேகண்டே.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

609. கண்ணொன்று திருநுதலிற் கனலுருவ மாப்படைத்த
காசி நாதா
தண்ணொன்று நறையிதழித் தாரென்று ணெட்டுயிர்த்தா
டரைமேல் வீழ்ந்தாள்
எண்ணொன்று முணராமே கிடக்கின்று ளிதுகண்டா
லெழுத்தொன் றோதத்
துண்ணென்று வருவரெனத் துணிந்தனளோ வறியேனித்
தோகை தானே. (கo)

(நேரிசை வெண்பா)

610. தோகை யுயிர்முடிப்பான் றும்பைமுடித் தான்மதவேள்
வாகை முடித்திடவும் வல்லனே—ஆகெடுவீர்

---

பார்த்து எனலுமாம். ஆதலால், அவிமுத்தத்திருப்பார் கண் மூடுவது எங்கே? அவருக்கு ஓய்வில்லை யென்றபடி.

609. தோழி கூற்று.

இதழித்தார் - கொன்றைமாலே. கொன்றைமாலையை வாங்கித்தரவேண்டு மென்று கூற நினைந்தவள், இதழித்தாரென்ற அளவில் மேலே கூற இயலாமல் சோர்ந்து நெட்டுயிர்த்தாளென்றபடி; "மடமா மயிலே குயிலே மழலே, நடைமா ணனமே நலமார் கிளியே, உடனு டுமெனை யனையென் றுருகாத், தொடையாழ் மழலை மொழிசோர்ந் தனளே" (சீவக. 1526) என்பதும், 'என் ஐயனை யென்ற அள்விலே உருகி அவற்றிற்குக் கூறுகின்ற காரியத்தை மறந்தாளென்க' என்னும் அதன் உரையும் இங்கே அறிதற்குரியன. இது கண்டால் - இங்ஙனம் தான் மூர்ச்சித்துக் கிடத்தலைக் கண்டால். எழுத்து ஒன்று ஓத - பிரணவத்தை உபதேசிக்க (601.) எழுத்தொன்று ஓத வருவரெனத் துணிந்தனளோ என ஐயத்துள் ஒருதலையே கூறினள்; அதுவே பெரும்பான்மையாகு மென்பது பற்றி.

இத்தோகை தாரென்றாள்; நெட்டுயிர்த்தாள்; வீழ்ந்தாள்; கிடக்கின்றாள்; வருவரெனத் துணிந்தனளோ? அன்றி வேறு யாது கருதினளோ அறியே னென்றபடி.

610. தோழி கூற்று.

உயிர் முடிப்பான் - உயிரை நீக்குவதற்கு. மதவேள் தும்பைமாலையை முடித்துக்கொண்டான். தும்பைமாலை போர் செய்வோர் அணியும் மாலை;

காமாந் தகர்காசிக் கண்ணுதலார்க் கோதீர்மற்
றேமாந் திராம லெடுத்து. (கக)

(கட்டளைக் கலித்துறை)

611. எடுக்கச் சிவந்த சிலம்படி யாரகி லேசர்நறைக்
கடுக்கைச் சடைமுடி யாரடி யார்க்குக் கலைகள்கொய்து
கொடுக்கக் கொடுக்க வளர்கின்ற வாவெறுங் கூட்டிலெரி
மடுக்கக் குறையுயிர் மாதரைத் தேடு மதிக்கொழுந்தே. (கஉ)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

612. கொழுதி வரிவண் டுழுதுழக்குங்
குழலீர் நறுங்கட் கோதையிவள்
அழுத விழிநீர் முந்நீரை
யுவர்நீ ராக்கு மதுகூறீர்

---

"அதிரப் பொருவது தும்பையாம்" (பழம்பாடல்.) வாகை முடித்திடவென்றது தான் மேற்கொண்ட போரில் வெற்றி யடைய வென்றவாறு; வெற்றி யடைதலாவது தலைவியின் உயிரை நீக்குதல். வாகை - வெற்றி பெற்றோர் அணியும் மாலை. ஆகெடுவீர்: இவளுடைய இந்நிலையைக் கண்டும் இதனை நீக்குதற்கு ஒன்றும் செய்யாமலிருத்தல் பற்றி இங்ஙனம் கூறினாள்; ஆ: இரக்கக் குறிப்பு. காமாந்தகர் - காமனை முன்பு எரித்து முடித்தவர்; மன்மதனால் வரும் துன்பத்தை நீக்கும் வன்மை யுடையாரென்பது இத்தொடரில் தோற்றியது; கருத்துடை யடைகொளியணி. கண்ணுதலா ரென்றது, மன்மதனை இப்பொழுதும் அழித்தற்கேற்ற கருவியை யுடையாரென்றபடி; 649. ஏமாந்து இராமல் - சமயத்திலே ஏமாற்றத்தை உடையவராக இராமல். எடுத்து ஓதீரென்க.

611. தலைவி கூற்று; சந்திரோபாலம்பனம்.

ஒரு கலையையுடைய இப்பிறை, இத்தலத்திற் சாரூபம் பெறுபவர் ஒவ்வொருவருக்கும் அகிலேசர் கொய்து கொய்து கொடுப்பவும் வளர்கின்றதே; என்ன வியப்பு!

கடுக்கை - கொன்றை. சடைமுடியார்; எழுவாய். அடியார்க்கு-சாரூபம் பெற்றவர்களுக்கு. வளர்கின்றவா - வளர்கின்றவாறு என்ன வியப்பு! வெறுங் கூட்டில் - நல்லுயிர் போன உடலில்; என்றது தன்னுடலை. குறைந்த உயிரையுடைய மாதரைத் தேடுகின்ற மதிக்கொழுந்து; மதிக்கொழுந்து - பிறை.

இத் தீய செயலால் பிறைக்குக் கலைகள் குறையவில்லையே! என்ன வியப்பு என்றாள் தலைவி.

612. தோழி கூற்று.

கொழுதி - கிண்டி. அழுத - பிரிவாற்றாமல் அழுத. முந்நீர் - கடல். இளஞ்சேய் - முருகக்கடவுள்.

எழுத லரிய திருமார்பி
 லிளஞ்சேய் சிறுசே வடிச்சுவடும்
முழுது முடையாண் முலைச்சுவடு
 முடையார் காசி முதல்வர்க்கே. (கஙு)

(நேரிசை வெண்பா)

613. வரைவளைக்கும் பொற்றடந்தோண் மைந்தர்க் கிவரார்
நிரைவளைக்கை யார்நகைக்கு நேராக்—கரையிற்
குவிமுத்தம் வெண்ணிலவு கொப்புளிக்குங் கங்கை
அவிமுத்தஞ் சென்றிறைஞ்சா தார். (கச)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

614. ஆர்க்கும் படைவே ளரசிருப்பென்
 றஞ்சா தடிக ளருட்காசி
ஊர்க்கும் புதுத்தோ ரணம்வைத்தா
 லுமக்கிங் கிவள்பேச் சுரைப்பாரார்

---

காசிமுதல்வருக்கு, இத்தலைவி இடைவிடாமல் அழுதுகொண்டிருத்தலைத் தெரிவிக்க வேண்டுமென்றபடி.

613. வரை - மேருமலையை. மைந்தர் - வலியுடைய அகிலேசர்; "மாவயர வன்றுரிசெய் மைந்தனிடமென்பர்" (தே. திருஞா.) வரம்பில்லா ஆற்றல் இறைவனுக்குரிய எண்குணங்களுள் ஒன்றென்பது இங்கே நினைத்தற் குரியது. இவரென்றது இறைஞ்சாதவர்களை. ஆரென்றது, இறைவருடைய திருவருளுக்குப் பாத்திரராகாரென்றபடி. நேரா - ஒப்பாக. கரையிற் குவிக்கப்படும் முத்தம். அவிமுத்தம் - காசியை.

இறைஞ்சாதவராகிய இவர் மைந்தர்க்கு ஆர்.

614. தோழி கூற்று.

வேள் - மன்மதன்; எழுவாய். அரசிருப்பு என்று அஞ்சாது - தேவரீருடைய இராசதானி என்றெண்ணிப் பயப்படாமல்; அரசிருப்பைப் படைவீடென்றும் கூறுவர் (695.) ஊர்க்கும் - ஊரினிடத்தும்; உம்மை : உயர்வு சிறப்பு. தோரணம் வைத்தல்: ஓரூரை ஒருவர் தம் வசப்படுத்திக்கொண்டு அங்கே செய்யும் ஒருவகைக் கொண்டாட்டம்; இது வசப்படுத்தலென்னும் பொருளில் இங்கே அமைந்தது; "தொல்லைமா நகரு நாடுந் தோரணம் வைக்கச்சொற்றி" (வி. பா. சூதுபோர்ச். 198); "காடெ லாமர சாட்சிசெய் தாமரைக்கண்ணனைப் புதுக்கானும், நீடுதோரணம் வைத்தென "(காஞ்சிப். நகரேற்

வார்க்குங் குடப்பூண் முலைச்சுவட்டை
வலையென் ரோடி வளைந்துசுற்றிப்
பார்க்குந் துளைமுள் ளெயிற்றுரகப்
பணியீர் மோகந் தணியீரே. (கரு)

## பிச்சியார்

(கட்டளைக் கலிப்பா)

615. தண்ணு லாம்பொழிற் காசித் தெருவினீர்
தரித்தி டுந்தவக் கோலமுஞ் சூலமும்
பெண்ணெ டாடுமப் பிச்சனுக் கொத்தலாற்
பிச்சி யாரெனும் பேர்தரித் தாடுவீர்
வெண்ணி லாமுகிழ்க் குங்குறு மூரலால்
வீணி லேயெம் புரத்தெரி யிட்டநீர்
கண்ணி னாலுமிக் காமனைக் காய்ந்திடிற்
கடவு ணீரென் றிறைஞ்சுதுங் காணுமே. (கசு)

616. காணுங் காணு நதிகளெல் லாம்புனற்
கங்கை யேயங் குளதெய்வம் யாவையும்
தாணு வெங்க ளகிலேச ரேமற்றைத்
தலங்கள் யாவுந் தடமதிற் காசியே

---

றுப். 82.) மன்மதன் தேவரீரது இராசதானியென்று அஞ்சாமல் இங்கேபுதுத் தோரணம் வைத்துத் தன் அதிகாரத்தைச் செலுத்துவானாயின், இவ்ளது துயரைத் தேவரீர்பால் துணிந்து வந்து சொல்பவர் யாரென்றாள். வலை - புற்று; இச்சொல் அளையென்றும் வழங்கும். முலைச்சுவட்டைப் புற்றென்று பாம்பு எண்ணுதல் : 547, 674. உரகப்பணியீர் - பாம்பாகிய ஆபரணத்தை யுடையீர்.

615. பிச்சியார் - தவக்கோலம் பூண்ட சைவசமயப் பெண். இவள் சைவச்சின்னம் தாங்கிச் சூலமு மேந்தியிருத்தல் மரபு. பெண்ணொடு - உமா தேவியாரோடு. பிச்சன் - சிவபெருமான்; பித்தனென நூல்களில் வழங்கும்; "பித்தாபிறை சூடீ" (தே. சுந்தர.) தரித்து - தாங்கி. பிச்சனுக்கு ஒத்தல் ; 136. ஆடுதல்; பொதுத்தன்மை. சிவபெருமான் குறுமூரலால் புரத்தையும் கண்ணால் மன்மதனையும் எரித்தார்; புரம் - திரிபுரம், உடம்பு (539.) கண்ணினாலும் : உம்மை, இறந்தது தழுவியது. கடவுளென்றது சிவபெருமானை.

616. கங்கையே - கங்கை யாகுமா; ஏகாரம் எதிர் மறை; பின் வருவனவற்றிற்கும் இங்ஙனமே பொருள்கொள்க. ஆசை - எனக்குள்ள ஆசை

பூணு மாசைமற் ருென்றே யுடல்விடும்
போது நன்மணி கர்ணிகைப் பூந்துறை
பேணு மாறு பெறவேண்டு மப்புறம்
பேயொ டாடினு மாடப் பெறுதுமே. (கஎ)

617. பெற்ற மூர்வதும் வெண்டலை யோட்டினிற்
பிச்சை யேற்றுத் திரிவதும் பேய்களே
சுற்ற மாகச் சுடலையில் வாழ்வதும்
தோலு டுப்பதுந் தொண்டர்க் கரிதன்றாற்
கற்றை வார்சடைக் காசிப் பதியுளீர்
கற்பந் தோறுங் கடைநா ளுலகெலாம்
செற்று மீளப் படைக்கவும் வேண்டுமே
தேவ ரீர்பதஞ் சிந்திப்ப தில்லையே. (கஅ)

(நேரிசை வெண்பா)

618. இல்லாளே முப்பத் திரண்டறமுஞ் செய்திருப்பச்
செல்லார் பொழிற்காசிச் செல்வனுர்—மெல்லப்
பரக்கின்ற புண்ணீர் படுதலைகொண் டையம்
இரக்கின்ற வாறென்சொல் கேன். (ககூ)

---

மணிகர்ணிகை - கங்கைத்துறைகளுள் ஒன்று ; இறந்தவர்களுக்குக் காதில் பிரணவத்தை உபதேசித்தருளுதலின் இத்துறை இப்பெயர் பெற்றது ; மந்திரம் இறப்பவருடைய காதுக்கு அலங்காரமாகும் இடம் என்றும் பொருள் கூறுவர் ஒரு சாரார் ; மணி - பிரணவமந்திரம். மணிகர்ணிகைத் துறையில் இறப்பவர் சிவசாருபம் பெறுதல் நூற்றுணிபாதலின் அத்துறையில் உடல் விடுதலை வேண்டினர். பேயொடாடுதல் சிவபெருமான் இயல்பு. அவ்வியல்பு தமக்கும் வருமென்றபடி. (பி - ம்.) ' ஆடிப்பெறுதுமே '

617. பெற்றம் - இடபம். தோல் - புலித்தோல். அரிது : பன்மை ஒருமை மயக்கம். கடை நாளில். செற்று - அழித்து. சிவபெருமான் செயலைச் சாருபம் பெற்றவர் செயலாகக் கூறியபடி. பதமென்றது சாருபபதவியை. பெற்ற மூர்தல் முதலியன அடியேங்களுக்கு எளியனவாயினும், உலகங்களை அழித்துப் படைத்தல் எங்களுக்குத் துன்பம் தருமே ; என் செய்வோமென்ற படி. அப் பதவியை யாம் சிந்திப்பதில்லை யென்பது பழிப்பதுபோலப் புகழ்தலென்னும் அணியின்பாற்படும்.

618. இல்லாள் - மனைவி ; இங்கே, உமாதேவியார் ; பொருளில்லாதவ ளென்று வேறொரு பொருள் தோற்றியது. செல்வனுர் - அகிலேசர்; செல்வ முடையவரென்னும் பொருளும் தோற்றியது. புண்ணீர் - இரத்தம். ஐயம் - பிச்சை.

பொருளில்லாதவளாகிய மனைவி முப்பத்திரண்டு அறங்களையும் செய்யச் செல்வராகிய கணவர் தலையோட்டில் பிச்சையெடுப்பது என்ன வியப்பு என்றபடி.

(கொச்சகக் கலிப்பா)

619. சொல்லா வதுமறையே சொல்லுவது நல்லறமே
இல்லா வதுமுத்திக் கேதுவா மித்தலமே
அல்லார் குழலளவு மாகொன் மனம்வயிரக்
கல்லா விருந்தவா காசிப் பிரானார்க்கே. (௨௦)

(கட்டளைக் கலித்துறை)

620. பிரானென் றவர்க்கொரு பெண்ணோடு மோடிப் பெருங்கருணை
தராநின்ற காசித் தடம்பதி யார்வந்தென் றன்னகத்தே
இராநின் றனைரைம் புலக்கள்வர் கொள்ளையிட் டேகுதற்கே
வராநின்ற போதுள்ள மாதனங் காத்து வழங்குதற்கே. (௨௧)

## கொற்றியார்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

621. வழுத்துமவர்க் கானந்த வாழ்வையருள் வார்காசி
வளமை யெல்லாம்
கொழுத்தசமி ழாற்பாடித் துளசிமணி தரித்தாடுங்
கொற்றி யாரே

---

619. பாங்கி கூற்று.

சொல், உபதேசிப்பது, இருப்பிடம் ஆகிய மூன்றும் மிக நல்லனவா யிருந்தாலும் அகிலேசர் திருவுள்ளம் பாதுகாத்தற்கு இசையாதிருத்தலால் கல்லாக இருக்கின்றது; இஃது என்ன வியப்பு! தலைவர் மனத்தைக் கல் லென்றல்: "கணவரவர் நெஞ்சது கருங்கலலவோ" (அழகர்கலம். 65.)

620. பிரான் - வண்மையிற் சிறந்தவர்; இது ஸ்ரீ வைஷ்ணவ சம்பிர தாயத்திற் கண்டபொருள். ஒரு பெண்ணோடும் - உமாதேவியாரோடும். இத் தலத்தில் இறந்த ஆன்மாக்களை அம்பிகை தன் மடியிற் கிடத்தி இளைப்பாற்ற அகிலேசர் பிரணவத்தை உபதேசிப்பரென்பது புராண வரலாறாதலின், 'பெண்ணோடு மோடிப் பெருங்கருணை தராநின்ற காசித் தடம்பதியார்' என் றார்; 637; 27-39, பார்க்க. அகத்தே - மனத்தில். கொள்ளையிட்டு - மனத் தைக் கொள்ளையிட்டு. உள்ளமாகிய பெரிய நிதியைக் காத்து எனக்கு அதை வழங்குதற்கு இராநின்றனை யென்க.

621. கொற்றியார் - வைணவ வேடம்பூண்ட பெண். கைச் சங்கம் - கையிலுள்ள வளையல், சங்கு. ஆழி - மோதிரம், சக்கரம். சங்கையும் ஆழி யையும் கண்டு திருமாலாக நினைந்து வணங்கினேம். ஆகின் - ஆதலால்,

பழுத்ததவக் கோலமுங்கைச் சங்கமுமா மியுங்கண்டு
பணிந்தே மாகின்
முழுத்ததவத் தால்யாமு மாலாயி னேங்கூடி
முயங்கு வீரே. (உஉ)

(கட்டளைக் கலித்துறை)

622. முயலாம லேதவ முத்தித் திருவை முயங்கநல்கும்
கயலார் பெருந்தடங் கண்ணிபங் காரருட் காசியிலே
செயலாவ தொன்றிலை வாளா நெடுந்துயில் செய்யுமுங்கள்
பயலாக வேபணி செய்வார் புவனம் படைப்பவரே. (உங)

(கட்டளைக் கலிப்பா)

623. படுத்த பாயுட னேபிணி மூழ்கினும்
பல்வி ழுந்து நரைத்தற மூப்பினும்
அடுத்த தீங்கிவர்க் கேபெரு வாழ்வெனும்
அப்பெ ரும்பதி யெப்பதி யென்பிரேல்
விடுத்து விட்டிந் திரதிரு வும்புவி
வெண்கு டைக்கு ளிடுமர சாட்சியும்
கடுத்த தும்பு களத்தரைத் தேடுவார்
காத லித்து வருந்திருக் காசியே. (உச)

---

யாமும்: உம்மை இறந்தது தழுவியது. மாலாயினேம் - மயக்கமுடையேமா யினேம், திருமாலாயினேம். யாமும் மாலாயினே மென்றது தலைவனும் தலைவியும். "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" (தொல். களவு. 2) என்னும் இலக்கணப்படி ஒத்திருத்தல் வேண்டுமென்பதை அமைத்தபடி.

622. இச்செய்யுள் தொண்டர்களை நோக்கிக் கூறியது.

தவம் முயலாமலே. அடியார்க்கு முத்தித்திருவை முயங்க நல்குதல், "நேரிழைமுத் தித்திருவை மணம்புணர்வார்க்கு" (601), "நறைக்குழன் முத் தித்திருவை முயங்கிடவுங் கடவேன் கொல்லோ" (638) என்னும் செய் யுட்களிலும் காணப்படும். நெடுந்துயில் செய்யும் - மரண மடையுங்கள்; சும்மா தூங்கிக்கொண்டிருங்கள் என்பது மற்றொரு பொருள். பயலாகவே - வேலை செய்யும் சிறுவனாகவே; பயல் - பக்கம் எனலுமாம். புவனம் படைப் பவர் - பிரமதேவர்.

623. யாவரும் வெறுத்தற்குரிய பிணியாலும் மூப்பாலும் வருந்தி இறக்கும் நிலையை அடைந்தோரைக் கண்டவர், அதனால் தாம் துன்புறாமல் 'இவர்க்குப் பெருவாழ்வு கிட்டியது' என்று துணிந்து மகிழ்ந்து சொல்லுதற் குரிய இடம் ஒன்று உண்டு; அது காசித்தலமாகும்.

(பி - ம்.) 'பிணி மூழினும்' அற - மிக. பெருவாழ்வு அடுத்தது. இந்திர திருவையும் அரசாட்சியையும் விடுத்துவிட்டு.

இச்செய்யுளில் பிணி மூப்புச் சாக்காடென்பன முறையே அமைந் துள்ளன.

அப்பெரும்பதி காசியே.

(கட்டளைக் கலித்துறை)

624. திருக்கோலங் கொண்டநற் றேன்மொழி யாளெண் டிசையினுநின்
உருக்கோல மேகண்டுங் கண்டிலள் போலு மொழிகுநறை
மருக்கோல நீலக் குழல்சே ரவிமுத்த வாணதொல்லை
இருக்கோல மிட்டுண ராயெங்கு மாகி யிருப்பதுவே. (உரு)

625. இருகுங் குமக்குன் றும் பீர்பூப்பக் காம வெரியினினின்
றுருகும் பசும்பொன்னுக் கோர்மாற் றுண் டேலுரை யாய்தொடுத்துச்
செருகு நறுங்கொன்றை தேன்பிழிந் தூற்றச் சிறைச்சுரும்பர்
பருகும் பொலஞ்சடை யாய்காசி வாழ்முக்கட் பண்ணவனே. ()

(கலிநிலைத்துறை)

626. பண்ணேர் வேதம் பாடிய காசிப் பதியாயிப்
பெண்ணே ரொருவ னெய்கணை யைந்தும் பெய்தானல்
உண்ணேர் நின்ற யின்னரு ளாலென் னுயிரன்னாள்
கண்ணேர் நிற்றற் கொல்கி யொழிந்த கழுநீரே. (உஎ)

---

624. தோழி கூற்று.

திருமகளின் அழகைக்கொண்ட தேமொழியாள்; தலைவி. உருக்கோலம் - உருவெளித்தோற்றத்தை. போலும்: அசைநிலை. கோலத்தை யணிந்த நீலக்குழல்; விசாலாட்சியம்மை; கோலம் - குவளைமலர். இருக்கு - வேதம். இட்டும் உணராயென உம்மை விரிக்க. நீ எங்குமாகி இருப்பதைத் தேமொழி யாள் கண்டிலள்; இஃது என்ன பேதைமை? 643.

625. தோழி கூற்று.

பீர் - பசலை நிறம்; இது தலைவன் பிரிவாலுண்டாவது. பொன்-தலைவி. மாற்று - பரிகாரம், பொன்னுக்குரிய மாற்று. உரையாய் - சொல்லுவாய்; மாற்றுப்பார்ப்பதற்கு உரைத்துப் பார்ப்பாயென்று வேறொரு பொருள் தோற்றியது.

பண்ணவனே, பொன்னின் நோய் தீருதற்கு ஒரு மருந்து இருந்தால் அதனைக் கட்டளையிட்டருளவேண்டும்.

626. தோழி கூற்று.

அகிலேசரே, மன்மதன் இவள்மீது தன் ஐந்து அம்புகளையும் தொடுத்து விட்டான்; அவற்றுள் நான்கு பாணங்கள் மட்டும் தாம் செய்ய வேண்டிய துன்பங்களை முறையே செய்துவிட்டன. கொலைப்பாணமாகிய கழுநீர் இவள் கண்ணுக்கு முன்னே வருதற்கு அஞ்சி ஒழிந்தது; அதற்குக் காரணம் தேவரீரது திருவருளே.

பண்நேர் - பண்ணைக்கொடுக்கும்; நேர்தல் - கொடுத்தல். வேதத்திலிருந்து சங்கீதம் உண்டாயிற்றென்பது நூற்றுணிபு. ஒருவன் - மன்மதன். ஐந்தும்: உம்மை முற்றும்மை. உள்நேர் நின்றாய் - உள்ளே உயிர்க்கு உயிராய் நின்ற தேவரீருடைய. உயிரன்னாளுடைய கண்களுக்கு. கழுநீர் ஒழிந்த; ஒழிந்த: முற்று. கழுநீர் - குவளைப் பாணம்; இது கொலைப்பாணமென்று கூறப்படும்.

(கட்டளைக் கலித்துறை)

627. கழியுந் தலைக்கலன் பூண்டாடுங் காசிக் கடவுணுதல்
விழியு மிடக்கண்ணும் வெண்ணெருப் பேயவ் விழியிரண்டிற்
பொழியுங் கனல்விழி காமனைக் காய்ந்ததப் போரிலுடைந்
தொழியும் படைகளென் றேவெமைக் காயுமற் றோர்விழியே. ()

மடக்கு

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

628. விழைகுவ தன்ப ரகஞ்சுகமே வெங்கரி யின்னுரி கஞ்சுகமே
தொழிலடி கட்குள மாலயமே தூமுனி வோருள மாலயமே
அழகம ரும்பணி யென்பணியே யாட்கொள மேற்கொள்வ
[தென்பணியே
மழகளி றீன்ற வளம்பதியே வாழ்வது காசி வளம்பதியே. (உக)

---

627. தலைவி காமமிக்க கழிபடர் கிளவியாற் சந்திரனை நோக்கிக் கூறுதல்.

கழியும் - நீங்கிய. தலைக்கலன் - தலைமாலையை. நுதல் விழியும் - நெற்றிக் கண்ணும். இடக்கண் - சந்திரன். நெருப்பு வெண்ணிறமுடையதென்பது நியாய நூலார் துணிபு (பிரபு. பிரபுதேவர்வந்த. 60.) சந்திரனை வெண்ணெருப்பென்றல் கவிமரபு; "வீங்கா நின்ற கருநெருப்பினிடையே யெழுந்த வெண்ணெருப்பே" (கம்ப. மிதிலைக்காட்சி. 76.) மகளிரை மன்மதன் படையாகக் கூறுதல் மரபு. ஓர் விழி - இடக்கண்; "காமருசீர், மாதர் நலன ழிக்குங் கண்ணென்றே" (498,)

அகிலேசரே, உம்முடைய கண்களுள் நெற்றிக்கண்ணும் இடக்கண்ணுமாகிய இரண்டும் நெருப்பே; நெற்றிக்கண் மன்மதனை எரித்தது; அதன் இனமாகிய இடக்கண் தப்பியோடிய அவனது படையென்று எம்மை எரிக்கின்றது; காத்தருள வேண்டும்.

628. சுகமாக விழைவது அன்பரகம்; அகம் - மனம். கஞ்சுகம் - சட்டை. அடிகட்கு உள்ள தொழில் மா லயம்; மா லயம் - மகாசங்காரம். முனிவோரது உள்ளம் ஆலயம். பணி - ஆபரணம். என்பு அணி - என்பின் வரிசை. ஆட்கொள - என்னை ஆட்கொள்ளுதற்கு, என் பணி - என்னுடைய தொண்டு. என்னை ஆட்கொள்ளுவதற்காக என்னுடைய பணிவிடையே அவரால் மேற்கொள்ளப்படுவது. களிறு - விநாயகரை. ஈன்றவளுக்கு அம்பதி; பதி - நாயகர். வாழ்வதற்குரிய இடம் காசியாகிய வளத்தையுடைய பதி; பதி - நகரம்; வளப்பதி யெனற்பாலது, மடக்குப்பற்றி வளம்பதியென வந்தது.

## மடக்கு

(கட்டளைக் கலிப்பா)

629. வண்ண மேனி யரும்பு வனங்களே
வாசம் வாச மரும்பு வனங்களே
நண்ணு மாலய மாதவ ரங்கமே
ஞால மேழ்தரு மாதவ ரங்கமே
தண்ணென் மாலை தருமருக் கொன்றையே
தருவ தையர் தருமருக் கொன்றையே
கண்ணி னிற்பர் மனத்திருக் கோயிலே
காசியே யவர்க் கோர்திருக் கோயிலே. (௩௦)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

630. திருகுசினக் கூற்றினெயிற் றிடைக்கிடந்துங் கடைநாளிற் றிரையே யொன்றாய்ப்
பெருகுமுழு நீத்தத்திற் றிளைத்தாடப் புணைதேடும் பேதை நெஞ்சே
உருகிலைநெக் குடைந்திலைமொண் டானந்த வனத்தேனை யோடி யோடிப்
பருகிலைகண் ணரும்பிலைமெய் பொடித்திலைமற் றுனக்கென்ன பாவந் தானே. (௩௧)

---

629. அகிலேசர்க்கு அரிய புவனங்களே திருமேனியாம். வாசம் - இருப்பிடம். வாசம் அரும்பு - வாசனை தோன்றுகின்ற. வனங்கள் - காடுகள்; மயானமுமாம். ஆலயம் மாதவருடைய அம் கம்; கம் என்றது துவாத சாந்தத்தானத்தை. ஞாலம் ஏழையும் தரும் மாது - உமாதேவியார். அங்கம் - திருமேனி; "ஆகம், சகமேழு மீன்றெடுத்த தாயே" (632.) மாலை; மருவைத் தருகின்ற கொன்றைப்பூ. தருமருக்கு ஐயர் தருவது ஒன்றையே; ஒன்று - முத்தி (482.) மனத்திருக்கு ஓயில் கண்ணில் நிற்பர்; திருக்கு - மனமாறுபாடு.

630. "பின்றையே நின்றது கூற்றம்", "வந்தது வந்தது கூற்று" (நாலடி.) என்பவற்றை நினைந்து, 'திருகுசினக் கூற்றினெயிற் றிடைக்கிடந்தும்' என்றார். இங்ஙனம் இருந்தும் இந்நிலையினின்றும் மீள்வதற்கு நினையாமல் நெடுங்காலம் வாழ எண்ணும் நெஞ்சை நோக்கிக் கூறுகின்றார். கடைநாளில் - யுகாந்தகாலத்தில். திரை - கடல்; ஆகுபெயர். முழுநீத்தம் - பிரளய வெள்ளம். புணை - தெப்பம். நெக்கு - நெகிழ்ந்து. ஆனந்த வனத்தேன் - அகிலேசர்; ஆனந்தவனம் - காசி. தேனை மொண்டு பருகிலை. கண் அரும்பிலை - கண்ணீர்த்துளிகளை வீழ்த்திலை; அரும்புதலை இமை குவிதலாகக்கொண்டு, கண்களை மூடித் தியானித்தாயல்லை யெனலுமாம்; "கண்மூடி மௌனியாகி"

## ஊர்

(நேரிசை வெண்பா)

631. பாவலரு நாவலரும் பண்மலரக் கண்மலரும்
காவலரு மேடவிழ்க்குங் காசியே—தீவளரும்
கஞ்சக் கரத்தான் கலைமறைக்கு நாயகமாம்
அஞ்சக் கரத்தா னகம். (௩௨)

632. அகமே யவிமுத்த மையரிவர்க் காகம்
சகமேழு மீன்றெடுத்த தாயே—மிகமேவும்
எண்ணம் பரமே யெமக்களித்தன் முச்சுடரும்
கண்ணம் பரமே கலை. (௩௩)

## அம்மானை

(தாழிசை)

633. கலைமதியின் கீற்றணிந்த காசியகி லேசர்
சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனர்கா ணம்மானை

---

(தாயுமானவர்பாடல்.) உனக்கு உள்ள பாவம் யாது? அஃது இரங்கத் தக்கது; பாவம் - தீவினை.

நெஞ்சே, உன்னுடைய பேதைமையை ஒழித்து அகிலேசரைத் தியானஞ்செய் என்றபடி.

631. பா அலரும் - பாக்கள் தோன்றப்பெற்ற. நாவலர் - புலவர். கள் விரியும் சோலையிலுள்ள பூக்களும். வண்டுகள் பண்ணை விரித்துப் பாடுதலால் ஏடுகளை அவிழ்க்கும். ஏடு அவிழ்க்கும் - (நாவலர்) பனையேடுகளாலாகிய புத்தகங்களைக் கட்டவிழ்க்கும், (கா அலர்) இதழ்களை மலரச்செய்யும்; ஏடு: ஆகுபெயர். கஞ்சக் கரத்தான் - தாமரை மலரைப்போன்ற திருக்கரத்தை உடையார். அஞ்சு அக்கரம் - ஸ்ரீ பஞ்சாட்சரம்.

632. ஐயர் இவர்க்கு அகம் அவிமுத்தம்; அகம் - இருப்பிடம். ஆகத்தின்கண் ஏழுசகத்தையும் ஈன்றெடுத்த தாயே உள்ளாள் (629 : 2); ஆகம்-திருமேனி. எமக்கு அளித்தல் யாவராலும் மிக விரும்பும், எண்ணப்படும் அழகிய பரத்தை; பரம் - முத்தி; மேவும்பரம், எண்ணப்படும் பரமென்க. முச்சுடரும் கண்களாகும். அம்பரம் கலை - திசையே ஆடை; திகம்பரரென்னும் திரு நாமத்தை நினைக்க.

633. சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனர்காணம்மானை யென்பது ஒரு பெண்ணின் கூற்று. மன்மதனை வென்றவர் பெண்ணாசையின்றி யிருத்தல் வேண்டும்; உமாதேவியாருக்கு அகிலேசர் தம் திருமேனியிற் பாதியை வழங்கியது அதற்கு மாறன்றோவென்பது மற்றொருத்தியின் வினா. அப்பாலும்

சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனரே யாமாகின்
மலைமகட்குப் பாகம் வழங்குவதே னம்மானை
வழங்காரோ வப்பாலு மாலானு லம்மானை. (௩௪)

(கட்டளைக் கலித்துறை)

634. அம்மனை தம்மனை யாத்திருக் கோயி லவிமுத்தமா
எம்மனை யாய்த்தந்தை யாயிருந் தாரடிக் கீழிறைஞ்சீர்
நம்மனை மக்களென் றேக்கறுப் பீருங்க ளுளுலந்தாற்
சொம்மனை வைத்தெப் படிநடப் பீர்யமன் றூதரொடே. (௩௫)

(கட்டளைக் கலிப்பா)

635. தூது கொண்டுந் தமைத்தோ ழமைகொண்ட
தொண்டர் தண்டமிழ்ச் சொற்கொண்ட குண்டலக்
காது கொண்டெங் கவிதைகொண் டாட்கொண்ட
காசி நாதர் கருத்தே தறிகிலேம்

---

மாலாயிருந்தால் வழங்காரோவென்பது மூன்றுமவளின் விடை. அவ்விடை இருபொருளுடையது; மன்மதனை யெரித்த பின்னும் காமமயக்கமுடையவ ராயின் என்று பொருள்பட்டு வினவுக்கேற்ற விடை யுடையதாயிற்று; அந் தப் பக்கமும் திருமாலானு லென்பது இயல்பான பொருள். சிவபெருமான் தம் ஒருபாதியில் திருமாலைக் கொண்டிருப்பதை நினைந்து கூறினள்.

634. அம்மனை - உலகிற்குத் தாயாகிய உமாதேவியார் (82.) தம்மனை யா - தம்முடைய தேவியாக. எம் அன்னையாயும் தந்தையாயும் இருந்தார்; "அப்பனீ யம்மை நீ" (தே.) இருந்தவர் அகிலேசர். அவரது அடியின் கீழ். ஏக்கறுப்பீர் - அவர்கள் மீதுள்ள ஆசையால் ஈடுபட்டு நிற்பீர்; "உடை யார் முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்" (குறள், 395, பரிமேல்.) நாள் உலந்தால் - வாழ்நாள் முடிவுபெற்றால். சொம் - சொத்துக்களை (362 : 2.)

635. தொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனார்; அவருக்கு வழங்கும் 'தம்பி ரான் தோழர்' என்னும் திருநாமமும், "ஏழிசையா யிசைப்பயனா யின்ன முதா யென்னுடைய, தோழனுமாய்" (தே. சுந்தர.) என்னும் அவர் வாக்கும் இங்கே அறிதற்குரியன. குண்டலக்காதென்ற அடைமொழி குண்டலங்களாக வுள்ள கம்பளாசுவதரரது இசையைக்கேட்கும் காதென்னும் குறிப்பை யுடை

போது கொண்டொரு பச்சிலை கொண்டுதாம்
பூசை செய்திலர் புண்டரி கப்பதம்
ஏது கொண்டு கொடுப்பர் கொடுப்பரே
விருவ ருக்குமற் றென்படு நெஞ்சமே. (௬௬)

## சித்து

(நேரிசை வெண்பா)

636. ஏடவிழ்பொற் கொன்றையகி லேசரன்பர்க் கேயிரும்பை
ஆடகமாக் கிக்கொடுத்தோ மவ்வளவோ—நீடுதிறல்
காட்டுமிமை யோர்க்கிருப்புக் கற்கனக மாக்கியண்ட
ஓட்டினையும் பொன்னாக்கி னோம். (௬௭)

---

யது. இழிந்த எம் கவிதை என்று சொல்லாற்றலால் விரித்துக்கொள்க. மிகப் பெரிய சுந்தரமூர்த்தி நாயனாரது பாடல்களைக் கேட்டருளிய திருச் செவிக ளால் மிகத் தாழ்ந்த சிறியேனுடைய பாடல்களையும் ஏற்றுக் கொண்டருளி யது இறைவனது எளிமையைப் புலப்படுத்து மென்றபடி. இத்தலத்தில் இறந் தோர் இறைவன் திருவடியைப் பூசை செய்திலர்; இறந்த மாத்திரத்தில் சாரூபம் பெறுவர். யாதொரு காரணமுமின்றி அவர்களுக்கு எளிதில் நற் பதவி யளித்தால் நெடுங்காலம் வருந்திப் பூசித்துத் தேடியிளைத்து நிற்கும் பிர மதேவரும் திருமாலுமாகிய இருவரும் எத்துணை வருத்த முறுவர்?

636. இரசவாதம் புரியும் சித்தர் ஒருவர் கூற்றாக அமைந்தது. இரச வாதத் தொடர்புடைய ஒருபொருளும் இயல்பான பொருளொன்றும் இதில் ஒருங்கே அமைந்தன.

ஏடு - இதழ். அன்பர்க்கு - திருமாலுக்கு; சிவபெருமான் திருநாமங்க ளுள் 'முகுந்தப்பிரியர்' என்பது ஒன்று. இரும்பை ஆடகமாக்கிக்கொடுத் தோம் - இரும்பென்னும் உலோகத்தைப் பொன்னாக்கித் தந்தோம்; காளிங்க னென்னும் பாம்பின் பெரியபடத்தை ஆடுதற்குரிய இடமாக்கிக் கொடுத் தோம்; "யாமவர்க் கிரும்பை யாடகமாக்கினம்" (திருவரங்கக். 42) (பி - ம்.) 'இருப்பை யாடகம்' இமையோர்க்கு - தேவர்க்கு. இருப்புக்கற்கனக மாக்கி - இரும்புமலையைப் பொன்னாக்கி, இருப்பிடத்தை மேருமலையாக்கி; தேவர் களுக்கு இருப்பிட மாதல் பற்றி மேருமலை சுராலயமென வழங்கும். அண் டத்தின் ஓடு பொன்னிறமாகவுள்ள தென்பர்.

(நேரிசை யாசிரியப்பா)

637. பொன்னுருக் கன்ன பூந்துணர்க் கொன்றையும்
வெள்ளிமுளை யன்ன விரிநிலாக் கொழுந்தும்
காந்தண் மலர்ந்தன்ன பாந்தளி னிரையும்
திரைசுழித் தெறியும் பொருபுனற் கங்கையில்
௫ வெள்ளிதழ்க் கமலம் வள்ளவாய் விரித்தென
முழுநகை முகிழ்க்குங் கழிமுடை வெண்டலை
தோலடிச் செங்காற் பால்புரை வரிச்சிறைக்
கிஞ்சுக மலர்ந்த செஞ்சூட் டெகினத்
துருவெடுத் தகல்வான் றுருவியுங் காணுத்
கo தொன்மறைக் கிழவனின் சென்னிமற் றியானே
கண்டுகொண் டனனிக் கடவுண்மா முடியெனப்
பெருமகிழ் சிறப்பக் குரவையிட் டார்த்து
வெள்ளெயி றிலங்க விரைவிற் சிரித்தெனப்
பெருவியப் பிழைக்கு மெரிபுரை சடையோய்
க௫ ஆள்வழுக் கறுக்கும் வாளமர்த் தடங்கண்
மின்னுழை மருங்குற் சின்மொழி மகளிர்

637. (அடி, 1-14.) இறைவனது சடைமுடியிலிருக்கும் பிரமனது தலை பிரமனைப் பார்த்து, 'நீ காணுத திருமுடியை யான் கண்டேன்' என்று கூறிப் பரிகாசம் செய்கின்றமை கூறப்படும்.

(1.) கொன்றை மலருக்கு உருக்கிய பொன் உவமை.

(2.) நிலாக்கொழுந்து - பிறை.

(3.) பாந்தள் - பாம்பு.

(6.) வெண்டலை: எழுவாய்.

(8.) கிஞ்சுகம் மலர்ந்த - முள்ளுமுருங்கைப்பூவைப்போல மலர்ந்த. எகினம் - அன்னம்.

(7-8.) "பானிற வரிச்சிற, கன்னம்" (திருமுகப்பாசுரம்.)

(9.) துருவியும் - தேடியும்.

(10.) மறைக்கிழவ - பிரமனே. (பி-ம்.) 'கிழவ சென்னிமற்' நின் சென்னி யென்றமையின் அதனைச் சிவபிரானுற் கிள்ளப்பட்ட தலை யென்று கொள்க.

(12.) குரவை - குரவைப்பாட்டு.

வெண்டலை (6), சிரித்தெனப் (13) பெரு வியப்பிழைக்கும் சடையோய்.

(15-26.) காசியிலுள்ள மகளிர் கமுகமரத்திற் கட்டிய ஊசலி லாடுதல் கூறப்படும்.

(16.) மின் நுழை - மின்னலைப்போலச் சிறிய. (பி-ம்.) 'மின்னிழை'

ஒழுகொளி மிடற்றி னழகுகவர்ந் துண்டெனக்
கயிறுகொண் டார்க்குங் காட்சித் தென்ன
மரகதங் காய்த்துப் பவளம் பழுக்கும்
உ0 கமஞ்சூற் கமுகின் கழுத்திற யாத்து
வீசொளிப் பசும்பொ னூசலாட் டயர்தரப்
பருமணிக் கமுகின் பசுங்கழுத் துடைந்து
திரைபடு குருதித் திரடெறித் தென்ன
முழுக்குலை முரிந்து பழுக்காய் சிதறும்
உரு மங்குல்கண் படுக்கு மதுமலர்ப் பொதும்பர்
கங்கைசூழ் கிடந்த காசி வாரு
ஐவரி பித்தெனு மவைதலை யெடுப்ப
மெய்விட் டைவருங் கைவிடு மேல்வையில்
மாமுத நடிந்த காமரு குழவியும்
நட0 பொழிமதங் கரையு மழவிளங் களிறும்
மூண்டெழு மானம் பூண்டழுக் கறுப்ப
இடக்கையி னணைத்துநின் மடித்தலத் திருத்தி
உலகமோ ரேழும் பலமுறை பயந்தும்
முதிரா விளமுலை முற்றிழை மடந்தை

---

(அடி, 16-8.) மகளிர் கமுக மரங்கள் தம் கழுத்தின் அழகைத் திருடி யன வென்று கருதி அவற்றைத் தண்டிப்பார்போல அவற்றில் கயிறுகளைக் கட்டி ஊசலாடுன்றன ரென்பது கருத்து.

(19-20.) "எண்ணுர் முத்த மீன்று மரகதம் போற்காய்த்துக், கண்ணார் கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி" (தே. திருஞா.); "கருங் கமுகு பசும் பாளை வெண்முத் தீன்று காயெல்லா மரகதமாய்ப் பவளங்காட்ட" (**பெரிய திருமொழி, உ· 10: 7.**)

(21.) (பி - ம்) 'ஊசலாட் டயரவப்'

(24.) பழுக்காய் - பாக்கு.

(25 - 6.) பொதும்பருங் கங்கையும்; பொதும்பர் - சோலை.

(27 - 40.) இத்தலத்தில் இறந்தோருக்கு அகிலேசர் பிரணவோபதேசம் புரியும் செயல் விரித்துக் கூறப்படும்.

(28.) ஐவர் - ஐம்பொறிகள்; "புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி யறிவழிந்திட் டைம்மே லுந்தி" (தே. திருஞா.)

(29.) குழவி - முருகக்கடவுள்.

(30.) களிறு - விநாயகர்.

(31.) அழுக்கறுப்ப - பொறாமை கொள்ள.

(34.) மடந்தை - விசாலாட்சியம்மை.

௩௫ ஒண்டொடித் தடக்கையின் வீசு நுண்டுகிற்
றோகையிற் பிறந்த நாகிளந் தென்றல்
மோகமுந் தளர்ச்சியுந் தாகமுந் தணிப்ப
மறைமுதற் பொருளி னிறைசுவை யமுதினை
அஞ்செவி மடுத்துண வூட்டிநின்
௪o குஞ்சித வடிக்கீழ்க் குடியிருத் துகவே. (௩௮)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

638. குடியிருக்கும் புன்குரம்பை குலைந்திடுநாட் கொலைக்கூற்றங்
குமைத்த செம்பொன்
அடியிருக்கும் பரந்தாமப் புக்கில்புகுந் தானந்த
வமுத மாந்திக்
கடியிருக்கு நறைக்குழன்முத் தித்திருவை முயங்கிடவுங்
கடவேன் கொல்லோ
துடியிருக்கு மிடையவளோ டவிமுத்தத் திருந்தபரஞ்
சோதி யானே. (௩௯)

களி

(எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்)

639. சோதி யொன்றிலொரு பாதி சத்தியொரு
பாதியும் பரமசிவமெனத்
தொகுத்து வைத்தவவி முத்த நாயகர்
துணைப்ப தம்பரவு களியரேம்

---

(அடி, 36.) தோகை - முன்றானை.

(40.) குஞ்சிதவடி - வளைந்த திருவடி.

(முடிபு.) சடையோய் (14), காசிவாணு (26), குஞ்சிதவடிக்கீழ்க் குடியிருத்துக (40) என்க.

638. புன்குரம்பை - உடம்பு ; " எல்லாப் படியாலு மெண்ணினு லிவ்வுடம்பு, பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை " (ஔவையார்.) கூற்றம் குமைத்த அடி : 489. பரந்தாமம் - முத்தி (656.) புக்கில் - சொந்த வீடு ; " புக்கிலமைந்தின்று " (குறள்.) வடமொழி முறைபற்றி முத்தியைப் பெண்பாலாகக் கூறினர் (601.)

சோதியானே, குலைந்திடுநாள் புக்கில் புகுந்து, மாந்தி முயங்கிடவும் கடவேன் கொல்லோ ?

639. கள்ளுண்டு ஊனுகரும் வழக்க முடையவன் ஒருவன் தன் வழக்கத்தைச் சிறப்பித்துக் கூறுவதாக அமைந்தது இச்செய்யுள்.

யாகம் அதிகமென்பது ஏதினுல். பசுவைப்படுத்தலால் யாகம் சிறப்புடையதாயிற்றென்பது களியின் கருத்து. அன்பர் தம் - கண்ணப்ப நாயனு

ஓதி யோதியி ளைப்பர் வேத
முணர்த்து தத்துவ முணர்கிலார்
உணரும் வண்ணமனு பவத்தில் வந்திடுமொ
ருண்மை வாசக முணர்த்துகேம்
ஏதி லுலற மனைத்தி னும்பசு
விளைப்ப டுத்தனல் வளர்த்திடும்
யாக மேயதிக மென்ப தன்பர்த
மிறைச்சி மிச்சிலதி லிச்சையார்
ஆதி யாரறிவ ரதுகி டக்கமது
வருந்தி லப்பொழுதி லேபெறற்
கரிய தோர்பரம சுகம்வி ளைந்திடுவ
தறும றுத்தவிர வில்லையே. (௪௦)

(கட்டளைக் கலித்துறை)

640. இல்வாழ்வை விட்டுக் கதிர்வேட் டடைபவர்க் கேழைபங்கன்
நல்வாழ்வை யேதருங் காசிப் பிரானறும் பூங்கடுக்கை
வல்வார் முலைக்கொம்ப னுய்தந்தை தாண்மழு வாலெறிந்து
கொல்வா ரொருவருக் கல்லா தெவர்க்குங் கொளற்கரிதே. (௪௧)

---

ருடைய. இறைச்சி - மாமிசம். மிச்சில் - எச்சில். கண்ணப்ப நாயனார் உண்டு சுவை பார்த்த எச்சிலாகிய இறைச்சியில் விருப்பமுடையவராகிய ஆதியார் அதிகமென்பதை அறிவாரென இயைக்க. மது - கள். மறுத்த இரவு இல்லை - ஒழிந்த இராத்திரி இல்லை; ஒவ்வொரு நாளும் உண்பரென்றபடி. மறு தவிர வில்லையென உண்மைப் பொருளும் இதன்கண் அமைந்தது; மறு - குற்றம். (பி · ம்.) 'மறுத்தவவை யில்லையே'

640. தோழி கூற்று.

அகிலேசரது கொன்றைமாலையைப் பெற விரும்பிய ஒரு தலைவியை நோக்கி, 'நீ சண்டேசராகப் பிறந்தால் அதைப் பெறலாம்; அவரையன்றிப் பிறர் பெறுதற்கு அஃது அரிது' என்றாள் (118, 543.)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

641. கொள்ளையிடச் சிலர்க்குழுத்திச் சரக்கறையைத் திறந்துகொடுத்
தனந்த கோடிப்
பிள்ளைகள்பெற் றுடையபெரு மனைக்கிழத்திக் கேகுடும்பம்
பேணு கென்று
உள்ளபடி யிருநாழி கொடுத்ததிலெண் ணுன்கறமு
மோம்பு கென்றூர்
அள்ளல்வள வயற்காசி யாண்டகையார் பெருந்தகைமை
யழகி தாமே. (௬௨)

## குறம்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

642. அழகு துயில்குங் குமக்கொங்கை யணங்கே யெங்க ளருட்காசிக்
குழகர் மகற்கு மகட்கொடுத்த குடியிற் பிறந்த குறமகள்யான்
ஒழுகு தொடிக்கைக் குறியுமுகக் குறியுந் தருமொள் வளைக்குறியும்
புழுகு முழுகு முலைக்குறியு முடையா ரவர்பொற் புயந்தானே.

---

641. சரக்கறை - நிதி முதலியன வைக்கப் பெற்றிருக்கும் அறை; "சரக்கறை யோவென் றனிநெஞ்சமே" (தே.) குடும்பம் பேணுக என்ன - குடும்பத்தைப் பாதுகாப்பாயென்று. வளவயற்காசி யென்றது, மின்னும் மிகுதியாக அளிக்கும் வாய்ப்புடையவரென்னும் குறிப்புடையது.

அயலாருக்குச் சரக்கறையையே கொடுத்துவிட்டுப் பல பிள்ளைகளையுடைய தம் மனைவிக்கு இரு நாழி நெல் மட்டும் கொடுத்தது பெருந்தகைமையாகாதென்று புலப்படுத்தியபடி; இது பழிப்பதுபோலப் புகழ்தல். பெருந்தகைமை - வள்ளன்மை.

"கண்ணகன் ஞாலத் தெண்ணில்பல் கோடிப், பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு, நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங், கெண்ணுன் கறமுமியற்றுதி நீயென, வள்ளன்மை செலுத்து மொண்ணிதிச் செல்வ" (464.) என்பது இதனோடு ஒப்பு நோக்கி இன்புறற்பாலது.

642. மகற்கு - முருகக்கடவுளுக்கு. மகள் - வள்ளி நாயகியை. குடி - குறவர் குடி. உன்னுடைய கைக்குறி முதலியன அகிலேசர் பொற்புயத்தைத் தரும்; நீ கவலா தொழிக என்றுள் (181.)

(கட்டளைக்கலித்துறை)

643. புயல்வண்ணக் கண்ணற் கொளித்தவக்
கள்வன் புணர்ப்பையெண்ணுள்
கயல்வண்ணக் கண்ணிதன் கண்ணினுட்
புக்கது கண்டிருந்தும்
செயல்வண்ணங் கண்டிலள் வாளாப்
புறத்தெங்குந் தேடுகின்ருள்
வயல்வண்ணப் பண்ணை யவிழுத்தத்
தானை மனத்துள்வைத்தே. (சச)

## மறம்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

644. வையமுழு தொருங்கீன்ற விடப்பாக ரானந்த
வனத்தில் வாழும்
வெய்யதறு கண்மறவர் குலக்கொடியை வேட்டரசன்
விடுத்த தூதா
கையிலவன் றிருமுகமோ காட்டிருகண் டொட்டுமுட்டைக்
கதையிற் ருக்கிச்
செய்யகொடி றுடைத்தகல்வாய் கிழித்தரிவோ நாசியொடு
செவியுந் தானே. (சரு)

---

643. செவிலி கூற்று.

கண்ணன் : இடுகுறிப் பெயர் மாத்திரையாய் நின்றது ; "கருங்கண்ணனை யறியாமை நின்றேன்" (திருச்சிற். 53.) புணர்ப்பை - வஞ்சனையை. அகிலேசர் தன் கண்ணினுள்ளே புகுந்ததைக் கண்டிருந்தும் ; "கடம்பவனேசனுர், கண்புகுந்தென் கருத்து ளிருக்கவும்" (113); "கண்வழி நுழையுமோர் கள்வனேகொலாம்" (கம்ப. மிதிலைக். 55.) பண்ணை - மருத நிலம்.

அகிலேசரைத் தன் மனத்துள்ளே வைத்திருந்தும், இத்தலைவி அவரைப் புறத்தே தேடுகின்ருள் ; இஃது என்ன பேதைமை !

644. தன் மகளை மணஞ்செய்ய விரும்பித் திருமுகம் விடுத்த ஓர் அரசன் தூதனை நோக்கிச் சினந்து மறவர் தலைவனொருவன் கூறியது.

இடப்பாகம் உமாதேவியாரதாதலின் 'வையமுழு தொருங்கீன்ற விடப்பாகர்' என்ருர். கண் தொட்டு - கண்களைத்தோண்டி. முட்டு - எலும்பின் பொருத்துவாய்கள். கொடிறு - கன்னம். அரிவோம் - அறுப்போம்.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

645 தாக்கு படைவேள் கணைமழைக்குத் தரியா திருகண் மழையருவி
தேக்கு மிவட்கா னந்தவனத் திருந்தா ருள்ளந் திருந்தார்கொல்
காக்க வரிய விளவாடைக் காற்றுக் குடைந்து கரந்துவச்சை
மாக்க ளெனவே முடவலவன் வளைவா யடைக்கு மழைநாளே. ()

(கட்டளைக் கலித்துறை)

646. மழைவளைக் கும்பொழிற் காசிப்
பிரான்வெற்பில் வண்டறைபூந்
தழைவளைக் கைக்கொடுத் தேன்கண்ணி
லொற்றித் தளரிடைதன்
இழைவளைக் குங்கொங்கை யூடணைத்
தாளித் தழையினுள்ளே
கழைவளைக் குஞ்சிலை வேளனை
யாயிதைக் கண்டுகொள்ளே. (சஎ)

---

645. தோழி கூற்று.

தேக்கும் - நிறைக்கும். உடைந்து - தோற்று. கரந்து - மறைந்து. வச்சை மாக்கள் - உலோபிகள். அலவன் - நண்டு. "இழைபடப் பெடையொடு மெள்ளி னள்ளிகள், புழையடைத் தொடுங்கின வச்சை மாக்கள்போல்" (கம்ப. கார்காலப். 121.)

மழைநாளில் ஆனந்த வனத்திருந்தார் உள்ளம் திருந்தார்கொல்.

646. பாங்கி கூற்று; இறைவி கையுறையேற்றமை இறைவனுக்கு இயம்பல்.

பொழிலாற் சிறப்புடைய வெற்பென்றமையால் தழைக்குரிய மலரும் தளிரும் அவளுக்கு அரியனவன்றாதலின் நின் தழையை ஏற்றுக்கொண்டது நின்பாலுள்ள அன்பின்பொருட்டே என்பதைக் குறிப்பித்தாளாயிற்று. வண்டு அறைபூந் தழையென்றமையால் அத்தழை மணமுள்ள மலர்களாலும் தழையாலும் ஆக்கப்பட்டதென்பது போந்தது. வளைக்கை - தலைவியின் வளைக்கையில். கண்ணி லொற்றியது அதன்பாலுள்ள மதிப்பை யறிவித்தற்கு; கொங்கையூ டணைத்தது அவள் காதலைப் புலப்படுத்தியது. தளரிடை - தலைவி. தழையினுள்ளே - தழையின் திறத்திற்காட்டிய அன்பின் வழியாக. தழையின்பாற் காட்டிய மதிப்பையும் அன்பையும் அறிந்து அவள் உடம்பாட்டை நீ தெளிந்து கொள்வாயாக.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

647. கண்ணிருக்குந் திருநுதலுங் கனலிருக்குந் திருக்கரமுங்
கலந்தோர் பேதைப்
பெண்ணிருக்கு மிடப்பாலும் பிறையிருக்கு மவுலியுமாய்ப்
பிரிக்க லாகா
எண்ணிருக்குங் கணத்தொடுமா னந்தவனத் திருப்பாரை
யெங்கே காண்பார்
பண்ணிருக்கு மறைகளுமெண் கண்ணனுங்கண் ணனுமமரர்
பலருந் தானே. (சஅ)

(கட்டளைக் கலித்துறை)

648. பல்லாண்டு தம்மைப் படைத்தவத் தேவரைப்
பார்த்துப் பைம்பொன்
வில்லாண்ட தோள்கொட்டி யெந்தையர் கோல
விடம்பழுத்த
அல்லாண்ட கண்டத்தெம் மாதிப் பிரானவி
முத்தத்திலே
சில்லாண் டிருந்து சிவமாய்ச் செலுஞ்சிறு
செந்துக்களே. (சக)

---

647. சாரூபம் பெற்றவர்கூட்டத்தோடும் இருக்கும் அகிலேசரை வேதமும் பிரமனும் திருமாலும் பிற தேவர்களும் எங்ஙனம் வேறு பிரித்தறிய முடியும்?

கணம் - சாரூபம் பெற்றோருடைய கூட்டம். எண்கண்ணன் - பிரமதேவன்; "எண்கணனைக் குட்டியகுட் டெங்கேனும் பட்டதோ" (சிவஞான வள்ளலார்.) எட்டுக் கண் இருந்தும் கண்டு தெளியகில்லானென்பது குறிப்பு.

648. இத்தலத்தில் இறந்த சிற்றுயிர்கள் சாரூபம் பெற்றுப் பல ஆண்டுகளாகத் தம்மைப் படைத்து அளித்த தேவர்களைப் பார்த்து, "நீவிர் முன்னிருந்த நிலையிலேயே இருக்கின்றீர். யாம் நும்மினும் மேற்பட்ட நிலை யடைந்தோம்" என்று தோள்களைக் கொட்டிச் சிவலோகத்திற்குச் செல்லா நிற்கும்.

பைம்பொன் வில் - மேருமலையாகிய வில்; சாரூபம் பெற்றமையின் அவர் தோள் இவ்வில்லை உடையாதாயிற்று. தோள் கொட்டுதல் மகிழ்ச்சியின் விளைவு. எந்தையர்- அகிலேசர்; அர்: பகுதிப்பொருள் விகுதி; "பூவர் சோலை" (சீவக. 1328) என்புழிப்போல். (பி - ம்.) 'எந்தையிற்கோல'

சிறு செந்துக்கள் தோள் கொட்டிச் சிவமாய்ச் செல்லும்.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

649. செந்தே னொழுகும் பொழிற்காசி
சிறுநுண் ணுசுப்பிற் பெருந்தடங்கட்
பைந்தே னொழுகு மிடப்பாகர்
படைவீ டென்ப துணராய்கொல்
வந்தேன் வளைந்தா யெமைப்பாவி
மதனு வினையே விளைந்தபோர்
உய்ந்தே குவதிங் கரிதனற்க
ணுடையார் மழுவாட் படையாரே. (ருo)

## மதங்கியார்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

650. படலைநறுங் கடுக்கைமுடிப் பரஞ்சுடரா ரிசைபாடிப்
பசுந்தேன் பில்கி
மடலவிழ்பூம் பொழிற்காசி மணிமறுகில் விளையாடு
மதங்கி யாரே
உடலுமெமக் குயிருமொன்றே யோடரிக்கண் வாளிரண்டு
மொழிய வென்னே
தொடலைவளைத் தடக்கையின்வா ளிரண்டெடுத்து வீசிடநீர்
தொடங்கு மாறே. (ருக)

---

649. தலைவி காமமிக்க கழிபடர் கிளவியாற் கூறும் மன்மதோபாலம்பனம்.

மன்மதனே, இத்தலம் அகிலேசரது படைவீடென்பதை அறியாயோ: நீ இங்கே வந்தால் பிழைத்தல் அரிது; உன்னை முன்பு எரித்த நெற்றிக் கண்ணையுடைய அவரே இங்கே உள்ளார்.

பெருந்தடங்கட் பைந்தேன் - விசாலாட்சியம்மை. காசி படைவீடென்பது: 695. திருக்கோயிலுள்ள இடங்களைப் படைவீடென்பது முருகக்கடவுளுடைய தலங்களை ஆறு படைவீடென்பதனாலும் அறியப்படும். வந்து ஏன் வளைந்தாய். வினையே - நீ வளைந்ததற்குக் காரணம் உனது தீவினையே. விளைந்த - விளைந்தன; பெயரெச்சமுமாம். முன் எரித்த நுதற்கண்ணும், மேலும் பொருதற்கு மழுவாட்படையு முடையாரென்றது நீ உய்தல் அரிதென்பதற்குக் காரணம் புலப்படுத்தியவாறு.

650. வாளெடுத்துக் கூத்தாடுவாளைப் பார்த்துக்கூறியது. படலை - பூவும் தழையும் விரவித்தொடுத்த மாலை. பரஞ்சுடரார் - அகிலேசர். இசைபாடி விளை

(கலித்தாழிசை)

651. தொடங்காமே பணிமலருந் தூவாமே நல்கும்
கடங்கால் களிற்றுரியார் காசிவளம் பாடி
விடங்கான் றகன்றுகுழை மேற்போய்க் குடங்கைக்
கடங்காத வுண்கணீ ராடுகபொன் னூசல்
அம்பொன்மலர்க் கொம்பன்னீ ராடுகபொன் னூசல். (ருஉ)

(நேரிசை வெண்பா)

௬௫௨. பொன்னந்தா தென்னமலர்ப் பூந்துறையிற் புண்டரிகத்
தன்னந்தா தாடு மவிமுத்தர்—இன்னமிர்தா
முன்னங் கடுக்கை முகந்துண்டார் நல்காரே
இன்னங் கடுக்கை யிவட்கு. (ருங)

---

யாடுமென்க. உடலும் ஒன்று உயிரும் ஒன்று என ஒன்று என்பதை இரண்டற்கும் கூட்டுக. அவ்விரண்டற்கும் இரண்டு கண்களாகிய வாள் இரண்டும் போதுமே; அவற்றையன்றி இரு கைகளிலும் இருவாள்களைக் கொண்டது என்ன பயன் கருதி? தொடலை வலை - மாலையாகத் தொடுத்த வலை (543:1.) தொடங்குமாறு என்? 119 - ஆம் செய்யுளையும் அதன் குறிப்புரையையும் பார்க்க.

651. பணி தொடங்காமே - தொண்டுகளைச் செய்யத் தொடங்காமலே. மலரும் தூவாமே - அருச்சனை செய்யாமலே. நல்கும் - தண்ணளி செய்யும். இத்தலத்தில் இறப்பவர்கள் யாதொரு பணியும் செய்யாதிருந்தாலும் அவ் விறத்தலே காரணமாகச் சாருபத்தைப் பெறுவரென்பதைக் குறிப்பித்தார்.

கடம் கால் - மதத்தை வெளிவிடும். குடங்கை - உள்ளங்கை. உண் கண் - மையுண்ட கண். பொன் மலர்க்கொம்பு - கற்பக மரத்தின் பூங்கொம்பினை.

652. தோழி கூற்று.

பொன்னந்தாது என்ன - பொற்பொடியைப் போல. அன்னம் தாமரைத்தாதில் ஆடும். முன்னம் கடுவைக் கையில் முகந்து அமிர்தாக உண்டார்; கடு - விடம். இவட்குக் கடுக்கையை இன்னம் நல்கார்; கடுக்கை - கொன்றைமாலையை.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

653. குன்றிரண்டு சுமந்தொசியுங் கொடியன்னீ ரவிமுத்தங்
குடிகொண் டாகம்
ஒன்றிரண்டு வடிவானார் திரள்புயத்து மார்பகத்து
முமிழ்தேன் பில்கி
மின்றிரண்ட தெனப்புரளும் பொலங்கடுக்கைத் தாமத்தின்
விரைத்தா தாடிப்
பொன்றிரண் டதெனவிருக்கும் பொறிவண்டு செய்தவமென்
புகலு வீரே. (ரூச)

(கொச்சகக் கலிப்பா)

654. புகுமே மதிக்கொழுந்தும் புன்மாலைப் போதும்
நகுமே கிளையு நகைத்தா னமக்கென்ன
உகுமே யுயிர்காசி யுத்தமரைக் காணத்
தகுமேயப் போதிதழித் தாரும் பெறலாமே. (ரூரு)

---

653. இறைவனது மாலையைப் பெறாமல் வாடும் தலைவி பாங்கியரை நோக்கிக் கூறியது.

எனக்கு அரிதாயிருக்கும் கொன்றைமாலை வண்டுகளுக்கு எளிதாயிருக்கின்றதேயென்று இரங்குகின்றாள் (658.)

இரண்டு வடிவு - ஆண் வடிவும் பெண் வடிவும். பொலங்கடுக்கைத் தாமம் - பொன்னிறத்தையுடைய கொன்றை மலர்மாலை. அதன் தாதில் ஆடிய தாதலின், கரிய வண்டு பொன் திரண்டதென இருந்தது. செய்தவ மென்னென்றது அதனை அறிந்து அத்தவமாற்றியேனும் அவர் மாலையைப் பெறுவேனென்னும் உட்கோளுடையது.

654. தலைவி கூற்று.

மதியும் மாலையும் அலரும் தன்னைத் துன்புறுத்துதலை நினைந்து இரங்கப் புக்க தலைமகள் அவை தன் உயிர்போதற்குக் கருவிகளாகுமென்றும் உயிர் நீத்தவுடன் இறைவனது அருளைப் பெறலாமென்றும் தேறிக் கூறியது இது.

மதிக்கொழுந்தும் மாலைப்போதும் புகும். கிளை - உறவினர். நகைத்தால் நமக்கு என்ன குறைவு நேரும்? மதிக்கொழுந்து முதலியவற்றால் உயிர் நீங்கும். காணத்தகும் - காணுதல் உறுதியாம்; தகும் - தேற்றவினை. அகிலேசர் அத்தலவழக்கப்படி பிரணவோபதேசம் செய்யப் புகுவராதலின் காணத்தகுமென்றாள். இதழித்தார் - கொன்றைமாலை. சாரூபம் பெறுதல் ஒருதலையாதலின் அப்போது கொன்றை மாலையைப் பெறலாமென்று கூறினாள்.

655. ஆமோ வவிமுத்தத் தையரே பெண்பழிவீண்
போமோ வயிரவர்தஞ் சாதனமும் பொய்யாமோ
தேமோது கொன்றைச் செழுந்தாம நல்காநீர்
தாமோ தருவீ ருமதுபரந் தாமமே. (௫௬)

(கலிநிலைத்துறை)

656. பரந்தா மத்தைப் பல்லுயிர் கட்கும் பாலிப்பார்
வரந்தா மத்தைப் பின்றரு வதைமுன் வழங்காரேற்
புரந்தா மத்தைப் பொருவுறு காசிப் புரமானூர்க்
கிரந்தா மத்தை யெனப்புக லீரேந் திழையீரே. (௫௭)

## பாணாற்றுப்படை

(நேரிசை யாசிரியப்பா)

657. இழுமென் மழலை யின்னமு துறைப்பப்
பிழிதே னொழுக்கி னொழுகுமின் னரம்பின்
வள்ளுகிர் வடிம்பின் வரன்முறை வருடத்
தெள்விளி யெடுக்குஞ் சீறியாழ்ப் பாண
௫ வாழிய கேண்மதி மாற்றமொன் றியானும்

---

655. தலைவி கூற்று.

இத்தலத்தில் பாவஞ் செய்தவர்க்கு யமதண்டனை இல்லை யென்பதும் வயிரவர் தண்டனை மட்டும் உண்டென்பதும் புராண வரலாறுகள். சாதனம் - தண்டனை. பரந்தாமம் - முத்தி (638, 693.) ஒரு தாமத்தைத் தராமல் நிற்கும் தேவரீர் பரந்தாமத்தைத் தருவது எங்ஙன முண்மையாகுமென இதில் ஒரு நயம் தோற்றியது; தாமம்: சிலேடை.

656. தலைவி கூற்று; பாங்கிவிடு தூது.

பரந்தாமத்தை - முத்தியை. வரம் தாமத்தைப் பின் தருவதை- மேன்மையையுடைய கொன்றை மாலையை இறந்த பின் அளிப்பதை. புரம் தாமத்தைப் பொருதரு- வீடுகள் மலைகளை ஒத்தற்கு இடமான. (பி - ம்.) 'வரந்தாமத்தைத் தருவதை நீர் பின் வழங்காரேற், புரந்தா மத்திற் பொலிதரு காசிப் புரமானூர்க்' மத்தை இரந்தாமென - ஊமத்தமலரையேனும் யாசித்தோமென்று; மத்து - ஊமத்தை (547.) ஏந்திழையீரென்றது தோழிமாரை.

நான் இறந்தபின் சாரூபம் பெறுங்காலையில் எனக்கு அளிக்கப்படும் கொன்றை மாலையை இப்போதே தருக என்று கேளுங்கள்; இல்லையெனின் அவர் அணியும் ஊமத்தமலரையேனும் கேட்டு வாங்கிவாருங்களென்றாள் தலைவி.

657. அகிலேசர்பால் திருவருள் பெற்றுப் பெருஞ்செல்வ மெய்திவரும் பாணன் ஒருவன் அவரிடம் செல்லும்படி மற்றொரு பாணனுக்குக் கூறியது.

(அடி, 1-5.) மழலையென்றது இங்கே இன்னொலியைக் குறித்து நின்றது. உறைப்ப- துளிக்க. தேனொழுக்கு யாழ்நரம்பிற்கு உவமை (சீவக. 559, 722.)

ஏழிசைப் பாணன்மற் றிறைமக னலனே
பலவுடன் பழிச்சுவ தொழிகமற் றம்ம
சிலபகல் யானுநின் னிலைமைய னாகி
நலம்பா டறியா விலம்பா டலைப்ப
க० நீர்வாய்ச் சிதலையு நூல்வாய்ச் சிலம்பியும்
சிலவிட மேய்ந்த சிறுபுன் குரம்பையில்
மசகமு முலங்கும் வாய்ப்படைக் குடவனும்
பசையில் யாக்கைத் தசைகறித் துண்ண
அரும்பசிக் குணங்கியும் பெரும்பிணிக் குடைந்தும்
கரு சாம்பல்கண் டறியா தாம்பி பூத்த
எலிதுயி லடுப்பிற் றலைமடுத் தொதுங்கிச்

---

உகிர் வடிம்பின் - நகத்தின் விளிம்பினால். வருடி - தடவி. தெள்விளி - தெளிந்த பாட்டு (சீவக. 661.) சிறியாழ்ப்பாண - சிறிய யாழையுடைய பாணனே; பாணர்களுள் சிறிய யாழை யுடையோரைச் சிறுபாணரென்று கூறும் வழக்குச் சிறுபாணாற்றுப்படையால் அறியப்பெறுகின்றது. இதனால் இச்செய்யுளும் சிறுபாணாற்றுப்படையாகவே கொள்ளற்குரியது. மாற்றம் ஒன்று கேள்; மதி: அசை நிலை.

(அடி, 6 - 21.) தன் பண்டை நிலைமையை விரித்துரைக்கின்றான்.

(6 - 7.) எதிர்வந்த பாணன் தன்னை ஓரரசனென்று கருதிப் புகழத் தொடங்கினானதலின் இவன் இங்ஙனம் கூறுவானாயினன். இறைமகன் - அரசன். உடன் - ஒருங்கு.

(8.) நின்னிலைமை யென்றது மிக்க வறுமையுற்ற நிலையை.

(9.) நலம்பாடு - இன்பம். இலம்பாடு - வறுமை (317 : 2 - 3.)

(10.) சிதலை - கறையான். சிலம்பி - சிலந்தி.

(11.) குரம்பையில் - குடிசையில்.

(12.) மசகம் - கொசுகு. உலங்கு - கொசுகுபோல்வதொரு சாதி; "உலங்கு நம் மேல்வர வொழிக்கற் பாலதோ" (கம்ப. யுத்த. மந்திரப் 20.) வாய்ப்படை - வாயாகிய படையையுடைய. குடவன் - குடவுண்ணி; இது கடித்து இரத்தத்தை உண்ணுவதாதலின் 'வாய்ப்படைக் குடவன்' என்றார்.

(13.) கறித்து - கடித்து.

(14.) உணங்கி - வாடி.

(15 - 6.) "ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின், ஆம்பி பூப்ப" (புறநா. கசுச : 1 - 2.) தலைமடுத்து - சேர்ந்து.

சிறுசிறு ரலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையிற் றாங்கிய கொடிற்றினள் குடங்கைக்
கடங்கா வுண்க ணுறலைத் தொழுக
உ० அழுகுரற் செவிசுட விழுமநோய் மிக்குக்
களைகண் காணு தலமரு மேல்வையிற்
கடவு ணல்லூழ் பிடர்பிடித் துந்தக்
குரைபுனற் கங்கைக் கரைவழிச் சென்றாங்குத்
தேம்பழுத் தழிந்த பூம்பொழிற் படப்பையிற்
உரு கடவுட் கற்பகக் கொடிபடர்ந் தேறி
வான்றொடு கமுகின் மடற்றலை விரிந்து
நான்றன திசைதொறு நறுநிழற் கதலித்
தேங்கனி பழுத்த பூங்குலை வளைப்ப
அம்மலர்க் கொடியிற் செம்முக மந்தி
ந० முடவுப் பலவின் முட்புறக் கனியைப்
புன்றலைச் சுமந்து சென்றிடுங் காட்சி
குடமிசைக் கொண்டொரு கூன்மிடை கிழவன்
நெடுநிலைக் கம்பத்தின் வடமிசை நடந்தென
இறும்பூது பயக்கு நறும்பணை மருதக்
நரு கன்னிமதி லுடுத்த காசிமா நகரம்
பெருவளஞ் சுரக்க வரசுவீற் றிருக்கும்
மழுவல னுயர்த்த வழனிறக் கடவுள்

---

(அடி, 18.) குடங்கை - உள்ளங்கை. கொடிறு - கன்னம். கன்னத்தை உள்ளங்கையால் தாங்குதல் கவலைமிகுதியைக் குறிப்பிப்பது; "கவுண் மிசைக்கையூன்றி நிற்பாள்" (ஐந். ஐம். 10); "கையணல் வைத்த வெயிற் றியர் வாட்கண் ணிடனுட" (பு. வெ. 12.)

(21.) களைகண் - தன் வறுமையைப் போக்குதற்கு ஆதாரமானவர் களை. அலமரும் - மனம் சுழலும்.

(24.) தேம் பழுத்து அழிந்த - தேனடை முதிர்ந்து சொரிந்த. படப்பை - தோட்டக்கூறு.

(25.) கற்பகக் கொடி - காமவல்லி; எழுவாய்.

(27.) நான்றன - தொங்கினவாகி.

(27 - 9.) நான்றனவாகிக் கொடிகள் வாழைக்குலையை வளைப்ப.

(32) கிழவன் மேலே செல்லுதல் மரபு.

(29 - 33.) 349 : 21 - 2.

பொன்னடி வணங்கி யின்னிசை பாடலும்
அந்நிலைக் கண்ணே யகல்விசும் பொரீஇச்
௪௦ சுரபியுந் தருவும் பெருவளஞ் சுரப்ப
இருமையும் பெற்றனன் யானே நீயுமத்
திருநகர் வளமை பாடி யிருநிலத்
திருநிதிக் கிழவனைக் கறுப்பத்
திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே. (௫அ)

## வண்டுவிடு தூது

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

658. சிறைவிரிக்கு மதுகரங்கா டேம்பிழிபூம் பொழிற்காசித்
திருநா டாளும்
மறைவிரிக்குஞ் சிலம்படியார் திரள்புயத்துப் புரளுநறு
மலர்ப்பூங் கொன்றை
நறைவிரிக்கு மிதழ்க்கரத்தா லூட்டுமது விருந்துண்டு
நயந்து மற்றென்
குறைவிரித்தோ ரிருவரிசை கூட்டுண்ணுந் திருச்செவிக்கே
கூறு வீரே. (௫௯)

(கட்டளைக் கலித்துறை)

659. கூற்றடிக் கஞ்சிக் குலையுநெஞ் சேயஞ்சல் கோச்செழியன்
மாற்றடிக் கஞ்சு மிடப்பா கனைமள்ளர் கொன்றகருஞ்
சேற்றடிக் கஞ்ச மலர்வயற் காசிச் சிவக்கொழுந்தைப்
போற்றடிக் கஞ்சலி செய்பற்று வேறு புகலில்லையே. (௬௦)

---

(அடி, 38.) யான் பாடலும்; உம்மை உடனிகழ்ச்சி.
(39.) ஒரீஇ - நீங்கி.
(40.) சுரபி - காமதேனு. தரு - கற்பகமரம்.
(41.) இருமையும் - இம்மைப்பயனும் மறுமைப்பயனும்.
(43.) இருநிதிக்கிழவன் - குபேரன். ஏக்கறுப்ப - இச்செல்வத்தை யாம் பெற்றிலேமேயென்று வருந்த.

658. தலைவி வண்டைத் தூதுவிட்டது.
தேம்பிழி - தேனைப்பிழிகின்ற. மதுகரங்காள், கூறுவீர்.

659. அஞ்சல் - அஞ்சாதே. கோ : முடியையுடைய மன்னர்களுக்குரிய அடைமொழி. செழியன் - அரிமர்த்தன பாண்டியன். மாற்றடி - பிரம்படி; மாறு - பிரம்பு; இது பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலால் விளங்கும். கொன்ற - உழுது புளிக்கவைத்த. சேறு அடி - சேற்றினிடத்தே. சிவக்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

660. இலைமுகங் குழைத்த பைம்பூ ணேந்திள முலையோ டாடும்
மலைமுகங் குழைத்த காசி வரதர்கண் டிலர்கொன் மாரன்
சிலைமுகக் கணைக்கெம் மாவி செகுத்துண வருத்தத் திங்கட்
கலைமுகம் போழ்ந்த காயங் களங்கமாய் விளங்கு மாறே. (சுக)

(கட்டளைக் கலித்துறை)

661. விளங்கனி யொன்றெறி வெள்விடை யோடும் விழிக்கணுழைந்
துளங்கனி யப்புகுந் தாய்விர கானலத் துற்றதென்னும்
வளங்கனி பண்ணை வயல்சூ ழவிமுத்த வாணநறுங்
களங்கனி யென்றுமை கைக்கிளி பார்க்குங் கறைக்கண்டனே.

---

கொழுந்தைப் போற்று ; அடிக்கு அஞ்சலிசெய். பற்று - பற்றுவாயாக. யமனடியை மாற்றுதற்கு வேறு புகலில்லை.

இச்செய்யுளின் எதுகை முதலியன 688-ஆம் செய்யுளிலும் வந்துள்ளன.

660. தலைவி கூற்று.

இலைவடிவமான ஆபரணத்தைக் கண்டு இலை குழைந்தது. எம் ஆவியைச் செகுத்து உணவாக அருத்த. காயம் - புண். அம்பு எய்வோர் முதலிற் பிற இடங்களில் எய்து பழகுதல் இயல்பாதலின் (புறநா. கசுக : 9 - 11 ; சீவக. 995,உரை) மன்மதன் எம் ஆவியை எய்து அழித்தற்குமுன் சந்திரனது கலைகள் பொருந்திய முகத்தின்மேல் எய்து பழகினன்; அதன் முகத்தில் உண்டான புண் களங்கம்போல விளங்குகின்றது. சந்திரனிலுள்ள கலைமானை இலக்கமாகக் கொண்டு அதன் முகத்திலெய்தானென்பதும் ஒன்று. இது தற்குறிப்பேற்ற அணி.

களங்கமாய் விளங்குமாற்றைக் காசிவரதர் கண்டிலர்கொல்?

661 தோழி கூற்று.

கஞ்சன் ஏவலால், கண்ணபிரானைக் கொல்வதற்குக் கபித்தாசுரனென்பவன் பழுத்த விளாமரமாகவும் வத்ஸாசுரனென்பவன் பசுவின் கன்றாகவும் வந்து தோன்ற, கண்ணபிரான் அக்கன்றை எடுத்து விளாம் பழத்தின் மேலெறிந்து இருவரையும் ஒருங்கே மாய்த்தனரென்பது பாகவத வரலாறு. விடையென்றது திருமாலை. 'விழிக்கண் நுழைந்து உள்ளம் உருகும்படி புகுந்தாய்; 643; "கண் வழி நுழையுமோர் கள்வனேகொலாம்" (கம்ப. மிதிலைக் காட்சிப். 55.) விரகானலத்து உற்றது என் ஆம் - விரகத்தீயினிடையே பொருந்திய நிலை என் ஆகும்? களங்கனி - களாப்பழம்; அது கறைக் கண்டத்துக்கு உவமை; "களங்கனி மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன்" (தொல். புறத். 26, ந. மேற்.) தேவர் உயிர் கவரவந்த நஞ்சத்தைக் கண்டத்திற் செறித்த தேவரீர் இவளது உள்ளத்திருந்தும் இவள் உயிரைக் கவராநிற்கும் விரகானலத்தை வாளா வளரவிடுதல் அறனன்றென்பது குறிப்பு.

(ஆசிரியவிருத்தம்)

662. கண்ட மட்டு மிருண்டு பாதி பசந்து பாதி சிவந்துளார்
காசி நாதர் கரத்து வைத்த கபால மொன்றல தில்லையால்
உண்டு கோடியின் மேலு மையர் பதம்பெ றக்கட வாரவர்க்
கொவ்வொ ருத்தர் கரத்தி லொவ்வொர் கபாலம்வேண்டு மதற்கெலாம்
பண்டி ருந்த விரிஞ்சன் மார்தலை மாலை யுஞ்செல வாய்விடிற்
பார மென்றலை மேல்வ ருங்கொ லெனுங்க வற்சியி னற்பசுங்
கொண்டல் வண்ணர் துயில் கொள்ள வுந்துயி லார்பி தாமக னரெனுங்
கொள்கை கண்டும் விழைந்த வாவவர் பதஞ்ச மீரகு மாரனே. (கஉ)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

663. கும்ப மிரண்டு சுமந்தொசியுங் கொடிநுண் மருங்கு லிறுமிறுமென்
றம்பொற் பசுங்கொம் பன்னுளை யாகத் தணைத்த வகிலேசர்
செம்பொ னிதழித் தெரியலையே சிந்தித் திருப்பத் திரண்முலையும்
பைம்பொ னுருவும் பீர்பூத்த பவளச் செவ்வாய்ப் பசுங்கிளிக்கே. (கச)

---

662. கண்டமட்டும் - கழுத்துமாத்திரம். பாதி பசந்து - உமாதேவியாருக்குரிய இடப்பாதி பச்சைநிறம் பெற்று. சிவசாரூபம் பெறுவார் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கபாலமாக ஈவதில் காசிநாதர் தாம் அணிந்துள்ள பல பிரமதேவர்களின் தலைமாலை செலவாகிவிடின், தம் தலையைக் கொள்ளக் கருதுவா ரென்னும் கவலையினால் இப்பொழுதுள்ள பிரமதேவர் துயிலாதிருந்தனர்; இங்ஙனம் கவற்சிக்குரிய நிலையினதாக இருந்தும் அப்பிரம பதவியைப் பெற ஆஞ்சநேயர் தவம் புரிந்தது என்ன அறியாமை! விரிஞ்சன் மார் தலைமாலை: 532. (பி - ம்.) 'விரிஞ்சன் மாறலை' பிதாமகனர் - பிரமதேவர். விழைந்தவா - விரும்பியது என்ன அறியாமை! அவர்பதம் - பிரமபதவியை. சமீரகுமாரன் - அனுமான்; சமீரம் - வாயு; சமீரண னென்பதன் சிதைவு. அனுமான் பிரம பதவியைக் குறித்துத் தவஞ்செய்கின்றனரென்பது புராண வரலாறு.

663. தோழி கூற்று.

கும்பமிரண்டு - இரண்டு நகில்கள். இதழித் தெரியலையே - கொன்றை மாலையையே. பீர் - பசலைநிறம். பசுங்கிளி - தலைவி.

அகிலேசர் அணிந்த கொன்றைமாலையையே சிந்தித்திருத்தலின் தலைவி பசலைநிறத்தை அடைந்தனள் (344, 508, 553.)

(கட்டளைக் கலித்துறை)

664. கிள்ளைக் கமிர்த மொழிசாற் றிடுங்கிஞ் சுகவிதழ்ப்பெண்
பிள்ளைக் கிடந்தந்த காசிப் பிரான்பிறை யோடுமுடிக்
கொள்ளைச் சிறைவண்டு கூட்டுணுங் கொன்றையுங் கூடவைத்தா..
வள்ளக் கலச முலைக்கங்கை யாளுயிர் வாழ்வதற்கே. (சுரு)

(கலிவிருத்தம்)

665. வாட்ட டங்கண் மழைப்புனன் மூழ்கியே
சேட்டி ளங்கொங்கை செய்தவ மோர்கிலார்
தோட்டி னங்கொன்றை சூடிப்பொ னம்பலத்
தாட்டு வந்த வவிமுத்த வாணரே. (சுசு)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

666. நரைமு திர்ந்தன கண்கள்பஞ் சார்ந்தன
நமன்றமர் வழிக்கொண்டார்
திரைமு திர்ந்துட றிரங்கின திரங்கலை
செயலிது மடநெஞ்சே
உரைமு திர்ந்தவர் குழாத்தொடு மடைதியா
லொழுகொளி முடிக்கங்கைக்
கரைமு திர்ந்திடாக் கலைமதி முடித்தவர்
காசிநன் னகர்தானே. (சுஎ)

---

664. தலைவி கூற்று.

கிஞ்சுக இதழ் - முள்ளு முருக்கம்பூவைப்போன்ற இதழ். பெண்பிள்ளை- உமாதேவியார். கங்கை சந்திரனது நிலவால் துன்புறுமல் கொன்றையையும் அதனுடன் சடைமுடிமேல் வைத்தார்; அதனுல் அவள் உயிர்தரித்தாள் (525); எனக்கும் கொன்றைமாலையை வழங்கின் சந்திரனுல் துன்பமடையே னென்பது தலைவியின் உட்கோள்.

665. தலைவி கூற்று.

மழைப்புனலில் மூழ்கி அங்நீரில் நின்று தவஞ் செய்வார்போல என் நகில்கள் கண்ணீரில் மூழ்கித் தவம் புரிவதை அவிமுத்தவாணர் ஓர்கிலார்; ஓர் கிலார் - உணர்ந்து அருள்செய்திலர்.

666. நரைமுதிர்தல் முதலியன மூப்பு நிறைந்து மரண சமயம் குறுகு தற்குரிய அடையாளங்கள். கண்கள் பஞ்சார்ந்தன: "காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே" (பட்டினத்துப்.) திரை - தோலின் சுருக்கம். இரங் கலை - நீ வருந்தாதே. செயல் இது - இப்போது நீ செய்தற்குரிய செயல் பின்னே கூறப்படும் இஃது ஆகும். உரை முதிர்ந்தவர் - கல்வி முதிர்ச்சியை யுடைய பெரியோர்.

கங்கைக்கரையிலுள்ள காசி நன்னகரை அடைதி; இது செயல்.

(வஞ்சித்துறை)

667. நகர மாய்மறைச், சிகர மானதால்
மகர மாயினன், நிகரில் காசியே. (சுஅ)

கட்டளைக் கலித்துறை

668. இல்லொன் றெனவெ னிதயம்புக் காய்மத னெய்கணைகள்
வல்லொன்று பூண்முலை மார்பகம் போழ்வன மற்றென்செய்கேன்
அல்லொன்று கூந்த லணங்கர சோடுமொ ராடகப்பொன்
வில்லொன்று கொண்டவி முத்தத்தி லேநின்ற விண்ணவனே. ()

கைக்கிளை

(மருட்பா)

669. விண்ணமிர்து நஞ்சாம் விடமு மமிர்தமாம்
உண்ணமிர்த நஞ்சோ டுதவலாற்—றண்ணென்
கடலொடு பிறந்தன போலுந்.தடமலர்க்
கடிநகர்க் காசியுண் மேவும்
மடலவிழ் கோதை மதர்நெடுங் கண்ணே. (எ௦)

---

667. நகரமாய் - நகரவடிவத்தைக் கொண்டு. மகரம் மாயினன் - ஆணவ மலத்தின் சக்தியை மாய்த்த அகிலேசரது. காசி மறைச்சிகரமானது.

668. தலைவி கூற்று.

வல்லொன்று பூண்முலை மார்பகமென்றது பட்டாங்கு கூறியது; "தில்லை யம்பலம்போற், கோலத்தி னுள்பொருட் டாக" (திருச்சிற். 27) என்பதற்கு 'அம்பலம் போலுமென்னும் உவமை பட்டாங்கு சொல்லுதற்கண் வந்தது' என்று பேராசிரியர் எழுதிய உரை இங்கே அறிதற்குரியது. அணங்கரசோடு மென்றது தேவரீர் அணங்கரசோடு இருத்தல்போல, அடியேன் தேவரீரோடு கூடியிருத்தல் வேண்டுமென்னும் கருத்தை உடையது. தேவரீர் பொன் வில்லைக் கொண்டிருந்தும் அது சிறிதும் பயன்படவில்லை யென்பதைப் பிற் பகுதியிற் குறிப்பித்தாள்.

669. தலைவன் கூற்று.

கண்கள் கடலொடு பிறந்தனபோலும். தலைவியின் அருட்பார்வை யாகிய அமுதமும் மருட்பார்வையாகிய நஞ்சும் முறையே தேவாமுதத்தை நஞ்சாகவும் விடத்தை அமுதமாகவும் தோற்றச்செய்வன. அவ்விரண்டன் ஆற்றலையும் கூறியபடி.

கண் அமிர்தம் நஞ்சோடுதவலாலென்றது தலைவி அருட்பார்வையும் மருட் பார்வையும் உடையளாதலைக் குறித்தபடி.

கடல் - பாற்கடல். அது முதலில் விடத்தைக் கொடுத்துப் பின் அமு தத்தைக் கொடுத்தது ; இது பொதுத்தன்மை.

## ஊர்

(வஞ்சிவிருத்தம்)

670. கண்ணெ டாவி கருத்துமாய்
உண்ணி றைந்தெதா ரொண்பொருள்
அண்ணு மாநக ரானதால்
அண்ண லாரவி முத்தமே. (எக)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

671. முத்தாடி மடித்தலத்தோ ரிளஞ்சேயை யுலகீன்ற
முதல்வி யோடும்
வைத்தாடு வீர்பொதுவி னின்றாடு முமக்கிந்த
வார மென்னே
கொத்தாடு சடையொடுமா னந்தவனத் தேகுறுந்தா
ணொடும்பூ தத்தோ
டொத்தாடு வீரடிகட் கெல்லோமும் பிள்ளைகளென்
றுணர்ந் திடீரே. (எஉ)

## சம்பிரதம்

(ஆசிரியவிருத்தம்)

672. உண்டகில கோடியு முமிழ்ந்திடுவன் முகிலேழு
மொக்கப் பிழிந்துகடலே
ழுடன்வாய் மடுத்திடுவன் வடமேரு மூலத்
தொடும்பிடுங் கிச்சுழற்றி
அண்டபகி ரண்டமு மடித்துடைப் பன்புவன
மவையேழு பிலமேழுமாய்
அடைவடை வடுக்கிய வடுக்கைக் குலைப்பனிவை
யத்தனையும் வித்தையலவால்

---

670. அவிமுத்தம் நகரமானதால். (பி - ம்.) 'பொருணண்ணும்'

671. சேய் - முருகக் கடவுள். வாரம் - பட்சபாதம். பொதுவில் நின்றாடுவோர் நடுவுநிலை யுடையராயிருத்தல் வேண்டுமன்றோ? பொது - சபை. உணர்ந்திடீர் - உணரும்.

கருத்து ஒப்புமை : 155, 205.

672. சம்பிரதம் - பொய். முண்டகக் கண்ணன் - தாமரைப்பூவிலுள்ள பிரமதேவர். குடிலகோடீரம் - வளைந்தசடை. துருவி - தேடி. மணிவண்

கொண்டன்மணி வண்ணனு முண்டகக் கண்ணனும்
குஞ்சிதச் செஞ்சரணமும்
குடிலகோ டீரமுந் தேடியத லமுமண்ட
கோளமுந் துருவியோடப்
பண்டைமறை யோலமிட வெளியினட மாடும்
பரஞ்சுடர் பொலிந்தகாசிப்
பதியிலடை யாமலிப் பல்லுயிர்த் தொகுதியும்
பரமபத மடைவிப்பனே. (௭௩)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

673. விரைகுழைக்கு மழைமுகில்காள் விண்டலர்தண் டுழாய்ப்படலை
விடலை யென்ன
அரைகுழைக்கும் பொழிற்காசி யணிநகருக் கேகுதிரே
லறன்மென் கூந்தல்
வரைகுழைக்கு முலைகுழப்பக் குழைதிரடோ ளழகுமுடி
வணங்கி யென்னக்
கரைகுழைக்கு மலைகுழைத்த கண்ணுதற்கென் பேதைதிறங்
கழறு வீரே. (௭௪)

---

ணன் சரணமும் முண்டகக் கண்ணன் கோடீரமுந் தேடி; நிரனிறை. பரம பதம் - முத்தி. சம்பிரதத்தைப்பற்றிய செய்திகளை 185-ஆம் செய்யுளாலும் அதன் உரையாலும் உணரலாகும்.

673. தோழி மேகத்தைத் தூதுவிடுதல்.

விரை குழைக்கும் - விரைதலைச் செய்யும். விடலை - திருமால. அவரைப போல ஏகுதிரேல்; மேகத்துக்குத் திருமால் உவமை. அவர் காசியிற்சென்று சிவபூசை செய்தனரென்பது தலவரலாறு. அரை குழைக்கும் பொழில் - அரை யென்னும் மரம் தளிர்க்கும் சோலையையுடைய; அரை: தொல். உயிர்மயங்கு. 81. அறன்மென்கூந்தல் - உமாதேவியார். தோளைக் குழைத்த இடம் காஞ்சி. இறைவன் தோளழகிற்குத் தோற்று முடிவணங்கினாற்போல மேருமலை வளைந்தது (311.)கரை குழைக்கும் - சொல்லின் அளவைக் குழையச் செய்யும்; கரை - சொல்.

முகில்காள், பேதைதிறங் கழறுவீர்.

(கட்டளைக் கலித்துறை)

674. கழைக்கரும் பைக்குழைத் தான்மத வேளக் கணத்திலம்பொற்
குழைக்கரும் புங்குழைந் திட்டதந் தோகுளிர் தூங்குதுளி
மழைக்கரும் பும்பொழிற் காசிப் பிரான்மலை யாண்முலைபோழ்
முழைக்கரும் புற்றர வாடநின் றுடிய முக்கணனே. (எரு)

675. கண்ணஞ் சனத்தைக் கரைத்தோடு நீர்கடல் செய்யநின்றாள்
உண்ணஞ் சனத்துக்கு மஞ்சவைத் தாரும்பரோட்டெடுப்பப்
பண்ணஞ்ச நச்சமிர் தாக்கொண்ட காசிப் பரமர்பச்சைப்
பெண்ணஞ்ச நச்சர வார்த்துநின் றுடுமப் பிஞ்ஞகரே. (எசு)

(கட்டளைக் கலிப்பா)

676. கருகு கங்குற் கரும்பக டூர்ந்துவெண்
கலைம திக்கொலைக் கூற்றங் கவர்ந்துயிர்
பருகு தற்குக் கரத்தால் விரிநிலாப்
பாசம் வீசி வளைத்ததிங் கென்செய்வேன்
முருகு நாறு குழற்பொலங் கொம்பனீர்
முத்தர் வாழவி முத்தமு நெக்குடைந்
துருகு பத்தர்தஞ் சித்தமுங் கோயிலா
வுடைய நாதற் குரைத்திடு வீர்களே. (எஎ)

---

674. தோழி கூற்று.

கழைக் கரும்பை-இரஸதாளிக் கரும்பை. குழைத்தான்-வளைத்தான். பொற்குழையையுடைய கரும்புபோல்வாள்; தலைவி; குழை-காதணி. மழைக்கு அரும்பும். மூலைபோழ் முழைக் கரும்புற்று: நகிற்றழும்பாகிய புற்றில்; அரவாட என்பதற் கேற்ப மூலைச்சுவட்டைப் புற்றென்றார் (547.)

இறைவி தழுவக் குழைந்த நீர் இத் தலைவியை வாடச் செய்தல் தக்கதன் றென்றபடி.

675. தோழி கூற்று.

கண்ணிலுள்ள அஞ்சனத்தை; அஞ்சனம் - மை. கண்ணீர் கடல் போலப் பெருக நின்றாள். அங்ஙனம் நின்றவள் உள் நஞ்சு அனத்துக்கும் அஞ்சவைத்தார்; உள் - மனம்; நஞ்சு - நைந்து; போலி. உம்பர் - தேவர், அவர் ஓட்டெடுப்பப் பண்ணிய நஞ்சை. நஞ்சத்தை நச்சுகின்ற அமுதாகக் கொண்ட அகிலேசர் இத் தலைவிக்கு அன்னத்தை நஞ்சாகச் செய்தன ரென்றது ஒரு நயம். பச்சைப்பெண் - இளையபெண், பசியநிறமுடைய உமாதேவியார்.

பிஞ்ஞகர் அஞ்ச வைத்தாரென்க.

676. தலைவி கூற்று.

இருளாகிய எருமையை ஊர்ந்து மதியாகிய யமன் நிலாவாகிய பாசத்தை வீசினான்; இது முற்றுருவகம். கரம் - கை, கிரணம். முருகு - நறுமணம். முத்தர் - பாசத்தினின்றும் விடுபட்டவர். நெக்கு - நெகிழ்ந்து.

பொலங்கொம்பனீர், நாதற்கு உரைத்திடுவீர்களென்க.

## ஊர்

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

677. உரைத்த நான்மறைச் சிரத்துமைந் தவித்தவ
ருளத்தும்வண் டொருகோடி
நிரைத்த பூங்குழ னிரைவளை யவளொடு
நின்றவ ருறைகோயில்
குரைத்த தெண்டிரைக் கங்கைமங் கையர்துணைக்
கொங்கைமான் மதச்சேற்றைக்
கரைத்தி ருங்கடல் கருங்கட லாச்செயுங்
காசிமா நகர்தானே. (எஅ)

(கட்டளைக் கலிப்பா)

678. மான மொன்று நிறையொன்று நாணொன்று
மதிய மொன்று குயிலொன்று தீங்குழற்
கான மொன்று கவர்ந்துணு மாமதன்
கணைக்கி லக்கென் னுயிரொன்று மேகொலாம்
வான மொன்று வடிவண்ட கோளமே
மவுலி பாதல மேழ்தாண் மலையெட்டும்
நான மொன்று புயமுச் சுடருமே
நயன மாப்பொலி யும்மகி லேசனே. (எகூ)

---

677. ஐந்து - ஐந்து பொறிகளையும்; "ஐந்தவித்தா னாற்றல்" (குறள், 25.) நிரைவளையவளொடும் - விசாலாட்சி யம்மையோடும். குரைத்த - முழங்கிய. கங்கை: எழுவாய். மான்மதச் சேறு - கத்தூரிக் குழம்பு; அது கரிய நிறம் உடையது. இருங்கடல் - பெரிய கடலை.

கங்கை கரைத்துக் கருங்கடலாகச் செய்தற்கு இடமான காசி உறை கோயிலென இயைக்க.

678. தலைவி கூற்று.

மானத்தை மதியமும், நிறையைக் குயிலும், நாணை வேய்ங்குழலோசையும் கவர்ந்துண்ணும்; நிரனிறை. இப்பொருள்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றையே உண்ண, மன்மதன் கணைகள் ஐந்தும் என் உயிர் ஒன்றையே உண்ணுகின்றன. வானமே வடிவாகும். அண்டகோளமே மவுலி; மவுலி - முடி. மலையெட்டும் புயம். "வேத மொழிவிசும்பு மேனி சுடர்விழிமண், பாதந்திருப்பா திரிப்புலியூர் - நாதர், பரமாம் பரமாம் படுகடலெண் டிக்கும், கரமாமவர்க் குயிர்ப்பாங் கால்" (திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம், 2.)

(நேரிசை வெண்பா)

679. அகிலாண்ட மாயகண்ட மானவகி லேசா
முகிலாண்ட சோலையவி முத்தா—நகிலாண்ட
சின்னவிடைப் பாகா திருநயனஞ் செங்கமலம்
அன்னவிடைப் பாகா வருள். (அ०)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

680. அருகுமதன் குழைத்தகழை தெறித்தமுத்தே றுண்டெழுவண்
டரற்று மோசை
பெருகுசிறு நாணொலியென் றறிவழிந்து பேதுறுமிப்
பேதைக் கென்னும்
உருகுபசும் பொன்னசும்பத் தசும்புவிசும் பிரவியென
வுடைந்து கஞ்சம்
முருகுயிர்க்கும் பொலங்குடுமி விமானத்திற் பொலிந்தவவி
முத்த னாரே. (அக)

---

679. சின்ன இடையையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திலுடையாய்; திரிபு நோக்கிப் பகரம் மிக்கது. "பொறுத்தசின விடையாரும் பொருந்துசின விடையாரும்" (அருணைக். 71.) தம் திருவிழிகள் செந்தாமரையைப்போன்ற திருமாலாகிய இடபத்தைச் செலுத்துவோய்.

680. தோழி கூற்று.

முத்து ஏறுண்டு - முத்தால் அடிக்கப்பட்டு. மன்மதன் தன் வில்லை வளைக்கும்போது அதனிடத்திலிருந்து தெறித்த முத்தால் அடிபெற்ற வண்டு ஒலிக்க, அவ்வொலியை மன்மதனது நாணொலியென்று நினைந்து அஞ்சி அறிவழிந்தாள்; இனி மன்மதன் போர்புரியத் தொடங்கிவிடின் இவளுக்கு என்ன துன்பம் உண்டாகுமோ?

மன்மதனது வில் நாணும் வண்டாதலின் அடிபட்ட வண்டினொலியை நாணொலியென்றஞ்சினாள். என் ஆம் - என்ன துன்பம் உண்டாகுமோ? பொன் அசும்பு தசும்பு - பொன் துளிக்கின்ற விமான கலசத்தை. அதனை ஒளி மிகுதியினால் சூரியனென எண்ணித் தாமரை மலர்ந்தது; இது திரிபதிசய அணி.

(கட்டளைக் கலித்துறை)

681. முத்திக்கு வேட்டவர் மோட்டுடற் பார முடைத்தலையோ
டத்திக்குஞ் சாம்பற்கு மேம்பின ராலிவை யன்றியப்பாற்
சித்திப் பதுமற் றிலைபோலுங் காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவல மேபல மாகப் பலித்ததுவே. (அஉ)

(கலிநிலைத்துறை)

682. பல்வே றுருவாய் நின்றருள் காசிப் பதியுள்ளீர்
வில்வே றில்லை பூவல தம்பும் வேறில்லை
அல்வே றல்லாப் பல்குழ லாரை யலைக்கின்றான்
சொல்வே றென்னே பாரு மனங்கன் றொழிலுனே. (அங)

(கட்டளைக் கலித்துறை)

683. தானென் றவர்மு னொளித்தோடித் தன்னை யிழந்தவர்முன்
யானென்று சென்றிடுங் காசிப் பிரானுடம் பென்பதென்போ
டூனென்று விட்டொழிந் தார்களிப் பாருவட் டாதவின்பத்
தேனென் றடைந்தவர்க் குண்ணக் கிடைப்பது தீவிடமே.

---

681. முத்திக்கு - முத்தியை; வேற்றுமை மயக்கம். உடற்பாரத்தை ஓம்பினர். காசியில் இறக்கவேண்டுமென்று எண்ணி அங்கே சென்றடையும் வரையில் உடம்பைப் பாதுகாப்பாரை என்னிக் கூறியது இது. சாரூபம் பெற்றவர் முடைத்தலை, என்பு, சாம்பலாகியவற்றைப் பெறுவராதலின் அவற்றிற்காக உடம்பை ஓம்பினரென இழிப்புத் தொனிபடக் கூறினர்; 601, தாழிசை பார்க்க. அத்தி - என்பு. கேவலம் - முத்தி, இழிந்த தன்மை.

இது சாரூபம் பெறுதலைப் பழிப்பதுபோலப் புகழ்ந்தபடி.

682. தலைவி கூற்று.

நவந்தருபேதம், இருபத்தைந்துமூர்த்தம், அறுபத்து நான்கு வடிவம் முதலிய மூர்த்தபேதங்களாகச் சிவபெருமான் எழுந்தருளியிருத்தலின், 'பல் வேறுருவாய்' என்றாள். பூவலது வில் வேறில்லை: 177 - ஆம் செய்யுளின் குறிப்புரையைப் பார்க்க. அம்பும் அப்பூவேயன்றி வேறில்லை. அல்வேறு அல்லாக் குழல்: 668. ஐம்பாலாகப் பகுக்கப்படுதலின் பல்குழலாரென்றாள் (சீவக. 164, ந.) அனங்கனென்ற சொல்லாற்றலால் அவன் தனக்கென ஒருருவமும் இல்லானென்னும் குறிப்புப் பெறப்படும்; "தானு மனங்கன் றனுக் கரும்பு" (தண்டி. 77, மேற்.) இங்ஙனம் பல்லாற்றானும் குறை யுடையவனால் யான் துன்புறுகின்றேன்; தேவரீர் அத்துன்பத்தை நீக்க வேண்டுமென்பது எச்சம். இச்செய்யுள் உறுப்புக் குறை விசேட அணி யமைந்தது.

683. தானென்றவர்முன் - அகங்காரத்தை உடையவர்களுக்குமுன். காசிப்பிரானது திருமேனி என்பும் ஊனுமென்று கருதினவர் தம் அறியாமையாற் களிப்பார். அப்பிரானைத் தேனென்றெண்ணி அடைந்தவர்

(கட்டளைக் கலிப்பா)

684. தீவி டங்கொடித் தேயமு துண்டவத்
தேவ ருக்கொளித் துத்திரி கின்றநீர்
பாவி டும்மலர்ப் பஞ்சணை மேலிவள்
பவள வாயமிர் துண்டாற் பழுதுண்டோ
நாவி டங்கொண் டொருவன் முகங்களோர்
நான்கி னுந்நடிக் குந்துர கத்தைவிட்
டாவி டங்கொண் டருட்காசி வீதிக்கே
யாடல் செய்திடு மானந்தக் கூத்தரே. (அரு)

(நேரிசை வெண்பா)

685. ஆனந்த வல்லியுட னானந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தா டருட்கடலை—ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடுங் கூடாதே லிப்பிறவி
வெள்ளத் திளைத்தாடு வீர். (அசு)

---

சாரூபத்தைப் பெற்றுத் தீய விட முண்பரென்பது கருத்து. இறைவனை நீங்கி நின்றோர் களிப்பர், சேர்ந்தோர் விடமுண்பரெனப் பழிப்பதுபோலப் புகழ் பொருளுடையதாயிற்று; இஃது இலேசவணி.

684. தோழி கூற்று.

தேவருக்கும் வேதத்துக்கும் அரியரென்பதை இச் செய்யுளிற் கூறுவர். அமுதத்தைத் தேவரீருக்குக் கொடாமல் விடத்தை அளித்த தேவர்களுக்கு ஒளித்துத் திரிகின்ற நீர் இத்தலைவி தரும் வாயமிர்தை உண்ணலாமே; அங்ஙனம் செய்வதனால் வரும் குற்றம் யாது? ஒருவன் - பிரமதேவர். துரகத்தை - நான்கு வேதங்களாகிய குதிரையை. ஆ இடங்கொண்டருள் - விடையை ஊர்தியாகக் கொண்டருளும்.

நீர் அமுது பெறாத குறையைப் போக்கிக்கொள்வீரென்பாள் போலத் தலைவிக்கு அருள்புரிதலை வேண்டினள்.

685. ஆனந்தவல்லி - விசாலாட்சியம்மை. ஆனந்தக் கானகம் - காசி. ஆனந்தக் கூத்து ஆடும் அருட்கடல் - விசுவநாதர். அருட்கடலைத் திளைத்து ஆடும்; ஆடும் - ஆடுவீராக. கூடாதேல் - அச்செயல் கூடாதேல். பிறவி வெள்ளத்து இளைத்து ஆடுவீர் - பிறவிப்பெருங்கடலில் வீழ்ந்து மெலிவுற்று அலைவீர்.

(கலிவிருத்தம்)

686. வீர மென்பது வின்மதற் கேகுணம்
கோர மென்பது கொண்டிருந் தாவதென்
ஈர மென்ப திலேயிவர்க் கென்றதால்
வார மென்பதி வாழவி முத்தரே. (அஎ)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

687. முத்து நிரைத்த குறுநகையீர் முளரிக் கணையான் கணைகடிகைப்
பத்து நிரைத்தா னினித்தொடுக்கிற் பாவைக் கொருதிக் கிலேபோலும்
ஒத்து நிரைத்த வுடுநிரையோ டொன்றோ பலவோ வெனவரும்பூங்
கொத்து நிரைத்த பொழிற்காசிக் குழகற் கொருவர் கூறீரே.

(கட்டளைக் கலித்துறை)

688. கூற்றடிக் கஞ்சி முறையோ வெனக்குல நான்மறையும்
போற்றடிக் கஞ்சம் புகலடைந் தேமுனைப் போலவைத்தாற்
சேற்றடிக் கஞ்ச வயற்காசி நாத செருப்படிக்கும்
மாற்றடிக்குந்தொண்டர் வில்லடிக் கும்புகன் மற்றில்லையே.

---

686. தலைவி கூற்று.

அவிமுத்தரே, உமக்கு அகோரரென்னும் பெயர் இருந்தும் பகைவரை ஒடுக்கும் வன்மை இல்லை ; உம்மை அடைந்தாரைக் காக்கும் ஈரமும் இல்லை; இரண்டுமில்லாத உமக்குச் சொந்தமான குணம் வேறு யாது உண்டு?

வீரமென்பது வில்லையுடைய மன்மதனிடத்திலேயுள்ள குணம்.மதற்கே: ஏ பிரிநிலை. அவன் என்னைத் துன்புறுத்துகின்றனென்றபடி. கோரம் - மறம் ; இங்கே அகோர வடிவத்தைச் சுட்டிநின்றது. ஆவது என் - உண்டாகும் பயன் யாது? ஈரம் - அன்பு. வாரம் - உரிமையான குணம். வாழ் பதியை அவிமுத்தமாகக் கொண்டவரே.

687. தோழி கூற்று.

பல்லுக்கு முத்து உவமை. நிரைத்த - வரிசையாக வைத்ததை ஒத்த. முளரிக் கணையான் - தாமரைப் பூவாகிய பாணத்தையுடைய மன்மதன். பத்துத் திசைகளிலும் கணையை வரிசையாகத் தொடுத்தான். இனிமேல் அவன் தொடுத்தால் இவளுக்கு உய்தியில்லை. திகை - திசை. பத்துத்திக்கிலும் நிரைத்தான், இனிப் பதினோராவது திக்கு ஒன்றில்லையென்றும் ஒரு பொருள் தோற்றுகின்றது. திக்கு - கதி. மலருக்கு நட்சத்திரம் உவமை.

688. அகிலேசரே, யமனுடைய அடிக்கு அஞ்சித் தேவரீருடைய திருவடிகளைப் புகலடைந்தேம் ; அடியேம் சாரூபம் பெறவைத்தால் பல அடிகளைத் தேவரீர் பெற்றதுபோல யாமும் பெறுதலினின்றும் தப்ப வழியில்லை. இது பழிப்பதுபோலப் புகழ்ந்தபடி.

கூற்றடி : 694. போற்றுகின்ற அடியாகிய கஞ்சம். உனைப்போல் எம்மை வைத்தால்; சாரூபம் பெற வைத்தாலென்றவாறு. சேற்றின் அடியிலி

(கட்டளைக் கலிப்பா)

689. இல்லை யென்ப திலையோர் மருங்கிலே
யெவ்வ றங்களு முண்டோர் மருங்கிலே
கொல்லு கின்ற தெழுதருங் கூற்றமே
கூறு மாற்ற மெழுதருங் கூற்றமே
வில்லு மேற்றிடு நாணும்பொன் னாகமே
விடுக ணைக்குண்டு நாணும்பொன் னாகமே
மல்லன் மார்பின் மணிமுத்த மென்பதே
வாச மையர்க் கவிமுத்த மென்பதே. (கூ0)

---

ருந்து தோன்றிய தாமரை. செருப்படி கண்ணப்ப நாயனார் தந்தது. மாற்றடி - பிரம்பினால் பாண்டியன் அடித்த அடி; மாறு - பிரம்பு. வில்லால் அடித்தவன் அருச்சுனன்.

689. ஓர் மருங்கில் இல்லை என்பது இலை - ஒப்பற்ற வலத்திரு இடையிலே இல்லையென்பது இல்லை; உண்டு என்றபடி; சிவபெருமானது வலப் பாகத்திலே மாத்திரம் இடை உண்டென்றார்; மருங்கு - இடை. எதிர்மறுத் துணரும் வழி வாமபாகத்தின் இடையில் இல்லையென்பது உண்டென்ற பொருளும் தோற்றியது. ஓர் மருங்கிலே எவ்வறங்களும் உண்டு - இடப்பாக மாகிய ஒரு பக்கத்தில் எல்லா அறங்களும் அமைந்தன; உமாதேவியார் முப்பத்திரண்டு அறங்களும் வளர்த்தமையைக் கூறியது. எழுதருங் கூற்றமே கொல்லுகின்றது - எழுந்து வருகின்ற யமனே கொல்லப்படுவது. கூறு மாற்றம் எழுதருங் கூற்றமே - இறைவர் திருவாய்மலர்ந்தருளும் வார்த்தை எழுதுதற்கு அரிய வேதமே. வில்லும் ஏற்றிடும் நாணும் பொன்னாகமே - வில்லாக உள்ளதும் அதன்கண் ஏற்றிடும் நாணும் பொன்னாகமே; பொன் நாகம் - பொன்மலையாகிய மேரு, பொலிவுபெற்ற ஆதிசேடனாகிய பாம்பு. விடு கணைக்கு நாணும் பொன் ஆகம் உண்டு - விடுகின்ற அம்பாகிய திருமாலுக்கு நாணுகின்ற திருமகள் திருமார்பில் உள்ளாள். மல்லல் மார்பில் மணிமுத்தம் என்பதே - வளப்பமுடைய திருமார்பில் மணியாகவும் முத்தாகவும் இருப்பது என்பே; அது: பகுதிப்பொருள் விகுதி. ஐயர்க்கு வாசம் அவிமுத்தம் என்பதே; வாசம் - இருப்பிடம்; அவிமுத்தம் - காசி; என்பது - என்று சிறப்பிக்கப்படுவது.

(கலிவிருத்தம்)

690. என்ப ணிக்கும் பணியென் றிரந்தபோ
தென்ப ணிக்கும் பணிதிக்கு மேக்கென்றார்
என்ப ணிக்கும் பணியா விருந்ததோர்
என்ப ணிக்குமின் பாமகி லேசர்க்கே. (கூக)

(நேரிசை வெண்பா)

691. கேயூர மூரக் கிளர்தோ ளகிலேசர்
மாயூர மூருமொரு மைந்தற்குத்—தீயூரும்
அவ்வேலை யீந்தா ரடித்தொழும்பு செய்தொழுகும்
இவ்வேலை யீந்தா ரெமக்கு. (கூஉ)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

692. குருகை விடுத்தா ளெனக்குருகே கூறாய் சுகத்தை விடுத்தாளென்
றருகு வளருஞ் சுகமேசென் றறையாய் நிறைநீர் தெரிந்துபால்
பருகு மனமே யனம்விடுத்த படிசென் றுரையாய் படிவருளத்
துருகு பசும்பொன் மதிற்காசி யுடையார் வரித்தோ லுடையார்க்கே.

---

690. பணிக்கும் பணி என் என்று இரந்தபோது - தேவரீர் இடும் கட்டளை யாது என்று இரந்தபோது. என் - அருள்செய்வது யாது? பணிக்கும் - பாம்புக்கும். பணிதிக்கு மேக்கு என்று - ஆபரணத்திற்கு மேலான தென்று. ஆர் - நிறைந்த. என்பு அணிக்கும் - என்பாகிய ஆபரணத்திற்கும். பணியா இருந்ததோர் என்பணிக்கும் - பணிந்து இருந்த எனது தொண்டிற்கும். (பி - ம்.) 'பணியாயிருந்ததோர்' இன்பாம் - உவப்பை அடைகின்ற. பணிக்கும் அணிக்கும் பணிக்கும் இன்பாம் அகிலேசர்க்கு என்.

691. கேயூரம் - வாகுவலயம். கிளர் - எழுச்சிபெற்ற. அகிலேசர்: எழுவாய். மாயூரம் - மயில். மைந்தன் - முருகக்கடவுள். அ வேலை - அந்த வேற்படையை. இ வேலை - இந்தப் பணியை.

692. தலைவி பறவைகளைத் தூதுவிடுதல்.

குருகு- வளையல். குருகே- நாரையே. சுகத்தை விடுத்தாள்- இன்பத்தை நீத்தாள். சுகமே - கிளியே. அனமே - அன்னப்பறவையே. அனம் விடுத்த படி - சோற்றை உண்ணாமல் நீத்த திறத்தை. படிவர் உளத்து - தவவேடமுடையார் உள்ளத்தைப்போல. வரித்தோல் உடையார்க்கு - புலித்தோலாகிய உடையையுடைய அகிலேசருக்கு.

693. உடுத்த கலையு மேகலையு மொழுகும் பணியும் விரும்பணியும்
தொடுத்த வளையுங் கைவளையுந் துறந்தா ளாவி துறந்தாலும்
அடுத்த துமது பரந்தாம மதனு லிதழிப் பரந்தாமம்
விடுத்து விடுவா ளலளெனப்போய் விளம்பீர் காசி வேதியர்க்கே!

(நேரிசை வெண்பா)

694. வேதத் துரகர் விரக ரகிலேசர்
பாதத் துரகப் பரிபுரத்தார்—நாதரிவர்
சேவடிக்கண் டாரே திறம்பிழைத்துத் தென்புலத்தார்
கோவடிக்கண் டாரே குலைந்து. (கூடு)

(கட்டளைக் கலித்துறை)

695. குலைவளைக் கும்பழுக் காய்முழுத் தாறு கொழுங்கமுகின்
தலைவளைக் கும்பொழிற் காசிப் பிரான்றடங் கோட்டுப்பைம்பொன்
மலைவளைக் கும்புயத் தாண்மையென் னுந்தெவ் வளைந்துகழைச்
சிலைவளைத் துத்தன் படைவீ டமர்க்களஞ் செய்திடினே.(கூசு)

---

693. தோழி கூற்று.

உடுத்த கலை - ஆடை. ஒழுகும்பணி - செய்யும் வேலை. விரும்பு அணி - இதுகாறும் விரும்பிநின்ற ஆபரணம். தொடுத்த வளை - இசையோடு தொடுத்த வள்ளைப்பாட்டு; வளை: இடைக்குறை. உமது பரந்தாமம் அடுத்தது; பரந் தாமம் - முத்தி. இதழிப்பரந்தாமம் - கொன்றையாகிய மேலான மாலை.

கொன்றை மாலையை இவளுக்குக் கொடாமல் இருக்கும் நினைவுண்டேல் அது கூடாத செயல்; இப்போது நீர் கொடாவிட்டாலும் அது காரணமாக இவள் உயிர் துறந்தால் சாரூபம் பெற்று அம்மாலையைப் பெறுவாள்; எங் ஙன மாயினும், இவள் கொன்றை மாலையைப் பெறுதல் ஒருதலை.

694. வேதத்துரகர் - வேதமாகிய குதிரையை யுடையவர் (684.) விர கர் - நுண்ணறிவையளிக்கும் தலைவர். (பி - ம்.) 'விரக வகிலேசர்' பாதத்து உரகப் பரிபுரத்தார் - திருவடிகளில் பாம்பாகிய சிலம்பை அணிந்தவர். சேவடிக் கண்டாரே - திருவடியைத் தரிசித்தவர்களே; திரிபு நோக்கிக் ககரம் மிக்கது. திறம் பிழைத்து - யமனது வன்மைக்குத் தப்பி. தென் புலத்தார் கோ - யமன்; அடி - தண்டம்; முன்னும், "கூற்றடி" (688) என்றார். அண்டார் - நெருங்கார். யமதண்டனை இல்லையென்றபடி.

695. தலைவி கூற்று.

பழுக்காய்த்தாறு - பாக்குக்குலை. ஆண்மை என் ஆம் - வீரம் என்ன பயனுடையதாகும். தெவ் வளைந்து - பகைவன் சூழ்ந்துகொண்டு; பகைவ னென்றது மன்மதனை. கழைச்சிலை - கரும்பாகிய வில்லை. தன் படை வீடு-

(ஆசிரியவிருத்தம்)

696. இடம ருங்கினின் மருங்கி லாதவவள் குடியி ருக்கவு முடியில்வே
றிவளொ ருத்தியை யிருத்திவைத்துமதி மோக மோகினியினுருவமாய்
நடமி டிங்கிவடன் மேலும் வைத்துள நயந்தொர் பிள்ளைபயந்தநீர்
நங்கு லத்திருவை மருவி னின்றுபிறர் நாவ ளைக்கவிட மாகுமோ [டும்
குடமு டைந்ததென வானி னங்கண்மடி மடைதி றந்துபொழி பாலொ
கொழும டற்பொதி யவிழ்ந்து கைதைசொரி சோறுமிட்டணிதிரைக்
கடல் வயிற்றினை நிரப்பு கின்றசுர கங்கை குண்டகழி யாநெடுங்[கை
ககன நீள்குடுமி மதில்க ளேழுடைய காசி மேவுமகி லேசரே. [யாற்

மடக்கு

(பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

697. சரியோ டொழுகுங் கரவளையே சரக்கோ டொழுகுங் கரவளையே
தையற் கனமே தீவிடமே தவழுங் கனமே தீவிடமே
சொரிவ தடங்காக் கண்ணீரே துளிக்குந் தடங்காக் கண்ணீரே
துயரே வதித னந்தினமே சூரற் கழுத்தி னந்தினமே

---

தமது படைவீடாகிய காசியை ; 614, 649-ஆம் செய்யுட்களைப் பார்க்க. தன்னென்றது சிவபிரானை. தம்முடைய படைவீட்டைப் பகைவன் வந்து அமர்க்களமாகச் செய்வானெனின், இவர் ஆண்மை என்ன பயனுடையதாம்.

696 தோழி கூற்று.

இடமருங்கினில் - இடப்பாகத்தில். மருங்கு இலாதவவள் - இடையில்லாத உமாதேவியார். இவளொருத்தியென்றது கங்கையை. நடமிடு இங்கு இவளென்றது திருமாலாகிய மோகினியை. ஓர் பிள்ளை - மகா சாத்தர். நாவளைக்க - பேச ; பழிகூற வென்னும் பொருளில் இங்கே வந்தது. இவ்வளவு பெண்களை மருவிய நீர் இவளையும் ஏற்றுக்கொண்டாற் பிறர் பழி கூறுவதற்கு என்ன காரணம் உள்ளது ? பசுவின் மடிக்குக் குடம் உவமை ; குடஞ்சுட்டு என்று இத்தகைய பசுக்கள் கூறப்படும். மடிமடை - மடியாகிய மடை. கைதை - தாழை. சோறு - தாழை மடலினுள்ளே இருக்கும் ஒரு பொருள் ; உண்ணும் சோறெனவும் ஒரு பொருள் தோற்றியது. பாலோடு சோறும் இட்டுக் கடல் வயிற்றினை நிரப்புகின்ற. குண்டு அகழியா - ஆழமான அகழியாக. ககனம் - ஆகாயத்தில். குடுமி - உச்சி.

அகிலேசரே, நீர் நங்குலத்திருவை மருவின் பிறர் நாவளைக்க இடமாகுமோ ? இஃது, 'இப்பொழுது அலர் மிக்கது' என்பதைக் குறிப்பித்தது.

697. தோழி கூற்று.

கரவளை சரியோடு ஒழுகும் - கைவளை சரியோடு நழுவும் ; சரி - முழங்கைக்குமேல் அணிந்துகொள்ளும் ஒருவகை வளை. சரக்கோடு ஒழுகும் கர

கருகிப் புலர்ந்த நாவாயே கரைவந் திழியு நாவாயே
கண்க ளுறங்கா கழுநீரே கடலே கழியே கழுநீரே
அரிவை யிவளுக் குருகீரே யனத்தோ டுறங்குங் குருகீரே
அளியா ரிதழி வனத்தாரே யருளானந்த வனத்தாரே. ()

(சந்த விருத்தம்)

698\. வனத்தினுமொர் பொற்பொதுமு கப்பினு நினைப்பவர்
மனத்தினுந டித்த ருள்செய்வார்
சினக்கயல் விழிக்கடை கருக்கொள்கரு ணைக்கொடி
தினைத்தமரு மத்த ரிடமாம்
நனைக்கமல நெக்குடை தரக்குடை துறைச்சுர
நதிக்கரையின் முட்டைகொ லெனுக்
கனத்தபரு முத்தினை யணைத்தன மினத்தொடு
களிக்குமவி முத்த நகரே. (௬௬)

---

வங்கமோ - பலவகைப் பண்டங்களோடு நீரிலே செல்லா நிற்கும் தோணியே. தையற்கு அனம் தீ விடமே - தலைவிக்குச் சோறு கொடிய விடமாயிற்று. தவழும் கனமே - வானத்தில் உலவும் மேகமே. தீவு இடமே - தீவுகளாகிய இடங்களே. சொரிவது அடங்காக் கண்ணீரே. தடங்காவிலே துளிக்கும் கள்ளாகிய நீரே; கா - சோலை; கள் - தேன். துயரே வதிதல் நந்தினமே - துயரத்தின்கண்ணே தங்குதல் பெருகினேம். சூரல் கழுத்தின் நந்து இனமே - சுழித்தலையுடைய கழுத்தைப்பெற்ற சங்கின் கூட்டமே; சூரல் - சுழித்தல்; "சூரலங் கடுவளி" (அகநா. க.) நாவும் வாயும் கருகிப் புலர்ந்த; புலர்ந்த - உலர்ந்தன; முற்று. கரையில் வந்து இழியும் நாவாயே; நாவாய் - ஓடம். கண்கள் உறங்கா - கண்கள் தூங்குதலைச் செய்யா. நீர் கழும் - நீர் அவற்றைக் கழுவும்; அழுவேனென்றபடி. கழுநீரே - கழுநீர்ப்பூக்களே. குருகீரே-பறவைகளே. இதழி வனத்தார் அளியார் - கொன்றைமலராலாகிய அழகிய மாலையைத் தாரார். ஆனந்தவனத்தார் அளியார்.

698\. வனத்தினும் - மயானத்திலும். பொற்பொது - பொன்னம்பலம். விழிக்கடையின்கண்ணே கருக்கொண்ட கருணையையுடைய கொடிபோல்வாள்; உமாதேவியார். அத்தர் - ஒரு பாதியையுடையவர்; அர்த்தரென்பது அத்தரென நின்றது. தினைத்த எனப் பெயரெச்சமாகப் பிரித்து, மருமத்தரென்பதற்கு மார்பினை யுடையவரெனப் பொருள் கொள்ளலுமாம்; "பெண்ணுறு மார்பினர்" (தே. திருஞா.) நெக்கு - நெகிழ்ந்து. உடைதர - மலர. சுரநதி- கங்கை. அன்னம் முத்தை முட்டையென்று நினைத்து அணைத்தது (604.) அவிமுத்தநகர் இடமாம் என்க.

(வேறு)

699. கருமுகில் வெளுப்பவற விருளுமள கத்தினிவள்
கதிர்முலை முகட்டணைய வணைமீதே
வருகில ரெனிற்செவியி லொருமொழி சொலச்சமயம்
வருகென வழைக்கினுடன் வருவார்காண்
சுரநதி சுருட்டும்விரி திரையொரு முத்திமக
டுணைமுலை திளைக்குமவர் மணநாளின்
முரசொடு முழக்குகுட முழவென விரைக்கவளை
முரலுமவி முத்தநக ருடையாரே. (௯௦௦)

(நேரிசை யாசிரியப்பா)

700. உடைதிரைக் கங்கை நெடுநதித் துறையின்
வலம்புரி யென்னவாங் கிடம்புரி திங்கள்
வெள்ளிவீ ழன்ன விரிநிலாப் பரப்பும்
பொன்வீ ழன்ன புரிசடைக் கடவுள்

---

699. தோழி கூற்று.

அற - மிக. அளகம் - கூந்தல். கூந்தலின் கருமையை நோக்கக் கரு மேகமும் வெண்மையாகத் தோன்றுமென்றாள். முகடு - உச்சி. அணை - படுக்கை. ஒரு மொழி சொல - பிரணவத்தை உபதேசிக்க. சமய மென்பது மரணசமயத்தை. இவளை அணைய வருகவென்பாருக்கு வாராரென்று சிலர் சொல்வரேல், இவள் உயிர் விடுஞ் சமயமெனின் தம் வழக்கத்தினின்றும் மாறுதிருப்ப, உடனே பிரணவோபதேசம் புரிய எழுந்தருளுவர். சுரநதி - கங்கை. அலைகளின் ஒலிக்குக் குடமுழவின் ஓசை உவமை. திரைகள் இரைக்க. வளை முரலும் -சங்குகள் முழங்கும். "பறைபடப் பணில மார்ப்ப" (குறுந். ௧௫.) மணம் புரிதல் மரபாதலின் குடமுழவையும் வளையையும் ஒருங்கே கூறினர்.

700. இறைவனைத் துதித்தல் அவனது அருளைப் பெறுதற்கு வழி என்பர்.

(அடி, 2-3.) வலம்புரிச்சங்கம் சந்திரனுக்கு உவமை. இடம் புரி - இடத்தை விரும்பிய. வெள்ளிவீழ் - வெள்ளியாலாகிய விழுது ; இது நிலாவுக்கு உவமை.

(3-4.) நிலாப்பரப்பும் சடை, பொன்வீழன்ன சடை யென்க.

௫ முடவுப் படத்த கடவுட் பைம்பூண்
கறங்கெனச் சுழலுங் கால்விசைக் காற்று
துமிழ்தரு குருதித் திரடெறித் தாங்குத்
திசைதொறுந் தெறித்த திரண்மணிக் குலங்கள்
வானேறு கடுப்ப வெரிநிற் றுக்கலும்
௧௦ கையெடுத் தெண்டிசைக் களிறும் வீரிடத்
தெய்வநா டகஞ்செய் வைதிகக் கூத்தன்
வரைபகப் பாயும் வானரக் குழாத்தொரு
கருமுக மந்தி கால்விசைத் தெழுந்து
பழுக்காய்க் கமுகின் விழுக்குலை பறித்துப்
௧௫ படர்தரு தோற்றஞ் சுடரோன் செம்மல்
தெசமுகத் தொருவன் றிரண்முடி பிடுங்கி
விசையிற் பாய்ந்தென விம்மிதம் விளைக்கும்
தடமலர்ப் படப்பைத் தண்டலைக் காசிக்
கடிநகர் புரக்குங் கண்ணுதற் செல்வன்

---

(அடி, 5-11.) சிவபெருமான் நடனம் புரிகையில் அவர் ஆபரணமாக அணிந்த பாம்பினிடத்திருந்து மணிகள் சிதறித் திசைக்களிறுகளின்மேல் தாக்க அவை வீரிட்டன.

(5.) முடவு - வளைவு. படத்தையுடைய பூண் ; பாம்பு.

(6.) கறங்கு - காற்றாடி. கால்விசை - திருவடியின் வேகம்.

(7-8.) மாணிக்கங்களுக்கு இரத்தத் துளிகள் உவமை.

(9.) வானேறு - இடி. வெரிநில் - முதுகில்.

(10.) வீரிட - முழங்க.

(12-8.) கமுகின் குலையைப் பறித்து இறங்கும் மந்திக்கு இலங்கையின் உத்தர கோபுரத்திலிருந்த இராவணனது பத்து முடிகளையும் பறித்து வந்த சுக்கிரீவன் உவமை.

(14.) பழுக்காய் - பாக்கு.

(15.) சுடரோன் செம்மல் - சூரியன் மகனாகிய சுக்கிரீவன்.

(16.) தெசமுகத்தொருவன் - இராவணன்.

(17.) விம்மிதம் - வியப்பு.

(18.) படப்பை - தோட்டக்கூறு. தண்டலை - சோலை.

(20-21.) என்னுடைய சொற்களை நோக்கும்போது கைப்புடைய வேப்பம்பழமும் கடுக்காயும் தேனைப்போல விரும்பத்தக்கனவாகு மென்றபடி.

உo வேம்புங் கடுவுந் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் றெரித்த சின்மொழி
அஞ்செவி மடுத்தாங் களித்தன னதனால்
வேத்தவை வியப்ப விரைத்தேன் பில்கும்
தேத்தமிழ் தெளிக்குஞ் செந்நாப் புலவீர்
உரு மண்மகள் கவிகைத் தண்ணிழற் றுஞ்சப்
புரவுபூண் டிந்திர திருவொடும் பொலிந்து
முடிவினு முடியா முழுநலங் கொடுக்கும்
செந்நெறி வினவுதி ராயி னின்னிசைப்
பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை
ந.o நாத்தழும் பிருக்க வேத்துமி னீரே. (கoக)

(20.) வேம்புங் கடுவும் : தொல். செய். 112.

(4-22.) புரிசடைக் கடவுள், வைதிகக் கூத்தன், கண்ணுதற் செல்வன் சின்மொழியைச் செவிமடுத்து அளித்தனன்.

(23-4.) வேத்தவை - அரசரது சபைகள். தேத் தமிழ் - தேன் போன்ற இனிமையையுடைய தமிழ். செந்நாப் புலவீர் - செவ்விய நாவை யுடைய புலவர்களே.

(28.) செந்நெறி - முத்தியடைதற்கு உரிய வழியை.

(30.) நாத்தழும்பிருக்க ஏத்துதல் ; "நாத்தழும் பிருப்பப் பாடாதா யினும்" (புறநா. உoo : 10.)

(22-30.) அகிலேசர் எனக்குக் கருணை செய்தமையால், செந்நாப் புலவீர், நீர் பாத்தொடுத்துப் பரஞ்சுடரை ஏத்துமின்.

# சகலகலாவல்லி மாலை

(கட்டளைக் கலித்துறை)

701. **வெ**ண்டா மரைக்கன்றி நின்பதந்
தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ
லோசக மேழுமளித்
துண்டா னுறங்க வொழித்தான்பித்
தாகவுண் டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகல கலாவல்லியே. (௧)

702. நாடும் பொருட்சுவை சொற்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்
வாய்பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே
கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே
சகல கலாவல்லியே. (௨)

---

**குறிப்பு:** இப் பிரபந்தத்தின்பெயர், 'சகலகலாவல்லிமாலை யென்னும் சரசுவதி தோத்திரம்' என்றும் வழங்கும்.

701. வெள்ளையுள்ளம் - அறிவின்மையையுடைய மனம். வெண்டா மரையில் நீ எழுந்தருளியிருத்தல்போல அடியேனது வெள்ளையுள்ளத்திலும் எழுந்தருளுதல் தக்கதே யென்றபடி. அளித்துண்டான் - திருமால். அளித்து- பாதுகாத்து; உறங்க - தூங்கிக் கிடப்ப; செயலற்றிருப்பவென ஒரு பொருள் தோற்றியது. ஒழித்தான் - சிவபெருமான். பித்தாக - பித்தனாக. கண்டான் - பிரமன். அவனுக்கு உயர்வு தோற்றும்படி இதன்கண் சொல்ல மைதி இருத்தல் காண்க. சகலகலாவல்லி - கலைமகள்.

702. தோய்தர - பொருந்த. நாற்கவி - வெண்பா முதலிய நான்கு; ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் நான்குமாம். பாடும்பணி - பாடு கின்ற பணிவிடை; "பாடும் பணியே பணியா வருள்வாய்", (கந்தரநுபூதி, 1.)

703. அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு
தார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ
லோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர்
கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாப மயிலே
சகலகலாவல்லியே. (௩)

704. தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த
கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய்வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந்
தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே
சகல கலாவல்லியே. (௪)

---

கொடியிலே மலர் இருத்தல் இயல்பாயிருப்ப, மலரிலே கொடியுள்ள தென்றது ஒரு நயம். பங்கயமாகிய ஆசனத்தில். ஐம்பாற் காடு - கூந்தலாகிய காடு; "குழற்கா டேந்துமிள வஞ்சிக் கொடியே" (62.)

703. அளிக்கும் - நின்னால் அருளப்பெறும். தமிழாகிய தெளிந்த அமுதத்தை நிறைய உண்டு; "தித்திக்குந் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான, முத்திக் கனியேயென் முத்தமிழே" (தமிழ்விடு. 69.) குளித்து உண்ணுதல் முறையாக இருப்ப, உண்டு குளித்தலை விரும்பியது ஒரு நயம்; ஆர்ந்தென்பதனை ஆரவென்னும் எச்சத்தின் திரிபாகக் கொள்ளினும் பொருந்தும். உளங்கொண்டு தெள்ளித் தெளிக்கும் பனுவல் - கருத்தால் ஆராய்ந்து மிகத் தெளிந்து செய்யும் செய்யுட்களையுடைய; "உளங்கொண்டு தொண்டர், தீட்டுங் கலைத் தமிழ்" (707) என்பர் பின்னும். கவியாகிய மழை. கலாபம் - தோகை. மழை பெய்ய மயில் களித்தல் இயல்பு.

704. தூக்கும் - ஆராயும். பனுவல் துறை - தமிழ்நூல்களின் பாகுபாடுகள்; "தீந்தமிழின், துறைவாய் நுழைந்தனையோ" (திருச்சிற். 20.) கல்வியென்றது நூல்களைக் கற்றுப்பெறும் செயற்கை அறிவு; வாக்கென்றது புண்ணிய வசத்தால் எளிதிற் கவியியற்றும் ஆற்றலாகிய இயற்கை அறிவு "வாக்கிற்கருணகிரி" (தனிப்.)

705. பஞ்சப் பிதந்தரு செய்யபொற்
பாதபங் கேருகமென்
னெஞ்சத் தடத்தல ராததென்
னேநெடுந் தாட்கமலத்
தஞ்சத் துவச முயர்த்தோன்செந்
நாவு மகமும்வெள் ளைக்
கஞ்சத் தவிசொத் திருந்தாய்
சகல கலாவல்லியே. (௫)

706. பண்ணும் பரதமுங் கல்வியுந்
தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல்
காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங்
கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்து நிறைந்தாய்
சகல கலாவல்லியே. (௬)

---

705. பஞ்சை அப்பிய பாதம், இதந்தரு பாதம், செய்ய பாதம், பொற் பாத மென்க. பஞ்சு - செம்பஞ்சுக் குழம்பு. பங்கேருகம் - தாமரை. பாதபங் கேருகம் என் நெஞ்சமாகிய தடாகத்தில் மலராததற்குக் காரணம் யாது? நெடுந்தாட் கமலத்திலுள்ள. அஞ்சத்துவசம் உயர்த்தோன் - பிரமதேவன்; அஞ்சம் - அன்னப்பறவை. அகமும் - அவனுடைய மனத்திலும். தவிசு - ஆதனம்.

706. பண்ணென்றது இங்கே இசைத்தமிழைக் குறித்து நின்றது. பரத மென்றது நாடகத் தமிழை. கல்வி - நூலறிவு. தீஞ்சொற் பனுவல் - இனிய சொல்லமைதியையுடைய கவி. முத்தமிழ்க் கல்வியும் கவித்துவமும் வேண்டு கின்றார். கந்தர் கலிவெண்பாவிலும் இவற்றை வேண்டினார். வேதத்தாற் கூறப் படும் பொருளும் ஐம்பூதங்களினூடே இருப்பவளும் அன்பர்கள் காட்சிக்கும் தியானத்திற்கும் எளிவந்தவளும் ஆவதைக் கூறியபடி.

707. பாட்டும் பொருளும் பொருளாற்
பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல்
காயுளங் கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா
லமுதந் தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே
சகல கலாவல்லியே. (எ)

708. சொல்விற் பனமு மவதான
முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள்
வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக் கரிதென் றொருகால
முஞ்சிதை யாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே
சகல கலாவல்லியே. (அ)

---

707. பாட்டு - செய்யுள். பொருள்-செய்யுளின் கருத்து. பயன் - அறம் பொருள் இன்பம் வீடென்பன. என்பாற் கூட்டும்படி - என்னிடத்திலே கூட்டும் வண்ணம். உளங்கொண்டு தீட்டும் தமிழ் : 703. பால் அமுதம் தெளிக்கும்வண்ணம் - பாலையும் நீரையும் தெளிவாக அறியும்வண்ணம்; அமுதம் - நீர். அன்னம் பாலையும் நீரையும் பிரிக்கும் வன்மையுடையதாதலின் இங்கே இங்ஙனம் உருவகம் செய்தார் : 325 : 5 - 8, பார்க்க.

708. சொல் விற்பனம் - நாவன்மை; வாக்குவியாக இருக்கும் தன்மை. அவதானம் - ஒரே சமயத்திற் பல விஷயங்களைக் கவனித்தல். கவி சொல்ல வல்ல நல்வித்தை - கவித்துவம். 'கல்வி சொல்லவல்ல நல்வித்தை' என்று பாடத்திற்கு மாணாக்கர்களுக்குப் பாடஞ் சொல்லும் ஆற்றலென்று பொருள் கொள்க. "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" (குறள், 398) என்பவாதலின் அதனைச் சிதையாததென்றார். செல்வி - திருமகள். சிதையாமை நல்கும் - அழியாதபடி வழங்குகின்ற. கல்விப் பெருஞ்செல்வம் : "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை" (குறள், 400.)

709. சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ்
ஞானத்தின் றோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்
யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ
டரசன்ன நாணநடை
கற்கும் பதாம்புயத் தாயே
சகல கலாவல்லியே. (௯)

710. மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய்
வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ
சகல கலாவல்லியே. (௧0)

---

709. சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக இருக்கும் உண்மையறிவு. அவ்வறிவே உருவாக இருப்பவள் கலைமகள். நின்னை நினைப்பவர் யார் - நின்னை நினைக்கும் ஆற்றலுடையவர் யார்; நீ மனத்தால் நினைத்தற்கு அறியா யென்றபடி. துதிக்கை நிலந் தோய்தல் பிடிக்கு உத்தம இலக்கணம்; "ஈர்ந்துநிலந்தோயு மிரும்பிடித் தடக்கையின்" (சிறுபாண். 19.) (பி - ம்.) 'பதாம்புயத்தாளே'

710. இப்பாட்டில் பாதுஷாவின் அன்பு தமக்குக் கிடைக்கவேண்டுமென்னும் விருப்பத்தைக் குறிப்பித்தனர்.

மண்கண்ட - உலகு முழுவதையும் நிழற்றிய. பண்ணென்றது இங்கே செய்யுளை. படைப்போன் - பிரமதேவர். கண்கண்ட தெய்வம் - பிரத்தியட்சமான பலனைத் தரும் தெய்வம்.

# மதுரை மீனாட்சியம்மை

# இரட்டைமணிமாலை

(நேரிசை வெண்பா)

1. **கா**ர்பூத்த கண்டத்தெங் கண்ணுதலார்க் கீரேழு
பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே—சீர்கொள்
கடம்பவனத் தாயேநின் கண்ணருள்பெற் றாரே
இடம்பவனத் தாயே யிரார். (க)

(கட்டளைக் கலித்துறை)

2. இராநின் றதுஞ்சொக்க ரெண்டோள் குழைய விருகுவட்டாற்
பொராநின் றதுஞ்சில பூசலிட் டோடிப் புலவிநலம்
தராநின் றதுமம்மை யம்மண வாளர் தயவுக்குள்ளாய்
வராநின் றதுமென்று வாய்க்குமென் னெஞ்ச மணவறையே.

(நேரிசை வெண்பா)

3. மதம்பரவு முக்கண் மழகளிற்றைப் பெற்றுக்
கதம்பவனத் தேயிருந்த கள்வி—மதங்கன்
அடியார்க் குடம்பிருகூ றாக்கினாள் பார்க்கிற்
கொடியார்க் குளகொல் குணம். (௩)

---

1. கடம்பவனத்தாயே - கடம்பவனமாகிய மதுரையில் எழுந்தருளிய அன்னையே. இடம்ப வனத்தாய் இரார் - டம்ப மிகுதியின் கண்ணே உள்ளவராய் இரார்; டம்பம் பன்னிரண்டு குற்றங்களுள் ஒன்று.

2. இருகுவடு - நகில்கள். அம்மே நீ நின் கணவரோடு புரியும் திருவிளையாடல்களை என்மனம் எப்பொழுதும் நினைக்கும்.

3. மழகளிறு - விநாயகர். மதங்கன் அடியார்க்கு - பாணபத்திரருக்கு அடியாராகிய சிவபெருமானுக்கு; சொக்கநாதர் பாணபத்திரரின் பொருட்டு விறகு விற்றதை நினைந்து கூறியது இது. தவஞ்செய்து இறைவரது வாமபாகத்தைப் பெற்றமையால் உடம்பிரு கூறாக்கினாள் என்றார். கொடியார் - கொடி போன்றவர், கொடியவர்; “ எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த, முற்றிழையால் வாட முறுவலிக்கும்...கொடியார்க்கு முண்டோ குணம் ” (தண்டி. 48, மேற்.) (பி - ம்.) ‘ கொடியார்க்கில்லை ’

(கட்டளைக் கலித்துறை)

4. குணங்கொண்டு நின்னைக் குறையிரந் தாகஞ் குழையப்புல்லி
மணங்கொண் டவரொரு வாமங்கொண் டாய்மது ரேசரவர்
பணங்கொண் டிருப்ப தறிந்துங்கொள் ளாயம்மை பைந்தொடியார்
கணங்கொண் டிறைஞ்சு நினக்குமுண் டாற்பொற் கனதனமே.

(நேரிசை வெண்பா)

5. கனமிருக்குங் கந்தரர்க்குங் கன்னிநா டீந்தென்
தினமிரப்ப தோவொழியார் தேனே—பனவனுக்காப்
பாமாறி யார்க்குனைப்போற் பாரத் தனமிருந்தாற்
ருமாறி யாடுவரோ தான். (ரு)

(கட்டளைக் கலித்துறை)

6. தானின் றுலகு தழையத் தழைந்த தமிழ்மதுரைக்
கானின்ற பூங்குழற் கர்ப்பூர வல்லி கருங்கட்செய்ய
மீனின் றுலாவி விளையா டுவதுவிண் ணுறலைய
வானின்ற தோர்வெள்ளி மன்றுடு மானந்த மாக்கடலே. (சு)

---

4. மணங் கொண்டவர் - சிவபிரான். பணம் - பாம்பின்படம், திரவியம். கொள்ளாய் - வாங்கிக்கொள்ளமாட்டாய். பொற்கனதனம் - பொலிவு பெற்ற கனத்த நகில், பொன்னுகிய மிக்க செல்வம்.

5. கனம் - மேகத்தின் கரியநிறம். கந்தரர் - திருக்கழுத்தை யுடைய கடவுள். கன்னிநாடு - பாண்டிநாடு. ஈந்து என் - நீ கொடுத்ததனுல் உண்டான பயன் யாது? பனவனுக்கா பா மாறியார் - தருமியென்னும் பிராமணனுக்காகத் தம்பாட்டை விற்றவர். தனம் - நகில், பொருள். மாறி ஆடுவரோ - கால் மாறி ஆடுவாரோ. பணமில்லாமையே அவர் கூத்திற்குக் காரணமென்றூர்.

6. தான் நின்றலால். கர்ப்பூரவல்லி - மீனுட்சியம்மை; கருங்கண்ணுகிய மீன் விளையாடுவதற்கு இடமாகவுள்ளது ஆனந்தமாக்கடல் என்க; " முருகுயிர்க்கு நறுந்தெரியன் மொய்குழலின் மையுண்கட், பொருகயற்குன் றிருமேனி புதுவெள்ளப் புணரியே " (குமர. 538.) வெள்ளிமன்று - மதுரையிலுள்ள வெள்ளியம்பலம்.

(நேரிசை வெண்பா)

7. கடம்பவன வல்லிசெல்வக் கர்ப்பூர வல்லி
மடந்தை யபிடேக வல்லி—நெடுந்தகையை
ஆட்டுவிப்பா ளாடலிவட் காடல்வே றில்லையெமைப்
பாட்டுவிப்ப துங்கேட் பதும். (எ)

(கட்டளைக் கலித்துறை)

8. பதுமத் திருவல்லி கர்ப்பூர வல்லிநின் பாதபத்ம
மதுமத் தொடுந்தம் முடிவைத்த வாமது ரேசரவ
ரிதுமத்தப் பித்துமன் றேழைமை முன்ன ரிமையவர்கைப்
புதுமத் தினைப்பொற் சிலையென் றெடுத்த புராந்தகர்க்கே. (அ)

(நேரிசைவெண்பா)

9. தருமே கடம்பவனத் தாயேநின் சிற்றி
லகமேயென் னெஞ்சகம தானால்—மகிழ்நரொடும்
வாழாநின் றுயிம் மனையிருண்மூ டிக்கிடப்ப
தேழாய் விளக்கிட் டிரு. (கூ)

---

7. அபிடேகவல்லி :குமர. 2. நெடுந்தகையை-சிவபெருமானை. சிவபெருமான் ஐந்தொழினடனம்புரிதற்கு அவரது திருவருளே காரணமாதலின், அத்திருவருளாகிய அம்பிகையை ஆட்டுவிப்பாளென்றார் ; "சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதாம், அவள்பி ரிந்திடினி யங்கு தற்கு மரிது" (சௌந்தரியலகரி, 1) என்பதுங் காண்க. ஆடல் ஆட்டுவிப்பாள். எம்மைப் பாடச்செய்வதும் அதனைத்தான் கேட்பதுமன்றி வேறு திருவிளையாட்டுத் தனக்கில்லை.

8. பதுமத்திருவாகிய வல்லி. வல்லி : அண்மை விளி. மதுமத்து - ஊமத்தை. அதனோடு நின்பாத தாமரையை வைத்தது என்ன ஆச்சரியம். இது மத்தப் பித்தும் அன்று - இது மனமயக்கத்தால் வந்த பித்தும் அன்று. ஏழைமை - அறியாமை. மத்தென்றது மேருமலையை. புராந்தகர்க்குப் பித்தும் அன்று; ஏழைமை யென்க. புராந்தகரென்றது மத்தை வில்லாக எடுத்த செயற்குக் காரணமாகிய திரிபுர சங்காரத்தை நினைப்புறுத்தியது. அங்ஙனம் எடுத்த அது பயன்பட்டிலது.

9. என் நெஞ்சகம் நின் சிற்றிலகமானால். இம்மனை இருள் மூடிக்கிடப்பது ; ஆதலின், இதன்கண் விளக்கிட்டு இருக்கவேண்டும். இருள் - அறியாமை. ஏழாய் - பெண்ணே. விளக்கு - ஞானம். 'வீட்டில் விளக்கு வைத்துக்கொண்டிருந்தாற்போதும் ; நீ ஏழையாதலால் குடிக்கூலி வேண்டேன்' என ஒரு பொருள் தொனித்தது. "தொழும்ப ருளக்கோயிற் கேற்றும் விளக்கே" (குமர. 62) என்பது இங்கே நினைத்தற்கு ரியது.

(கட்டளைக் கலித்துறை)

10. இரைக்கு நதிவைகை பொய்கைபொற் றாமரை யீர்ந்தண்டமிழ்
வரைக்கு மலைதென் மலயம தேசொக்கர் வஞ்சநெஞ்சைக்
கரைக்குங் கனகள்வி கர்ப்பூர வல்லிக்குக் கற்பகத்தால்
நிரைக்கும்பொற் கோயி றிருவால வாயுமென் னெஞ்சமுமே.

(நேரிசைவெண்பா)

11. நெஞ்சே திருக்கோயி னீலுண் டிருண்டகுழல்
மஞ்சேந் தபிடேக வல்லிக்கு—விஞ்சி
வருமந் தகாவென் வழிவருதி யாலிக்
கருமந் தகாவென் கருத்து. (கக)

(கட்டளைக்கலித்துறை)

12. கருவால வாய்நொந் தறமெலிந் தேற்கிரு கான்மலரைந்
தருவால வாய்நின்ற தொன்றுத வாய்வன் றடக்கைக்குநேர்
பொருவால வாயெட்டுப் போர்க்களி றேந்துபொற் கோயில்கொண்ட
திருவால வாய்மருந் தேதென்னர் கோன்பெற்ற தெள்ளமுதே. (கஉ)

---

10. இரைக்கும் - முழங்கும். கர்ப்பூரவல்லிக்கு நதி வைகை. இங்ஙனமே ஏனையவற்றிற்கும் கூட்டியுரைக்க. பொற்றாமரை - பொற்றாமரைத் தீர்த்தம். வரைக்கும் - தன்னிடத்திலே அகப்படுத்திக்கொண்ட; வரைதல் - கொள்ளுதல். தென்மலயம் - பொதியில். கள்வி: இந்நூல் 3-ஆம் செய்யுளைப் பார்க்க. (பி - ம்.) 'கற்பகத்தார்', 'கற்பகந்தார்' கற்பகத்தாரென்னும் பாடத்திற்குத் தேவர்களென்னும் பொருள் கொள்க.

11. வல்லிக்கு நெஞ்சே திருக்கோயில். நீல் - நீலம்; கருமை. குழலாகிய மஞ்சை; மஞ்சு - மேகம். விஞ்சி - மீறி. அந்தகா - யமனே. கருமம் தகா - உன் செயல்கள் தக்கனவல்ல. என் கருத்து - உன்னுடைய உட்கோள் யாது? (பி - ம்.) 'தகாவுன் கருத்து'

12. அவாய் கருவால் நொந்து அற மெலிந்தேற்கு - மண் முதலியவற்றை ஆசைப்பட்டு அதன் பயனாக வந்த பிறவியால் துன்புற்று மிக இளைப்புற்ற எனக்கு. இரண்டு கான்மலரையுடைய ஐந்தருவாகி ஆலமரத்தினிடத்தே நின்ற பரம்பொருளாகிய ஒன்றை; சிவத்தை. உதவாய் - வழங்குவாயாக. இறைவனைக் கற்பகமாகக் கூறுதல்: குமர. 522, 550. தடக்கை நேர் பொருவாலவாய் - முன்னே தொங்கும் வளைந்தகையை ஒத்துப் பின்னே விளங்கும் வாலையுடையனவாகி. மதுரையாலயத்திலுள்ள இந்திர விமானம் எட்டுக் களிறுகளால் சுமக்கப்பெறுவது (குமர. 3.)

(நேரிசை வெண்பா)

13. தென்மலையுங் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே—நின்மா
முலைக்குவடு பாய்சுவடு முன்காய மாலம்
மலைக்குவடு வன்றே மணம். (௧௩)

(கட்டளைக் கலித்துறை)

14. மணியே யொருபச்சை மாணிக்க மேமருந் தேயென்றுன்னைப்
பணியேன் பணிந்தவர் பாலுஞ்செல் லேனவர் பாற்செலவும்
துணியேன் றுணிந்ததை யென்னுரைக் கேன்மது ரைத்திருநாட்
டணியே யனைத்துயிர்க் கும்மனை நீயென் றறிந்துகொண்டே.

(நேரிசை வெண்பா)

15. கொண்டைச் செருக்குங் குறுநகையு நெட்டயிற்கட்
கொண்டைப் பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமுங்—கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப்புகுந்தாள்
நற்பூர வல்லியுமென் னு. (௧௫)

(கட்டளைக் கலித்துறை)

16. நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி ழுண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண் டேபங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்குங் கடம்பா டவிப்பசுந் தேனின் பைந்தாட்
பூவுண்டு நாரொரன் றிலையாந் தொடுத்துப் புனைவதற்கே. (௧௬)

---

13. தென்மலை - பொதியில். வெள்ளிமலையிலுள்ள பொன்மலைபோன்ற சிவபெருமானுக்கு. முலைக்குவட்டினால் உண்டான சுவடு மார்பிடத்தே காயமாக நின்றது. அஃது அம்மலைக்கு வடுவாகாமல் மணமாதற்குக் காரணமாயிற்று; முதுகிற் பட்டிருந்தால் வடு ஆகுமென்றபடி.

14. அறிந்துகொண்டு பணியேனென்க. துணிந்ததை - அடியேன் துணிந்த தீங்கான செயலை.

15. பிறக்கம் - மிளிர்தல். வாய்க் கிஞ்சுகம் - வாயாகிய முள்ளு முருங்கை மலர். கற்பூரவல்லி கொண்டைச் செருக்கு முதலியவற்றோடு புகவே பூரவல்லியும் என் நாவிற் புகுந்தாள்; பூரவல்லி - கலைமகள்; பூரவாஹினி யென்பது அவள் திருநாமம். அம்பிகை திருவருள் உண்டாயின் கல்வியறிவு உண்டாமென்றபடி.

16. இனங்கள் - பாவினங்கள். பசுந்தேன் - மீனாட்சியம்மை. பூவிருந் தும் நாரில்லை யென்றது ஒரு நயம்; நார் - மாலைகட்டும் நார்; "அன்பெனு நார் தொடுத்தலங்கல் சூட்ட" (திருவிளை. கடவுள். 16.)

(நேரிசைவெண்பா)

17. புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பாவை
வனைந்தாளெம் வாயும் மனமும்—தினந்தினமும்
பொற்பதமே நாறுமவள் பூம்பதமென் றேநமது
சொற்பதமே நாறுஞ் சுவை. (கஎ)

(கட்டளைக் கலித்துறை)

18. சுவையுண் டெனக்கொண்டு சூடுதி யான்மற்றென் சொற்றமிழ்க் கோர்
நவையுண் டெனவற நாணுதி போலு நகைத்தெயின்மூன்
றவையுண் டவரொ டருட்கூடல் வைகுமம் மேசொற்பொருட்
கெவையுண்டு குற்ற மவையுண்டு நீவி ரிருவிர்க்குமே. (கஅ)

(நேரிசை வெண்பா)

19. விண்டிருந்த பொற்கமல மீதிருந்த பொன்னினையும்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமாற்—றொண்டரண்டர்
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன். (கக)

---

17. சிலபாவைக் கடம்பவனப் பூவை புனைந்தாள் - எளியேம் இயற்றிய சில செய்யுட்களை மீனாட்சியம்மை அணிந்தருளினாள். (பி - ம்.) 'சில பூவை' எம்வாயும் மனமும் வனைந்தாள் - எம்முடைய வாயையும் மனத்தையும் தன் இருப்பிடமாக அலங்கரித்தாள் ; எழுந்தருளி யிருந்தாளென்றபடி. (பி - ம்.) 'என் வாயும்' தினந்தினமும் அவள் பூம்பதம் பொற்பதமே நாறும் என்றேம் - நாள்தோறும் அவளுடைய மலரடி பொன்னுலகமுழுதும் நறு மணம் பரப்பு மென்று துதித்தோம். அதனால் நம்முடைய சொல்லாகிய பதம் சுவை மணக்கும். இறைவியைத் தோத்திரம் புரிதலால் எம் செய்யுள் சுவை யுடையதாயிற்றென்றபடி. வனைந்து ஆள் எம்வாயும் மனமும் அவளது பொற்பதமே நாறுமென்று கூட்டிப் பொருள் செய்தலும் பொருந்தும் (பி - ம்.) 'பூம்பத மன்றே'

18. என் பாட்டைச் சூடுவாயாக. நவை - குற்றம். அற - மிக. மூன் றவை : அவை பகுதிப் பொருள் விகுதி. சத்தி சிவ மென்னும் இருவரும் முறையே சொல்லாகவும் பொருளாகவும் இருத்தலின், இங்ஙனம் கூறினார் (திருவிளை. இடைக்காடன் . 10.) என் சொற்கள் குற்ற முடையனவென்று ஏற்றுக்கொள்வதற்கு நாணினாலும் சொல்லும் பொருளுமாகிய நீவிர் இரு வீருக்கும் அவையுண்டு ; ஆதலால் நாணமல் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்றபடி.

19. விண்டிருந்த - மலர்ந்திருந்த. பொற்கமலமீதிருந்தபொன் - திரு மகள். அண்டரது தேங்காவில் தொண்டர் வீற்றிருத்தற்கு ; தொண்டர்கள்

(கட்டளைக் கலித்துறை)

20. பொற்பூர வல்லி கமலத்த ளேகொல் புகுந்தகமும்
வெற்பூர வல்லி பிறந்தக மும்மது மீட்டுமென்னே
அற்பூர வல்லியென் வன்னெஞ்சக் கஞ்சத்தெம் மையனொடும்
கற்பூர வல்லி குடிபுகுந் தேநின்ற காரணமே. (உ௦)

---

சொர்க்கபதவியில் வீற்றிருக்கும்படி செய்தற்கு என்றவாறு. வீற்றிருந்த பொன் - அங்கயற் கண்ணம்மை. ஒரு பொன் மற்றொரு பொன்னை ஏவல் கொள்ளுமென்பது ஒரு நயம்.

20. பொற்பூரவல்லிகொல், கமலத்தளேகொல்; கொல்லென்பதை முன்னும் கூட்டுக. பூரவல்லி - கலைமகள்; இந்நூல் 15-ஆம் செய்யுளைப் பார்க்க. புகுந்தகமும் அது - புக்க இடமாகிய அடியாருடைய உள்ளமும் தாமரையே. வெற்பு ஊர் அ வல்லி - இமயமலையில் அவதரித்த அழகிய உமாதேவியார். பிறந்தகமும் அது - பிறந்த இடமும் இமயமலைச் சுனையிலுள்ள தாமரை மலராகும்.

இங்ஙனம் இரண்டு உயர்ந்த தாமரைமலர்களை இருக்கையாகக் கொண்டவள் என் மனமாகிய இழிந்த தாமரையிலும் சிவபிரானுடன் குடி புகுந்த காரணம் என்ன வியப்பு? அவள் தாமரையை ஆதனமாக உடைய கலைமகளோ, அன்றித் திருமகளோ?

# மதுரை மீனாட்சியம்மை குறம்

## காப்பு

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

**கா**ர்கொண்ட பொழின்மதுரைக் கர்ப்பூர வல்லிமணங்
கமழுந் தெய்வத்
தார்கொண்ட கருங்குழலங் கயற்கண ளகிகுறஞ்செந்
தமிழாற் பாட
வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட் டிருசெவிமும்
மதத்து நால்வாய்ப்
போர்கொண்ட கவுட்சிறுகட் சித்திவிநா யகன்றுணைத்தாள்
போற்று வாமே.

## (சிந்து

1. பூமருவிய பொழிறிகழ் மதுரா
புரிமருவிய வங்கயற்க ணம்மை
தேமருவிய மதிதவழ் குடுமித்
தென்பொதியக் குறத்திநா னம்மே. (க)

2. செந்நென் முத்துங் கன்னன்முத் துமொளி
திகழ்மதுரை யங்கயற்க ணம்மை
பொன்னுமுத்துஞ் சொரியும்வெள் ளருவிப்
பொதியமலைக் குறத்திநா னம்மே. (உ)

---

(காப்பு.) புகர் - புள்ளி. குறம் பாடப் போற்றுவோம். சித்தி விநாயகர் : இத்தல விநாயகர்.

1. அம்மையினது பொதிய மென்க.

2. கன்னல் - கரும்பு. நெல்லும் கரும்பும் முத்துப் பிறக்கும் இடங்கள்.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

3. செண்டிருக்கும் வடவரையிற் சேலிருக்கு மரசிருக்குந்
தென்ன ரீன்ற
கண்டிருக்கு மதுரமொழிக் கனியிருக்குந் துவரிதழங்
கயற்கட்பாவை
வண்டிருக்கு நறைக்கமல மலரிருக்கும் பரிபுரத்தாண்
மனத்துள் வைத்துக்
கொண்டிருக்குந் தமிழ்முனிவன் குடியிருக்கும் பொதியமலைக்
குறத்தி நானே. (௩)

(சிந்து)

4. மங்கை குங்குமக் கொங்கை பங்கயச்
செங்கை யங்கயற் கண்ணிணுள் மறை பண்ணிணுள்
பங்க னைக்கழ லங்க னைச்சொக்க
லிங்க னைக்கூடி மேவுவாய் கொல்லிப் பாவையே. (௪)

(வேறு)

5. வஞ்சி யேயப ரஞ்சி யேமட மயிலே வரிக் குயிலே
கொஞ்சி யேபழி யஞ்சி யாருனைக் கூடுவா ரினி யம்மே. (௫)

(வேறு)

6. புழுகாலே தரைமெழுகு பிள்ளை யார்வை
பொற்கோல மிட்டுநிறை நாழி வையாய். (௬)

---

3. செண்டு இருக்கும் வடவரை - கரிகாலன் செண்டாலெறிந்த மையால் அச்செண்டின் அடையாளம் இருக்கும் இமயமலை; "செண்டு கொண்டுகரி காலனொருகாலி லிமயச் சிமய மால்வரை திரித்தருளி" (கலிங் கத்துப். 165.) சேல் இருக்கும்-சேல் இருத்தற்குக் காரணமாகிய; சேல் - பாண் டியரது அடையாளப் பொறி. அதனை அவர் இமயத்திற் பொறித்த செய்தி, இக்குறத்தின் 44-ஆம் பாட்டாலும், "கயலெழுதிய விமய நெற்றியின்" (சிலப். கா:1) என்பதனாலும் விளங்கும். தென்னரீன்ற பாவையென இயைக்க. பரிபுரத்தாள் - சிலம்பையணிந்த திருவடி. தமிழ்முனிவன் - அகத் தியர்.

4. கழல் அங்கனை - தேவர்கள் உடம்பினின்றும் கழன்ற என்பை அணிந்தவரை.

5. அபரஞ்சியே - புடமிட்ட பொன் போல்வாய். பழியஞ்சியார் - சொக்கநாதர். கொஞ்சிக் கூடுவார்.

6. நிறை நாழி - நெல்லை நிறைத்த நாழி; நாழி: ஒருவகை முகத்த லளவை—கருவி.

(வேறு)

7. ஆழிகைதா வழகாருமங் கயற்கணம்மை பங்கர்
அழகியசொக்க ரருள்புரிவருன் பான்மருவி யம்மே. (எ)

(வேறு)

8. பேசு மென்குறி மோச மென்றிடில்
ஆர்சொ லும்பரி யாசமே
வாச மென்குழ லாய்சவுந்தர
மாறர் வந்தணை வாரமே. (அ)

(வேறு)

9 நங்கை நீகரு துங்குறி சொல்லவுன்
செங்கை தனைக்கொடு வாவெங்கள்
அங்க யற்கண்ணி பங்க ரருட்சொக்க
லிங்க ரினியணை வாரம்மே. (கூ)

(வேறு)

10. தூசுமொரு காசும்வையுண் ணேசம்வரவே சொல்லநான்
ஈசர்கயி லாசர்மது ரேசருனைச்சேர் வாரம்மே. (கo)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

11. கைக்குறியின் முகக்குறிநன் றிடத்தெழுந்த கவுளிநன்று
கன்னி மார்வந்
திக்குறிநன் றென்கின்ற ரிடக்கண்ணுந் துடிக்கின்ற
திதன்மே லுண்டோ
பொய்க்குறிய சிறுமருங்குற் பூங்கொடிநீ யங்கயற்கட்
பூவை மாதின்
மெய்க்குறியும் வளைக்குறியு முலைக்குறியு மணிந்தவர்தோ
மேவு வாயே. (கக)

---

7. ஆழி கைதா - ஆழியை அணிந்த கையைத்தா; ஆழி - மோதிரம். ஆழிக்கை யென்றபாலது ஓசை நோக்கி இயல்பாயிற்று.

8 யாருடைய சொல்லும் பொருளற்ற பரியாசச் சொல்லேயாகும். அணைவார் அம்மே; அமே: இடைக்குறை.

10 தூசு - ஆடை. நேசம் வரவே வை.

11. இடத்து எழுந்த கவுளி நன்று - இடப்பக்கத்தே எழுந்த பல்லியின் சொல் நலமுடையது. கன்னிமார் - சத்தமாதர். மகளிருக்கு இடக்கண் துடித்தல் நன்னிமித்தம்; "நல்லெழி லுண்கணு மாடுமாலிடனே" (கலி. கக: 2௨.)

(கொச்சகக் கலிப்பா)

12. கடமலைக்கும் வெம்மலையாங் கைம்மலையு மாயிரவாய்ப்
படமலைக்கு மரவரசும் பரித்தருளும் பார்மடந்தை
குடமலைக்குந் தடமுலையாங் குலமலைக ளிரண்டெனவும்
வடமலைக்குந் தென்பொதியு மலயமலை யென்மலையே. (கஉ)

13. திங்கண்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
அங்கயற்க ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை யென்மலையே. (கங)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

14. கன்ன மதம்பெய் துறங்குகொலைக்
களிறு கிடந்து பிளிறுமலை
தென்னந் தமிழும் பசுங்குழவித்
தென்றற் கொழுந்துந் திளைக்குமலை
அன்னம் பயிலும் பொழிற்கூட
லறலங் கூந்தற் பிடியாண்ட
பொன்னங் குடுமித் தடஞ்சாரற்
பொதிய மலையென் மலையம்மே. (கச)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

15. மந்தமா ருதம்வளரு மலையெங்கண் மலையே
வடகலைதென் கலைபயிலு மலையெங்கண் மலையே
கந்தவேள் விளையாடு மலையெங்கண் மலையே
கனகநவ மணிவிளையு மலையெங்கண் மலையே
..............................................................
..............................................................
இந்தமா நிலம்புரக்கு மங்கயற்கண் ணம்மை
யின்பமுறுந் தென்பொதிய மலையெங்கண் மலையே (கரு)

---

12. கடம் அலைக்கும். கைம்மலையும் - திக்கயங்களும். அரவரசும் - ஆதிசேடனும். பரித்தருளும் - தாங்குகின்ற. குடத்தை அலைக்கும் பெரிய நகிலாகும் குலமலைகள் இரண்டு உண்டு என்று சொல்லும்படி. (பி - ம்) ‘ தென்பொதியம் ’

13. புயல் - மேகம்.

14. கன்னம் - காது. (பி - ம்) ‘ கன்னமதஞ் சாய்த்துறங்கு ’ பிடி - மீனாட்சியம்மை.

15. மந்த மாருதம் - தென்றற் காற்று. வடகலை - வடமொழி. இச்செய்யுளின் மூன்றாவது அடி காணப்படவில்லை.

16. சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடு மொருபாற்
சினப்புலியு மடப்பிணையுந் திளைத்திடுமங் கொருபால்
வெங்கரடி மரையினொடும் விளையாடு மொருபால்
விடவரவு மடமயிலும் விருந்தயரு மொருபால்
அங்கணமர் நிலங்கவிக்கும் வெண்கவிகை நிழற்கீ
ழம்பொன்முடி சூடுமெங்க ளபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவுங் கும்பமுனி பயிலுந்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கண்மலை யம்மே (கசு)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

17. கச்சைப் பொருது மதர்த்தெழுந்து
கதிர்த்துப் பணைத்த மணிக்கொங்கைப்
பச்சைப் பசுங்கொம் பங்கயற்கட்
பாவை பயந்த வாறிருதோட்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
சிறுவன் றனக்குப் பெருந்தடங்கட்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த
குறவர் குலமெங் குலமம்மே. (கள)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

18. கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்குகல்லி யெடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறுந் தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையு மரவுரியு மிசைந்திடவே யுடுப்போம்
செழுந்தினையு நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின் பாயலிற்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில் விழுந்துவினை கெடுப்போம்
எங்கள்குறக் குடிக்கடுத்த வியல்பிதுகா ணம்மே. (கஅ)

---

16. பிணை - பெண்மான். மரை - ஒருவகை விலங்கு. கும்பமுனி - அகத்தியர்.

17. செச்சைப்படலை - வெட்சிமாலை. சிறுவன் - முருகக்கடவுள். சிறுமி: இங்கே வள்ளி நாயகி.

18. விழுந்த - தாழ உண்டான. கல்லி - தோண்டி. தேறல் - தேன். விருந்து - விருந்தினர். பாயல் - படுக்கை. வினை - பாவத்தை.

19. புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை யிணங்கும்
புதுத்தினைகல் லுரற்பாறை முன்றிரெரு முணங்கும்
கல்விடரில் வரிவேங்கை கடமாளே டுறங்கும்
கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந் திறங்கும்
சில்வலையும் பல்வாரு முன்னிறப்பிற் றூங்கும்
சிறுதுடியும் பெருமுரசுந் திசைதொறுமின் றேங்கும்
கொல்லையின்மான் பிணையுமிளம் பிடியும்விளை யாடும்
குறிச்சியெங்கள் குறச்சாதி குடியிருப்ப தம்மே. (௧௯)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

20. வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக் குறவனெங்கள்
வீட்டிற் கொண்ட
வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி சீதனமா
வழங்கி னாராற்
பிள்ளைதனக் கெண்ணெயிலை யரைக்குமொரு துணியிலையென்
பிறகே வந்த
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கு மெனக்குமிலை
கஞ்சி தானே. (௨௦)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

21. கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
குற்றால மாப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானை திருக் கானப்பேர் சுழிய
லிராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்கள்

---

19. புல்வாயின் பார்வை - மானாகிய பார்வை மிருகம்; விலங்குகளைப் பிடித்தற்குக் குறவர்களால் உயிரோடு வளர்த்துப் பழக்கப்படும் மிருகம்; இது தீபகமெனவும் வழங்கும். உணங்கும் - காயும். கல்விடர் - மலைக்குகை. கடமான் - யானை. கறங்கி - ஒலித்து. இறப்பு - வீட்டின் தாழ்வாரத்தின் முன்புறக் கப்பத்தின்மேலுள்ள உறுப்பு. ஏங்கும் - முழங்கும். குறிச்சி - குறிஞ்சி நிலத்து ஊர்.

20. சீதனம் - பெண்களுக்குக் கொடுக்கப்படும் பொருள். பிறகே வந்த கள்ளியென்றது இரண்டாந்தாரத்தை. முன்பெல்லாம் இங்ஙனம் வாழ்ந்தேம்; என் மாற்றாள் வந்தபின் வறுமையுற்றேமென்று அவள்மேற் குற்றம் சாரும் குறிப்புப்படக் கூறினள்.

21. கொடுங்குன்று - பிரான்மலை. கானப்பேர் - காளையார் கோயில். "கூடல் புனவாயில்" என்ற வெண்பாவிற் காணப்படும் பாண்டி பதினாலு தலங்களும் இதிற் கூறப்பட்டன. குறவனென்றது தன் கணவனை.

நாடியெங்க ளங்கயற்கண் ணுண்டதமிழ்ப் பாண்டி
நன்னாடும் பிறநாடு மென்னுட தாகக்
காடுமலை யுந்திரிந்து குறிசொல்லிக் காலங்
கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவாரா தம்மே. (உக)

22. பொற்றொடியவ ளிக்கிளைய பூங்கொடியென் பாட்டி
பூமகண்மா யவன்மார்பிற் பொலிவளென்று சொன்னாள்
மற்றவள்பெண் களிலெங்கள் பெரியதாய் கலைமான்
மலரயனார் திருநாவில் வாழ்வளென்று சொன்னாள்
பெற்றவெங்க ளற்றாயுஞ் சுந்தரியிந் திரன்றேவி
பெறுமென்றாள் பின்னெங்கள் சிறியதா யம்மே
சொற்றகுறிக் களவிலையெங் கன்னிமா ரறியச் [வே.
சொன்னேன்பொய் யலகாங்கள் சொன்னதுசொன் னது

23. முன்னொருநா ளம்மைதடா தகைபிறந்த நாளின்
முகக்குறிகண் டிவளுலக முழுதாளு மென்றேன்
பின்னொருநாள் கைக்குறிபார்த் தம்மையுனக் கெங்கள்
பிஞ்ஞகர்தா மணவாளப் பிள்ளையென்று சொன்னேன்
அன்னையவண் மெய்க்குறிக ளனைத்தையும்பார்த் துனக்கோ
ராண்பிள்ளை யுண்டுபிறந் தரசாளு மென்றேன்
சொன்னகுறி யெல்லாமென் சொற்படியே பலிக்கும்
தொகுத்துநீ நினைந்தகுறி யினிச்சொலக்கே ளம்மே (உங)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

24. ஒருகாலங் கஞ்சியுமென் குஞ்சுதலைக் கெண்ணெயுமோ
ருடுப்பு மீந்தாற்
பொருகால வேற்கண்ணாய் மனத்துநீ நினைத்தவெலாம்
புகல்வன் கண்டாய்

---

22. தன் சுற்றத்தினர் சொல்லிய குறிகள் பலித்த வரலாறுகளைக் கூறுகின்றாள்.

பூமகள் - திருமகள். அவளென்றது தன்பாட்டியை. கலைமான் - சரசுவதி. சுந்தரி -இந்திராணி. கன்னிமார் : 11. சொன்னது சொன்னதுவே - சொன்ன குறிகள் மாறாமற் பலிக்கும் ; இஃது உலக வழக்கு.

23. தான் கூறிய குறி பலித்த வரலாறுகளைக்கூறுகின்றாள்.

பிஞ்ஞகர் - சிவபெருமான்.

24. ஒருகாலம் கஞ்சி - ஒருவேளைக்கு ஆகும் கஞ்சி. என் குஞ்சு - என் குழந்தை. (பி - ம்.) 'குஞ்சி தலைக்கு' "பாலகனுச்சியி லெண்ணெய்வார்

வருகால நிகழ்காலங் கழிகால மூன்றுமொக்க
வகுத்துப் பார்த்துத்
தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதரிதன் றெங்கள்குறச்
சாதிக் கம்மே. (உச)

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

25. குங்குமஞ்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையுங் காட்டிச்
செங்கனக நவமணிக டிசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனில் பிள்ளையார் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டைங்கரர்க்குச் சாத்திப்
புழுகுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண் ணமுதை
மனத்துள்வைத்து நினைத்தகுறி யினிச்சொலக்கே ளம்மே.

26. மூன்னாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லை முன்னேவை யம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
யிரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்னுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துதித்தா
ருனக்கினியெண் ணினகரும மிமைப்பினிற்கை கூடும்
என்னுணை யெங்கள்குலக் கன்னிமா ரறிய
வெக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே. (உரு)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

27 நெல்லளந் திட்ட போது நிமித்தநன் றிடத்தெ ழுந்த
பல்லியும் வரத்தே சொல்லும் பத்தினிப் பெண்கள் வாயாற்
சொல்லிய வாய்ச்சொ லன்றித் தும்மலு நல்ல தேகாண்
அல்லது கிளைகூட் டும்புற் றுந்தைவீச் சழகி தம்மே. (உஎ)

---

பழகியதோர் கலை கொண்டுவா" (அரங்கக்கலம். 69.) உடுப்பு - ஆடை. கழி
காலம் - இறந்தகாலம்.

26. சிறங்கை - சிறு அங்கை யென்பதன் மரூஉ; உள்ளங்கை யளவு.
ஒற்றை பட்டது: "உதய மான சுளகு நெல்லு மொற்றை பட்ட தாதலால்"
(அருணைக்கலம். 50.)

27. வரத்தே - வரவையே. வாய்ச்சொல்: இதனை விரிச்சி யென்பர்.
புற்றின்மேலுள்ள ஆந்தை. வீச்சு - குரல்.

(எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்)

28. கொண்டுவா வம்மேகை கொண்டுவா வம்மே
கொழுங்கனக நவமணிக ளளைந்திடுமுன் கையே
வண்டுசுலா மலர்கொய்ய வருந்திடுமுன் கையே
வருந்தினர்க்கு நவநிதியுஞ் சொரிந்திடுமுன் கையே
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடுமுன் கையே
புழுகுறுநெய்ச் சொக்கர்புயந் தழுவிடுமுன் கையே
அண்டர்நா யகியெங்கண் மதுரைநா யகியை
யங்கயற்கண் ணயகியைக் கும்பிடுமுன் கையே. (உஅ)

29. அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதா
னபிடேகச் சொக்கருனை யணைவரென்ற குறிகாண்
இம்மேலைத் திசையினிற்கை யெடுத்ததுவு மவர்தாம்
இன்றந்திப் பொழுதினில்வந் தெய்துவரென் றதுகாண்
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாம லுனக்குக்
கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே. (உகூ)

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

30. அங்கைத் தலத்துத் தனரேகை யளவில் செல்வந் தருமுனது
செங்கைத் துடிதென் மதுரேசர் செம்பொற் புயத்திற் சேர்க்குமால்
இங்கிப் படிபுத் திரரேகை யெவர்க்கு மிலையிப் படிதோளில்
தங்கு மறுவங் கயற்கணம்மை தன்னோ டிருக்கத் தருமம்மே.

---

28. அளைந்திடும் - பயிலும்.

29. அபிடேகச் சொக்கர் - முடியை யணிந்த சொக்கர். கொங்கைக்குக் கிரீடத்தை உவமையாகக் கூறுதல் மரபாதலின் இங்ஙனம் குறி கூறினள். மேலைத்திசை - மேற்குத்திக்கு. பதினறுவரைப்பெறுதல்; "ஒருத்தி யக முடையான் சிந்தை, வரநடந்து பதினறு பிள்ளைபெற்றே யகமகிழ்ந்தாள்" (தனிப்.) 'பதினறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ' என்பது ஒரு வழக்கு.

30. தனரேகை - செல்வத்தைக் குறிக்கும் கோடு. துடி - தமருகரேகை. மறு - மச்சம்.

(சி ந் து)

31. பொன்பொதியுந் துகிலெனவெண் புயலொடுதண் பனிமூடும்
தென்பொதிய மலையாட்டி பேரைச்சொல்லாய் பாடநான். (௩௧)

32. பலநதிகள் புணர்ந்தநதி பதியையணு யாதவைகைக்
குலநதித்தண் டுறைச்செல்வி பேரைச்சொல்லாய் பாடநான்.

33. அன்பாண்டு கல்வலிதென் றவ்வைபா டியவெங்கள்
தென்பாண்டி நாட்டாடன் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௩)

34. பொன்மாடஞ் சூழ்ந்தகரும் புயலமலன் போர்வைநகர்
பன்மாடக் கூடலாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௪)

35. எண்டிசைக்கும் வேம்பாயெம் மிறையவர்க்குக் கரும்பாகும்
வண்டிசைக்குந் தாரினாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௫)

36. தினவட்ட மிடும்பருதித் திண்பரிமண் பரியாக்கும்
கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௬)

37. திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசையெட்டுந் திறைகொண்ட
கைக்கயத்தை மேற்கொண்டாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

38. ஆனேற்றுங் கொடியானை யைங்கணையான் வென்றிடவம்
மீனேற்றின் கொடியுயர்த்தாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

---

31-9. இவற்றில் அங்கயற்கண்ணியின் தசாங்கம் சொல்லப்படும்.

31. புயலும் பனியும் துகிலுக்கு உவமை. மலையாட்டி - மலைக்கு உரியவள்.

32. நதிபதி - கடல். திருவாதவூரடிகள் புராணமுடையாரும், பரஞ்சோதி முனிவரும் வையை நதி கடலொடு கலக்கவில்லையென்று கூறுவர். அது பாம்பாற்றுக் காலோடு கலந்து கடலிற் புக்கதென்று **தக்கயாகப் பரணி,** 212-ஆந் தாழிசை உரையில் அவ் வுரையாசிரியர் எழுதுவர்.

33. அன்பு ஆண்டு - அன்பை மேற்கொண்டு. கல் வலிதென்று ஔவை பாடிய பகுதி, "பஞ்சவன்றன், நான்மாடக் கூடலிற் கல்வலிது" (**தனிப்.**) என்பது.

34. போர்வை - யானைத்தோலாகிய போர்வை.

35. இறையவர் விரும்புதலால் வேம்பைக் கரும்பாகு மென்றாள்.

36. கனவட்டமென்பது பாண்டிய அரசர்க்குரிய குதிரை. அது தன் கால் தூளியால் சூரியனுடைய குதிரையாகிய விண்பரியை மூடி மண்பரியாகச் செய்யும்.

37. கைக்கயம் - துதிக்கையையுடைய யானை.

38. ஐங்கணையான் - காமன்.

39. இனியாணை யிலையரசர்க் கென்றுதிசை யெட்டுமொரு
தனியாணை செலுத்தினுள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௯)

40. கருமலையச் செருமலையுங் கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசனருண் மடக்கொடியைப் பாடுவனே. (௪௦)

41. விண்புரக்குங் கதிர்மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கு மபிடேக வல்லியைநான் பாடுவனே. (௪௧)

42. வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைக ளிரண்டெடுந்தை
மொய்ம்புருவத் தொடுத்தெய்த மொய்குழலைப் பாடுவனே. (௪௨)

43. ஊன்கொண்ட முடைத்தலையிற் பலிகொண்டார்க் குலகேகம்
தான்கொண்ட வரசாட்சி தந்தாளைப் பாடுவனே. (௪௩)

44. வானவர்கோன் முடிசிதறி வடவரையிற் கயலெழுது
மீனவர்கோன் றனைப்பயந்த மெல்லியலைப் பாடுவனே. (௪௪)

45. கான்மணக்குஞ் சடைக்காட்டிற் கவின்மணக்குங் கடிக்கொன்றைத்
தேன்மணக்கும் பிறைநாறுஞ் சீறடியைப் பாடுவனே. (௪௫)

46. எவ்விடத்துந் தாமாகி யிருந்தவருக் கருந்தவரும்
வெவ்விடத்தை யமுதாக்கும் விரைக்கொடியைப் பாடுவனே.

47. வைத்தபகி ரண்டமெனு மணற்சிற்றி லிழைத்திழைத்தோர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவனே. (௪௭)

---

40. கருமலைய - கருப்பம் கலங்க. கைம்மலைய மன்னர் - யானைகளை யுடைய அரசர்.

42. மொய்ம்பு உருவ - தோளை உருவிச் செல்ல.

43. முடை - நாற்றம்.

44. மீனவர் கோன் - உக்கிர குமார பாண்டியர்.

45. கான் - நறுமணம். சிவபெருமான் உமாதேவியி[illegible] தில் அதனை நீக்கும்பொருட்டு வணங்குதலின் இறைவியின் சீறடி அவர் அணிந்த பிறை நாறியது.

46. அருந்த அரும்.

47. பித்தன் - சிவபிரான். "சுற்று நெடு நேமிச் சுவர்க்கிசைய" (குமர. 16) என்னும் செய்யுளைப் பார்க்க.

48. இலைக்குறியுங் குணமுநமக் கென்பார்க்கு வளைக்குறியும்
முலைக்குறியு மணிந்திட்ட மொய்குழலைப் பாடுவனே. (சஅ)

49. ஒன்றாகி யனைத்துயிர்க்கு முயிராகி யெப்பொருளும்
அன்றாகி யவையனைத்து மானாளைப் பாடுவனே. (சகூ)

50. பரசிருக்குந் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கருடன்
அரசிருக்கு மங்கயற்கண் ணரமுதைப் பாடுவனே. (ருo)

(கொச்சகக் கலிப்பா)

51. சீர்வாழி தென்மதுரை யின்மலனா ரருள்வாழி
கார்வாழி யங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே. (ருக)

48. குறி - பெயர்; உருவமுமாம். என்பார்க்கு - சிவபெருமானுக்கு.
50. பரசு - புகழ்.
51. கச்சிநகர்த் திருமலை பூபதி: இந்நூலாசிரியரை ஆதரித்த உபகாரி.

# தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை

---

(நேரிசை வெண்பா)

1. சீர்பூத்த செல்வத் திருத்தில்லை மன்றகமென்
கார்பூத்த நெஞ்சகமாக் கைக்கொண்டாள்—ஏர்பூத்துள்
ஐயமொருங்கின்ற வந்நுண் மருங்கொசிய
வைய மொருங்கின்ற மான். (க)

(கட்டளைக் கலித்துறை)

2. மாகந் திருவுரு மன்றுடை யார்க்கெனின் மற்றுனக்கோர்
பாகந் தரவொர் படிவமுண் டேபர மானந்தமே
ஏகந் தருந்திரு மேனிய தாக்கிமற் றெண்ணிறந்த
ஆகந் தருவது மம்மைநின் னுடல்கொ லங்கவர்க்கே. (உ)

(நேரிசை வெண்பா)

3. அங்கம் பகுந்தளித்த வம்பலத்தார்க் காம்பலங்கைச்
சங்கொன்று கொங்கைத் தழும்பொன்றே—நங்கையுனை
வந்திப்பார் பெற்றவர மற்றொருநீ வாய்த்ததிரு
உந்திப்பா ரேழு மொருங்கு. (ந)

---

1. கார் - ஆணவவிருள்; மான் நெஞ்சகமாக் கைக்கொண்டாள்.

2. பாகம்-ஆகாயம்; "மலைவில்லியார் விண்ணுரு நினைத்து" (குமர. 87.) ஏகம் - ஒன்று. அவர்க்கு எண்ணிறந்த ஆகம் தருவதென இயைக்க; எண்ணிறந்த ஆகம் - இருபத்தைந்து, அறுபத்து நான்கு ஆகிய மூர்த்தங்கள்.

3. ஆம்பற்பூ உள்ளங்கைக்கு உவமை. சங்கு - வளை; இங்கே அதன் தழும்பு. மற்று: அசைநிலை. திருவுந்தியிலே வாய்த்த. சிவகாமியம்மை தன்னை வந்திக்கும் அடியார்க்கு உலகேழும் அளிப்பாளென்றபடி.

(கட்டளைக் கலித்துறை)

4. ஒருவல்லி யல்லிக் கமலத்து ளூறுபைந் தேறலொத்த
திருவல்லி தில்லைச் சிவகாம வல்லியென் சித்தத்துள்ளே
வருவல்லி செம்பொன் வடமேரு வில்லியை வாட்கணம்பாற்
பொருவல்லி பூத்தலி னன்றேயிப் பூமியைப் பூவென்பதே. (௪)

(நேரிசை வெண்பா)

5. பூத்ததுவு மீரேழ் புவனமே யப்புவனம்
காத்ததுவு மம்மை கருணையே—கூத்தரவர்
பாடுகின்ற வேதமே பாராவிப் பாரொடுங்க
ஆடுகின்ற வேதமே யங்கு. (௫)

(கட்டளைக் கலித்துறை)

6. அங்கைகொண் டேநின் னடிதைவந் தாரழ லாறமுடிக்
கங்கைகொண் டாட்டுநீங் கண்ணுத லாரக் கனகவெற்பைச்
செங்கைகொண் டேகுழைத் தார்சிவ காமிநின் சித்திரமென்
கொங்கைகொண் டேகுழைத் தாயவர் பொற்புயக்குன்றெட்டுமே.

---

4. ஒரு வல்லி அல்லிக் கமலத்து - ஒற்றைக் கொடியிலே பூக்கும் அக விதழையுடைய தாமரையில்; என்றது இதயகமலத்தை. பைந்தேறல் - செவ்வித்தேன். பூத்தலின் - உண்டாக்கினமையால். சிவகாமியம்மை பூத்த தனாலேதான் பூமியைப் பூவென்பர்; பூ - மலர், பூமி.

5. பூத்ததுவும்: இதன்முன் நீ என்பதை வருவிக்க. புவனம் - உலகு. (பி - ம்.) 'காத்ததுமென்' அம்மை: முன்னிலைக் கண்வந்தது. பாரா - பார்த்து உணரா. ஆடுகின்ற ஏது - ஆடுதற்குக் காரணத்தை.

அம்மே, ஆடுகின்ற ஏதுவை வேதங்களே பாரா; பாரா: முற்று.

6. அழல் ஆற - நின்னுடைய சினம் ஆறும்படி. கங்கை கொண்டாட்டும் கண்ணுதலாரென்றது இறைவன் பணியும்போது கங்கையின் நீர் பாதத்தில் விழுவதைக் குறிப்பித்தது. முதலில் திருவடியைத் தைவந்தார்; அதனாற் கோபம் தணியாமை கண்டு வணங்கினா ரென்பது கருத்து; "முழுமணி மிடற்றன்...விழுமணி யரவ நுழைசடா டவியின் விண்ணதித் தண்புனல் விடுப்ப, விரைவொடு குளிர்ந்து முகமலர் தலினால்" (**பெரியநாயகியம்மை விருத்தம்**, 7.) சித்திரம் - அலங்காரமாகிய.

இறைவர் ஒரு வெற்பையே குழைத்தார். நீ அவரது புயங்களாகிய எட்டு வெற்பையும் நின் மெல்லிய நகில்களைக் கொண்டு குழைத்தாய்.

(நேரிசை வெண்பா)

7. குன்றஞ் சுமந்தொசிந்த கொம்பேநின் கோயிலும்பொன்
மன்றும் பணிந்தேம் வழிவந்தாற்—பொன்றுழ்
வரைசென்ற திண்டோண் மறலிக்கு நெய்தல்
முரைசன்றே வென்றி முரசு. (எ)

(கட்டளைக் கலித்துறை)

8. முருந்தடர்ந் தார முகிழ்த்தபுன் மூரன் முதல்விகயல்
பொருந்தடங் கண்விழிக் கும்புலி யூரர்பொன் மார்பின்மற்றுன்
பெருந்தடங் கொங்கை குறியிட்ட வாகண்டப் பிஞ்ஞகர்க்குன்
கருந்தடங் கண்ணுங் குறியிட்ட போலுங் கறைக்கண்டமே. (அ)

(நேரிசை வெண்பா)

9. கறைகொண்டு நச்சரவக் கச்சணிந்தா ரென்று
மறைகொண்டு வாழ்த்துவதும் வம்பே—இறைகொண்
டயிலிருக்கு முத்தலைவே லண்ணலுக்கென் னேயோர்
மயிலிருக்கத் தில்லை வனத்து. (கூ)

---

7. குன்றமென்றது நகில்களை. வழி வந்தால் - நின் அடியவரான எம்முடைய வழியில் வந்தால். வரை சென்ற - மலையை யொத்த. மறலிக்கு - யமனுக்கு. பிறரை வெற்றி கொண்ட யமனுடைய முரசு அவனுக்கு நெய்தல் முரசாகு மென்றபடி; நெய்தல் முரசு - சாப்பறை. எம்பால் வந்தால் அவனுக்கு இறுதி நேருமென்பது கருத்து.

8. முருந்து - மயிலிறகின் அடிக்குருத்து. ஆரம் முகிழ்த்த - முத்துப் போல் தோன்றிய. கயல் கண்களைப்போலத் தோற்றுதற்கு இடமான புலியூர்; புலியூர்க்கு அடை.

நினது கொங்கைகள் சிவபெருமான் மார்பிற் குறியிட்டது கண்டு நின் விழிகள் இறைவர் கழுத்திற் குறியிட்டது போன்றது கழுத்திலுள்ள கறை; கறை - விடத்தினாலுண்டாகிய கறுப்பு.

9. மறைகள் நச்சரவக் கச்சணிந்தா ரென்பது வம்பு; மயிலிருக்கும் போது பாம்புகள் இரா என்றபடி; இக்கருத்தின் விரிவு, "கரும்புற்ற செந்நெல்" (குமர. 343) என்னும் செய்யுளிற் காணப்படுகின்றது.

கறை கொண்டு - விடத்தை உணவாகக் கொண்டு. இறை - தங்குதல். தில்லைவனத்து மயிலிருக்க அண்ணலுக்கு என்னே; மயில் - சிவகாம சுந்தரி. ஒரு மயில் பக்கத்தே இருக்கும்போது பாம்பினாலும் அதன் விடத்தாலும் சிறிதும் தீங்கு உண்டாகாதென்றபடி.

(கட்டளைக் கலித்துறை)

10. வன்னஞ் செறிவளைக் கைச்சிற காற்றன் வயிற்றினுள்ளவத்
தின்னஞ் சராசர வீங்குஞ் சணைத்திரை தேர்ந்தருத்திப்
பொன்னம் பலத்துளொ ரானந்த வாரிபுக் காடும்பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம்பல் லாயிர வண்டமுமே. (௧௦)

(நேரிசை வெண்பா)

11. அண்டந் திருமேனி யம்பலத்தார்க் கென்பதுரை
கொண்டங் குணர்தல் குறைபாடே—கண்டளவில்
விண்ணம் பொலிந்ததொரு மின்கொடியே சொல்லாதோ
வண்ணம் பொலிந்திருந்த வா. (௧௧)

(கட்டளைக் கலித்துறை)

12. வாய்ந்தது நின்மனை வாழ்க்கையென் றேதில்லை வாணரம்மே
காய்ந்தது வென்றிவிற் காமனை யேமுடிக் கங்கையைப்பின்
வேய்ந்தது பாவநின் மென்பதந் தாக்கவவ் வெண்மதியும்
தேய்ந்தது பெண்மதி யென்படு மோவச் சிறுநுதற்கே. (௧௨)

(நேரிசை வெண்பா)

13. சிறைசெய்த தூநீர்த் திருத்தில்லைத் தொல்லை
மறைசெய்த வீர்ந்தண் மழலைப்—பிறைசெய்த
ஒண்ணுதலைக் கண்ணுதலோ டுள்ளத் திருத்தியின்பம்
நண்ணுதலைக் கண்ணுதலே நன்று. (௧௩)

---

10. ஆனந்தவாரி - ஆனந்தக்கடல். அம்பிகையை அன்னப் பறவையாக உருவகஞ் செய்தார். வளையையுடைய கைகளாகிய சிறகால். சராசரமாகிய குஞ்சு. ஈர்ங் குஞ்சு - பச்சைக்குஞ்சு. அண்டம் - உலகம், முட்டை; சிலேடை.

11. சிவபெருமானுக்கு ஆகாயம் திருமேனியென்று வாயினுற் கூறுதல் குறைபாடுடையது; வானத்தில் தோன்றும் மின்கொடியே இறைவனது திருவுருவத்தை நினைவுறுத்தும். வானத்தை அவர் திருமேனியாகவும் அதன்கண் தோன்றும் மின்னலை உமாதேவியாராகவும் நினைத்து இங்ஙனம் கூறினார்.

12. நின் மனை வாழ்க்கை வாய்ந்தது என்ற தைரியத்தால் காமனைக் காய்ந்தார். சிறுநுதற்குப் பெண்மதி என் படுமோ; சிறு நுதற்கு- கங்கைக்கு; பெண்மதி என்படுமோ: முடித்த பிறை தேய்ந்ததுபோலக் கங்கையின் மதியும் தேயுமென்றபடி.

13. சிறைசெய்த நீர்த்தில்லை; "சிறைவான் புனற்றில்லை" (திருச்சிற்.); சிறை - அணை. மறையையுண்டாக்கிய. ஒண்ணுதல் - சிவகாமவல்லி. கண்ணுதலோடு - நடராசப் பெருமானோடு. கண்ணுதலே நன்று - நினைத்தலே நன்மை யாகும்.

(கட்டளைக் கலித்துறை)

14\. நங்காய் திருத்தில்லை நன்னுத லாய்நுத னாட்டமொத்துன்
செங்காவி யங்கண் சிவப்பதென் னேசெழுங் கங்கையைநின்
பங்காளர் நின்னைப் பணியுமப் போதுகைப் பற்றிமற்றென்
தங்கா யெழுந்திரென் றாலவட் கேது தலையெடுப்பே. (கச)

(நேரிசை வெண்பா)

15\. தலைவனைத்து நாணியெந்தை தண்ணளிக்கே யொல்கும்
குலைவளைத்த கற்பகப்பூங் கொம்பர்—கலைமறைகள்
நான்குமரி யார்க்கிந்த ஞாலமெலா மீன்றளித்தும்
தான்குமரி யாகியிருந் தாள். (கரு)

(கட்டளைக் கலித்துறை)

16\. தாளிற் பதித்த மதித்தழும் புக்குச் சரியெம்பிரான்
தோளிற் பதித்த வளைத்தழும் பேதொல்லைத் தில்லைப்பிரான்
வாளிற் பதித்த முலைத்தழும் பங்கவர் மார்பினிலந்
நாளிற் பதித்ததொன் றேயெம் பிராட்டி நடுவின்மையே.(கசு)

---

14\. நுதல் நாட்டம் - இறைவருடைய நெற்றிக்கண்ணை. கங்கை தலையிலிருக்கின்றாளே என்பது பற்றி நீ சினப்பதனாற் பயன் என்? பணியும் போது உடன் விழும் கங்கையின் கையைப்பற்றி எழுந்திரு என்றால், இறைவன் உனக்கு அஞ்சித் தலையில் கங்கையை ஒளித்து வைத்திருக்கின்றார்; நீ அவளைத் தங்கை யென்பாயாயின், அவள் உன்னோடு இருப்பாளென்றபடி. தலை எடுப்பு - தலையில் எடுத்தல், இறுமாப்பு; சிலேடை.

நின் தங்கையென்று கூறின் இறுமாப்பு இராது என்றபடி.

15\. இறைவன் தண்ணளிக்குத் தலைவளைத்து நாணி ஒல்கும் கொம்பர்: சிவகாமவல்லி. மறைகள் நான்கும் மரியார்க்கு - வேதங்கள் நான்கிலும் மருவியவருக்கு. தான்: அசைநிலை. குமரி - இளங்கன்னி.

16\. வளைக்குப் பிறை உவமை: (குமர. 528.) வாளின் - ஒளியோடு. நடு இன்மை - நடுவு நிலைமையில்லாமை. இறைவர் மதித்தழும்பைச் செய்த தற்கு வளைத்தழும்பைச் செய்தாய். அவர் ஒன்றும் நின் மார்பிற் செய்யா திருப்ப, கொங்கைத்தழும்பை மிகையாகச் செய்தாய். இது நடுநிலை யின்மை யாகும்.

(நேரிசை வெண்பா)

17. இன்றளிர்க்கைக் கிள்ளைக்கே யீங்குதலை கற்பிக்கும்
பொன்றளிர்த்த காமர் பொலங்கொம்பு—மன்றவர்தம்
பாகத் திருந்தாள் பதுமத்தாள் பாவித்தாள்
ஆகத் திருந்தா ளவள். (கஎ)

(கட்டளைக் கலித்துறை)

18. அல்லிக் கமலத் துணைத்தாள தென்றுமென் னுவிக்குள்ளே
புல்லிக் கிடந்தது போலுங்கெட் டேன்புன் மலக்கிழங்கைக்
கல்லிப் புலக்களை கட்டருள் பூத்துட் கனிந்தமலை
வல்லிக் கிலைகொன் மருங்கென் றிரங்கு மறைச்சிலம்பே.(கஅ)

(நேரிசை வெண்பா)

19. மறைநாறுஞ் செவ்வாய் மடக்கிள்ளாய் பிள்ளைப்
பிறைநாறுஞ் சீறடியெம் பேதாய்—நறைநாறும்
நாட்கமலஞ் சூடே நறுந்துழாய் தேடேநின்
தாட்கமலஞ் சூடத் தரின். (கக)

---

17. தளிர்போன்ற கையிலுள்ள கிள்ளைக்கு. பொலங் கொம்பு - சிவகாமியம்மை. பாகத்திருந்தாளைப் பதுமத்தாளாகிய அவள் பாவித்தாளாகித் திருமாலின் ஆகத்து இருந்தாள். திருமாலென்னும் சொல்லை வருவிக்க. அவளென்பதை நெஞ்சறி சுட்டாக்கித் திருமகளெனப் பொருள்கொண்டு, பாகத்திருந்தாளது பதுமம் போன்ற தாள்களைப் பாவித்தாளாகித் திருமாலின் ஆகத்திருந்தாளென்று பொருள் கொள்ளலும் பொருந்தும்; ஆகம் - உடம்பு, மார்பு ; சிலேடை.

18. அல்லி - அகவிதழ். கல்லி - தோண்டி. கட்டு - களையெடுத்து. மருங்கு - இடை. ஒலிக்கும் மறையாகிய சிலம்புகள் சிவகாமவல்லியினுடைய தாள்களிலேயிருந்து என் ஆவிக்குள்ளே என்றும் பொருந்தின போலும். என் ஆவிக்குள் அத்தாள்கள் பொருந்த அவற்றோடு சிலம்புகளும் பொருந்தின போலுமென்றார் ; ஆவி - உயிர், தடாகம் ; சிலேடை.

19. நின் திருவடித் தாமரைகள் கிடைக்கப்பெற்றால் பிரம பதவியையும் திருமால் பதவியையும் விரும்பேமென்றபடி. மறைநாறுஞ் செவ்வாய் : "மறைசெய்த வீர்ந்தண் மழலை" (13.)

(கட்டளைக் கலித்துறை)

20. தருவற நாணத் திருவறச் சாலை சமைத்தம்மைநீ
பொருவரு நல்லறம் பூண்டதென் னுமெந்தை பொற்புலியூர்
மருவரு மத்த முடித்துக் கடைப்பலி தேர்ந்துவம்பே
தெருவற வோடித் திரிதரு மான்மற்றுன் சீர்த்திகொண்டே
(௨௦)



20. தரு அற நாண - கொடைக்குக்கற்பகத்தரு மிக நாணும்படி. இறைவர் பிச்சை யெடுப்பாரானால் நீ அறம் செய்தும் பயனில்லையே. மரு அறும்மத்தம் - வாசனையற்ற ஊமத்தம் பூவை. தெரு அற ஓடி - தெருக்களில் மிக ஓடி. திரிதரும் - திரியா நிற்பர். உன் சீர்த்திகொண்டு திரிதருவார்.

" இறைவற்குத் தக்க விறுமாப் பெனுமொழி யின்றியொரு, மறுவற்ற தன்மனை யாட்கேற்ற தாமிறு மாப்பனெனக், குறைவற்ற நெற்கொண் டுலகேற்றுணைப்பலி கொள்ளுமரன், பெறவுற் றனையனை யேகுன்றை வாழும் பெரியம்மையே "(பெரியநாயகியம்மை கட்டளைக்கலித்துறை, 1.)

# செய்யுண் முதற்குறிப்பகராதி

[எண் - பக்க எண்]

---

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[எண் - பக்கவெண்.]